# முன்னுரை

சூற்றவர் துயரம் நீக்கும் கருணைக்கடலான முருகக்கடவுளின் திருவருளால் கந்தபுராணத்திற்கு உரை எழுத ஆரம்பமாகி உற்பத்தி காண்டம் பூர்த்தியாகி இப் பொழுது அரசுகாண்டத்தின் முதலாவது சஞ்சிகை வெளியாகிறது. அடியேன் இப்பொழுது இப்பணியைச் செய்வதற்கு எத்தனையோ பெரியோர்களதும் தாய்மார் களதும் நண்பர்களதும் ஆதரவே இதைச் செய்ய தூண்டியது.

இக்கால நிலையில் இப்படியான ஓர் உரையை எழுதிவெளியிடுவது மிக வும் சிரமமுள்ளதாகவே இருக்கும் ஏன்பதை யாவரும் அறிவார்கள்.

முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன் என அருணகிரியார் சொல்லியபடி தமிழால் தன்னை வழுத்துவார்க்கு இன்னருள் தருவான் எமது ஐயன் என்னும் நல்நோக்கத்தால் இப்புராணத்திற்கு எல்லாரும் விளங்கும்படியான ஓர் உரையை எழுதி வெளியிட வேண்டுமென்பது காரணமாக மிக இலகுவான தமிழில் இந்த படல்களுக்கு ஓர் பொழிப்புரையை எழுதி வெளியிட்டுள்ளேன். இதனை சிறந் தமிழ் நடையில்லையேயென அறிஞர் கருதக்கூடும் அல்லதும் உரையாசிரியர் மேற் கொள்கின்ற உரைநடைக்கு புறம்பாயது எனவும் எண்ணவும் கூடும். ஆனால் அவ் வாறு கருதப்பட்டாலும் எனது விருப்பம் எம்பிரானுடைய மிகஅருமையான இப் புராணத்தை யாவருக்கும் தெரியவைக்கவேண்டி இருப்பதனால் இவ்வாறாக பாடல்களை யாவரும் விளங்கிக்கொள்ளும் அளவில்தான் பொழிப்புரையாக எழுதியுள்ளேன்.

அசுர காண்டம் கந்தபுராணத்து சிறந்த ஓர் பகுதியாகும். இதிலே தவத்தி னுடைய மாட்சிமை கூறும் பகுதியை மிகச்சிறப்பாக கூறியிருக்கிறார் ஆசிரியர். இல்லறம் துறவறம் இரண்டினதும் சிறப்புகள் மிகத்தெளிவாக கூறப்படுகின்றன. பெண்களின் உயர்வான குணங்கள் எப்படி இருப்பன என்பதும் பேசுகிறார் ஆசிரியர். மாயை எப்படித் தொழில்படுகின்றது. உயர்நிலையில் உற்றாரும் மாயையினால் எவ் வாறு மயக்கப்படுகிறார்கள் என்பது போன்றன மிகத்தெளிவாகச் சொல்லப் பெறுகிறது.

இங்கு மூன்றுவகையான உபதேசங்கள் காணப்படுகின்றன. காசிபமுனிவன் உபதேசம் இது உண்மையான தருமத்தை அடிப்படையாகக் கொண்டு சிவன் அருள் பெற்று முத்தி இன்பத்தை அடைகின்ற நிலை பேசப்படுகிறது. இரண்டாவது மாயவள் உபதேசம். இது உலகத்தில் போகபோக்கியங்களை விரும்புவார்க்கு அது எவ்வாறு அடைந்து கொள்ளலாம் எனப்பேசப்படுகிறது. மூன்றாவது சுக்கிரன் உபதேசம். இது வேதாந்தக் கொள்கையை உணர்த்தி அதிலே உலகாயதச் சிறப்பை உணர்த்துகிறது அரசர்குரிய நிலையையும் சிறப்பாகச் சொல்லப்படுகின்றது. உலகில் மேம்பாடு புகழ் இதனை விரும்புவோர் என்செய்ய வேண்டும் என்பதை விளக்கப்படுகிறது.

மார்க்கண்டேயர் படலத்திலே சிவனடியார்களின் பெருமை பேசப்படுகிறது. அவர்கள் இயல்புபற்றியும் அவர்களை அடைந்து தொண்டு செய்வார்கள் இம்மை இன்பத்தையும் பெற்று இயமன் வாதனையையும்கூட வெல்வார் என்னும் பகுதிகள் அற்புதமாகச் சொல்லப்படுகின்றன.

தீங்கு ஒருவர்க்கும் நினையாது வாழ்வார் எத்துணை துன்பம் நேரினும் அதனால் துன்பமுறார் என்றும் உலகில் மற்றையோர்க்கு தீங்கிழைப்பார் எவ்விதம் துயரப்படுவார் எனும் பகுதிகள் மிக அழகாகக் காணப்பெறுகின்றன.

அண்டகோசப் படலம் இக்காண்டத்து மிகவும் சிறப்புடைய தொன்றாக விளங்குகின்றது. அதில் நாம் வாழும் மண்ணிலான இப் பூமியைப்போல இன்னும் வேறு ஆறு பூமிகள் உண்டு எனவும், நாம்வாழும் பூமியைச் சூழ்வது உப்புநீர் என்றும் இதேபோல மற்றவையும் பாலாலும், தயிராலும், நெய்யாலும், தேனுலும் கருப்பஞ் சாற்ருலும், தூய நீராலும் சூழப்பட்டு விளங்குவன என்றும் இப்பூமிகளில் வாழ்பவர்களின் வடிவம், ஆயுள், குணம், உண்பன வழிபடும் தெய்வங்கள் ஆதியனவும், மலைகள், ஆறுகள் முதலியனவும் பேசுகிருர். மனிதர்கள் வாழும் இப்பூமியின் எமது செயலும் ஆயுளும் கொள்கையும் பேசும் சிறப்பும் காண்க, பாதாள உலகங்கள் யாவை அதன் வண்ணம் எப்படி என்றும் மேலுலகங்கள் வானத்தில் எப்படி அமைகின்றன என்றும் சூரியதேவன் முதலியன எவ்வாறு இயங்குகின்றன. ஒளிசெல்லா இருட்பிழம்புகள் அங்குகாணப்பெறும் இயல்புகள் இதுகால்யாவரும் இன்னும் அறியாத பலவற்றைப் பற்றிஅற்புதமாக பேசுகிருர். இப்பூமியில்தான் காற்றுஉண்டு, இங்குதான் மழைபெய்யும்என்றும் மற்றைய எந்த அண்டத்திலும் இதுஇல்லை எனவும் எப்பவோ எமது முன்னேர் கூறியதை இப்போழுதுதானே சந்திரனுக்குச் சென்று நிரூபித்தார்கள் மேல் நாட்டார். ஆகவே ஏதுமொன்றும் புதிதாக ஆவது இல்லை. அறிந்ததைத்தான் இதை அறியாதார் அறிந்தோம் என வியப்பது அன்றி வேறில்லை எனும் உண்மைகள் இப்படலமுடாகப் புலப்படுகின்றன.

அஃதன்றி எல்லா பூமியிலும் நாம்வாழும் பூமியே மிகச்சிறந்தது என்றும் அந்த அந்த உலகில் உள்ளார்கள் இங்கு வந்து புரியும் பாவ புண்ணியத்திற்கேற்ப வான உலகில் எவ்வாறு சொர்க்க போகங்களையும் ஏனைய நரகதுன்பங்களையும் அநுபவிப்பார் என்பதும் அஃதன்றி நாம் வாழும் பூமியும் ஒன்பது கண்டம் உடையது அதிலும் மேன்மையானது பரதகண்டம் அதில்தான் தவம், சிவபூசை, தருமம் முதலிய காணப்பெறும் பெரியோர் வாழ்வர் என்றும் ஏனைய எட்டுக் கண்டங்களில் வாழ்வார் யாவரும் மிலேச்சர்கள் ( தெய்வ நம்பிக்கை குன்றிய உலக சுகத்தை விரும்பும் மக்கள் ) என்றும் எத்தனை கற்பங்களுக்கு முன்னுக இன்று நாம்காணும் காட்சிகளை பேசியதின் அற்புதம் மிகச் சிறப்பாக காணப்படுகிறது. இப்படலத்து தமிழ் பேசும் மக்களிடத்து முன்பு நிகழ்ந்திருந்த தூர அளவைகள் பற்றிய குறிப்புகளும் காணப்பெறுகின்றன

இக்காண்டம் முழுவதும் திருச்செந்தூரில் அன்று அமர்திருந்த முருகப்பெருமானுக்கு வியாழபகவான் அசுரர் வரலாறு சொல்வதாகவே பாடப்பெற்றது. இங்கு பாடல்கள் அனைத்தும் அருள்நிறைவுடன் காணப்படுகின்றன. அமரர் சிறைபுகு படலத்தில் வியாழ பகவான் முருகப்பெருமானுக்கு அசுரர்துயரம் சொல்லி விண்ணப்பிக்கும் பகுதிகள் அற்புதத்துடன் உவகைக் கண்ணீர் பெருக்கும் பாடலாக அமைவுற்றிருப்பதைக் காணலாம்.

தமிழ்த் தெய்வமான அகத்திய முனிவனின் சிறப்புகள் அற்புதச் செயல்கள் பற்றிக் கூச்செறியும் வகையில் சொல்லப்பெறுகிறது. இக்காலத்தில், எவராகுதல் அறிந்திராத பல அற்புதமான உண்மை நிலைகள் இக்காண்டத்து காணப்பெறுகின்றன. இங்கு மிருகண்டுயரின் தந்தை குச்சகர் இல்லற தருமத்தைச் சிறப்பித்து

பேசுதலும், மகன் மிருகண்டுயர் துறவற தருமத்தைச் சிறப்பித்துப் பேசுதலுமாகிய பகுதிகள் இவ்வுலக வாழ்வின் பயனை உண்மையாகப் பெற விரும்புவோர் அறிய வேண்டிய விடயங்களாகும். ஞானம்தான் உருவாகியவன் எமது ஐயன் முருகன். அவன் அருளாலே அவனது புராணத்தைப் பாட எடுத்துக்கொண்ட ஆசிரியரும் ஏனைய அறிவாளிகள் எனப்படும் எத்துணைப் புலமையோரும் எடுத்தக் கூற முடியாது விட்ட மிகமிக நுண்ணிய ஞானக் கருத்துக்களை உலக மக்களுக்கு வேண்டிய மிக முக்கியமாகிய உபதேசம்போலும் அறிவுரைகளைச் சொல்லாமல் சொல்லி உணர வைக்கிறா இப்புராணத்து.

திருக்குற்றாலப் படலம் தங்கள் தங்களது சமயம்தான் மேலானது என மத வெறிபிடித்து நிற்கும் சமயவாதிகட்கு அவர்களது மடமையை எடுத்துக் காட்டும் ஒன்றாக விளக்கியிருக்கிறார்.

விந்தகிரிப் படலத்தில் தற்பெருமைகொள்வார் எவ்வாறு உலகில் தமது தற் பெருமைக்கு அடிமையாகி, மீண்டும் தங்கள் பேதமைச் செயலால் எவ்வாறு உலகில் உள்ள மற்றையோருக்கு பெருந் தீமைகளை விளைவித்துப் பின்னர் தாமும் அழிவர் என்பதை மிகச் சிறப்பாகப் பேசுகிறார். வினையினால் துன்பமுறுவார்க்கு ஒரே ஒரு வழி பூவும் நீரும்கொண்டு பெருமானைப் போற்றுதல்தான் என்பதன் உண்மையும் எந்தவிதமான இடருறும் காலத்தும் எம்மை ஆட்கொண்டு அருளவல்லவன் விநா யகப் பெருமான் என்பன போன்ற அவரின் அற்புதமும் மிகச் சிறப்புடன் காவிரி நீங்கு படலத்தில் பேசுகிறார். உலக அமைப்பெல்லாம் முடிந்த முடிபுதான், இன்பத்தைத் துன்பம் தொடர்ந்தும் துன்பத்தை இன்பம் தொடர்ந்தும் சுகத்தைத்துயரம் தொடர்ந் தும் மாறி வருவன என்றும் சுக துக்கங்களில் பெரியோர் அதை எவ்வாறு ஏற்பார்கள் நடப்பார்கள், என்பனஇந்திரன்கரந்துறை படலத்தில் பேசுகிறார். சூரபன்மன் இயல்பும் அவன் யாகச் சிறப்பும், தவமும், வைராக்கியமும், சிவனருட் பேறும் யாவும் தெளிவுபெறச் சொல்லுகிறார்.

காவல் தெய்வமாகும் கருணைக் கடலான ஐயனார் பெருமானின் அற்புதத் தோற்ற வரலாறும் அவரினுடைய அற்புதங்களும் பேசப்படுகின்றன. இன்னும் இவைபோன்ற கதைகள் கற்பனைகள் மிகச் சிறப்பாகக் காணப் பெறுகின்றன. அன்பர்கள் அதனை ஆங்கு கண்டுகொள்க.

முன்னுக வெளிவந்துள்ள உற்பத்தி காண்டத்திலும், இக்காண்டத்திலும் எத்தனையோ பிழைகள் தவறுதல்கள் நிகழ்ந்திருக்கக்கூடும். அவற்றினை அடியார் கள் பெரியோர்கள் பொறுத்து என்னை இப்பணியைச் செய்யுமாறு அவர்கள் ஆசியை பெற விரும்பி வணங்கிக் கொள்கின்றேன்.

இப்போது இக்காண்பத்தை அச்சிட்டு உதவ கருணை நிறைந்த பெரியோர் களே, இப்பணியை ஏற்றிருக்கிறார்கள் அவர்க்கும் எனது நன்றி.

கஞ்ச மலர் பாதம் வாழ்க — வேல்வேல்
கருணை நிறைந்த பெரியோர்கள் வாழ்க
இந்திரன் முதலியோர் வாழ்க — வேல் வேல்
இவ்வுலகில் உள்ளோர் யாவரும் வாழ்க.

உயரப்புலம்
செத்குவில் மேற்கு
12 - 7 - 73

இங்ஙனம்
வை. நல்லையா

உ

சிவ சிவ

ஆரறிவார் நின்சீரை ஆறுமுகத் தெம்மரசே
பேரறிவாய் உள்நின்ருய் பிரியாத மாதவருள்
சீரறிவார் திருவாழும் சீர்நல்லைக் குருமணியே
ஊரறியாவண்ணமே ஒருமுனிவனுய் வந்தோய்.

## கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் துதி

"போதமுறு சூதமுனி புகன்ற காந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன்கட் பொருள தான

மேதகுவண் புனலருந்தி வைய முய்ய
வெய்யதுயர்ப் பிறவியெனும் வெம்மை தீரத்

தாதவிம்பூம் பொழிற்காஞ்சிக் குவட்டி லேறிச்
சலதியமு திளைநிகர்செந் தமிழ தான

காதன்மழை பொழிந்தஅருட் கொண்ட லான
கச்சியப்பன் இருபாதம் உச்சி வைப்பாம்"

இக் கந்தபுராணத்தை மெய்யன்புடன் நியமமாக படிப்பவர் கேட்பவர்கள் நோய்நீக்கம் செல்வம் புத்திரபாக்கியம் சத்துருஜயம் முதலிய பொற்று உய்வார்கள்.

— பெரியோர் பலர் வாக்கு

உ

திருச்சிற்றம்பலம்

இரண்டாவது

# அசுர காண்டம்

## 1. மாயைப் படலம்

ஊரி லான்குணங் குறியிலான் செயலிலான் உரைக்கும்
பேரி லான்ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு
நேரி லான்உயிர்க் கடவுளாய் என்னுளே நின்றான்.

கருணை வெள்ளம்தான் ஆறுமுகமும் பன்னிரு கைகளுடனும் திருச்செந்தூர் என்னும் பதியில் சிம்மாசனத்தில் வீற்றிருக்கின்றது எனும்படியான எமது அப்பனுக்கு தேவகுருவாகிய வியாழ பகவான் எம்பெருமானை வணங்கியவாறே அசுரர்களுடைய தோற்ற வரலாறு சொல்லியருள்கின்றார்.

ஓர் ஊர் இல்லாதவனும், ஓர் குணம் இல்லாதவனும், குறிகள், அடையாளங்கள் இல்லாதவனும், ஓர் செயலும் இல்லாதவனும், எவராலும் அழைக்கப்படும் பெயர் இல்லாதவனும், முன்னாக ஒருவர் இல்லாதவனும், பின்னாக ஒருவர் இல்லாதவனும். தன்னையன்றி தனக்கு வேறாகச் சார ஒருவரைச் சாரும் தன்மை இல்லாதவனும், வருதல் அல்லது போதல் எனும் தன்மை இல்லாதவனும், தனக்கு மேலாக ஒன்று இல்லாதவனும், தனக்கு இணையாக நேர் ஒருவர் இல்லாதவனுமாய் விளங்கும் சிறப்பினை உடையவன் எனது உயிர்க்கு கடவுளாய் என் உள்ளே நின்றான்.

''உளமே புகுந்த அதனால்'' என்றும், ''ஊன்கருவின் உள்நின்ற சோதியானை'' என்றும், ''ஊனங்கத்து உயிர்ப்பாய், உலகெலாம் ஓங்காரத்து உருவாகி நின்றானை'' என்றும். ''என் உள் எழு பரஞ்சோதி'' என்றும் வருகின்ற நாயன்மார் திருவாக்குகளும் ''உயிர்க்குயி ,ராய் இருப்பவர் கடவுள்'' எனும் யோக சுவாமிகள் திருவாக்கும் ''பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிருதோள்களுமாய் தித்தித்து இருக்கும் அமுது என்னுளே கண்டேன்'' என அருணகிரியார் வாக்கும் மேற்சொல்லிய பாடலோடு ஒப்பிடக்கூடியன.

கடவுள் உயிர்க்கு உயிராகி நின்றார் எனினும் யாவராலும் அறியப்படார். ஆனால் அன்பரால் அறியும்படியாகவும் நின்றார் என்னும் கருத்தமையவும் கூறியருளினார். நின்றான் என்றமையால் ''அன்றும் இன்றும் என்றும் என் உயிருக்கு கடவுள் அவனே. அவனையே நினைந்து அவனையே பாடி அவனில் யான் ஒடுங்குவேன்'' எனும் திடம் இங்கு தெளிவாகின்றது. இப் பாடல் இக்காண்டத்திற்கு கடவுள் வணக்கமாகும். 1

வீறு காசிபன் சிறார்களாய் மேவிய அறுபான்
ஆறு கோடிய தாகிய அவுணருக் கரசன்
மாறில் மங்கல கேசியாம் அரக்கியை மணந்து
பேற தாகவே சுரசையென் றொருமகட் பெற்றான்.

வேகம் கொண்ட குணம் உடைய காசிபன் என்பானிடத்திருந்து அவன் பிள்ளைகளை வழித்தோன்றல்கள் எனும்படி அறுபத்தாறு கோடி அசுரர் தோற்றினர்கள். இந்த அறுபத்தாறு கோடி அசுரர்களுக்கும் தலைவனாக அசுரேந்திரன் என்பான் அரசனானான். அசுரேந்திரன் மாறுபாடு இல்லா நெறியுடைய மங்கலகேசி என்னும் இராட்சதப் பெண்ணை திருமணஞ் செய்து அதன் பேறாக சுரசை என்னும் பெயருடைய ஒரு மகளைப் பெற்றுக் கொண்டான். 2

**தூய அம்மகள் வளர்ந்தபின் புகர்எனுந் தொல்லோன்**
**தீய மாயையின் கல்விகள் யாவையுந் தெருட்டி**
**ஆய விஞ்சையின் வல்லபம் நோக்கியே அவட்கு**
**மாயை என்றுபேர் கூறினன் மனத்திவை மதிப்பான்.**

தூயதானவளாய் அழகுடன் விளங்கிய சுரசை என்னும் அந்த மகள் வளர்ந்த பிற்பாடு அவளுக்கு, அசுரகுருவாகிய மிகப் பழைமையான சுக்கிர பகவான் தீமை யான மாயையின் கல்விகள் யாவற்றையும் அறிவுறுத்தி அந்த மாய வித்தைகளில் திறம்பாடுடன் அவள் விளங்கும் தன்மையைக்கண்டு அவளுக்கு மாயை என்றே ஒரு பெயரினைச் சூட்டி அப்பெயரே வழங்குமாறு செய்து பின்னர் தனது மனத்தில் இவற் றைச் சிந்தனை செய்துகொள்கிறான் சுக்கிர பகவான். 3

**இன்ன லெய்திய அவுணர்கள் சிறுமையும் இமையோர்**
**மன்ன னாதியர் பெருமையும் வானநாட் டுறைவோர்**
**நன்ன லந்தொலைந் தசுரரால் மெலிந்திட நந்தி**
**சொன்ன வாய்மையுங் கருதினன் புகரெனுந் தூயோன்.**

எவ்வாறெனில் இப்பொழுது தேவர்களால் தோற்கடிக்கப்பட்டு அதனால் பெருமை நீங்கி அசுரர்கள் யாவரும் சிறுமைப்பட்டுள்ள நிலையையும் தேவர்களுக்கு அரசனான இந்திரன் முதலியோர் பெருமைகளையும் இதன் தன்மை இப்படியாக இருந்தாலும் பெருமை உற்று இப்போது விளங்குகின்ற தேவ உலக வாசிகளானவர் யாவரும் தங்கள் நன்மையான நலமெலாம் தொலையப்பெற்று அசுரரால் வருத்தப்பெற்று அடிமைகளாகும் வண்ணம் நந்தியெம்பெருமான் சொன்ன வாய்மையான சாபத்தையும் தனது மனத்தில் கருதினார் சுக்கிரன் என்னும் தூயவர். 4

**கருதி இன்னண மேல்வருந் தன்மையுங் கண்டு**
**குருதி தோயும்வேல் அவுணர்கோன் பயந்தகோற் றொடியை**
**வருதி என்றுகூய் வரம்பறு பேரருள் வழங்கி**
**ஒருதி நந்தனைக் கேளெனத் தேசிகன் உரைப்பான்.**

இவ்வாறு மனத்தில் உணர்ந்து மேலாக நடக்க இருக்கும் காரியங்களையும் ஞானஉணர்வால் தெளிந்து கண்டுகொண்டு சுக்கிரபகவான், இரத்தம் தோயும் வேல் ஏந்திய அசுரேந்திரன் பெற்றெடுத்த பூங்கொடிபோலும் அழகுடைய மாயை என்பவளை வாவென அழைத்து எல்லையற்ற கிருபையுடன் அருள் கொடுத்து அவளை நோக்கி ''மாயையே! நான் சொல்லும் ஒரு காரியத்தைக் கேட்பாயாக'' என குருவான சுக்கிரன் கூறத்தொடங்கினார் 5

வனச மங்கைதன் கணவனுல் வாசவன் தன்னுல்
முனிவர் தேவரால் அளப்பிலா அவுணர்கள் முடிந்தார்
அனையர் மேன்மையை யாவரும் உணர்குவர் அதனுல்
உனது தந்தையும் வலியிழந் தேயொடுங் குற்ருன்.

''தாமரை மலர் மேல் இருக்கின்ற மகாலெட்சுமி நாயகரான விஷ்ணுமூர்த்தி தன்னுலும், இந்திரன்தன்னுல், முனிவரால், தேவரால் உனது குலத்தவரான அசுரர் பலர் முடிவானுர்கள், இப்பொழுது உலகம் உங்கள் குலத்தை நாசமாக்கிய தேவர் கள் பெருமையைத்தான் உணர்கின்றது. இவ்வாருன நிலையால் உனது தந்தை அசுரேந்திரனும் வலி இழந்து ஒடுங்கிப் போனுன்.'' 6

மின்பொ ருட்டினுல் கேதகை மலர்ந்திடும் விளங்கும்
என்பொ ருட்டினுல் மாமழை சொரிந்திடும் ஈட்டும்
பொன்பொ ருட்டினுல் யாவுமுண் டாமதுபோல
உன்பொ ருட்டினுல் அவுணர்க்கு மேன்மைய துளதாம்.

''மின்னலின் காரணமாக தாழைமரப்பூ மலர்ந்திடும்; விளக்கமுடன் பிரகாசிக்கும் எனது பொருட்டால் பெரிய மழை சொரியும்; சம்பாதித்துக்கொள்ளும் பொன் பொருட் டாக எல்லாம் பெறமுடியும். இதே போல மாயையே! உன் பொருட்டால் அசுரர்களுக்கு மேன்மை உளதாகும்'' என சுக்கிரன் கூறினர். அநாதியான மாயையே உலகில் கொடு மையானசெயல்களுக்குகாரணம். ஆகவே ''உன் பொருட்டால் அசுரர்களுக்கு மேன்மை உளதாம்'' என சுவைபடக் கூறுகிருர். 7

வாச மாமலர் மடந்தையும் வந்தடி வணங்கப்
பேசொ ணுததோர் பேரழ குருக்கொடு பெயர்ந்து
காசி பன்றனை அடைந்துநின் வல்லபங் காட்டி
ஆசை பூட்டியே அவனெடும் புணருதி அல்லில்.

''ஆகவே மாயையே! வாசமுடைய பெரும் தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் அழகிற்கு முதல்வி எனப் பேசப்படும் மகாலட்சுமி தேவியும் வந்து உனது அழகு கண்டு காலடியில் வீழ்ந்து வணங்குமாறு அத்துணைப்பெரிய சொல்லொணுத அழகிய வடிவத்தை உனது மாய வல்லபத்தால் நீ எடுத்துக்கொண்டு சென்று தவம் செய் கின்ற காசிப முனிவனை அடைந்து உனது வல்லபத்தினை அவனிடம் காட்டி உன்பால் ஆசை உண்டாக்கி அவனேடும் நீ இரவிலே கூடுவாயாக.'' 8

அல்லி டைப்புணர்ந் தசுரர்கள் தம்மையுண் டாக்கி
மெல்ல அங்கவர் தங்கட்கு நாமமும் விளம்பி
எல்லை யில்வளம் பெற்றிட அவுணருக் கியலுந்
தொல்லை வேள்வியும் விரதமும் உணர்த்துதி தோகாய்.

''நீ மயக்கிக்கொண்டு உன் வசமாக்கிய காசிப முனிவனை அழைத்து இராக்காலத் திலே அவனேடும் சேர்வாய். சேர்ந்து அசுரர்களை பிள்ளைகளாகப் பெற்றெடுப்பாய். நீ பெற்றெடுத்த பிள்ளைகட்கு மெதுவாகப் பெயரையும் இடுவாய். அதன்பின் அப் பிள்ளைகள் எல்லையற்ற செல்வத்தைப் பெற்றிட அசுரர்கட்கு இயலும் பழங்காலம் தொட்டு நிகழ்ந்துவரும் யாகங்களைச் செய்யும் விதங்களையும் விரதம் இருக்கும் முறை களையும் நீ சொல்லிக் கொடுப்பாயாக, மயில்போலும் சாயலுடைய மாயையே!'' 9

இன்ன தன்மைகள் முடிந்தபின் நின்சிருர் எவரும்
நன்ன லந்தனை அடையவும் நண்ணல ரெல்லாம்
பன்ன ரும்பழி மூழ்கவும் அருந்தவம் பயில
அன்னை மீளுதி என்றனன் புகரெனும் ஆசான்.

''இன்ன தன்மைகள் முடிந்த பின்பாக நினது பிள்ளைகள் யாவரும் நல்ல நிலையை அடையும்படியும் பகைவர்கள் எல்லாம் சொல்லுதற்கரிய அபகீர்த்தியான பழியில் மூழ்கிடவும் அரிய தவத்தைச் செய்தற்கு என்தாயே! நீ மீண்டு வருவாயாக'' என்று கூறினன் சுக்கிரன் என்னும் குரு.

குழந்தைகள் செவ்விதாக வளர்ந்து சிறப்புற்று இருக்கவேண்டில் அதற்குத் தாய் செய்யும் பெருங்கடமை தவமாகும். இந்தவோர் பெரிய உண்மை நம்முடைய தாய்மார் களிடத்து தொன்று தொட்டு நிகழப்பட்ட ஒன்றாகும். பின்னரும் தனது குலம், பிள்ளை, கணவன் இவர்களும் விருத்தியாகி சிறப்புறுதற்கு தாயின் தவமே காரணம். இதனையே வள்ளுவரும்

ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணில் தவத்தால் வரும்

எனவும் கூறினர். இந்த ஒரு பெரிய உண்மையைக் கொண்டே சுக்கிரன் மாயையை நோக்கி ''உன் பிள்ளைகள் நன்றாகச் சிறப்புறவும் உங்கள் பகைவர்கள் அழியவும் நீ தவம் செய்''எனக் கூறினர். 10

குரவன் வாய்மையை வினவியே கோதில்சீர் அவுணர்
மரபு மேம்படு தன்மையான் மற்றிவை யெல்லாம்
அருளு கின்றனை ஆதலால் இப்பணி யடியேன்
புரிகு வேனென அவனடி வணங்கியே போனுள்.

குருவான சுக்கிர பகவானின் இந்த உண்மையான வாக்கியங்களைக் கேட்டு மாயை சொல்வாள் ''ஐயனே! குறைவிலாச் சிறப்பினை உடைய அசுரர்கள் குலமான எங்கள் குலம் மேம்படுதற்குரிய தன்மையாக இவைகளை எல்லாம் எனக்கு அறிவுறுத்தினீர். ஆதலாலே இப்பணியை அடியேன் செய்வேன்'' என கூறி குருவின் பாதத்தை வணங்கி விடைபெற்று மாயை போயினள். 11

மயிலை அன்னவள் அவுணர்தம் மன்னற்கும் இனைய
செயலை யோதியே அவன்விடை யுங்கொடு சென்று
கயிலை என்னநீ ருடியே காசிபன் இருந்து
பயிலும் நோன்புடை எல்லையை நாடியே படர்ந்தாள்.

மயிலை ஒத்தவளாகிய அழகுடைய மாயை என்பாள் அசுரர் அரசனை அசுகேந்திரனுக்கும் இந்தச் செய்திகளைச் சென்று சொல்லி அவன் அனுமதியையும் பெற்றுக் கொண்டு புறப்பட்டு காசிபமுனிவன் கயிலைமலை என்னும்படியாகத் திருநீறு பூசிய மேனியோடும் இருந்து பல நாளாகச் செய்துவரும் தவம் புரியும் இடத்தை நோக்கியவாறு சென்றாள். 12

திருவும் மாரவேள் இரதியும் திலோத்தமை யென்ன
மருவு தையலும் மோகினி யென்பதோர் மாதும்
ஒருத னித்திரு வடிவுகொண் டாலென உலகில்
பொருவில் மாயவள் பேரழ குருக்கொடு போனுள்.

இவ்வாறு செல்கின்ற மாயையென்பாள் மகாலெட்சுமியும், மன்மதன் மனைவியான இரதியும், திலோத்தமை என்னும் அழகு பொருந்திய பெண்ணும் மோகினி என்பதோர் பெண்ணும் ஆகிய இவர்கள் யாவரும்தான் திரண்டு ஒரு தனியான அழகிய வடிவு கொண்டார்கள் எனும்படியாக உலகில் தனக்கு வேறொரு இணையில்லாத மாயவள் பேசற்கரிய பெரிய அழகின் உருவங்கொண்டு போனாள். 13

மண்ணுற் றோர்களும் மாதிரத் தோர்களும் மதிதோய்
விண்ணுற் றோர்களும் அன்னவள் எழில்நலம் விரைவில்
கண்ணுற் றோர்கிலர் அணுகினர் காமவேள் கணையின்
புண்ணுற் றோர்விளக் கழலுறு பறவையிற் புலர்ந்தார்.

மண்ணில் உள்ளார்களான மனிதரும் திக்கில் உள்ள உலகங்களில் உள்ள வேறு கணத்தவரும் மேலுலக வாசிகளான தேவர்களும் யாவரும் மாயை கொண்ட பேரழகின் வடிவு கண்டுகொண்டு அவளை இவள் தான் மாயை என்பதை உணரமுடியாதார்களாய் தாமாகவே அழகால் மயங்கி கிட்டே அணுகினராய் மன்மதன் அம்புகளால் புண்பட்டார்களாய் ஓர் விளக்கின் சுடர் முன்னுக ஒளியின் சிறப்பால் மயங்கிச் சென்று வீழ்கின்ற ஈ போல ஆனார்கள். 14

மதியும் ஞாயிறுஞ் சூழ்தரு மேருவின் வடபால்
விதிம கன்தவம் புரிதரும் வியனிலை மருங்கின்
அதிர்சி லம்பொடு மேகலை புலம்புற அனையாள்
திதிகொல் என்றெலாத் தேவரும் ஐயுறச் சென்றாள்.

சந்திரனும் சூரியனும் சூழ்ந்து வலம் வரும் மேருமலையின் வடபுரத்து பிரமதேவர் மகனான காசிபன் இருந்து தவம் புரிகின்ற மேலான இடத்தின் பக்கராக அதிர்கின்ற சிலம்புகள் அணிந்த காலுடனும் மேகலை என்னும் ஆபரணம் ஒலிக்கும் அரையுடனும் மாயை ஆனவள் இவள்தான் திதி என்னும் பெண் என்று எல்லாத் தேவரும் ஐயங்கொள்ளும்படி சென்றாள்.

**திதி:** இவள் காசிப முனிவரின் மூத்த மனைவி. அசுரர்களுக்கு தாயானவள். தக்கன் மகளுமாவள். 15

சென்ற மாயைஅக் காசிபன் இருக்கையில் திருவாழ்
மன்றல் வாவியுந் தடங்களுஞ் சோலையும் மணிசெய்
குன்று மாமலர்ப் பள்ளியும் மண்டபக் குழாமுந்
தன்றன் ஆணையால் துண்ணெனச் சூழ்தரச் சமைத்தாள்.

இவ்வாறு சென்ற மாயவள் அக்காசிப முனிவன் இருப்பிடத்தில் தனது வல்லபத்தால் மகாலட்சுமி வாழும் செந்தாமரை நிரம்பிய குளங்களும், தடாகங்களும், சோலையும், இரத்தினங்களால் ஆகிய செய்கை மலைகளும், பூக்கள் பரப்பிய மெத்தைகள் இடப்பட்ட பள்ளி அறைகளும், மண்டபங்களும் விதம் விதமான அழகுடன் தோன்றவும் இவையாவும் தனது ஆணையாலே தானே திடீரெனத் தோற்றுமாறு படைத்து எங்கும் சூழ்ந்து விளங்கும்படி ஆக்கிவைத்தான். 16

இனைத்தெ லாமவண் வருதலும் எந்தைதன் னடியை
மனத்தி னிற்கொடு பொறியினை உரத்தினுல் வாட்டித்
தனித்து நோற்றிடுங் காசிபன் புகுந்தஅத் தகைமை
அனைத்தும் நோக்கியீ தென்கொலென் றதிசய மடைந்தான்.

இவ்வாருக இவை எல்லாம் அவ்விடத்தே வருதலும் அப்போது எந்தை பெருமானுடைய திருவடிகளைத் தியானித்து மனங்கொண்டு பஞ்சப் புலன்களின் வேகங்களை தனது அறிவினுல் அடக்கி ஆண்டு தனித்திருந்து தவஞ்செய்திருக்கும் காசிபமுனிவன் தான் இருந்த அக்காடான இடமே இப்போது சோலை, மண்டபம் குளங்கள், நிரம்பிய உல்லாச இருப்பிடமாக மாறியமை அனைத்தையும் பார்த்து இஃது என்ன இருந்தாற் போல இப்படியாயிற்று என்று பெரிதும் அதிசயம் அடைந்தான். 17

முற்று மாங்கவை ஆசையின் நெடிதுபன் முறையால்
உற்று நாடியே மாயைதன் செயலென உணரான்
இற்றெ லாமிவண் இயற்றினர் யாரென எண்ணிச்
சுற்று நோக்கினன் யாரையுங் காண்கிலன் தூயோன்.

எல்லாப் புதுமையான பொருள்கள் யாவற்றையும் மிக ஆசையுடன் நெடு நேரம் வரையில் பலமுறையாலும் உற்று நாடினுன் காசிபன். மாயையினுடைய செயல்தான் இவையாவும் என உணராஞய் இவைகள் யாவும் இவண் இப்படி யார் செய்தார் என எண்ணியவாறு சுற்றிப்பார்த்தான். யாரையும்தானும் தூயவனுன அம்முனின் கண்டானில்லை. 18

மெய்த்தவ வுணர்ச்சியை விடுத்து மேலையோன்
அத்தன தருளினுல் அணங்கு மாயையால்
வைத்தன கண்ணுரு மனங்கொள் காதலாற்
சித்திர மெனவெரீஇ யினைய செப்புவான்.

உண்மையான தவ உணர்சசியை விடுத்து மேலையோனுன காசிபன் யாவர்க்கும் கடவுளான சிவபிரான் அருளால் இச்செயலை நிகழ்த்திய மாயையால் வருவிக்கப்பட்ட பொருள் மீது வைத்துள்ள கண் மாற்றமாட்டாது மனங்கொண்ட காதலாற் சித்திரப்பாவைபோலாகி ஒடுங்கியவண்ணமாக இவைகளைச் சொல்லிக்கொள்கின்ருன். 19

வானநா டிழிந்ததோ மகத்தின் வேந்துறை
தானநா டிழிந்ததோ தனதன் ஆதியோர்
ஏனைநா டிழிந்ததோ இதுவன் றேல்இவை
ஆனவா றுணர்கிலேன் அழுங்கு சிந்தையேன்.

''இங்கே தேவபூமியானது இறங்கி உள்ளதோ அல்லது இந்திரனுடைய சுவர்க்க பூமி இறங்கி வந்துள்ளதோ அன்றியும் குபேரன் ஆகியோரின் வேறு நாடுகள் வந்து இங்கு சேர்ந்துள்ளனவோ இது அல்லாவிடில் இவைகள் எவ்வாறுதான் ஆனவை என் பதை உணரமுடியாது இருக்கின்றேன். மிகவும் விசாரமுறும் மனமுடையேன் ஆயினேன்'' என்பான். 20

ஆரணன் செய்கையோ அகில முண்டுமிழ்
நாரணன் செய்கையோ அவர்க்கு நாடொணாப்
பூரணன் செய்கையோ பிறர்பு ரிந்ததோ
காரணந் தேர்கிலேன் கவலும் நெஞ்சினேன்.

''அன்றியும் இச்செய்கைதான் வேதம் ஓதுகின்ற பிரமதேவரின் செய்கையோ? உலகெலாம் உண்டு உமிழ்கின்ற விஷ்ணுமூர்த்தியின் செய்கையோ? இந்தப் பிரம விஷ்ணுக்களும் நாடியறியமாட்டாத பூரணப்பொருளான சிவபிரான் செய்கையோ அன்றி பிறர் செய்தனரோ? இவை இங்கு வந்த காரணத்தை அறியொணுது வாடுகின்ற நெஞ்சுடையன் ஆகின்றேன்'' என்ருன் காசிபன். 21

புன்னெறிக் கானிடைப் புகுந்த இத்திரு
நன்னெறிக் கேதுவோ நலந்த விர்ந்திடுந்
துன்னெறிக் கேதுவோ தொல்லை ஞாலமேல்
எந்நெறிக் கேதுவென் றிதுவுந் தேர்கிலேன்.

மிகவும் சிறுமையான நிலைகொண்ட காட்டிடத்தே தோன்றிய அழகான இந்த செல்வநிலைகொண்ட நகரம் எமக்கு நன்னெறி தருவதற்கு ஏதுவானதோ அன்றி நலம் எல்லாம் தவிர்க்கப்படும் தீமை தரும் நெறிக்கு ஏதுவாகும்படியாக அமைந்துள்ளதோ, இப்பழைமையான பூமிமேல் எந்தநிலைக்கு இது ஏதுவாயிற்ருே என இதையும் நான் அறியமுடியாதிருக்கின்றேன்''. 22

என்றிவை சொற்றிவண் யாவ தாயினும்
நன்றதன் இயற்கையும் நமக்கு முன்னரே
ஒன்றறத் தெரிவுறும் உணர்ச்சி இங்ஙனஞ்
சென்றது பழுதெனச் சிந்தித் தானரோ.

என்று இவ்வாறு காசிப முனிவன் சொல்லி ''சரி இது யாவதாய் இருந்தாலும் அதன் இயற்கை நன்று. அது இருப்ப இங்கே தோன்றி உள்ள அற்புத நகரத்தின் விளைவுபற்றி முழுவதும் ஆராயும்படியாகப்போன எனது உணர்வு தான் பழுதாகும்'' என சிந்தனை கொண்டான். 23

தெற்றெனத் தன்மனந் தேற்றித் தொன்மைபோல்
நற்றவம் இயற்றுவான் நணுகும் வேலையில்
மற்றது தெரிந்திடு மாயை தூமணிப்
பொற்றையில் தமியளாய்ப் பொலிந்து தோன்றினுள்.

இவ்வாறு ஆராயப்புகுந்த சிந்தனை கூடாது என தன் மனத்தைத் தேற்றிக் கொண்டு பழைமைபோல நல்ல தவத்தை செய்யும்படியாக காசிபமுனிவன் தொடங்கும் நேரத்து அதை மாயை ஆனவள் தெரிந்து தனது உருவத்தை காசிபமுனிவன் கண்ணுல் காணும்படியாக இரத்தினங்களால் ஆக்கப்பெற்ற பெரியதோர் மலைமீது தோன்றி நின்ருள். 24

தோன்றினள் நிற்றலுந் தொல்லை நான்முகற்
கான்றதொர் காதலன் அவளை நோக்கினுன்
வான்றிகழ் கற்பக வல்லி செய்தவத்
தீன்றதொர் கொடிஇவண் எய்திற் றேவென்ருன்.

மாயை இரத்தின மலைமேல் தோன்றியவாறு நிற்றலும் மிகப் பழைமையான நான்கு முகமுடைய பிரமதேவர்க்கு மிகவும் அன்புடைய மகனான காசிபன் அவளைக் கண்ணுற்றான். கண்ட உடன் காசிபன் சொல்வான் ''தேவஉலகில் உள்ள கற்பகத்தரு வானது தான் தவம் செய்து பெற்றுக்கொண்ட ஓர் பூங்கொடிதான் இவ்விடத்து எய்தி உள்ளதோ'' எனச் சொன்னான். 25

நாற்றலை யான்மகன் நம்முன் இக்கொடி
தோற்றிய தற்புதச் சூழ்ச்சிக் கேதுவென்
றாற்றுறு தவத்திறன் அகற்றி யாயிடை
வீற்றிருந் திடுவது விடுத்துப் போயினான்.

நான்கு தலைகளை உடைய பிரமதேவர் புத்திரனாகும் காசிபன் ''நமக்கு முன்பாகத் தோற்றிய இப்பூங்கொடி அற்புதமான ஓர் சூழ்ச்சிக்குக் காரணமாகும்'' என்று தான் செய்திருக்கும் தவச் செயல்கள் யாவற்றையும் நீக்கிக்கொண்டு அவ்விடத்தில் வீற்றிருந்திடுதலையும் விடுத்து அப்பால் புறப்பட்டுப் போயினான். 26

கண்ணகல் வரைமிசைக் கடிது போயுறீஇ
அண்ணிய னாதலும் அரிவை யாய்உறப்
பெண்ணுரு வேகொல்இப் பெற்றித் தாலென
எண்ணினன் மையலுக் கெல்லை காண்கிலான்.

அகன்ற மாயை நின்ற அம்மலைமீது விரைவாகச் சென்று சேர்தலும் அங்கு கற்பகதருவின் பூங்கொடிதான் இது என எண்ணிப் பார்க்கச் சென்ற உருவம் பெண்ணாகவே இருத்தலும் காசிபன் சொல்வான் ''ஓகோ! பெண் உருவமோ இப்படியான அழகிய திருவுடன் நின்றாள்.'' என எண்ணினான். ஆனால் எண்ணிய அளவில் அவன் அவள்மீது மையலாகி அவன்கொண்ட மையலுக்கே எல்லைகாண முடியாத ஒருவனாய் நின்றான். 2‹

புண்டரி கத்திகொல் பொன்னம் பாவைகொல்
அண்டர்தம் அணங்குகொல் என்னின் அன்னரைக்
கண்டறி வேன்எனைக் காதல் பூட்டிய
ஒண்டொடி இனையள்என் றுணர்கி லேனரோ.

''இவள் வெண்டாமரை மலர்மேல் இருக்கும் சரஸ்வதிதேவியோ? அல்லது பொன் வடிவான மகாலெட்சுமியோ? அன்றி தேவப்பெண்ணான இந்திராணியோ? அப்படியாயின் நான் இவர்களைக் கண்டு அறிந்துளேனே? இவள் அவர்களுள் ஒருவராக இல்லையே. எனைத் தன்பால் காதல் கொள்ளும்படியாகச் செய்து வைத்த இவள் யாராக இருக்கலாம் என உணரமுடியாதிருக்கின்றேனே'' என்றான். 28

சேயிருங் கமலமேற் செம்மல் செய்கையால்
ஆயவள் என்னில்இவ் வழகு பெற்றிடாள்
ஏயது தேறினன் எல்லை இல்லதோர்
மாயையே பெண்ணென வந்த வாறென்பான்.

''சிவந்த தாமரை மலர்மேல் இருக்கின்ற பிரமதேவரின் படைப்புச் செயலினால் இவள் ஆனவள் என்னில் இந்த அழகை இவள் பெற்றிடாள். ஏனெனில் அவர்

எல்லாவற்றையும் படைப்பவர் ஆயினும் இந்தவிதமான அழகுடையாளை படைக்கும் ஆற்றல் அவருக்கு இல்லை. அதைநான் நன்ருகத் தெரிந்து கொண்டேன். ஆகவே உலகில் எல்லாரையும் தன்வயமாக மயக்கும் மாயையே இப் பெண் கோலம் கொண்டு இங்கு வந்துள்ளாள் போலும்'' என்ருன். 29

**புகன்றிவை பற்பல பொருவில் நான்முகன்**
**மகன்றன தருந்தவ வலியும் போதமும்**
**அகன்றனன் புணர்ச்சிவேட் டழுங்கி நைவதோர்**
**மகன்றிலின் பரிசென வருத்த மெய்திஞன்.**

என்று இவ்வாறு பல பல வார்த்தைகளை நான்கு தலையுடைய பிரம தேவரின் புத்திரஞன காசிபமுனிவன் சொல்லிய வண்ணமே தனது தவவலியும் ஞான உணர் வும் நீங்கப்பட்டவஞய் மாயையோடு கூடுதலை விரும்பி தனது சோடியோடு சேர்ந்து மகிழ்வதற்கு விரும்பித் துயருறுகின்ற ஓர் அன்றில் பட்சியைப்போன்று வருத்தம் கொண்டான் காசிபன். 30

**உண்ணிகழ் ஊண்பொருட் டுயிர்கொல் வேட்டுவர்**
**கண்ணியுட் பட்டதோர் கலையின் மாழ்குவான்**
**பெண்ணர சாயவிப் பேதைக் கென்கொலோ**
**எண்ணமென் றிடருழந் திரங்கி ஏங்கிஞன்.**

தோலின் உள்ளே இருக்கும் இறைச்சியை உண்ணும் பொருட்டாக உயிர்க்கொலை செய்து வாழ்கின்ற வேடர்களால் இடப்பட்ட வலைக் கண்ணிகளிலே சிக்குண்ட மான் போல மயங்குவாஞய் காசிபமுனிவன் சொல்வான் ''பெண்களுக்கு அரசிபோல்வளா கிய இவளுக்கு எண்ணம் யாதாக இருக்கலாம் என பலவாறு எண்ணிப் பார்த்து கவலை மேலிட்டு இடர்பட்டுத் துன்புற்ருன். 31

**அதுபொழு தவுணரை அளிக்க வந்திடுந்**
**திதிநிகர் மடமகள் சிறந்த கண்களால்**
**பொதுவியல் நோக்கொடு புணர்ச்சி நோக்கினைக்**
**கதுமெனக் காட்டினள் முனிவன் காணுற.**

அதுபொழுது அசுரரைப் பெற்றெடுத்து பேணிக்காக்க வந்திட்ட திதி என்னும் பெண்ணை ஒத்த மாயை என்பவள் தனது சிறப்புற்ற கண்களால் பொது இயல்பாக அமைந்த பார்வையோடு புணர்ச்சிக்கு உரிய பார்வை ஒன்றையும் தனது கைகளால் விரைவாகக் காட்டிஞள் காசிபமுனிவன் காணும்படியாக. 32

**கண்டனன் முனிவரன் கலங்கி ஞன்பொதுக்**
**கொண்டதோர் நோக்கியல் குறித்துக் கூடுதல்**
**எண்டரு நோக்கிஞல் இவளை யெய்துமா**
**றுண்டென நினைந்தனன் உவப்பின் உம்பரான்.**

மாயையின் கண் பார்வையின் குறிப்பைக் கண்ட மாத்திரத்தே முனிவன் கலக்க முற்ருன். அவளுடைய பொதுவாகிய பார்வை எதனையோ நாடியது எனக் குறிப்பால் உணர்ந்தான். உணர்ந்த நேரத்தில் அப்பார்வையானது புணர்ச்சி விருப்பைக்

கொண்ட எண்ணமுடையாள் என்பதை உணர்த்தியது எனத்தெளிந்து; ஆகவே இவளை நான் அடையும் தன்மையும் உண்டுபோலும் என நினைந்தான். அந்நினைவு தெளிவாகியவுடன் அவன் மகிழ்வு மிக மேம்பாடுடையதாக விளங்கினான்.

அவள் அழகால் மயங்கி இவள் என்ன நோக்கம் உடையவள் என நினைந்த போது அவள் ஓர் கண்பார்வை காட்டினாள். காட்டிய அப்பார்வை யாதாமோ குறிப்பு என மனம் கலங்கியவாறு நினைந்து ஆராய்ந்த காசிபனுக்கு அவள் பார்வையும் தனது நோக்கமும் ஒன்றாக விளங்கியன என தெளிவாகியபோது கலக்கம் நீங்கி எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டான். 33

பெருந்துயர் உதவுவெம் பிணியுந் தீர்ப்பதோர்
மருந்துமற் றாதலும் மையல் மேதகும்
அருந்தவ முனிவரன் அனைய மாதுதன்
திருந்திய நோக்கியல் தெளிந்து செப்புவான்.

மாயையின் கண்பார்வையானது அவனுக்குப் பெரிய துயரினைத் தந்து நின்ற நோயும் அந்த நோய்க்கு மருந்தும் போலாகவும் துன்பமும் இன்பமும் ஒன்றேயாகவும் விளைதலும் அவள்மேல் காதல் மயக்கம் மேலுறும் காசிபன் என்னும் செயற்கரிய தவம் செய்யும் முனிவன் அம்மாயையினுடைய திருப்தியான பார்வையின் இயல்பை தெளிந்துகொண்டு சொல்லுவான். 34

கற்பனை முதலிய கடந்த கண்ணுதற்
சிற்பரன் யாவையுஞ் சிதைய ஈறுசெய்
அற்புத மும்மவன் அருளும் போன்றதால்
பொற்புறு கின்றஇப் பூவை நாட்டமே.

''கற்பனை சிந்தனை முதலிய எவற்றையும் கடந்து நின்ற நெற்றியில் கண்ணுடைய சிவபிரான், எல்லாம் அழிவாகும்படி முடிவைச் செய்கின்ற சங்காரத் தொழிலின் அற்புதமும் அது அல்லாமல் எல்லாவற்றையும் பின்னர் நிலைபெற்று வைக்கும் கருணையான அவரின் அருளும்போலத்தான் இருக்கின்றது பொற்புடன் விளங்கிய அழகுடைய இப் பெண்ணின் பார்வை'' என்பான். 35

மாயையுங் கொலையுமே மருவி வைகலும்
ஆயதோர் உலகினை அளிக்கும் நீர்மையாற்
பாயிருந் திரைக்கடல் நடுவட் பள்ளிகொள்
தூயனை நிகர்த்ததித் தோகை நோக்கமே.

''இன்னும் இவள் பார்வையை இதற்கும் ஒப்பிடலாம். எதுவெனில் மாய வஞ்சனைகளையும் கொலையையுமேதான் பொருந்திக்கொண்டு, கொலையும் வஞ்சனையும் பெருகி நின்ற உலகை இவற்றால் அழிவுறாதபடி காத்தருள்புரிகின்ற தன்மையால் பெரியதாகிய திரைகள் மோதும் பாற்கடலில் யோக நித்திரை செய்கின்ற மிகத் தூயவரான விஷ்ணுமூர்த்தியையும் ஒத்தது இவளின் பார்வை'' எனவும் சொன்னான். 36

இயலிருள் மேனியால் இடியின் ஆர்ப்பினால்
வியனுயிர் முழுவதும் வெருவச் செய்துடன்
பயனுறு தீம்புனல் பரிவின் ஈதரு
புயலையும் நிகர்த்தன பூவை பார்வையே.

''இன்னும் இவள் பார்வையானது, இயல்புடன்கூடிய இருள்வடிவுடன் மேகமானது எழுந்து அச்சுறும்படி இருண்டு இடியின் ஆரவாரிப்புடன் தோன்றினும் பின்னல் சொரிகின்ற இனிய நீர்கொண்ட மழையின் குளிர்ச்சியால் முன் அச்சுற்றுர் யாவரும் உளங்குளிர்வாகி மனம் மலரும்படி அமைவதுபோல இப்பெண்ணினுடைய பார்வையும் உள்ளது போலும்.'' 37

என்பன பலபல எண்ணி அன்னவள்
தன்படி வத்துருத் தகைமை காணுறீஇ
அன்பினில் வியந்துநின் றழுங்கு நெஞ்சொடு
நன்பெரு நயப்பினுல் நவிறல் மேயினுன்.

என்று இவ்வாறு மாயையின் பார்வை குறித்து காசிபன் பலவற்றை எண்ணியவனுய் அப்பால் அவளின் அழகிய திரு உருவத்தின் தகைமையினைக் கண்ணுற்று அவள் மேல் கொண்ட அன்பால் வியந்து நின்று அவளைச் சேரும் வகையினை தெளிய முடியாமல் ஒரே மயலாகும் நெஞ்சோடும் உள்ளே எழுந்த நன்மையான பெரிய நயப்பாட்டினுல் அவள் அழகிய உருவத்தின் அற்புதமான நிலைகள் பற்றிப் பேசத்தொடங்குவான் காசிபமுனிவன், 38

வானுறு புயலின் தோற்றம் வரம்பில்சீர்க் கங்குல் வண்ணம்
ஏனைய கருமை யெல்லாம் இலக்கணத் தொருங்கே ஈண்டி
மீனுறழ் தடங்க ணுள்பால் மேவிய என்ப தல்லால்
நானமார் கூந்தற் கம்மா நாம்புகல் உவமை யாதோ.

''மீன் போலும் நீண்ட வரிவிழிகளை உடைய மாயை என்பாளின் கூந்தலை நான் சொல்லப்புகின் வானத்துற்ற இருண்ட மேகத்தின் தோற்றமும் அளவுகடந்த சிறப்பினை உடைய இரவின் கருமை வண்ணமும் ஏனைய கறுப்பு என்னும் தன்மையுடைய பொருள் எல்லாம்தான் ஒன்ருகக் கூடித்திரண்டு இவளின் கூந்தல் வடிவாக உற்றன என்பதேயல்லாமல், அம்மம்மவோ! நாம் வேறு எதனைத் தனியாகத் தெரிந்தெடுத்து ஒரு பொருளை இவள் கூந்தலுக்கு ஒப்பாக பேசமுடியும் முடியாதே?'' 39

கோட்டுடைக் குழவித் திங்கள் குனிசிலை இரண்டு மானின்
சூட்டுடை நுதற்கொவ் வாது தொலைந்துபோய்த் தொல்லை வான
நாட்டிடைக் கரந்துந் தோன்ற நணுகியுந் திரியு மென்னின்
மீட்டிதற் குரைக்க லாகும் உவமைகள் வேறு முண்டோ.

''இரு கொம்புகள் ஒன்ருகக் கவிந்து வளைந்த தன்மை போலும் இளம் பிறையும் வளைந்த வில்லும் ஆகிய இவைகள் இவள் நெற்றி அழகிற்கு பொருந்தாது: ஏனென்ருல் இந்த இளம் பிறையும் வில்லும் இவள் நெற்றி அழகிற்கு தோற்றுத்தான் வானவில்லும் இளம்பிறையும் வானத்தில் தேவஉலகில் ஒருகால் மறைந்தும் மெலலத் தோன்றியும் திரிகின்றன போலும் என்று நாம் இளம் பிறையின், வானவில்லின் இயல்பை வைத்து தெரிந்துகொண்டால் இவள் நெற்றி நான் சோல்லக் கூடிய உவமை வேறு யாதாக இருக்கும்?'' 40

அருவத்தில் திகழுங் காமன் ஆடலஞ் சிலையும் நெற்றி
உருவத்துக் குடைந்து வான்புக் கொதுங்கிய மகவான் வில்லும்
பருவத்தந் துரைத்தும் என்னின் மற்றிவை யிரண்டும் மாதின்
புருவத்தைப் போலா தம்மின் மீமிசைப் பொருந்து மன்றே.

''அருபியாக யாவர்க்கும் தென்படாத மன்மதனின் போர்வில்லும் இவளுடைய நெற்றி அழகைக்கண்டு தோற்று வானத்தில் புகுந்து மானத்தால் ஒழித்து நின்ற இந்திரவில்லும் ஆகிய இரண்டையும் ஓரளவிற்கு இவள் புருவத்துக்கு ஒப்பாகும் என உரைத்துச் சொல்லலாம் என்றால் அவை இரண்டும் இந்த மான்போலும் சாய லினை உடைய மாயையின் புருவங்களைப்போல ஆகாதே! ஆகவே புருவங்களுக்கு உவமையாகப் பேசப்படும் வில்களான இவைகள் இரண்டும் இவள் புருவ அழகிற்கு தோற்றுள்ள காரணத்தால் போலும் கீழ்நிலையுருது இவள் மேலாக ஒதுங்கியன போலாகின்றன.'' 41

**வண்ணமா வடுக்கோல் நீலம் வாளயில் கயல்சேல் என்றே**
**எண்ணின அவற்றி லொன்றும் யாவது மியல்புற் றன்றாற்**
**கண்ணிணைக் கிணையே தென்னிற் காமர்பாற் கடலுள் எங்கோன்**
**உண்ணிய எழுநஞ் சென்னில் ஒருசிறி தொப்ப தம்மா.**

''வண்ணம் மிக்குள்ள மாவடுவும். அம்பும் நீலோற்பல மலரும், வாளும், வேலும், கயல்மீன், சேல்மீன் என்று இவைகளைக் கண்களின் அழகிற்காக எண்ணி நின்றாலும் இவைகளில் எதுவொன்றும் இவள் கண்களிற்கு இயல்பு உடையதாகத் தென்பட வில்லை. ஆகவே இவள் கண்களுக்கு ஒப்பாக இவைகளைவிட வேறு எதைத்தான் சொல்ல இருக்கின்றாய் என என்னைக் கேட்டால் நான் சொல்வது, அழகிய பாற்கடலில் எங்கள் கடவுளான சிவபிரான் உண்ணும் படியாக எழுந்த நஞ்சுதான் இவள் கண்ணுக்கு ஒப்பாகுமென்றால் அது ஒரு சிறிது பொருந்தும் எனலாம்.'' 42

**எள்ளென்றும் ஒத்தி யென்றும் ஏர்கொள்சம் பகப்போ தென்றுந்**
**தள்ளருங் குமிழ தென்றுஞ் சாற்றினர் அவைகள் நாடில்**
**தெள்ளிது மன்று வேறு செப்பவோர் பொருளு மில்லை**
**உள்ளதொன் றுரைக்க வேண்டுந் துண்டத்துக் குவமை தேரின்.**

''பொதுவாக பெண்களின் மூக்கிற்கு உவமையாக எள்ளுப்பூ போல என்றும் ஒந் திலை ஒத்து என்றும் அழகிய சண்பகப் பூப்போல என்றும் நீக்கரிய குமிழம் பழம்போல என்றும் பலவாகப் புலவர்கள் உவமை கூறுவர். இவைகளின் இயல்பை நாடிப் பார்த்தால் இவள் பொருட்டாக இதைத் தெளிவாகக் கொள்ளக் கூடிய பொருள் என்று நாம் கொள்ளமுடியாது. ஆகவே இவள் மூக்கிற்கு உவமையாக சொல்லகூடி யது ஒன்றுமில்லை. அப்படி ஒன்று உண்டாகில் அது யாது என்று நாம் புதிதாக ஒரு பொருளை தெரிந்து ஆராயவேண்டும்.'' 3

**கெண்டையந் தடங்கட் பாவை கேள்கிளர் இதழ்க்கொப் புன்னில்**
**தொண்டையங் கனியுண் டென்று சொல்வனேல் அதுவுந் துப்பால்**
**உண்டிடும் விருப்பி னோருக் குலப்புறா அமிர்தம் நல்கிக்**
**கொண்டிருந் திடினே ஒப்பாம் இல்லையேற் கூடா தன்றே**

''கெண்டை மீனை நிகர்த்த அகன்ற கண்களை உடைய இப் பெண்ணினது சிவந்த நிறமுடைய இதழ்களுக்கு ஒப்பாக ஒருபொருளை நாம் நினைந்தால் தொண்டையங் கனி உண்டு என்று அதைச் சொன்னால் அந்தத் தொண்டைக் கனியும் அதை முன் அனுபவத்தால் விருப்பத்துடன் உண்போருக்கு ஓயாது அமிர்தத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தால்தான் ஒப்பாகச் சொல்லமுடியும். அப்படி அந்தக் கனியை உண்ணும் போது அமுதச்சுவையை ஓயாது கொடாதிருக்குமேல் அந்தக்கனியையும் ஒப்பாக பேசமுடியாதன்றோ.'' 44

முகையுறு தளவும் புள்ளின் முருந்தமுங் குருந்து முத்தும்
அகையுறு முடுவுஞ் சாற்றின் அணியெயி றதற்கொவ் வாவால்
நகையது தெரிந்தோர் வெஃக நன்னலம் புரியும் நீரால்
நிகர்பிறி தில்லை திங்கள் நிலாவென்னில் ஆகு மன்றே.

''அரும்பான முல்லைப்பூவும், பறவையின் இறகின் அடியும், குருந்த மலரையும், முத்தினையும், வானத்தில் செறிந்துள்ள வெள்ளிகளையும், இவளுடைய சிரிப்புடன் மலர்ந்த பற்களுக்கு ஒப்பாக சொல்லமுடியாது. இவளுடைய புன்சிரிப்பானது இதை தெரிந்துள்ளோர் விரும்பும்படியாக நல்ல நலப்பாட்டினைத் தரும்படியாக இருத்தலின் இதற்கு நிகராக பிறிதில்லை, சந்திரனுடைய நிலா வென்றால் சிறிது ஒப்பாகும்'' என்றான் காசிபமுனிவன். 45

மயிரெறி கருவி வள்ளை தோரண மணிப்பொன் னூசல்
பெயர்வன நிகர்க்கு மென்று பேசுதல் பேதை நீர்த்தாஞ்
செயிரற வுலோக மாக்குந் திசைமுகக் கொல்லன் செய்த
உயிரெறி கருவி போலும் ஒண்குழைக் காது மாதோ.

மயிரை வெட்டுகின்ற கத்தரிக்கோல், வள்ளைக் கொடி, மகர தோரணம், இரத்தினங்களினால் ஆக்கப்பட்ட ஆடும் ஊஞ்சல் ஆகிய இவைகள் இவளுடைய குண்டலங்கள் அணிந்த காதுக்கு உவமையாகப் பேசுதல் எமது அறியாமையைக் காண்பிக்கும் என்பதேயன்றி வேறில்லை. பின்னர் இவளின் குழைகள் அணிந்த காதுக்கு உவமை பேசப் போனால் அது நான்கு முகமுடைய பிரமதேவன் என்னும் உலோகங்களைப் படைக்கின்ற பொற்கொல்லன் செய்த உயிர்களை, வெட்டி அழிக்கின்ற ஓர் கருவிதான் இவள் காது என சொல்லின் அது மிகவும் பொருந்தும்'' என்றான்.

கண்ணை உலகை அழிக்க வந்த நஞ்சு என்று சொன்ன காசிபன் காதை உயிர்களை அழிக்கும் ஓர் ஆயுதம் எனவும் பேசினான். 46

கொங்குறு கூந்த லாள்தன் கோலவாள் முகத்துக் கொப்பாம்
திங்களென் றுரைக்கில் தேயும் வளர்வுறுஞ் சிறப்ப தன்றால்
பங்கய மெனினும் உண்டோர் பழுதுமற் றதற்கும் என்னில்
அங்கதற் கதுவே யல்லால் அறையலாம் படிமற் றுண்டோ.

வாசனை பொருந்திய கூந்தலை உடைய மாயை என்பாளின் அழகிய ஒளி பொருந்திய முகத்திற்கு சந்திரனை ஒப்பாகும் என்று உரைக்கின் இந்த சந்திரன் வளரும்; தேயும். ஆகவே அதனால் அச்சந்திரன் சிறப்புடையதல்ல. ஆகவே சந்திரனைச் சொல்ல முடியாது. தாமரைப் பூவைச் சொல்லலாமோ என்றால் அதற்கும் மலர்ந்தபின் குவிந்து விடுதலான பழுதும் உண்டு. ஆகவே தாமரையையும் சொல்ல முடியாது. பின்னர் இவள் முகத்திற்கு ஒப்பாக அவள் முகம்தான் உளதேயன்றி வேறு ஒரு பொருள் சொல்வதற்கில்லை. 47

சரந்தெறு விழியி னாள்தன் களத்தின தெழிலைச் சங்கங்
காரந்தீன கமுகும் அற்றே அன்னது கண்டு மேனாள்
வரந்தரு புலவர் சொற்றார் மற்றவர் அதற்கோ நாளும்
இரந்திடு தொழிலராகி இழுக்கமுற்றார்கள் அன்றே.

கூர்மையான அம்பையும் வென்ற கண்ணினை உடைய இப்பெண்ணின் கழுத்தின் எழிலைக் கண்டு சங்குகள் நீரில் மறைந்துள்ளன. கமுகும் அப்படியே சோலைகளில் மறைந்துள்ளது. இவைகளின் தன்மைகளை கண்டும், இந்த பெருமைகொண்ட புலவர்கள் கழுத்திற்கு நேராக சங்கையும் கமுகையும் உவமையாகச் சொன்னார். இப்படியாக இப் புலவர்கள் இல்லாததொன்றை உவமையாக பேசிக்கொள்ளும் தன்மையாற்போலும் பொய் சொல்வார் வாய்க்கு பொரியும் இல்லாமல் போகும் என்ற முதுமொழிக் கிணங்க இப்புலவர்கள் பிறரிடம் இரந்து வாழ்கின்ற வாழ்க்கை உடையராகி வசையுடையார்களாய் இருக்கிறார் போலும்'' எனவும் காசிபன் பேசினான். 48

மாயவன் அதரஞ் சேர்த்தி வரன்முறை இசைத்த பச்சை
வேயெனும் அதுவும் யான்செய் மெய்த்தவம் அனைய நீராள்
தூயபொற் றோள்கண் டஞ்சித் தோற்றதால் என்னில் அன்னான்
சேயவன் வணக்கா தேந்துஞ் சிலைகொலோ நிகர்ப்ப தம்மா.

''கிருஷ்ண பகவான் தனது சொண்டுகளின் மீது சேர்த்து, உலகப்பசுக்களை மேய்க்கும் போது வரன் முறையாக ஊதுகின்ற குழலான பச்சை மூங்கில் என்னும் அதுவும் யான் இதுகாறும் செய்துகொண்ட உண்மையான தவப்பேற்றின் வடிவான இவளின் தூய்மையான தோளைக்கண்டு பயந்து தோற்றுவிட்டது என்றால் கிருஷ்ண பகவானின் மகனான மன்மதன் வளைக்காதபடி ஏந்திய கரும்பாகிய வில்லா ஒப்பாவது? ஆகாதே'' என்றான்.

பச்சை மூங்கிலின் பசுமைவனப்பையும் கரும்பின் பசுமை வனப்பையும் தோள்களுக்கு உவமையாக சொல்வர். அவ்வண்ணமானாலும் இவள் நிலையில் இவைகள் பெரியோனான கிருஷ்ணபகவான் கைகளில் உற்றும் தோற்றது மூங்கில். ஆகவே மகன் மன்மதன் வில்லான கரும்பு எவ்வாறு பொருந்தும்?'' என்றான். 49

பூந்தள வனைய மூரற் பொற்கொடி கரத்துக் கொவ்வா
காந்தளும் நறிய செய்ய கமலமா மலரும் என்னில்
மாந்தளிர் பொருவ துண்டோ வள்ளுகிர் கிள்ளை நாசி
ஏய்ந்தள வற்றுக் காமர் இலைச்சினை யாய தன்றே.

''முல்லை அரும்பைப் போன்ற பற்களை உடைய பொற்கொடியான மாயவள் கைகளுக்கு ஒப்பாகாது செங்காந்தள் பூவும் வாசனை கொண்ட செம்மையான பெரிய தாமரை மலரும் என்று சொன்னால் மாமரத்தின் இளம் தளிரின் வனப்பை இவள் கைகளுக்கு ஒப்பாக சொல்ல முடியுமோ? அது பொருந்துமோ பொருந்தாதே! இவளுடைய கூரிய நகமானது கிளியின் சொண்டை நிகர்த்தது அதோடு அது மன்மதனுடைய அளவற்ற அழகிய முத்திரையும் ஆக சோபித்து விளங்குவது.'' 50

பொருப்பென எழுந்து வல்லின் பொற்பெனத் திரண்டு தென்னந்
தருப்பயில் இளநீ ரென்னத் தண்ணென அமுதுட் கொண்டு
மருப்பென கூர்த்து மாரன் மகுடத்தில் வனப்பு மெய்தி
இருப்பதோர் பொருளுண் டாமேல் இணைமுலைக் குவமை யாமே.

''மலையைப்போல வளர்ந்து, சூதாடு கருவியின் அடியைப் போல திரண்டு, தென்னை மரங்களிற் பொருந்துகின்ற இளநீர் எனும்படி குளிர்ந்த அமுதத்தை உள்ளே பொதிந்து, யானைக் கொம்பைப் போலக் கூர்மையடைந்து, மன்மதனுடைய முடி

போலும் வனப்பும் கொண்டு இருப்பதான ஒரு பொருள் இருப்பதாகில் அது இவளு டைய இணையான இரண்டு முலைகளுக்கும் ஒப்பாகும்'' என்றான் காசிபன். 51

அந்திரு வன்னாள் மேனி அமைத்துவெம் முலைக்கண் செய்வான்
சுந்தர வள்ளம் நீலுண் டுகிலிகை விதிகொள் போழ்திற்
சிந்திய துள்ளி யொன்றின் ஒழுக்கங்கொல் சிறப்பின் மிக்க
உந்தியின் மீதுபோய உரோமத்தின் ஒழுக்க மன்றே.

''பிரமதேவர் அழகிய மகாலட்சுமி போலும் இவளின் உடலத்தைப் படைத்து பின்னர் வெவ்விய முலைகளின் கண்களைச் செய்யும் பொருட்டாக அழகிய கிண்ணத் தில் உள்ள நீலமையிற் தோய்த்த எழுதுகோலை கையிலே எடுக்கும்போது சிந்தப்பட்ட ஒரு மைத்துளியின் வீழ்ச்சிதானோ சிறப்பின் மேம்பட்ட இவளின் வயிற்றின்மேல் நீண்டிருக்கின்ற மயிரின் ஒழுங்கு? ஏனெனில் அது மிக அற்புதமாக தென்படுகின்றதே'' என்றான். 52

மாசடை யாதநீல மணியுறழ் வண்ண மாலோன்
காசடை அகலந் தாங்குங் கனங்குழைத் திருவும் போற்றுந்
தேசுடை மாதி னுந்திச் சீரினுக் கனையன் துஞ்சும்
பாசடை நேர்வ தாமோ பகரினும் பழிய தன்றே.

''களங்கத்தை அடையாத நீல இரத்தினத்தை ஒத்த வண்ணம் கொண்ட நாரா யணக் கடவுள் கவுத்துவ மணி அணிந்திருக்கப்படும் தமது நெஞ்சிலே வைத்திருக்கின்ற அழகிய காதணியை அணிந்திருக்கின்ற இலக்குமி தேவியும் வணங்கிப் போற்றும் படியான ஒளி கொண்ட பொற்பினை உடைய இப்பெண்ணின் வயிற்றின் சிறப்பிற்கு அந்த நாராயணக் கடவுள் பள்ளி கொள்கின்ற பச்சை நிறம் உடைய ஆலிலையை ஒப்பாக பேசலாமோ? ஒப்பென்று சொன்னாலும் கூடப் பழி'' என்றான் காசிபமுனிவன்.

கண்டுழி மாயும் அன்றே மின்னெனில் ககன மாகக்
கொண்டிடின் உருவின் றாகுங் கொடியெனில் துடிய தென்னில்
திண்டிறல் நாக மென்னில் சீரிதன் றணங்கின் நாப்பண்
உண்டில்லை யென்று மானும் உண்மைக்கோ ருவமை யுண்டோ.

இவளின் இடைக்கு உவமையாக நாம் மின்னல் என்போமாயின் மின்னல் காணப் பட்டவுடன் மாயும், ஆகாயமாம் எனக் கொண்டால் அதற்கு உருவம் இல்லை. பூங்கொடி என்பேனோ அல்லது உடுக்கை என்றாலோ, வலிமையான நாகபாம்பு என்றாலோ, அதுவும் சிறப்பானதல்ல. ஆகவே உண்டு இல்லை என்னும்படி ஐயுற நிற்கும் படியான உண்மைப் பொருளானதிற்கு ஒரு உவமை சொல்லமுடியுமா! இல்லையே.'' 54

மயலுடைப் பணியும் ஆல வட்டமும் வனப்புச் செய்த
வியலுடைத் தேரும் அச்சுற் றிரங்கியே உயிர்க்கு மென்றாற்
கயலுடைக் கண்ணாள் அல்குற் கொப்பவோ காமர் வீடவ்
வியலுறுப் பென்பர் யாரும் மேலது காண்டும் அன்றே.

''மயங்கும் தொழிலையுடைய பாம்பும், ஆலவட்டமும், வனப்புச் செய்துள்ள அலங்கார இயல்புடைய தேரும் இவளுடைய அல்குலுக்கு பயந்து சத்தமிட்டு மூச் செறிந்து நிற்கும் என்றால் கயல் மீனை ஒத்த கண் கொண்ட இந்த நங்கையின் அல்குலான

குறிக்கு நிகர் சொல்லலாமோ! ஆகாதே! புலவர்கள் யாவரும் இவ்வாறான இவளின் அல்குலை இன்பம் தரும் மன்மதனின் இருப்பிடம் என்பார்கள். ஆகவே அது அப்படித் தானோ என்பதை இவளோடு கூடி இன்பம் அனுபவிக்கும்போது பின்னால் காண்பேன்'' என்றான் காசிபன். 55

கோழிலை அரம்பை யினுங் குருமணித் தண்டை வேழத்
தாழிருந் தடக்கை தன்னை நிகரெனில் தகுவ அன்றால்
மாழையுண் கருங்கண் மாதின் மகரிகை வயங்கு பொற்பூண்
சூழுறு கவானே போலும் அவையெனிற் சொல்ல லாமோ.

''செழித்த இலைகளையுடைய வாழைமரம் ஈனுகின்ற பச்சைநிறம் விளங்கிய தண்டும் யானையின் தாழ்ந்த பெரிய துதிக்கை ஆகிய இவற்றை இவளின் தொடைக்கு நிகரென நாம் சொன்னால் அது தகுவதல்ல. ஆகவே இவைகள் எல்லாம் மாவடுவின் பிளவு போலும் நீண்ட கண்ணுடைய மாயையின் அரையில் அணியப் பெற்ற குறங்கு செறி என்னும் மகரதோரணம் பான்ற பொன் ஆபரணங்களால் சூழப்பெற்ற தொடைதான் வாழைத் தண்டும் யானைத் துதிக்கையும் என்று சொல்லுவதின்றி யானைத்துதிக்கையோ அல்லது வாழைத்தண்டு போல்வது இவள் தொடை என்று சொல்வது தகாது'' என்றான். இவைபோல் இவள் தொடை என்னாது இவள் தொடைபோல அவையென தொடையை முன்வைத்தே செப்பல் வேண்டு மென்றான். 56

அலவனும் ஞெண்டை அன்னாள் அணிகெழு முழந்தாட் கொப்பாப்
புலவர்கள் புகலா நின்ற வழக்கலாற் பொருந்திற் றன்றால்
திலகநன் மணியே போல்வாள் தெய்வத வடிவுக் கிந்த
உலகினுள் இழிந்த தொன்றை உரைக்கினஃ துவமை யாமோ.

அலவன் என்னும் நண்டும் அவளுடைய அழகு விளங்குகின்ற முழந்தாளுக்கு ஒப்பாக புலவர்கள் சொல்லி நிற்கின்ற வழக்கே அல்லாமல் அந்த உவமை பொருந்திய ஒன்று அல்ல: சிறந்த நல்ல மாணிக்கத்தைப் போன்ற தெய்வீகமான வடிவுடை இப்பெண்ணினது உருவத்திற்கு இந்த உலகத்துள் இழிந்த பொருளாகக் கருதப்படும் உவமையாகக் கூறின் அது உவமையாகுமோ ஆகாதே என்றான். 57

தமனியத் தியன்ற பொற்பில் தாவிலா ஆவந் தானுஞ்
சிமையநேர் கொங்கை மாதின் திகழ்கணைக் காலுந் தூக்கிற்
சமமிது பொருளி தென்றே தமியனேன் துணிந்து சிந்தை
அமைவுற அறிதல் தேற்றேன் ஐயமுற் றிடுவன் யானே.

பொன்னினால் செய்யப்பட்ட பொலிவினை உடைய குற்றமற்ற அம்புக் கூட்டையும், மலைமுடிபோன்ற முலைகளை உடைய இந்த மாயை என்பாளின் திழந்து விழங்கும் கணைக்காலையும் நாம் சீர்தூக்கிப் பார்த்தால் உவமானமிது அல்லது உவமேயம் இது என்று தனித்து இங்கே நிற்கின்ற தமியேனாகிய நான் நிச்சயித்து மனம் அமையும்படி அறிந்துகொள்ள மாட்டேன் இன்னமும் தான் நான் சந்தேகம் கொள்வேன் என்றான். இவளுடைய கணைக்காலுக்கு அம்புக் கூடு சமம் என்று சொல்லவும் முடியாது அல்லது அம்புக் கூட்டைப் போல எனவும் பேச முடியாத படி அமைந்து விளங்குவது கணைக்கால் என்றான். 58

அரும்புறு காலைக் கொங்கைக் கழிவுற்று முகமொவ் வாது
சுரும்புற மலர்ந்த பின்னுந் தொலைந்துகை யினுக்குந் தோற்றுத்
திரும்பவும் அடிக்கும் அஞ்சிச் சிதைந்தது கமல மென்ருல்
பெரும்பயம் உற்று நோற்றும் பிழைத்தது போலு மன்றே.

தாமரைப்பூவானது மொட்டாயிருக்கும் காலத்து இவளுடைய முலையின் வனப்புக்குத் தோற்றது. பின்னர், தாமரைப்பூ வண்டுகள் மொய்க்க மலர்ந்த பின்பு இந்த மாயையின் முகத்தைக் கண்ணுற்று அதற்கு இணையாகவும் மாட்டாது தனது சிறப்பே தொலைந்தது. இவளின் கையை ஒப்பிட்டால் அதற்கும் தோற்றது. சரி, இனிமேல் இவளுடைய காலுக்கும் தான் இணையாகுமோ எனப் பார்த்தபோது தாமரை இவள் காலின் வனப்பைக் கண்டு ஏங்கி அதற்கும் இணையாகேன் எனச் சிதைவாகப் போனது. தாமரைப்பூவே இப்படியாய்விட்டது எனச் சொன்னல், தாமரை இவ்வளவு பாடுபட்டு வனப்படையத் தவம் செய்தும், அதன் தவத்தால் ஏது பிரயோசனமும் ஆகாது போயிற்றே என்ருன் காசிபமுனிவன். 59

மேக்குயர் கூனல் ஆமை விரைசெறி குவளைத் தோடு
தாக்குறு பந்து பிண்டித் தண்டளிர் சார்பு கூறில்
தூக்குறு துலையின் தட்டுத் தொகுத்தொரு வடிவில் வேதா
ஆக்குறின் மாதின் நாளுக் கதுநிக ராகும் போலும்.

மிக உயர்ந்து முதுகு வளைந்த ஆமையையும், வாசனை பொருந்திய கருங்குவளை மலரின் இதழையும், அடிக்கப்படுகின்ற பந்தையும், அசோக மரத்தினது செழிப்பான தளிரையும், நான் இவளின் காலுக்கு இணையாக உவமை கூறின், அதைத் தனித்தனி எடுத்துக் கூறுவேன் ஆயின் அது பொருந்தாது. ஆனல், எல்லாவற்றையும் படைக்கின்ற பிரமதேவர் மேற்சொல்லிய நான்கு பொருளின் வனப்பை ஒன்ருகத் திரட்டி இன்னுமொரு வடிவில் ஆக்கினல், அது இவளின் காலுக்கு ஒப்பாகும் போலும். 60

ஆவியின் நொய்ய பஞ்சும் அனிச்சமா மலரும் அன்னத்
தூவியு மிதிக்கிற் சேந்து துளங்குறும் அடிகள் என்ருல்
நாவியங் குழலின் மாது நடந்திட ஞாலம் ஆங்கோர்
பூவதோ அதுபூ அன்றேல் பொன்னடி பொருந்து மோதான்.

புகையினும் மிருதுவான பஞ்சின் மேலும், சிறந்த அனிச்சம்பூவின் மேலும், அன்னப்பட்சியின் தூவியின் மேலும் இவள் தனது காலை மிதித்தால் பொருது இவள் கால் சிவப்படைந்து நடுங்குமே என்னில், மயிர்க்குப் பூசப்படும் வாசச் சாந்தணிந்த கூந்தலை உடைய இப்பெண் நடப்பதற்குப் பூமி என்ன ஆங்கு ஓர் பூவோ! பூவல்லாது பூமி ஆகில், இவளின் பொன்னனபாதங்கள் பூமியில் பொருந்துமோ? 61

கயலுறழ் கருங்கட் செவ்வாய்க் காரிகை தனது சாயல்
மயிலெனக் கூறின் அல்லால் மற்றதற் குவமை யில்லை
இயலுறு வடிவிற் கொப்ப தேதுள திவளே போலச்
செயலுறுத் தெழுதிற் றுண்டேல் சித்திரம் அஃதே போலும்.

கயல் மீனை நிகர்த்த கரிய கண்களையும் சிவந்த வாயையும் உடைய இப்பெண்ணினது சாயலை மயிலின் சாயல் போலும் என்று சொல்வேனே அல்லாது

மற்று இதற்கு வேறு உவமை காணமுடியாது. ஆராயுமிடத்து இவள் சாய லுக்கு ஒப்பாக வேறு ஏது உளது? இவளுடைய வடிவைப்போலச் செயல்ப் படுத்தி எழுதக்கூடிய சித்திரம் ஒன்று உண்டானல் (அது முடியாதது ஒன்று) அச்சித்திரத்தை இவள் சாயல் நிகர்க்கும். 62

ஆனனம் நான்கு செய்தாட் காயிர மடங்கோர் கொண்ட
மானினி தன்னை வேதா வகுத்திலன் கொல்லோ அன்னுன்
தானமைத் துளனே என்னில் தலைபல தாங்கி இந்தத்
தூநிலா நகையி னாளைத் தொடர்ந்துபின் திரிவன் அன்றே.

தன்னைப் படைத்த பிரமதேவரையே தனது அழகைக் கண்டு மகிழ ஒரு முகம் காணது என்று நான்கு முகமாக்கிக்கொள்ளும்படி வைக்கப்பண்ணிய **திலோத்தமை** என்னும் பெயரினை உடைய பெண்ணிலும் ஆயிரம் மடங்கு அழகு கொண்ட இந்த இனிய அழகுடைய பெண்ணைப் பிரமன் படைக்கவில்லைப்போலும். ஏனெனில், அப்படி அவர் இவளைப் படைத்திருந்தால், இவள் அழகைக் கண்டு பருகுவதற்கு இந்த மிகத் தூய்மையான நிலவுபோலும் நகையுடைய பெண்ணர சியைத் தொடர்ந்து எத்தனையோ தலைகளை எடுத்துக்கொண்டு ஓயாது இவள் பின்னல் திரிவரே! இப்பிரதேவர் என்ருன் காசிபமுனிவன். 63

மையறு புவியில் வந்த மாதிவள் அடியி லுள்ள
துய்யதோர் குறிகள் வானில் தொல்பெருந் திருவில் வைகுஞ்
செய்யவன் றனது தேவி சிரத்தினும் இல்லை யென்ருல்
மெய்யுறு குறிகளெல்லாம் இனைத்தென விளம்பற் பாற்ரே.

குற்றமற்ற இப்பூவுலகில் வந்த இந்தப் பெண்ணின் கால்களில் உள்ள மிகத் தூய்மையான நல்ல இலக்கணக் குறிகள் வான உலகில் பழைமையான பெரும் செல்வத்தில் இருக்கின்ற திருமாலின் தேவி இலட்சுமியின் சிரசிலும் இல்லை என்று சொன்னல், இவளுடைய மேனியிற் காணப்படும் இலக்கணக் குறிகள் எல் லாம் எவ்வண்ணம் என என்றுற் சொல்லமுடியுமோ! ஆகாதே என்ருன் காசி பன். 64

என்று முன்னிஅவ் வேந்திழை தன்முனஞ்
சென்று காமர் திருவினுஞ் சீரியோய்
நன்று நன்றுநின் நல்வர வேயெனு
நின்று பின்னும் நெறிப்பட ஓதுவான்.

என்று இத்தகைய வார்த்தைகளால் அவளின் எழில் நலத்தைப் புகழ்ந்து எண்ணியவனுய், அந்த மாயை என்பாள் முன்பாகச் சென்று அவளைப் பார்த்து, அழகிய மகாலட்சுமியிலும் பார்க்ச் சிறப்புடைய பெண்ணே! நல்லது நல்லது உனது வரவு என்று சொல்லிய வண்ணம் அவள் முன்பாக நின்றுகொண்டு பின் வரும் முறைமையாக இவற்றை ஓதுகிருன் காசிபமுனிவன். 65

யாது நின்குலம் யாதுநின் வாழ்பதி
யாது நின்பெயர் யாருனைத் தந்தவர்
ஓது வாயென் றுரைத்தனன் உள்ளுறு
காத லான்மிகு **காசிபன்** என்பவே.

**பெண்ணே உனது குலம் யாது? உனது வசிப்பிடமான ஊர் யாது? உன் னுடைய பெயர் யாது? யார் உன்னைப் பெற்ற தாய் தந்தையர்? ஆகிய உனது**

வரலாறுகள் யாவும் உரைப்பாயாக என அவள்மேல் கொண்ட காதலோடும் காசிபமுனிவன் உரைத்தான். சாதாரணமாக முனிவன் அவள் வரலாற்றைப் பொதுப்படையாகக் கேட்காது அவள்மேல் கொண்ட அன்புருகும் சங்கிதம் தவிர்க்கமுடியாத தொன்முகி நிற்றலும் அதனல் மிக ஆவலுடன் கேட்டான். 66

வனிதை கூறுவள் மாதவ நீயிது
வினவி நிற்றல் விழுமிதன் றென்னிடைத்
தனிய ளுகியுஞ் சார்ந்தனை நோற்பவர்க்
கினிய வேகொல் இனையதோர் நீர்மையே.

மாயவள் கூறுவாள், தபோதனனே! நீ இதை வினவி நிற்றல் பெருமை உடையதல்ல. அதுவன்றி, என்னிடத்து தனியவளுகியும் வந்திருக்கின்ருய். தவம் செய்வார்க்கு இச்செயல்கள் இனியது ஆகுமா! 67

ஏதில் நோன்பை இகந்துணர் வில்லதோர்
பேதை மாந்தரில் பேசியெற் சார்வது
நீதி யேயன்று நின்கடன் ஆற்றிடப்
போதி யென்ன முனிவன் புகலுவான்.

குறைவிலாத உனது தவத்தை விடுத்து உணர்வு இல்லாத ஒரு பேதை மனிதரைப் போலப் பேசி என்னை அண்டி நிற்பது நீதி அல்ல. உனது தவக் கடமைகளைப் புரியும் பொருட்டு நீ செல்வாய் என மாயவள் கூற, காசிபன் சொல்வான். 68

மங்கை கேட்டி வரம்பறு பற்பகல்
அங்கம் வெம்ப அகமெலி வுற்றிடச்
சங்கை யின்றித் தவம்பல செய்திடல்
இங்கு வேண்டிய தெய்துதற் கேயன்ரே.

பெண்ணே கேள்! அளவற்ற பல நாட்கள் உடலம் வெதும்ப, உள்ளம் மெலிவுற்றிடச் சந்தேகம் விபரீதம் யாவுமிலாமற் பல தவங்களை ஒருவர் செய்கிற யாது பொருட்டு? இங்குங்கு தான் விரும்பிய பொருளை அடையும்பொருட்டல்லவோ.

பொன்னை வேண்டிக்கொ லோபொன்னின் மாநகர்
தன்னை வேண்டிக்கொ லோசசி யாம்பெயர்
மின்னை வேண்டியே அல்லது வேறுமற்
றென்னை வேண்டிஅவ் விந்திரன் நோற்றதே.

இந்திரன் யாது பொருட்டாகத் தவஞ்செய்தான் தனக்குப் பொன் வேண்டியா? அல்லது, பொன்னுன தேவ உலகை வேண்டியா? அப்படியல்லவே! இந்திராணி என்னும் பெண்ணை மனைவியாக்கும்படியல்லவோ தவம் செய்தான். 70

ஐதின் மேனி அலசுற யான்தவஞ்
செய்த திங்குனைச் சேருதற் கித்திறம்
நொய்தின் மேவினை நோற்றதற் குப்பயன்
எய்தி யுற்ற இனித்தவம் வேண்டுமோ.

அதேபோல குற்லமற்ற எனது சரீரம் வாடித் துயருறும் பொருட்டு நானும் தவஞ் செய்தது இங்கே உன்னைச் சேர வேண்டும் என்னும் பொருட்டாக; எனது

தவத்தின் மாண்பினுல் நீயும் என்னையே நாடி அதிவிரைவாக வந்துள்ளாய். நான் தவஞ் செய்தற்குப் பலன் உடன் கிடைத்துவிட்டது. அப்படி இருப்பவும் நீ என்னை மீண்டும் தவஞ் செய்யப் போகும்படி சொல்லுகிருய். செய்த தவத்திற்கும் பலன் கிடைத்துவிட மேல் ஏனே எனக்குத் தவம் என்முன் காசிபன். 71

பேரும் ஊரும் பிறவும் வினவினேற்
கோர வொன்றும் உரைத்திலை ஆயினுஞ்
சேர வேபின் தெளிகுவன் காமநோய்
ஈரு கின்ற இரங்குதி நீயென்ருன.

பெண்ணே! உனது பேரும், ஊரும், பிற வரலாறுகள் பற்றியும் யான் உன்னைக் கேட்பவும், கேட்ட எனக்கு அறியும்படியாக ஒரு வார்த்தையாதல் உரைத்தாய் இல்லை. அப்படிச் சரி நீ சொல்லாது விடுத்தாலும் பின்னர் நான் எல்லாவற்றையும் முறையாகத் தெரிந்துகொள்கிறேன். இப்போது காமம் என்னும் நோயானது என்னை வாட்டுகின்றது. எனக்காகச் சற்று நீ இரங்குவாயாக எனக் காசிபமுனிவன் கூறினன். 72

மாயை கேட்டு வறிது நகையளாய்
நீயிவ் வாறு நெடுந்தவஞ் செய்ததும்
ஆயில் என்பொருட் டோஅஃ தன்றரோ
தூயை வஞ்சஞ் சொலன்முறை யோவென்ருள்.

மாயை என்பாள் முனிவனின் இந்த வார்த்தைகளைக் கேட்டு முதலில் வெறுமனே சிரித்தாள். சிரித்துவிட்டுப் பின்னர் முனிவனுக்குச் சொல்வாள். நீ இவ்வாறு நெடுநாட்களாகத் தவஞ் செய்தது எதுவாகில் என்பொருட்டாக என்று சொல்கிருய். நன்ருக இருக்கிறது உனது வார்த்தை! என்பொருட்டாக நீ ஒருபோதும் தவஞ் செய்யவில்லையே! நீயோ தூய வாழ்வுடைய முனிவன். ஆகவே, வஞ்சனையாக இப்படிச் சொல்லல் முறையாகுமோ எனக் கேட்டாள். 73

மற்றிவ் வண்ண மயில்புரை சாயலாள்
சொற்ற காலை அனையவள் சூழ்ச்சியை
முற்று மோர்ந்து முதிர்கலை யாவையுங்
கற்று ணர்ந்திடு காசிபன் கூறுவான்.

மற்றும் இந்த வண்ணமாக மயிலை ஒத்த சாயலை உடைய மாயை என்பவள் சொன்ன நேரத்து அவளுடைய சூழ்ச்சியான இந்த வார்த்தைகளைக் காசிபமுனிவன் முழுவதும் உணர்ந்துகொண்டானய், எல்லாவிதமான முதிர்ந்த உண்மை அறிவு தரும் பல கலைகளையும் கற்று உணர்ந்த காசிபமுனிவன் என்பவன் சொல்லத் தொடங்குகின்ருள். 74

பொய்ம்மை யாதும் புகல்கிலன் நான்முகன்
செம்மல் யான்அது தேருதி போலுமால்
இம்மை யேபர மீந்திடு வோய்இவண்
மெய்ம்மை யேயுரைத் தேன்உள வேட்கையால்.

பெண்ணே! நான் ஒருபோதும் பொய்யாக எதையாகுதல் சொல்லவில்லை. யான் நான்கு முகமுடைய பிரமதேவரின் மகன். அதை நன்ருக அறிந்துகொள்வா

யாக. அது உனக்கும் தெரியுந்தானே. இப்பிறவியிலே எனக்கு மேலான இன்பத்தை நான் அனுபவிக்க அருள் தருபவள் நீதான். நான் இங்கு உண்மையே உரைத்தேன். அது என்னுடைய உள்ளத்தில் உன்மீதுள்ள விருப்பத்தால் அவ்வாறு உரைத்தேன். 75

பன்னெ டுந்தவம் பற்பகல் ஆற்றியான்
முன்னி நின்றது முத்திபெற் றுய்ந்திட
அன்ன தேயெற் கருள்செய் வந்தனை
உன்னை மேவலன் றேஉயர் முத்தியே.

பல நாட்களாக நான் பெருந் தவத்தைச் செய்து நின்றது முத்தியான பேரின்பத்தைப் பெற்று உய்யும்படியாகத்தானே. அந்த இன்பமான முத்தியை எனக்கு அருள்புரியும் தெய்வமாக நீ இங்கு வந்துள்ளாய். உன்னைக் கூடி ஆனந்தம் உறல்தான் மேலான முத்தியாகும். 76

ஈத லான்மற் றெனக்கொரு பேறிலை
ஆத லாலுனை யேயடைந் தேனெனக்
காதன் மாதும்அக் காசிபற் கண்ணுறீஇ
ஓத லாம்பரி சொன்றை யுணர்த்துவாள்

எனது தவத்தாலாகின்ற பேறு உன்னைக் கூடி மகிழ்வதல்லது வேறு இல்லை. ஆனதன்மையால் உன்னை அடைந்தேன் என்று காசிபன் கூறி நிற்றலும், அப்போது காசிபமுனிவனின் காதற் பெண்ணான மாயையும் அக்காசிபமுனிவனை நோக்கிச் சொல்லுதற்குப் பொருத்தமான கபட வார்த்தை ஒன்றைச் சொல்லுகின்றாள். 77

மங்கலம் இயைந்திடு வடாதுபுல முள்ளேன்
செங்கனக மேருவரை சேர்ந்ததொரு தென்பால்
கங்கைநதி யின்கரை கலந்திட நினைந்தேன்
அங்கணுறு கின்றதொ ரரும்பயன் விழைந்தே.

முனிவனே கேள்! நான் சுபநிலைமை பொருந்திய வடதேசத்திலே இருப்பவள். நான் செம்பொன்னாலான மேருமலையைச் சேர்ந்து அதன் தென்புறமாகப் பெருகிச் செல்கின்ற கங்கையாற்றின் கரையிற் சென்று நதியில் நீராடிக் கலக்கும் நோக்கமாக நினைந்துகொண்டு அங்கு நோக்கியவாறு செல்கிறேன். ஏனென்றால், நான் அவ்வாறாகிய செயலால் ஓர் அரிய பயனைப் பெறும்படியாக என்று அறிவாயாக எனக் கூறினாள் மாயவள். 78

வல்லையவண் ஏகுறுவன் மாதவ வலத்தோய்
நில்லிவண் எனப்பகர நீனிறம தாகுஞ்
செல்லுறழு மேனிதரு செம்மல்அருள் மைந்தன்
ஒல்லையிது கேண்மென உரைக்கலுறு கின்றான்.

ஆகவே, நான் விரைவாக அங்கு அவ்விடத்திற்குச் செல்வேன். பெரும் தவ வலிமை உடைய முனிவனே நீ இங்கு நிற்பாயாக என மாயவள் சொல்ல, அதைக் கேள்வியுற்ற முகில் போல நீல நிறம் உடைய நாராயணக் கடவுளின் புத்திரனாகிய பிரமதேவர் பெற்ற மகனான காசிபன் மாயவளைப் பார்த்து இப்

போது நான் சொல்லும் இதனைக் கேட்பாயாக எனக் கூறிவிட்டு இவைகளைச் சொல்லத் தொடங்குகிறான். 79

கங்கைநதி யாதிய கவின்கொள்நதி யேழும்
அங்கணுல கந்தனில் அரன்பதிகள் யாவும்
மங்குல்தவழ் மேனியவன் வாழ்பதியு மற்றும்
இங்குற வழைப்பனொ ரிமைப்பொழுது தன்னில்.

மாயையே கேள்! நீ விரும்பி நீராடுவதற்கு ஏற்ற சிறந்த கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி என்னும் ஏழு ஆறுகளையும், ஆங்காங்குள்ள உலகந்தனிலுள்ள சிவாலயங்கள் யாவையும், மேகம்போலும் கரிய நிறத்தினை உடைய திருமால் வாழுகின்ற ஆலயங்கள் பலவும், மற்றும் பிற புண்ணிய இடங்களையும் இவ்விடத்து வந்து சேரும்படி ஒரு கணப்பொழுதின் முன்பாக நான் அழைப்பேன். 80

பொன்னுலகும் விஞ்சையர்கள் போதுலகும் ஏனோர்
மன்னுலகும் மாதிரவர் வாழுலகும் அங்கண்
துன்னியதொர் தேவரொடு சூழ்திருவி னோடும்
இன்னபொழு தேவிரைவின் ஈண்டுதர வல்லேன்.

பெண்ணே கேள்! இதுவுமல்லாமல் சுவர்க்கலோகத்தையும், வித்தியதரர்கள் வாழும் உலகத்தையும், ஏனோராகிய கின்னரர் கிம்புருடர் முதலாய பதினெண் கணத்தவர் வாழுமுலகங்களையும், இந்திரன் மூதல் திசைக்காவலர் வாழும் உலகங்களையும் அங்காங்கு வாழ்கின்ற தேவர்களுடனும் அங்கு சூழ்ந்திருக்கும் செல்வங்களுடனும் இப்பொழுதே விரைவின்கண் இவ்விடத்து அழைத்துத் தரவல்லேன். 81

மூவகைய தேவரையும் முச்சகம துள்ளோர்
யாவரையு நீதெரிய எண்ணுகினும் இங்ஙன்
மேவரவி யற்றிடுவன் வெஃகல்புரி வாயேல்
காவலுறு பேரமிர்த முங்கடிதின் ஈவேன்.

பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் எனும் மூவகையான தேவர்களையும், சொர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் உலகில் உள்ள யாவரையும் நீ தெரிய விரும்பினாலும், இவ்விடத்து அவர்கள் யாவரும் வரும்படி செய்வேன். நீ விரும்பினால், பெரும் காவலில் வைக்கப்பட்டிருக்கின்ற சிறந்து விளங்கும் தேவாமிர்தத்தையும் விரைவில் அழைத்துத் தருவேன். 82

எப்பொருளை வேண்டினும் இமைப்பிலுன வாக
அப்பொருளி யாவையும் அளிப்பன்அஃ தல்லால்
மெய்ப்புதல்வர் வெஃகினும் விதிப்பன்அவர் தம்மை
ஒப்பிலை இவர்க்கெனவும் உம்பரிடை உய்ப்பேன்.

இதுவன்றி, எந்தப் பொருளை நீ விரும்பினாலும் விரைவில் அவை உனதாகும் பொருட்டு அப்பொருள் யாவையையும் ஒரு நொடிப்பொழுதினுள்ளாகத் தரவல்லேன். இது அல்லாமல், மெய்மையான சிறந்த வாழ்க்கை பெறும் பிள்ளைகளை நீ பெற விரும்பினால் அதையும் நான் விதிப்பேன். அத்தோடு அப்பிள்ளைகள்

யாவரும் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றிச் சிறந்து வாழும்பொருட்டு மேலான பதவிகளில் வைக்கும் வல்லமையுடையேன் யான். அதை நீ அறி. 83

அந்தமிகு மேனகை அரம்பைமுத லானோர்
வந்துனடி யேவல்செய வல்லைபுரி கிற்பேன்
சிந்தைநனி மால்கொடு தியங்குமென தாவி
உய்ந்திட நினைந்தருடி ஒல்லைதனில் என்றான்.

அதுவும் அன்றி, எல்லையற்ற அழகினை உடைய மேனகை, திலோத்தமை, அரம்பை முதலான தேவப் பெண்கள் யாவரும் வந்து இங்கு உனக்குப் பணிப் பெண்களாக அடித்தொண்டு செய்ய விரைவில் அவர்களைச் செய்விக்கவும் முடியும். ஆகவே, என்னுடைய மனமானது உன்மீது காதலாகித் தியங்குகிறது. உயிர் உசலாடுகிறது, ஆகவே, எனது உயிர் உய்ந்து வாழும் பொருட்டு நீ நினைப்பாயாக. இனிமேலும் தாமதஞ் செய்யாது விரைவில் இதைச் செய்வாயாக என வேண்டினான் காசிபமுனிவன். 84

முனியிது புகற லோடு முற்றிழை முறுவல் எய்தித்
தனியினள் என்று கொல்லோ சாற்றினை இனைய நீர்மை
இனியது தவிர்தி மேலோர்க் கிசையுமோ யானும் முன்னம்
நினைவுழிச் செல்வல் நோற்று நீயிவண் இருத்தி யன்றே.

காசிபமுனிவன் இதைச் சொல்லலோடும் மாயவள் அது கேட்டுப் புன்சிரிப்புக் கொண்டாள். அவ்வாறு சிரித்துவிட்டுச் சொல்வாள். முனிவனே! நான் இங்கு தனித்தவள் என்று கருதியா இவ்வாறு பெண்ணென என்னோடு இதைச் சொன்னாய். மேற்கொண்டு இந்தவிதமான கதைகளை என்னோடு சொல்லாதே. உன்னைப் போன்ற மேலோராகியோருக்கு இப்படி வாயெடுத்துத் தகாத வார்த்தை சொல்லலாமா? நானும் முன்னே நினைந்தபடி நான் விரும்பிய இடம் போகும்படி செய்வேன். நீ தவஞ் செய்துகொண்டு இவ்விடத்துச் சுகமே வாழ்வாயாக எனக் கூறினாள் மாயவள். 85

கங்கையின் திசையை முன்னிக் கடிதவட் செல்வாள் என்ன
அங்கவள் போத லோடும் அருந்தவன் தொடர்ந்து செல்ல
மங்கையும் அருவ மெய்தி மாயையிற் கரந்து நிற்ப
எங்கணும் நோக்கிக் காணான் இடருழந் திரங்கி நைவான்.

இவ்வாறு கூறிய மாயவள் கங்கை ஆறு இருக்கின்ற தென்திக்கை நோக்கியவளாய் அங்கு செல்ல நினைந்து போவாள்போல அதிவிரைவாக வஞ்சனையால் செல்லலோடும், அந்நேரத்து அரிய தபோதனனான காசிபமுனிவன் தானும் அவளைப் பிரியமுடியாத நிலையில் அவள் பின்பாகத் தொடர்ந்து செல்லலும், அப்போது மாயை என்பவள் அது கண்டு திடீரெனத் தனது வடிவத்தை மாற்றி அருபியாகி வஞ்சனையாக மறைந்து நிற்றலும், அப்போது காசிபமுனிவன் அவளை எங்கணும் தேடி நோக்கினான். அவளைக் காணமுடியாதவனாய் இடர்பட்டுத் துன்பமாகி இரங்கி நைந்து வேதனையாகிறான். 86

**மாயைப் படலம் முற்றிற்று.**

**ஆகத் திருவிருத்தம் 86.**

# காசிபன் புலம்புறுபடலம்

**தேனீர் மையெனப் புகல்வாள் சிறிதுந் தானீ ரமிலாள் தனிமா யவளே**
**மானீர் உமதாம் வயின்உற் றனளோ ஏனீர் மொழியா திரிகின் றதுவே.**

மான்களே! கேளுங்கள். தேனின் இனிமையாகப் பேசும் தனியான மாயவள் தான் கொஞ்சமேனும் இரக்கம் இல்லாதவளாய் என்னை நீங்கினுள். உங்கள் கூட்டத்து அவள் நிற்பாளோ! நான் கேட்டமைக்குப் பதில் கூருது ஓடுகின்றீர் களே! ஏனோ? **1**

**சிலைவா ணுதலாள் திறன்மா யையெனும் வலைவீ சியெனு ருயிர்வவ் வினளால்**
**கலையீர் இவண்நீர் அதுகண் டனிரோ நிலையீர் வெருளா நெடிதோ டுதிரால்.**

விற்போல் வளைந்து அழகிய ஒளி உடை நெற்றி பொருந்தினுள் தப்பமுடியாத வலிமையான மாயை வலையை என்மீது வீசி எனது உயிரைப் பற்றிக் கொண்டாள். கலைமான்களே! நீர் அச்செயல் இங்கே கண்டனீர்களோ? நில்லுங்கள்! வெருண்டு நெடிதே ஓடுகிறீர்களே! ஓடாது பதில் சொல்லுங்கள்! **2**

**கடிதேர் களிறே கழிகா தலையாய்ப் பிடிதேர் பரிசாற் பெயர்வாய் தமியேன்**
**நொடிதே தளரா நெறிநே டினையக் கொடியாள் தனையுங் கொணராய் கொணராய்.**

வாசனை அறியும் யானையே! உனது பெண் யானை எங்கே எனப் பெரும் காதலாகி அது நிற்கும் திக்கை மோப்பால் அறிந்து செல்கின்றுய். மிகத் தளர்வுறுவேனுன யான் மீளவும் நெடிது தளராவகை அவள் போம் வழியை அறிந்து அக்கொடியாளையும் தேடி என்பால் கொணர்வாயாக, கொணர்வாயாக. **3**

**அருளால் உனையே அளியென் றனரால் பெரியார் அவர்சொற் பிழையா குவதோ**
**தரியா அரியே தமியேன் உயிரைத் தெரிவான் நினைவோ திரிகின் றனையே.**

வண்டே! அருள் உடையை நீ என அளி என்றே உன்னைப் பெரியோர் சொல்வார். பெரியோர் வாக்கும் பிழையாகப் பொய்க்குமோ? தரித்திருக்க முடியாதபடி என்னை ஆக்கிவிட்டுச் சென்ற எனது உயிரான மாயவளை, என் பொருட்டு இரங்கித் தேடும்படி நினைவாகியோ நீ அங்கும் இங்கும் திரிகின்றுய். **4**

**மேவிப் பிரிவாள் விழிபோல் அடுவாய் ஆவிக் குறவோ அலைமன் மதனப்**
**பாவிக் கும்இனிப் படையாய் வருவாய் வாவிக் குவளாய் எனைவாட் டுதியோ.**

என்னை அடைந்து மயக்கிப் பிரிந்தவளின் கண்போல வடிவு காட்டிய குவளைப் பூவே! நீயும் இப்போது துயருறுத்துவாயோ! எனது உயிரானவளுக்கு உறவோ நீ? இது மட்டன்றி இன்னும் என்னை அலைக்கும் மன்மதனுன பாவிக்கும் அம்பாகி வருவாயே! மீளவும் என்னை வாட்டுவாயோ! **5**

**செந்தா மரைமேல் திருவாம் எனவே வந்தாள் தணியா மயல்செய் தகல்வாள்**
**அந்தோ வினவா அவளைக் கொணர்வான் சந்தா கிலையென் சந்தே உரையாய்.**

செந்தாமரைப் பூமேல் இலட்சுமி என வந்தாள் மாயவள். தன்மீது தணிக்க முடியாத மயக்கத்தை எனக்கு உண்டாக்கி என்னை நீங்கிவிட்டாள். ஐயோ! சந்தன மரமே! இதைக் கேட்டு அவளை என்னிடம் கொண்டுவந்து சேர்க்கும்படி நீ தூதாகின்றிலையே! ஏன்? ஒருகால் தூதாகச் செல்லாயோ! சொல்வாய். **6**

**பொன்னிற் பொலிவுற்றிடு பூங்கமலந் தன்னில் துணையோடு தழீஇத் தணவா**
**அன்னப் பெடைகாள் அறனே புகலீர் என்னைத் தனிவைத் தவளே கியதே.**

பொன்போலும் பொலிவு உற்ற தாமரைமலர் மேலாக உங்கள் துணையான சேவலுடன் தழுவியவாறு நீங்காதிருக்கும் அன்னப் பேடுகளே ! இது தருமமா என் பதை எனக்கு நீங்கள் ஒருகால் சொல்லுங்கள் அந்த மாயவள் என்னைத் தனியாக வைத்துவிட்டு நீங்கிப்போன அவள் செயல். 7

**தணியா வகைமால் தமியேற்கருளித் துணியா அகல்வாள் படர்தொல்நெறியை**
**குணியா வுரைசெய்குதியென் றிடினுங் கணியாய் இதுவோ கணிதன் இயல்பே.**

அப்பால் வேங்கைமரத்தைப் பார்த்து காசிபமுனிவன் கேட்பான் ; என்னை யான் அடக்கிக்கொள்ள முடியாதவாறு மயக்கி காதல் புரிந்துவிட்டு எனது நிலையை தான் நேரில் பார்த்தும் பின்னரும் துணிந்து என்னைவிட்டு அகன்றுபோயினள் மாயை ஆனால் நீ கணி என்னும் சிறப்புப் பெயருடையை. ஆதலின் கணித்து அறிவாரின் திறமையான குறிசொல்லல் உனக்கும் உண்டாகவேண்டும். ஆகவே மாயை என்பாள் அகன்ற பழைய அந்நெறியை நீயும் குறித்து எனக்கு ஒருகால் அறிவிப்பாய் என கேட்கினும் நீ பேசாது பொருட்படுத்தாது இருந்தாய். இதுதானே கணியினியல்பு.

சோதிடம் சொல்வாரை அண்டித் தமக்கு உற்றதை ஒருவர் சொன்னால் அவ் வேளை கேட்டார்க்கு அதை இயல்பான தரும முறையால் சொல்லி நிற்றல் முறை யாதும். ஆனால் அவ்வாறு குறி சொல்வாரின் பெயரான கணி என்னும் பெயரை வேங்கை மரமே நீ பெற்றும் அங்கு கணிதம் செய்வாரின் இயல்பு பெறுமல் இருந் தமையால் கணியினுடைய இயல்பு இதுதானு எனக் கேட்டான் காசிபன்.

**கணி** — வேங்கை. இதைச் சிலேடையாகச் சொல்லினன் காசிபன். 8

**படைவேள் கணையே பருதிக்குறவே மடவார் முகமே மதியின்பகையே**
**விடமே புரையும் விழிமெல்லியல்நின் இடமேவருவாள் ஒளியாதிசையாய்.**

தாமரைப் பூவை நோக்கிக் காசிபன் சொல்லுவான், தாமரைப் பூவே ! நீ பூக்களாகிய பாணங்களைச் செலுத்தி உலகத்தாரை மயக்கும் மன்மதனின் அம்பு ஆவாய், அஃதன்றிச் சூரியதேவனுக்கு நண்பாவாய், பெண்களின் முகம் போல்வாய், சந்திரனைக் கண்டதும் சுருங்கிக் கூம்பி அவன் பகைவன் எனவும் காட்டுவாய். இவ் வாறு பல சிறப்புடைய உன்னிடம் நஞ்சே ஒத்த கண்ணினை உடைய மாயை அவள் மிருதுவான இயல்புடையள் ஆனமையால் அவள் உன் இடத்திலேயே நிச்சயமாக வந்திருப்பாள். ஆகவே அவளை வைத்துக்கொண்டும் இங்கே அவள் இல்லை எனச் சொல்லாது உண்மையைச் சொல், எங்குற்றுள் அவள். 9

**நின்றீர்மிகவுந் நெடியீர்பெரியீர் இன்றீ ரமிலா தெனைநீங்கினள்முன்**
**சென்றீரவள்போஞ் செயல்காணுதிர்செய் குன்றீர்மொழியீர் குறைசெய்துளனே**

செய்குன்றுகளை (செயற்கையால் அமைந்த மலைகளை) ப் பார்த்துக் காசிபன் சொல்வான், ''செய்குன்றுகளே ! இங்கு நீங்கள் நின்றீர்கள், மிகவும் நெடிதாகி நீண்டுள்ளீர்கள். அதோடு பருமனும் பெருமையும் உடையீர். ஆனால் என்மீது கொஞ்சமேனும் இரக்கமில்லாது போயவளான மாயை இங்கு வருமுன் நீவிரும் வந்தீர்கள். ஆகையால் நீங்கள் அவள்போன செய்கையைக் காண்பீர்கள். மலைகளே ! ஏன் பேசாது நிற்கின்றீர். ஒருகால் நான் யாதேனும் குறை செய்துளனே மொழிவீ ராக''. 10

மயிலே ரியலாள் ஒருமா யவளே
இயலே தறியேன் இவண்நின் றனளோ
பயிலே சிலநீ பகர்வாய் அதனல்
குயிலே எனதா ருயிர்கொள் ளுதியோ.

சோலையிலே கூவிநிற்கும் குயிலைப் பார்த்துக் காசிபன் மொழிவான், "குயிலே! நீ சில குறிப்புரைகளைப் பேசுகின்றாய். மயில் போலும் அழகிய சாயல் உடைய மாயவள் என்னும் பெண் எங்கு சென்றாள் என்று, அவன் இயல்பு ஏதும் அறியாது துயருறுவேன். அவள் இங்கு நின்றதை நீ காணுதியோ. ஏதோ வார்த்தை சொல் வாய் அது எனக்கு விளங்கவில்லையே. குயிலே இப்படி விளங்காதபடி கூவி இடருற்ற என்னை மீளவும் இடருறும்படி நீயும் எனது உயிரை வாட்டுதியோ!'' 11

நின்பால் வரவே நினைவாய் மொழிவாள்
என்பால் இலையிவ் வழியே கினளால்
மென்பா லெனமே வியமா ருதமே
தென்பால் வருவாய் செயல்கூ றுதிநீ.

மெதுவாக வீசிநிற்கும் தென்றற் காற்றே! உன்னிடத்தாகவே நீ வரும் திசையை நோக்கியே வரநினைவாகி என்னிடம் மாயவள் சொன்னாள். என்பால் அவள் இப்போது இல்லை. அவள் தான் கூறியவாறே இவ்வழியால் சென்றாள். ஆகவே தென்றலே! நீ தெற்கிருந்துதானே வருவாய் அவளைக் கண்ட செயலைக் கூறுவாயாக என்பான் காசிபன். 12

ஆரத் தடமே அருள்நீ ரினைஉள்
ஈரத் தினையென் றெவரும் புகல்வார்
சாரிற் சுடுவாய் தளரேல் எனவே
சோர்வுற் றிடுமென் துயர்தீர்க் கிலையே.

முத்துப்போலும் நீருடைக் குளமே! நீ அருட்தன்மை உடையாய். உனது உள்ளே கசிவு இருப்பதனல் உள்ளம் இரக்கம் உடையது, என்று எவரும் உன் இரக்க நிலையைப் பேசுவார்கள். ஆனல் நான் உனது அருகே சேர நீ சுடுகின்றாய். தளர்கின்ற என் துயர்தீர நீ ஒரு செயலும் செய்யாதிருக்கின்றையே. எனது துயர் தீரும் நிலை எவ்வாறுமோ ஈரமுடையாய் சொல்வாய் என்றான் காசிபன். 13

களிசேர்மயிலே கவிராகியவாய்க் கிளியேகுயிலே கிளைதான்அலவோ
தளராவகைநீர் தகவேமொழியா அளியேன்உயிருக் கரணுகுதிரால்.

மனக்களிப்புடன் மகிழும் மயிலே! முருக்கம் பூ நிறமான சொண்டுடை கிளியே! குயிலே! நீங்கள் யாவும் மாயவளின் உறவானீர் அல்லவோ. அவளால் தளர்வேனுடைய உயிர் தளராவகை நீர் தகவான சில வார்த்தைகளை ஒருக்கால் எனக்குச் சொல்லி வலியிலாத ஏழையேன் உயிருக்குத் தஞ்சமாவீராக. 14

அறவே துயர்செய் தனுகா திகலித் துறவே துணிவாள் தொடர்புந் தொடர்போ
உறவே யினிநீர் உவள்போம் நெறியைப் புறவே தமியேன் பெறவே புகல்வீர்.

தனது எழிலால் மயக்கி எனக்கு மிகவே துயர் செய்து அவ்வாறன்றி என்னை அணுகாமல் வலிதான கொடுமை வார்த்தை சொல்லி என்னைப் பிரியத் துணிந்

தாளின் தொடர்பை நான் நாடினுல் அதுவும் ஒரு தொடர்பா. புருவே நீ அவளின் உறவு ஆவாய். அவள் போன நெறியாது என எனக்கு ஒருகால் சொல்லலும் செய்யுங்கள். நான் அவள் சென்ற மார்க்கம் அறிதல் வேண்டும். 15

எனவேபலவும் இயல்சேர்முனிவன் மனமால் கொடுசொற் றிடமற் றதனை
வினவாமகிழா வியன்மெய்ம் மறையா அனமே யனையாள் அவணுற் றிடலும்.

என்று இவ்வாறு பல வார்த்தைகளையும் தவ இயல்பு பெற்ற காசிப முனிவன் தனது மனத்தில் பெரிய மயக்கம் கொண்டு பேசுதலும் அதனையெல்லாம் தனது வடிவைக் காட்டாது மறைந்துள்ள மாயவள் கேட்டு மிகவும் மகிழ்வாகி அன்னம்போலும் சாயலுடை மாயை அவ்விடத்து மறைந்தவண்ணமே நிற்றலும். 16

நோற்குறு முனிவன் தன்பால் நொய்தென மாயை யெய்தித்
தீர்க்கலா மையல் பூட்டிச் செய்தவம் அழித்தாள் அந்தோ
பார்க்கிலன் இதனை யென்னுப் பரிவுசெய் தகன்ருன் போலக்
கார்க்கடல் வரைப்பின் ஏகிக் கதிரவன் கரந்தான் அன்றே.

தவம் செய்யும் முனிவனுன காசிபன் தன்பாலாக மாயை என்பாள் விரைவாக வந்து அணுகி அவனிடம் அவனுல் தீர்க்கமுடியாத ஆசையை உண்டாக்கி மயக்கி காசிப முனிவன் செய்த அரிய தவத்தை எல்லாம் சிதைவாக்கிவிட்டாள் மாயவள். ஐயய்யோ ! இக்கொடுமையை நான் பார்க்கமாட்டேன் என்று எண்ணிக் காசிப முனிவன்பால் இரக்கங்கொண்டு அகன்று அப்பால் செல்வான்போல கருநிறமான மேற்புறச் சமுத்திரத்தின் மேவாகச் சென்று சூரியதேவன் மறைந்தான்.

சூரியன் சென்று அஸ்தமனமாகி மறைந்தது எப்படிப்போலும் எனில் காசிப முனிவனுக்கு மாயைபால் கொண்ட மோகத்தின் அவல நிலையைக் காணச் சகிக்காதவன்போல மறைந்தான் என உவமை கூறினுர். 17

தந்தைகா சிபன்என் றேதுந் தவமுனி அவன்பாற் சார
வந்துளாள் யாயே அன்றே மற்றிவர் தலைப்பெய் கின்ற
முந்துறு புணர்ச்சி காண்டல் முறைகொலோ புதல்வற் கென்னுச்
சிந்தைசெய் தகன்ருன் போன்று தினகரக் கடவுள் சென்ருன்.

இன்னமும் தனது தந்தையாவான் காசிப முனிவன் எனச் சொல்லப்பெறும் தபோதனன். அவனுடன் கூடும்படியாக வந்து சேர்ந்துள்ளவளும் தாயேயாவாள். ஆகவே இருவரும் தலைக்கூடும் இடத்து அவர்கள் சேர்க்கை நிலையை நான் பார்த்தல் புதல்வனுன எனக்கு முறையாமோ எனச் சிந்தனை செய்து அவ்விடம் நீங்கி அகன்று செல்வான்போல சூரியக் கடவுள் சென்ருன். 18

அந்தமில் நிருதர் என்னும் அளவைதீர் பாருட் கங்குல்
வந்திடு மின்னே யென்னு வல்லையின் மதித்து வானத்
இந்திரன் ஆணை போற்றும் இலங்கெழில் நேமிப் புத்தேள்
சிந்துவிற் கரத்தல் போன்று செங்கதிர்ச் செல்வன் போனுன்.

முடிவிலாத அசுரர் என்னும் அளவு கடந்த இருளுடை இராவானது இப்போது வந்திடும் என்று தனது உள்ளத்தே விரைவுடன் மதித்து ஆகாயத்திலே இந்திர

தேவனுடைய ஆணையைப் போற்றி காவல்கொள்ளும் பிரசாசத்துடன் இலங்கும் சக்கரப் படையான கடவுளானவர் தான் சென்று கடலிலே மறைந்து ஒளிப்பார் போல வட்டமாகி ஒளியுடன் விளங்கும் சூரியதேவன் போயினுர். 19

வேலையின் இரவி செல்ல விண்ணவர் யாருங் கொண்ட
வாலிய திருவுஞ் சீரும் வன்மையும் அகல மாயை
பாலுறும் அவுணர் தானைப் பல்குழுப் பரவிற் றென்ன
மாலையும் இருளின் சூழ்வும் வல்லைவந் திறுத்த வன்றே.

சமுத்திரத்திலே இவ்வாறு சூரியபகவான் செல்ல, தேவர்சள் யாவரும் வைத்துக் கொண்ட உயர்வான செல்வமும், சீரும் வலிமையும் அகன்றுபோம்படியாக மாயை என்பவள் பால் தோன்றப் போகின்ற அசுரர்கள் கூட்டம் பெரும் சேனையாகப் பரந்து எங்கும் இருள் வடிவாய் விளங்கின தெனும்படி மாலைக் காலமும், இருட் கூட்டமும் விரைவாக வந்து சேர்ந்து கொண்டது. 20

மாகமேல் நிமிர்ந்த செக்கர் மாலையம் பொழுது நல்கூர்ந்
தீகென இரக்கும் நீரார்க் கிம்மியின் துணைய தேனும்
ஓகையால் வழங்கா நீதி ஒன்னலான் ஒருவன் செல்வம்
போகுமா றென்ன வாளா பொருக்கெனப் போயிற்றுமால்.

இந்நிலையில் சூரிய அஸ்தமனத்தின்போது வானமேல் நிமிர்ந்து பரந்த செக்கர் என்னும் மாலைப்பொழுதானது; பெருஞ் செல்வந்தராக இருக்கும் ஒருவன், தன்னைவந்து இரக்கின்ற வறியவனுன ஏழைகளுக்கு ஓர் இம்மியின் துணையளவேனும் மகிழ்ச்யுடன் ஈயாமல் பேணிவைத்தலே பெருமை என எண்ணிய அப்பேதையின் செல்வம் யார்க்குமே பிரயோசனப்படாது கள்வரால் பிறரால் அபகரிக்கப்பட்டு போதல் போல், மாலைப்பொழுதும் வீணே யார்க்கும் ஓர் பயனிலாது விரைவாகப் போயிற்று. 21

இரும்பிறை உருவின் எஃகார் கூர்ங்குயத் தினுமீர்க் கல்லா
வரம்பறும் இருளின் கற்றை கணங்களு மருளு நீராற்
பரம்பிய தியாண்டு மாகிப் பாரெனப் பட்ட மாது
கரும்படாம் ஒன்று மேற்கொள் காட்சியைப் போன்ற தன்றே.

செக்கர் வானம் மறைய வானத்தில் இளம்பிறை பிரகாசத்துடன் தோன்றுகிறது. ஆயினும் இருளோ பரந்து எங்கணும் செறிகின்றது. கற்றையாக செறியும் இருட்செறிவின் தன்மை எவ்வாறுகிறதெனில் இளம்பிறையான கூரிய ஏஃகுகினுல் ஆக்கப்பெற்ற அரிவாளினுலும் அரிந்து எடுத்து அகற்ற முடியாததாய் அளவு கடந்த இருட்பிளம்பான கற்றைகள்; நட்சத்திரங்களும் மருளும் தன்மையாகப் பரம்பியது எங்குமாக. இந்த இருட்செறிவு பூமிதேவியானவள் ஒரு கறுத்த போர்வைத் துணியினுல் தன்னை மூடிக்கொண்டாள் என்னும் படியாகவும் விளங்சிற்று. 22

வண்டுழாய் மோலி மைந்தன் மாலிருட் கங்குல் வேழத்
தெண்டரு வதனம் பட்ட இரும்புகர்ப் புள்ளி யென்ன
அண்டர்தந் தருக்கள் சிந்தும் அணிமல ரென்ன வான்றேய்
கொண்டலிற் படுமுத் தென்னத் தாரகை குலவிற் றன்றே.

வளம்பொருந்திய துளசிமாலை அணிந்த முடி உடைய திருமாலின் புதல்வனுன மன்மனது பெரிய இருளான கறுத்த யானையினுடைய மதிப்பமைந்த பெரிய முகத்தில் தோன்றிய புகை நிறமுடைய புள்ளிகளைப்போல என்னும்படியும், தேவர்களின் விருட்சங்கள் சிந்தும் பூக்களைப்போலவும் பின்னர் வானத்தில் தோன்றும் மேகங்களில் உள்ள முத்துக்கள் போலவும் நட்சத்திரங்கள் இரவில் விளங்கின. 2௨

துண்ணென உலக முற்றுஞ் சூழ்ந்தபே ரிருளா நஞ்சைத்
தெண்ணிலா வாகி யுள்ள செங்கையால் வாரி நுங்கி
விண்ணவர் புகழ நீல வியன்நிறந் தன்பாற் காட்டுங்
கண்ணுதல் போன்று முந்நீர்த் தோன்றினன் கதிர்வெண் டிங்கள்

இப்பால் வானத்தில் உதயமான சந்திரன் எவ்வாறு போன்ருன் என்னில் உலகத்தவர் துணுக்குறும்படி உலகமெல்லாம் சூழ்ந்து தோன்றிய இருள் என்னும் நஞ்சை தனது தெள்ளிய நிலவு என்னும் செங்கையால் வாரி விழுங்கி தமது கண்டத்திலே நீல நிறமாகக் காட்டும் நெற்றிக்கண்ணுடைய சிவபிரானைப் போன்று இருளை உண்டமையால் தனது மேனியில் கருநிறம் சில காட்டியவாறு சந்திர தேவன் சமுத்திரத்தின் மேலாகித் தோன்றினன். 24

அழுந்துறு பாலின் வேலை அமரர்கள் கடைந்த காலைச்
செழுந்துளி மணிக ளோடுந் தெறித்தென உடுக்கள் தோன்றக்
கழுந்துறும் அவுணர் என்னுங் காரிருள் தொலைய அங்கண்
எழுந்ததோ ரமுதம் போன்று இலங்கினன் இந்து வென்பான்.

தேவர்கள் ஆழமான பாற்கடலை கடைந்த நேரத்து செழுமையான பால் துளிகள் இரத்தினங்களுடன் தெறித்தால் போல வானத்தில் வெள்ளிகள் துலங்க, தீமை உற்ற அசுரர் என்னும் கொடிய இருளானது அவ்விடத்து விட்டு நீங்கித் தொலைவாகும்படி அங்கு பாற்கடலில் எழுந்த அமுதம்போல இலங்கியபடி விளங்கினன் சந்திரன் என்பான். 25

இரவெனும் வல்லோன் ஞால மென்பதோர் உலையில் வேலைக்
கரியுறு வடவைத் தீயில் களங்கொடு வெண்பொன் சேர்த்தி
விரைவொடு செம்மை செய்து மீட்டுமோர் மருந்தால் தொல்லை
உருவுசெய் தென்னச் செங்கேழ் ஒளிமதி வெளிய னானன்.

இச்சந்திரன் உதிக்கும்போது செவ்வொளி கொண்டவனுகி பின்னர் மேலெழும்போது வெண்மை வடிவாகி விளங்கினன். அது எவ்வாறு எனில் இரா என்கின்ற கொல்லனவன் பூமி என்கின்ற உலைமுகத்திலே சமுத்திரம் என்னும் கரியில் வடவாமுகாக்கினி என்னும் நெருப்பை பற்றவைத்து இரசகுளிகையுடன் வெள்ளியை அதில் இட்டு விரைவில் அவ்வெள்ளியை சிவப்பாக்கி பின்னர் இன்னுமொரு மருந்தைச் சேர்த்து பழையபடி வெள்ளியாக்கிய தன்மை போல சிவந்த நிறத்துடன் உதித்த சந்திரன் மேல் எழுந்த பின் வெள்ளை நிறமாக விளங்கினன். 26

அண்டருங் ககன மென்னும் அகலிருந் தடத்திற் பூத்த
விண்டதோர் குவளை ஆம்பல் போலுமால் மீன்கள் வெள்ளைப்
புண்டரீ கத்தைப் போலும் புதுமதி அதன்கட் டேனர்
வண்டினம் ஒப்ப தன்றே மாசுதோய் களங்க மாதோ.

அணுகுதற்கரிய ஆகாயமாகிய அகன்ற பெரிய குளத்திலே பூத்து மலர்ந்து விரிந்த நீலோற்பல மலரைப்போலவும் ஆம்பல் (அல்லித்தாமரை) பூப்போலவும் நட்சத்திரங்கள் ஒளிகொண்டு நிற்ப, வானமான குளத்தில் வெண் தாமரைப்பூ மலர்ந்தது போல சந்திர தேவன் விளங்க, அவ்வெண்டாமரை மலரில் உள்ள தேனை உண்ண மொய்க்கும் வண்டினம் போல சந்திரனிலே உள்ள கருநிறம் விளங்கியது. 27

அலைதரு நேமி என்னும் ஆன்றதோர் தடத்தின் பாலாம்
நிலவெனும் வலையை யோச்சி நிழல்மதிப் பரதன் ஈர்த்துப்
பலநிறங் கொண்ட மீன்கள் பன்முறை கவர்ந்து வான்மேற்
புலருற விரித்த தேபோற் பொலிந்தன உடுவின் பொம்மல்.

அலைத்து விளங்கும் பூமி எனப்படும் அகன்றதோர் குளத்தின் பாலாக சந்திரன் என்னும் மீன்பிடித் தொழிலாளன் நிலவு எனப்படும் தனது வலையைவீசி இப்பூமியான குளத்தில் அகப்படச்கூடிய மீன்களை (ஒளிப் பொருள்களை) அகப்படச் செய்து பின்னர் அவ்வாறு தான் அகப்படச் செய்த பல நிறமுடைய மீன்களை வானத்து தான் உலரும்படி விரித்துள்ளதுபோலப் பொலிவுற்று விளங்கின வானத்தில் தோன்றிய நட்சத்திரங்கள். சந்திர தேவன் பாங்காகத் தோன்றிடும் வெள்ளிகள் யாவும் சுவாலித்து இலங்கும் தன்மை; சந்திரனுன வலையன் பூமி என்னும் குளத்தில் நிலவு என்னும் வலையை வீசி மீன்களைப் (வெள்ளிகளை) பிடித்து வானத்து அவை காயவைத்ததுபோல் பரந்து விளங்சின அவ்வெள்ளிகள். 28

கழிதரும் உவரி நீத்தங் கையகப் படுத்து மாந்தி
எழிலிகள் வான மீப்போய் இருநிலத் துதவல் காணூஉப்
பழிதவிர் மதியப் புத்தேள் பாற்கடல் பருகி யாண்டும்
பொழிதரும் அமிர்தம் என்னப் புதுநிலாப் பூத்த தன்றே.

கழிநிலமுடைய சமுத்திரத்தின் நீரினை, மேகங்கள் அதன்மீது படிந்து அந்நீரை உண்டு மேகங்கள் பின்னர் வான மேலாகப்போய் திரும்பவும் பூமியில் மழையாகப் பொழியும் இயல்பைக் கண்ணுற்ற பழியாவும் நீங்கிய சந்திர தேவன் தானும் பாற்கடலிலே சென்று அங்குள்ள பாலைப்பருகி பின்னர் எல்லாவிடத்தும் செறியும் அமிர்தம் என்னும் நிலவைப் பொழிந்து பலரும் மகிழும்படி செய்கின்றார்.

சந்திரனின் நிலவிலே அமிர்தம் உண்டு அதை தேவர்கள் பருகுவர் எனக் கூறுவர் பெரியோர்கள். 29

மலர்ந்திடுங் கடவுட் திங்கள் வாணிலாக் கற்றை எங்குங்
கலந்தன உலகில் யாருங் களித்தனர் குமுத மாதி
அலர்ந்தன தளிர்த்த சோலை அம்புயப் போது செவ்வி
புலர்ந்தன ஒடுங்கு கின்ற புகைந்தன பிரிந்தோர் புந்தி.

நிலாவால் ஒளியால் மலர்ந்து விளங்கும் கடவுளான சந்திரனின் நிலவின் வெளிச்சங்கள் எங்கும் நலந்துகொண்டன. உலகில் எல்லாரும் மனக்களிப்புகொண்டார்கள். குமுதம் ஆதியான பூக்கள் மலர்ந்தன. சோலைகள் தளிர்த்தன. தாமரை மலர் தனது சிறப்புக் கெட்டுக் குவிந்து வாடிச் சுருங்கிபது. காதலரைப் பிரிந்தோர் மனம் புகைந்து வேதனையாகிறது. 30

அல்லவை புரியா ரேனும் அறிவினிற் பெரியா ரேனும்
எல்லவர் தமக்கு நண்பாய் இனியவே புரிதற் பாற்றே
பல்லுயிர்த் தொகைக்கும் இன்பம் பயந்திடு மதிகண் டன்றே
புல்லிய கமல மெல்லாம் பொலிவழிந் திட்ட வன்றே.

உலகில் யாவருக்குக்கும் தீங்கு செய்யாரேனும் அறிவினிற் பெரியவராயினேனும் எல்லார்க்கும் உலகில் நண்பாக இனியன செய்து வாழமுடியுமோ அல்லது செய்ய முடியுமோ? அதுதான் இயலாது போலும். ஏனெனில் பலவான உயிர்வர்க்கங்கள் கண்டு மகிழ்கின்ற சந்திர தேவனைக் கண்டல்லலோ இந்த சிறிய நிலையான தாமரைப் பூவெல்லாம் பொலிவழிந்து போயின. 31

திங்களின் மலர்ந்த செவ்வித் தேன்முரல் குமுதம் எங்கோன்
பங்கமுற் றார்கண் மேவான் பதுமம்ஏன் ஒடுங்கிற் றென்னுத்
தங்களில் உரைத்தல் போலாஞ் சசிக்கது உண்மை எம்பால்
இங்கிலை யென்ப போன்ற இசையளி பொதிந்த கஞ்சம்.

சந்திரனால் மலர்வுற்ற தேனீக்கள் மொய்க்கும் செம்மையான குமுத மலர்கள் எல்லாம் தாம் ஏதோ சொல்வன போலக் காணப்படுகின்றன. எவ்வண்ணம் எனில் நாயகரான சந்திரதேவன் வாட்டமுற்று பங்கப்பட்டார்பால் சேரமாட்டான். இதைத் தெரிந்தும் ஏன் இந்த தாமரை ஒடுங்கியது என, அப்போது வண்டினம் தன்னிடத்து உள்ளடங்கிய வண்ணமாகக் கூம்பிய தாமரைப் பூக்கள் இவைகேட்டு இந்த குமுத மலர்கள் சொல்வது எப்படி! சந்திரனுக்குத்தான் பங்கமான கறுப்பு உண்மையாக இருக்கிறது எங்கள் பால் அப்படி பங்கம் இல்லை என தங்களுக்குள் முணுமுணுத்தல் போன்றிருப்பன தாமரைகள். 32

கங்குல்வந் திறுத்த காலைக் கடிமனைக் கதவம் பூட்டிச்
செங்கண்மால் தன்னைப் புல்லித் திருமகள் இருந்தா லென்னக்
கொங்கவிழ் கின்ற செங்கேழ்க் கோகன தங்கள் எல்லாம்
பொங்கிசை மணிவண் டோடும் பொதிந்தன பொய்கை யெங்கும்.

இராவானது வந்து சேர்ந்துள்ள நேரத்து தனது காவல் மனையின் தலைவாய்தல் கதவைப் பூட்டி உள்ளே நாராயணப் பெருமானோடு அணைந்து கூடி மகாலெட்சுமி இருப்பதைப் போன்று வாசனை விரிந்து மலர்ந்து நின்ற செந்தாமரைப் பூக்கள் யாவும் தன்னிடத்தில் தங்கிய இசைபாடும் அழகிய வண்டுகளுடன் கூம்பிப் பொதிந்து காணப்பட்டன குளங்கள் எங்கும். 33

ஆனதோர் காலையில் அமரர் தம்மையுந்
தானவர் தம்மையுந் தந்த காசிபன்
வானகம் எழுதரும் மதியின் தெண்ணிலா
மேனிய தடைதலும் வெதும்பி னனரோ.

அவ்வாறாகிய நேரத்து தேவர்கள் தங்களையும் அசுரர்கள் தங்களையும் உலகில் தந்த காசிப முனிவன் வானத்திலே எழுகின்ற சந்திரனின் தெள்ளிய நிலவு அவன் மேனியிலே படுதலும் அதைத் தாங்கமுடியாது வெதும்பினன்.

மாயைமேல் கொண்ட காம உணர்ச்சி உள்ளே பொங்கி எழுந்து சுவாலித்து அக்கினியாகி வெதுப்புற அப்போது வெதுப்புற்ற உடல்மேல் நிலவு பட அதைத் தாங்க முடியாது வெதும்பினன். இது எதுபோலும் எனில் நெருப்பில் வெந்த எண்ணெய்ச் சட்டிமேல் நீரைத் தெளித்தால் மீண்டும் அச்சட்டி இரைந்து நெருப் பாகிப் பற்றும். அதேபோல காம உணர்வால் வெதுப்பிய காசிபனுக்குக் குளிர்ந்த நிலவு பட அதைத் தாங்க முடியாது மேலும் வெதும்பினன் என்றார். 34

குலைந்தனன் தன்னுளங் குறைந்த வன்மையன்
அலைந்தனன் உயிர்த்தனன் அறிவு சோர்ந்தனன்
புலர்ந்தனன் ஒடுங்கினன் புலம்பி அங்கண்வான்
நிலந்தனில் எழுதரு நிலவை நோக்கினன்.

தனது மனம் நிலைதவறி, வலிமை குறைந்து, இளைத்து, பெருமூச்செறிந்து அறிவுசோரப்பெற்று உடலம் வாடி ஒடுங்கிப் புலம்பி அழுதவாறு அங்கே வானத்தில் எழுந்து வரும் நிலவை நோக்கினன். தனது மனம் நிலைதவறியபொழுது காண்ப தெல்லாம் அவனுக்கு மாறுகவே தென்பட, சந்திரனை நோக்கிச் சொல்கிறன். 35

காலையில் எழுந்தசெங் கதிரின் நாயகன்
மாலையம் பொழுதினில் மறைந்து கீழ்த்திசை
வேலையில் விரைவுடன் மீண்டும் வந்துளான்
போலும்அந் தோவிது புதுமையோ என்பான்.

இஃது என்ன! காலையிலே உதித்தெழுந்த சிவந்த கிரகணங்களை உடைய சூரியன் மாலையிலே இப்போது தானே மறைந்து போனவன். எவ்வண்ணமாக கிழக்கு திக்கிலே இவ்வளவு விரைவாக வந்துள்ளான். அந்தோ இது புதுமையாக வல்லவோ இருக்கிறது என்பான். 36

ஞாயிறும் அன்றெனில் நடுவணுகியே
பாயிரும் புணரியுட் பயின்று தோன்றலால்
ஏயென உலகட எண்ணி யாண்டுறுந்
தீயெனுங் கடவுளே திங்கள் அன் றென்பான்.

இவன் சூரியனுமல்லாவிட்டால் பெரிய அலைகளை உடைய கடலில் நடுவே பொருந்தி உதித்தலால் ஒகோ இவன் "ஏ" எனும் பொழுதில் விரைவாக உலகங் களை அழிக்கக் கருதி வெளியே இப்போது தோன்றி நிற்கும் அக்கடலில் உள்ளே இருந்த நெருப்பெனுங் கடவுளே இது. சந்திரன் அல்ல என்பான். 37

இந்துவென் றுலகெலாம் இசைப்ப நின்றதோர்
செந்தழற் கடவுள்இத் திசையிற் செல்வுழி
வந்தோர் சோதிகொல் வானம் எங்கணும்
அந்தியஞ் செக்கரென் றடைந்தவா றென்பான்.

சந்திரன் என்று உலகம் எல்லாம் சொல்லும்படி நின்ற நெருப்பான கட வுளே இந்தத் திக்காகச் செல்கின்றபோது வந்துற்ற ஒரு சோதியோ இந்தவானம் எல்லாம் மாலையில் தோன்றும் செக்கர் மேகமாக அடைந்த வண்ணம் எனச் சொல் வான். 38

காண்டகு மதியெனக் கழறுஞ் செந்தழல்
மூண்டிடு புகைகொலோ முன்னம் வானமும்
ஈண்டுறு தரணியுந் திசையும் எங்குமாய்
நீண்டதோர் இருளென நிமிர்ந்தவா றென்பான்.

என் கண்ணுல் காணப்பெறும் சந்திரன் எனச் சொல்லப்பெறும் சிவந்த நெருப்பு, மூண்டு எரியும்போது தோன்றிய புகையாகத்தான் இருக்கவேண்டும், முன்னம் வானத்திலேயும் இங்குள்ளதான பூமியிலேயும் திக்கு எங்குமாய்ப் பரந்து நீண்டெழுந்த இருளாகி நிமிர்ந்து பரந்தது என்ருன் காசிபன். 39

தெண்டிரைப் பிறந்திடுந் திங்கட் செந்தழல்
கொண்டது வாலிதாங் கோலங் காரிடைக்
கண்டனன் இத்திறங் கறையில் ஆவிகள்
உண்டதிற் பெற்றதிவ்வுருவமே யென்பான்.

தெளிந்த கடலினிடத்தே தோன்றிய சந்திரன் நெருப்பாக மாறிவிட்டது. இது இப்போது யாவர்க்கும் இதஞ் செய்வதை மாற்றித் துயர் புரியும் வண்ணமாயது. இந்த உண்மையான கோலத்தை இதனிடத்தில் காணும் கருமையால் நான் அறிகிறேன். இது நெருப்பாக மாறி எண்ணிலா உயிர்களை வதைத்து, சுட்டெரித்து உண்டமையால்போலும் இதன் வெள்ளிய மேனியில் கருமை தோன்றியது என்பான். 40

ஊனமில் செக்கராய் உதித்துப் பின்னரே
வானிற ஞகிய மதியத் தீத்தரத்
தானிறை புலிங்கமே அலது தாரகை
மீனெனப் படுவது வேறுண்டோ வென்பான்.

இந்த நெருப்பே ஆரம்பத்திலே குறை இலாத செந்நிறத்தை உடைய செக்கராகி உதயம் செய்து பின்னராக சந்திரன் என்னும் இயல்பாகி மேலெழுந்து தோன்றி சுவாலித்தெரியும்போது பலபாட்டாலும் சிந்திய பொறிகள்தான் வானத்திலே காணப்பெறும் நட்சத்திரங்களே அல்லாது நட்சத்திரங்கள் என்று வேறு ஒரு பொருள் உண்டோ? இல்லையே என்பான். 41

மால்கடல் அதனிடை வந்த பான்மையால்
ஆலமி தாகுமால் அமரர்க் கன்றெழு
நீலமெய் யுருவினை நீத்துத் திங்களின்
கோலமொ டின்றிவட் குறுகிற் றேவென்பான்.

அல்லது இந்தச் சந்திரனைப் பாற்கடலில் நின்றும் வந்தது எனச் சொல்வார்கள். பாற்கடலில் நின்றும் வந்த பான்மையால் இது ஆலகாலம் எனும் நஞ்சாகும் என நினைக்கிறேன். இது தேவர்களை வாட்ட அன்றெழுந்த தனது நீல நிறமான கோலத்தை மறைத்து இன்று சந்திரன் என்ற கோலத்தில் இங்கு குறுகியதோ என்பான். 42

இங்கிவை யாவுமன் றேர்கொள் வேலையில்
வெங்கனல் முழுவதும் விடமும் ஆர்ந்தெழீஇ
மங்குலிற் சிதறிட வானிற் புக்கனன்
திங்களே யாமிது திண்ணம்என் கின்றான்.

நான் பின்னரும் எண்ணினால் இப்போது எண்ணிய வண்ணங்கள் மாத்திரம் அல்ல. இது அழகிய பாற்கடலில் உள்ள கொடிய நெருப்பு முழுவதையும் நஞ்சையும் ஒருங்காகச் சந்திரன் உண்டுகொண்டு வீறடைந்து, உண்ட நெருப்பும் நஞ்சும் வானத்தில் சிதறிடவேண்டியே இப்போது சந்திரன் எழுந்திருக்கிறான். சரி சரி இது சந்திரன்தான். இது நிச்சயமாகினேன் என்பான், 43

இனையன மருட்கையால் இசைத்த காசிப
முனிவரன் என்பவன் முன்னை மாயையை
நினைபவ னாகியே நெடிது காதலால்
அனையவள் தனைவிளித் தரற்றல் மேயினான்.

இவ்வாறாகிய பல வார்த்தைகளை மயக்கத்தினாலே இசைத்துவிட்ட காசிப முனிவன் என்பவன் முன்னே மறைந்து போன மாயை என்பாளைத் தான் நினைபவனாகி அவள் மேற்கொண்ட நீக்க முடியாத பெரும் காதலால் அவளைக் கூவி அழைத்தவாறே அழுது புலம்பத் தொடங்குகிறான். 44

கொங்குண் கோதைத் தாழ்குழல் நல்லீர் கொடியேன்முன்
எங்கு மெங்குங் காணுறு கின்றீர் எழின்மின்னின்
பொங்குஞ் சோதி போலெதிர் புல்லும் படிநில்லீர்
மங்கும் போதோ சேருதிர் நெஞ்சம் வலியீரே.

காதலால் மாயைமீது அன்புற்ற காசிபன், அவளை அன்றி வேறொன்றும் நினையவில்லை. ஆகையால் காண்பதெல்லாம் அவளாகவே காணப்பெறுகிறது. இதைக் கண்ணுற்றபோது அவன் புலம்பிச் சொல்வான்.

வாசனைகொண்ட கூந்தலை உடைய நல்ல மாதர்களே! கொடியேனான என் முன்னாக எங்கும் எங்கும் காணப்படுகின்றீர்கள், உங்கள் வடிவம் பொங்கி எழும் சோதி போல் வசீகரத்துடன் சிறந்து விளங்கிக் காணப்படுகிறது. உங்கள் எழிலால் மயங்கினேன் நான். ஐயையோ! உம்மை நான் தழுவிக்கொள்ளும்படி கொஞ்சம் நில்லுங்கள். ஏதேது நான் மங்கி அழிவுறும்போதோ என்னுடன் சேரப்போகிறீர்கள்? உங்கள் இரக்கமற்ற மனவலிமையை என்னென்று சொல்வேன். 45

முன்னஞ் செய்தீர் காதலை நோன்பை முதலோடும்
பின்னஞ் செய்தீர் மாரனை ஏவிப் பிழைசெய்தீர்
சின்னஞ் செய்தீர் நல்லுணர் வெல்லாஞ் சிறியேனுக்
கின்னஞ் செய்யும் பெற்றியும் உண்டேல் இசையீரே.

முதலில் உங்கள்பால் எனக்கு ஆசையை உண்டாக்கினீர்கள். நான் செய்த தவத்தை அடியோடு பங்கப்படுத்திவிட்டீர்கள். மன்மதனை என்பால் ஏவி விட்டுப் பெரும் பிழைகளைச் செய்தீர்கள். நீங்கள் எனது நல்லுணர்ச்சிகள் யாவையும் சின்னபின்னமாக்கிச் சிதைத்தீர்கள். இவையன்றி ஏழையான எனக்கு இன்னமும் செய்யும் கெடுதலான செயல்கள் ஏதேனும் இருந்தால் அதையும் யாதென சொல்லுங்கள். 46

வாகாய் நின்ற குன்றமும் யாவும் வருவித்தீர்
ஏகா நின்றீர் இவ்விடை தன்னில் எனைநீங்கிப்
போகா நின்றீர் வல்லையின் மீண்டும் புவியெங்கும்
ஆகா நின்றீர் நுஞ்செயல் யாரே அறிகிற்பார்.

வாய்க்கப்பெற்ற அழகுடையதாய் நின்ற செய்குன்றுகள் மாளிகைகள் சோலைகள் யாவையும் இங்கு நீங்கள் வருவித்தீர்கள். இவையால் மயக்கி ஆசையூட்டிப் பின்னர் இவ்விடத்து நீர் வந்து நின்றீர்கள். உங்கள் மேல் காதலுற்ற எனை விட்டுப்போய் மறைந்துள்ளீர்கள். பின்னர் விரைவுடன் பூமி எங்குமாய் உமது வடிவாகி நிற்பீர். உங்கள் செயலை யாரால் அறியமுடியும். 47

பற்றே நும்பால் ஆயினன் முன்னம் பயில்செய்கை
அற்றேன் வேளால் ஆற்றவும் நொந்தேன் அஃதாயும்
உற்றேன் அல்லேன் உம்மொடும் இன்னும் உழல்கின்றேன்
பெற்றேன் வாளா மாய்ந்தனன் என்னும் பிழையொன்றே.

இப்போது உங்கள்மேல் நான் முழுதும் பற்றுக்கொண்டவளாகிவிட்டேன். முன்னம் நான் பயின்று வந்த தவத்தை விட்டுள்ளேன். ஐயோ! மன்மதனால் மிகவும் நொந்து போனேன். அப்படித்தான் வருந்தியும் உங்களோடு கூடும் பாக்கியத்தையாதல் பெற்றேன் இல்லை. இன்னமும் உழன்றே திரிகிறேன். இவ்வாறு உழன்று வருந்தியும் பெறப்போகும் பேறு யாதெனில் வீணாகி இறந்தேன் என்னும் ஒரு பிழையைத்தான் பெற்றேன் என்றாள். 48

நேயங் கொண்டோராமென வந்தீர் நெறிநில்லா
மாயங் கொண்டீர் வன்றிறல் கொண்டீர் மயல்செய்யுங்
காயங் கொண்டீர் ஆருயிர் நிற்கக் கருதீரேல்
ஆயங் கொண்டீர் கூற்றொடு போலுந் தனிவந்தீர்.

நீர் வரும்போது என்மீது நேசமாகி வருவீர்போல வந்தீர். உஞ்செயல் கண்டு உம்மை நம்பி நானும் அன்பானேன். ஆனால் நீவிர் ஒரு நெறியில் நில்லாத பெரு மாயங்களைக்கொண்டீர்கள். மிக மிக வலிமைகொண்டீர். நான் கண்டபொழுதே மயங்கும்படியான எழிலான மேனிகொண்டீர்கள். இத்தன்மைகளால் வருத்திய நீர் எனது உயிர் நிற்கும் மார்க்கம் ஒன்று நினையாதிருந்தால் நான் வேறென்ன உங்களைப் பற்றி எண்ணுவேனெனின் நீங்கள் எமனோடு உறவுகொண்டீர்போலும். இப்போது அவனுக்காக எனது உயிரைக் கொண்டு செல்வதற்கு நீர் வந்தீர்போலும். 49

பண்டறியேன் கூற்றென்பதனை இன்றறிந்தேன் ஏந்திழையார் மாட்டு.

வேண்டேன் வேறோர் மாதரை நும்பால் வியன்மோகம்
பூண்டேன் உம்மை மாயவ ரென்னும் பொருள்கண்டேன்
ஈண்டே சென்றீர் போல்கர வுற்றீர் எய்தீரேல்
மாண்டேன் இன்னே ஆருயிர் நிற்பான் வருவீரே.

உம்மையல்லால் நான் பிற மாதர் எவரையும் வேண்டேன். உங்கள்பால் நான் பெருமோகம் பூண்டேன். உங்களை மாயை செய்வார் என்பவராகக் கண்டுள்ளேன். இப்படிப் போவார்போலச் சென்று மறைந்துள்ளீர். அப்படி மறைவதாய் மாயம் செய்தீர். வராதிருந்தால் நான் இறந்துபோவேன். இப்போது எனது உயிர் மாளா திருப்ப நீர் இங்ஙன் வருவீராக என்றாள். 50

ஒன்றே யாகும் மாயமதால் நீருலகெல்லாம்
வென்றே செல்வீர் என்னுயிர் கொள்வான் விழைவீரேல்
நன்றே நன்றே நல்குவன் யானே நனிநண்பால்
சென்றே யோர்கால் மாமயல் தீரச் சேர்வீரே.

மாயை என்னும் பொருளுக்கு நீர் ஒன்றேயாகும்படியானீர். உமது மாயையால் உலகமெல்லாம் வென்று செல்வீர்கள். எனது உயிரைப் பெற விரும்பி ஆசைப்பட்டால் நன்று நன்று நானே அதை உங்கட்குத் தந்திடுவேன். நீங்கள் மிக நண்பாகி வந்து ஒருகால் எனது பெரிய மயக்கம் தீர என்னைக் கூடுவீராக என்றான் காசிப முனிவன். 51

என்னு வென்னு இத்தகை பன்னி இடராழித்
துன்னு மாழ்கிச் சோர்தரும் எல்லைத் துகளுரும்
மின்னுஒன்ற மாயவள் அன்னோன் விழிகாண
முன்னாய் நின்றாள் எவ்வினைகட்கு முதலானாள்.

என்று பலவான இத்தகைய வார்த்தைகளைச் சொல்லிச் சொல்லித் துயரம் என்னும் கடலில் அழுந்திச் சோர்வுற்றார் காசிபர். அப்படி அவர் சோர்வுறும் நிலையில் குற்றமற்ற மின்னல்போலும் அழகு உடைய மாயை என்பவள் காசிப முனிவன் கண்ணால் காணும்படி முன்னாக வந்து நின்றாள். எல்லா வினைகட்கும் செயலுக்கும் முதலானவள். 52

காசிபன் புலம்புறு படலம் முற்றிற்று.

## 3. அசுரர் தோற்று படலம்

கந்தார் மொய்ம்பிற் காசிபன் என்போன் கடிதங்கண்
வந்தாள் செய்கை காணுதலோடு மகிழ்வெய்தி
அந்தா உய்ந்தேன் யானென மின்கண் டலர்கின்ற
கொந்தார் கண்டல் போல்நகை யோடுங் குலவுற்றான்.

தூண்போன்ற புயங்களினை உடைய காசிப முனிவன் எனப்படுபவன் விரைவில் அங்கே முன்பாகத் தோற்றிய மாயவள் செய்கையைக் கண்டவுடன் அதோ! யான் உய்ந்தேன் என்று கூறி மின்னலைக் கண்டு அலர்கின்ற கொத்தாயமைந்த தாழை மலர்போலப் புன்சிரிப்போடும் மலர்ந்து விளங்கினான். 1

ஆடா நின்றான் குப்புற லுற்றான் அவள் தன்மேல்
பாடா நின்றான் யாக்கைபொ டிப்பிற் படர்போர்வை
மூடா நின்றான் அன்னதொர் மாயை முன்சென்றான்
வீடா நின்ற தன்னுயிர் காக்கும் விதிகொண்டான்.

கூத்தாடினான், குதித்துக் கரணம் போட்டான், அம்மாயவளைக் குறித்துப் பாடினான். மேனி முழுவதும் உரோமஞ் சிலிர்த்து புளகாங்கித போர்வை மூடப் பெற்றான். தன்முன் தோன்றிய மாயை முன்பாகச் சென்றான். அழிந்துபோகின்ற தனது உயிரைக் காக்கின்ற விதி கைகூடப்பெற்றான். 2

என்னேசெய வேண்டிற்றவை யெல்லாமிசை வாலே
முன்னேபுரி கிற்பேன் இவண் முனிகின்றதை ஒருவி
நன்னேயமொ டெனையாளுதிர் நனிவல்லேயில் என்னுப்
பொன்னேர் அடிமிசை தாழ்தலும் அவள் இன்னதுபுகல்வாள்

மாயையே! என்ன குற்றேவல் நான் உனக்குச் செய்யவேண்டுமோ அவை எல்லாவற்றையும் உனது உடன்பாட்டோடு இப்போது உனது முன்னே நான் செய்வேன். இவ்விடத்து என்னைக் கோபிப்பதை விடுத்து நல்ல நேசத்துடன் என்னை ஆட்கொண்டு இன்பத்தோடு பொருந்துப்படி விரைவாகச் செய்வீராக எனப் பொன் போலும் மிளிரும் அவள் காலில்மேல் தாழ்ந்து நிற்றலும் மாயவள் இதனைச் சொல்வாள். 3

வெருவுற்றிடல் இவணின்ற என் வியன் மெய்யினுக் கியையுந்
திருமிக்குறு தகவாகிய திறன்மேனியும் மேற்கொள்
உருவொப்பதொர் வடிவும்முடன் உடனெய்திடு வாயேல்
மருவுற்றிடு கின்றேனென மயில்சொற்றனள் அன்றே.

முனிவனே பயப்படாதே. இங்கே நிற்கும் எனது அழகிய மேனிக்கு இயைபாக பொருந்தும்படி திரு மிகுந்த அழகிய நிறமான மேனியும் மேற்சொள்ள அமைந்த உருவம், வேறு ஒப்பு ஒன்று இல்லாததாய் விளங்கும் வடிவத்தை உடன் உடனுக நீ கொள்வாயேல் உன்னை நான் கூடி மருவுவேன் என மயில்போலும் சாயல் உடைய மாயை சொன்னாள். 4

ஏமுற்றிடு முனிவர்க்கிறை இதுகேட்டலும் முன்னங்
காமக்கடல் படிகின்றவன் களிசேர்தரும் உவகை
நாமக்கட லிடை ஆழ்ந்தனன் நன்றால் இஃதென்றான்
சேமத்திரு நிதிபெற்றிடும் இரவோன்எனத் திகழ்வான்.

மாயவள் வருகையால் மகிழ்வுற்ற முனிவர்க்கெல்லாம் தலையான காசிபன் மாயவள் கூறியதைக் கேட்டலும் முன்னமே காமம் என்னும் கடலில் அழுந்தியவன் எல்லையற்ற மகிழ்வு தருகின்ற ஆனந்தம் என்னும் கடலின் இடையாக ஆழ்ந்தனனாகி மாயையே இது நன்றாகும்! என்றான். இந்நிலையில் அவன் ஒரு வறியவனவன் சிறப்புடைய புதையலாயிருந்த பெருஞ் செல்வத்தைப் பெற்றான்போல திகழ்ந்து விளங்கினான்.

பொருள் இன்மையாற் துயரமுற்றானுக்கு வருத்தமின்றி லாபத்தால் பெரும் தொகைப் பொருள் பெற்றான்போல காம வேதனையால் துயரமுற்ற காசிபர் அவள் எதிர்பட்டு உடன்பாடு கொண்டமையால் அத்துயரை ஒருங்கே நீங்கி இன்புற்றான். இதனைக் காமக் கடல் நீங்கி உவகை நாமக் கடல் அடைந்தான் எனக் கூறினார் ஆசிரியர். 5

அற்றேமொழி தருதன்மையில் ஆர்வத்தொடு தமியேன்
குற்றேவல்செய் கிற்பேன் இளங் கொடிநேரிடை யென்னுச்
சொற்றேதெவி முயல்வன்மையில் துகடீர்தரும் அனிலப்
பொற்றேரவற் கிலதென்பதொர் புத்தேள் உருக்கொண்டான்

இளமையும் அழகுமுற்ற பூங்கொடிபோலும் இடையுடையாளே! நீ சொல்லிய அவ்வாறும் தன்மையில் வடிவுகொண்டு ஆர்வத்துடன் தமியேன் உனது குற்றேவல் யாவும் செய்துவருவேன் எனக் கூறி காசிப முனிவன் உடனே மாயவள் சொல்லிய வண்ணமாகத் தன்னுடைய தவ முயற்சியின் பயனுடை வலிமையால் குற்றம் நீங்கிய தென்றல் என்னும் பொன்னை தேரை உடைய மன்மதனுக்கும் இந்த அழகு இல்லை என்னும்படியான ஓர் தேவ வடிவம் கொண்டான் காசிப முனிவன். 6

அன்றுயதொ ருருவெய்திய அறிவன்றனை வியவா
நன்றுயலுன தியல்பாமென நகையாக்கரம் பற்றுக்
குன்றாகிய முலையாள் அவற்கொடுபோந்தனள் அங்கட்
பொன்றாழ்கிரி யெனவோங்குமொர் பொலன் மண்டபம் புகுந்தாள்,

அப்பொழுதே உடன் இந்த அழகிய வடிவத்தினைக் கொண்ட அறிவுபெற்ற காசிப முனிவனை வியந்து பாராட்டி, முனிவனே! நன்றாயிருக்கிறது, இப்போது உனது இயல்பான வடிவம் எனக் கூறியவளாய் புன்சிரிப்புடன் காசிப முனிவனின் கையைப் பற்றிக்கொண்டு மலைபோலும் பருத்த முலைகளைக்கொண்ட மாயவள் அவனை அழைத்துக்கொண்டு சென்று பொன்னாலாகிய மேரு மலையைப்போல உயர்ந்திருக்கின்ற ஓர் அழகிய மண்டபத்தின் உள்ளே புகுந்தாள். 7

கற்பனை இன்றியே கடிதின் முன்னுறு
அற்புத மண்டபத் தாணை யால்வரும்
பொற்புறு சேக்கையிற் பொருந்தி னாரரோ
எற்படு கங்குலின் முதலி யாமத்தில்.

கற்பனைசெய்து ஆக்கப்படுவதில்லாமல் மாயையின் மாயச் செயலால் விரைவில் வந்திட்ட அற்புதமான மண்டபத்து மாயையின் ஆணையால் வந்திருந்த பொலிவார்ந்த சயனப்பாயலில் பொருந்தி, மாயவளும் காசிபனும் இருள் பரந்த அன்றைய இரவின் முதலாவது யாமத்தில் அணைந்து கூடினார்கள் 8

சூருறு வெம்பசி தொலைப்ப வைகலும்
ஆரஞர் எய்தினோன் அரிதின் வந்திடு
பேரமு துண்குறு பெற்றி போலவக்
காரிகை தனைமுனி கடிதிற் புல்லினான்.

கலக்கம் விளைவிக்கும் கொடிய பசிப்பிணியானது வருத்த அதனால் நித்தமும் வருத்தமுற்ற ஒருவன் மிக அரிதாக வந்திடுகின்ற சிறந்த அமிர்தத்தை உண்ணும் தன்மைபோல அப்பெண்ணான மாயையைக் காசிப முனிவன் மிக விரைவாகத் தழுவி அணைத்தான். 9

புல்லலும் எதிர்தழீஇப் புகரில் காசிபன்
தொல்லையில் உணர்வொடு தொலைவில் செய்தவம்
வல்லையில் வாங்குறு மரபில் அன்னவன்
மெல்லிதழ் அமிர்தினை மிசைதல் மேயினாள்.

காசிபன் தழுவலும் மாயவளும் எதிராகத் தானும் அவனைத் தழுவி அணைத்து நிகரற்ற தபோதனனான காசிபனின் மிக முதிய நல்லறிவுடன் தொலைவில்லாத நல்ல தவத்தையும் விரைவாக அவள் தானே வலிந்து பெற்றுக்கொள்ளும் இயல்பில் காசிப முனிவனுடைய மெல்லிய இதழ் அமிர்தத்தை அவள் உண்ணத் தொடங்கினாள் 10

பின்னுற மாயவள் பெரிதுங் காமுறும்
அன்னவன் புணர்தர அறிவ தொன்றையுந்
தொன்னெறி அளித்தெனத் தொண்டைச் சேயிதழ்
முன்னுறும் அமிர்தினை முனிக்கு நல்கினள்.

பின்பு மாயவள் பெரிதும் தன்னை விரும்பிய காசிபன், தன்னுடன் வீரெடு புணருமாறு தான் அறிந்தவொன்றையும் முன்பாசக் கொடுத்தாள் என்னும்படி தனது தொண்டையங்கனி போன்ற சிவந்த இதழில் ஊறும் அமிர்தத்தை முனிவனுக்குக் கொடுத்தாள். 11

உட்டெளி வின்றியே யுலப்பின் றோடிய
மட்டறு காமமாம் வாரி யுற்றுளான்
அட்டொளிர் பொன்னனள் அல்கு லாஞ்சுழிப்
பட்டனன் இன்பமாம் பரவை நண்ணுவான்.

உள்ளத் தெளிவு இல்லாமல் ஓயாது பெருகியோடிய கரைகாணாத காமம் என்னும் கடலில் மூழ்கினனாய்க் காய்ச்சப்பட்டு விளங்கிய பொன்போலும் மாயவளின் அல்குல் என்னும் சுழியில் அகப்பட்டு அங்கு அந்நிலையில் தோன்றும் இன்பம் என்னும் கடலில் நண்ணிப் பொருந்தினன்.

காம உணர்வு பெருகி ஓடுங்கால் உள்ளத் தெளிவு பெறாது என்பது இப் பாடலால் தெரியக்கிடக்கிறது. 12

தோமறு முனிவரன் சுரதத் தாற்றினாற்
காமரு மதன நூல் கருத்திற் சிந்தியாய்த்
தேமொழி மயிலொடு செறிந்து போகமார்
பூமியி னோரெனப் புணர்தல் மேயினான்.

குற்றங்கள் யாவும் நீங்கிய காசிப முனிவன் சுரத இன்ப வழியாகக் காம சாஸ்திரம் எனப்படும் மன்மத நூலின் விதிகளைக் கருத்தில் சிந்தித்துத் தேன் போலும் இனிமையுடன் மொழிகொண்ட மயில்போலும் சாயலுடைய மாயையுடன் கூடிப் பிணைந்து போகபூமியில் உள்ளார்களைப்போல் புணர்வானாயினான். 13

செம்மயி லன்ன இத்தெரிவை தன்னிடை
எம்மையும் இல்லதோர் இன்பம் இங்ஙனம்
மெய்ம்மையின் நல்கிய விதியி னார்க்கியான்
அம்மசெய் கின்றதோர் அளவுண் டோவென்றான்.

அவ்வாறு கூடி மகிழுங்கால் காசிபன் சொல்வான் "செப்பமான மயிலை ஒத்த இந்தப் பெண்ணானவளுடன் நான் சேர்ந்து முன் எம்மையும் அடையாத இன்பம் ஒன்றை இங்கு நான் பெறும்படி உண்மையுடன் எனக்குத் தந்துநின்ற விதியாருக்கு நான் அம்மம்மா! செய்கின்ற கைம்மாறுக்கு ஓர் அளவு உண்டோ" என்றான். 14

ஆறறி முனிவரன் அநங்க நூன்முறை
வீறொடு புணர்தலும் வெய்ய மாயவள்
கீறினள் நகத்தினாற் கீண்ட பால்தொறும்
ஊறிய காமநீர் ஒழுகிற் றென்பவே.

நல்லொழுக்கம் யாதென நன்கறிந்த முனிவன் மன்மத சாஸ்திரத்தின் நூல் முறையாக விருப்பொடு கூடுதலும் கொடிய மாயவள் தனது நகத்தால் கீறினள். கீறிய இடங்கள்தோறும் காம நீரானது சுரக்கப்பெற்று அது வழிந்தோடிப்பாய்ந்தது. 15

உணர்வுடை முனிவரன் உயர்ந்த விஞ்சையர்
மணமுறை இதுவென மாயை தன்னொடு
புணர்தொழில் புரிந்தனன் போக முற்றினன்
துணையறும் இன்பெனுங் கடலில் தோய்ந்துளான்.

நல்ல அறிவினை உடைய காசிப முனிவன் உயர்ந்த நெறியுடைய விஞ்சையர்களின் மணமுறை இதுதான் எனும்படி மாயை தன்னுடன் தான் புணர்கின்ற அத் தொழிலைப் புரிந்தனன். தனது போகத்தை முடித்தான். இணையில்லா இன்பமாகிய கடலில் தோய்ந்தவன் ஆயினன். 16

அந்த வேலையில் முகுந்தனும் அம்புயத் தவனும்
இந்தி ராதியர் யாவரும் முனிவரவர் எவருந்
தத்தம் உள்ளமேல் நடுக்குற மாயவள் தன்பால்
வந்து தோன்றினன் சூரபன்மா எனும் வலியோன்.

அவ்வாறாகிய வேளையில் மாயவள் இடத்தாக, நாராயணக் கடவுளும் தாமரை மலர் ஆசனமுடைய பிரமதேவரும் இந்திரபகவான் முதலாய கடவுளர் யாரும், முனிவர் எல்லாரும், தங்கள் தங்கள் உள்ளங்களில் நடுக்கம் கொள்ளும்படியாக வந்து தோன்றினன் சூரபன்மன் என்னும் வலிமை உடைய அரசன். 17

துயக்கம் இல்லதோர் சூரன்வந் திடுதலுந் தொல்லை
முயக்க வேலையில் இருவர்பால் முறைமுறை இழிந்த
வியர்ப்பில் வந்தனர் முப்பதி னாயிர வெள்ளம்
வயக்க டுந்திறல் தானவர் யாரினும் வலியோர்.

சோர்வு அச்சம் யாதும் இல்லாத சூரபன்மன் வந்திடுதலும் முன்னர் இருவரும் புணர்ந்த நேரத்தில் அக்காசிபன் மாயைபால் நின்றும் முறைமுறையாக வழிந்த வேர்வையில் இருந்து வந்தார்கள் முப்பதினாயிரம் வெள்ளம் என்னும் கணக்குடைய வெற்றி நிலைகூடப்பெற்ற திறமைசாலிகளான அசுரர்கள். 18

அன்னர் தம்மையும் முதலவன் தன்னையும் அங்கண்
நின்மி னீரென நிறுவியே ஆயிடை நீங்கி
மின்னு நூலணி முனியொடு மாயவள் வேறோர்
பொன்னின் மாமணி மண்டபம் அதனிடைப் புகுந்தாள்.

அவ்வாறாகிய அசுரரையும் முதல்வனான சூரனையும் அங்கு நிற்பீராக என மாயவள் கூறி நிற்பாட்டிவிட்டு அங்கு நீங்கி மின்னுகின்ற பூநூல் அணிந்த முனிவனுடன் மாயவள் வேறு ஒரு பொன்னாலான பெரிய இரத்தின மண்டபம் அதனிடை புகுந்தாள். 19

மானை நேர்பவள் ஆயிடைத் தொல்லுரு மாற்றி
மேன சூரரிப் பிணவுருக் கொள்ளலும் விரைவில்
தானு மோர்திறல் மடங்கலே றுமெனச் சமைந்தான்
மோன மாய்முனம் அருந்தவம் இயற்றிய முதல்வன்.

மானை ஒத்த வனப்புடைய மாயவள் அவ்விடத்து தனது பழைய உருவத்தை மாற்றிச் சிறந்த அச்சத்தை விளைவிக்கும் பெண் சிங்க வடிவினைக் கொள்ளவும் விரைவுடன் காசிபன் அதனை உணர்ந்து தானும் தலையாய ஓர் ஆண் சிங்கமாக உரு அமைந்தான். முன்பு மோன நிலையெய்தி அரிய தவம் ஆற்றிய காசிப முனிவன் என்னும் தலைவன். 20

மங்கை யோடவன் மடங்கலாய் மகிழ்வுடன் புணரக்
கங்குல் வாயிரண் டாகிய யாமமேற் கடிதே
அங்கை ஒரிடண் டாயிரம் ஆயிர முகமாய்ச்
சிங்க மாமுகன் தோன்றினன் திடுக்கிடத் திசைகள்.

மாயை யோடு ஆண்சிங்க வடிவுகொண்ட காசிபன் மகிழ்வுடன் புணர்தான் இராக்காலத்து இரண்டாம் சாமத்திலே. இவ்வாறு கூடிய நேரத்து விரைவாக இரண்டாயிரம் கைகளும் ஆயிரம் சிங்கமுகமும் உடைய சிங்கமுகாசுரன் என்னும் அசுரன் திக்கெல்லாம் ஏங்கித் திடுக்கிடும் படிவந்து தோன்றினன். 21

இத்தி றத்திவர் இருவரும் புணர்வுழி யாக்கை
மெத்தி வீழ்தரும் வியர்ப்பினில் விறல்அரி முகராய்ப்
பத்து நால்வகை ஆயிர வெள்ளமாம் படைஞர்
கொத்தி னோடுவந் துதித்தனர் கூற்றுயிர் குடிப்பார்.

பெண்சிங்கமாயும் ஆண்சிங்கமாயும் மாயை காசிபனாகிய இருவரும் புணர்ந்த நேரத்து அவர்கள் உடலத்திருந்து வேர்வைகள் மெத்தி வீழ்ந்தன. அந்த வேர்வைகளில் வலிவுடை சிங்கமுகமுடையராகிய நாற்பதினாயிரம் வெள்ளம் என்னும் கணக்குடைய அசுரர்கள் சேனைகளாகிய கூட்டமாய் வந்து உதித்தார்கள். இந்த அசுரர்கள் யமனுடைய உயிரையும் குடிக்கும் படியான வலு உடையர். 22

மற்றும் அத்தொகை யோரையும் மாமகன் றனையும்
நின்றிர் ஈண்டென மாயவள் வீற்றொரு நிலயந்
தெற்றெ னப்புகுந் தோர்பிடி உருக்கொடு சேரக்
கொற்ற மால்களிற் றுருவினை முனிவனுங் கொண்டான்.

அப்போது அங்குதோன்றிய மற்றும் அத்தொகையோரையும் பெரியமகனை சிங்கனையும் இங்கு நில்லுங்கள் என மாயவள் அவர்களை நிறுத்தி விட்டு வேறொரு மண்டபத்தில் தீடிரென பிரவேசித்து ஓர் பெண் யானை வடிவுடன் தோன்ற அப்போது காசிபன் வீரமுடைய மதம் பொழியும் ஆண்யானை வடிவு எடுத்துக் கொண்டான். 23

பேரு மும்மத மால்களிற் றுருக்கொடு பிடிமேல்
சேரு கின்றுழி மூன்றெனச் செல்லும்யா மத்தில்
ஈரி ரண்டுவாள் எயிற்றுடன் யானைமா முகத்துத்
தார காசுரன் தோன்றினன் அவுணர்கள் தழைப்ப

மும்மதம் பெருகும் ஆண்யானை வடிவுகொண்டு பெண்யானை மேலாகச் சேருகின்றபோது மூன்றாவது யாமத்தில் ஒளியுடைய நான்கு தந்தங்கள் கொண்ட யானை முகத்துடன் தாரகன் என்பான், அசுரர் குலம் தழைக்கும் படி வந்து தோன்றினன். 24

ஏனும் அங்கவர் மெய்ப்படு வியர்ப்பினும் இபத்தின்
கோல மானவர் தோன்றினர் அவர்குழுக் குணிக்கின்
நாலு பத்தின்மேல் ஆயிர வெள்ளமா நவின்றார்
மூல நாடியே இப்பரி சுணர்த்திய முனிவர்.

கூடிப் பொருந்திய இவர்களுடைய மேனியில் தோன்றிய வியர்ப் பினில் யானையின் கோலமுடைய வீரர்கள் தோன்றினார்கள். அந்த அசுரர் கூட்டம் எவ்வளவு தொகைப்பட்டது எனக் கணக்கிட்டால் நாற்பது ஆயிரம் வெள்ளத்தின் மேலும் ஆயிரம் வெள்ளமாக இருந்தது என இது கணக்கெடுத்த முனிவர்கள் இதன் மூலத்தை நாடிச் சொல்லியிருக்கிறார்கள். முன்னே முனிவர்கள் அருளால் உணர்ந்து அவர்கள் இக்கணக்குகளை உலகில் சொல்லும்போது தாம் கண்ட காட்சியை விரித்துரைப்பவராகச் சொன்னார்கள் என்ப, 25

ஆண்டு தாரகன் தன்னையும் அவுணர்கள் தமையும்
ஈண்டு நிற்றிரென் றோர்மணி மண்டபத் திருந்து
மாண்ட யாமமேல் தகர்ப்பிணு உருக்கொள மாயை
பூண்ட அன்பினன் செச்சையின் உருக்கொடு புணர்ந்தான்.

அவ்விடத்து தாரகன் தன்னையும் அசுரர்கள் தன்னையும் இங்கே நில்லுங்கள் எனக்கூறி நிற்பாட்டிவிட்டு பின்னர் ஓர் இரத்தின மண்டபத்து சென்றாள் மாயவள் காசிபனுடன். அங்குமாண்பான நான்காவது யாமத்தில் மாயவள் மறி ஆட்டின் உருவங்கொள்ள அவள்மேல் அன்புபூண்ட காசிபன் சிவந்த ஆட்டுகடாவடிவு கொண்டு புணர்ந்து கூடினான். 26

புணர்ந்த காலையில் அசமுகி தோன்றினள் புவியோர்க்
கணங்கு செய்தகர் முகவராய் அங்கவர் வியர்ப்பில்
கணங்கொள் முப்பதி னாயிர வெள்ளமாங் கணிதத்
திணங்கு தானவர் உதித்தனர் இமையவர் கலங்க,

இவ்வாறு புணர்ந்த காலையில் அசமுகி தோன்றினாள். அப்போது இப்பூமியில் உள்ளார்க்கு அச்சம் செய்விக்கும் ஆட்டின் முகமுடையார்களாய் அங்கு மாயவள் காசிபனுடைய வியர்வையில் இருந்து முப்பதினாயிரம் வெள்ளம் என்னும் கணக்குக் கொண்ட துயர் விளைக்கும் அசுரர்கள் வந்து உதித்தார்கள் தேவர்கள் கலங்க. 27

மீள மற்றவர் தம்மையும் நிறுவிவே றுள்ள
சூளி கைப்பெரு மண்டபந் தொறுந்தொறும் ஏகி
யாளி வல்லியம் புரவிமான் ஓரிஎண் கேனங்
கூனி ஆதியாம் விலங்கின துருவெலாங் கொண்டார்.

மீண்டும் அவர் தங்களையும் அங்கே நிறுத்திவிட்டு வேறாக அங்கு உள்ள தூபிகைகளை உடையபெருமண்டபங்கள் தோறும் மாயவனும் காசிபனும் சென்று யாளி, புலி குதிரை, மான், நரி, கரடி, பன்றி, காட்டுமாடு, முதலிய விலங்குகளின் உருவங்கள் யாவும் கொண்டார்கள். 28

இறுதி யில்லதோர் விலங்கின துருவுகொண் டிரவின்
புறம தாகிய புலரிசேர் வைகறைப் பொழுதின்
முறையின் மாயையும் முனிவனும் ஆகியே முயங்கி
அறுப தாயிர வெள்ளமாம் அவுணரை அளித்தார்.

முடிவு இல்லாத இந்த விலங்குகளின் உருவங்களைக் கொண்டு இரவின் பிற்பகுதியான விடியற்காலம் என்னும் வைகறைப் பொழுதிலே முறையாக மாயவளும் காசிபனும் ஆகிய இருவரும் கூடி அறுபதாயிரம் வெள்ளம் அசுரர்களைப் பெற்றுர்கள் 29

மிகுதி கொண்டிடும் இரண்டுநூ றுயிர வெள்ளத்
தருவர் தம்மையுஞ் சூரனே முதலினேர் தமையும்
புகலும் ஓரிராப் பொழுதினில் அளித்ததற் புதமோ
ஆகில மும்வல மாயவட் கிச்செயல் அரிதோ,

பெரும் தொகையாய் விளங்கும் இரண்டு இலக்கம் வெள்ளம் அசுரர்களையும் சூரன், சிங்கன், தாரகன் முதலியோர்களையும் ஒரு இராப்பொழுது எனச் சொல்லப் பெறும் அளவையில் மாயவள் உண்டாக்கியது அற்புதமா! இல்லை. ஏனெனில் எல்லா உலகையும் தரவல்ல மாயவளுக்கு இச்செயல் அரிதோ? 30

ஆங்க வெல்லையின் ஆண்டமா யிரத்தெட்டின் உள்ளுந்
தீங்கு கொண்டிடு குறிகளுள் ளனவெலாஞ் செறிந்து
நீங்க லின்றியே நிகழ்வன நீர்மைகண் டெவரும்
ஏங்கு கின்றனர் விளைவதென் னேவென இரங்கி,

ஆங்கு அவ்வாருகிய நேரத்து அண்டங்கள் ஆயிரத்தெட்டினுள்ளும் தீங்குகொண்ட சகுனமெல்லாம் நீங்குதல் இல்லாமல் எங்கும் நிகழ்கின்றன. இந்த நீர்மையைக்கண்டு இதனல் என்னதான் விளையப் போகிறதோ எனக் கவலையும் இரக்கமும் கொண்டு யாவரும் ஏங்குகின்றனர். 31

அல்லெ னும்பொழு திறத்தலும் மாயவ ளரிவைத்
தொல்லை நல்லுருக் கோடலும் முனியும்அத் துணையே
வல்லை தன்னுரு முன்னையிற் கொண்டனன் மற்றவ்
வெல்லை தன்னிடை உதயவாய் அணுகினன் இரவி.

இரவு என்னும் காலம் நீங்கி விடுதலும் மாயவள் தனது பழைய நல்லபெண் வடிவத்தைக் கொள்ளலும் காசிபமுனிவனும் அந்நிலையில் விரைவாக தனது முன்னைய உருவத்தைக் கொண்டான். மற்றதாகிய வேளையில் உதய மலையினிடத்தாக சூரிய தேவன் அணுகித் தோன்றினன். 32

நிட்டைக் கேற்றிடு முனிவனை மாயவள் நிசியில்
விட்டுப் போந்திலள் அற்புதம் என்விளைந் ததுவோ
கிட்டிக் காண்பன்என் றுதயமாங் கிரிப்புறத் தணுகி
எட்டிப் பார்த்தனன் என்னவே உதித்தனன் இரவி.

பூரணமான நீட்டை கைகூடப் பெற்றமுனிவனை மாயவள் இரவுவேளையாயும் விட்டுப் போகவில்லை. என்ன விபரீதம் விளைந்ததோ, அதைநான் கிட்டிச் சென்று பார்ப்பேன் என எண்ணங்கொண்டு உதயமலையின் பினபுறமாக வந்து எட்டிப் பார்த்தனன் என்னும் தன்மைபொருந்த சூரியதேவன் உதயமாகினன். 33

எல்லைவந் திடுதலும் ஈன்ற மாயவள் செல்லுறும் அப்புவி செறிந்து சேணினுஞ்
சொல்லிய திசையினுந் துவன்றி யாத்திடும் ஒல்லெனுஞ் சனத்தினை உவந்து நோக்கினள்.

சூரியன் உதித்து வந்திடுதலும் அசுரரை பெற்ற மாயவள் தான்சென்ற இடத்தில் நெருங்கியும் அந்த இடம்போதாமையால் வானத்திலும் சொல்லப்பெறும் ஏனைய திக்குகளிலும் நெருங்கிப் பரந்து ஆரவாரிக்கின்ற 'ஒல்'' எனும் ஓசை உடைய அசுரரான சனத்தினை மகிழ்வுடன் நோக்கினள். 34

விண்டுறு தானவர் வெள்ளம் யாவையுங் கண்டனன் எந்தைதன் கருமம் இச்செயல்
கொண்டில மாயையிற் கூடிற் றீதெனு அண்டரும் அற்புதம் அடைகுற் றுன்முனி.

பரந்து விளங்கும் அசுரவெள்ளம் யாவையும் காசிபமுனிவன் கண்டு சொல்கிறுன் எனது தந்தையாகிய பிரமதேவரினுல் இவர்கள் படைக்கப்பட்டவர் அல்ல. ஈது மாயை என்பவளால் நிறைவேறியது என அளவிடற்கரிய அற்புதநிலை எய்தினுன் காசிபன். 35

பற்பகல் அருந்தவம் பயின்ற தூயனும் பொற்புறு மாயையும் புதல்வர் தந்தொகை
அற்புத மோடுகண் டன்பின் நிரராய் நிற்புழித் தெரிந்தனன்நேரில் சூரனே.

பலநாளாக அரியதவத்தை புரிந்திருந்த தூயகாசிபமுனிவனும் அழகிய எழிலுடைய மாயவளும் புதல்வரான அசுரர்தொகையினை ஆச்சரியத்துடன் கண்டு அன்பாகி நிற்குங்கால் நேரொருவர் பிறிதிலாச் சூரன் அதை தெரிந்து கொண்டான். 36

இருமுது குரவரும் ஈண்டுற் றுரவர் திருவடி வணங்கியாஞ் செய்தி றத்தினை
மரபொடு வினவுதும் வம்மின் நீரெனு அரிமுகன் தாரகன் அறியக் கூறினுன்.

தாரகனையும் சிங்கமுகனையும் நோக்கி ''எங்களது முதல்வர்களான தாயும் தந்தையுமாகும் இருவரும் இவ்விடத்து காணப்படுவார்கள். அவர்கள் திருவடிகளை நாங்கள் சென்று வணங்கி நாம் மேல் கொண்டு செய்ய வேண்டிய கருமங்களை அவர்களிடம் கேட்டறிவோம்'' வாருங்கள் என அவர் உணரும்படி கூறினுன் சூரன். 37

அறைகழல் இளையவர் அதனைத் தேர்வுறீஇ உறுதியி தாமென வுரைத்துப் பின்வரத்
துறுமல்கொண் டிருந்ததன் தொல்ப தாதியை நிறுவினன் அவ்விடை நின்று நீங்கினுன்,

ஒலி செய்யும் வீரக்கழலை அணிந்த காலுடைய தாரகன் சிங்கன் ஆகிய இருவரும் அதனை உணர்ந்து அதுதான் எமக்கு உறுதியான செயல் என அவர்களும் கூறி சூரன் பின்னுல் புறப்பட்டுவர சூரனுனவன் தன்னுடைய நெருக்கம் கொண்டு நின்ற தனது பெரிய சேனையை அவ்விடத்து நிறுத்தி விட்டு தம்பியரோடும் அவ்விடத்தை விட்டு நீங்கினுன். 38

அசுரர் தோற்று படலம் முற்றிற்று,

## 4. காசிபனுபதேசப் படலம்

நீங்கிய சூர் முதல் நெறியின் ஏகியே ஆங்கவர் அடிதொழு தருள்செய் மேலையீர்
யாங்கள்செய் கின்றதென் இசைமின் நீரென ஓங்கிய காசிபன் உரைத்தல் மேயினுன்.

நின்றவிடத்தை விட்டு நீங்கியவனுன சூரபன்மன் என்னும் தலைவன் முறையாகத் தம்பியருடன் தந்தை தாய்பாற் சென்று ஆங்கே அவர்களுடைய அடிகளைத் தொழுது சொல்வான். எம்மைப் பெற்றருளிய முன்னையீர்! யாங்கள் மேலாகி இனிச் செய்வது எதுவாகும். இதை எங்களுச்குச் சொல்வீர்கள் என தவத்தால் மேலோங்கிய காசிப முனிவன் சொல்லத் தொடங்குவான். 1

உறுதிய தொன்றினை உணர்த்து கின்றனன் அறைகழல் மைந்தர்காள் அரிய மாதவ
நெறிதனில்மூவிரும் நிற்றிர் அன்னதன் முறைதனை வாய்மையான் மொழிவன் கேண்மினே

உங்களுக்கு யான் உறுதியான பொருள் ஒன்றினை இப்போது உணர்த்தப் போகிறேன். அதுதான் ஒலிக்கின்ற கழல் அணிந்த எனது அருமை மைந்தர்களே! நீங்கள் மூவீரும் மிக அருமையான தவ நெறியின்கண் பற்றுஇ நில்லுங்கள். அந்தத் தவ நெறியின் முறையினை உண்மையாக யான் எடுத்துச் சொல்வேன். நீங்கள் கேட்பீராக. 2

சான்றவர் ஆய்ந்திடத் தக்க வாம்பொருள் மூன்றுளமறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த்தொகை வான்றிகழ் தளையென வகுப்பர் அன்னவே.

பெரியோர்களாலே இங்கு ஆராயத்தக்கவான பொருள் மூன்றுள்ளது, அவை யைத்தான் வேதங்கள் யாவும் சொல்லிநிற்பன. அவைகளாவன மிகச் சிறப்புடைய முன்னைப்பொருளான பதி கடவுள், நிறைந்த ஆன்மாக்கள் பெருமையுடனும் வலியுட னும் திகழும் பாசம் என மூன்ருக வகுத்துச் சொல்வார்கள். 3

அளித்திடல் காத்திடல் அடுதல்மெய்யுணர் ஒளித்திடல் பேரருள் உதவ லேயெனக்
கிளத்திடு செயல்புரி கின்ற நீலமார் களத்தினன் பதியது கழறும் வேதமே.

படைத்தலும், காத்தலும், சங்கரித்தழித்தலும், உண்மையான உணர்வை மறைத்தலும், பேரருள் வழங்குதலும் ஆகச் சொல்லப்பெறும் ஐந்து தொழிலையும் புரியும் நீல நிறத்துடன் விளங்கும் கண்டமுடைய சிவனே பதியாகும். அதனை வேதங்கள் சொல்லும்.

பதியாவான் நீலமான கண்டமுடைய சிவன் என வேதங்கள் அறியப்படா ததை அறிவுற, அன்றும் இன்றும் என்றும் கூறின எனலால் கழறும் வேதம் எனக் கூறினர். 4

பற்றிகல் இல்லதோர் பரமன்நீர்மையை இற்றென உரைப்பரி தெவர்க்கும் என்பரால்
சொற்றிடும் வேதமுந் துணிகிலா அவன் பெற்றியை இனைத்தெனப் பேச வறில்லமோ.

விருப்பும் வெறுப்பும் அற்றவனுகிய பரமனின் இயல்பை இப்படியானவன் இவ் வண்ணத்தன் என எவராலும் உரைக்கமுடியாது எனப் பெரியோர் சொல்லு வார்கள். சிவனது பெருமையே சொல்லி நிற்கும் வேதங்கள் தானும் அவர் இயல்பை இப்படித்தான் எனத் துணியமாட்டாது இன்னமுமே தேடிநிற்பன. ஆகையால் பகவானுடைய பெருமையை இப்படித்தான் என நாம் பேச வல்லமை உடையமோ? 5

மூவகை யெனுந்தளை மூழ்கி யுற்றிடும் ஆவிகள் உலப்பில அநாதி யுள்ளன
தீவினை நல்வினைத் திறத்தின் வன்மையால் ஓவற முறைமுறை உதித்து மாயுமே.

ஆகாமியம், பிராரத்துவம், சஞ்சிதம் என்னும் மூவகைத் தொடர்பாலும் வரும் பாசங்களில் மூழ்கிப் பொருந்திய ஆன்மாக்கள் அளவுகடந்தன. இவை அநாதி யாக உள்ளன. தாங்கள் தாங்கள் செய்யப்பெறுகின்ற தீவினை நல்வினை ஆகிய செயல்களுக்கேற்ப அவ்வினைகளின் வலியால் ஓயாது முறை முறையாகவந்து பிறந்து பின்னர் மாய்ந்துபோகும். 6

பாரிடை உதித்திடும் பாரைச் சூழ்தரு நீரிடை யுதித்திடும் நெருப்பில் வாயுவில்
சீருடை விசும்பிடைச் சேரும் அன்னவைக் கோரிடை நிலையென உரைக்கற் பாலதோ.

இந்த ஆன்மாக்களில் சில பூமியில் பிறக்கும். பூமியைச் சூழ்கின்ற நீரிலே பிறக்கும். நெருப்பில் உதிக்கும். காற்றில் பிறக்கும். சிறப்புடைய ஆகாயம் என் னும் வானத்தில் சேர்ந்து பிறக்கும். இந்த ஆன்மாக்கள் பிறப்பதற்கு ஓரிடம்தான் நிலையானது என நாம் சொல்லமுடியுமோ ? 7

மக்களாம் விலங்குமாம் மாசில் வானிடை புக்குலாம் பறவையாம் புல்லு மாம்அதில்
மிக்கதா வரமுமாம் விலங்கல் தானுமாந் திக்கெலாம் இறைபுரி தேவும் யாவுமாம்.

இந்த ஆன்மாககள் மானுடராகப் பிறக்கும். மிருகமாகப் பிறக்கும். களங்க மற்ற வானத்தில் புகுந்து பறந்து திரியும் பறவைகளுமாகப் பிறக்கும். புல்லாகவும்

பிறக்கும். அவற்றின்மேலான மரம் முதலிய தாவரங்களாகவும் பிறக்கும். மலையாக வும் பிறக்கும். எல்லாத் திக்கிலும் அரசுசெய்கின்ற தேவர்கள் யாவராகவும் பிறக்கும். ''புல்லாகி, பூடாகி, புழுவாய், மரமாகி, பல்மிருகமாகிப், பறவையாய், பாம் பாகி, கல்லாய், மனிதராய், பேயாய்க் கணங்களாய் சொல்ல நின்ற இத்தாவரசங்க மத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்து'' எனவரும் மணிவாசகர் வாக்கும் ஒப்பநோக்குக. 8

பிறந்திடு முன்செலும் பிறந்தபின்னர் மெய் துறந்திடுஞ் சிலபகல் இருந்து துஞ்சுமால்
சிறந்திடு காளையிற் தேயும் மூப்பினில் இறந்திடும் அதன்பரி சியம்ப லாகுமோ.

சில உயிர்கள் பிறப்பதற்கு முன்னுக கருவிலே இறந்திடும். பிறந்த உடனும் இறந்திடும். பிறந்து சில நாட்கள் வரையில் இருந்து பின்னர் இறக்கும். சிறப்புப் பொருந்திய இளந்தாரியாகவும் இறக்கும். கிழப்பருவம் அடைந்ததும் இறக்கும். ஆகவே பிறக்கும் அந்த உயிர்கள் எப்படி எந்நாள் இறக்கும் என நிச்சயித்து சொல்லலாமோ? முடியாது. 9

சுற்றுறு கதிரெழு துகளி னும்பல பெற்றுள என்பதும் பேதை நீரதால்
கொற்றம துடையதோர் கூற்றங் கைக்கொள இற்றவும் பிறந்தவும் எண்ணற் பாலவோ.

சூரியதேவன் உதயமாகின்றபோது தோற்றமாகி எழும் கிரகணங்களில் காணும் துகள்களினும் பார்க்க பலதொகையான எண்ணிக்கை கொண்டுள்ளன இங்கு இயமனுற் பற்றப்பட இறந்த உயிர்களும் பின்னர் பிறந்த உயிர்களின் எண்ணிக்கைகள் என்று சொன்னாலும் அது எங்களது அறியாமையைப் புலப்படுத்தும் என்றால் இறக்கின்ற பிறக்கின்ற உயிர்களின் தொகை எண்ணமுடியாது. 10

கலைபடும் உணர்ச்சியுங் கற்பும் வீரமும் மலைபடு வெறுக்கையும் வலியும் மற்றது
மலைபடு புற்புத மாகும் அன்னவை நிலைபடு பொருளென நினைக்க லாகுமோ.

நூல்களைக் கற்றதினால் வரும் உணர்ச்சியும், மனத்திடசங்கற்பங்களும், வீரமும் மலைபோல் தேட்டத்தால் குவிந்த செல்வமும், வலிமையும், யாவும் அலைந்து கொண் டிருக்கும் நீர்க்குமிழிபோலாவன. ஆகையால் நீர்க்குமிழி போல் அழியும் இவையாவும் ஓர் உயிருக்கு நிலையான பொருள் என நினைக்க முடியுமோ? ஆகாது. 11

தருமமென் றொருபொருள் உளது தாவிலா இருமையின் இன்பமும் எளிதின் ஆக்குமால்
அருமையில்வரும்பொருளாகும் அன்னதுப் ஒருமையி னோர்க்கலால் உணர்தற்கொண்ணுமோ

ஆகையால்தருமம் என்று சொல்லப் பெறும் ஒருபொருள் இருக்கின்றது. அப் பொருள் அழிவில்லா இயல்புடையதாகி இப்பிறவியிலும் இது நீங்கிய மறுமைக்கும் இன்பத்தை இலகுவாக தரும்படியாயது. அதுதான் அருமையாகக் கிடைக்கத்தக்க பொருளாகும். தருமம் தான் மேலாகிய பொருள் என்பதையும் ஒருவழிப்பட்ட மன முடையார்க்கு அன்றி ஏனையோரால் அது உணர முடியாது. 12

தருமமே போற்றிடின் அன்பு சார்ந்திடும் அருளெனுங் குழவியும் அணையும் ஆங்கவை
வருவழித் தவமெனும் மாட்சி எய்துமேல் தெருளுறும் அவ்வுயிர் சிவனைச் சேருமால்.

தருமத்தைச் செய்தவழி அன்பு வந்து சேரும். அன்பு பெருகியவழி அங்கு அருள் என்னும் குழந்தையும் தோற்றும். எனவே அருள் பெருக்கம் தோன்றும். ஆங்கு அறனும் அன்பும் அருளும் வரும் வழியாக தவம் என்னும் உயர்வான நிலை கைகூடும். அறமும் அன்பும் அருளும் தவமும் கைகூடிய வழி உள்ளத்தெளிவு கொண்டு அந்த ஆன்மா முடிவில்லா இன்பமான சிவனைச் சேரும் என்றார் காசிபர். 13

சேர்ந்துழிப் பிறவியுந் தொன்மையாய்ச் சார்ந்திடு மூவகைத் தளையும் நீங்கிடும்
பேர்ந்திடல் அரியதோர் பேரின் பந்தனை ஆர்த்திடும் அதன்பரி சறைதற் கேயுமோ.

சிவபிரானை ஆன்மா அடையப்பெறின் பிறவி என்னும் பிணியும் தீரும். தொன்று தொட்டு ஆன்மாவைச் சார்ந்து நிற்கின்ற ஆகாமியம், பிராத்துவம், சஞ்சித மாகிய வினையான மூவகைக் கட்டுகளும் நீங்கும். இவைகள் நீங்கியவழி ஆன்மா வானது நீங்குதற்கரியதான பேரின்பத்தைச் சார்ந்திடும். அப்பேரின்ப விளைவின் நிலையினை இவ்வாறென நாம் எடுத்துப்பேசும் தன்மை உடையதோ? அன்று. 14

ஆற்றலை யுளதுமா தவம தன்றியே வீற்றுமொன் றுளதென விளம்ப லாகுமோ
சாற்றருஞ் சிவகதி தனையும் நல்குமால் போற்றிடின் அனையதே போற்றல் வேண்டுமால்.

ஆகையால் உலகில் எல்லாவற்றிலும் மிக ஆற்றல்பெற்றது பெரிய தவமே அன்றி வேறொரு பொருள் இன்னும் இருப்பதென யாராலும் எடுத்துப்பேசலாமோ? சொல்லற்கரிய பேரின்ப நிலையான சிவ கதியையும் தவமே தந்து நிற்றலால், நாம் பக்குவமாகப் பேணவேண்டியது ஒன்று உண்டானல் தவத்தையே அவ்வாறு பேண வேண்டும் என்ருன். 15

அத்தவம் பிறவியை அகற்றி மேதகு முத்தியை நல்கியே முதன்மை யாக்குறும்
இத்துணை யன்றியே யிம்மை இன்பமும் உய்த்திடும் உளந்தனில் உன்னுந் தன்மையே.

அவ்வாருகிய தவம் பிறவியை நீக்கி மேன்மையான முத்தியின்பத்தைக் கொடுத்து ஒருவரை முதன்மையான நிலையில் வைக்கும். இதுவன்றி அத்தவம் ஒருவர்க்கு இப்பிறவியில் பெறவேண்டிய இன்பமும் கொடுத்து அவர் சித்தத்துள் நினைத்தவெல்லாம் கைகூடும்படி கொடுக்கும். 16

ஆதலிற் பற்பகல் அருமை யாற்புரி மாதவம் இம்மையும் மறுமை யுந்தரும்
ஏதுவ தாகுமால் இருமை யும்பெறல் ஆதியம் பகவன தருளின் வண்ணமே.

ஆதலினல் பல நாட்கள் அருமையாகப் புரிகின்ற மாதவம் இப்பிறவியிலே இன்பமும் அதுவன்றி மறுமைக்கும் இன்பத்தைக் கொடுக்கும் காரணமாக இருக்கின்றது. அந்தத் தவமானது இம்மை மறுமை இன்பங்களைக் கொடுத்துநிற்பது ஆதியான ஈசன் அருளின் வண்ணமாகக் கிடைக்கும் என்பதை உணர்வீராக. 17

ஒருமைகொள் மாதவம் உழந்து பின்முறை அருமைகொள் வீடுபே றடைந்து ளோர்சிலர்
திருமைகொள் இன்பினிற் சேர்கின் றோர்சிலர் இருமையும் ஒருவரே எய்தி னோர்சிலர்.

மன ஒருமைப்பாடு கொண்ட தவத்தை அரிதாகச் செய்து பின்னர் அருமை கொண்ட முத்தியின்பத்தை அடைந்துள்ளார் சிலர். மேலான பெரிய செல்வ போகங்களைப் பெற்று விளங்குவோர் சிலர். முத்தியும் போகமும் ஒருவரே பெற்றுக் கொள்வோர் சிலர். 18

ஆற்றலில் தம்முடல் அலசப் பற்பகல் நோற்றவர் அல்லரோ நுவலல் வேண்டுமோ
தேற்றுகி லீர்கொலோ தேவ ராகியே மேற்றிகழ் பதந்தொறும் மேவுற் றோர்எலாம்.

மக்களே! இதை நீங்களே தெரிந்துகொள்ளுங்கள். நான் சொல்லவும் வேண்டுமோ! எதுவாகில் பல நாட்கள் தவம் செய்தலினல் தங்கள் உடல் வாடினலும், தாங்கள் சஞ்சலமடையாது உறுதியுடன் தவஞ் செய்தவரல்லவோ தேவர்களாக இப்பொழுது மேலாகித் திகழும் வான உலக பதம் தோறும் வீற்றிருப்பவர்களானவர். 19

பத்திமை நெறியொடு பயிற்றி மாதவ முத்திபெற் றரனடி முன்னுற் றோர்தமை
இத்துணை யெனல்அரி திருமை யும்பெறு மெய்த்தவர் மாலொடு விரிஞ்ச னாதியோர்.

இறைவன்மீது பத்திமையான ஒழுக்கம்பூண்டு தவம்செய்து அதன் பயனால் முத்திபெற்று சிவபிரான் திருவடிகளை அடைந்தோர்தமை இத்தன்மை உடையர் என அவரது பெருமையையோ அல்லது தொகையையோ கணித்தல் அரிதாகும். இப்பால் மக்களே முத்தியும் போகமும் ஆகிய இரண்டினையும் பெறுபவரான உண்மைத் தபோதனர்கள் பிரமதேவன் நாராயணக் கடவுள் ஆகியோர்கள் என அறிவீராக. 20

பல்லுயிர் தன்னையும் மாய்த்துப் பாரினுக் கல்லல்செய் தருந்தவம் ஆற்றி டாதவர்க்
கில்லையே இருமையும் இன்பம், ஆங்கவர் சொல்லரும் பிறவியுள் துன்பத் தாழுவார்.

பிள்ளைகளே! அதுவன்றி, பல உயிர்களையும் கொன்று, பூமியில் வாழ்வார்க்குத் துன்பம் செய்து, செய்தற்கரிய தவத்தைச் செய்திடாதவற்கு இம்மை மறுமையாகிய இருவகைப் பிறப்பிலேயும் சுகம் இன்பம் அடையமாட்டார்கள். ஆங்கு இவர்கள் எல்லாம் கணக்கிட்டுச் சொல்ல முடியாத பிறவிகளை எடுத்துத் துன்பத்தில் ஆழ்ந்து சங்கடப்படுவர்கள். 21

அறிந்திவை உரைப்பினும் அவனி மாக்கள் தாம் மறங்கொலை களவொடு மயக்கம் நீங்கலர்
துறந்திடு கின்றிலர் துன்பம் அற்றிலர் பிறந்தனர் இறந்தனர் முத்தி பெற்றிலார்.

இவற்றையெல்லாம் உண்மையெனக் கண்டு பெரியோர்கள் இதைச் சொன்னாலும், பூமியில் வாழும் மனிதர்கள் கொடுமையான கொலை, களவு, இவற்றுடனாக வைத்துச் சொல்லப்படும் ஏனைய பாதகச் செயல்களைச் செய்யும் மயக்க நிலை நீங்கார்கள். பாவச்செயல்களை நீக்குவதற்கான துறவி மார்க்கத்தைக் கொள்ளார்கள். பிறந்தார், இறந்தார், ஆகினரொழிய முத்திபெற்றிலர். 22

தவந்தனின் மிக்கதொன் றில்லை தாவில்சீர்த் தவந்தனை நேர்வது தானும் இல்லையால்
தவந்தனின் அரியதொன் றில்லை சாற்றிடில் தவந்தனக் கொப்பது தவம தாகுமே.

மக்களே! தவம்தனில் மிக்கதானது யாதொன்றும் இல்லை. குறைவிலாத சீருடைய தவத்திற்கு சமமாவதும் வேறில்லை. தவத்திலும் பார்க்க அரியதான செயலும் வேறு இல்லை. தவத்திற்கு ஒப்பாவது தவமேயாகும். 23

ஆதலின் மைந்தர்காள் அறத்தை ஆற்றுதிர் தீதினை விலக்குதிர் சிவனை உன்னியே
மாதவம் புரிகுதிர் மற்ற தன்றியே ஏதுள தொருசெயல் இயற்றத் தக்கதே.

ஆனமையின் மைந்தர்களே! தருமத்தைச் செய்யுங்கள். தீமைகளை நீக்குங்கள். சிவபிரானை நினைந்து தவம் செய்யுங்கள். இதுவேயல்லாமல் இவ்வுலகத்து வேறு ஏது ஒரு செயல் செய்யத்தக்கதாக இருப்பது தவம் ஒன்றே தான். 24

உடம்பினை ஒறுத்துநோற்பார் உலகெலாம் வியப்பவாழ்வர்
அடைந்தவர்க் காப்பர் ஒல்லார்க் கழிவுசெய்திடுவர் வெஃகும்
நெடும்பொருள் பலவுங் கொள்வர் நித்தராய் உறைவர் ஈது
திடம்பட உமக்கோர் காதை செப்புவன் என்று சொல்வான்,

உடம்பை ஒறுத்து தவம் செய்வார் உலகமெல்லாம் அதிசயத்துடன் பாராட்ட வாழ்வார். தன்னை அண்டினாரைக் காப்பராவர். பகைவர்க்கு அழிவு செய்திடுவர். தாம் விரும்பும் எப்பொருளையும் பெறுவார். அழிவின்றி நித்தராகவும் வாழ்ந்திருப்பார். இது உறுதி என் பிள்ளைகளே! நீங்கள் இது திடம்பெறுமாறு உங்கட்கு ஒரு கதை சொல்வேன் என காசிபமுனிவர் மேலும் சொல்லத் தொடங்குவார். 25

காசிபனுபதேசப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 201

# 5. மார்க்கண்டேயப் படலம்

**நச்சக அமிர்தம் அன்ன நங்கையர் நாட்ட வைவேல்**
**தைச்சக மயக்கல் செய்யாத் தடுப்பருந் தவத்தின் மிக்கான்**
**இச்சகம் புகழு கின்ற இருபிறப் பாளர் கோமான்**
**குச்சகன் என்னும் பேரோன் கொடிமதிற் கடகம் வாழ்வோன்.**

நஞ்சு உள்ளே பொருந்திய அமிர்தத்தைப்போலும் பெண்களது கண்ணுகிய கூரிய வேலானது தைத்து உள்ளத்தை மயக்கம் செய்ய முடியாதவண்ணம், எந் நிலையாலும் தடுக்கமுடியாத வலிமையான தவத்தில் மிக்கவராக ஒரு முனிவனிருந் தான். அவன் இப்பூமியுள்ளாரால் புகழப்படுகின்ற இரு பிறப்பாளர் என்னும் சிறப்பினையுடைய அந்தணர்களுக்குள் மேப்பாட்டுடன் கூடிய தலைவனுவான். குச்சகன் என்னும் பெயரினையுடையவன். கொடிகள் நாட்டிய மதில்சூழும் கடகம் என்னும் ஊரில் வாழ்பவன். 1

**அவற்கொரு புதல்வன் உண்டால் அருமறை பயின்ற நாவான்**
**கவுச்சிகன் என்னும் பேரோன் கரையொரு சிறிதுங் காணுப்**
**பவக்கடல் கடக்கும் ஆற்ருற் பராபர முதல்வற் போற்றித்**
**தவத்தினை இழைப்ப ஆங்கோர் தண்புனல் தடாகஞ் சார்ந்தான்.**

அந்த குச்சக முனிவருக்கு ஒரு புதல்வன் உண்டு. அவன் அரிய வேதத்தை ஓதிப் பயின்ற நாவன்மை உடையவன். கவுச்சிகன் என்னும் பேருடையவன். கரை சிறிதேதும் காணுவகை பெருகிய பிறவி என்னும் கடலைக் கடந்து உய்யும் பொருட்டாக எல்லாமாய் அல்லவுமாய் விளங்கும் சிவபிரானைப் போற்றி செய்து தவத்தினைப் புரிய விரும்பி அவ்விடத்துள்ள குளிர்மையான நீர் நிரம்பிய குளக்கரை யைச் சேர்ந்தான். 2

**அத்தலை ஒருசார் எய்தி ஆனினந் தீண்டு குற்றி**
**ஒத்தென அசைத லின்றி உயிர்ப்பொரீஇ உலக மெல்லாம்**
**பித்தென உன்னி மாயாப் பேரின்ப அளக்கர் மூழ்கி**
**நித்தன்ஐ யெழுத்தும் அன்னுன் நிலைமையும் நினைந்து நோற்ருன்.**

அக்குளக்கரையின் ஒரு புறமாக சென்று சேர்ந்து தியான நிலைகூடி அக்குளத்து நீர் அருந்தவரும் பசுக்கள் சொறிதேய்பதற்கு குளக்கரையில் நாட்டப்பெற்ற ஒருகல் போல அசைவிலாது நிட்டையில் இருந்தார். அவர் பிராணுயாம வழி சுவாசத்தை அடக்கி, உலக வாழ்வு எல்லாம் வெறும் பைத்தியமாகும் என நினைவுற்று மாயாத பேரின்பம் என்னும் கடலில் மூழ்கி அன்றும் இன்றும் என்றும் அழிவிலாத நித்தியனுகிய சிவபிரானின் ஐந்தெழுத்தின் இயல்பும் அவரின் நிலைமையும் நினைந்து தவம் செய்தார். 3

**ஓவிய மவுன முற்ருங் குணவொடும் உறக்கம் நீங்கித்**
**தாவற நோற்கும் வேலைத், தடமரை கடமை யாதி**
**மேவிய விலங்கு தத்தம் மெய்யகண் டூயம் யாவும்**
**போவது கருதி அன்னுன் புரத்திடை உரைத்துப் போமால்**

எழுதிய சித்திர ஓவியம்போல மௌன முற்று உணவோடு நித்திரையையும் நீக்கி குறைவிலாது தவம் செய்யும் நேரம் அக்குளத்து நீர் அருந்தவரும் பெரிய

மரையும் காட்டுப் பசுவும் ஆதியாகவுள்ள அவ்வனத்தில் நிலவும் மிருகம் எல்லாம் நீர் அருந்திய பின்னர் தங்கள் மேனியிலுள்ள சொறிகள் யாவும் தீர்வதைக் குறித்து அசைவற்றிருந்து தவம்செய்த இந்த முனி குமாரனை ஒரு ஆவுரஞ்சிக்கல் என எண்ணி, முனிவனின் மேனி மேலாக உராஞ்சிவிட்டுப் போவன. 4

**இப்பரி சியன்ற போழ்தும் யாவதும் உணரா னாகி**
**ஒப்பற நோற்கும் வேலை ஒல்லையில் அதனை நாடி**
**முப்புரஞ் சிதைய மேனாள் முனிந்தவன் அருளி தென்னாச்**
**செப்பினன் இமையோர் சூழச் சேணிடைத் திருமால் சேர்ந்தான்**

இப்பரிசாக மிருகங்கள் மேனியில் உரஞ்சும்போதும் யாதொன்றும் உணராதவனாகித் தனக்கு வேறொருவர் ஒப்பில்லாது தவஞ் செய்யும் வேளையில் துரிதமுடன் அதனை உணர்வுற்றார் நாராணயக் கடவுள். ஓகோ! இந்நிலைதான் முப்புரங்களும் சிதைவாகும்படி முனிந்து முன்னாள் எரித்தவராகிய சிவபிரான் அருள் எனக் கூறிய வண்ணம் தேவர்கள் சூழ்தர வானத்திடத்து திருமால் முனிவன்முன் தோற்றினார். 5

**அற்புதம் எய்தி மைந்தன் அருந்தவம் புகழ்ந்து முன்போய்**
**எற்படும் அவன்றன் மேனி எழின்மலர்க் கரத்தால் நீவி**
**வெற்பன முனிவ நின்பேர் மிருககண் டேயன் என்னச்**
**சொற்பயில் நாமஞ் சாத்த எழுந்துகை தொழுது நின்றான்.**

வானத்தில் தோன்றிய விஷ்ணுபசுவான் முனிவனின் நிட்டை நிலை கண்டு மிகஅற்புதம் அடைந்து முனிகுமாரனின் அரிய தவச் செயலைப் புகழ்ந்து, முன்பாகச் சென்றுதவத்தால் ஒளிபொருந்திய கவுச்சிகனின் மேனியை எழிலான தனது மலர்க் கையால் தடவிச் சொல்வார். அருளால் மலைபோலும் முனிவனே! உனது பெயர் இன்றிருந்து மிருகண்டுயென் எனச் சொல்லப்பெறுக என்று உயர்வான பட்டப்பெயர் சூட்டியருள. அப்போது கவுச்சிகர் எழுந்துதிருமாலைக் கைதொழுது நின்றான்.

உலகிலுள்ள ஆன்மாக்கள் தங்கள் மனஅமைதியுறுத வண்ணம் சஞ்சலமுறுத்தும் வேதனைகள் யாவும் இம்முனிவனை அடைந்தால் நீங்கும் என்பதை மிருகண்டுயன் என்னும் நாமப்பெயர் விளக்குதல் காண்க. 6

**தொழுதெழு முனியை நோக்கித் தூமதிச் சென்னி யோன்றன்**
**முழுதுறு கருணை நின்பால் முற்றுக முன்னஞ் செய்த**
**பழுதவை நீங்க வென்னாப் பரிவுசெய் தருளி வானோர்**
**குழுவுடன் உவண வூர்தி கொம்மென மறைந்து போனான்.**

எழுந்து தொழுது நின்ற முனிவனை நோக்கித் திருமாலானவர் சொல்வார். முனிமைந்தனே! தூய இளம்பிறை அணிந்த சடையவனின் முழுதான கருணை உன் பாலாக நிறைக. நீ முன்னம் செய்த பழுதுகள்யாவும் நீங்குக என கருணையுடன் ஆசிசெய்தருளி தேவர் கூட்டத்துடன் கருட வாகனத்தை ஊர்ந்துவந்த திருமால் மறைந்தருளிப் போயினார். 7

**போனபின் முனிவர் மேலோன் புரமெரி படுத்த முக்கண்**
**வானவன் அருளி னாலே வல்விரைந் தேகித் தாதை**
**யானவன் முன்னர் எய்தி அடிமுறை வணங்க அன்னான்**
**தானுள மகிழ்ந்து கண்டாங் கெடுத்தனன் தழுவிக் கொண்டான்**

போனபின்பாக முனிவர் மேலவரான மிருகண்டுயர் முப்புரம் எரிசெய்ருளிய மூன்று கண்ணுடைய சிவபிரான் அருளினாலே மிக விரைவாகச் சென்று தனது தந்தையாகிய குச்சகர் முன்பாகப் போய் அவர் திருவடிகளை வணங்க அப்போது தந்தையாகிய குச்சகர் உள்ளம் மகிழ்ந்து தனது மகனைக் கண்ணுற்று கையால் தூக்கியெடுத்து தழுவிக்கொண்டார். 8

**தவத்திடை யுற்ற தன்மை மொழிகெனத் தனயன் தானும்**
**உவப்புறு தாதை கேட்ப உள்ளவா றுரைத்த லோடும்**
**நிவப்புறு முவகை மிக்கு நின்குலத் தவர்க்குள் நின்போல்**
**எவர்க்குள தினைய நோன்மை யாதுநிற் கரிய தொன்றே,**

தந்தையான குச்சகர் மகனைப் பார்த்து தவம் செய்துள்ளபோது அங்கு நிகழ்வுற்ற தன்மையை மொழிவாயாக எனவும், மைந்தனுன மிருகண்டுயர் என்பார் பெரிதும் மகிழ்வுறுகின்ற தந்தை கேட்கும்படி அங்கு நிகழ்ந்துள்ள தன்மைகள் யாவும் சொல்லலோடும் தந்தையான குச்சகர் உவமையற்ற ஆனந்தம் மிகுந்து சொல்வார். மகனே! நினது குலத்தவர்களுக்குள் நின்னைப்போல அரிய தவப்பேறு வேறு எவற்கு உளது? உனக்கு இனி அரியதான செயல் வேறு யாது இருக்கிறது. 9

**பாருளார் விசும்பின் பாலார் பயனுகர் துறக்க மென்னும்**
**ஊருளார் அல்லா ஏனை உலகுறு முனிவர் தம்மில்**
**ஆருளார் நின்னை ஒப்பார் ஐயநீ புரிந்த நோன்மை**
**காருளார் கண்டத் தெந்தை யன்றிமற் றெவரே காண்பார்.**

இப்பூமியில் உள்ளார்கள், வான உலகில் உள்ளார்கள், போக போக்கியங்களை அநுபவிக்க உகந்த சொர்க்கம் என்னும் உலகில் வாழ்வார்கள், இது அல்லாமல் வேறு புண்ணிய உலகிலுள்ள முனிவர்கள் ஆகிய இவர்கள் தங்களில் உன்னை ஒப்பவர் யார் உள்ளார்கள் ஐயனே! நீ புரிந்த அத்தவத்தின் மேன்மையை கருமை கொண்ட கண்டத்தை உடையவரான எமது சிவபெருமானே அல்லது வேறு யார் காண முடியும். 10

**எனப்பல புகழ்த லோடும் இவன்வழி மரபு தன்னில்**
**மனப்படும் ஒருசேய் பின்னாள் மறலியைக் கடக்குங் கூற்றால்**
**வினைப்பகை இயல்பு நீக்கும் விமலன தருளால் வேறோர்**
**நினைப்பது வரலுந் தாதை நெடுமகற் குரைக்கல் உற்றான்.**

என பலவாறு மகனைப் புகழ்ந்து பேசிக்கொண்டிருக்கையில் அவரின் மனத்தில் இப்படியான தவப் பெருமையுடைய மகனின் வழியாக பின்னால் ஒரு பிள்ளை தோன்றி அப்பிள்ளை இயமனுடைய வலியைக் கடந்து வெல்லும் விதியுள்ளவனுவன் என்னும் எண்ணம், அடியார்களது வினைப்பகையை நீக்கும் சிவபெருமானது அருளினால் தோன்றுதலும், உடன் தந்தையான குச்சகர் தவப் பெருமைவாய்ந்த தமது மகன் மிருகண்டுயர்க்கு இப்போது வேறொன்று சொல்லுவார். 11

**களத்துவ துனக்கொன் றுண்டால் கேண்மதி ஐய மேனாள்**
**அளப்பரு மறைக ளாதி அறைந்தன யாவ ரேனுந்**
**தளத்தகு பரிசு மன்றால் சால்புடை அந்த ணாளர்**
**கொளப்படு கடனே யாகும் நாற்பெருங் கூற்ற தன்றே.**

ஐயனே! இப்போது நான் உனக்கு சொல்வது ஒன்று உண்டு. அதைக் கேட்பாயாக. நான் சொல்லப்போவது முன்னாள் அளத்தற்கரிய வேதங்கள் ஆதி

யன எடுத்துச்சொல்லி நிற்பன. எவர்களாயினும் நீக்கிவிடும் தன்மையுடையதல்ல. காருண்ய கண்ணோட்டமுடைய பிராமணர்களாலே கொள்ளப்பட வேண்டிய மிக முக்கிய கடமையான ஒழுக்கமாகும். அது நான்கு வகையாக பகுக்கப்பப்பட்டுள்ளது. 12

**உனற்கரும் பிரமந் தன்னில் ஒழுகல்இல் லறத்தில் நிற்றல்**
**வனத்திடைச் சேறல் பின்னர் மாதவத் துறவில் வாழ்தல்**
**எனப்படும் அவற்றி னாதி இயற்றினை இன்று காறும்**
**நினக்கது புகல்வ தென்னோ நீயவை அறிதி யன்றே.**

அவையாவன நினைத்தற்கரிய சிறப்பினையுடைய பிரமசாரிய நெறியில் ஒழுகி நிற்றல், இல்லற வாழ்க்கையில் நிற்றல், வனவாசம் அடைதல், பின்பாகப் பெருமை சான்ற தவம் செய்யும் துறவிநிலையில் வாழ்தல் எனப்படும் நான்குமாகும். இவ்வாறு சொல்லப்பெற்றவையில் எனது மகனே! நீ முதலாவதாகிய பிரமச்சாரிய நெறியை இன்றுவரையும் ஒழுகிவந்துள்ளாய். உனக்கு அதை நான் சொல்ல வேணடியதில்லை, நீ அவைகளை அறிவாய். 13

**பின்னவை இரண்டும் பின்னர் பேணுதல் பேச வொண்ணா**
**முன்னதும் இயற்ற லாலே முற்றிய திடையின் வைத்துச்**
**சொன்னதோர் கடன்இஞ் ஞான்று தொடங்கிய வேண்டுந் தூயோய்**
**அன்னதன் நிலைமை தன்னை ஆற்றினை கோடி யென்றான்.**

பின்னால் சொல்லப்பெறும் இரண்டான வனவாழ்கையும், பூரண சந்நியாசத் துறவி வாழ்க்கையும், பின்னாகப்பேணப்படல் வேண்டும். இப்போது அதைப்பற்றிப் பேச்சில்லை, முன்னை பிரமசாரியமும் ஒழுகி நின்றமையால் அதுவும் முற்றுப் பெற்றது, இப்போது இவைகளின் இடையாக வைத்துப் பேசப்பெறும் இல்லறம் என்னும் கடமையை இன்று தொடங்கியாக வேண்டும். தூயநெறியுடைய மகனே! அந்த நிலைமையினை நீ செய்யத் தொடங்குவாயாக என்றார் குச்சக முனிவர். 14

**முனிவரன் இதனை ஆங்கண் மொழிதலும் இதனைக் கேளா**
**இனியதோர் உறுதி சொற்றார் எந்தையார் எனக்கின் றென்னா**
**மனமுற முறுவல் செய்து மதலையாம் ஒருவற் கீது**
**வினையறு தவத்தின் நீரும் விளம்புதல் மரபோ வென்றான்.**

குச்சகமுனிவர் இதனை அங்கே சொல்லுதலும் அதனைக் கேள்வியுற்ற மிருகண்டுயர், எனது தந்தையார் எனக்கு மிக இனிதான ஓர் செய்தி சொன்னார் என மனத்தில் அடங்கச் சிரித்துக்கொண்டு தந்தையாரை நோக்கி ஐயனே! உமது பிள்ளையாகிய ஒருவர்க்கு எல்லா வினையிலும் நீங்கி விளங்கும் தவ வாழ்வுடைய நீரும் இப்படிச் சொல்லலாமோ? இது முறையாகுமோ? எனக்கேட்டார். 15

**பேதைப் படுக்கும் பிறவிக் கடல் நீந்தும்**
**ஓதித் திறத்தை உணர்ந்துடையோன் ஆதலினால்**
**காதற் புதல்வன் கவுச்சிகனென் போன்தனது**
**தாதைக் கினைய பரிசுதனைச் சாற்றுகின்றான்.**

அறியாமையான புன்மையைப் பெருக்கும் பிறவி என்னும் கடலை நீங்கிக் கரைசேர்க்கின்ற ஞான அறிவை சிவனருளால் உணர்ந்துள்ளான் இப்பிள்ளையான மிருகண்டுயர் ஆனதினால் குச்சக முனிவரின் காதல் மைந்தன் கவுச்சிகன் என

முன்பொரு பெயரும் இப்பொழுது மிருகண்டுயன் கிறப்புப் பெயரும் பெற்றவர் தனது தந்தையாருக்கு இந்த வார்த்தையினை சொல்லுகின்றார். 16

முன்னருள பாச முபக்கறுக்க வேண்டியநான்
பின்னுமொரு பாசம் பிணிக்கப் படுவேனேல்
தன்னிகரில் ஈசன் றனையெவ்வா றெய்துவன்யான்
இன்னலெனும் ஆழி யிடைப்பட் டுலேவேனே.

ஐயனே முற்பிறவியால் தொடர்பாகிவந்த பாசங்களின் பந்த இயல்புகளை அறுக்கவேண்டிய நான் இன்னுமொரு பாசம் பின்னும் பந்திக்கப்பட்டு பிணிபடுவேனுயின் தனக்கு நிகரில்லாத சிவனை எவ்வாறு நான் எய்துவேன். மீண்டும் ஓயாத துயரமென்னும் ஆழ்கடலில் அழுந்தி உலேவேனே. 17

மொய்யான தில்லா முடவன் ஒரு வன்தனது
கையா னவையிரண்டுங் கந்தாத் தவழ்தருவான்
ஐயா அதற்கும் அரும்பிணியொன் றெய்தியக்கால்
உய்யானே, யானும் உவன்போல் தளர்வேனே.

வலிமையில்லாத ஓர் கால் முடமான ஒருவன் தனது கையிரண்டும் ஊன்று கோலாகப் பாவித்துத் தவழ்ந்து திரிவான். அந்த முடவனுக்கு அவன் கையிரண்டும் ஓர் காரணத்தால் நோய்வாய்ப்பட்டு வழங்க முடியாதபடி ஆகிவிட்டால் என் ஐயாவே! அவன் பின்னர் உய்யானே! ஆகவே நானும் அந்த முடவனின் இயல்பு போலத் தளர்வுறுவேனே. முன்னர் உள்ள பந்தங்களால் இப்பிறவியில் வலியிழந்து ஒருவாறு தளர்வின்றி வாழ முற்படுவேனுக்குப் பின்னரும் திருமண முறையால் ஒரு பெண்ணிடத்துப் பந்த முறுவேனேல் எவ்வாறு நான் தளர்வின்றி வாழ்வு பெறுவேன் என்னும் கருத்தால் தன்னை முடவனுக்கு ஒப்பிட்டுக் கூறினர். 18

மெய்யுற் றிடவே முயலுந் தவத்தினன்றிப்
பொய்யுற்ற இல்லொழுக்கம் பூண்டுவினை போக்குவது
மெய்யுற் றிடுதுகளை மிக்க புனலிருக்கச்
செய்யற்சின் னீரிடத்துத் தீர்க்குஞ் செயலன்றே.

ஒருவர்க்கு உண்மையான சத்துநிலைமை தவமே தருவதாகும். அல்லாது பொய்மையே பெருக்கிப் பொழுதை வீணுக்கும் இல்வாழ்வைப் பூண்டு எனது வினையைப் போக்குவது என்றுல் அது எதுபோலவெனில் ஒருவன் தனது மேனியில் உள்ள அழுக்கைப் போக்குவதற்கு மிகுதியான நல்ல நீரிருப்ப அதைவிடுத்து சேறு பொருந்திய அற்பநீரில் கழுவிக்கொள்ளும் செயல்போலாகுமே. 19

மண்ணுலகி லுள்ள வரம்பில் பெரும்பவத்தை
பெண்ணுருவ மாகப் பிரமன் படைத்தனனுல்
அண்ணல் அஃதுணர்த்தி அன்னவரைச் சிந்தைதனில்
எண்ண வரும்பாவம் எழுமையினும் நீங்குவதோ.

மண்ணுலகத்துள்ளே காணப்பெறும் அளவுகடந்த பாவம் என்பதைத்தான் பெண்கள் உருவமாகப் பிரமதேவர் படைத்துள்ளார். எனது ஐயனே! அதனை நீரும் உணர்ந்துகொள்ளும். அந்தப் பெண்களை மனதால் எண்ணினுல் விளையும் பாவமானது இந்த ஒரு பிறவியில் அல்ல ஏழு பிறவியிலும் ஒருவரைவிட்டு நீங்குவதோ! 20

**ஆதரவு கொண்டே அலமந்த ஐம்புலமாம்**
**பூதவகை யீர்க்கப் புலம்புற்ற புன்மையினேன்**
**மாதரெனுங் கணமும் வந்தென்னைப் பற்றியக்கால்**
**ஏதுசெயகேன் அந்தோ எனக்கோ இதுவருமே.**

என்னிடத்து இருந்து எனக்கு ஆதரவு தருவதுபோல அமைந்த ஐந்து புலன்கள் (கண் காது, மூக்கு, நாக்கு, மெய்) என்னும் பூதங்கள் என்னைத் தங்கள் வசமாக்கி இழுத்துச்செல்ல அந்நிலையினால் வாடிப்புலம்புறுவேனான இழிவுடையேன். அப்பால் பெண்கள் என்ற பேய்களும் வந்து என்னைப்பற்றிக்கொண்டால் நான் என்செய்வேன். அந்தோ ! எனக்கோ இந்தநிலை வரும் ? 21

**பன்னாளும் பாரிற் பருவரலின் மூழ்குவிக்கும்**
**பின்னாள் நிரயப் பெரும்பிலத்தி னூடுய்க்கும்**
**எந்நாளில் ஆண்டகையோர்க் கின்பம் பயந்திடுமோ**
**மின்னார்கள் தம்மை விழைவுற்ற வேட்கையதே.**

ஐயனே ! பெண்கள்மேல் மோகமானது பல நாளும் இந்தப் பூமியில் ஒருவனை துன்பத்தில் மூழ்குவிக்கும். பின்னராக இறந்த பின்பும் பெரிய நரக பூமியில் தள்ளிவிடும். எந்த் நாள் தான் அழகிய மின்னல்போலும் வடிவுகொண்ட பெண்கள்மேல் பெருகிக்கொண்ட விருப்பம் அந்த ஆண்களுக்கு இன்பத்தை கொடுக்கும்? அது சொல்ல முடியுமோ ? 22

**துன்பம் நுகரும் வினையின் தொடர்ச்சியினார்**
**இன்பம் நுகர்வார்போல் ஏந்திழையார் கட்பட்டார்**
**தன்பல் மிகநடுங்க ஞாளி தசையில்லா**
**என்பு கறித்திட்டால் இருஞ்சுவையும் பெற்றிடுமோ.**

ஒருவன் துன்பம் அநுபவிக்கவேண்டிய வினையின் தொடர்ச்சி வந்துசேர அதனினால் பெண்களைக் கண்டு மோகித்து இன்பமடைவான்போல அப்பெண்களைச் சேர்ந்துகொண்டு அவர்கள் வசப்பட்டுவிட்டால் அது எவ்வாறு ஆகிவிடுமோ எனின் ஒரு நாயானது இறைச்சி தின்னும் ஆசையால் எலும்பு ஒன்றை தனது பல் மிக நடுங்க திரும்பத்திரும்பக் கடித்தாலும் அதற்கு ஒரு சுவை வருமோ ? ஆகாதே. அதேபோல் பெண்களோடு அனுபவிக்கும் இன்பம் துன்பமாகி கேடுதருமென்றார். 23

**அஞ்சன வைவேற்கண் அரிவையர்தம் பேராசை**
**நெஞ்சு புகின் ஒருவர் நீங்கும் நிலைமைத்தோ**
**நஞ்சல்புரி யாதுயிரை எந்நாளும் ஈர்ந்திடுமால்**
**நஞ்சம் இனிதம்மா ஓர்நாளும் நலியாதே.**

மைதீட்டிய கூரிய வேல்போலும் பெண்கள் மேலான ஆசை ஒருவர் நெஞ்சில் சேர்ந்துகொண்டால் அப்பெண்ணாசையை நீங்கும் நிலைமையும் பின்னர் கிடைக்குமோ ? முடியாதே அது ஒருவரிடம் குன்றாமல் நின்று எந்நாளும் உயிரை மெல்ல மெல்ல வாட்டிய பின்னர் முடிவாக்கிவிடும். நஞ்சு பொல்லாததாயினும், அவர் மேல் ஆசையின் அது இனிது, ஏனென்றால் நஞ்சு உண்டபோதே ஒரு நொடியில் கொன்றுவிடும். நாளும் நாளும் வருத்தல் செய்யாது. ஆனால் இவர்கள் மேலாசை தொடங்கினாலோ அது தீர்க்கமுடியாததாகிய துயர்தந்து உயிருக்கே தீமையாகும். 24

கள்ளூற்ற கூந்தல் கனங்குழைநல் லார்கருத்தில்
கொள்ளப் படுமெண் குணிக்குந் தகைமையதோ
தள்ளற் கரிதாகித் தம்மொடுபன் னாட்பழகி
உள்ளூற்ற தேவும் உணர்தற் கரிதன்றே.

தேன் சொரியும் பூக்கள் சூடிய கூந்தலுடன் அழகிய குண்டலங்களை அணியும் பெண்களுடைய கருத்திலே கொள்ளப்பெறும் எண்ணங்கள் யாம் அறியும் படியானதோ? அவரின் மனஎண்ணங்களை அவருடன் கூடவே பலநாட் பழகி உள்ளத்தே இருக்கும் எந்நாளும்நீங்காத கடவுளுக்கும் உணரமுடியாதல்லவோ. 25

ஓதலும் ஒன்று உளமொன்றுச் செய்கையொன்றுய்ப்
பேதை நிலைமை பிடித்துப் பெரும்பவஞ்செய்
மாதர் வலைப்பட்டு மயக்குற்றார் அல்லரோ
சாதல் பிறப்பில் தடுமாறு கின்றாரே

தாங்கள் சொல்வதொன்றாக, நினைப்பதொன்றாக, செய்வது இன்னுமொன்றாக, இப்படியான பேதமை நிலைகொண்டு பெரும் பாவங்களைச் செய்கின்ற பெண்களின் வலைப்பட்டு மயங்குற்றவர்கள் அல்லவோ எமது தந்தையே! சாதல், பிறத்தல் என்னும் நிலைகளில் தடுமாறிக்கொண்டிருக்கிறார்கள். 26

ஆனால் உலகில் அருங்கற் பினை யுடைய
மானார் இலரோ எனவே வகுப்பீரேல்
கோனான தங்கள் கொழுநன் இயல்வழுவாத்
தேனார் மொழியாரும் உண்டு சிலர்தாமே.

இப்படியாக நான் சொல்லும்போது, உலகில்கற்பு அரியநெறி கொண்ட பெண்கள் இல்லையோ என நீர் கேட்டால், தங்கள் தலைவனை கணவனைத் தெய்வமாகக் கொண்டு ஒழுகும் கடப்பாடாகிய நெறியுடைய தேன்போல தித்திக்கப் பேசும் பெண்களுமுண்டு. ஆனால் அவர்கள் மிகச்சிலர் தாமே அவ்வண்ணமாக உளர். 27

உற்ற வுலவையிடை ஓர்புலிங்கம் ஊட்டியக்கால்
கற்றை விடுசுடர்மீக் கான்று கனல்மிக்குப்
பற்றுதல் செல்லாத பலவினும்போய்ப் பற்றிடுமால்
அற்றெனலாம் ஈங்கோர் அரிவைமுயங் காதரமே.

தொகையாகப் பொருந்திய விறகினிடத்தே ஓர் நெருப்புப் பொறியை பற்ற வைத்தால் அது மெதுவாகப் பற்றி சுடர்விட்டெரிந்து பின்னர் வெப்பம் மிகுந்து முன்னர் நெருப்புப்பற்றுதல் செல்ல முடியாதபடி உள்ள பல பொருளினும் போய்ப் பற்றிக்கொள்ளும். இதைப்போலத்தான் ஒரு பெண்ணிடத்து அணையவேண்டிச் சேரும் விருப்பமும் மேற்கொண்டு பெருகி, காம வெப்பாக மாறி பெருகி, தவம் சீலம் இவையைக் கெடுக்கின்ற வேறு தீங்குகளைச் செய்யும்படியும் தூண்டும். 28

சந்திரற்கு நேருவமை சாலும் திருமுகத்துப்
பைந்தொடிக்கை நல்லார் பலரும் புடைசூழக்
குந்தமொத்த நாட்டத்துக் கோதமனார் பன்னியினல்
இந்திரற்கு நீங்கா இடர்ப்பழியொன் றெய்தியதே.

இந்திர தேவனைப் பாரும் தந்தையே! அவனுக்குப் பூரண சந்திரனை நேரொத் திலங்குகின்ற அழகிய முகமுடைய இந்திராணி முதல் நல்லவளையல்கள் அணிந்த கையினையுடைய தேவப்பெண்கள் புடைசூழ்ந்து அவன் விரும்பியவாறு ஒழுகச்

சிந்தமாகவிருப்பவும் அவனது பெண் ஆசை மேற்கொண்ட தன்மையால், வேல் போலும் நீண்ட கண்களையுடைய கௌதம முனிவன் பத்தினியான அகலிகை என்பவள்மேல் இந்திரன் விருப்பங்கொண்டு அதனால் அவன் மேனியெல்லாம் கௌதம முனிவன் சாபத்தால் யோனி வடுவாகவும் பின்னர் அவைகள் ஆயிரம் கண்களாகவும் நீங்காத இடர்ப்பழி ஒன்று இந்திரனுக்கு எய்தியதே. 29

கூன்முகத் திங்கள் நெற்றிக் கோதையர் குழுவுக் கெல்லாந்
தான்முதல் இறைவி யாகத் தன்கையாற் சமைக்கப்பட்ட
மான்முக நோக்கி முன்னோர் மலரயன் மையல் எய்தி
நான்முகன் ஆனான் என்ப நாமுண ராத தன்றே.

தந்தையே! வளைந்த இளம் பிறைபோலும் நெற்றிகொண்ட பெண்கள் கூட்டத்திற்கெல்லாம் அழகால் மிகுந்த தலைவி இவள் என்னும்படி தனது கையாலே பிரமதேவர் திலோத்தமை என்னும் பெண்ணைப் படைத்தார். மானின் பார்வை அழகு பொருந்திய திலோத்தமையின் அழகால் முன்னனை ஓர் பிரமதேவர் பெரிதும் மோகம்கொண்டு அவள் அழகைக் கண்டு பருகுவதற்கு ஒரு தலை காணுதென்று நான்கு தலை கொண்டார் என்பது எங்களுக்குத் தெரியாததொன்றோ? 30

மற்றுள முனிவர் தேவர் மாயமாங் காமந் தன்னால்
உற்றிடு செயற்கை யெல்லாம் உரைப்பினும் உலப்பின் றாமால்
அற்றெலா நிற்க யான்அவ் வாயிழை மடந்தை கூட்டம்
பெற்றிடும் ஒழுக்கந் தன்னைப் பேணலன் பிறப்பு நீப்பேன்.

மற்றுமுள்ள எத்தனையோ மேலான முனிவர்கள் தேவர்கள் மாயம் செய்கின்ற காமம் என்னும் ஆசையால் அவதியுற்று துயரப்பட்ட செயல்கள் யாவையும் எடுத்துக் கூறினாலும் அது சொல்லி முடிகின்றதல்ல. அது எல்லாம் நிற்கட்டும். நான் அந்த அழகிய ஆபரணம் அணிந்த பெண் சேர்க்கை பெற்றிடுகின்ற இல்லற ஒழுக்கத்தைப் பேணமாட்டேன். எனது பிறவித் துயரை தவம்புரிந்து நீக்கவழி தேடுவேன். 31

பூண்டகு விலங்கல் திண்டோட் புரந்தரன் முதலோர் சீரும்
வேண்டலன் இல்வாழ் வென்னும் வெஞ்சிறை அகத்தும் வீழேன்
மாண்டகு புலத்தின் மாயும் மயக்கொரீஇத் தவமென் றோதும்
ஈண்டிய வெறுக்கை மேவி இன்பமுற் றிருப்ப னென்றான்.

தந்தையே! இதுவன்றி மலைபோலும் பருமனும் ஆபரணங்களுடனும் விளங்கும் திண்மையான தோளுடை இந்திரதேவன் பிரமன் முதலோரின் சீரும் நான் விரும்ப மாட்டேன். இல்லற வாழ்வு என்னும் கொடிய சிறையிலும் அகப்பட்டு வீழேன். மாட்சிமையுடைய ஐந்து புலங்களால் மாயப்படுகின்ற சுகதுக்கங்களின் மயக்கத்தை விடுத்து தவம் என்று சொல்லப்பெறும் பெறற்கரிய செல்வத்தைப்பெற்று எஞ்ஞான்றும் இன்பமுற்றிருப்பேன் என்றார் மிருகண்டுயர். 32

இவைபல உரைத்த லோடும் இருந்தகுச் சகன்தான் இந்தக்
குவலய மதிக்கு மாற்றாற் கூறும்இல் லொழுக்கம் தன்னை
நவையென இகழா நின்றான் நான்மறைத் துணிவுங் கொள்ளான்
தவமயல் பூண்டான் என்னாத் துயர்கொடு சாற்ற லுற்றான்.

இவை பல மிருகண்டுயர் உரைத்தலோடும் இவற்றைக் கேட்டிருந்த குச்சக முனிவன் உலகமெல்லாம் மதிக்கும் பான்மையாகக் கூறப்படுகின்ற இல்லற தருமத்தை குற்றமுடையதென இகழ்ந்து பேசுகின்றான். நான்கு வேதங்களும் சிறப்புடையது இல்லறமென துணிந்து கூறிய வாக்கியத்தையும் ஏற்கின்றானில்லை. எனதுமகன் தவத்தில் மயக்கம் கொண்டான். இது பழுதானதேயெனத் துயரம் கொண்டு சில வார்த்தை சொல்கிறார் குச்சக முனிவர். 33

புலத்தியன் போலு மேலோய் பொருவின்மங் கலஞ்சேர்பொன்னின்
கலத்தியல் வதுவை பூண்டோர் கன்னியைக் கலத்தல் செய்து
குலத்தியல் மரபின் ஓம்பக் குமரரைப் பயந்தே அன்றோ
நலத்தியல் தவத்தை ஆற்றி நண்ணருங் கதியிற் சேரல்.

புலத்திய முனிவனைப்போல் புலன்களை அடக்கும் பெருமை கைகூடப்பெற்ற மேலான மைந்தனே! நிகரற்ற மங்கலம் பொருந்திய பொன்னினாலான தாலியை அணிந்து விதிமுறையாகத் திருமணம் செய்து ஒரு கன்னியைக் கலந்து சேர்ந்து எமது குலத்தின் சந்ததியை பின்னராக் ஓம்பி வருவதற்கு புத்திரரைப் பெற்றுக் கொண்டபின் அல்லவோ நலமுடைய தவத்தைப் புரிந்து பின்னர் சென்று அடைதற் கரிதான சிவகதியிற் சேரல்முறையாகும். 34

மன்பதை உலக மேபோல் மாலுறு மயங்கு காம
இன்பமீ நுகர்தற் கேயோ இசைத்தனன் இறந்த மேலோர்
துன்பமும் நிரயஞ் சேர்வுந் துடைத்திடுந் தொன்மை நோக்கி
அன்புறு புதல்வர்க் காக அரிவையைக் கோடி ஐயா.

உலகத்து வாழும் ஏனைய மனிதர்கள் காம இன்ப இச்சையால் மயங்கும் அத்தன்மைபோல நீயும் காம இன்பத்தை அனுபவிக்கவேண்டும் என்பதற்காகவோ உன்னை இல்லறத் தருமத்தில் பிரவேசிக்கவேண்டும் எனக் கூறினேன் இல்லை இறந்து போன எங்கள் முதியவர்கள் அந்த உலகத்து அநுபவிக்கின்ற துன்பங்களையும்நரக வேதனைகளையும் நீக்குவதற்காக வேண்டி தொன்றுதொட்டு நாம் மேற்கொண்டுவரும் பழைய செயல்களை உணர்ந்து அதற்காக இன்பான பிள்ளைகளைப் பெறுவதற்காக ஒரு பெண்ணினை திருமணம் செய்துகொள், என் ஐயனே. 35

சித்திரம் இலகு செவ்வாய்ச் சீறடிச் சிறுவர் தம்மைப்
புத்திர ரென்னுஞ் சொற்குப் பொருணிலை அயர்த்தி போலாம்
இத்தக வதனை நாடி இல்லறம் பூண்டு நிற்றல்
உத்தம நெறியே யாகும் தவத்தின தொழுக்கும் அஃதே.

சித்திரம்போல இலங்கும் சிவந்த அழகிய வாயும் சிலம்பணிந்த சிறிய மிருதுவான கால்களும் உடைய குழந்தைகளைப் புத்திரன் என்று அழைக்கும் சொல் லுக்கு பொருளின் நிலை எதுவென நீ மறந்தனை போலும். ஆகவே புத் எனின் நரகம். இரன் எனின் இரட்சிப்பவன். இதனால் நரகத்தில் சேராமை காப்பவன் என்னும் தகவினை நாடி உணர்ந்து நீயும் இல்லற ஒழுக்கத்தினை மேற்கொண்டு நிற்றல் உத்தம நெறியாகும். தவத்தினுடைய ஒழுக்கமும் அதுவேயாகும். 36

குவவுறு நிவப்பின் மிக்க கோடுயிர் குடுமிக் குன்றின்
இவர்வுறு காத லாளர் இயற்படு சார லெய்தித்
திவவொடு போத லன்றிச் சேணுற உகளுந் தன்மைக்
குவமய தாகும் இன்னே உயர்தவத் தொழுக உன்னல்.

குவிந்து விளங்கும் உயரம்மிக்க முடியினை உடைய மலையில் ஏறி உச்சியை அடைதல் வேண்டுமெனும் விருப்பம் உடையர் அவ்வண்ணம் உச்சியை அடைவதற்கு முதலாவதாக அம்மலையின் அடிவாரத்தில் சென்று அங்குள்ள பாதைவழி மெதுவாக மேலேறிச் செல்வதன்றி, நேரே முடியில் பாய்ந்தேறும் தன்மைக்கு ஒப்பாகும் இப் பொழுது உயர்ந்த தவத்தில் ஒழுகுவேன் என நினைக்கும் உனது செயலும். 37

தருவினில் விலங்கில் அன்ன தகையன பிறவிற் சால
வருபயன் கோடற் கன்றோ மற்றவை வரைதல் செய்யார்
பெருகும்இல் லறத்தி னேடும் பெருமகப் பொருட்டால் நீயும்
அரிவையை மணந்து பின்னாள் அருந்தவம் புரிதி அன்றே.

மரங்கள் மிருகங்கள் முதலியனவற்றை ஒத்த பிறபொருள்களில் வருகின்ற பழம், பால், கன்று முதலிய பயன்களைப் பெறும் நோக்கமாகவே அவைகளை நீக்கி விடாது உலகத்தவர் அவைகளைப் பேணி தமது இல்லங்களிலே வளர்த்து வருவார் கள். அதேபோல மகனே நீயும் வளர்கின்ற இல்லறத்தின் பொருட்டும் பெருமை தரும் புத்திர பாக்கியத்தின் பொருட்டாகவும் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு பிற்காலத்தில் தவத்தைச் செய்வாயாக. 38

இந்தநன் னிலைமே லுளே எண்ணிலை இந்நாள் காறும்
முந்துசெய் கடன தாற்றி முற்றினை முறையே பன்னாட்
சிந்தனை செய்த வானோர்க் கவிமுதற் சிறப்புச் செய்யாய்
மைந்தநீ இன்னே நோற்கும் வண்ணமே எண்ணற் பாற்றோ.

இந்த நல்ல நிலையை நீ முன்னாள் எண்ணவில்லை. இந்நாள் வரையும் முதலா வதாகக் செய்யும் பிரமச்சாரிய கடமைகளை முறையே செய்து முடித்தனை. இனிமேல் உன்னால் தரப்படவேண்டும் அவிமுதலாயாகிய வற்றை பெற விரும்பி அதற்காக பல நாள் சிந்தனை கொண்டிருக்கின்ற தேவர்களுக்கு உரிய சிறப்பினை செய்ய வேண்டும். அப்படி இருப்ப மகனே தொடர்ந்தும் தவம் செய்யும் வண்ணமாக நீ நினக்கவும் தக்கதா? 39

இந்திரர் புகழுந் தொல்சீர் இல்லறம் புரிந்து ளோர்க்குத்
தந்தம தொழுக்கந் தன்னில் தகுமுறை தவறிற் றேனுஞ்
சிந்திடுந் தீர்வும் உண்டால் செய்தவர்க் கனைய சேரின்
உய்ந்திடல் அரிதால் வெற்பின் உச்சியின் தவற லொப்ப.

இந்திரன் முதலோராலும் புகழத்தக்க பழைய சிறப்பினை உடைய இல்லறத்தை ஒழுகி உள்ளார்க்கு தங்கள் தங்கள் ஒழுக்கத்தில் சிறிது தவறுதல்கள் நேர்ந்தாலும் அத்தவறுதல்களுக்கு தீர்வுகாண வல்ல பிராயச்சித்தம் உள்ளது. ஆனால் தவம் செய்தார்க்கு தவறுதல்கள் நேர்ந்தால் அது மலை உச்சியின் நின்று வழுக்கிவீழ்வது போலாகும். பின்னர் உய்வுபெற முடியாது. 40

சுழிதரு பிறவி யென்னுஞ் சூழ்திரைப் பட்டுச் சோர்வுற்
றழிதரு துயர நேமி அகன்றிடல் வேண்டு மேனுங்
கழிதரு நாளான் அல்லால் கதுமெனத் துறக்க லாமோ
வழிமுறை நும்மு னோரின் மற்றது புரிதி மன்னே.

சுழிபொருந்தி ஓயாது துயரத்து ஆழ்த்தி விடும் பிறவி என்றும் அலையின் தொடக்கிலே அகப்பட்டு சோர்வுற்று அழிகின்ற துன்பம் என்னும் கடலைக் கடக்க வேண்டுமாயினும் அது கொஞ்சம் கொஞ்சமாக அநுபவித்துக் கழிக்க வேண்டிய அந்த நாட்களால் செய்யலாம் அல்லாது விரைவில் நாம் அதை கடந்துவிட முடியுமா? அதுபோல தொன்றுதொட்டு வரும் முறைப்படி உனது முன்னோர் போல நீயும் அதனைச் செய்வாயாக 41

தேவரும் முனிவர் தாமுஞ் செங்கண்மா லயனும் மற்றும்
யாவரு மடந்தை மாரோ டில்லறத் தொழுகுந் தன்மை
மேவரப் பணித்தான் அன்றே விமலையோ டணுகி மேனாட்
தாவரும் புவன மாதி சராசரம் பயந்த தாணு.

தேவர்களும் முனிவராயோரும் சிவந்த கண்ணுடையன் எனும் விஷ்ணு மூர்த்தியும் பிரமதேவரும் மற்றும் யாவரும் மனைவிமாருடன் இல்லறத்தில் ஒழுகிவரும்படியான தன்மையினை முன்னுறவே பணித்திருக்கின்றார் முன்னாள் சோதியான சிவபெருமான் நிர்மல சொரூபியான உமையம்மையாருடன் கூடி நிலைப் பொருளான தாவரம் முதலியனவற்றையும் இயங்கிநிற்கும் பொருள்களான தேவர் மனிதரான உயிர்களையும் கொண்ட சகல உலகங்களையும் படைத்வர். 42

மறுக்கலை அவன்றான் செய்த வரம்பினை வழியை வேண்டி
வெறுக்கலை எனது கூற்றை விலக்கலை உலகின் செய்கை
செறுக்கலை இகலு மாற்றாற் செப்பலை சிறிது மாற்றந்
துறக்கலை எமரை இன்னே தொன்முறை உணர்ந்த தூயோய்.

சிவபிரானால் செய்து வைக்கப்பெற்ற ஒழுக்க முறையை மறுக்காதே. நீ விரும்பும் தவமார்க்கத்திற்காக இந்த இல்லற ஒழுக்கத்தை வெறுக்காதே. உனது தந்தையான எனது வார்த்தையை தட்டாதே. உலகில் நிகழ்ந்து வரும் செய்கையை அழிக்காதே. உனது பேச்சின் வலிமையால் நுப்பமாக பேச முற்பட்டு மேற்கொண்டு பேசாதே. எமது குலத்தாரை சுற்றத்தாரை வெறுக்காதே. எங்கள் தூயதான பழைய புண்ணிய நிலைகளை உணர்ந்த தூயனே! 43

ஆடக வனப்புடை அருந்ததியை நீங்கான்
மாடுற இருத்தியும் வசிட்டமுனி யென்போன்
நீடுதவ நோன்மைகொடு நின்றனன் அதன்றிப்
பீடுகெழு ஞாலமிசை பெற்றபழி யுண்டோ.

பின்னரும் குச்சகமுனிவர் சொல்வார் இலக்குமியின் அழகுடைய அருந்ததி என்னும் பெண்ணை விட்டு சீங்காதபடி உடனாக இன்னும் இருந்தும் வசிட்ட முனிவன் என்பவன் இன்னமும் மேலான தவ மேன்மையுடன் நிற்கின்றான். இதுவல்லாமல் பெருமைகொண்ட பூமியில் அவர் பெற்ற பழி ஏதேனும் உண்டா? இல்லையே. 44

தூயக்குறு பவத்திடை தொடர்ச்சியறு தூயோர்
நயப்பொடு வெறுப்பகலின் நாளுமட மாஞர்
மூயக்குறினும் மாதவ முயன்றிடினும் அன்னோர்
வியத்தகு மனத்துணர்வு வேறுபடு மோதான்.

உண்மையான தவத்தினைக் கடைப்பிடித்து பிறவித் துயரத்தை அகற்ற விரும்பும் தூய்மையினை உடையவர்கள் விருப்பு வெறுப்பு இரண்டினையும் நீக்குவதுதான் இயல்பு, அவ்வாருன நிலையில் உள்ளார்கள் பெண்களைப் புணருங் காலத்திலும் அன்றி தவம் புரியும் காலத்திலும் அவர்களுடைய மேன்மையான மன உணர்வுகள் வேறு படுமோ ஆகாதே! சித்தம் சிவமாக்கி செய்வதெல்லாம் தவமாக்கும் அத்தன் கருணை எனும் மணிவாசகர் வாக்கு ஒப்ப நோக்க. 45

மேனவியல் பான்வரையும் மெல்லியலை மேவில்
தானமுள தாகும்அரி தானதவ மாகும்
வானமுள தாகுமிவண் மண்ணு முளதாகும்
ஊனமில தாகும்அரி தொன்றுமிலை யன்றே.

இவ்வாருகிய இல்லற தரும இயல்பால் ஒருபெண்ணை விவாகம் செய்தால் தானம் செய்வதற்கு வழியாகும். இதுவே செயற்கரிய தவமாகும். வான உலகவாழ்வும் கிடைக்கப்பெறும். இவ்வுலக வாழ்வும் சிறப்புறும். ஒரு பொல்லாப்பும் இல்லாதது ஒன்ருகும். இல்லற தருமத்தால் ஆகாத அரிய செயல் வேறு யாதும் இல்லையே! 46

காண்டகைய தங்கணவ ரைக்கடவு ளார்போல்
வேண்டலுறு கற்பினர்தம் மெய்யுரையில் நிற்கும்
ஈண்டையுள தெய்வதமும் மாமுகிலு மென்ருல்
ஆண்டகைமை யோர்களும் அவர்க்குநிக ரன்றே.

தனது கண்ணுல் காணும்படியான தனது கணவனை கடவுள்போல வேண்டி வழிபடும் கற்புடைய பெண்களின் உண்மையான சொல்லின்படி கட்டுப்படும் இங்குள்ள தெய்வங்களும் மழை பெய்யும் பெரிய முகிலும் என்ருல் எந்த சிறந்த ஆண்மையுடையவர்களும் அப்பெண்களுக்கு நிகராக மாட்டார்களே!

தெய்வம் தொழாஅள் கொழுநற் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை (குறள்) 47

ஆயிழையொ டின்புறும் அறத்தைமுத லாற்ருய்
தூயதவ நன்னெறி தொடங்கல்புரி வாயேல்
மாயமிகு காமவிடம் வந்தணுகின் அம்மா
மேயவிதி காக்கினும் விலக்கியிட லாமோ.

ஒரு பெண்ணுடன் கூடி நடத்துகின்ற இல்லற தருமத்தை முதலில் செய்வாய். அதல்லாமல் தூய்மையான தவ நெறியினை நீ தொடங்கினுல் அந்நேரம் எவரையும் மயக்கித் துயருறுத்தும் காமம் என்னும் நஞ்சு உன்னை வந்து அணுகினுல் அம்மம்மா! அப்போது உன்னைப்படைந்த பிரமன் காத்தாலும் அதை விலக்கிவிட முடியுமோ! 48

துறந்தவர்கள் வேண்டியதொர் துப்புரவு நல்கி
இறந்தவர்கள் காமுறும் இருங்கடன் இயற்றி
அறம்பலவும் ஆற்றிவிருந் தோம்புமுறை யல்லால்
பிறந்தநெறி யாலுளதொர் பேருதவி யாதோ.

துறவு நிலைமேற் கொண்டார்க்கு செய்யப் பெறும் கடமைகளைச் செய்தும், இறந்த எமது முன்னோர்கள் பெரிதும் ஆவலுறுகின்ற பெருமையான கடன்களையும் செய்தும், தருமங்கள் பலவற்றையும் புரிந்தும், உலகில் விருந்தோம்பல் முறையை மேற் கொண்டும் வாழ்வதே அல்லாமல் நாம் மனிதப்பிறவி எடுத்துக் கொண்டமையால் எமக்கும் பிறர்க்கும் ஆகப்பெறுகின்ற பெரிய உதவி இதுவல்லாமல் வேறு யாதாகும். 49

மெத்துதிறல் ஆடவரும் மெல்லியல்நல் லாருஞ்
சித்தமுற நன்கினொடு தீதுசெயல் ஊழே
உய்த்தபடி யல்லதிலை யாப்உழவர் ஒண்செய்
வித்துபய னேயலது வேறுபெற லாமோ.

மிக வலிமை உடைய ஆண்களும் மெல்லிய இயல்பு கொண்ட பெண்களும் தங்கள் சித்தப்படி நன்கினைச் செய்தலும் தீமையைச் செய்தலும் ஊழ் அவர்களைச் செலுத்தும்படி ஆவதே அன்றி வேறு இல்லையாம். ஒவ்வொரு உழவனும் தான் விதைத்ததை வெட்டுவதே அன்றி இன்னொன்றை பெறலாமா. 50

நற்றவம தாகுமில்ல றந்தனை நடாத்திச்
சுற்றமற நீங்குதுற வேதுறவ தம்மா
மற்றது புரிந்திடின் உனக்குநவை வாரா
அற்றது மறுத்துரையல் ஆணைநம தென்றான்

நல்ல தவமாகிய இல்லறத்தினை நடத்திக்கொண்டு மெது மெதுவாக சுற்றத் தொடர்புகளை நீக்கும் துறவுதான் உண்மையான துறவு. இதனை நீ செய்தால் மகனே உனக்கு ஒரு குறையும் நேராது. இதை நீ மறுத்துப் பேசாதே! எனது ஆணை இது என்றார் தந்தையான குச்சகமுனிவர். 51

அன்பல மாமுனி யறைந்திடலும் ஓரா
முன்னமறை யாதிய மொழிந்ததுணி வென்றார்
பன்னகம் அணிந்திடு பரன்பணியும் என்றார்
என்னினி உரைப்பதென எண்ணியினை கின்றான்.

அவ்வாறாக பல வார்த்தைகளை குச்சமுனிவர் பேசுதலும் அதனைக் கேட்டு கிந்திக்கின்றார் மிருகண்டுயர். எனது தந்தை இல்லற தருமத்தை, முன்பு வேதங்கள் முதலிய சொல்லிவைத்த முடிவான துணிபு என்றார். பாம்பணிந்த சடையுடைய சிவபிரானின் பணியும் இதுவே ஆகும் என்றார். இதற்கு மேலாக எனி நான் என்னத்தைச் சொல்வேன் என எண்ணி இதை மனதால் நினைப்பார். 52

தத்தமத ருட்குரவர் தாவில்வளம் நீங்கி
அத்தியிடை யாழ்கெனினும் அன்பினது செய்கை
புத்திரர்கள் தங்கள்கட னும்புகழ்மை யன்றே
இத்திறம் மறுக்கலன் இசைந்திடுவன் யானும்.

தங்கள் அருள் நிறைந்த தாய் தந்தையர் தம்மை பார்த்து நீங்கள் உங்கள் சுகவாழ்வு யாவும் நீங்கி கடலிடையாக வீழ்ந்து ஆழுங்கள் என்றாலும் கூட தாய் தந்தையிடம் அன்புடைய புத்திரர்களின் செயல்கள் அப்படி சொன்னபடி செய்வ தாகும். இது புதுமை உடையதல்ல. ஆகவே தந்தையின் ஆணையை மறுக்கலன். அவர் விருப்பப்படி இசைவேன் என்றார் மிருகண்டுயர். 53

தந்தைசொல் மறுப்பவர்கள் தாயுரை தடுப்போர்
அந்தமறு தேசிகர்தம் ஆணையை இகந்தோர்
வந்தனைசெய் வேதநெறி மாற்றினர்கள் மாறுச்
செந்தழல வாயநிர யத்தினிடை சேர்வார்.

தந்தையின் சொல்லை மறுப்பவர்கள், தாயின் வார்த்தையை மறுத்துப் பேசுப வர்கள், அழிவற்ற அருள் நிறைந்த குருவின் ஆணையை மீறுபவர்கள், யாவராலும் வணக்கத்துடன் வழிபாடுசெய்யும் வேத நெறிகளை மாற்றி அமைத்தவர்கள் ஆகியோர் நீங்காத செந்தழல் மிகுந்த நரகங்களில் சென்று சேர்வார்கள். 54

ஆதலின் விலக்கல்முறை அன்றெனை வலித்துக்
கோதறு குணத்தின்மிகு குச்சகர்தம் அம்பொற்
பாதம திறைஞ்சிமுனி யேல்பணியில் நிற்பன்
ஓதுவ துனக்குள தெனக்கழறல் உற்றான்.

ஆதலின் எனது தந்தையாரின் ஆணையை விலக்குதல் முறையன்று எனத் திடங் கொண்டு, குற்றமற்ற குணத்திலே மேம்பாடுகொண்ட தந்தையான குச்சகருடைய, அழகிய பொன்னன பாதத்தில் தாழ்ந்து வணங்கி கவுச்சிகர் சொல்வார், தந்தையே என்மீது கோபம் கொள்ளாதீர்' உம்பணியில் நான் நிற்பேன். ஆனால் இப்போது உமக்கு நான் சொல்லுவதொன்றுண்டு, என அதைச் சொல்லலுற்றார். 55

தன்னுரைகொ ளாதமனை வாழ்க்கையது தன்னில்
வெந்நிரயம் வீழும்வகை யேவிழுமி தம்மா
அன்னரொடு மேவியமர் ஆடவர் தமக்குப்
பின்னுமொரு கூற்றுமுள தோபிணியும் உண்டோ.

தன்னுடைய வார்த்தையினை ஏற்று, அதன்படி நடவாத மனைவியுடன் வாழ் கின்ற, வாழ்க்கை அதனிலும் பார்க்க கொடிய நரகத்தில் சென்று வீழ்ந்து விடுதல் மேலானதாகும். அவர்களுடன் கூடி வாழ்க்கை நடத்தும் ஆண்கள்தமக்கு பின்னாக ஒரு யமனும் வருவானென்று சொல்லமுடியுமோ ? இதன்மேலாக ஒருநோயும் இருக்க லாமோ ? 56

என்னுரையி னிற்சிறிதும் எஞ்சலில வாகி
மன்னுமியல் பெற்றிடு மடந்தையுள ளேல்அக்
கன்னிதனை யான்வரைவல் காயெரிமுன் என்னாச்
சொன்னமொழி கேட்டுமகிழ் வுற்றுமுனி சொல்லும்.

ஆகவே யான் சொல்லும் இலக்கணங்களில், சிறிதேனும் குறை இல்லாமல் அமைந்த இயல்பினையுடைய ஒரு பெண் இருந்தால் அந்தக் கன்னிகையை அக்கினியின் முன்னே திருமணம் செய்வேன் என்று மகன் மிருகண்டுயர் சொன்ன இந்த மொழி யைக்கேட்டு மகிழ்வாகி குச்சக முனிவர் சொல்வார். 57

யானும் உய்ந்தனன் என்கிளை யுய்ந்தன இனையதால் நினையீன்றுள்
தானும் உய்ந்தனள் தவங்களும் உய்ந்தன தண்ணளியது மற்றால்
வானும் உய்ந்தன மண்ணுல குய்ந்தன வாசவ னெனவாழுங்,
கோனும் உய்ந்தனன் என்னுரை மருமலுட் கொண்டனை அதனாலே.

மகனே இப்பொழுது என்னுடைய சொல்லை மறுக்காமல் நீ ஏற்றுக்கொண்டதனால் யானும் உய்ந்தேன் என் சுற்றத்தாரும், உய்ந்தார்கள் இத்தன்மையால் உன்னைப் பெற்றதாயும் உய்ந்தாள். தவ ஒழுக்கங்களும் உய்ந்தன. காருண்யம் என்பதும் இதுதான். இதுவல்லாமல் வான உலகமும் உய்ந்தது. மண்ணுலகமும் உய்ந்தது. இந்திரனென வாழ்வுகொண்ட தேவராசனும் உய்ந்தான். 58

வேண்டும் வேட்கையை உரைத்தியால் மைந்தநீ விளம்பிய இயல்பெல்லாம்
பூண்டு குற்றமோர் சிறிதுமில் லாததோர் பூவையைப் புவியின்பாற்
தேண்டி நின்வயிற் புணர்க்குவன் அங்கது செய்கலா தொழிவேனேல்
மாண்டி றந்திடுங் குறைமதிக் கதிரென மாய்களன் தவமென்றான்

மகனே! நீ எத்தகைய பெண்ணை விரும்புகிறாய் என்னும் உனது விருப்பத்தைச் சொல்வாயாக, நீ சொல்லிய இயல்பெல்லாம் பூண்டு குற்றங்கள் ஓர் சிறிதேனும் இல்லாத ஓர் அழகிய பெண்ணை இப்பூமியில் எங்கும் தேடி உன்னிடத்தாகச் சேர்த்துத் திருமணம் செய்து வைப்பேன். அதைச் செய்யமுடியாது போவேனேல் நான் செய்துகொண்ட தவங்களெல்லாம் தேய்பிறைச் சந்திரனின் கலைபோல மாண்டிறந்திடுக என்ற சபதத்தைக் கூறினார். 59

இனைய பான்மையிற் குச்சகன் கூளுரை இயம்பலுந் திருமால் முன்
புனையும் மெய்ப்பெயர் தரித்தசேய் ஆங்கவன் பொலங்கழல் தனைப்பூண்டோர்
தனயன் உய்பொருட் டாலிது புகன்றனை தவத்தினில் தலையான
முனிவ நீயுனக் கரியதாய் ஒருபொருள் மூச்சகந் தனிலுண்டோ

குச்சக முனிவர் இவ்வாறாகிய பான்மையாக சபதம் செய்தலும் அவ்வேளை திருமால் முன் மிருகண்டுயர் எனப் பட்டப்பெயர் கொண்ட மகனுனவர் உடன் அங்கு குச்சகரின் பொன்னான காலில் வீழ்ந்து வணங்கிச் சொல்லுவார். ஐயனே! உனது மைந்தன் உய்யும் பொருட்டால் நீ இந்தச் சபதத்தைச் சொன்னாய். ஆகவே தவத்தினில் தலையான முனிவரான உமக்கு கிடைத்தற்கரியதான ஒரு பொருள் இம் மூன்றுலகத்தினிலும், உண்டோ? 60

ஆவ தேனும்யான் உரைப்பதுண் டத்தனை யற்றவர் அருளும் யாய்
சாவ தாயினர் தன்னையர் இல்லவர் தங்கையர் இலரானோர்
காவ லாடவர் தம்முடன் உதித்திடார் காசினி தனிலன்னோர்
வீவதாயினர் பெருங்கிளை இல்லவர் வியத்தகு திருவற்றோர்.

ஆனதேனும் யான் இப்போது உரைக்கும் வார்த்தை ஒன்றுண்டு. அதுதான் இத்தகைய குறையுடைய பெணகளை நான் திருமணம் செய்யேன். அவையாவன :- தந்தையை இழந்தவர். பெற்ற தாய் இறந்து போனவர். தனக்கு மூத்த ஆண் சகோதரர் இல்லாதவர். தனக்கு இளைய தங்கைமார் இல்லாதவர். தம்மைக் காக்க வல்ல ஆண் சகோதரங்களுடன் பிறவாதவர்கள். இப்பூமியில் தனது சகோதரர்கள் இறக்கும்படியானவர்கள். பெருகுகின்ற சுற்றமில்லாதவர் பெருமைமிக்க செல்வமில்லாதவர்கள். 61

குடிப்பி றந்திலர் பிணியுறும் இருதுமு குரவர்பாற் குறுகுற்றோர்
கடுத்த யங்கிய மிடற்றிறை யாதியாங் கடவுளர் பெயர்கொள்ளா
தடுத்த மாக்கடம் பெயர்பெறு பீடிலா அலகைதன் நாமத்தோர்
படித்த லந்தனில் புன்னெறிச் சமயமாம் படுகுழிப் பட்டுள்ளோர்

உயர்ந்த குலத்தில் பிறவாதவர்கள் நோயுற்ற தாய், தந்தையர்பால் அவதரித்தவர், நஞ்சுபொருந்திய கண்டத்தையுடைய சிவபிராஞதியாகிய கடவுளர்களுடைய பெயரைச் சூட்டிக்கொள்ளாது தம்மினுங் கீழ்மையாகிய விலங்குகளது பெயரைப்பெற்ற பெருமையில்லாதவரும். பேய்களின் நாமம் கொண்டோரும் இப்பூமியிலே இழிவான வழியைக் காட்டும் துர்மதங்களின் படுகுழியில் அமிழ்ந்திஞேரும் எனவே புறச்சமயத் துற்ரேரும். 62

பிணியர் மூங்கையர் பங்கினர் வெதிரினர் பிறர்மனை தனிற்செல்வோர்
கணிகை மாதரின் விழிப்பவர் பன்முறை காளையர் தமைநோக்சி
நணிய காதலன் முன்கடை நிற்பவர் நலம்பெறப் புனைகின்றேர்
தணிவில் உண்டியர் துயில்மிகும் இயல்பினர் தன்னினும் மூப்புற்ரேர்

நோயாளரும், ஊமையரும், முடவர்களும், செவிடர்களும், அயலார், பிறர்வீடு செல்வோரும் தாசிப்பெண்களைப் பார்ப்பவர்களும் பலகாலும், இழந்தாரிகளை நோக்கி அவர்களை அணுகும் காதலாற் தமது வீட்டின் முன்கடைவாயிலில் நிற்பவரும், தன்னை நன்ருக அலங்கரிக்க வேவண்டி ஆபரணம் அணிவோரும், ஓயாது குறைவில்லாத உணவை உண்கின்றவர்களும், நித்திரைமிக்க இயல்பினையுடையவரும், தன்னிலும் (கணவரிலும்) வயதால் முப்புற்றவரும். 63

ஒருமை தங்கிய கோத்திர மரபினர் உயர்ந்தவர் குறளாஞேர்
பருமை தங்கிய யாக்கையர் மெல்லுருப் படைத்தவர் பயனில்லாக்
கருமை தங்கிய வடிவினர் பொன்னெனக் கவின்றெழு காயத்தோர்
இருமை தங்கிய பசப்பினர் விளர்ப்பினர் எருவையின் உருமிக்கோர்.

ஒருமைப்பாடு கொண்ட கோத்திரமரபில் பிறந்தவர்களும், அளவில் மேற்பட உயர்ந்தவர்களும் குறுகிய வடிவமுடையவரும பருமைபொருந்திய சரீரத்தை உடையவரும், மெல்லிய தேகத்தை உடையவரும், பிரயோசனப்படாத கரிய நிறம் உடையவரும், பொன்போல அழகிய மேனி உடையவரும், இருநிறமான தேமலை உடையவரும், வெண்ணிறத்தை உடையவரும் இரத்தம்போல சிவந்தநிறம் உடையவரும். 64

நாணி லாதவர் ஆடவர் புணர்ச்சியில் நணியவர் நகைக்கின்றேர்
ஏணி லாதவர் பெருமிடல் சான்றவர் இருமுது குரவோர்தம்
ஆணை நீங்கினர் சினத்தினர் இகலினர் அடுதிறம் முயல்கின்றேர்
காண வேண்டினர் நடமுத லாயின காமனுற் கவல்கின்றேர்.

நாணமில்லாதவரும் ஆடவருடன் கூடுதலில் விருப்பமுடையவர்களும் அதிகமாகச் சிரிப்பவர்களும், வலிமை இல்லாதவர்களும், அதிகம் வலிமை உடையவர்களும் சிறந்த தாய்தந்தையரின் கட்டளைகளைக் கடந்து நடப்பவர்களும் கோபமுள்ளவர்களும், பகையை வளர்க்கும் இயல்புடையவரும், சண்டையிட முயற்சிப்போரும் நடனம், கூத்து முதலியவை காண்பதற்கு விரும்புவோர்களும் மன்மதனுல் வருந்துகின்றவர்களும். 65

ஈசன் அன்பிலர் பெருந்தகை முனிவரை இகழ்பவர் உயிர்மீது
நேச மென்பன இல்லவர் தங்குல நெறிதனில் நில்லாதோர்
மாசு தங்கிய குணத்தினர் நிறையிலார் மனமெனுங் காப்பில்லோர்,
தேசி கன்றனை மனிதனென் றுன்னினர் தேவரைச் சிலையென்றேர்.

ஈசன் அன்பில்லாதவரும் பெருந்தகைமை உடைய முனிவோரை இகழ்பவரும், எந்த உயிர்கள்மீதும் அன்பு என்பது இல்லாதவரும், தன்குலத்து நெறிதனில் நில்லாதோரும், மாசுகொண்ட குணத்தினரும் மனநிறைவில்லாதவர்களும், மனத்திடமெனும் காப்பிலாதவர்களும் குருவை மனிதனென்று நினைத்தவர்களும், தேவவிம்பத்தை (விக்கிரகங்களைக்) கல்லென்று நினைந்தவர்களும, 66

பத்தின் மேற்படும் ஆண்டினர் பூத்திடு பருவம்வந் தணுகுற்றோர்
ஒத்த பண்பிலர் அச்சமில் மனத்தினர் உருமென வுரைசெய்வோர்
அத்தன் அன்னையீந் தருளுமுன் ஒருவர்பால் ஆர்வமுற் றவர்சேர
வைத்த சிந்தையர் பெருமிதம் உற்றுளோர் மடமொடு பயிர்ப்பில்லோர்:

பத்தின் மேலான வயதை உடையவர்கள், இருதுவாகும் காலம்வந்து நெருங்கப்
பெற்றவர்கள், கணவனுக்கு இயைந்த பண்பு இல்லாதவர்கள், பயமில்லாத
மனத்தை உடையவர்கள், இடிபோல் உரக்கப் பேசுபவர்கள், தந்தை தாய்
ஒருவர்க்குக் கொடுப்பதென நிச்சயம் செய்யுமுன்பாக இன்னொருவர்பால் காதல்
கொண்டு அவரைச்சேர மனங்கொண்டவர்கள், கர்வம்பிடித்தவர்கள் மடம், பயிர்ப்பு
என்னும் குணவிசேடம் இல்லாதவர்கள். 67

பிறப்பின் எல்லையில் விழியிலார் தோற்றிய பின்றையே இழக்கின்றோர்
மறுப்ப யின்றிடுங் கண்ணினர் படலிகை வயங்கிய நோக்கத்தார்
குறிப்பின் மெல்லென வெஃகியே விழித்திடுங் குருடர்சாய் நயனத்தோர்
சிறப்பில் பூனையின் நாட்டத்தர் கணத்தினில் திரிதரு செங்கண்ணோர்.

பிறந்தபோதே கண் இல்லாதவரும், பிறந்தபின் கண்பார்வை இழந்தோரும்
சிவந்த கறுத்த புள்ளிகள், அடையாளங்கள் பொருந்திய கண் உடையவரும் காசநீர்
முதலியவற்றால் வெண்மையான படலம்பொருந்திய கண்ணினை உடையவரும், பார்க்
கும்போது கூசிக்கூசிப் பார்க்கும் குருட்டுப் பார்வை உடையவரும், வாக்குக் கண்
ணினை உடையவரும், சிறப்பில்லாத பூனைக்கண் உடையவரும், பேய்களின் கண்கள்
போலச் சுழல்கின்ற சிவந்த கண்களை உடையவரும், 68

தூறு சென்னியர் நரைமுதிர் கூந்தலர் துகளுறும் ஐம்பாலார்
வீறு கோதையர் சின்னமார் குழலினர் விரிதரும் அளகத்தோர்
ஈறில் செம்மயிர்ப் பங்கியர் நிலனிடை இறக்கிய கேசத்தோர்
ஊறு சேர்தரும் ஓதியர் விலங்கென உரமிகு குரலுள்ளோர்

அடர்ந்த மயிரினை உடையவரும், நரைமிகுதியான மயிரினை உடையவரும்,
அழுக்கடைந்த மயிரினை உடையவரும், அதிகமாக மயிரினை உடையவரும்; பிளவு
பட்டும் வளைந்தும் காணப்பெறும் மயிரினை உடையவரும், விரிந்த மயிரினை உடைய
வரும், நிலத்திலே இறக்கிவிடும்படி நீண்ட மயிரினை உடையவரும், வேறு ஊறுபாடு
பொருந்திய கூந்தலை உடையவரும் மிருகம்போல உரக்கப் பேசுவோரும். 69

சிறுகு கண்ணினர் மிகநெடுந் துண்டத்தர் சேர்ந்திடு புருவத்தோர்
குறிய காதினர் உயர்தரும் எயிற்றினர் கோணுறு கண்டத்தோர்
மறுவி ராவிய முகத்தினர் சுணங்குறு மணிமுலை மார்பத்தோர்
வெறிய தாகிய நுசுப்பிலர் சிலையென வியன்மிகு வயினுள்ளோர்.

சிறிய கண்ணினை உடையவரும், மிகவும் நீண்ட மூக்கினை உடையவரும்,
இணைந்து நெருங்கிய புருவம் உடையவரும், குறுகிய காதினை உடையவரும், உயர்ந்து
நீண்ட பற்களை உடையவரும், கோணிவளைந்த கழுத்தை உடையவரும், மறுக்கள்
பொருந்திய முகத்தை உடையவரும், தேமல் படாத திரண்ட முலைகொண்ட
மார்பை உடையவரும், சிறுகிய இடை இல்லாதவரும், கல்லைபோலப் பருத்த
உரம்கொண்ட வயிற்றை உடையவரும். 70

காயநூல்முறை உரைத்திடும் இயல்பிலாக் கடிதட நிதம்பத்தோர்
வாயும் அங்கையும் நகமுமுள் ளடிகளும் வனப்புறு சிவப்பில்லோர்
மேய சின்மயிர் பரந்திடு பதத்தினர் மென்சிறை எகினம்போல்
தூய நன்னடை இல்லவர் அங்குலி தொல்புவி தோயாதோர்,

சாமுத்திரிகா சாத்திர நூலில் சொன்னபிரகாரம் இயல்பு அமையாத அல்குலை (பெண்குறி) உடையவரும், வாயும், உள்ளங்கையும், நகமும், உள்ளங்கால்களும், வனப்புடைய சிவப்பாக இல்லாதவரும், மிகச் சிறிய மயிர்கள் பரந்து காணும் காலினை உடையவரும், மெல்லிய சிறகினை உடைய அன்னப்பறவைபோலத் தூய்மையான நல்ல சிறந்த நடை இல்லாதவரும், கால்விரல்கள் பழையதான இப்பூமியில் படாத படி நடப்பவரும். 71

இனைய தன்மைய ராகிய மாதர்கள் ஏனையர் இவர்யாரும்
புனையு மங்கல மாகிய கடிவினை புரிதர வரையாதோர்
அனைய ரேயெனின் வேண்டலன் முழுவதும் அவரியல் அணுகாத
வனிதை யுண்டெனின் வேண்டுவன் தேர்ந்தனை மரபினில் தருகென்றான்:

இவ்வாறான குறைகள் காணப்பெறும் பெண்களும் இன்னும் பிறகுற்றமும் உடைய மற்றைய பெண்களும் ஆகிய இவர்கள் யாவரும் அணிசிறக்கப்பெறுகின்ற தாலியை அணிந்து திருமணஞ்செய்துகொள்வதற்கு ஏற்றுக்கொள்ளப்படாதவர்கள். ஆகவே எனக்கு நேரும் பெண் இக்குற்றங்கள் எவையேனும் பொருந்தியவராயின் அவரை நான் விரும்பேன். இந்த குற்றமுடைய பெண்களின் இயல்புகள் யாவ தொன்றேனும் பொருந்தப்பெறாத பெண் உண்டெனின் அவளை விரும்புவேன். இதனை ஆராய்ந்து நீ முறையாகத் தேடித்தருவாயாக எனத் தந்தை குச்சகரை மகன் மிருகண்டுயர் கேட்டார். 72

காட்டில் நின்றிடு குற்றியின் நோற்புறு கவுச்சிகன் இவைகூறக்
கேட்டு மூரலும் உவகையுங் கிடைத்தனன் கேடில்சீர் உலகுள்ள
நாட்ட கந்தனில் நாடிநல் லியல்புள நங்கையை நின்பாலிற்
கூட்டு கின்றனன் மானுதல் ஒழிகெனக் குச்சகன் உரைசெய்தான்.

காட்டில் நிற்கின்ற மரக்குற்றியைப்போல அசைவற்றிருந்து தவம்செய்யும் கவுச்சிகன் என்னும் முனிவன் இவைகூறுதலும் அதனைத் தந்தையான குச்சகர் கேட்டுப் புன்சிரிப்பும் மகிழ்ச்சியும் உடன்தோன்ற மகனைநோக்கிக் கேடில்லாத சிறப்புடைய இந்தப் பூவுலகெங்கும் நான் தேடி நீ விரும்பியபடி குறைவிலா இயல்பு நிறைந்த பெண்ணை உன்னுடன் திருமணமுறைபால் சேர்க்கின்றேன். இதனைப் பற்றிய ஐயப்பாடுகொண்ட எண்ணங்களை நீக்குவாயாக எனக் கூறியருளினர். 73

உரைத்த குச்சகன் மைந்தனை நிறுவியே ஒல்லைசென் றகிலத்தில்
திருத்த குஞ்சுடர் மலிதரு செம்பொனிற் செய்ததோர் அணிநாப்பண்
அருத்தி சேர்தரக் குயிற்றிட வேண்டியோர் அருமணி தனைக்கொள்வான்
கருத்தி லுன்னுபு தெரிபவன் போல்ஒரு கன்னியைத் தேர்கின்றன்.

இவ்வாறு கூறிய குச்சகமுனிவர் மகனை அங்கு நிற்பாட்டிவிட்டு, அவ்விடத்தில் நின்றும் விரைவில் அகன்றுசென்று மகனர் விரும்பிய சிறப்புக்களைக்கொண்ட பெண் எங்குற்றாள் என மனக்கருத்தால் நன்கு ஆராய்கிறார். அது எதுபோலும் எனின்

இப்பூவுலகின் திருந்திய ஒளியுடைய பொன்னினுற் செய்யப்பெறும் ஆபரண நடுவிலே அதற்கு ஒப்பாகப் பொருத்திவைக்க வேண்டிய ஓர் அழகிய நல்ல இரத்தினத்தைத் தேடித்திரிவான் போலத் தானும் இந்த இயல்புடன் கூடிய ஒரு கன்னி எங்குற்றுள் எனச் சிந்தையால் நாடிக் குச்சகர் தெளிகின்றுர். 74

## வேறு

அன்னவன் றன்னேர் முனிவரர் சிலர்வந் தணுகலும் அவரொடும் வினவிச்
சென்னிதன் தேயத் தநாமயம் என்னும் செயிரிலா வனத்துசத் தியன்பாற்
கன்னிகை யிருத்தல் உணர்ந்துமற் றவன்பாற் கதுமெனச் சேறலுங் காணுஉத்
தன்னடி வணங்க வெதிருறத் தொழுது தழுவியே அவனேடுஞ் சார.

அவ்வாறுகத் தேடுதல் தலைப்பட்ட குச்சக முனிவன் நேரே; சில முனிவர் வந்து அணுகுதலும் அவர்களுடன் கலந்து இந்தப் பெண்ணின் நிலைமையைக் கேட்டு வினவுதலும் அப்போது அவர்கள் மூலமாகச் சோழதேசத்திலே அநாமயம் என்னும் குற்றமற்ற தபோவனத்திருக்கின்ற உசத்திய முனிவன் என்பவரிடத்து இக்குறைகள் இலாத கன்னிகை ஒருத்தி இருப்பதை அறிந்து குச்சக முனிவர் உடனுக உசத்திய முனிவர் இடமாகச் சேர்தலும் அப்போது குச்சகர் வரவுகண்டு உசத்தியர் குச்சகர் பாதத்தில் தாழ்ந்து வணங்குதலும்; குச்சகரும் தாமும் பதிலாக வணக்கம் புரிந்து அணைத்துத் தழுவியவாறு உசத்திய முனிவருடன் உட்புகுந்தார். 75

மாசற வியன்ற உறையுளிற் கொடுபோய் வரன்முறை வழாமலே அமைத்த
ஆசனத் திருத்திக் கன்னிகை யொடுதன் பன்னியை யாயிடை அழைத்துத்
தேசிக னுற்றுன் பணிமினீர் என்னுச் சென்னியால் இறைஞ்சுவித் துரிய
பூசனை புரிந்து நகையொடு முகமன் புகன்றள வளாயினன் புனிதன்

குற்றம் யாவுமில்லாத வண்ணம், அமைந்துள்ள தனது ஆச்சிரமத்தில், குச்சக முனிவரை உசத்திய முனிவர் அழைத்துக்கொண்டு சென்று; விதிமுறை தவருமல் அமைக்கப்பட்ட ஆசனத்தில் இருத்தித் தன்மகளான கன்னியையும், மனைவியையும் அவ்விடத்தில் வருவித்து அவர்களை நோக்கி, எங்கள் குருநாதன் வந்தார்; அவரை நீங்கள் வணங்குங்கள் என்று கூறித் தலையால் அவரை வணங்குவித்துப் பின்னர் அவர்க்குரிய வழிபாடுகளைச் செய்து புன்முறுவலோடும் உபசார வசனங்களைக் கூறி அளவளாவிக் கலந்து பேசிக்கொண்டிருந்தார் பரிசுத்தரான உசத்திய முனிவர். 76

அறுசுவை கெழுவும் நறியசிற் றுண்டி அமுதினில் தூயன அருத்திக்
குறைவறும் அடிகட் கென்னிடை வேண்டுங் கொள்கைய தென்னெனக் கூற
மறுவறு தவத்துக் குச்சக முனிவன் மகிழ்ந்துநீ மாதவம் புரிந்து
பெறுமகள் தன்னை யெனதொரு மகற்குப் பேசுவான் பெயர்ந்தனன் என்முன்.

ஆறுவகைச் சுவை பொருந்திய நல்ல சிற்றுண்டி அமிர்தத்திலும் தூய்மை உடையனவாகப் பொருந்தியதை உண்பித்துப் பின்னர் குச்சகரை நோக்கி ஒரு குறைவுமில்லாத பெரியோய் உமக்கு என்னிடத்து ஆகவேண்டும் கருமம் யாது? எனக் கூறுவீராக எனலும், அப்போது அதுகேட்ட குற்றமற்ற தவத்தையுடைய குச்சக முனிவர் மகிழ்ச்சிகொண்டு உசத்திய முனிவரைப் பார்த்து நீர் பெருந்தவம் செய்து பெற்ற புதல்வியை எனது ஒரு மகனுக்குத் திருமணம் செய்வதற்குப் பெண் பேசும்படியாக இவ்விடம் வந்தேன் என்று கூறினுர். 77

இனைய்சொல் வினவி முனிவரன் மகிழா என்மகள் விருத்தையை இயல்சேர்
உனதுமைந் தற்கு நல்கமுன் செய்த உயர்தவம் என்கொலென் றுரைத்து
மனமுற நகையும் உவகையுங் கிளர மணவினை இசைந்துமா தவத்துப்
புனிதனை அங்கட் சிலபகல் இருத்திப் போற்றிசெய் தொழுகுறும் பொழுதின்

இந்தச் சொல்லை உசத்திய முனிவர் கேட்டலும் பெரிதும் மகிழ்வாகி எனது மகள் விருத்தை என்பாளைத் தவவியல்புகொண்ட உனது மைந்தர்க்குத் திருமணமாகக் கொடுப்பதற்கு நான் முன்னே செய்துகொண்ட உயர்வான தவம் என்னுகுமோ என்று கூறி மனத்தில் மகிழ்வும், சிரிப்பும் உடன் தோன்ற திருமண இசைவுகொண்டு மாபெரும் தவத்தின் புனிதனுகிய குச்சகரை அங்கு சிலநாள் தங்கும்படி இருத்தி அவரைப் போற்றிசெய்து ஒழுகிவரும் காலத்தில் 78

## வேறு

பங்கமில் உசத்தியன் பன்னியாகிய, மங்கலை விடுத்திட மகள்வி ருத்தைதான்
அங்குள இகுளையர் ஆயந் தன்னுடன், செங்கயல் பாய்புனல் திளைப்பப் போயினுள்

பங்கப்படாத தவவாழ்க்கை உடைய உசத்திய முனிவனின் மனைவியாகிய மங்கலை என்னும் பெயருடையாளை; சில கன்னிப்பெண்கள் அணைந்து அவள் மகள் விருத்தையை நீராடும்படி செல்வதற்குத் தம்முடனுக விடுக்கும்படி வேண்டினுர்கள். அவ்வாறு மங்கலை விடுத்திட மகளான விருத்தை, கன்னியரான தோழிப் பெண்கள் கூட்டத்துடன் செங்கயல் மீன்கள் பாய்ந்தோடும் ஆற்றுநீரில் நீராடும்படி சென்ருள். 79

காடுற வந்திடு கலுழி மாண்புனல், ஆடினள் மகிழ்சிறந் தணங்க ரொடு
மாடுறுபொதும்பர்போய் மலர்கொய் தன்னவை, சூடினள் இருந்தனள்தொடலைஆற்றியே

காட்டினூடு பெருகி ஓடும் சிறந்த ஆற்றுநீரில் நீராடினுளாகி மகிழ்வுற்று, அக்கன்னித் தோழியருடன் பக்கராக உள்ள சோலையில் சென்று பூக்களைக் கொய்து அவைகளைச் சூடிக்கொண்டு அவ்விடம் சிறிது விளையாடிக்கொண்டு இருந்தாள். 80

பாசிழை மங்கையர் பண்ணை யோடெழீஇ ஆசறு பொதும்பினும் அணங்கையன்னவள்
மாசறு தாரகை மரபிற் சூழ்தருந், தேசுறு மதியெனத் திரும்பும் வேலையே.

பின்னர் பசிய ஆபரணங்களை அணிந்த பெண்கள் கூட்டத்துடன் எழுந்து குறை நீங்கிய சோலையை விடுத்துப் புறப்பட்டுத் தேவப் பெண்களை ஒத்த விருத்தை என்பவள், தேசுமிக்க சந்திரதேவனைச் சூழ்ந்துள்ள மாசற்ற வெள்ளிகள் போல மற்றும் தோழியர் தன்னைக் கூட்டமாக சூழும்படியாக திரும்பி வீடுநோக்கி வரும் வேளையில் 81

உருகெழு கனையொலி உருமிக் கான்றிடுங், கருமுகில் இஃதெனக் கனன்று காய்கனல்
சொரிதரும் விழியது சூர்த்த மெய்யது, பெருமத நதியொடு பெயரு கின்றதே

அச்சத்தை விளைவிக்கின்ற பேரோசையுடன் பொருந்தும் இடியினைக் கக்குகின்ற கரியமுகில் இது எனும்படியாகக் கருமையான மேனிகொண்டது; கோபம் பொங்கிட அங்கினிப் பொறிகள் சொரிகின்ற கண்ணினை உடையது; யாவரும் அச்சம் கொள்ளும்படியான பயங்கரமேனி உடையது; பெருகும் அதன் மதநீர் ஆறுபோலப் பெருகிட ஓர் யானை இவர்கள் திரும்பிய அவ்வழியால் வந்தது. 82

தாழுறு கரத்தது தடத்தின் சால்பெனக், காழுறும் எயிற்றது கறைகொள் காலதால்
ஏழுயர் குறும்பொறை இபமொன் றேற்றெதிர், பாழிய வரைதுகள் படுத்துச் சென்றதே

இவ்வாறு வரும் யானை தாழ்ந்து தூங்கும் கையையுடையது. மலையின் வைரம் ஒப்ப விசாலித்து நீண்ட தந்தங்களையுடையது. உரல்போன்ற காலை உடையது. காட்டில் காணும் சிறுமலைபோல உயர்ந்த வடிவுடைய இந்த ஒரு ஆண்யானை தான்வரும் பாதைகளில் காணும் மலைகளை எல்லாம் பொடியாக்கி உடைத்தவாறு வருகின்றது. 83

காண்டலும் வெருவினர்கவன்றவ் வாறுசெல், ஆண்டகை யோர்களும் அகன்றுசிந்தினர்
நீண்டிடு கடலிடை நிமிர்ந்த வெவ்விடம், ஈண்டலும் இரிந்தபுத் தேளிர் என்னவே.

இந்த யானை வரக்கண்டதும் பயந்து அவ்விடத்தை விட்டுச் சிதறி ஓடிப்போகினார்கள். யானை வரும் அவ்வழியால் வந்துகொண்டிருந்த மிக்க வீரரான ஆண்களும், எதுபோலெனின் பெரிய பாற்கடலில் அன்று நிமிர்ந்தெழுந்த ஆலகாலம் என்னும் நஞ்சைக் கண்டு பயந்து ஓடிய தேவர்கள் போல இந்த ஆண்களும் யானை வரக் கண்டு ஓடினார்கள். 84

கன்னிகை விருத்தையாள்கண்டு துன்புறு, அன்னமென் நடையினர் அகன்றுசிந்தலும்
என்னினி இழைப்பதென் றிரங்கி யேங்கியே, உன்னருங் கடுப்பினில் உஞற்றியோடலும்

கன்னிகையான விருத்தை என்பாள் ஆனையைக் கண்டு துன்புற்று ஏங்கிநிற்ப; அவளுடன் உடனுக வந்த அன்னம்போலும் நடையுடைய தோழியர் அவளை விட்டு அகன்று யாவரும் ஓடிவிடுதலும்; தனித்துக்கொண்டவளான விருத்தை ஐயோ நான் இனி என்செய்வேன் என இரங்கி அழுது ஏக்கமுற்று நினைக்கவும் முடியாத வேகத்துடன் ஓடிப்போதலும். 85

கீழ்ந்தறை போகிய கிளைஞ ராமெனத், தாழ்ந்திடு பசும்புதல் செறியத் தான்மறைந்
தாழ்ந்திடு கூவலொன் றணுக அன்னதில், வீழ்ந்தனள் அழுந்தினள் விளிவுற்றுளரோ

வேகத்துடன் ஓடும் அவள் முன்பாக ஆழமாயிருக்கின்ற பாழ்ங்கிணறு ஒன்று ஒழுக்கம் முதலியவற்றால் கீழ்மைப்பட்டு வளனற்று இருக்கும் சுற்றத்தார்களைப் போல; சாய்ந்து தாழ்வுற்ற பசிய புல்லால் கிணறு தெரியாதபடி மூடுண்டு இருந்தது. ஓடிய விருத்தை அக்கிணற்றைச் சேர்தலும் அதில் தவறிவீழ்ந்தாள். அதில் நீரில் ஆழ்ந்து இறந்துபோனாள். 86

முடங்குளை அலங்குறு முதிய பூநுதல், மடங்கலின் ஏறெதிர் வரினும் மாறுகொள்
கடங்கலுள் மால்கரி கல்லென் ஆர்ப்பொடு, நடந்தது மலையமா னுடு சாரவே.

வளைந்த பிடர்மயிர் சிலிர்க்கின்ற முற்றிப் பொலிந்த நெற்றிகொண்ட ஆண்சிங்கம் எதிரே வந்தாலும் அதை எதிர்க்கவல்ல மதநீர் சிந்தும் அந்தப் பெரிய யானை "கல்" என்னும் இரைச்சலோசையுடன் சேரநாட்டை நோக்கிச் சென்றது. 87

இரிந்திடு மாதரார் யாண்டு மாகியே, விரிந்திடு வோர்குழீஇ வியர்க்கு மேனியர்
சரிந்திடு கூந்தலர் தளரும் நெஞ்சினர், பிரிந்திடும் உவகையர் பெயர்ந்து நாடினர்.

விருத்தையை முன்னர் பிரிந்து திக்குவேறாகி ஓடிய பெண்கள் யாவரும் ஒருங்காக மீண்டுவந்து கூடி; அவர்கள் பயத்தாலும் ஓடிய களைப்பாலும் வேர்வை

கொள்ளும் மேனியராகியும், சோர்வுற்றுக் குலைந்த கூந்தலையுடையராயும் தளர்வுறுகின்ற நெஞ்சினராகியும் மனக்களிப்பு நீங்கிக் கவலையும் துயரும் கூடியவராய், ஒருவரை ஒருவர் தேடித்தேடி விருத்தையையும் தேடினார்கள். 88

தண்டம தெங்கணுந் தானஞ் சிந்திடக், கொண்டலின் எய்திய கோட்டு மாதிரங்
கண்டிலர் கன்னிகை தனையுங் காண்கிலர், உண்டிலை யெனவுயிர் உயிர்ப்பு நீங்கினார்

வழிமுழுதும் எங்கும் மதநீர்பாய, மழைமேகம் போல அவ்விடத்துப் போந்த கொம்பை உடைய யானையையும் அப்பெண்கள் காணுதவராயும், அப்பால் கன்னிகை விருத்தையும் அங்கு தோன்றக் காணுமையால் அவர்கள் திகிலடைந்து, 'இவர்கள் உயிர் அற்றாரோ அல்லவோ எனக் கண்டார் ஐயுறும்படியாக, மூச்சடங்கப்பெற்றார்கள் 89

மண்ணிடையாறென வழிக்கொண்டேகவே, கண்ணினா புனலுடக்கலுழ்ந்து சோர்வுறத்
துண்ணென உணர்வுறத் துளங்கிச் சூழ்கனல் புண்ணுறுவோரெனப் புலம்பல்மேயினார்

அவர்கள் கண்ணிலிருந்தும் வழிகின்ற கண்ணீர் ஆறுபோல வழிக்கொண்டு பூமியில் பெருக அழுது சோர்வுற்றும், திடுக்கத்துடன் மீண்டும் உணர்வு வருங்கால் உடலம் நடுநடுங்கி நெருப்புச் சூழ்ந்து சுட்டெரிக்கும் புண்ணுடையாரைப் போல் துடிதுடித்துப் பதைபதைத்துப் புலம்பத் தொடங்கினார்கள். 90

### வேறு

பெண்ணுக் கணிகலமே பேரழகுக் கோருருவே
கண்ணுக் கணியே கமலத்துச் செந்திருவே
மண்ணிற் புனல்படிந்தாய் வானதியும் ஆடுவதற்
கெண்ணித் துணிந்தோ எமைவிட்டுப் போயினையே

பெண்களுக்கெல்லாம் அழகுதரும் ஆபரணம் போல்பவளே, அழகு என்னும் பொருளுக்கு ஓர் வடிவுகொண்டவளே, எங்கள் கண்ணுக்கு விருந்தானவளே, தாமரைப் பூவில் வாழும் இலக்குமியே, பூமியில் உள்ள ஆற்றுநீரில் மூழ்கினாய். இப்போது அது பற்றாதெனவே வான் உலகத்திலிருக்கும் கங்கையிலும் நீராட எண்ணியோ துணிந்து எம்மை விட்டுப் போய்விட்டாயோ. 91

வன்னப் புனலாட்டி வல்லே புறங்காத்தென்
மின்னைத் தருதி ரெனவே விடைகொடுத்த
அன்னைக்கென் சொல்வேம் அடுகளிற்றின் முன்னாக
உன்னைத் தனிவிட் டுயிர்கொண்டு போந்தனமே

அம்மா விருத்தை! உனது தாய் மங்கலை எங்களுடன் கூடி உன்னை நீராட விடுங்கால் எங்களை நோக்கி; மக்களே என்மகளை அழகிய நீரில் நீராட்டி இவளை அழைத்துவரும் போது பக்குவமாக இவள் புறத்தில் காவல்கொண்டு என்பிள்ளையை என்னிடம் சேர்த்துவிடுங்கள் எனச் சொல்லினாள். அவ்வாறு சொல்லி விடைதந்த உன் அன்னைக்கு இனிச் சென்று என்னதான் சொல்வோம். ஐயையோ அக்கொலை யானையின் முன்னாக உன்னைத் தனியே விடுத்து எமது உயிர்மேலாசை கொண்டு ஏனோ நாம் தப்பி ஓடிச்சென்றனமே! 92

ஐயர் உசத்தியரும் அன்னையெனும் மங்கலையும்
வையம் பரவுகின்ற மாதுலராங் குச்சகருங்
கையறவின் மூழ்கக் கரந்தாய் இனியொருகால்
செய்ய முகமுந் திருநகையுங் காட்டாயோ.

உனது ஐயாவான உசத்தியருப், அம்மை என்னும் மங்கலையும் இப்பூமியுள்ளார் யாவரும் போற்றும் மாமனான குச்சகரும் பெருங்கவலையில் மூழ்க நீ எங்கு தான் போய் ஒழித்தாய். அம்மா இனி ஒருகால் உனது செவ்விய ஒளி உடைய முகமும் உன் சிறப்பான சிரிப்பையும் எமக்குக் காட்டாயோ. 93

என்னப் பலவும் புலம்பி இரங்குற்றே
உன்னற் கருஞ்சீர் உசத்தியன்றான் நற்றவத்தின்
மன்னுற்ற தெய்வ வனத்தின் மனை வாழ்க்கைப்
பன்னிக் கிவையுரைத்துப் பாவைநல்லார் ஆவலித்தார்.

எனப் பல வார்த்தைகளையும் சொல்லிப்புலப்பி அழுது இரங்குற்ற அப்பெண்கள் யாரும் எம்மால் நினைப்பரிய பெரும் சிறப்பினையுடைய உசத்தியமுனிவர் நல்ல தவத்தில் ஒழுகி வாழ்ந்திருக்கும் தெய்வீக வனத்திடத்து அவர் மனையில்சென்று அவரின் மனைவியான மங்கலைக்கு இந்நிகழ்ச்சிகளைச் சொல்லி அந்த நற்குணமுடைய பெண்கள் யாவரும் குழறி அழுதார்கள். 94

கேட்டிடலும் அன்னை வயிறதுக்கிக் கேழ்கிளர்தீ
யூட்டரக்கே யென்ன உருகி மனமறுகி
வாட்டடங்கண் நீர்குதிப்ப வாய்வெரீஇத் தன்கணவன்
தாட்டுணையில் வீழ்ந்து புகுந்தபடி சாற்றினளால்.

இச்செய்தி கேட்டலும் தாயாகிய மங்கலை தனது வயிற்றில் மோதி அடித்துக் கொண்டு ஒளிவிட்டெரிகின்ற நெருப்பில் இட்ட மெழுகுபோல உருகி மனம் மறுகச் சோர்ந்து கூரிய விசாலித்த கண்களில் நின்றும் நீர்பெருக வாய்விட்டுக் குழறி அழுது தனது கணவன்காலில் விழுந்து தனது மகளாரின் செயலைச் சொன்னாள். 95

ஒன்றுபுரி காட்சி முனிவன் உவைகேட்டுக்
கன்றுபிரி தாயின் கவன்றரற்றிக் கன்னியொடு
சென்றுபிரி வுற்றோரை நோக்கிச் சினக்களிறு
கொன்றதுவோ அஞ்சாது கூறுமெனச் செப்புதலும்.

சிவம் ஒன்றே தெளியும் காட்சியுடைய உசத்தியமுனிவன் இவ்வார்த்தை கேட்டலும் கன்றைப் பிரிந்த தாய்ப்பசுவின் நிலையாகிக் கலங்கி அழுது கூச்சலிட்டுத் தனது மகளாரோடு உடன்சென்று பிரிந்துவந்த பிள்ளைகளைநோக்கி "மக்களே உள்ளது சொல்லுங்கள்; கோபமுடைய அந்த யானை எனது மகளைக் கொன்றதுவோ? எது வாயிற்று எனப் பயப்படாது கூறுவீராக" என்றார். 96

தூயபுன லாடித் துறைபுகுந்து சூழ்பொதும்பில்
ஆயமுடன் ஆடி யகன்றிங்கு வந்திடலுங்
காயுமழல் வெங்கட் கடகளிறு வந்ததுகண்
டோயுமுணர் வெய்தி எல்லோமும் ஓடினமால்

அப்போது அவர்கள் சொல்வார் அப்பனே! நாங்கள் தூய்மையான நீரில் நீராடிக் கரைசேர்ந்து அதனைச் சூழ்ந்துள்ள பூஞ்சோலையில் கூட்டமாக விளையாடிப் பின்னர் நீங்கி இங்கே வந்திடுதலும் சுடுகின்ற நெருப்பைப்போலும் பொல்லாத கண்ணுடைய மதயானை வந்ததை நாம் காண்டு ஏங்கி உணர்வுசோர்ந்து எல்லோரும் சிதறி ஓடினோம்.

ஓடியுலையா ஒருவர் நெறியொருவர்
கூடல் இலதா அணியின் குழாஞ்சிந்திச்
சாடு மதகரியில் தப்பி விருத்தைதனைத்
தேடியங்ஙன் காணாது சென்றனம்யாம் என்றிடலும்.

அங்கு இங்காக ஓடி உலைந்து ஒருவர்போன மார்க்கம் இன்னொருவர் போகாத படி கூட்டத்தைப் பிரிந்து பயத்துடன் வேகமாக ஓடிமறைந்து கொலைபுரியும் அந்த யானையில் நின்றும் ஒருவாறு தப்பினோம். திரும்பி நாம் எல்லாரும் சேர்ந்துள்ள போது விருத்தையைக் காணாது தேடியபின் இங்கு வந்துள்ளோம் என அப்பிள்ளை கள் சொல்லுதலும். 98

சென்றங்கவ் வெல்லைதனில் தேடித் தியங்குற்று
நின்றான் மகள்தன் நிறங்கிளரும் பொற்கலனோர்
ஒன்றாக வெவ்வே றொருநெறியில் சிந்திடக்கண்
டென்றாய் படர்ந்தநெறி ஈதுகொலென் றேமுற்றான்.

இதனைக்கேட்ட உசத்தியமுனிவர் உடனேச்சென்று அந்த இடத்தை அடைந்து எங்குத்தேடி மகளைக் காணாது தியங்கி ஏங்கிநின்றார்க்கு மகளினுடைய ஒளிநிறங் கொண்ட பொன் ஆபரணங்கள் ஒவ்வொன்றாகக் கழன்று வீழ்ந்து ஒருபாதையூடு சிந்திக்கிடக்கக் கண்ணுற்று இந்த எனது அம்மைசென்ற பாதை இதுவாகும்போலும் என மயங்கினர். 99

பூண்போ கியநெறியே தொட்டுப் புதல்விதனைக்
காண்போ மெனவே கனங்குழையா ரோடேகி
மாண்போய கூவலொன்று வந்தணுக ஆங்கதனில்
சேண்போய தன்மகளைக் கண்டு தெருமந்தான்.

ஆபரணங்கள் தென்படும் பாதையூடாகச் சென்று மகளைக் காண்போம் என மற்றும் அழகிய பெண்களுடன் செல்லலும் அவர்கள் முன்பு சிறப்புநீங்கிய பாழ்ங் கிணறுவந்து சேர்தலும் அந்தக் கிணற்றினுள்ளே வானமடைந்த (இறந்த) தனது மகளைக்கண்டு திடுக்குற்று நிலைகலங்கினர். 100

வேறு

கூவலுறு வதுநோக்கி நெடிதுயிர்த்து விழிவழிநீர் குதிப்பக் குப்புற்
றுவலியா மகளையெடுத் தகன்கரையின் பாற்படுத்தி அழுங்கலோடும்
பாவையர்கள் தழீஇக்கொண்டு புலம்பினரால் அதுகேட்டுப் பயந்து நற்றாய்
காவிலுறு கோகிலம்போல் நெடிதரற்றிப் பெருந்துயரக் கடலுட் பட்டாள்.

தமது மகள் கிணற்றிலே இறந்துகிடக்கக்கண்டு பெரிது மூச்செறிந்து கண்க ளின்வழி கண்ணீர் குதித்தோட கிணற்றில் குதித்து சோகங்கொண்டு மகளாரைத் தூக்கி எடுத்துக் கிணற்றின் கரையில் பாங்காரக உடலத்தை வைத்துக் கூச்சலிட லோடும் அந்நிலையில் பெண்கள் எல்லாரும் தழுவிக் காண்டு அழுதுபுலம்பினர்கள். அதைக்கேட்டு, பெற்ற நற்றாயான மங்கலை தாங்கொணாத துயரங்கொண்டு சோலையில் கூவுங் குயில்போல ஓயாது வாய்விட்டுப் புலம்பி அழுது துயரம் எனனும் கடலினூடு அழுந்துவாளாயினள்.

தன்பால்வந் தவதரித்த நங்கைதனைக் கைவிட்டுத் தரியா ளாகி
அன்பாலே உயிர்பதைப்ப வயிறதுக்கி ஆகுலியா அரற்றி ஏங்கி
மின்பாலோர் மின்படிந்த தன்மையென அவளாக மிசையே வீழ்ந்து
தென்பாலிற் புகுந்தனையோ ஓமகளே யெனப்புலம்பித் தேம்பலுற்றாள்.

தன்னிடத்தே வந்து அவதரித்த பெண்ணைக் கைவிட்டுத் தரித்து இருக்கமாட்டாதவளாகி மகள்மேலான அன்பினாலே உயிர் பதைபதைப்ப வயிற்றை மோதிப் பிசைந்து தலையில்மோதி ஆகுலப் கொண்டு பேரோசையுடன் அழுது ஏங்கி ஒரு மின்னல்மேல் இன்னுமொரு மின்னல் படிந்துள்ளது என்பதுபோல அழகிய மகளின் உடலம் மேலாகச் சாய்ந்துவிழ்ந்து ஐயோ! எனது மகளே என்னைவிட்டுத் தென் திசைக்குப் போய்விட்டாயோ! எனப் புலம்பித் தேம்பித்தேம்பி அழுதாள். 102

அன்னேயோ அன்னேயோ ஆகோடிய தறனேயோ அறியேன் அந்தோ
முன்னேயோ நெடுங்காலங் குழவியின்றிப் பெருநோன்பு முயன்று பெற்ற
மின்னேயோ உயிரிழந்து வெள்ளிடையிற் கிடந்திடுமோல் விதியார் செய்கை
இன்னேயோ யானொருத்தி பெண்பிறந்து பெற்றபயன் இதுவே யன்றே.

எனது அன்னையோ! எனது அம்மாவோ ஆ! கொடியதோ தருமம்; இதை நான் அறியேன் அந்தோ! முன்காலமாக நெடுநாள் குழந்தை இல்லாது பெரும் தவஞ்செய்து நான்பெற்ற என் ஒளியான பிள்ளையோ இப்படியாக உயிர்நீங்கி வெளியிலே கிடந்திடும்! பிரமன் செய்கையும் இதுவா? நான் ஒருத்தி பெண்ணாகப் பிறந்தேன். பெண்ணாகப் பிறப்பதே பெரும் துன்பம். அப்படி இருப்பவும் நான் பெற்ற பயன் இதுவோதான். 103

புலிக்கணங்கள் திரிகானில் ஒருமானை வளர்த்ததனைப் போக்கி நின்றே
அலக்கணுறு வோரெனவே கைவிட்டுத் தமியேனும் அழுங்கா நின்றேன்
மலர்க்கமலத் திருவைநிகர் என்மகளைக் கொல்லியமுன் வந்த தந்தக்
கோலைக்க ளிற்றின் வடிவன்றே கொடியேன்செய் பெரும்பவத்தின் கோல மன்றே.

கொடிய புலிகள் கூட்டமாக வாழும் காட்டில் முன்யோசனை இன்றி ஒரு மானை வளர்த்து அப்புலிக்கே அம்மான் இரையாகப் போகவிட்டு நின்றே அலக்கண் உறுவார்போல் அம்மா மகளே காட்டில் தனியே உன்னைப் போக்கிவிட்டு நான் அழுது புலம்பிநின்றேன். தாமரைமலர் மீதிருக்கும் இலக்குமியை ஒத்த என் மகளைக் கொல்லும்படியாக வந்த அந்தக் கொலையானையின் வடிவம்தான் கொடியேன் நான் முன்செய்த பாவவினையின் வடிவம்போலும். 104

அறங்காட்டிற் சென்றதுவோ தெய்வதமும் இங்கிலையோ அரிதா முத்தித்
திறங்காட்டுந் தவநெறியும் பொய்த்தனவோ கலியுமினிச் சேர்ந்த தேயோ
மறங்காட்டும் வனக்களிறு வந்தடர்க்க ஈண்டெனது மாது மாண்டு
புறங்காட்டிற் கிடந்திடுமோ என்னேயென் னேயிதுவோர் புதுமை யாமே.

தருமம் காடு சென்றதோ (அழிந்ததோ) தெய்வமும் இங்கே இல்லையோ, பெறற்கரிய முத்திநிலையான இன்பத்தைப் பெறும்படி காட்டும் தவ ஒழுக்கமும் பொய்த்தனவோ, இனிமேலாக கலியும் தோன்றியதோ (கலி — துயரப்பெருக்கம்) கொடுமைகாட்டும் மதயானை வந்து தாக்க எனது பெண் மாண்டு அவலநிலைதரும் புறங்காட்டிலே இவ்வாறு கிடந்திடுமோ? என்னே இதை என்சொல்வேன் இது ஓர் புதுமையாகவல்லோ இருக்கின்றது;

இதுகாறும் தவவாழ்வுகொண்ட எமது குலத்தில் இத்தகைய துன்பம் நிகழ்ந்திலது; ஆகையால் இப்படி நிகழ்ந்தமையால் கலிசேர்ந்ததோ! தருமம் குன்றியதோ! தெய்வமும் இல்லையோ எனப் பிரலாபித்தாள். 105

வேறு

என்றிவை பலவும் பன்னி இடருழந் தரற்றும் வேலை
மன்றலங் குழலின் மாதர் வளைந்தனர் இரங்கி மாழ்க
ஒன்றிய கேளிர் அல்லா ரியாவரும் உருகி நைந்தார்
அன்றவண் நிகழ்க்த பூசல் ஆகுலம் அறைதற் பாற்றே.

என்று தாயான மங்கலை இவை பலவும்சொல்லி இடர்கூர்ந்து அழுதுபுலம்பும் நேரத்து பூவாசனையுடைய அழகிய கூந்தலுடைப் பெண்கள் எல்லாரும் வளைந்து கூடி அழுது மனத்துயரம் எய்திட, இந்த உசத்தியமுனிவருடன் ஒன்றுடனாக இணைந்துவாழும் சுற்றத்தவர் மட்டுமன்றி அந்த அநாமயம் என்னும் ஊரில் உள்ளார் அனைவரும் துயருற்று இப்பிள்ளையின் துர்மரணம் குறித்து உருகிவருந்தினர். அன்று அவ்விடத்தே நிகழ்ந்த துன்பநிலையை எடுத்துச்சொல்வதற்கு ஆருக்கும் முடியும்படி ஆகுமோ? ஆகாதே. 106

கோட்டமில் சிந்தை யோனுங் குச்சகன்குறுகி யுங்கண்
நாட்டநீர் பனிப்பச் சோரும் நங்கையர் தம்பா லெய்தி
மீட்டினித் தருவன் மாதை விம்மலிர் என்னு வேறோர்
மாட்டுற விருந்த தந்தைக் கினையன வகுத்துச் சொல்வான்.

கோணுதல் இல்லாத மனங்கொண்ட குச்சகமுனிவர் அங்கு சேர்ந்தார். கண்களில் நீர்பெருக அழுதுசோருகின்ற அப்பெண்களிடம் சென்றார். அவர்களைநோக்கி இப்பெண்ணை மீட்டும் உயிர்பெறச்செய்து தருவேன்; ஒருவரும் அழவேண்டாம் எனக் கூறி வேறோர் புறமாகத் துயரத்துடனிருந்த உசத்தியமுனிவன்பால்சென்று அவருக்கு இந்த வார்த்தைகளை வகுத்துச் சொல்கின்றார். 107

மறைமுத லாய நண்ணூல் மருளற உணரா மாக்கள்
சிறியரே முதியர் பாலர் சேயிழை மகளிர் இன்னோர்
உறுவதோர் அவலஞ் செய்தாய் ஊழ்வினை முறையும் ஓராய்
அறிவநீ இன்னே யாயின் ஆரிது தணிக்கற் பாலார்.

வேதங்கள் முதலாகச் சொல்லப்பெறும் நுணுக்கமான அறிவுடைய நூல்களைக் கற்றுச் சந்தேகம் விபரீதம் நீங்காத மனிதர்கள், சிறியவர்கள், வயதில் முதிர்ந்தோர்கள், பாலர்கள், சேல்மீனை ஒத்த கண் உடைய பெண்கள் ஆகிய இவர்கள் அடைந்துகொள்கின்ற அவலநிலையை நீயும் அடைகின்றாய். என்னே இது! ஊழ் எனப்படுவது யாது? அது எவ்வண்ணம் தொழில்படுவது என அறியாயோ? அறிவாளனே! நீயே இவ்வண்ணம் துன்பமுற்றால் வேறு யாரால் இத்தகைய துன்பத்தைத் தணித்துக்கொண்டு வாழமுடியும். 108

கேழையா மனத்தில் துன்பங் கிளத்தலை கேடு நீங்கி
நீளையா வுயிர்த்தார் போலிந் நேரிழைக் கன்னி தன்னை
நாளையான் விளித்து நின்பால் நல்குவன் நல்க நீநங்
காளையா னவற்குப் பின்னாட் கடிமணம் புரிதி அன்றே.

ஐயனே நான் சொல்வதைக் கேள். மனத்தில் துன்பத்தைக் கொள்ளாதே: உன் கேடுகள் யாவும் நீங்கி வாழநினை. நித்திரையின் நின்றும் விழித்தெழுவார் போல இந்த அழகிய பூண்களணிந்த உனது கன்னிப்பெண்ணை நாளை உயிர்பெறச் செய்து உனது இடமாகத் தருவன். எனது மகனுக்குப் பின்நாளில் திருமணம் செய்து கொடுப்பாயாக. 109

ஐயமேன் றுளத்தி லுன்னி அழுங்கலே விதியு மற்றே
மெய்யுணர் வதனுற் கண்டாம் விருத்தைதன் யாக்கை தன்னை
மொய்யுறு தயிலத் தோணி மூழ்குவித் திருத்தி யின்றே
ஒய்யென நோற்று மீட்டுத் தருகுவன் உயிரை யென்றுன்.

நான் சொல்வதைச் சந்தேகத்திற்குரியது என மனத்தில் எண்ணி மீண்டும் அழுது துயருருதே. விதியின் செயலும் அப்படித்தான் முடிபுபெற வேண்டியிருக்கிறது, உண்மையான ஞான உணர்வால் நான் இதனை அறிந்தேன். விருத்தையின் உடலத்தை வலியுற்ற தைலத்தால் நிரம்பிய பாத்திரத்தில் மூழ்குவித்து வைத்திரு, இன்றே யான்விரைவுடன் தவம்புரிந்து உயிரை மீட்டுத்தருவேன் என்றுன். 110

சாற்றிய துணர்ந்து தாதை தயிலத்தி லிட்டு மாதைப்
போற்றினன் இருப்ப மேலோன் போயோரு பொய்கை மூழ்கிக்
கூற்றுவற் புகழ்ந்து நோற்பக் கொடுங்குழை மடவார் அஞ்சக்
காற்றென முன்னர் வந்த களிறுமீண் டணைந்த தம்மா.

குச்சகர்சொன்ன வார்த்தையை உசத்தியமுனிவர் உணர்ந்து தனது பெண்ணின் உடலத்தைத் தைலத்தில் இட்டுப் பாதுகாத்து வைத்திருத்தலோடும் மேலவரான குச்சகர் அங்குநின்றும் நீங்கிப்போய் ஒரு குழக்கரையிலே மூழ்கி யமதேவனைப் புகழ்ந்து தவம்செய்தலும், அப்போது அழகிய குண்டலம் அணிந்த கன்னிப்பெண்கள் அஞ்சி ஓடும்படி வந்த யானை மீண்டு குளத்தைச் சேர்ந்தது. 111

தடமிகு புனலுட் புக்குத் தாளினுல் உழக்கிச் சாடிப்
படவர வனைய செப்பைகைப் பருவலித் தடக்கை தன்னுல்
இடைதோறுந் துழாவி நின்ற இருந்தவ முனிவற் பற்றிப்
பிடர்மிசை யேற்றிக் கொண்டு பெரிதுசேண் பெயர்ந்த தன்றே.

குளத்தில் நிரம்பிய நீரில் அந்த யானைபுகுந்து காலால் எங்கும் உழக்கிக் கலக்கி படம்விரித்த நாகபாம்பினை ஒத்து நீண்ட பெரும்வலியுடைய குதிக்கையதனுல் எவ்விடத்தும் நீரினுள் துழாவி அங்கு நீரில்மூழ்கித் தவம்செய்திருந்த குச்சகமுனிவரை பற்றித்தூக்கி எடுத்துத் தனது பிடரிமேல் ஏற்றிக்கொண்டு நெடுந்தூரமாக ஓடியது.

கோதறு குணத்தின் மேலாங் குச்சகன் என்னுந் தொல்பேர்
மாதவன் உணர்ந்து பின்னர் மதக்களி றதனை நோக்கி
ஈதெனைப் பற்றிச் செல்வ தென்கொல்கா ரணமென் றெண்ணி
ஓதியின் வலியா லன்ன தூழ்முறை உன்ன லுற்றுன்.

குற்றம் நீங்கிய குணத்தில் மேலானவரான குச்சகமுனிவர் என்னும் பழமை பொருந்திய பேரினை உடைய தபோதனர் இதனை உணர்ந்து, பின்னர் மதம் கொண்ட யானையைநோக்கி இந்த யானை என்னைப் பிடித்துச்செல்லவேண்டிய காரணம் என்னவாகும் என்று எண்ணி ஞான உணர்வின் வலிமையால் அந்த யானையினுடைய ஊழ்முறையை எண்ணி அறிகின்ருர்; குச்சகமுனிவரின் ஞான உணர்வில் யானையின் முந்திய பிறவி வரலாறு இவ்வண்ணமாகத் தோற்றமாகின்றது. 113

### வேறு

மாவ தத்தினை இழைத்திடும் பூட்கையின் மதநீர்
காவ தத்தினுங் கமழ்தரு கலிங்கநாட் டதன்பால்
ஆவ தத்தரோர் மாக்களவாழ் அரிபரம் அதனில்
தேவ தத்தன்என் றுளன்ஒரு வணிகரில் திலகன்.

பெரும் கொலையினைப் புரிகின்ற யானையின் மதநீரின் வாசனை ஒரு காதவதூரம் வரையில் மணம் வீசும் சிறப்புடைய கலிங்கநாட்டின்பாலாக ஆபத்தில் உதவும் கொடைவள்ளல்களை ஒத்த மக்கள் வாழ்கின்ற அரிபுரம் என்னும் நகரத்துத் தேவ தத்தன் என்று ஒரு வணிகர்களின் தலைவன் இருந்தான். 114

தவத்தின் அன்னவன் பெறுமகன் தருமதத் தன்எனப்
புவிக்கண் மேலவர் புகழ்செய அறம்புரி புகழோன்
கவற்சி யின்றியே மூவகைப் பொருளையுங் காண்போன்
உவப்பு நீடிய இருநிதிக் கிறையினும் உயர்ந்தோன்.

தவப்பெருஞ் சிறப்புடைய தேவதத்தன் என்பான் பெற்ற பிள்ளை ஒருவன் தருமதத்தன் என்னும் பெருடையன். அவன் பூமியின்கண் வாழும் பெரியோர் புகழும்படியாக நல்ல தருமங்களைச்செய்து பெரும்புகழ் ஈட்டியவன். எதனாலும் மனக்கவர்ச்சியுறாத எண்ணம் மண் பெண் பொன் என்னும் மூன்றையும் இயல்பாகப் பெறும் தன்மை உடையவன். பெரும் மகிழ்வைத்தருகின்ற சங்கநிதி பதுமநிதிக்கு அதிபனான குபேரனிலும் செல்வத்தால் உயர்ந்தவன். 115

தந்தை அன்னையும் இறத்தலுந் தமியனே யாகிச்
சிந்தை வெந்துயர் உழந்துபின் ஒருவகை தேற
அந்த வேலையின் அவன்பெருந் திருவினை அகற்ற
வந்து தோன்றினன் மனமருள் செய்வதோர் வாதி.

இவனுடைய தந்தையும் தாயும் இறந்துபோதலும் தான் தனியவனாகி மனத்தில் கொடிய துயரம் அடைந்து பின்பு ஒருவழி தேற்றம் அடைய, அந்த வேளையில் தருமதத்தன் செல்வத்தை நீக்கிப் பறிமுதல்செய்ய அவனிடம் வந்து தோன்றினான் மனமயக்கம் செய்யும் வித்தை உடைய இரசவாதி ஒருவன். 116

முண்டி தப்படு சென்னியன் தாதுவின் முயங்கு
குண்ட லத்தினன் கோலநூல் மார்பினன் நீற்றுப்
புண்ட ரத்தியல் நெற்றியன் கஞ்சுகன் புதியோன்
கண்டி கைக்கலன் புனைந்துளோன் வேத்திரக் கரத்தோன்.

இந்த இரசவாதி மொட்டையான தலையினை உடையவன். பொன்னாற்செய்த குண்டலம் அணிந்தவன். அழகிய பூநூல் அணிந்த மார்பை உடையவன். திருநீறு மூன்று குறிகளாக அணியப்பெற்ற நெற்றியை உடையவன். போர்வை அணிந்தவன். இந்நகருக்குப் புதியவன். உருத்திராக்க மாலை அணிந்தவன். பிரம்பு ஒன்று கையிற் பிடித்தோன். 117

அவனைக் கண்டனன் அடிமுறை வணங்கினன் அருவாஞ்
சிவனைக் கண்டன னெனப் பெருமகிழ் சிறந்தான்
புவனிக் குள்ளவர் என்னினுஞ் சாலவும் புதியர்
தவமிக் கோரிவர் என்றுகொண் டுறையுளிற் சார்ந்தான்.

தருமதத்தன் இந்த இரசவாதியைக் கண்டு அவன் காலில் தாழ்ந்து வணங்கினான். அவன் தோன்றாத உருவமிலாச் சிவபிரானை நேரே கண்டவன் என்னும் படியாகப் பெரும் மகிழ்ச்சியிற் சிறந்தான். இவர் இப்பூமியில் வாழ்பவர் என்றாலும் மிகவும் இவ்விடத்திற்குப் புதியவர் தவம் பெரிதுடையவர் என எண்ணிக்கொண்டு தனது இருப்பிடத்திற்கு இரசவாதியை அழைத்துச்சென்றான். 118

பொன்ன ருங்கலந் திருத்துபு குய்புடைப் புழுக்கல்
நன்ன லம்பெற அருத்தினன் முகமனும் நவின்றான்
பின்னர் அன்னவன் றனையெதிர் நோக்கினன் பெரியோய்
என்னி வண்வந்த தென்றனன் வணிகருக் கிறைவன்.

அழைத்துச் சென்ற இரசவாதிக்கு ஓர் பொன்னிலான வட்டிலை (கோப்பை) தூய்மைசெய்து அதில் வாசனைபொருந்திய பொரிக்கறிகளுடனான அமுதினை இரசவாதி நன்கு சுவையுடன் உண்ணும்படி உண்பித்து முகமன் பல சொல்லி பின்னராக இரசவாதியை நோக்கி பெரியவரே யாதுபொருட்டாக இவ்விடம் வந்தீர் என வணிகர் திலகனான தருமதத்தன் கேட்டான். 119

ஈசன் தந்திடு விஞ்சையொன் றெமக்குள தேவர்க்கும்
பேசுந தன்மைய தன்றது குரவர்பாற் பெரிதும்
நேசம் பூண்டவர்க் குரைப்பது நெஞ்சினில் சிறிதும்
மாசின் றாயநிற் குணர்த்துவன் அஃதென்ன வகுத்தான்.

அப்போது இரசவாதி தருமதத்தனை நோக்கி கடவுள் நேராக எனக்குமுன் தோன்றி அருள்செய்த வித்தை ஒன்று இருக்கின்றது. இது எவர்க்கும் பேசும் தன்மை உடையது அன்று. தாய் தந்தை குரு இவர்கள்பால் பெரிதும் பத்திமை கொண்டவர்க்குத்தான் கடவுள் எமக்கு அருளியதைச் சொல்லவேண்டிய விதியாகும். ஆனல் நீயோ மனதில் ஏதும் வஞ்சனை இலாதவன் ஆகையால் உனக்கு அதைச் சொல்வேன் என வகுத்துக் கூறுவான். 120

சரத மேயிது சம்புவின் வந்தோர் தகைசால்
இரத முண்டது பொன்னெனச் செய்குனம் எமக்கோர்
அரிது மன்றது போல்வன பலவுள அவைதாம்
விரத மாதவர் அல்லதி யார்கொலோ விரும்பார்.

நான் சொல்வது முற்றிலும் உண்மை. அது யாதெனில் சிவபிரானிடம் பெற்றுக்கொண்ட தகுதிபொருந்திய இரசம் இருக்கின்றது. அதைத் தொட்டு எல்லாவற்றையும் பொன்னுக்குவேன். அது எமக்கு அரிதல்ல. இதைப்போல வித்தைகள் இன்னும் பல உள. இந்த வித்தைகளை, விருப்பினை நீக்கிவாழும் விரதசீலமுடைய தபோதனர் அல்லாது வேறு யார்தான் விரும்பார்கள், 121

காரி ரும்பையும் நாகத்திற் காட்டுதுஞ் சரிய
சீரி ரும்பினைப் பொன்னென உரைபெறச் செய்வாம்
மேரு வுங்கயி லாயமும் என்றிரு வெற்பை
யாரும் நோக்கவே காட்டுதும் இவைநமக் கரிதோ.

அந்த இரசத்தின் உதவியால் கரிய இரும்பை ஈயமாக்கிக் காட்டுவோம்; கருமை தங்கிய சிறந்த இரும்பைப் பொன்னென உரைபெறும்படி செய்வாம். மகாமேரு மலையும் கயிலாயமலையும் என இருமலையையும் எல்லோரும் காணும்படி காட்டுவோம். இந்தச் செயல்கள் எமக்கு அரிதோ! இல்லை. 122

எய்தும் ஈயமும் இரசமும் வெள்ளிய தெனவே
செய்து மன்றியும் வங்கத்திற் செம்பொனுந் தெரிப்பாம்
நொய்தின் அன்னது வலியுறக் காட்டுதும் நுவலுங்
கைத வம்பயில் மாக்களுக் கினையன கழறும்.

கிடைக்கப்பெறும் ஈயத்தையும் இரதத்தையும் வெள்ளி எனும்படி செய்வோம். இதுவல்லாமல் வெள்ளியில் செம்பொன்னையும் தோற்றுவிப்பாம். விரைவில் இவை யாவும் கெடாது வலியுடன் இருப்பவுங் காட்டுவோம். நாம் சொல்வதை நம்பாது கபடம் பேசும் மனிதர்க்கு இந்த இரகசியங்களைச் சொல்லமாட்டோம். ஆனல் உன்னைப்போன்ற நற்குணமுடையார்க்குச் சொல்லுவோம். 123

இரும்பி னிற்செம்பு வாங்குவம் ஈயமும் அற்றே
வரம்பி லாததோர் தரணிபண் டங்களை மரபின்
அரும்பொன் வண்ணம தாக்குவம் வல்லவா றறைய
விரும்பி ஞமெனின் யாண்டுமோர் அளப்பில வேண்டும்.

இரும்பிலே செம்பை உண்டாக்குவோம். ஈயத்திலும் அதேபோலச் செம்பை உண்டாக்குவோம். அளவுகடந்த பூமியான அண்டங்களை முறையாக அரிய பொன்வண்ணமாக்குவோம். இதுமட்டன்றி எமது வல்லமைபற்றிக் கூற நாம் விரும்பினேமெனின் அதற்கு அளவுகடந்த வருடங்கள் வேண்டும். 124

ஒன்று கோடிபொன் ஞக்குவங் கோடிய துளவேல்
குன்று போலவே கோடியிற் கோடிசெய் குவமால்
நின்ற னக்குள பொருளெலாந் தருதியேல் நினது
மன்றல் மாளிகை நிதிக்கிடம் இல்லென வகுப்பாம்

ஒருபொன்னைக் கோடி பொன்ஞக்குவோம். கோடிபொன் உளவேல் மலைபோல அவற்றைக் கோடகோடியாகப் பெருகச் செய்வோம். உன்னிடத்தாக உள்ள பொருள் எல்லாம் தந்தால் உனது மங்கலம் பொருந்திய அழகிய இந்தப் பெரிய மாளிகையில் பொருள் வைப்பதற்கு இடம் இல்லை என்று சொல்லும்படி செய்வோம்: இடமில்லை என்பதனல் உனக்கு உள்ள பொருளைநீக்கி வெறுமையாக்கு புவன் என உட்பொருள் தோன்றல் காண்க. 125

என்ன வேமொழி சோரனை வணங்கினன் இமைப்பின்
முன்னர் உள்ளதுந் தான்றன துரிமையால் முயலப்
பின்னர் எய்திய நிதியமும் பேழையான் அவற்றின்
மன்னு பூன்களுங் கோணர்ந்தனன் முன்புற வைத்தான்.

என்னவே சொன்ன கள்வனை இரசவாதியின் பொய்வார்த்தையைத் தரும தத்தன் நம்பிவணங்கினன். உடன் ஒருநொடிப்பொழுதிலாகச்சென்று தன்னிடத்து உள்ள முன் தாய்தந்தையர் தேட்டமான பொன்னையும், தனது உரிமைத் தொழி லான வர்த்தகம் முதலியவற்றல் முயற்சிசெய்து கிடைக்கப்பெற்ற தனது பிந்திய தேட்டமான பொன்னையும், பெட்டகங்களில் உள்ள ஆபரணங்களையும் ஒரு கணப் பொழுதில் கொண்டுவந்து இரசவாதிமுன்பு வைத்தான். 126

வைத்த மாநிதி நோக்கலும் வணிகரில் திலகர்
உய்த்த செல்வமும் இதுகொலோ ஓவென உரையாக்
கைத்த லங்கொடு கைத்தலம் புடைத்துடேக் கணங்கள்
நத்த வேலையில் ஒருங்குபட் டாலென நகைத்தான்,

வைத்த பெரும் பொன்னின் நிலையை இரசவாதி நோக்கிக்கொண்டு மீட்டும் வஞ்சனையால் அவனிடம் உள்ள பொருள் யாதையும் பறித்தெடுக்கவேண்டித் தரும

தத்தனை நோக்கி வணிகர்களுக்குள் திலகம்போலத் தலைமையுடன் விளங்கும் நீ இதுகாறும் வைத்திருந்த பொருள் இவ்வளவோ எனக் கூறியவாறு தனது கைகளை எடுத்து ஒன்றுடன் ஒன்றை அடித்துக்கொண்டு இராக்காலத்தில் வெள்ளிகள் ஒன்ருகக் கூடி இருந்தாற்போலத் தனது பல்முழுவதும் தோன்றும்படி சிரித்தான், 127

இந்த நின்பொருள் நம்முடை விஞ்சையில் இறைக்கும்
வந்தி டாதுநாம் உருக்குறு முகந்தனில் வழுவிச்
சிந்து கின்றதற் கிலையிது நமதுபின் திரியின்
அந்த மில்பொருள் கொடுக்குவம் வைத்தியென் றறைந்தான்.

தருமதத்தனை நோக்கி இந்த உனது பொருள்கள்நமது வித்தையில் பாவித்தற்கு இறையளவிற்கும் காணுது. நான் உருக்கும்போது உருக்கும் உலையில் நின்றும் வழுவிச் சிதறும் தூள்களுக்கும் பற்ருது. இதனை நீயே வைத்துக்கொண்டு எனது பின் பாகத் திரிவாயாயின எல்லையற்ற பொருளை உனக்கு நான் தருவேன் என இரசவாதி கூறினுன், 128

முனியல் ஐயநீ வேண்டிய பெருநிதி முழுதும்
இனிது நாடியே கொணருவன் இருத்தியென் றுரைத்துப்
புனையும் ஆடையும் நிலங்களும் மணிகளும் பூணும்
மனையும் மாக்களும் பகர்ந்தனன் நிகரிலா வணிகன்.

இதுகேட்ட தருமதத்தன் மனம்கோணி இரசவாதியைப் பார்த்து ஐயனே கோபிக்கவேண்டாம். நீ வேண்டுகின்ற அளவுக்கு உரிய பெருஞ் செல்வம் முழுவதும் மிகச் சிறப்புடன் நாடிததேடி இங்கு கொணர்வேன், இங்கு இருப்பாயாக என உரைத்துவிட்டு அப்பால் இரசவாதிக்கு மீண்டும் பொருள்தேட விரும்பித் தான் அணியும் ஆடைகளும் நிலங்களும் மணிகளும் ஆபரணமும் தனது இல்லமும் தனது அடிமைகளும் விலங்குகளும் ஆகிய யாவற்றையும் ஏலம்கூறி விற்றுப் பொன்னுக்கினுன் தனக்குப் பிறர் நிகரில்லாத தருமதத்தன். 129

பொரும தத்தினை இழைத்திடு மருப்புடைப் புழைக்கைப்
பெரும தக்கரி யென்னவே மயங்கினன் பெரிதும்
வரும தத்தமென் றறத்தையும் பகர்ந்துமெய் வணிகன்
தரும தத்தனும் பெயரினை நிறுவினன் தரைமேல்

கொலைபுரியும் வெறியினைப் பெருக்குகின்ற நீண்ட தந்தமும் துதிக்கையும் உடைய பெரிய மதயானையைப்போல, செய்யும் தகுதிவாய்ந்த செயல் யாதென அறியாது தருமதத்தன் மயங்கி பெருமளவு தனக்குப் பொன்வரும் என்னும் வாஞ்சையால் தனது உடமைகளை விற்றதும் அன்றித் தன்னுடைய உரிமையான தருமங்களையும் விற்ருன். தருமங்களாவன: தண்ணீர்ப்பந்தல், பூஞ்சோலை, நீர்நிலையம், வித்தியாசாலை, உணவுச்சாலை முதலியன. அவன் தருமத்தையும் விற்றமையால் தருமதத்தன் என்னும் பெயரின் உண்மைப்பொருளை இப்பூவுலகில் உறுதிப்படுத்தியவனுனன் உண்மையான ஒழுக்கமுடைய தருமதத்தன். 130

இத்தி றத்தினில் தேடிய பெருநிதி எனைத்துங்
கைத்த லங்கொடு தாங்கியே கரவன்முன் காண
வைத்து நிற்றலும் மகிழ்ந்தனன் அவையெலாம் வாங்கி
மொய்த்த செங்கனல் தீயிடை உருக்குதல் முயன்ருன்.

இத்திறமாகத் தேடிய பெரும் திரவியமான பொன் அனைத்தையும் தனது கையில் தாங்கிச்சென்று கள்வனை இரசவாதிமுன்பாக அவன் காணும் படி வைத்துநிற்றலும் அதுவேளை இரசவாதி அதனைநோக்கி பெரிதும் மகிழ்ந்து அப்பொன்னினை எடுத்து மொய்த்து எரிகின்ற நெருப்பிலே இட்டு உருக்கும் செயலினை மேற்கொண்டான். 131

திரட்டி யாவையும் ஒருரு வாக்கினன் செழும்பொன்
இரட்டி தூக்கிய இரதமாங் கோருசிலை யிட்டு
மருட்டி ஆடக முழுவதும் உரைத்தவை வலிதா
உருட்டி மட்பெருங் குகையினில் மருந்தையுள் ளூறுத்தான்.

தருமதத்தனால் வைக்கப்பெற்ற பொன் யாவற்றையும் திரட்டி ஓர் உருவாக்கி னான். பின்பாக அப்பொன்னின் நிறையிலும் இரட்டிப் பங்காக நிறுத்தெடுக்கப் பட்ட இரசத்தை ஒரு உரைகல்லில் இட்டு அப்பொன் முழுவதையும் உரைத்து இரசத்துடன் கலந்து, இரசத்தையும் பொன்னையும் வலிமையாகும்படி உருட்டி ஓர் உருவமாகச் செய்துகொண்டு பின்னர் மண்ணிலான ஓர் குகையின் உள்ளே தான் கொணர்ந்த ஒரு மருந்தைப் பூசினான். 132

பண்ணு றுத்திய கனகமுள் ளிட்டதன் பாலும்
எண்ணு றுத்திய மிசைக்கணுங் களங்கமோன் றிட்டு
மண்ணு றுத்திநற் றுகில்கொடு பொதிந்தனன் மருங்கிற்
கண்ணு றுத்திய செந்தழற் புடைமிசை கரந்தான்.

பின்னர் தான உருட்டி எடுத்த பொன்கலந்த இரச உருண்டையை மண்குகை உள்ளே இட்டு அதன்பேலும் பக்கராகவும் ஒவ்வோர் இரசகுளிகையை வைத்து அதன்மேலாக மண்ணைப் பூசிய சீலையால் பொதிந்துமூடிப் பக்கராகத் தான் உண் டாக்கிய நெருப்பிலே அந்த மட்குகையைப் புதைத்தான். 133

நூற்று நான்கொடு நான்குக் குடபுடம் நோப்பின்
வீற்று வீற்றதா விட்டது நோக்கினன் மிகவும்
மாற்று வந்தது பழுக்குமோர் வராகியின் மருளேல்
காற்றி லாததோர் உறையுள்காட் டென்றனன் கரவன்.

அதன்பின் அதிவிரைவாக வேறுவேறான நூற்றெட்டுக் கோழிப்புடங்களை இட்டு (கோழிப்புடம் - பசுவின் சாணவிருட்டிகளை கோழி அளவில் அடுக்கி எரித்தல்) எரித்தபின் அப்பொன் இருந்த குகையைப் பார்த்தான். மிகவும் மாற்றுவந்துள் ளது. பின்னர் தருமதத்தனை நோக்கிச் சொல்வான், செட்டியாரே மாற்றுவந்துள் ளது. ஒருதரம் இதனை வராகி புகையில் வைத்தால் இது பழுத்துக் கோடியாகப் பெருகும் பயப்படாதே. வராகிப்புகை இடுவதற்கு காற்று உள்ளே போகாத ஓர் அறை காட்டுவாயாக என்றான். 134

சேமஞ் செய்ததோர் உறையுளைக் காட்டலுஞ் சென்று
வாமஞ் செய்ததோர் இந்தனக் குவான்மிசை மறவோர்
ஈமஞ் செய்தசெந் தழற்கொடு வராகிமே லிட்டுத்
தூமஞ் செய்தனன் அங்கியும் அவனெதிர் துரந்தான்.

இரசவாதியின் சொற்படி தருமதத்தன் காற்று உள்ளே போகாதபடி நன்கு சேமம்செய்ததோர் அறையைக் காட்டலும் இரசவாதி அங்குசென்று அழகுற அடுக்கப்பெற்ற விறகுக் குவியலின் மேலாக இறந்த வீரர் உடலைத் தகனம்செய்த நெருப்பில் எடுத்த கொள்ளியை மூட்டி (இது இரசவாதிகள் கையாளும்முறையா கும்) எரியப்பண்ணி வராகிப்பொடியை மேலேதூவிப் புகைப்பித்தான். அவ்வேளை நெருப்புச் சுவாலித்தெழுந்து தருமதத்தனைக் கிட்ட நிற்கமுடியாதபடி கலைத்தது. 135

ஓங்கி நாட்டநீர் பொழிதர ஆருயிர் உலைய
வீங்கு இன்றமெய் வெதும்புற எங்கணும் வியர்ப்ப
மூங்கை யாமென மொழிகிலான் போவது முயலான்
பாங்கி ருந்திடு வணிகர்கோன் பட்டதார் பகர்வார்.

வராகிப் புகை அறை எங்கும் வெளிப்போகாது நிறைய அதனல் கண்ணில் இருந்தும் கண்ணீர் மேலோங்கிப்பொழிய உயிர் உலைந்து தடுமாற நெருப்பு வெட்பத்தால், பருத்த அவன் மேனி வெதும்ப, மேனிஎங்கும் வியர்வைகொள்ள ஊமைபோல் ஒன்றும் பேசவும் முடியாதவனய் அல்லது அந்த இடம் நீங்கிப் போவதற்கும் எத்தனியாதவனய், பக்கராக இருந்த வணிகர் தலைவனை தருமதத்தன் பட்டபாட்டை ஆர்தான் சொல்ல முடியும். 136

எல்லை அன்னதிற் பொதிந்திடு பொற்குகை யெடுத்து
மெல்லெ னத்தன தாடையிற் கரந்தனன் வெய்யோன்
வல்லை யக்குகை போலஒன் றிருந்தது மருங்கில்
செல்ல வைத்தனன் தழற்பெரும் புகையையுந் தீர்த்தான்.

இவ்வாருகத் தருமதத்தன் அவதியுற்றுத் தடுமாறிய வேளையில் இரசத்தில் பொதியப்பெற்ற பொற்குகையை இரசவாதி மெதுவாக எடுத்துத் தனது ஆடைக்குள்ளே மறைத்தான். அக்கொடிய இரசவாதி பின்னர் அதைப்போல ஒரு இரும்புக் குகை வேறென்று தான் வைத்திருந்ததைத் தருமதத்தன் பக்கராக வைத்துவிட்டு பின்னர் நெருப்பையும் பெரும் புகையையும் தணித்தான். 137

தத்த இக்குகை நின்கையில் தாங்கினை தழழ்மேல்
வைத்தி என்றனன் அவனது புரிதலும் மரபின்
அத்த குஞ்செயற் குரியன யாவையும் அமைத்து
வித்த கம்பெறச் சேமியா ஒருசெயல் விதித்தான்.

பின்பு தருமதத்தனைப் பார்த்து தத்நா! இந்தக் குகையை உன் கையால் எடுத்து நெருப்பின்மேல் வைப்பாயாக என்ன தருமதத்தன் அதைத் தூக்கி நெருப்பின்மேல் வைத்தான். பின்பு முறைப்படி இரசவாதிகள் மேற்கொள்ளவேண்டிய உரிய செயல்களையும் தான் பொற்குகையைப் பக்குவமாகக் கொண்டுபோவதற்கு பாசாங்காகச் செய்யப்பெறும் செயல்கள் யாவற்றையும் சேமமுற அதிசயப்படும்வண்ணம் செய்து மூடித்துவிட்டு தருமதத்தனை நோக்கி ஒரு கடமை சொல்வான் இரசவாதி. 138

உண்டி இகந்துரை யாடலை யாகிப்
பெண்டிரை வெஃகல் பெறுய்பிறர் தம்மைக்
கண்டிடல் இன்று கருத்தினில் எம்மைக்
கொண்டிரு முப்பகல் கோதில் குணத்தோய்.

குற்றங்கள் நீங்கிய குணமுடையானே! நீ உணவு உண்பதை நீக்கி ஒருவருடனும் பேச்சில்லாது மௌன விரதம் பூண்டு பெண்கள் பால் விருப்பம் கொள்ளாமல் பிறரையும் காணுதவாறு என்னையே உனது கருத்தில் நினைத்தவாறு மூன்று நாட்கள் வரை விரதமுடன் இருப்பாயாக என்ருன் இரசவாதி. 139

நெய்கமழ் செஞ்சடை நீலிதன் முன்னோர்
மொய்கனல் வேள்வி முடித்திடல் உண்டால்
செய்கடன் அன்னது தீர்த்தபின் நாலாம்
வைகலின் ஏகுதும் மற்றிவண் என்றான்.

நெய் பூசிய வாசனை கமழும் சிவந்த சடையுடைய காளிதேவி முன்னாக யான் சென்று ஓர் வலம் செழித்தெழும் நெருப்பின் சுடர் கொண்ட யாகம் ஒன்று செய்ய வேண்டி இருக்கின்றது. அது செய்யவேண்டிய கடனாகும். அக்கடன் முடிந்த பின் நாலாம் நாள் நான் இங்கு வந்து சேருவேன் என்றான். 140

அம்முறை செய்கென ஆங்கவன் அடியை
மும்முறை தாழ்ந்து முதற்பெரு வணிகச்
செம்மல வன்புடை சென்றிலன் நின்றான்
மைம்மலி சிந்தையன் வல்லை அகன்றான்.

அம்முறையே நீர் செய்வீராக என கூறி அவ்விடத்து இரசவாதியின் பாதத்தை மும் முறையாகத் தாழ்ந்து பெருவணிகரில் முதல்வனான தருமத்தன் பணிந்து, இரசவாதியின் பின் செல்லாது அவன் கட்டளைப்படி ஒழுகியவாறு நின்றான். இருளை ஒத்த வஞ்சனை கொண்ட மனமுடைய இரசவாதி விரைவுடன் அவ்விடத்தை விடுத்து மறைந்து சென்றான். 141

காவத மோரொரு கன்னலின் ஆகப்
போவது செய்து புறத்துரு மாறி
வாவினன் வேறோர் வளாகம துற்றான்
ஏவலின் வைகினன் இத்தலை வணிகன்,

ஒரு நாளிகை நேரத்தில் மூன்று காதவ தூரம் வேகத்தில் ஓடி மறைந்து சென்று, வெளியே தான் கொண்ட வேடத்தை மாற்றி வேறான இன்னொரு தேசத்தை அடைந்து சேர்ந்தான். இவ்விடத்தே வணிகனான தருமதத்தன் இரசவாதி இட்ட ஏவலின்படி ஒழுகி நின்றான். 142

முப்பகல் போதலும் மூதறி வுள்ளோன்
செப்பிய நாள்வரை சென்றுள வன்றே
இப்பகல் வந்திலன் என்னை அவன்சொல்
தப்புவ னோவென வேதளர் கின்றான்.

இப்படியாக மூன்று நாட்களும் கழிந்தன. தருமதத்தன் நினைக்கின்றான், அந்த முதிர்ந்த அறிவுடைய இரசவாதி சொன்ன மூன்று நாட்களும் கழிந்தனவன்றே. இன்று வரவேண்டிய நாளாகும் இன்னமும் வரவில்லையே, என்னே ! அவன் சொன்ன சொல்லைத் தப்புவானோ என நினைத்து தளர்ச்சி யடைகின்றான். 143

நீடிய தொல்புகழ் நீலி இருக்கை
நாடினன் மேதகு நன்னகர் எங்கும்
தேடினன் மாலுறு சிந்தைய னானன்
வாடினன் மீண்டனன் மாளிகை வந்தான்.

தளர்வு கொண்டு எழுந்து சென்று இரசவாதி சொல்லிய பிரகாரம் காளி கோவிலில் இருப்பானே என அங்கு பழம் பெரும் புகழினை உடைய காளி கோவிலில் சென்று எங்கும் நாடிப் பார்த்து காணாமையால் தொடர்ந்து அந்த நல்ல நகரெங் கும் தேடியும் காணாமையால் பெரிதும் மயக்கமுறும் சிந்தனை உடையனாகி வாட்ட முற்று தனது மாளிகைக்கு திரும்பிவந்து சேர்ந்தான் தருமதத்தன். 144

அடுத்துமுன் வைத்த அருங்குகை தன்னை
எடுத்தது நோக்க இரும்பது வாக
வடுத்தவிர் சிந்தையன் மாயைகொ லென்னா
விடுத்தனன் அன்னது வீழுமுன் வீழ்ந்தான்.

தனது மாளிகையில் தருமதத்தன் சோர்வுடன் வந்துசேர்ந்து தான் முன்பாக வைத்த அரியது என நினைத்த குகையை எடுத்து உள்ளே தனது பொன் ஆகுதல் இருக்கின்றதோ எனப் பார்த்தலும் அது இரும்பாக இருப்ப வஞ்சனை அறியாத சிந்தை உடைய தருமதத்தன் ஏங்கி, ஐயோ இது என்ன மாயம் என கத்திக்கொண்டு கையை விடுத்து அக்குகை வீழுமுன் தானும் நிலத்தில் வீழ்ந்தான். 145

அத்தம் அனைத்தும் அகன்றிட லோடும்
பித்தின் மனத்தொடு பேழை யனாகி
எய்த்தனன் ஆயுளின் எல்லையும் எய்தத்
தத்தனும் விண்ணிடை சார்ந்தனன் அன்றே.

தனது செல்வம் முழுவதும் அகன்றுவிடுதலும் தருமதத்தன் பித்தனான மனத் தொடு பேதையாகி வாடிச் சோர்வுற்றான். பலநாள் பைத்திமுடையவனாகத் திரிந்து அவன் ஆயுள் முடிவாகின்ற எல்லையும்சேரத் தருமதத்தன் வானுலகம் அடைந்தான். 146

அறந்தனை விற்ற அருஞ்செய லாலே, மறந்தரு தத்தனு மால்கரி யாகிப்
பிறந்தனன் முன்னுறு பெற்றிய தெல்லாம், மறந்தனன் என்று மனத்திடை கொண்டு.

தருமத்தை விற்ற கொடிய பாவச்செயலாலே இப்பொழுது கொடுமைகொண்ட தருமதத்தனும் மதயானையாகிப் பிறந்தான். தருமதத்தன் முன்னுள்ள பெற்றியெல் லாம் மறந்தான் என்று தனது ஞான உணர்வால் குச்சகர் தெரிந்துகொண்டார். 147

மாற்றுவன் இப்பவம் வல்லையி னென்னாச், சாற்றினன் முன்பு தவம்புரி வேலை
நோற்றிடு மோர்பகல் நோன்பவை தான்இவ், வாற்றல்இ பத்துழை யாகுக வென்றான்.

இந்தப் பாவத்தை இப்பொழுது விரைவில் மாற்றுவேன் எனக் கூறிப் பின்னர் சொல்வார்; நான் முன்பு தவம்செய்யும் காலையில் ஓர்நாள் செய்துகொண்ட தவத் தின்பலன் இந்த வலியுடையயானைபால் ஆகட்டும் என்றார். 148

இப்பரிசங்கண் இயம்புத லோடும், அப்பொழு தன்னவன் ஆங்குறு வேழ
மெய்ப்படி வந்தனை வீட்டினன் யாருஞ் செப்பரி தாகிய தேவுரு வானான்.

இத்தன்மையாகக் குச்சகர் இயம்புதலோடும் அப்பொழுது தருமதத்தன் அவ் விடத்தே தான்கொண்ட யானைவடிவத்தை நீங்கியவனாய் எவராலும் சொல்லமுடி யாத அழகுடைய தேவ வடிவமானான். 149

அந்தர துந்துபி யார்த்தன வானோர், சிந்தினர் பூமழை சேணிடை நின்றும்
வந்தது தெய்வத மானம தன்பால், இந்திர னேன ஏறினன் அன்றே.

தேவ துந்துபிகள் முழங்கின; தேவர் பூமழை பொழிந்தார்கள். வானத்திலிருந்தும் தெய்வவிமானமொன்று அவ்விடம் வந்தது. அதன்மேலாகத் தேவவடிவான தருமதத்தன் இந்திரன்போன்ற சிறப்புடன் ஏறிக்கொண்டான். 150

பாசிழை மங்கையர் பற்பலர் சுற்று, வீசினர் சாமரை விண்ணுறை கின்றோர்
ஆசிகள் கூறினர் அங்கவண் நிற்குந், தேசிக னாரடி செங்கை குவித்தான்.

அழகிய ஆபரணமணிந்த பல தேவப்பெண்கள் அவனைச்சூழ்ந்து சாமரை வீசினார்கள். வான உலகில் உறைவோர் ஆசிகூறினார்கள். அவ்வேளை பூமிமீதாக அங்குநிற்கும் குரு முதல்வரான குச்சகர் பாதங்களை தருமதத்தன் செங்கைகூப்பி வணங்கினான். 151

நோக்கினன் மாதவ நோன்மை யுளானை, வாக்கினில் வந்தன வந்தனை செய்தான்
நீக்கரும் வல்வினை நீக்கினை யென்னா, மேக்குயர் புங்கவர் விண்ணுல குற்றான்.

பெரும் தவநோன்பின் பலன் உடைய குச்சகமுனிவனை நோக்கினான். தனது வாக்கில்வந்த வாறான வாக்கியங்களால் வந்தனைசெய்தான் தருமதத்தன். பெருமானே நீக்கரிய கொடிய வினையை நீக்கினாய் என்று கூறித் தொழுதவாறு மேலான வான உலகைத் தருமதத்தன் அடைந்தான். 152

விண்ணிடை யேயவன் மேவுத லோடு, மண்ணிடை நின்றிடு மாதவன் முன்போல்
எண்ணரு நோன்ப தியற்றலும் அன்னோன், கண்ணிய தென்றிசை காவலன் வந்தான்.

வான உலகில் தருமதத்தன் சேர்தலோடும் பூமியில்நின்ற மாதவராகிய குச்சகர் முன்புபோலச் சென்று குளத்தில் மூழ்கியவாறு நினைத்தற்கரிய தவம்செய்தலும் அப்போது அவர் முன் தென்றிசைக் காவலனான இயமதேவன் தோன்றினான். 153

முன்னுறு கூற்றுவன் முப்பகை வென்றோய், உன்னிலை நோக்கி உவந்தனம் நம்பால்
என்னைகொல் வேண்டிய தென்றலும் அன்னோன்,தன்னடி வீழ்ந்திது சாற்றுதல் உற்றான்.

முன்னாகத் தோன்றிய இயமராசன் குச்சகரை நோக்கி: காமம், வெகுளி, மயக்கம் எனும் மூன்று பகையையும் வென்ற முனிவனே! உனது தவநிலை நோக்கி மகிழ்ந்தோம். என் பாலாக யாது நீ வேண்டினாய் எனலும் அப்போது இயமராசன் பாதங்களில் குச்சகர் தாழ்ந்து வணங்கி இதைச் சொல்கின்றார். 154

உந்திய சீர்த்தி உசத்தியன் மானென், மைந்தன் மணஞ்செய வந்தனன் அன்னாள்
முந்துறு நென்னல் முடிந்தனள் முன்போல், தந்தருள் என்றிது சாற்றுத லோடும்.

சிறப்புடன் மேவிய உசத்தியமுனிவன்மகள் விருத்தையை எனது மைந்தன் திருமணம் செய்யும்படியாக எண்ணிவந்தேன். ஆனால் அப்பெண் நேற்றுமுந்தியநாள் இறந்துவிட்டாள். ஆகவே அவளை முன்புபோல உயிர்பெற்றெழத் தந்தருள்வாயாக எனச் சொல்லலோடும். 155

அத்தகு போழ்தினில் அந்தகன் என்போன், இத்தவன் வேண்டிய ஏந்திழை ஆவி
வைத்தன மேயது வல்லையின் மீட்டிங், குய்த்திடு வாயென ஒற்றொடு சொற்றான்.

அவ்வாறான பொழுதில் இயமதேவன் என்பவன் தனது தூதன் ஒருவனைப் பார்த்து, இத்தபோதனன் உயிர்பெற்றெழும்படி வேண்டிய பெண்ணின் ஆவியை எமதிடத்து நாம் வைத்துள்ளோம். அதனை விரைவில் மீட்டுக்கொண்டு இங்கு உடலில் சேர்ப்பீராக எனக் கூறினான். 156

கொற்றவன் இங்கிது கூறி மறைந்தான், சொற்ற துணர்ந்திடு தூதுவன் முன்போய்
உற்றிடு மவ்வுயி ரைக்கொடு போந்து, மற்றவள் யாக்கையுள் வந்திடு வித்தான்,

இயமராசன் இங்கு இவற்றைக்கூறி மறைந்தான். அவன் சொல்லியதை உணர்ந்து கொண்ட தூதுவன் முன்னுகச்சென்று அங்கு இருந்த விருத்தையின் உயிரைக்கொண்டு வந்து அவளின் உடலத்தில் சேர்ந்து உயிர்வாழுமாறு செய்திட்டான். 157

உடற்குளுயிர் வந்திடலும் புகுந்ததுமெய் யுணர்வுசிறி துயிர்த்த நாசி
துடித்தனகால் பதைத்ததுரந் துளங்கி முகம் விளங்கியதால் துவண்ட தாகம்
எடுத்தனகை யசைந்தனதோ ளிமைத்தனகண் விழித்தனவால் இனைய காலை
மடக்கொடியுந் துயிலுணர்ந்தாள் போலெழுந்தாள் எல்லோரும் மருங்கிற் சூழ்ந்தார்

விருத்தையின் உடலுக்குள் உயிர்வந்திடலும், உடலில் உண்மையான உணர்வு சேர்ந்தது; மூக்கில் சுவாசம் மெதுவாக வந்தது; கால் துடித்தது; நெஞ்சு துடிக்கத் தொடங்கியது; முகம் துலக்கமுற்றுப் பிரகாசித்தது; மேனி வளைந்தது; கை எடுத்தன; தோள் அசைந்தது; கண் விழித்தது; இவ்வாருன காலையில் பூங்கொடிபோலும் விருத்தையும் துயில் எழுவால்போல் எழுந்தாள். எல்லோரும் பக்கராகச் சூழ்ந்து கொண்டார்கள். 158

அன்னையவள் தனைத்தழுவி இரங்குற்ருள் தந்தையெடுத் தணைத்துப் பல்காற்
சென்னிதனில் உயிர்த்தேதன் இருகுறங்கின் மீமிசையே திகழச் சேர்த்தி
என்னடிகள் என்கடவுள் எனதுதவப் பயனுகும் எந்தை நென்னல்
சொன்னபடி தவமியற்றி உய்வித்தான் இவளையென்று துணிவிற் சொற்ருன்.

தாய் அவளைத் தழுவி இரங்கினுள். தந்தையான உசத்தியர் அவளை எடுத்துப் பலகாலும் தலையிலே முத்தமிட்டு அவளைத் தனது இரண்டு தொடைமீதிலும் விளங் குறும்பொருட்டாக இருத்திக்கொண்டு மிகவும் துணிவுகொண்டு என்னுடைய குருமணி, எனது கடவுள் எனது தவப்பயனுகும் எந்தை குச்சகர் நேற்றுச் சொன்னபடி தவ மியற்றி இவளை உய்வித்தார் என யாவரும் அறியக் கூறினுர். 159

சுற்றுகின்ற கிளைஞர்களும் அல்லோரும் அதிசயிப்பத் தொல்லை ஞாலம்
பெற்றதிரு அனையாள்தன் பெண்ணங்கை முகநோக்கிப் பேதை நீயீண்
டுற்றதுவும் இறந்ததுவும் மீண்டதுவும் முறைப்படவே உரைத்தி யென்னப்
பொற்றெடியாள் அதுவினவிப் புகுந்ததொரு பரிசனைத்தும் புகல லுற்ருள்.

இப்போது சூழ்ந்துகொண்ட சுற்றத்தவரும் மற்றவர்களும் அதிசயமுற இப்பழைய பூமிபெற்றெடுத்த இலக்குமிபோலும் மங்கலை எனும் தாய் தனது மகள் விருத்தையின் முகத்தை நோக்கி பெண்ணே! நீ இங்கு சேர்ந்ததுவும், இறந்ததுவும் மீண்டதுவும், யாவும் முறைப்படச் சொல்வாயாக எனலும் பொன்வளையல் அணிந்த மகள் அது கேட்டு நிகழ்ந்த ஒவ்வொரு காரியங்கள் அனைத்தையும் சொல்லல் உற்ருள். 160

நீடியமங் கையர்பண்ணை தன்னுடனே போந்ததுவும் நெடுநீர்க் கான்யா
ருடியதும் மீண்டதுவுங் கடகளிறு போந்ததுவும் அதனைக் கண்டே
ஓடியதுந் தானெருத்தி தனித்ததுவுங் கூவலிடை உலைந்து வீழ்ந்து
வீடியதும் மீண்டதுவீந் தேன்றிசைக்கண் நிகழ்வனவும் விரித்துச் சொற்ருள்.

நெடுநாட் பழகிய பலபெண்கள் கூட்டத்துடனே தான் நீராடப்போனமையும் நீளமுடன் பெருகிய காட்டு ஆற்றில் நீராடியதும், மீண்டுவந்ததுவும், மதயானை வந்ததுவும் அதனைக்கண்டு எல்லோரும் ஓடியதும் தான் ஒருத்தி வகையறியாது தனித்துக்கொண்டதும், பாழ்ங்கிணற்றில் வீழ்ந்ததும், இறந்ததும், திரும்ப உயிர்பெற்றதும் தென்திசை உலகான இயம உலகில் நிகழப்படும் செயல்களும் எல்லாம் எடுத்து மிக விரிவாகச் சொன்னாள். **161**

சொன்னமொழி யதுகேளா மிகமகிழும் வேலைதனில் துகளில் தூயோன்
கொன்னவிலும் முத்தலைவேற் கூற்றுவன்றன் அருள்பெற்றுக் குறுக லோடு
முன்னுறவே எதிர்சென்று பெருங்கிளையும் பன்னியுமா முனியும் பெற்ற
கன்னியும்வந் தடிவணங்கிப் போற்றிசெய வரன்முறையே தருணை செய்தான்.

விருத்தைசொன்ன மொழியைக்கேட்டு எல்லாரும் மகிழும் வேலையில், குறைவு இல்லாத தூயவரான குச்சகமுனிவர் யாவராலும் புகழ்ந்துபேசப்பெறும் முச்சுடரினை உடைய சூலப்படை ஏந்திய இயமராசன் அருளைப்பெற்றுக்கொண்டு அவ்விடத்து வரலோடும் அவர்முன்பாக எதிர்ஏற்றுச்சென்று உசத்தியமுனிவரின் பெருகிய சுற்றத்தாரும், மனைவியும், மகானான உசத்தியமுனிவ பெற்ற பிள்ளையான விருத்தையும் வந்து பாதத்து வணங்கிப் போற்றிசெய்தலும் அவ்வணம் வணங்கினுற்கு வரன்முறையாகக் குச்சகர் கருணைசெய்தார். **162**

என்னுயிரும் பெருங்கிளைஞர் தம்முயிரும் இல்லறத்திற் கியன்ற பன்னி
தன்னுயிரும் நட்டோர்கள் தமதுயிரும் நின்றிடயான் தவத்திற் பெற்ற
மின்னுயிர்தந் தருளினையால் அரிதோநிற் கிதுவம்மா வேலை ஞாலம்
மன்னுயிர்காத் தளிப்பவனும் நீயெனவே எளதுள்ளம் மதித்த தன்றே.

உசத்தியமுனிவர் அப்போது சொல்வார், எனது உயிரும் பெரும் சுற்றத்தார் உயிரும், இல்லற தருமத்திற்கு இயைந்த பெண்ணான மனைவியின் உயிரும், நண்பர்கள் உயிரும் எல்லாம் நீங்கிப்போகாது நின்றிடும்படியாக எனது மகள் உயிரை மீட்டுத் தந்தாய்! இது நினக்கு அரிதோ! அம்மம்மா! கடல்சூழ்ந்த உலகில் வாழும் உயிரனைத்தும் காத்து இரட்சிப்பவனான ஈசனும் நீயே என்று எனது உள்ளம் மதித்துக் கொண்டது. **163**

வள்ளலையுன் றிருவுளத்தை யாருணர்வார் கவுச்சிகனு மகற்கியான் பெற்ற
தெள்ளமிர்த மனையமொழி விருத்தையெனுங் கன்னிகையைத் திசையின் நாடிக்
கொள்ளுதற்கு வந்தனையோ கூற்றுவனுற் போனவுயிர் குறுகி மீண்டு
மெள்ளவரும் படியழைத்துத் தந்திடுவான் வந்தனையோ விளம்பு கையா.

வள்ளலே! உனது திருவுளத்தை யார் அறிவார். கவுச்சிகன் என்னும் உனது ஒருமகனுக்கு யான்பெற்ற தெள்ளிய அமிர்தம் ஒத்த மொழியினைப் பேசும் விருத்தை என்னுங் கன்னியைத் திக்கிலே தேடிப்பெற்றுக்கொள்வதற்கு வந்தாயோ! அல்லது இயமனால் போகப்பட்ட உயிர் திரும்பவும் அவள் உடல்சேரவே மெள்ள வரும்படியாக அழைத்துத் தந்திடுவதற்கு வந்தனையோ! என் ஐயனே யாதிற்கு வந்தாய் எனச் சொல்வாயாக. **164**

எனமுனிவன் தனைநோக்கி முகமன்கள் இவைபலவு மெடுத்துக் கூறி
அனையவனை யுடன்கொண்டு சுற்றத்தா ரெல்லாரு மடைந்து சூழ
மனைவியொடும் புதல்வியொடும் மடமாதர் தங்களொடும் வல்லை யேகித்
தனதுறையுள் இடைப்புகுந்து வீற்றிருந்தான் ஆற்றரிய தவத்தின் மேலோன்

என இவ்வாற்றால் குச்சகமுனிவனை நோக்கிப் புகழ்ந்து முகமன் பல எடுத்துச் சொல்லிக் குச்சகரையும் அழைத்துக்கொண்டு சுற்றத்தார் எல்லாரும் நெருங்கிச் சூழ்ந்து வர மனைவியொடும் மகளொடும் மடமெனும் குணநிறைவான தோழிப்பெண்களோடும் தனது ஆச்சிரமத்தில் எழுந்தருளிச்சென்று வீற்றிருந்தார் செய்தற்கரிய தவமேலவரான உசத்தியமுனிவர். 165

பின்புமொரு சிலவைகல் குச்சகனை அவணிருத்திப் பெரியோய் இங்ஙன்
என்புதல்வி தனையளிப்பன் உன்மதலை தனைக்கொண்டே யேகு கென்னத்
தன்புதல்வற் கொடுவரலும் விருத்தையெனுங் கன்னிகையைத் தழல்சான் றாக
அன்பினொடு நன்னாளி லோரைதனில் விதிமுறையே அருள்செய் தானால்.

பின்புமொரு சிலநாள் குச்சகமுனிவனை அவ்விடத்திலிருத்திப்பேணிப் போற்றுதல் செய்து பின்னர் குச்சகரைநோக்கிப் பெரியோனே இங்கு எனது புதல்வியை உனது மகனுக்குத் திருமணம் செய்துகொடுப்பேன்; உமது பிள்ளையைக் கொண்டுவருவீராக எனலும் அப்போது குச்சகமுனிவர் தனது மகன் மிருகண்டுயரைக் கொண்டுவருதலும், அவ்வேலையில் விருத்தை என்னும் கன்னியை அக்கினிசான்றாக அன்பினோடும் நல்ல நாளிலே பொருந்திய சுபமுகூர்த்தத்திலே விதிமுறையாகக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார் உசத்தியமுனிவர். 166

அருள் புரிந் திடுதலும் அன்பி னுன்இயைந், திருவரும் இல்லறம் இயற்றப் பல்பகல்
கருணைசெய் குச்சகன் கண்டு மாதவம், புரிதர வேவட புலத்திற் போயினான்.

திருமணம் செய்துகொடுத்தலும் மிருகண்டுவரும் விருத்தையும் அன்பினால் இயைந்து கூடி இல்லற தருமத்தைப் பலநாள் புரிந்துவர அதனைக் குச்சகர்கண்டு கருணைசெய்து தான் பின்னர் தவம்புரியுமாறு வடதேசத்திற்குப் போயினர். 167

போதலும் இருந்திடும் புனித வேதியன், மாதவ வலியினால் மாதின் நோன்பினால்
மேதினி வியந்திட மிருகண் டென்னவோர் காதலன் உதித்தனன் கணிப்பில் காட்சியான்.

குச்சகமுனிவர் தவம்செய்யப் போதலும் அங்கு இருந்த புனிதப் பிராமணனாகிய மிருகண்டுயரின் பெரிய தவத்தின் வலிமையாலும், மனைவி விருத்தையின் நோன்பின் பலனாலும் இப்பூமியுள்ளார் புகழும்படியாக மிருகண்டன் என்னும் நாமம் இடப்பெற்ற மகன் அவதரித்தார். அவர் எம்மால் கணித்தறிய முடியாத நற்காட்சிபெறும் இயல்புடையவர். சித்தம் ஒன்றிச் சிவமே தெளியும்படியான பேறு பிறவியினாலே பெற்றுக் கொண்டார். அதனையே 'கணிப்பில் காட்சியான்' எனவும் கூறியதுமன்றி அப்பிள்ளை தான் பார்வைக்கு மிகத் தேசுடன் விளங்கியது எனலுமாம். 168

அப்புதல் வற்கியாண் டாறு சென்றுழி, மெய்ப்பிர மச்செயல் விளங்கு பான்மையால்
முப்புரி நூல்வினை முடித்துத் தாதைபோல், செப்பரு மாதவஞ் செய்யப் போயினான்.

அப்புதல்வரான மிருகண்டருக்கு ஆறுவயசு சென்றபிற்பாடு உண்மைகாட்டும் பிரமச்சாரிய செயல்விளங்கும் தன்மையாக மூன்றுபுரிசனைக்கொண்ட பூநூலை அணிந்து, பிள்ளையை நெறியில் நிறுத்திவிட்டுத் தந்தையான மிருகண்டுயர் தனது தந்தை குச்சகரைப்போல் தானும் தவம்செய்யப் போயினர். 169

ஊற்றமா மிருகரண் டுயன் என்றிடும், ஆற்றன்மா முனிவரன் அகல வன்னவன்
தோற்றமா கியசுதன் தொன்மை நாடியே, ஆற்றினன் ஆதியிற் புரியுஞ் செய்கன்.

தவவழியின் ஊற்றம் இவர் எனும்படி தோன்றிய மிருகண்டுயர் எனும் மாதவ வலிவுடைய பெரிய முனிவன் நீங்கிவிட அவரின் தோற்றம் எனும்படியான வடிவும் குணமும் நிறைந்த மகன் மிருகண்டர் தங்களது முந்தியோரின் முறைகளைத் தாமும் வழிக்கொண்டு முன்னர் செய்யும் கடனான பிரமச்சாரிய ஒழுக்கத்தைப் பேணிவந்தார்.

சொற்தலை தெரிமருத் துவதி யென்றிடும், முற்கலன் மகள்தனை முறைவ ழாதுபின்
நந்தலை யணிகலன் நல்கி நீக்கிய, வற்கலை யுடையினன் வதுவை முற்றினன்.

சொல்வடிவில் விளங்கும் பல கலையையும் உணர்ந்துகொண்ட மருத்துவதி எனப் பெயர்பூண்ட முற்கலன் என்னும் முனிவனுடைய மகளை, அணியப்பெறும் ஆடை ஆபரணங்களைக் கொடுத்து, நெறிவழாது ஒழுகிவந்த பிரமச்சாரி விரதத்தின்போது அணியப்பெற்ற மரஉரி ஆடையை நீக்கி வேறு மங்கலமான உடை அணிந்த மிருகண்டர் திருமணம் செய்துகொண்டார். 171

இருந்தனன் அநாமயம் என்னும் பேரொடு. பொருக்திய வனத்திடை புதல்வர் இன்றியே
வருந்தினன் தமரொடும் மாது தன்னொடும், அருந்தவன் காசியை அடைதல் மேயினன்.

அநாமயம் என்னும் பேரோடு பொருந்திய தபோவனத்திடை மிருகண்டர் மனைவியுடன் இல்லறம் நடாத்திக்கொண்டு இருந்தார். இல்லறத்தின் பேறான புத்திரர் இல்லாமையால் வருந்தினர். புத்திரப்பேற்றை விரும்பித் தனது சுற்றத்தாரொடும் மனைவியோடும் அரிய தபோதனரான மிருகண்டர் தமது இடத்தைவிட்டு நீங்கிக் காசியை அடைந்துகொள்கின்றார். 172

அடைந்ததோர் பொழுதினில் அமரர் யாவருங் கடைந்திடு திரைக்கட லனைய கங்கைநீர்
குடைந்தனன் ஆடினன் குழுமி மாதவர், மிடைந்திடு மறுகிடை விரைவில் மேயினன்.

காசியை அடைந்த பொழுதினில், அங்கு தேவர்கள் யாவரும் கூடிக் கடைந்த பாற்கடலை ஒத்த கங்கை ஆற்றில் மூழ்கி நீராடிக்கொண்டு, எழுந்து கூட்டமாகத் திரண்டுமுனிவர்கள் நெருங்கிவாழும் வீதியூடு விரைவிற் சென்றருளினர். 173

பொன்றிரண் மாமதில் புடைய தாமணி, கன்றிகை யென்பதோர் கடவுள் ஆலயஞ்
சென்றனன் சூழ்ந்தனன் திங்கள் வேணியான், மன்றமர் திருவடி வணங்கிப் போற்றினன்.

பொன் திரண்டவண்ணம்போல அழகிய பெரிய மதில்சூழ்ந்த மணிகன்றிகை என்பதொரு கடவுளுடைய ஆலயத்தின் உள்ளேசென்றார். கோயிலை மிருகண்டர் வலம்வந்தார். இளம்பிறையணிந்த சடையுடைய சிவபெருமான் திருவடி வணங்கிப் போற்றினர். 174

மெய்ப்படு மறையுணர் மிருகண் டென்பவன், அப்பெருங் கோயிலுக் கணித்தொர் பாங்கரில்
செப்புறும் ஆகமத் தெளிவு நாடியே, மைப்பெருங் கண்டனை வழிபட் டானரோ.

உண்மைபொருந்திய வேதங்களை உணர்கின்ற மிருகண்டர் என்பவர் அந்தப் பெரிய கோயிலுக்குக் கிட்டுதலாக ஓர் பக்கத்தில் சென்று சொல்லப்பெறுகின்ற ஆகமங்களின் தெளிவுகளை நாடி ஆராய்ந்து அதன் பிரகாரம் இருள்கொண்ட கண்டமுடைய சிவபெருமானை வழிபாடு புரிந்தார். 175

ஆதவம் பனிமழை அனிலத் தச்சுறுப், பாதவ மாமெனப் பருவ மாறினும்
பேதைபங் குடையவெம் பிரானை உன்னியே, மாதவம் புரிந்தனன் மதலை வேணடியே.

சூரிய ஒளியின் வெப்பினாலோ அன்றிப் பனியாலோ மழையாலோ சூறுவளிக் காற்றாலோ யாதொன்றாலும்கூட அச்சமடையாது நாட்டியமரம்போல, கார், கூதிர், முன்பனி, பின்பனி இளவேனில் முதுவேனில் ஆகிய இப்பருவம் ஆறிலும் பெண்ணொரு பாகராகிய எம்பெருமானை நினைந்து தமக்கு ஓர் புதல்வனை வேண்டியே சிந்தித்தவாறு பெரும் தவத்தினைப்புரிந்தார். 176

அருந்தவம் ஓரியாண் டாற்றத் தொல்லைநாட், பொருந்திய மூவெயில் பொடித்த புங்கவன்
வரந்தனை உதவுவான் வந்து தோன்றலும், இருந்தவ முனிவரன் இறைஞ்சிப் போற்றினான்.

இவ்வாறாக அரிய தவத்தை ஓர்வருடம் அளவும் புரிய அவ்வேளை முன்னாளில் உலகை வருத்தும்படி பொருந்திய முப்புரங்களையும் பொடிசெய்த தலைவரான சிவபிரான் தவம்புரிந்த மிருகண்டருக்கு வரந்தனை உதவியருளும்பொருட்டாக முன்பாக வந்து தோன்றுதலும், எம்பெருமானைப் பெரும் தபோதனரான மிருகண்டர் இறைஞ்சிப் போற்றுதல்செய்தார். 177

முந்துறு முனிவரன் முகத்தை நோக்கிநீ, சிந்தையில் விழைந்ததென் செப்பு கென்றலும்
மைந்தனை வேண்டினன் வரத்தை நல்கென, எந்தையும் முறுவல்செய் தினைய கூறுவான்

திருமுன்பாக வணங்கிநிற்கும் மிருகண்டர் எனும் முனிவன் முகத்தை எம்பிரான் நோக்கி, மிருகண்டனே! நீ உனது மனத்தில் விரும்பியது யாது? சொல்வாயாக என்றருள் புரிதலும், அப்போது மிருகண்டர், ஐயனே! ஓர் புதல்வனை யான் விரும்பினேன்; அவ்வரத்தை எனக்கு நல்குவீராக எனலும் எம்பெருமானும் அதுகேட்டருளி புன்சிரிப்புக்கொண்டு கூறியருள்வார். 178

தீங்குறு குணமே மிக்குச் சிறிதுமெய் யுணர்வி லாமல்
மூங்கையும் வெதிரு மாகி முடமுமாய் விழியும் இன்றி
ஒங்கிய ஆண்டு நூறும் உறுபிணி யுழப்போ னாகி
ஈங்கொரு புதல்வன் தன்னை யீதுமோ மாத வத்தோய்.

மாதவமுனிவனே! உனக்கு, தீங்கான குணமே மிகுந்து சிறிதேனும் உண்மை உணர்விலாமல் ஊமையும் செவிடும் முடமும் உடையவனாய் கண்ணும் இல்லாமல் ஆயுள் மட்டும் மேலோங்கிய நூறுவருடம் உடையவனாய் அக்காலம் வரையும் ஓயாது கொடியநோயை அநுபவிப்போனாக உள்ள இத்தகைய ஒரு பிள்ளையை நாம் தருவோமா? 179

கோலமெய் வனப்பு மிக்குக் குறைவிலா வடிவ மெய்தி
ஏலுறு பிணிகள் இன்றி எமக்குமன் புடையோ னாகிக்
காலமெண் ணிரண்டே பெற்றுக் கலைபல பயின்று வல்ல
பாலனைத் தருது மோநின் எண்ணமென் பகர்தி யென்றான்.

அல்லாமல் கோலம் மிக்க மேனி வனப்புடன்மிகுந்து குறைவிலாத வடிவம் உடையனாய், எந்நிலையான நோயும் இலாதவனாய், எமக்கும் அன்புடையவனாகி வயது பதினாறு பெற்றுக்கொண்டு கலைகள் யாவும் பயின்றுகொண்டு அதில் வல்லமை உடையவனான ஒரு பாலனை உனக்கு மைந்தனாகத் தருதுமோ? உனது எண்ணம் யாது? எத்தகைய பிள்ளைவேண்டும் சொல்வாயாக? என எம்பிரான் கேட்டருளினார். 180

மாண்டகு தவத்தின் மேலாம் மறைமுனி அவற்றை யோரா
ஆண்டவை குறுகி ஞலும் அறிவுள ஞகி யாக்கைக்
கீண்டொரு தவறு மின்றி எம்பிரான் நின்பா லன்பு
பூண்டதோர் புதல்வன் தானே வேண்டினன் புரிகவென்ருன்.

மாட்சிமை உடைய தவத்தின் மேலவரான வேத நெறி நின்ற மிருகண்டர் அவற்றைக்கேட்டு உணர்ந்து சொல்வார் ஐயனே வயது தான் குறைவாஞலும் அறிவு உடையவஞகியும் உடலுக்கு இங்கு ஏதும் தவறுதல் இலாதவனும், எம்பிரானே தேவ ரீரிடத்துஅன்பு பூண்டதோர் பிள்ளையையே நான் வேண்டினேன் அருள் செய்வீராக என்ருர் மிருகண்டர். 181

என்றிவை துணிவிஞலே இசைத்தலும் ஈசன் நிற்கு
நன்றிகொள் குமரன் தன்னை நல்கின மென்று சொல்ல
நின்றிடு முனிவன் போற்றி நெஞ்சகம் மகிழ்ச்சி யெய்தி
ஒன்றிய கேளி ரோடும் உறைந்தனன் உறையும் நாளில்.

என்று, வயது குறைவாஞலும் குணநிறைவும் கடவுளிடத்தன்புமே மேலோங்கியது எனத் துணிந்துகொண்டமையாலே இவ்வாறு கூறுதலும், ஈசனும் நினக்கு நன்றி யறிதலை உடைய அப்பிள்ளையைத் தந்தோம் என்று சொல்லுதலும் அவ்விடப் நின்ற முனிவன் ஈசனைப்போற்றி உள்ளம் மகிழ்ச்சி அடைந்து தன்னுடன் ஒன்றிவாழும் சுற் றத்தாருடன் காசியில் தங்கி இருந்தார். அப்படி இருக்கும் நாட்களில். 182

பூதல இடும்பை நீங்கப் புரைதவிர் தருமம் ஓங்க
மாதவ முனிவர் உய்ய வைதிக சைவம் வாழ
ஆதிதன் அருளி ஞலே அந்தகன் மாள அன்ஞன்
காதலி உதரத் தாங்கோர் கருப்பம்வந் தடைந்த தன்றே.

இப்பூமியில் உள்ள இடும்பைகள் யாவும் நீங்கவும், குறைதவிர்ந்த தருமம் ஓங்கவும், மாதவம்புரியும் முனிவர் உய்யவும்; வைதிகநெறி காட்டும் சைவசமயம் வாழவும்; எப் பொருட்கும் ஆதியான சிவபிரான் அருளாலே இயமன் மாண்டுபோகவும் மிருகண்ட முனிவனின்காதலியான மருத்துவதி அம்மையார் திருவயிற்றில் ஒரு கருப்பம் வந்து அடைந்து கொண்டது. 183

அடைதலும் அதனை நோக்கி அறிதரு முனிவன் ஆண்டை
விடையவன் அடியார் யார்க்கும் வேண்டிய வேண்டி யாங்கே
நெடிதுபல் வளனும் ஈந்து நிறைதரு திங்க டோறுங்
கடனியல் மரபு மாற்றிக் காசியின் மேவி ஞனே.

மருத்துவதி அம்மையார்பால் கருப்பம் சேர்தலும் அதனைக் கண்டு அறிந்து கொண்ட மிருகண்டர் அவ்விடத்துள்ள இடப வாகனமுடைய சிவபிரான் அடியார் யார்க்கும் வேண்டுவவான பொருளை, அவர்கள் வேண்டிய பிரகாரம் நெடிது காலம்வரை அனுபவிக்கப்பெறும் வகையில் பலவற்றையும் கொடுத்து, நிறைவாகும் ஒவ்வொரு மாதம் தோறும் செய்யப்பெறும் கடன்களை முறையாகப் புரிந்துகொண்டு காசியில் இருந்தார். கடன்களாவன கருவுற்ற நாள்முதல் பிரசவமாகும் காலம் வரையிலும் அந்தணர்கள் செய்யும் கடன்கள். அவையாவன கும்சவனம் சீமந்தம் முதலியன. 184

கறையுயிர்த் திலங்கு தந்தக் காய்சின அரவங் கவ்வக்
குறையுயிர்ப் படிவத் திங்கள் அமிர்தினைக் கொடுத்திட் டாங்கு
மறையுயிர்த் தருளுஞ் செவ்வாய் மதலையை வயாவின் மாழ்கிப்
பொறையுயிர்த் தருளில் தந்தாள் பொறைதரு திருவைப் போல்வாள்.

நஞ்சினை உமிழ்ந்து விளங்கும் பற்களை உடைய கொடுமையான கோபமுடைய பாம்பு வாயினால்கவ்வ இளம்பிறையையுற்ற சந்திரன் அமிர்தத்தை உலகிற்கு கொடுத்து நிற்கும் தன்மையேபோல், வேதங்கள் யாவையும் ஓதியருளும் சிவந்த வாயினைக் கொண்ட குழந்தையை, மருத்துவதி அம்மை பிரசவவேதனையுடன் துன்புற்று, அத்து யரைத் தாங்கியவாறு அருள்நிறைவாகும்படி பெற்றெடுத்துத் தந்து நின்றாள். அவள் யாரைப்போல்அமைந்தாள் எனின் செல்வத்தைத் தரும் இலக்குமியைப்போல்வாள். 185

மீனமும் முடிந்த நாளு மேவுற மிதுனஞ் செல்ல
ஊனமில் வெள்ளி தானும் ஒண்பொனும் உச்ச மாகுந்
தானமுற் றினிது மேவத் தபனனே முதலா வுள்ள
ஏனையர் முனிவர் நாகர் இடந்தொறும் இருப்ப மன்னே.

இவ்வாறு குழந்தை பிறக்கும்நேரத்து மீனஇராசியும், ரேவதி நட்சத்திரமும் பொருந்தவும் மிதுன ராசி நீங்கி, கடகராசி உதயமாக, குறைவுஇல்லாத வெள்ளியும் வியாழனும் உச்சமான தானங்களில் இனிது மேவவும், சூரியன் முதலாக உள்ள ஏனைய கிரகங்களும் முனிவர்களும் தேவர்களும் தங்கட்குரிய ஆட்சிஇடத்திலே இருப்ப வுமான நிலைஉடை வேளையில் 186

நண்ணினன் புவியின் மைந்தன் நவமணிக் குலமும் பொன்னுஞ்
சுண்ணமும் மலருந் தாதுந் தூயமென் கலவைச் சாந்தும்
தண்ணுறு நானச் சேறுந் தலைத்தலைக் கொண்டு தாவில்
விண்ணவர் மண்ணுளோர்கள் வியப்புற வீசி ஆர்த்தார்.

இப்பூமியில் குழந்தை பிறந்தருளினன். இதனை அறிந்து பெருமகிழ்வாகி நவ இரத்தின வகைகளையும் பொன்னையும் மஞ்சள் பொடியும் பூவும் மரகந்தமும் தூய்மை யான மென்மைத் தன்மைவாய்ந்த வாசக் கலவை உடைய சந்தனமும், குளிர்ச்சி தரு கின்றநீராடும் போது அணிகின்ற குழம்பும், வெவ்வேறாக தாங்கிக்கொண்டு குறை விலாத வான உலகில் வாழும் தேவர் யாரும், பூவுலகில் வாழும் மனிதர்களும் யாவரும் வியக்கும்படி வீசி ஆரவாரித்தார்கள். 187

தேவதுந் துபிகள் ஆர்த்த செய்தவை யோம்பி மாற்றும்
மூவர்கள் அன்றி ஏனோர் முறைமுறை ஆசி செய்தார்
யாவதென் றுணர்தல் தேற்று திந்நகர் அன்றி நேமி
காவல்செய் உலகம் யாவுங் களிமயக் குற்ற வன்றே.

தேவதுந்துபி வாத்தியங்கள் முழங்கின. படைத்தல், காத்தல், அழித்தலை முறையே நிகழ்துகின்ற பிரமன் திருமால் உருத்திரன் ஆனவரல்லாமல், மற்றைய எல்லாத் தேவரும் முறை முறையாக ஆசீர்வாதம் செய்தனர். காசி நகரத்து வாழ் வார்க்கு மட்டுமன்றி கடலால் சூழ்ந்து காவல் கொள்ளப் பெறும் பூமி எங்கும்வாழும்

அனைவர்க்கும் அவர்கள்பால் தங்களுக்கு இன்று இம் மாதிரி மகிழ்வான சிறந்த நிலை எப்படிவந்தது என அறிய முடியாதபடி எல்லார்க்கும் ஆனந்தமுறும் மயக்கம் தன்பாட்டில் தோன்றியது. 188

தந்தையும் அதனைக் கேளாத் தடம்புனற் கங்கை மூழ்கி
அந்தணர் முதலோர்க் கெல்லாம் ஆடகம் பலவும் நல்கி
முந்துறு கடன்கள் ளாற்ற முளரிமேல் முனிவன் மேவி
மைந்தனுக் குரிய நாமம் மார்க்கண்டன் என்று செய்தான்.

தந்தையான மிருகண்டரும் இதனைக்கேட்டு அழகிய குளிர்ந்த நீரையுடைய தங்கை ஆற்றில் நீர்மூழ்கி கரைசேர்ந்து பிராமணர்கள் முதலாக உள்ள எல்லோர்க்கும் பல பொன்னினை இன்னும் வேறுபலவற்றை தானமாகக் கொடுத்து பின்னுக உள்ள கடன்களைப் புரிந்து நிற்கும் போது தாமரை மலரில் இருக்கும் பிரமதேவர் தோன்றி பிள்ளையின் நாமம் மார்க்கண்டன் என நாமம் சூட்டினுர். 189

மறுபடாத் திங்கள் போல வளர்தலும் மதியந் தோறும்
உறுப்படை உபநிட் டானம் ஓதனம் பிறவும் முற்ற
நெறிப்படு மோரி யாண்டின் நெடுஞ்சிகை வினையும் ஆற்றிச்
சிறப்புடை இரண்டாம் ஆண்டிற் செவிநெறி புரித லுற்றுன்.

மார்க்கண்டர் எனும் புதல்வர் மறுவில்லாத இளம்பிறைபோல வளர்ந்து வரலும் உரிய மாதந்தோறும் அதாவது நான்காவது மாதத்தில் குழந்தையை வீட்டெல்லையை விட்டு வெளிப்படுத்தலென்னும், கிரியைகள் நிறைவுடன் செய்யப்பெறும் உப நிட்டானம் என்னும் கிரியையும் ஆருவது அல்லது எட்டாவது மாசத்தில் செய்யப் பெறும் அன்னப் பிராசனம் (சோறு உண்பித்தல்) என்னும் கிரியையும் மூன்ருவது மாசத்தில் செய்யப்படும் சூரியதரிசனம், சந்திர தரிசனம் ஆகிய பிற கிரியைகள்யாவும் முற்றுப் பெற்றும், பின்பு நெறிப்பட்ட ஓராண்டு நிறைவில் மயிர் களைதல் என்னும் பெரிய சௌசத்தையும், ஆகிய இவற்றைப் புரிந்து சிறப்புற்ற இரண்டாவது வயசிலே, காதுகுத்தல் என்னும் செயலையும் புரிதல் உற்ருர் தந்தை யான மிருகண்டர். 190

ஏதமில் ஐந்தின் முந்நூல் இலக்கண விதியுஞ் செய்தே
ஓதிடுங் கலைக ளெல்லாம் உள்ளுற உணர்த்துங் காலை
வேதமும் பிறவுங் கொண்ட வியன்பொருள் தெரிந்து மேலாம்
ஆதியே சிவனென் றெண்ணி அவனடி அரனென் றுற்றுன்.

ஏதும் குறைவிலாத ஐந்து வயசிலே மார்க்கண்டர் என்னும் பிள்ளைக்கு மூன்று புரியாக மும்முறை கொண்ட பூநூலை விதிப்படி அணிகின்ற சடங்கையும் செய்து அவர் ஓதவேண்டிம் கலைகள் யாவையும் உள்ளத்தே தெளிந்து கொள்ளுமாறு அவருக் ஓதிக் கொடுத்துவரும் காலத்து வேதங்கள் ஆகமம், புராணம் ஆனவற்றில் கொண்ட மேலான உண்மைப் பொருளினை மார்க்கண்டர் தெரிந்துகொண்டு எல்லாவற்றிற்கும் ஆதியானவர் சிவபிரான் என்று நினைந்து அவருடைய திருவடிகளை தனக்கு காப்பாக, தஞ்சமாக, தனது தேடற்கரிய செல்வமாகக் கொண்டார். 191

அரனைமுன் இறைஞ்சி பன்னுன் அன்பரைத் தாழ்ந்து தங்கள்
குரவனை வணக்கஞ் செய்து கோதறு முனிவர் தம்மைப்
பரவியே பயந்த மேலோர் பாதபங் கயங்கள் சூடிப்
பிரமமாம் ஒழுக்கம் நாளும் பேணினன் பிறப்பு நீப்போன்.

எல்லாச் செயலுக்கும் முன்னதாக சிவபிரானை வணங்கி அவருடைய அன்பரைக் கண்டால் தாழ்ந்து வணங்கி தங்களுடைய குருவை வணக்கம் செய்து குற்றம் நீங்கிய முனிவர் தங்களைத் துதித்து வணங்கியே தம்மைப் பெற்றெடுத்த மேலவராகிய தந்தை தாயாருடைய தாமரை மலர் போலும் திருவடிகளை வணக்கிக்கொண்டு பிரமச்சாரியம் எனப்படுகின்ற, நான்கு ஆச்சிரம தருமங்களில் முதலாவதாகிய ஒழுக்கத்தை நாளும் பேணி வந்தார். பிறவித்துயரை நீக்கும் பேறுகொண்ட மார்க்கண்டர் என்னும் மைந்தர். 192

இந்தவா றியலுங் காலை எண்ணிரண் டான யாண்டும்
வந்ததால் அதனை நோக்கி மைந்தனை நோக்கி வாளா
தந்தையும் பயந்த தாயுந் தனித்தனி இருந்து சால
வெந்துயர்க் கடலின் மூழ்கி விம்மலுற் றிரங்கி நைந்தார்.

இந்தவாறு மார்க்கண்டர் ஒழுகிவருங்கால் பதினறு வருடம் என்னும் அவரின் ஆயுட் காலமும் முடிவாக வந்துகொண்டது. அதனை அறிந்துகொண்ட தந்தையான மிருகண்டரும் தயான மருத்துவதி அம்மையும் மைந்தனின் நிலைகுறித்து அவரைக் காணும்தோறும் கவலை மேலிட்டுதனித்தனி இருந்து அடக்கமுடியாத கொடிய துயர்க்கடலிலே மூழ்கியவராய் விம்மி அழுது இரங்கலுற்றார்கள். 193

ஆங்கது மதலை காணு அடியினை வணங்கி அன்னோர்
பாங்குற அணுகி நீவிர் பருவரல் உறுகின் றீரால்
ஈங்குது வென்னே, என்னும் யாதுமொன் றறிதல் தேற்றேன்
நீங்குமின் அவலம் நும்பால் எய்திய நிகழ்த்து மென்றான்.

அவ்வாறான தாய்தந்தையர் துயரநிலையை மைந்தரான மார்க்கண்டர் கண்டு தந்தை தாயார் காலில் தாழ்ந்து வணங்கி அவர் பக்கமாக நின்று கேட்பார் நீங்கள் பெரிதும் துயரப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்? ஏனோ இவ்வண்ணம் துயருறுவான். இப்படி நீங்கள் துயரப்படுவதற்கு காரணம் யாதாகும் என அறியமுடியாதிருக்கிறேன். இவ்விடத்து நீங்கள் துயரத்துடன் அவலப்படுவதைவிட்டு நீங்குங்கள். உங்கள் பாலாக யாது நேர்ந்துள்ளது நீங்கள் கவலைகொள்ளும் வண்ணம் என்பதைச் சொல்வீராக என்றார். 194

கூறிய மொழியுட் கொண்டு குமரநீ யிருக்க நம்பால்
வேறொரு துயரமெய்தி மெலிவதும் உண்டோ மேனாள்
ஏறுடை அமல மூர்த்தி யாண்டுநின் தனக்கி ரைந்தும்
ஆறுமென் றளித்தான் அந்நாள் அடைதலின் அவலஞ் செய்தேம்.

மகனார் கூறிய வார்த்தையை உணர்ந்து கொண்ட மிருகண்டரும் மருத்துவதி அம்மையும் குமரனே ! நீ இருக்க நமதுபாலாக வேறு ஒரு துயரத்தை நாம் அடைந்து அதனால் உள்ளம் மெலிவுறுவதும் உண்டோ. ஆனால் முன்னாள் உன்னை எமக்கு தந்த இடப வாகனமுடைய மலபந்தம் இல்லாத சோதியாம் சிவபிரான் உனக்கு வயது பதினாறு என்று அருள் புரிந்தார், அவ்வாறு சொல்லப்பெற்ற காலமுடிவான நாள் வந்து சேருதலும் நாம் அதை நினைந்து கவலைகொண்டோம். 195

என்றுரை செய்த தாதை இடருறு முகத்தை நோக்கி
ஒன்றுநீர் இரங்கல் வேண்டாம் உயிர்க்குயி ராகி யென்றும்
நின்றிடும் அரனை யேத்தி அருச்சனை நிரப்பிக் கூற்றின்
வன்றிறல் கடந்து நும்பால் வல்லைவந் தடைவன் மன்னோ.

என்று உரை செய்த தந்தையாரின் இடருற்ற முகத்தைநோக்கி மார்க்கண்டர் சொல்வார் நீங்கள் ஒன்றுக்கும் கவலையுறல் வேண்டாம். உயிருக்கு உயிராய் என்றும் எம்முடனாகி நிற்கின்ற சிவபிரானைத் துதித்து வணங்கி மலரால் அருச்சனை புரிந்து, பூசைநிறைவு செய்து அதன்பலனால் இயமனுடைய மிக்க வலியினைக் கடந்து மரணநிலை நீங்கி பின் நும்பக்கராக திரும்பவும் விரைவில் வந்து சேர்வேன். 196

இருத்திரால் ஈண்டே என்று ஏதுக்கள் பலவுஞ் செப்பிக்
கருத்துற நெடிது தேற்றிக் கான்முறை வணங்கி நிற்பத்
திருத்தகு குமரற் புல்லிச் சென்னியும் மோந்து முன்னர்
வருத்தமும் நீங்கிச் சிந்தை மகிழ்ந்னர் பயந்த மேலோர்.

இவ்விடத்து நீங்கள் இருப்பீராக என இப்படியாக வழிபாடுமூலம் இயமனை யும் வெல்லலாம் என்னும் காரணங்கள் பலவற்றையும் காட்டிச் சொல்லி அவர்களது கருத்திலே தனது உறுதிமொழியை தேறிக்கொள்ளுமாறு தேற்றிக்கொண்டு அவர்கள் காலிலே முறையாக தாழ்ந்து வணக்கஞ் செய்து நிற்றலும் அப்போது தமது அழகும் குணமும் நிறைந்த மகனுரை தாய்தந்தையர் தழுவிக்கொண்டு உச்சியிலும் முத்த மிட்டு முன்னர் கொண்டுள்ள வருத்தமும் நீங்கி சிந்தையில் மகிழ்ச்சி கொண்டார்கள் பெற்றெடுத்த தாயும் தந்தையுமான பெரியோர்கள். 197

இருமுது குரவர் தத்தம் ஏவலின் ஈசன் என்னும்
ஒருவன தருளும் அன்பு முடனுறு துணையாய்ச் செல்லப்
பொருவரு மகிழ்ச்சி பொங்கத் பொள்ளெனப் பெயர்ந்து போகித்
திருமணி கன்றி கைப்பேர்ச் செம்பொன் ஆலயத்திற் புக்கான்.

தந்தை தாய் எனும் முதிய பெரியோர்கள் இருவர்களது உத்தரவான ஏவ லின்படி கடவுள் எனும் தோன்றாத்துணையான ஒருவனின் அருளும் அன்பும் உடனாகப் பொருந்திய உறுதுணையாகவர, நிகரற்ற மகிழ்சி உள்ளத்தே பொங்கி எழ, அதிவிரை வாக அவ்விடம் விட்டு நீங்கிச்சென்று ஒளியுடன் விளங்கும் மணி கன்றிகை என் னும் பேருடைய செம்பொன் ஆலயத்தின் உள்புகுந்தார் மார்க்கண்டர். 198

என்புநெக் குருகக் கண்ணீர் இழிதர வலஞ்செய் தீசன்
முன்புற வணக்கஞ் செய்து முடிமிசை அடிகள் சூடித்
தென்புலத் தொருசா ரெய்திச் சிவனுருச் செய்து பன்னாள்
அன்புடன் அருச்சித் தேத்தி அருந்தவம் இயற்றி யிட்டான்.

அங்கு சென்று எலும்பு நெக்குருக கண்ணீர் வடிந்து பெருகிட அன்பாகி கோயிலை வலம்செய்து ஈசன் முன்பாகவந்து வணக்கம் செய்து தமது முடிமேலாக சிவபிரான் பாதங்கள் சூடிக்கொண்டு, ஆலயத்தின் தென்புறமாக ஓர் இடத்திற் சென்று சிவபெருமான் திருஉருவம் ஒன்றைச் செய்து பலநாளாக அங்கு பெருமானை அன்புடன் அருச்சனை புரிந்து வணங்கி அரிய தவத்தைப் புரிந்து இருந்தார். 199

ஈசனும் அவ்வழி யெய்தி நற்றவம், பூசனை அதனெடு புரிதி யாலது,
மாசில தாதலின் மகிழ்ந்து நீயினிப், பேசுக வேண்டிய பெறுதற் கென்னவே.

சிவபிரானும் மார்க்கண்டருடைய பூசனையின் பிரகாரம் அருள்புரிய முன்பாகத் தோன்றினர். மைந்தனே நல்ல தவத்தைப் பூசனையுடன் புரிகின்றாய். அது மாசில்லாத தாதலின் மகிழ்வாகினேம். நீ இனி வேண்டியதைப் பெறுதற்கு யாது வேண்டும் எனப் பேசுக என எம்பிரான் கூறியருளினர். 200

ஐயனே அமலனே அனைத்து மாகிய, மெய்யனே பரமனே விமல னேயழற்,
கையனே கையனேன் காலன் கையுறு, துய்யநேர் வந்துநீ உதவென் றேரதலும்.

அவ்வேளை மார்க்கண்டர் துதித்து சொல்வார், ஐயனே, அமலனே, அனைத்துப் பொருளுமாகின்ற திருமேனி உடையவனே, பரமனே, விமலனே, நெருப்பேந்திய கையனே! வஞ்சனையுடையேன் இயமன் வருங்கால் அவனிடம் சிக்காது உய்ய தேவரீர் வந்து உதவுவீராக என்று வேண்டினர். 201

அஞ்சலை அஞ்சலை அந்த கற்கெனச், செஞ்சரண் இரண்டையுஞ் சென்னி சேர்த்தலும்,
உஞ்சனன் இனியென ஓத வொல்லையில், நஞ்சணி மிடற்றினன் மறைந்து நண்ணினன்.

அப்போது ஈசன் மைந்தனே! அஞ்சாதே அஞ்சாதே இயமனுக்கு என்று தமது சிவந்த திருவடிகள் இரண்டையும் மார்க்கண்டர் முடிமேலாகச் சூட்டியருளலும் அவ்வேளை இறைவன் திருவடிகளில் நிழலில் அமர்ந்து அடைதற்கரிய பேரின்ப நிலைகூடலும் உய்ந்தனன் இனியான் என மார்க்கண்டர் ஓதுதலும் விரைவுடன் திருப்பாதம் சூட்டிய நஞ்சை அணிந்த கழுத்தை உடைய சிவபிரான் சிவலிங்கத்துள் மறைந்தருளிப் போயினர். இதனை :-

சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத்துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப்பில்கி
நனந்தனைய திருவடி என்தலைமேல் வைத்தார்.
— என்னும் திருநாவுக்கரசர் தேவாரம் ஒப்பக் காண்க. 202

நண்ணிய பின்னரே நவையின் மைந்தனுக், கெண்ணிரண் டாண்டெனும் எல்லை செல்லலும்
விண்ணிடை முகிலென விசைகொண் டொல்லையில், துண்ணென வோர்யம தூதன்
தோன்றினன்.

சிவபிரான் மறைந்த பின்னராக குறைவிலா அருட்செல்வரான மார்க்கண்ட முனிவருக்குச் சொல்லப்பெற்ற பதினாறு வருடம் என்னும் ஆயுள் எல்லை கழிவாதலும், அவ்வேளை வானத்தில்தோன்றும்முகில்போல விசைகொண்டு திடீரென ஓர் இயமதூதன் அங்கு தோன்றினன். 203

பண்டுமுப் புரமெரி படுத்த புங்கவன், புண்டரீ கப்பதம் பரவும் பூசனை
கண்டனன் வெருவிமார்க் கண்டன் தன்னையான், அண்டுவ தரிதென அகன்று போயினன்.

முன்னாள் முப்புரம் எரிசெய்த கடவுளின் தாமரை மலர்போலும் திருவடிகளை வணங்கித் துதித்து நிற்கும் மார்க்கண்டரின் பூசனையைத் தூதுவன் கண்டான். பயந்து மார்க்கண்டனை நான் அண்டிப் பிடிப்பது அரிது என எண்ணித் அவ்விடம் விடுத்து அகன்று போயினன். 204

தீயெழ நோக்கியே சென்றி டாதுசேண், போயதோர் வல்லியம் போலும் தன்மையான்,
வேயென வந்துபின் மீண்டு தென்புல, நாயகன் அடிதொழா நவிறல் மேயினன்.

தான் பிடிக்க விரும்பிய மானை புலியானது நெருப்புக்கக்க உற்றுப் பார்த்தும் பின்னர் மான்பால் சென்றிட முடியாது தூர விலசிப் போனல் அப்புலி எந்நிலையாகுமோ, அதேபோலும் தன்மைகொண்டு மார்க்கண்டரைப் பிடிக்க வந்தும்

முடியாது திரும்பிச் சென்று தென்திசையில் வாழும் இயமராசன் திருவடிகளை வணங்கிச் சொல்லத் தொடங்குவான் தூதுவன். 205

இந்திரர் புகழ்தரும் இறைவ கேட்டியால், அந்தியின் நிறமுடை அண்ணல் பாலுறு
சிந்தையன் அவனடி சேருஞ் சென்னியோன், சந்தக மவன்புகழ்சாற்றும் நோன்மையோன்.

இந்திரனும் புகழும்படியான எங்கள் இயமராசனே கேளும், மாலைக்காலச் செக்கரைப்போலும் திருமேனி உடைய சிவபிரான் திருவடிகளையே பற்றுகச் சேர்த்த சிந்தை உள்ளவன். அவருடைய பாதஞ்சூட்டப்பெற்றவன். நித்தலுமே ஓயாது பெருமானின் புகழை ஓதுகின்ற தவவிரதம் உடையவன். 206

ஈசன தருச்சனை இயற்று கின்றனன், ஆசறு மனத்தினன் அறிவன் அந்தணன்
காசியின் இடத்தன்மார்க் கண்ட னுமெனப், பேசிய சிறப்புடைப் பெயர்பெற் றோங்குவான்.

அம்மைந்தன் சிவபிரானது அருச்சனையைச் செய்கின்றனன். குற்றமில்லாத மனத்தை உடையவன், அறிவுடையவன் பிராமணப் பிள்ளையாவான் காசி என்னும் இடத்தில் இருப்பவன். மார்க்கண்டன் எனப் பேசப்படும் சிறந்த பெயரினைக்கொண்டு யாரிலும் சிறந்து மேலோங்கிய ஒழுக்கமுடன் வாழ்வான். 207

அன்னதோர் பாலனை அணுக அஞ்சினன், முன்னரும் ஏகலன் முக்கண் எம்பிரான்
தன்னுழை இருந்தனன் தண்ட நாயக, உன்னுதி இதுவென உணரக் கூறினன்.

அவ்வாறான பிள்ளையை நான் அணுகிச் சென்று அவன்உயிரைப் பிடிக்கப் பயமானேன். அவன் முன்னாகவும் செல்லமாட்டேன். மூன்று கண்களை உடைய சிவபிரான் அருளாய கவசத்தூடு இருந்தான். யாவர்க்கும் செயப்படும் தண்டங்கட்கு நாயகனே! இதனை நீ அறிவாயாக என இயமன் உணரும்படி கூறினான் தூதுவன். 208

கூறிய அளவையிற் கூற்றன் துப்பினை, ஆறிய செந்தழற் கருத்தி னலெனச்
சீறினன் உயிர்த்தனன் சிறுவன் ஆங்கவன், ஈறில னாகிய இறைவ னோவென்றான்.

இதனைக் கூறிய நேரத்து இயமன், நெய்யினை ஆறிய நெருப்பில் சொரிந்தால் எப்படி அது சுவாலிக்குமோ அதுபோலச் சீறினான். பெருமூச்சுவிட்டான், அந்தச் சிறுவன் என்ன முடிவில்லாத கடவுளோ! எனச் சொன்னான். 209

தருதியென் கணகரை யென்று தணடகன், உரைசெய நின்றதோர் ஒற்றன் ஓடியே
வருதிரும் மழைத்தனன் மன்னன் என்றிடல், கரணர்கள் வந்தனர் கழல்வ ணங்கினர்.

இங்கே முன்னாக அழைத்துவந்து எனது கணக்கர்களைத் தாருங்கள் என்று இயமன் கூறலும் நின்ற ஓர் தூதுவன் கணக்கரிடம் ஓடிச்சென்று உம்மை இயமராசன் அழைத்தான் என்றலும், கணக்கர்கள் இயமன்முன் வந்து அவன் கால்களை வணங்கினர். 210

இறையவன் அவ்வழி எவருங் காணுறு, அறைகழல் அண்ணலை அருச்சித் தேத்திய
மறுவரு காட்சியான் மார்க்கண் டப்பெயர்ச், சிறுவனுக் கிறுவரை செப்பு மென்னவே.

தருமராசன் அவ்வேளை அவர்களைப் பார்த்து எவராலும் காணாதபடியாக மாசில்லாத ஓசை தரும் சிலம்பணிந்த திருப்பாதமுடைய சிவபிரானை அருச்சித்து வணங்கி குறைவிலாது நிறைந்த சிவ காட்சிப்பேறுடைய மார்க்கண்டர் என்னும் மைந்தனுக்கு முடிவுகாலத்தின் வரலாற்றை நீங்கள் சொல்வீராக எனக் கேட்டார். 211

சித்திர குத்தரென் றுரைக்குஞ் சீரியோர், ஒத்திடும் இயற்கையர் உணர்வின் மேலையோர்
கைத்தல மிருந்ததங் கணக்கு நோக்கியே, இத்திறங் கேளென இசைத்தல் மேயினர்.

அவ்வேளை அதுகேட்ட சித்திரர் குத்தர் என்று சொல்லப்பெறும் சீரினை உடைய கணக்கர் இருவர், ஒத்த இயல்பினை உடையவர். எல்லாம் உணரும் உணர்வுடையமிக முன்னையோர், தமது கைத்தலத்து இருந்த மார்க்கண்டரின் கணக்குகளைப் பார்த்து இயமராசனே! இதன்தன்மையைக் கேட்பீராக எனச் சொல்லத் தொடங்கினர். 212

**கண்ணுதல் இறையவன் கருதி மேலைநாள், எண்ணிரண் டாண்டென இறுதி கூறினன்**
**அண்ணலே சென்றதால் அதுவும் ஆங்கவன், பண்ணிய பூசனை அறத்தின் பாலதே,**

நெற்றிக் கண்ணினை உடைய சிவபிரான் இம் மைந்தனின் ஆயுள் இவ்வளவுதான் என நினைந்தருளி முன்னாளில் இவனுக்கு வயசு பதினாறு என எல்லை கூறியருளினர்; எங்கள் அரசே அந்த ஆயுட்கால எல்லையும் கடந்துபோய் விட்டது. எப்படி எனில் அந்த மைந்தன் பண்ணிய பூசனையின் புண்ணியச் சிறப்பினால் பதினாறு வருடம் எனும் கால எல்லையும் கடந்து மேலும் சிலநாள் சென்றுள்ளன. 213

**முதிர்தரு தவமுடை முனிவ ராயினும், பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்**
**மதியின ராயினும் வலிய ராயினும், விதியினை யாவரே வெல்லும் நீர்மையார்,**

முதிர்ந்த அறிவு நலம்பெற்ற முனிவர்க்காயினும் அன்றியும் நிகரற்ற செல்வத்துடன் பொலிந்து வாழ்பவராயினும் அறிவுடையராயினும் வலிமையுடையராயினும் யார் எனினும் விதியினை யாவர் தான் வெல்லும் நீர்மையுடையார்கள், 214

**ஆதலின் அமருல கடைவ தாயினன், பேதுறு நிரயமும் பிழைத்து நீங்கினன்**
**ஈதவன் நிலைமையென் றிருவ ருஞ்சொல, மேதகு தண்டகன் வெகுட்சி எய்தினன்,**

ஆதலின் இப்பிள்ளை செய்துகொண்ட புண்ணியத்தினால் தேவ உலகம் அடைவதாயினன். பேதமைப்படுத்தும் நரக உலகத்தும் செல்லாதவாறு பிழைத்துக்கொண்டு தப்பி நீங்கினன். இதுவே மார்க்கண்டன் என்னும் பிள்ளையின் நிலைமை என சித்திரர், குப்தர் என்னும் இருவரும் சொல்லலும், அதனைக் கேட்ட மேன்மையான இயமராசன் கோபங் கொண்டான். 215

**அந்தகன் அத்துணை யமைச்ச னாகிய, வெந்திறற் காலனை விளித்துக் காசியில்**
**அந்தணன் ஒருமகன் அவன தாவியைத், தந்திடு கென்றலுந் தரணி எய்தினன்;**

இயமராசன் அந்நேரத்து தனது மந்திரியாகிய கொடிய வலிமையுடன் நின்ற காலன் என்பானை முன்னாக நோக்கி காலனே! நீசென்று காசியில் வாழும் அந்தணனாகிய மார்க்கண்டன் என்னும் ஒரு மைந்தனின் உயிரைப் பிடித்து இங்கு தந்திடுவாயாக எனக் கூறலும் உடனே காலன் இப்பூமிக்கு வந்தான். 216

**மற்றவன் காசியில் வந்து மாசிலா, நற்றவன் இருந்துழி நணுகி நான்மறைக்**
**கொற்றவன் பூசையுங் குறிப்பும் நோக்கியே, எற்றிவன் வருவதென் றெண்ணி யேங்கினன்**

காலன் என்னும் இயமராசன் மந்திரி, காசியில் வந்து மாசு இல்லாத நல்ல தபோதனரான மார்க்கண்டர் இருந்த இடத்தை அணுகி நான்கு வேதங்களையும் கற்றுத் தெளிந்த தலைமைப்பாட்டுடன் விளங்கும் மார்க்கண்டருடைய சிவபூசையும் உள்ளக் குறிப்பையும் உணர்ந்து அம்மவோ! எவ்வாறாக இவன் என்னுடன் வருவானோ என எண்ணி ஏக்கங்கொண்டான்; 217

**விழியிடைத் தெரிவுற மேவி மைந்தனைத், தொழுதனன் யாரைநீ சொல்லு கென்றலும்**
**முழுதுல குயிரெலா முடிக்கும் ஆணையான், கழலினை யடிமைசெய் கின்ற காலன்யான்;**

மார்க்கண்டருடைய கண்களில் தன்னைத் தெரியுமாறு காலன் தோற்றிக்கொண்டு மார்க்கண்டரை வணங்கினன். மார்க்கண்டர் காலனை நோக்கி யார் நீ சொல்லுக என்றலும் காலன் சொல்வான் முழு உலகத்து உயிரெலாம் முடிவாக்கும் ஆணையினையுடைய இயமராசனின் திருவடித் தொண்டு செய்கின்ற காலன் என்னும் மந்திரி நான் என்றான், 218

போந்ததிங் கெவனெனப் புகலு வீரெனின், ஆய்ந்தது மொழிகுவன் ஆதி நாயகன்
ஈந்திடு காலமெண் ணிரண்டு நென்னலே; தேய்ந்தது தென்புலஞ் சேர்தல் வேண்டுநீர்.

இவ்விடம் வந்தது யாது காரணம் பற்றி என நீர் வினவுவீராயின் அக்கார ணத்தை ஆராய்வுடன் சொல்லுவேன். ஆதியான சிவபிரான் உமக்கு கொடுத்த ஆயுட்காலம் பதினாறு வருடம். நேற்றோடு அக்காலமும் தேய்ந்து முடிவாயது, ஆத லின் நீர் தென்திசையில் உள்ள இயமபுரத்திற்கு வரவேண்டும். 219

தடுக்குந் தன்மைய தன்றிது சதுர்முகத் தவற்கும்
அடுக்குந் தன்மையே புதுவது புகுந்ததோ அன்றே
கொடுக்குந் தன்மைபோற் காத்திடுந் தன்மைபோற் கூற்றன்
படுக்குந் தன்மையுங் கறைமிடற் றிறையருட் பணியே.

இந்தச் செயல் எவராலும் தடுக்கக்கூடிய இயல்பினை உடையதன்று. இந்த முடிவு நான்கு தலையுடைய பிரமதேவனுக்கும் பொருந்தும் படியானது. முடிவு காலத்து அவனும் யமபுரம் சேர்வன். இது புதியதொன்றாகப் புகுந்ததோ? இல்லையே! பிரமதேவர் உயிரைப் படைக்கும் தன்மைபோல், விஷ்ணு காக்கும் தன்மைபோல், இயமன் அழிக்கும் தன்மையும் நஞ்சு பொருந்திய கண்டமுடைய சிவபிரானின் அரு ளான பணியே ஆகும்; 220

ஆத லால்உமை விளித்தனன் அன்றியும் அமலன்
பாத மாமலர் அருச்சனை புரிவது பலரும்
ஓத வேமன மகிழ்ந்துமைக் காணிய வுன்னிக்
காத லாகியே நின்றனன் தென்றிசைக் கடவுள்

ஆனதினால் உம்மை அங்கு தென் திசைக்கு வரும்படியாக அழைத்தனன்; அது வல்லாமலும் நீர் ஈசன் திருவடி மலர்களை அருச்சனை புரிவதை பலரும் அறிந்து எங் கள் இயமராசனிடம் சொல்லவே அது கேட்டு மனம் மகிழ்வாகி உம்மைக் காணும் படியாகக் காதலாகி இருக்கின்றான் தென் திசையின் கடவுளான இயமராசன்; 221

அடுத லோம்பிய செய்கையன் என்பதால் அவனைக்
கொடியன் என்பரால் அறிவிலார் செய்வினை குறித்து
முடிவில் ஆருயிர் எவற்றிற்கும் முறைபுரிந் திடலால்
நடுவன் என்கின்ற தவன்பெயர் உலகெலாம் நவிலும்

அழித்தலைத் தவறாது செய்து வருதலாகிய செயலை உடையான் இயமன் என்ப தால் அவனைக் கொடியன் என்று அறிவிலார் சொல்வர்; ஒவ்வொரு உயிரும் செய் கின்ற இரு வினைகளையும் சீர்தூக்கி, முடிவில்லாது இயங்கும் உயிர்கள் எவற்றிற்கும் அவரவருக்கேற்ற முறைமையை செய்தலால் நடுவன் என்று சொல்லப்பெறுவது அவன் பெயராகும், உலகமெல்லாம் இதனைக் கூறும்; 222

சிந்தை மீதினில் யாவதும் எண்ணலீர் தென்பால்
அந்த கன்புரம் அடைதிரேல் அவனெதிர் அணுகி
வந்து கைதொழு தேத்தியே நயமொழி வழங்கி
இந்தி ரன்பதம் நல்குவன் வருதிரென் றிசைத்தான்

உமது மனமீது யாவதும் எண்ணலீர்; தென் திசையில் உள்ள யமன் உலகை நீர் அடைந்தால் அந்த இயமன் உமது எதிரே வந்து கைதொழுது உம்மை ஏத்தித்

துதித்து நயமுடன் நல்வார்த்தை கூறி உமக்கு இந்திரனுடைய பதத்தைக் கொடுப்பான்; ஆகவே வருவீராக என காலன் மொழிந்தான்; 223

மாற்ற மிங்கிது கேட்டலும் மதிமுடி அரனைப்
போற்று மன்பர்கள் இந்திரன் உலகினும் போகார்
கூற்று வன்றன துலகினும் நும்மொடு குறுகார்
ஏற்ற மாகிய சிவபதம் அடைந்தினி திருப்பார்.

இந்தக் காலனுடைய வார்த்தையை மார்க்கண்ட முனிவர் கேட்டலும் சொல்வார் காலனே கேள், பிறையணிந்த சடைமுடியுடைய சிவபிரானைத் துதிக்கும் அடியார்கள் இந்திரனுடைய உலகத்தும் போகமாட்டார்கள். இயமனுடைய உலகத்தும் உம்மோடு சேரமாட்டார்கள் மிகவும் மேலோங்கிய சிவலோகத்தை அடைந்து இன்புற்று இருப்பர். 224

நாத னார்தம தடியவர்க் கடியவன் நானும்
ஆத லான்உம தந்தகன் புரந்தனக் கணுகேன்
வேதன் மாலமர் பதங்களும் வெஃகலன் விரைவில்
போதி போதியென் றுரைத்தலும் நன்றெனப் போனான்;

நாதனாகிய சிவபிரான் அடியவர்க்கு நானும் அடியவனாவேன். ஆதலால் உமது இயமனுடைய புரத்திற்கு அணுகிவரமாட்டேன். பிரமதேவன், திருமால் இவர்களின் பதவிகளையும் விரும்பேன். ஆகையால் விரைவாக இவ்விடம் விடுத்து போய் விடு! போய்விடு! என மார்க்கண்டேயர் கூறலும் அது கேட்ட காலன் மேலாக ஒன்றும் செய்ய இயலாமையில் ஐயனே! நல்லது நான் செல்வேன் எனக் கூறிப்போயினான். 225

போன காலனும் மறலியை வணங்கியே புகுந்த
பான்மை யாவையும் உரைத்தலும் உளம்பதை பதைப்ப
மேனி மார்பகம் வியர்ப்புற விழிகனல் பொழியக்
கூனல் வார்புரு வக்கடை நிமிர்ந்திடக் கொதித்தான்.

திரும்பிச் சென்ற காலனும் கொடியவனான இயமனைச் சென்று தொழுது மார்க்கண்ட முனிவன் நிலைபற்றி நிகழ்ந்த செயல் யாவையும் சொல்லலும் அதுகேட்ட இயமன் கோபங்கொண்டு உள்ளம் பதைபதைப்ப மேனியும் நெஞ்சும் வேர்க்க, கண்கள் கோபத்தால் சிவந்து நெருப்புக்கக்க வளைந்து நீண்ட நெற்றிப் புருவங்களின் கடை நிமிர்ந்திடும்படி, தனது ஆணையை மறுக்கவும் மனிதன் உண்டோ எனக்கொதித்தான்; 226

அழைத்திர் மேதியை யென்னலும் போந்ததால் அதன்மேல்
புழைக்கை மால்கரி யாமென வெரிநிடைப் புகுந்து
நிழற்று கின்றதோர் கவிகையுந் துவசமும் நிவப்ப
வழுத்தி வீரர்கள் சுற்றிட அந்தகன் வந்தான்.

கொண்டு வாருங்கள் எனது எருமை வாகனத்தை என்றலும், எருமைக் கடா அங்குவந்து சேர்ந்தது. அதன் முதுகின் மேலாக துதிக்கை உடைய மதயானை பாய்ந்தேறுவதுபோல ஏறிக்கொண்டு நிழல்தருகின்ற கறுத்த குடையும், கொடியும் உயர்ந்து விளங்க, சேனை வீரர்கள் இரு மருங்கும் துதித்துக்கொண்டு புடைசூழ்ந்துவர கொடியவனான இயமன் வந்தான்; 227

போந்து காசியின் முனிமகன் இருந்துழிப் போகிச்
சேந்த குஞ்சியும் முகில்புரை மேனியுஞ் சினத்திற்
காந்து கண்களும் பிடித்ததோர் பாசமுங் கரத்தில்
ஏந்து தண்டமுஞ் சூலமு மாகியே எதிர்ந்தான்.

இவ்வாறு அச்சம் விளைவிக்கும் பயங்கர வடிவுடன் வந்து காசியிலே முனிவர் மைந்தரான மார்க்கண்டேயர் இருந்த இடம்சென்று சிவந்த சடையும் முகிலை ஒத்த கரியமேனியும், கோபத்தால் சிவந்து காந்திய கண்களும், கையில் பிடித்ததோர் பாச மும், ஏந்திய தண்டாயுதமும், சூலப்படையும் உடையவனாய் எதிர்ந்து வந்தான். 228

வந்து தோன்றலும் மார்க்கண்ட னென்பவன், அந்த கன்வந் தணுகின னாமெனச்
சிந்தை செய்தவன் செய்கையை நோக்கியே, எந்தை யாரடி யேத்தி இறைஞ்சினான்.

இயமரான் வந்து முன் தோன்றுதலும் மார்க்கண்டன் என்பவர் இயமன் வந்து எம்மை அணுகிவிட்டான் எனத் தெரிந்து கொண்டவராய் இயமனுடைய கொரூர மான கோலத்தையும், செய்கையையும் பார்த்துக்கொண்டு உடனாக எந்தை பெரு மான் திருவடிகளை இறைஞ்சி ஏத்தினார். 229

அன்ன வேலையில் அந்தகன் மைந்தநீ, என்நி னைந்தனை யாவ தியற்றினை
முன்னை யூழின் முறைமையும் முக்கணன், சொன்ன வாறுந் துடைத்திட லாகுமோ.

அவ்வாறான வேலையில் இயமராசன் மார்க்கண்ட முனிவனை நோக்கி மகனே நீ என்ன நினைந்தாய், என்னத்தைச் செய்தாய். தொன்று தொட்டு பெருகிவரும் ஊழின் முறைமையையும் மூன்று கண்களை உடைய சிவபிரான் உனக்கு இவ்வளவு தான் வயசு என சொன்ன வாக்கையும் நீக்கிவிட உன்னால் முடியுமோ. 230

சிறிதும் ஊழ்வினைத் திண்மையுந் தேர்கிலாய், உறுதி யொன்றும் உணர்கிலை போலுமால்
இறுதி யேபிறப் பென்றிவை யாவரும் பெறுவர், அன்னது பேசுதல் வேண்டுமோ.

சிறிதேனும் நீ ஊழ்வினையின் வலிமையையும் தேர்ந்து கொள்ளவில்லை. உறிது எதுவொன்றாகும் என்பதை அறிகிலைப்போலும். மரணம், பிறப்பு என்ற இவைகளை யாவரும் பெறுவர். அதைப் பற்றியும் பேசுதல் வேண்டுமோ, அது யாவருக்கும் தெரிந்ததே. 231

பீடு சாலும் பெருந்தவர்க் காயினுங், கூடு றுவிது கூடுமென் றுன்னியே
நாடி யின்னணம் நண்ணுதல் கற்றுணர், ஆட வர்க்கும் இயற்கைய தாகுமோ.

பெருமை நிறைந்த பெரிய தபோதனர்க்காயினும் மரணம் என்பதை தவிர்க்கும் நிலைமை கூடாது. இது கைகூடுமென்று மைந்தனே நீ நினைந்து நாடிக்கொண்டோ எமது தூதரால் அழைக்கப்பட்டபோது வராது இங்கு நண்ணி இருந்தாய். கல்விபல பயின்று உணர்ந்த ஆண்தகமையுடையார்க்கு இது இயற்கையாகுமா? நன்றாகுமா. 232

ஈச னார்தம் இணையடி மீமிசை, நேச நெஞ்சினை நித்தலும் நீபுரி
பூசை வெம்பவம் போக்குவ தன்றியான், வீசு பாசம் விலக்கவும் வல்லதோ.

ஈசனாருடைய இணையான திருவடி மீதாக நேசமான உள்ளத்துடன் நாள்தோறும் நீ செய்யும் பூசனை உனது கொடிய பாவத்தைப் போக்க முடியுமே அன்றி யான் வீசுகின்ற பாசத்தையும் விலக்க அப்பூசை வல்லமையுடையதா? 233

சிந்து வின்கட் செறிமணல் எண்ணினும், முந்து வானத் துடுவினை எண்ணினும்
அந்த மின்றியென் ஆணையின் மாண்டிடும், இந்தி ரன்றனை எண்ணிட லாகுமோ

கடலின் கண்ணே செறிந்துள்ள மணலை எண்ணினும், மேலாகிய வானத்திலே தோன்றிய நட்சத்திரங்களை எண்ணிக் கணக்கிடினும், முடிவு காண்பரிய எனது ஆணையின்படி இறந்துள்ள இந்திரன் எத்தனையென எண்ணிட முடியுமோ; 234

இற்ற வானவர் தம்மையும் என்னின்ஈ, றுற்ற தானவ ராகியுள் ளோரையும்
முற்ற ஓதில் முடிவில தாதலால், மற்றை யோரை வகுத்திடல் வேண்டுமோ.

இறந்து போன தேவர்கள் தொகையும் அல்லாமல் என்னாலே முடிவு செய்து அழிக்கப்பட்ட அசுரராக உள்ளோர்தமையும் எவ்வளவு என அதை முற்றிலும் சொல்லப் போனால் அது சொல்லி முடியாதது ஒன்று: ஆனதினால் தேவ அசுரர் நீங்கிய மற்றையோரின் நிலையை நாம் வகுத்துச் சொல்ல வேண்டுமோ. 235

கனக்கு முண்டகக் காமரு கண்ணினன், தனக்கு முண்டு சதுர்முகற் குண்டுமற்
றெனக்கு மூண்டு பிறப்பிறப் பென்றிடின், உனக்கு முண்டென் றுரைத்திடல் வேண்டுமோ

பெருமையிற் சிறந்த தாமரைமலர் போலும் அழகிய கண்ணுடைய விஷ்ணுமூர்த்திக்கும் பிறப்பு மரணம் உண்டு. நான்கு முகமுடைய பிரமதேவனுக்கும் அவை உண்டு. அல்லாமல் எனக்கும் உண்டு பிறப்பு இறப்பு எனச் சொன்னால் உனக்கும் அவை உண்டென்று நாம் சொல்லிக் காண்பிக்கவும் வேண்டுமோ. 236

வாச மாமல ரிட்டு வழிபட, ஈச னார்முன் எனக்கருள் செய்தன
ஆசி லாவிவ் வரசியல் ஏந்திய, பாச சூலம் படைமழுத் தண்டமே.

வாசம் கமழும் அழகிய பூக்களைச் சொரிந்து நான் முன்பு வழிபட ஈசன் எனக்கு முன்னர் காலத்தில் தந்துள்ள பொருள்கள்தான் இந்த பாசக் கயிறு, சூலப் படை. மழுவாயுதம், தண்டாயுதம், குறைவு இல்லாத இந்த என்னுடைய அரசாட்சியும். ஆகவே எனது செயலும் இறைவன் அருள் வழிஎன உணர்வாய். 237

தேவர் காப்பினுஞ் செய்தளித் திறுசெய், மூவர் காப்பினும் மொய்ம்பின ராயினோர்
ஏவர் காப்பினுங் காத்திட இன்றுநின், ஆவிகொண்டன்றி மீண்டும் அகல்வனோ

தேவர்கள் உன்னைச் சூழ்ந்து காப்பினும், படைத்து காத்து அழித்து நிற்கும் செயல்களை உடைய மூவர் காத்து நிற்பினும் அன்றி வலிமையுடையவர் என விளங்கும் யாவர் காத்தாலும் காத்து நிற்க, ஆனால் இன்று உனது உயிரைக் கொண்டு போவதல்லாது மீண்டு வெறுமனே திரும்பியும் செல்வேனோ. 238

துன்ப மென்பது கொள்ளலை சூலிதன், அன்ப ராயினும் அந்தம்வந் தெய்திடில்
தென்பு லந்தனிற் சேர்த்துவன் திண்ணமே, என்பின் நீயினி யேகென் றியம்பலும்.

மரணம் என்பது துன்பம் என்பதாக நீ நினைந்து வருத்தமுறாதே. சூலப்படையுடைய சிவபிரான் அன்பராயிருந்தாலும் அவர்க்கு முடிவான காலம் வந்துசேர்ந்திடில் தென்திசை உலகில் அவரை நான் சேர்ப்பேன் இது திண்ணம். ஆகவே மகனே இனி நீ எனது பின்னாக வருவாயாக என இயமராசன் சொல்லலும், (இயமனை அறியாது உயிர் போகாது எனும் பழைய வாக்கியம் ஒப்புநோக்குக.) 239

**மைந்தன் ஆங்கது கேட்டு மறலிகேள், எந்தை யாரடி யார்தமக் கில்லையால்**
**அந்தம் எண்பதுண் டாயினும் நின்புரம், வந்தி டார்வெள்ளி மால்வரை ஏகுவார்.**

திருக்குமாரரான மார்க்கண்டர் அது கேட்டு சொல்வார், இயமனே! கேள் எந்தை பெருமானின் அடியார் தமக்கு மரணம் என்பது இல்லை; அவ்வாறு முடிவு ஒன்றுண்டாயினும் உனது உலகிற்கு வந்திடார்கள். வெள்ளி மயமான திருக்கைலாய மலை செல்வார்கள். — துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம் தொடக்கெலாம் அறுத்த நற்சோதீ எனும் மணிவாசகர் வாக்கும், மதி சூடுவானை மதிக்கும் உனக்கு மரணம் உதிக்குமோ என யோக சுவாமிகள் வாக்கும் காண்க. 240

**அனையர் தன்மை அறைகுவன் ஆங்கவர், புனித மாதவ ராயினும் பொற்புடை**
**மனையின் வாழ்க்கையின் மல்கின ராயினும், வினையின் நீங்கிய வீட்டின்பம் எய்துவார்.**

அவ்வாறான சிவனடியார் தன்மையை யான் எடுத்துச் சொல்வேன், சிவனடியார்கள் மிகத்தூய துறவி வாழ்க்கை உடைய தபோதனராயினும், அல்லாமல் பொற்பு மிகுந்த மனைவியுடன் கூடி இல்லற தருமத்தைப் பேணி வருவோராக இருப்பினும், அவர்கள் சிவபிரானைப் பேணிவரும் திருவருட்பேற்றால் வினைத்தொடர்பில் நின்றும் நீங்கப்பெறும் முத்தி இன்பத்தை அடைவார்கள். 241

**ஏதந் தீர்சுடர் தன்னையும் எண்ணும்ஐம், பூதந் தன்னையும் போதிகன் தன்னையும்**
**பேதஞ் செய்வர் பிறப்பொழித் தோரவர், பாதஞ் சேர்தல் பரபதஞ் சேர்வதே.**

சிவனடியார்கள் குற்றமற்ற சுடர்களான சூரியன் சந்திரன் இவர்களையும் மதிப்பினைக்கொண்ட பூமி, நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களையும் ஆன்மாவையும் கடவுளின் திருமேனியாக அமையவும், அவர்கள் பரஞ்சோதியான சிவத்தையும் பஞ்சபூத விகாரமான உலகையும் வேறு பிரித்து சிவம் ஒன்றே அறியும் பேறுடையவர்கள். தமது பிறப்பினை ஒழித்துக் கொண்டவர்கள். அவர்கள் பாதத்தைச் சேர்ந்து கொள்ளலே மேலான முத்தியை அடைந்து கொள்வதாகும். 242

**உன்னை எண்ணலர் உம்பரை எண்ணலர், மன்னை எண்ணலர் மாமலர்ப் பண்ணவன்**
**தன்னை எண்ணலர் தண்டுள வோனையும், பின்னை எண்ணலர் பிஞ்ஞகன் அன்பினோர்.**

சிவபிரானிடம் அன்புடைய அடியவர்கள் உன்னை மதிக்கார்கள். தேவரையும் பொருளென மதியார், இந்திரனை மதியார், பெரிய தாமரைப் பூவில் இருக்கும் கடவுளான பிரமதேவனை மதியார். குளிர்ந்த துளசிமாலை அணிந்த விஷ்ணுமூர்த்தியையும் பெருமையானவர் என எண்ணி மதியார்கள். 243

**நாதன் தன்னையும் நாதன தம்புயப், பாதஞ் சேர்ந்து பரவினர் தம்மையும்**
**பேதஞ் செய்வது பேதமை நீரென, வேதங் கூறும் விழுப்பொருள் பொய்க்குமோ.**

நாதனான சிவனையும், அவரது தாமரை மலர்போலும் கழல் இணைகளை அடைந்து வழிபடும் அடியார்கள் தம்மையும் பேதித்து இரண்டாக எண்ணுதல் ஒருவரின் உண்மையறிவிலாத பேதமைத் தன்மையாகும் என வேதங்கள் சொல்லும் உண்மைப் பொருள் பொய்யாகி விடுமோ. 244

**செம்மை யாகிய சிந்தையர் சீரியோர், வெம்மை என்பதை வீட்டி விளங்கினோர்**
**தம்மை யுந்துறந் தேதலை நின்றவர், இம்மை தன்னினும் இன்பத்தை மேவுவார்.**

சிவனடியார்கள் தருமம், ஒழுக்கம் என்பவற்றை உணர்ந்த செப்பமாகிய சிந்தையை உடையவர்கள். சீரிய சிறப்பினை உடையவர்கள். கொடுமை பாவச்செயல் என்பதை அறவேநீக்கி புண்ணியச் செய்கைகளாலே தேசுடன் விளங்கும் திருஉடையார்கள்.

தமது மேலாக உள்ள பற்றைநீக்கி தமது நினைப்பின்றி சிவனை உணரும் தலையான நிலையில் நின்றார்கள். இப்பிறப்பிலே பேரின்பத்தை அடைந்து கொண்டார்கள். (இதனை தன்னை உணர்ந்து தாமும் ஒன்றின்றி — எனும் கல்லாடர் வாக்கும் காண்க.) 245

**இன்மை யாவதி யாண்டுமில் லாதவர், நன்மை என்ப தியல்பென நண்ணினோர்**
**புன்மை யான பொருள்விரும் பார்அவர், தன்மை யாவரே சாற்றவல் லார்களே.**

தங்களால் எதையும் அடையமுடியாது என்னும் தகமை எக்காலத்தும் இல்லாதவர். (எங்கட்கு குறைவு ஒன்றும் இல்லை என்பார்கள்) நன்மையே எங்கட்கு இயல்பாக எக்காலமும் பொருந்தியது என நன்மை தரு அருள் நெறியே நண்ணினார்கள். கீழ்மையாகிய மண், பொன், பெண், புகழ் ஆகிய பொருளை விரும்பாதவர்கள். அவ்வாறான கேடும் ஆக்கமும் நீங்கிய திருவுடை அடியார்கள் பெருமையை யார்தான் சொல்ல வல்லார்கள். 246

**அன்னார் தன்மை தேர்கிலை வையத் தவர்போல**
**உன்னா நின்றாய் ஆங்கவர் தம்பா லுறுகின்ற**
**என்னா விக்குந் தீங்கு நினைத்தாய் இவையெல்லாம்**
**உன்னா விக்கும் இத்தலை மைக்கும் ஒழிவன்றோ.**

அவ்வாறு பெருமைகொண்ட சிவனடியார் தன்மையை இயமராசனே நீ தெளிந்து கொள்கிறாயிலை. பூமியில் வாழும் மனிதரைப் போல நினைந்து கொள்கிறாய், அந்த சிவனடியார் தம் பக்கராகச் சார்ந்து ஒழுகி நிற்கின்ற என்னுடைய உயிருக்கும் தீங்கினை நீ நினைத்தாய். இவை யாவும் முடிவிலே உனது உயிருக்கும் உனது இந்த தலைமைப் பாட்டுக்கும் இறுதியை தரும் அல்லவோ. 247

**தீதா கின்ற வாசகம் என்றன் செவிகேட்க**
**ஓதா நின்றாய் மேல்வரும் ஊற்ற முணர்கில்லாய்**
**பேதாய் பேதாய் நீயிவண் நிற்கப் பெறுவாயோ**
**போதாய் போதாய் என்றுரை செய்தான் புகரில்லான்.**

தீது பொருந்திய வாசகங்களை எனது காதுகேட்கும்படி நீ சொல்லி நின்றாய். மேலாக இச்செயலால் உனக்கு என்ன நேரப் போகின்றது என்னும் தன்மையை கொஞ்சமேனும் நீ உணர்ந்து கொண்டாய் இல்லை. பேதையே! பேதையே நீ இவ்விடத்திலும் நிற்கத் தகுதி உடையாயோ! இவ்விடம் விட்டுப் போய்விடு போய் விடு! என உரை செய்தார் குற்றம் இல்லாத அருள் வள்ளலான மார்க்கண்டர்!. 248

**கேட்டான் மைந்தன் கூறிய மாற்றங் கிளர்செந்தீ**
**ஊட்டா நின்ற கண்ணினன் யானச் சுறுமாற்றல்**
**காட்டா நின்றாய் நம்முயிர் கூற்றன் கைக்கொள்ள**
**மாட்டான் என்றே எண்ணினை கொல்லோ வலியில்லாய்.**

முனி மைந்தரான மார்க்கண்டேயர் கூறிய வார்த்தையை இயமராசன் கேட்டான். உடன் கோபத்தால் பிரகாசமுடைய நெருப்பின் வண்ணமென பொறி சிந்தும் சிவந்த கண்ணினை உடையவனாய்ச் சொல்வான். மார்க்கண்டனே! யான் பயப்படும்படியான வல்லமைகளை சொல்லிக் காண்பித்து நின்றாய். நீ இப்படிப் பயமுறுத்தினால் நமது உயிரை இயமராசன் பிடித்துக் கொள்ளமாட்டான் என்றோ நினைந்தாய் போலும். வலியில்லாதவனே அப்படியும் நீ நினைப்பாயோ. 249

என்றான் வானத் தேறென ஆர்த்தான் இவன்நேரே
நின்றால் வாரான் என்று நினைந்தே நெடுநீலக்
குன்றா மென்னப் பாலகன் முன்னங் கொலைவேலான்
சென்றான் பாசம் வீசுவ தற்குச் சிந்தித்தான்.

என்று கூறினான் இயமராசன். வானத்திலுள்ள இடியைப்போல ஆரவாரித்து இம்மார்க்கண்டன் முன்பாக நான்நேராக நின்றால் வரமாட்டான் என நினைந்து நெடிய நீலமலையைப் போன்ற வடிவுடன் கொலைபுரியும் சூலத்தையும் ஏந்தியவாறு பாலகனை மார்க்கண்டரை அணைந்து சென்றான். பாசத்தை வீசுவதற்கு சிந்தைகொண்டான். 250

எறிந்தான் பாசம் ஈர்த்திடல் உன்றான் இதுபோழ்தில்
அறிந்தான் தானும் ஈசனை ஏத்தி அடிநீலக்
பிறிந்தான் அல்லன் மற்றினி இந்தப் பெருமைந்தன்
மறிந்தான் அன்றோ என்றிமை யோரும் மருளுற்றார்.

பாசத்தை இயமராசன் மார்க்கண்டர் மேலாக எறிந்து அவரின் உயிரை பாசத்தால் இழுக்கத்தொடங்கினான். அவ்வேளை மார்க்கண்டர் இதை அறிந்து சிவபிரானைத் துதித்தவாறு அவர் திருவடி நீழலைப் பிரியாது ஒன்றி நின்றார். அவ்வண்ணமாக மார்க்கண்டர் இருப்பவும் சர்வ உலகெங்கிலுமுள்ள தேவர்கள் அம்மவோ! இப்பாலனும் இனி இறந்தானே என மயக்கம் கொண்டார்கள். இயம தூதரும் அணுக முடியாத தவவலிமையுடன் இருந்த மார்க்கண்டரை இப்போது இயமராசன் பாசம் வீசி பற்றினான். இனி என்ன ஆவது மரணம் தானே என மயங்கினார்கள் தேவர்கள். 251

ஈர்க்கும் பாசங் கந்தர முற்றும் இடரில்லா
மார்க்கண் டன்முற் றோன்றினன் நின்பால் வருதுன்பந்
தீர்க்கின் றாம்நீ அஞ்சலை என்றே திரையாழிக்
கார்க்கண் டத்துக் கண்ணுதல் ஐயன் கழறுற்றான்.

இயமராசனால் வீசி இழுக்கப்பட்ட பாசக்கயிறு கழுத்தில் சேர்ந்தும் கூட இடரில்லாது இருக்கின்ற மார்க்கண்டர் முன்பாக சிவபிரான் தோன்றினார். மைந்தனே! நினது பாலாக வருகின்ற துன்பத்தைத் தீர்க்கின்றோம். நீ அஞ்சாதே என்று திரையுடைய சமுத்திரத்தினின்றும் தோன்றிய நஞ்சை உண்டமையால் கரிமேகம் போல நீலகண்டமும் நெற்றிக் கண்ணுமுடைய ஐயன் சிவபிரான் கூறியருளினார். 252

மதத்தான் மிக்கான் மற்றிவன் மைந்தன் உயிர்வாங்கப்
பதைத்தான் என்னா உன்னிவே குண்டான் பதிமூன்றுஞ்
சிதைத்தான் வாமச் சேவடி தன்னால் சிறிதுந்தி
உதைத்தான் கூற்றன் விண்முகில் போன்மண் ணுறவீழ்ந்தான்.

எம்பிரான் இவ்வாறு திருவாய் மலர்ந்தருளி, இந்த இயமன் மதத்தால் மிகுந்து போனான். இவன் இந்த மைந்தனின் உயிரைப் பற்றி இழுக்க பதைப்புற்றான் என நினைந்தருளிக் கோபமுற்று முப்புரங்களையும் சிதைத்த சிவபிரான் தமது இடதுபாதத்தால் சிறிதே உந்தி இயமனை உதைத்தான். உதையுண்ட இயமராசன் வானமுகில் தவறுண்டு பூமியில் வீழ்வதுபோல் மண்ணின் மேலாக வீழ்ந்தான். 253

வீழுங் காலத் தம்புய ஞதி விண்ணேர்கள்
வாழுந் தன்மைத் தெவ்வுல கென்னு மறுகுற்ருர்
சூழும் வேலை ஆர்த்தில தண்டத் தொகையெல்லாங்
கீழும் மேலும் நெக்கன பாருங் கிழிந்தன்றே.

இயமன் பூமிமேல் விழும் காலத்து எழுந்த அதிர்ச்சியால் சர்வ அண்டமும் நிலை குலேதலால் எல்லாவற்றையும் படைக்கும் பிரமதேவனுதியான தேவர்கள் யாவரும் அம்மவோ! இனி எந்த உலகம் எவ்வாறு வாழும் தன்மை உடையது என மனம் மறுகினார்கள். உலகை சூழ்ந்து இரையும் கடல்களும் இரைச்சல் நீங்கியது. அண்ட கூடங்களாய் பூமியின் மேலும் கீழுமாக நின்றன யாவும் நெக்கி உடைந்தன. பூமியும் பிளந்து கிழிபட்டது. 254

பாங்காய் நின்ற தானையும் ஊரும் பகடுந்தான்
ஏங்கா நின்றே பார்மிசை வீழா இறவுற்ற
தீங்காய் நின்ற செய்வினை யாளர் சிதைவாகிப்
போங்கா லத்திற் சேர்ந்தவர் தாமும் போகாரோ.

இயமராசன் பக்கராக நின்ற சேனையான கிங்கரர்களும் வாகனமான எருமைக் கடாவும் இந்நிலையால் ஏங்கி பூமியில் விழுந்து மாண்டு போயது, இத்தன்மையை சிந்தித்தால் ஓர் உண்மை புலப்படுகின்றது. யாதெனில் தீங்காகிய செயலை உலகில் புரிந்துவரும் செயலை உடைய கொடியவர்கள் சிதைவாகிப் போகும் காலத்து அவருடன் கூடிச் சேர்ந்தார்களும் சிதைவாக்கிப் போகார்களோ? போவார் தானே. 255

அந்தக் காலத் தெம்முயிர் காப்பான் அரனுண்டால்
வந்தக் கூற்றன் என்செய்வ னென்னு வடதொன்னூல்
சந்தப் பாவிற் போற்றுதல் செய்தே தனிநின்ற
மைந்தற் காணுஉ எப்பெரு மானும் மகிழ்வுற்ருன்.

அவ்வாறுகிய காலத்து மார்க்கண்ட முனிவர் எனது உயிரைக்காக்க சிவபெருமான் உளன். வந்து என்மேல் பாசம் வீசிய இயமன் என்னை என்செய்வான் என வடமொழியிலான மிக முதிய நூலில் அமைந்த இனிய சந்தம் உடைய சிவதோத்திரத்தை ஓதியவாறு ஈசன் இணையடி பிரியாது தனியாக தியானத்தில் இருந்த மைந்தனைக் கண்ணுற்று எம்பெருமான் மகிழ்ந்தருளினுர்; 256

வேறு

மைந்த நீநமை வழுத்தி மாசிலா முந்து பூசனை முயன்ற தன்மையால்
அந்த மில்லதோர் ஆயுள் நிற்கியாந் தந்து நல்கினும் என்று சாற்றினுன்.

மகிழ்ந்தருளி மார்க்கண்டரை எம்பிரான் நோக்கி மைந்தனே! நீ நம்மை துதித்து மாசு இல்லாத சிறந்த பூசையை புரிந்து நின்ற தன்மையால் உனக்கு முடிவு என்பதில்லாத நித்தியமான ஆயுளை தந்தருளினேம் என சிவபிரான் திருவருவாய் மலர்ந்தருளினுர். 257

சாற்றும் எல்லையில் தனது தாளிணை போற்று கின்றவன் பூசை செய்திடும்
ஏற்ற தாணுவுக் கிடைய தாகவே கூற்றின் கூற்றுவன் குறுகுற் ருனரோ

இவ்வண்ணம் சொல்லியருளும் எல்லையில் தனது திருவடிகளை போற்றுகின்றவ ராகிய மார்க்கண்டர் பூசை செய்திடுகின்றமைக்கு ஏற்ற சிறப்புடைய சிவலிங்கத் துள்ளே இயமனுக்கு இயமனுய் சிவபெருமான் மறைந்தருளினுர். 258

மறைய வண்கனும் மன்னு தென்புலத் திறைய வன்கனும் இகல்பற் றின்றரோ
அறிவர் தேர்குறின் ஐயன் செய்தன முறைய தகுமால் முதன்மைப் பலதோ:

வேத ஒழுக்கம் பூண்ட மார்க்கண்டேயரிடத்தாக எம்பெருமானுக்கு விருப்பமோ அன்றி தென்திசைக் கதிபனுன இயமராசனிடத்தாக வெறுப்போ இரண்டும் இல்லாத வாதனுகவே எம்பெருமான் இச்செயலைப் புரிந்தருளினுர்; இயமனை ஈசன் வெறுத்து உதைந்தானுமல்லன் மார்க்கண்டரை உவந்து காத்தானுமல்லன். அறிவாளிகள் தெளிந்து கொண்டால் எமது ஐயன் செய்தன யாவும் முறைமையாகு தோடமையாது எல்லாவற்றிலும் முதன்மையான அருட்செயலுமாம்.

ஈசன் தாமே, இயமனை உயிர்களை சங்கரிக்க வைத்தவர், தாமே அண்டினுரைக் காப்பவும் அருள் கொண்டவர்; ஆகவே தமது செயல் மூலமாக அடியார்கட்கு துய ரம் நேர்ந்தால் அதைத் தடுப்பது முறையான செயல் மட்டுமல்லாது முதன்மையு டையதும் என்ருர். 259

நின்ற மைந்தனும் நித்தன் மேனியை ஒன்றும் அன்பினுல் உன்னி யேமணி
கன்றி கையெனுங் கடவுள் ஆலயஞ் சென்று நாதன்ருள் சென்னி சேர்த்தினுன்.

சுவாமி மறைந்து விட தொழுதவாறு நின்ற மார்க்கண்டரும் நித்தியராகிய எமது பெருமான் திருவுருவை உள்ளத்தால் ஒற்றுகின்ற அன்பினுல் தியானித்தவாறு மணிகன்றிகை என்னும் கடவுள் ஆலயத்தைச் சேர்ந்து சிவபெருமானுடைய பாதங் களை தலையால் தாழ்ந்து வணங்கினுன். 260

புந்தி நைந்திடப் புலம்பி நாட்டநீர் சிந்தும் வேலையில் திளைத்துச் சாம்பிய
தந்தை அன்னைதாள் தழுவித் தாழ்ந்திடா முந்து மாகுலம் முழுதும் மாற்றினுன்

மனம் நைந்து உருகிட வாய்விட்டுத் திருப் புலம்பல் ஓதி கண்ணினின்றும் வழிந் தோடும் நீரில் மூழ்கியவராய் அருள் நீர்மையில் திளைத்து இன்புற்று அப்பால்சென்று மைந்தனுரின் மிருத்தாகிய காலத்தை உணர்ந்து வருந்தி இருந்த தந்தை தாயார் பால்சென்று அவரின் திருவடிகள் முன்பு தமது சிரசு தழுவும்படி தாழ்ந்திட்டு முன்பு அவர்கள் கொண்ட துயரம் முற்றும் மார்க்கண்டர் நீக்கினுர். 261

அங்கண் சில்பகல் அமர்ந்து நீங்கியே செங்கண் ஏறுடைச் செல்வன் மல்கியே
தங்கு கின்றநற் றுனம் யாவையும் பொங்கு காதலிற் போற்றல் மேயினுன்.

அங்கு காசியில் சிலநாள் வரை தங்கி பின்னர் அவ்விடத்து நீங்கிச் சென்று சிவந்த கண்களை உடைய இடபவாகனமுடைய சிவபெருமான் தங்கி இருக்கின்றதாய சிவாலயம் பலவும் சென்று உள்ளத்து பொங்கி எழும் காதலாற் போற்றிசெய்தொ ழுகுவராயினுர்; 262

அத்தன் ஆலயம் அனைத்தும் வைகலும் பத்தி யோடுமுன் பரவி யேமிகுஞ்
சுத்த ளுகியே தொலைவில் ஆருயிர் முத்தி யெய்தினுன் முழுது ணர்ந்துளான்.

சிவபிரான் கோயில்கள் முழுவதும் நாள்தோறும் சென்று பக்தியோடு முன் னின்று வணங்கி அதன் பேற்றுல் மிகுந்த தூய்மை உடையவராய், அழிவிலாத சீவன் முத்தராயினுர் எல்லாவற்றையும் உணர்ந்த மார்க்கண்ட முனிவர். 263

**விண்ணின் பாலுளன் விரும்பிப் போற்றுவோர் கண்ணின் பாலுளன் கருத்தின் பாலுளன்**
**மண்ணின் பாலுளன் மற்ற வன்செயல் எண்ணின் பாலதோ இசையின் பாலதோ.**

இவ்வாறு சீவன் முத்தராய் நித்தியரான நிலையுற்ற மார்க்கண்டர் வான் உலகில் இருப்பார். தம்மை விரும்பிப் போற்றுவார் கண்ணின் நிற்பர், அவர்கள் மனக் கருத்தில் இருப்பார். அவருடைய இந்தச் செயல் எமது எண்ணத்தில் அகப்படுமோ அல்லது சொல்லும் தன்மையானதோ. ஈசனைப் போல அவரும் எங்கும் நிறைந்து அன்பர் யாவரிடமும் தோன்றாத் துணையாய் விளங்கும் ஒருவரானர். 264

**முண்ட கத்திடை முளைத்த வன்துயில் கொண்ட வெல்லையைக் குணிக்கி லாவதென்**
**அண்டம் நல்கியோன் துஞ்ச ஆங்கவன் கண்ட கற்பமோ கணக்கி லாதவே.**

தாமரை மலரில் இருக்கும் பிரமதேவர் நித்திரை செய்கின்ற காலமாகிய கற்பங்கள் எத்தனை என்று நாம் கணக்கிட்டும் எது பிரயோசனப்படுவது, ஏனென்ருல் உலகைப் படைக்கும் பிரமதேவர் இறந்துபோக, மார்க்கண்டர் கண்டுகொண்ட கற்பங்களோ கணக்கில்லாதனவாய் இருப்பன என படைப்பு எவ்வளவு காலமோ படைப்பு இல்லாமலிருக்கும் காலமும் அவ்வளவாக இருக்கும். ஆகவே படைக்கின்ற பிரமதேவர் இறப்பதால் வரும் கற்பங்களை எல்லாம் மார்க்கண்டர் கண்டுகொண்டார் ஆகவே இவரின் வயது காலம் இவற்றிற்கு ஆராய்ச்சி இல்லை என்பதாகும். 265

**அன்ன வன்றனை அலக்கண் செய்திடுந் தென்ன வன்உயிர் சிதைந்து போதலால்**
**பன்ன கத்திறை பரித்த பார்மிசை மன்னு பல்லுயிர் வளர்ந்து மல்கிற்றே.**

அந்த மார்க்கண்டரை அலக்கண் செய்த தென்திசைக் கதிபனுன இயமராசன் உயிர் சிதைவாகிப் போனதினுல் பாம்பரசனுன ஆதிசேடனுல் தாங்கப்படும் இப் பூமியின் மீதுள்ள உயிர்கள் இறத்தலில்லாது வளர்ந்து பெருகிக்கொண்டது. 266

**முடிவின் ருமுயிர் முற்றும் பற்பகல் மடிவின் ருகியே மலியும் பான்மையால்**
**படியின் மங்கையும் பரம்பொ ருதுமால் அடியின் வீழ்ந்துதன் அயர்வு கூறினுள்.**

முடிவில்லாத பல உயிர் முற்றும் பல நாட்களாக மரணம் இல்லாது பெருகி மலிந்துள்ளமையால் பூமி தேவியாகிய பெண்ணும் பாரத்தைத் தாங்கொணுது தனது நாயகரான விஷ்ணு மூர்த்தியின் காலில் வீழ்ந்து வணங்கி தனது இக்கட்டான நிலையைக் கூறினுள். 267

**கொண்டல் வண்ணனுங் குலிச பாணியும் புண்ட ரீகமேற் பொலிந்த போதனும்**
**அண்டர் யாவரும் அணுகி ஆலமார் கண்டன் மேவுறுங் கயிலை மேவினுர்.**

அதுகேட்ட மேக நிறமுடைய விஷ்ணு மூர்த்தியும், வச்சிரப்படை உடைய இந்திரனும் பூமி தேவியின் வருத்தம் நீக்கும்படி மேலாகப் பொலிந்து வீற்றிருக்கும் பிரம தேவனும், தேவர்கள் யாவரும் தாமரைமலர் சென்று நஞ்சு விளங்கிய கண்டத்தை உடைய சிவபிரான் மேவி வீற்றிருந்தருளும் கைலாயத்தைச் சேர்ந்தார்கள். 268

**காவி யம்மலர் கடுத்த கந்தரத் தேவு பொற்பதஞ் சென்னி சேர்த்தியே**
**தாவில் பங்கயச் சதுர்மு கத்தனும் பூவை வண்ணனும் போற்றன் மேயினுர்.**

நீலோற்பர மலரை ஒத்த கண்டமுடைய கடவுளின் பொன்னூர்ந்த பாதங்களில் தமது சிரசு பொருந்தும்படி வணங்கி குறைவில்லாத தாமரைமலர்மேல் இருக்கும் நான்குமுகமுடைய பிரமதேவரும் காயம்பூப் போலும் மேனி உடைய விஷ்ணுமூர்த்தியும் போற்றுதல் செய்தார்கள். 269

நீல கண்டனும் நிமலன் முன்னரே சாலும் அன்பொடுந் தாழ்ந்து போற்றலும்
மாலை நோக்கிநீர் வந்த தென்னென ஏலு மாற்றினுல் இதனைக் கூறுவான்.

நீலகண்டனுகிய நினமலச் சோதியாம் சிவபிரான் திருமுன்னரே பெருகுகின்ற அன்புடன் தாழ்ந்து வணங்குதலும், விஷ்ணு மூர்த்தியை சிவபிரான் நோக்கி நீங்கள் யாவரும் யாது பொருட்டினுல் இங்கு வந்தீர்கள் எனலும் அப்போது விஷ்ணுபிரான் தன்னுல் கூறக்கூடிய இயல்பால் இதனைச் சொல்வார்.] 270

## வேறு

பங்கய மிசைவரு பகவன் ஆதியா இங்குள தலைவர்கள் எவரும் இத்துணைத்
தங்கள்தம் அரசியல் தவாது போற்றினுர் அங்கவர் தமக்குநீ அளித்த வண்ணமே.

தாமரை மலர் மேல் தோன்றிய பிரமதேவன் ஆதியாக இங்கு உள்ள தலைவர்கள் யாரும் இதுவரையிலும் தங்களுடைய அரசியல் முறையை தவருது செய்து பேணிவருகிறுர்கள். பெருமானே தேவரீர் அவர்கட்கு அருள் புரிந்த அந்த அந்த வண்ணத்தின் பிரகாரம் தங்கள் கடமைகளை செய்து வருகிறுர்கள். 271

ஐயநீ எனக்குமுன் அளித்த காப்பினைத் துய்யநின் திருவருள் துணைய தாகவே
வைகலும் புரிகுவன் வழாது மற்றதற் கெய்திய தோர்குறை இசைப்பன் கேட்டிநீ.

ஐயனே! நீ எனக்கு முன்னர் தந்த காவல் தொழிலை மிகவும் தூய்மையான நமது திருவருளின் துணைய தாகவே தவருது யான் நித்தலும் புரிந்து வருவேன். ஆனுல் அதற்கும் ஓர் குறை வந்து தோன்றியது. 272

நின்பெருந் திருவருள் நினைகி லாமையால் தென்புலக் கோமகன் சிதைந்து போயினுன்
மன்பதைக் குலம்பிற வளர்ந்து மிக்கன துன்பமுற் றனள்அவை சுமக்கும் பூமகள்.

தேவரீரது திருவருட் கருணையின் மேன்மையை தென்திசை அரசனுன இயமராசன் நினையாமல் போனமையால் அவன் அழிந்து போயினுன். உலகத்து உயிர்வர்க்கம் இயமனில்லமையால் மரணம் இன்றி வளர்ந்து பெருகிக்கொண்டது. இந்த உயிர்கள் அனைத்தையும் சுமக்கின்ற பூமிதேவி பாரம் தாங்காது துயரம் கொண்டாள். 273

தன்புடை எவற்றையுந் தாங்கு கின்றவள் துன்புற உயிரெலாந் தோன்றித் தோன்றியே
பின்பிற வாமலே பெருகி வைகுமேல் என்படும் என்படும் எனது காவலே.

தன்னிடத்திலே எல்லாவற்றையும் தாங்குபவளாகிய பூமிதேவி பாரம் மிகுந்து சுமக்க இயலாது வருந்தும்படி உயிர்கள் எல்லாம் தோன்றித் தோன்றிய பின்னர் இறவாது பிறவாது பெருகி இருக்குமேயானுல் எனது காவல் தொழிலால் ஏது பிரயோசனமாகும்? காவல் என்னவாகிப் போகும்? 274

இறுத்திடும் அரசினுக் கெவரு மில்லைநீ செறுத்திடல் அந்தகன் செய்த தீமையைப்
பொறுத்தருள் அவன்றனைப் புரிதி ஈங்கிது மறுத்திடல் என்றடி வணங்கி வேண்டவே.

உயிர்களை முடிவுசெய்கின்ற அரசாட்சிபீடத்தில் எவரும் இல்லை. ஆகவே பகவானே நீர் இயமனை தொலைவாக்காது அவன்செய்த தீமையைபொறுத் தருள்க

எனது வேண்டுகோளை மறுக்காதே பெருமானே எனக் கூறியவாறு பெருமான் திருவடி மலர்களில் விஷ்ணுபிரான் வணங்குதலும். 275

அந்தக எழுகென அமல நாயகன் முந்தருள் புரிதலும் முடிந்த கூற்றுவன்
வந்தனன் தொழுதனன் வணங்கித் தாள்பட உய்ந்தனன் அடியனென் றுணர்ந்து போற்றினன்.

அவ்வேளை இயமனே! எழுவாயாக என மலபந்தமில்லாத பகவான் பூரண அருளினைப் புரிந்தருளலும் இறந்து போன இயமராசன் உயிர்பெற்றெழுந்து வந்தான். சிவபிரானை வணங்கி பெருமானுடைய திருப்பாதம் என்மீது படுதலால் அடியேன் உய்ந்து நன்நிலையாகினேன் என்னும் உணர்வுகொண்டு பெருமானைப் போற்றி செய்தான். 276

போற்றிடு தருமனைப் புராரி நோக்கியே சாற்றிடு கின்றனன் தயங்கு கண்டிகை
நீற்றெடு புனைந்தெமை நினையும் நீரர்பால் கூற்றுவன் யானெனக் குறுகு வாயலை.

போற்றி செய்து வணங்கிய இயமராசனை (தருமன் என்னும் பெயர், உலகத்து எந்த ஒரு உயிரையும் தீவினை உற்றபோது தண்டித்து நீக்கி அவர்களை நன்நிலைப்படுத்தலால் இயமராசனுக்கு ஆயது.) முப்புரம் எரிசெய்த பெருமான் நோக்கி சொல்லியருள்கின்றார் இயமனே! நீ பிரகாசமுடைய உருத்திராக்கத்தை திருநீற்றோடு சேர அணிந்து எம்மை நினைக்கின்ற எனது அன்பர் இடத்தாக, இயமன் நான் மற்றைய உயிர்போல இவரையும் பிடிக்கலாம் என எண்ணிச் செல்லாதே. 277

நண்ணருங் கதிபெறு நமது தொண்டரை மண்ணுல கத்தவர் மனித ரேயென
எண்ணலை அவர்தமை யாமென் றெண்ணுதி கண்ணுறின் அன்னவர் கழலின் வீழ்தியால்

செல்லுதற்கரிய நல்ல ஒழுக்கம் தலை நிற்கின்ற பேறுபெற்ற எனது தொண்டர்களை பூமியில் வாழ்வார்கள் மனிதர்கள் தானே என எண்ணாதே. அவர்களை நான் தான் என எண்ணுதி. (நாமே நாம் தாமே தாம்) அவரைக் கண்டபோது அவர் பாதங்களிலே நீ வீழ்ந்து வணங்குவாயாக என்னும் பெரியோர் வாக்கும் இப்பாடல் கருத்துடன் ஒப்ப நோக்குக. 278

கண்ணிய மனமொழி காயம் ஈறதா எண்ணிய கருவிகள் இடைய தாகவே
புண்ணிய மொடுபவம் புரியும் ஏனையர் விண்ணெடு நிரயமேல் மேவச் செய்திநீ.

ஆனால் கண்ணாலும், மனதாலும் வாக்காலும் உடம்பாலும் எனச் சொல்லப்படும் கருவிகள் மூலமாக இவ்வுலகில் புண்ணியத்துடன் பாவங்களைச்செய்து வருகின்ற (ஆசைவலைப்பட்டு உலையும) ஏனைய உயிர்களை அவர்கள் வினைக்கேற்ற பிரகாரம் நீ அவர்களை சொர்க்கம் நரகம் இவைகளில் சேர்ப்பாய். 279

என்றநள் புரிந்துநின் படையொ டேகென மன்றமர் அடிமிசை வணங்கி முன்னரே
பொன்றிய பகட்டொடும் பொருநர் தம்மொடும் தென்றிசை புகுந்துதன் செலவின் [மேவினன்.

என்று எமது கடவுள் பெருமான் அருள்புரிந்து இயமனே உனது படையுடன் நீ செல்வாயாக எனலும் அப்போது இயமராசன் பெருமானின் தில்லையிலே நடமாடிக் விளங்கும் திருவடிகளை வணங்கி எழுந்து அமர்ந்து முன்னர் உயிர்பெற்றெழுந்து உட

ளுகி நின்ற எருமைக் கடாவுடனும் கிங்கரர் என்னும் சேனை வீரர் தங்களுடனும் தென் திசையான இயம உலகில் புகுந்து தனது செயலை பழமைபோல செய்து கொண்டு தங்கினன். 280

சித்தசற் புரிதரு செங்கண் மான்முதல் மொய்த்திடு கடவுளர் முனிவர் மும்முறை
நித்தனை வணங்கினர் கயிலை நீங்கினர் தத்தம துறையுளில் சார்தல் மேயினர்.

இப்பால் மன்மதனைப் பெற்றெடுத்த தந்தையான விஷ்ணு மூர்த்தியும் பிரமன் இந்திரன் ஆதியாக ஆங்குகூடி நின்ற கடவுளரும் முனிவரும் அழிவிலாப் பொருளான சிவபிரானை மும்முறை வணக்கம் செய்தார்கள். பின்னர் கயிலையை விட்டு நீங்கினர்கள். தங்கள் தங்கள் இருப்பிடம் தோறும் சென்று சேர்வாராயினர்கள். 281

கொன்னவில் அடுபடைக் கூற்றன் பண்டுபோல் இன்னமு விளைகுவ தென்கொலோவென
மன்னருள் பெற்றமார்க் கண்டன் மாக்கதை பன்னினர் முன்னமும் படர்தற் கஞ்சுமால்

மிக உயர்வாகச் சொல்லப்பெறும் கொலைபுரியும் படைகளை ஏந்திய இயமராசன் தனக்கு இனிமேலும் என்ன விளையுமோ தான் தவறுற்றால் என்னும் அச்சத்தால் மிகவும் மேலான அருளைப்பெற்ற மார்க்கண்டர் கதையினைச் சொன்னவர் முன்னுகவும் செல்வதற்கு பெரும்பயங் கொள்ளுவான். 282

ஆதலிற் குச்சகன் அருந்த வத்திலோர் மாதுயிர் அளித்தனன் மால்க ளிற்றினைக்
காதுகை நீக்கியொண் கடவு ளாக்கியே மேதகு விண்ணிடை மேவச் செய்தனன்.

ஆனதினல் எனது பிள்ளைகளே கேளுங்கள்! குச்சக முனிவர் அரிய தவப்பேற்றினல் இறந்த பெண்ணினுக்கு உயிர் திரும்பவும் கொடுத்தார். மத யானையின் வடிவுகொண்ட தருமத்தனின் பாவத்தை நீக்கி தேவனுக்கி வானுலக வாழ்வுபெற மேன்மையான விண்ணுலகத்தை அடையும்படி செய்தார் 283

உதவிய மிருககண் டுயன் மால்அயன் முதலவர் புகழ்தரு முதன்மை பெற்றனன்
விதிமுறை அவனருள் மிருகண் டொப்பிலோர் புதல்வனைப் பெற்றனன் புரிந்த
[நோன்மையால்.

அரிய தவத்தினல் குச்சக முனிவர்பிரான் பெற்ற மைந்தனரான மிருகண்டுயர் என்பவர் பிரம்மா விஷ்ணு என்னும் இவர்களால் புகழப்பெறும் முதன்மையான நிலை பெற்றார். வேத விதிமுறையாகப் மிருகண்டுயர் பெற்றருளிய மிருகண்டர் என்னும் முனிவர் தனக்கு வேறு ஒருவர் ஒப்பில்லாத பிள்ளையான மார்க்கண்ட முனிவரைப் பெற்றனர் தான்புரிந்த தவத்தின் வலிமையால். 284

அப்பெருந் திருமகன் ஆற்றும் நோன்பினல் தப்பரும் விதியினைத் தணந்து கூற்றுவன்
துப்பினை அகற்றியே தொலைவு கண்டுபின் எப்பொழு தத்தினும் இறப்பின் றுயினன்.

அந்த பெரிய திருமகனை மார்க்கண்டேயர் தான் செய்துகொண்ட தவத்தினல் தப்பமுடியாத விதியினை நீக்கிக் கடந்து இயமராசனுடைய வலிமையையும் நீக்கி இயமன் தொலைவகிப்போனதையும் தானே காணப்பெற்று எக்காலத்திலும் இறப்பில்லாதவராயினர். 285

மார்க்கண்டேயப் படலம் முற்றிற்று.

**ஆகத் திருவிருத்தம் 486.**

601

# 6. மாயை உபதேசப் படலம்.

அன்னது சரதமே அறிதிர் ஆதலால், இன்னமும் மொழிகுவன் இயற்று நோன்பென
முன்னுறு காசிப முனிவன் செப்பலும், நன்னய மாயவள் நகைத்துக் கூறுவாள்;

முன்னாக நின்ற காசிப முனிவர் சூரன், சிங்கன் தாரகனை நோக்கி எனது பிள்ளைகளே! யான் சொன்னது முற்றிலும் உண்மை, இன்னமும் நான் சொல்லுவது யாதெனில் நீங்கள் தவத்தையே செய்யுங்கள் என்றுதான் சொல்வேன் எனச் சொல்லுதலும் அப்போது நல்ல எழிலின் நயமுடைய மாயவள் இவை கேட்டு சிரித்துவிட்டு கூறுவாள். 1

மறைதெரி முனிவநீ வாய்மை யாகிய, உறுதியை மொழிந்தனை உயர்ந்த வீடுறும்
அறிவுடை முனிவரர்க் கன்றி நாமருள், சிறுவருக் கித்திறஞ் செப்ப லாகுமோ;

வேதங்களை நன்குதெரிந்த முனிவனே! நீ உண்மையாகிய உறுதியை இவர்கட்கு இங்கு உரைத்தனை. இதை உயர்வான நிலைகூடிய முத்தியை அடையும் அறிவுடைய முனிவர்க்கன்றி யாங்கள் பெற்ற இந்தச் சிறுவர்களுக்கு இத்தன்மையாக நீ சொல்லலாகுமோ? 2

நன்பெருஞ் செல்வமும் நவையில் கொற்றமும், இன்பமும் அழிவிலா திருக்கும் ஆயுளும்
மன்பெருஞ் சீர்த்தியும் மறுவில் வாழ்க்கையும், அன்புடை யினையவர் அடைதல் வேண்டுமால்.

நன்மைதரும் செல்வமும் குறை காணுளுத ஆணையுடன் கூடிய தலைமையும், இன்பமும், அழிவின்றி இருக்கும் நீண்டகால ஆயுளும் மிக உயர்வுடைய அரச சீரும் குற்றங் குறையிலா வாழ்வும் அன்புடைய எங்கள் இப்பிள்ளைகள் அடையவேண்டும். 3

காதலால் அவையெலாங் கடிதிற் பெற்றிட, மாதவ முனிவர வகுத்தி யென்றலும்
ஈதுகொ லோவுன தெண்ணம் நீயவர்க், காதகும் இயல்பினை அறைதி யென்னவே;

இப்பிள்ளைகள் தாங்கள் மிக காதலுடன் இவைகளான செல்வம், பெருமை ஆணை, ஆயுள், சீர், சிறப்பு ஆகிய அனைத்தையும் பெற்றிட மாதவமுடைய முனிவனே நீ இனி வகுத்துச் சொல்வாயாக என மாயை கூற, காசிபன் அதுகேட்டு ஓகோ இதுவா உனது எண்ணம், சரி அப்படியாயின் நீயே இவர்கட்கு அவைகளைப் பெறுகின்ற இயல்பினை சொல்லிக் கொடுப்பாயாக என்றுர்; 4

மாயவள் தன்சிறார் வதனம் நோக்கியே, தூயவிம் முனிவரன் சொற்ற துண்மையே
ஆயினும் உங்களுக் காவ தன்றவை, நீயிர்கள் கேண்மென நெறியிற் கூறுவாள்;

அதனைக் கேட்டு மாயவள் தனது சிறு மைந்தர்களான சூரன், சிங்கன், தாரகன் முகத்தை நோக்கியே சொல்வாள் ''தூய இந்த முனிவன் சொல்லியது உண்மையே யாகும்; ஆனால் அவை உங்களுக்கு பொருந்துவது அல்ல; நீங்கள் நான் சொல்வதைக் கேளுங்கள்'' என்று முறைமையுடன் பின்வருவனவற்றைக் கூறுவாள். 5

மாற்படு புந்தியின் மறுவில் சேதனம், பாற்படும் உயிர்க்கெலாம் பவத்தின் மாண்பயன்
நூற்படு கல்வியின் நுவல்வ ளத்தினின், மேற்படு கின்றதில் விழுமி தில்லையே.

மயக்கம் அறியாமை பொருந்திய மனத்திலே மறுவில்லாத அறிவு விளங்கிய உயிர்கட்கு எல்லாம் (அதாவது மனிதர் தேவர் அசுரர் எனும் பகுத்தறிவு நிலை கொண்டவர்க்கெல்லாம்), இவ்வுலகில் பிறவி எடுத்துக் கொண்டதனால் வரப்பெறும் பிரயோசனம் யாதெனில், நூல்கள் மூலமாகப் பெறப்படுகின்ற கல்வி என்னும் செல்வத்தை அடைதல், அல்லது புகழப்படும் பொருட் செல்வத்தை அடைதல் என்னும் இரண்டிலும் பார்க்க உயர்வானது வேறு ஏதும் ஒன்றும் இல்லை.

எல்லா உயிர்களது மனமும், அறிவும் அறியாமையும் ஒருங்கே பொருந்தியது. ஆனால் மனிதர் தேவர் அசுரர் என்பார்க்கு எல்லாவற்றிலும் மேலாக எதனையும் பகுத்து உணரும் உணர்வு உண்டு. பகுத்தறிவு பொருந்திய உயிர்களாகப் பிறந்தோர்கள் அடையக்கூடிய மிகச்சிறந்த பேறுவது கல்விச் செல்வம், பொருட் செல்வம் என இரண்டாகும் என்றாள் மாயவள்.

''தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்'' என்பதையும் உணர்க. 6

திருமைகொள் வளனொடு நிதில் கல்வியாம், இருமையின் ஒன்றினை எய்தி டாதெனின்
அருமைகொள் அவ்வுயிர் அதனின் ஆற்றவும், பெருமைய துடையது பேயின் தோற்றமே.

எந்நிலையிலும் ஒருவர்க்கு பெருமை தரக்கூடிய பொருட் செல்வம், கல்விச் செல்வம் ஆகிய இரண்டிலும் எது ஒன்றையாதல் ஒருயிர் தனது பிறவியில் அடைந்து கொள்ளாது எனின், அருமையுடன் பிறவியெடுத்த அந்த உயிர் அந்தப் பிறவி எடுப்பதனிலும் பார்க்க பேயின் தோற்றமாக பிறத்தல் பெருமையாயிருக்கும். அரிதாகக் கிடைப்பது இப் பிறவி, இப் பிறவியில் பொருட் செல்வத்தையோ கல்விச் செல்வத்தையோ அடையமுடியாத அந்த உயிர் பேயாகப் பிறந்தால் அது பெருமையுடையது என்றாள் மாயவள். 7

பிறந்தநல் லுயிர்க்கெலாம் பெருமை நல்கிய, இறந்ததோர் பொருண்மைய திரண்டின் வன்மையும்
அறிந்தவர் தெரிவரேல் அரிய கல்வியில், சிறந்தது திருவெனச் செப்ப லாகுமால்.

பூமியில் பிறவி எடுத்துக் கொண்ட பகுத்தறிவு உடைய உயிர்கட்கெல்லாம் பெருமையைத் தருகின்ற மிகச் சிறப்புடைய இந்த பொருட்செல்வம் கல்விச் செல்வம் என்னும் இரண்டினுடைய வலிமையையும் அறிவாளிகள் அறிந்து கொண்டால் அரிதாக விளங்கும் கல்வியிலும் சிறந்தது பொருட்செல்வம் என நாங்கள் சொல்லலாம். 8

சொற்றரு கலையெலாந் தொடர்ந்து பற்பகல், கற்றவ ராயினுங் கழிநி ரப்பினால்
அற்றவ ராவரேல் ஆக்கம் வேண்டியே பற்றலர் தம்மையும் பணிந்து நிற்பரால்.

ஏனெ அப்படி எனக் கூறப்புகுந்தால் சொல்லப்பெறுகின்ற நல்லகலைகள் யாவற்றையும் விடாமுயற்சியுடன் பற்பல நாள் கற்றுத் தேர்ந்தவராயினும் மிக வருத்தும் வறுமையால் பொருள் இல்லாமை உடையவராகி விடுவரெனின் அக்கல்விமான்கள் வாழ்க்கைக்குப் பொருள் வேண்டி, தான் போய் வணங்காத, அல்லது தமக்கு விருப்பமில்லாதவர் தம்மையும் சென்று பணிந்து நிற்பார்கள். 9

அளப்பருங் கல்வியும் ஆக்கம் யாவையும் கொளப்படு தன்மையிற் குறைவு றுதலை
வளர்த்தலின் மேதக வனப்புச் செய்தலிற் இளத்திடின் மேலது கேடில் செல்வமே

அளக்க முடியாத நிலைகொண்ட கல்விச் செல்வம் பொருட் செல்வம் எனும் இவை இரண்டும் அவைகளை நாம் பெற்றுக்கொள்ளும் இயல்பிற்கே அவைகள் குறைவின்றி இருக்கும். ஆனால் கல்விச் செல்வத்திலும் பார்க்க பொருட் செல்வத்திற்கு ஒரு சிறப்பு இதிலும் உண்டு. பொருளைச் சம்பாதித்து நாம் அதை முதலீடுசெய்து அதன் மூலமாக அது பெருகும் நிலையால் அது எம்மை வளர்த்தலில், வனப்படைய வைத்தலில் நாம் சொல்லப்போனால் கல்விச்செல்வத்திலும் பார்க்க கேடில்லாத பொருட் செல்வமே மேலானதாகும். 10

நூலுறு கல்வியை நுனித்து நாடியே, வாலறி வெய்திய வரத்தி னோர்களும்
மேலுறு திருவொடு மேவு றுரெனின், ஞாலமங் கவர்தமை நவையுள் வைக்குமால்

நூல்களிலே சொல்லப்பெறும் கல்வியை நன்றாக நுனித்து ஆராய்ந்து அறிந்து மேலான உண்மை அறிவைப் பெற்றுக்கொள்ளுகின்ற வரப்பிரசாதத்தை உடையவர்களும் மேலாகிய பணச் செல்வத்துடன் பொருந்துகிறார் எனின் இப்பூமியிலுள்ளார் அவர்களை குறைவாகவே மதித்துக் கொள்வார்கள். இந்த அறிவாளியால் தமக்கு ஏதும் பிரயோசனம் இல்லை. எமது இடைஞ்சலுக்கு உதவாதவர் என குறையுடையாராக அவரை மதித்து கீழாகியநிலையில் அவரை வைப்பார்கள். 11

அளப்பரும் விஞ்சையே அன்றி மேன்மையும், உளப்படு தருமமும் உயர்ந்த சீர்த்தியுங்
கொளப்படு கொற்றமும் பிறவுங் கூட்டலால், வளத்தினிற் சிறந்தது மற்றொன் றில்லையே;

எம்மால் அளத்தற்கரிய விஞ்ஞானத்தின் விளைவான வித்தையேயன்றி மேன்மையையும், யாவரும் விரும்பப்படும் தருமத்தையும், உயர்வான சிறப்பையும் புகழையும் தன்பாட்டில் சேருகின்ற அதிகாரச் சீரையும் இன்னமும் வேறு விரும்பும் நிலைகளை அடைகின்ற நிலையையும் பொருட்செல்வம் கூட்டி வைத்தலால் பொருட் செல்வத்திலும் சிறந்தது வேறொன்றுமில்லை. 12

ஆக்கமிங் கொருவரால் அணுக வேண்டுமேல், ஊக்கமுண் டாவரேல் உறுவர் அன்னது
நீக்கமில் கொள்கையின் நிற்ப ரேயெனின், மேக்குறு பெருந்திரு விரைவின் மேவுமால்

இப்படியான பொருட்செல்வம் ஒருவர்பால் அடைய வேண்டுமென்றால் அவர் ஊக்கமுடையவராக விளங்கினால் அந்தச் செல்வத்தைப் பெறுவர். அவ்வாறாக தான் கொண்ட ஊக்கத்தை மேலும் கைவிட்டு விடாதபடி நிற்பரேல் என்றால் மேலாகிய பெருஞ் செல்வம் அவர்களை விரைவில் வந்தடையும். 13

அவ்வளம் பலவகைத் தாகும் அங்கவை, எவ்வரும் பெறுகிலர் இயல்பின் யாவையுஞ்
செவ்விதின் நீர்பெறச் சிந்தை செய்யுமீன், உய்வது வேறிலை உறுதி யீதலால்.

அவ்வாறாகிய வளங்கள் பொன் பூமி அரசு புகழ் என பலவகையாகும். அவைகள் யாவற்றையும் எல்லாரும் பெறுகின்றிலர். அதை இயல்பாகவே நீங்கள் செப்பமுடன் பெற்றுக்கொள்வதற்கு உமது மனதில் எண்ணிக் கொள்ளுங்கள். இதுவே உறுதியல்லாமல் நீங்கள் உய்வதற்கு வேறுவழியில்லை. 14

எங்கள்பால் நென்னலின் யாமந் தோன்றலால், துங்கமா நிருதர்தங் கதியில் துன்னினீர்
உங்களுக் கொன்னலர் உம்பர் யாவருந், தங்கள்தம் முயற்சியால் தலைமை பெற்றுளார்.

எங்களிடத்தாக நேற்றையத் தினத்து இரவு யாமத்தில் தோன்றுதலால் மேன்மையுடன் விளங்கும் அசுரரினுடைய கணத்தில் பொருந்தினீர்கள். உங்களுக்கு பகைவர்கள் தேவர்கள். அத்தேவர்கள் யாவரும் தங்கள் முயற்சியால் தலைமை பெற்றிருக்கிறார்கள்; 15

நீவிர்கள் அனையரின் நிவந்த கொள்கையர் ஆவிர்கள் போலுமால் ஆக்க மெய்துவான்
மூவிரும் முயலுதிர் முயலும் பெற்றியை ஏவிருங் கேட்கையான் எடுத்துக் கூறுகேன்.

நீங்களும் அத்தேவர்களை ஒத்த தலையான நிலையை அடைந்து கொள்வீர்கள் போலும் என நான் நினைக்கிறேன். ஆகவே மேலான திருவை அடைந்து கொள்ளுமாறு நீங்கள் மூவிரும் முயற்சி செய்வீராக. எவ்வண்ணமாக நீங்கள் முயற்சிசெய்ய வேண்டுமென்பதை நீங்கள் எல்லாரும் கேட்டறியும்படி நான் எடுத்துக்கூறுவேன். 16

ஆனதோர் இத்திசை ஆலந் தீவெனத் தானறை கிற்பர்இத் தரைக்கு நேரதாய்ப்
போனதோர் உத்தர பூமி யாயிடை தானவர் நோற்றிடத் தகுவ தென்பதே.

இதோ தெரியப்பெறும் இத்திசையில் ஆலந்தீவு எனச் சொல்லப்பெறும் இடம் உண்டு; இப்பூமிக்கு நேராக உள்ள வடபூமியாகும். அவ்விடமானது அசுரர் தவம் செய்வதற்கு தகுந்த இடம் என்பதாகும். 17

அப்புவி யதனிடை ஆற்றற் கிறிலா, இப்பரி சனமொடும் ஏகி யாயிடை
ஒப்பறு குண்டமும் ஒழிந்த செய்கையும், மெய்ப்பட இயற்றுதிர் வேள்வி செய்யவே.

அந்தப் பூமியின் இடத்தாக வலிமைக்கு முடிவு இல்லாத பெரும் வலியுடைய உமது சேனையோடும் சென்று அவ்விடத்தே ஒப்புவேறு இல்லாத சிறப்புடைய ஓம குண்டங்களும் தம்பங்களும் இன்னும் யாகம் செய்வதற்கு வேண்டிய பிற செய்கைகளையும் உண்மை விசுவாசத்துடன் செய்வீராக. 18

காரிகொள் இந்தனங் கதழ லிட்டுமுன், ஆரழல் மூட்டியே அழலின் பண்டமுஞ்
சோரியும் ஊன்களும் பிறவுந் தூவியே, வீரர்கள் புரிதிரால் வெய்ய வேள்வியே.

நஞ்சு பொருந்திய சமித்துகளை (ஓமத்திற்குரிய விறகு) குண்டத்தில் இட்டு முன்னுக நெருப்பை மூட்டி அதில் உறைப்புப் பொருந்திய வெப்பமுடைய உணவு வகைகளும், இரத்தமும் இறைச்சியும் பிறவற்றையும் சொரிந்து, எனது வீரர்களே கோரமான ஓர் யாகத்தைச் செய்வீராக. 19

செங்கண்மால் அயன்முதல் தேவர்கள் யாவரும் எங்கணு யகனென இறைஞ்ச மேதகு
கங்கைவார் சடைமுடிக் கடவுட் போற்றியே பொங்குதீ வேள்வியைப் புரிதிர் பற்பகல்

சிவந்த கண்ணுடைய நாராயணக் கடவுள் பிரமதேவன் முதலான எத்தேவர் யாவரும் எங்கள் நாயகனே அபயம் எனப் போற்றி இறைஞ்ச மேலாகப் பெருகி உலகை அழிக்க வந்த கங்கையை சடைமேலணிந்த சிவனைப் போற்றிசெய்து பொங்கி எழும் நெருப்புச் சுடருடைய உடைய ஓர் யாகத்தைப் பல நாளும் விடாமுயற்சியுடன் நீங்கள் செய்யுங்கள். 20

அம்மகம் புரிதிரேல் அருளின் முன்னுறீஇ மைம்மலி மிடறுடை வான நாயகன்
மெய்ம்மையின் நீவிர்கள் வெஃகி யாங்கெலாம் இம்மையின் எய்துமா றினிது நல்குமால்

அந்த யாகத்தைப் புரிதிராயின் உங்கள்பால் திருவருள் கூடப்பெற்று, நஞ்சுடைமையால் விளங்கும் இருண்டு நீலகண்ட உடைய தேவாதிதேவன் சிவன் உண்மையாக நீங்கள் விரும்பிய அவை யாவையும் இப்பிறவியிலே நீர் பெறுமாறு இனிதாகத் தந்தருளுவார். 21

மூண்டவிவ் வேள்வியை முயல மூவிரும் ஆண்டுசென் றுற்றுழி அன்ன தற்கவண்
வேண்டிய பொருளெலாம் வேறு வேறதா ஈண்டுற உதவுவன் ஏகு வீரென்றான்.

இவ்வண்ணமாக உங்கட்கு பொருத்தமான யாகத்தை முயற்சியுடன் புரியுமாறு நீங்கள் மூன்றுபேரும் அந்த ஆலந்தீவு எனும் உத்தர பூமியில் சென்றபோது உமது யாகத்திற்கு வேண்டிய பொருளெலாம் வேறு வேருக அங்கு நான் உமக்குகொண்டு வந்து உதவுவேன். நீங்கள் இப்போது செல்வீராக என்ருன் மாயவன். 22

தந்திர நெறிகளுந் தவறில் பான்மையும், மந்திர முறைகளும் மற்று முள்ளவும்
இந்திர வளனுறும் இயல்பின் மூவர்க்கும், முந்திர வுதவிய முதல்வி நல்கினுள்.

மேலும், தனது பிள்ளைகள் யாகம் செய்யுங்கால் அதனை எவரும் குழப்பிவிடாது இருப்பமைக்கு தனது பிள்ளைகள் கடைப்பிடிக்கவேண்டிய தந்திர நெறிகளையும் தவறுதல் ஏற்படாது எவ்வண்ணமாக செயல்படவேண்டியது என்னும் விதி முறைகளையும், மந்திர முறைகளையும் மற்றும் வேறு வேருன நிலைகளையும், இந்திர போகத்தை அடையும் இயல்புடன் சூரன், சிங்கன், தாரகன் என்னும் மூவர்க்கும் முன்பு பெற்ற தாயான மாயவள் கற்பித்துக் கொடுத்தாள். 23

இன்னதோர் காலையில் ஈன்ற மாயவள் தன்னெடு தந்தையைத் தாழ்ந்து போற்றியே
அன்னவர் விடுத்திட அவுணர்மேலையோன் பின்னவர் தம்மொடும் பெயர்வுற் றேகினுன்.

இவ்வாருன காலையில் பெற்ற தாயான மாயவளுடன் தந்தையான காசிப முனிவனை சூரன், சிங்கன், தாரகன் மூவரும் தாழ்ந்து போற்றி வணங்கி, அவர்கள் சென்றுவர விடைகொடுப்ப அசுரர்க்கெல்லாம் மேலான சூரன் என்போன் தனது தம்பியருடன் அவ்விடம்விட்டு பெயர்ந்து நீங்கி யாகம்புரியச் சென்ருன். 24

மாயை உபதேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 510.

# 7. மாயை நீங்கு படலம்

ஏகிய காலையில் இணையில் மாயவள், மோகமொ டயலுறு முனியை நோக்கியே
போகுவன் யானினிப் புதல்வர்ப் பேணுவான் நீகவ லேலென நிறுவிப் போயினுள்.

சூரன்சென்ற காலையில் இணையில்லா எழிலுமுடைய மாயவள் தன் மேலாக மோகங் கொண்டு பக்கராக இருக்கின்ற காசிப முனிவனை நோக்கி முனிவனே யான் எனி எனது புதல்வர்களைப் பேணும்படியாக செல்வேன். நீ கவலைப்படாதே இங்கே இருப்பாயாக என நிற்பாட்டிவிட்டுச் சென்ருள். 1

போதலும் முனிவரன் புந்தி யுள்ளுறும் ஆதர வுந்திட அவள்பின் னேகியே
ஏதில ளுமென எனைவிட் டேகுதல் நீதிய தாகுமோ உரைத்தி நீயென்ருன்.

மாயவள் போய்விடுதலும் காசிப முனிவன் தனது மனதிலே மாயை மேலாக உள்ள ஆசை மேலும் தூண்டுதலால் அவளை நீங்க முடியாதபடி பின் சென்று மாயையை நோக்கி பெண்ணே! உன்னையன்றி வேறு எவரும் தஞ்சமில்லாத என்னை அயலவன் என நீக்கிவிட்டு போதல் முறையாமோ நீ சொல்வாயாக என்ருன். 2

**ஆயிழை புகலுவாள் அழுங்கல் மாதவ சேயினர் பொருட்டுனைச் சேர்ந்த தன்றியீண்**
**டேயது நின்னுடன் இருக்க அன்றியான் மாயவன் அறிகென மறைந்து போயினுள்.**

அழகிய ஆபரணங்களுடன் விளங்கும் மாயவள் சொல்வாள். முனிவனே என் பொருட்டால் கவலே உருதே. உன்னே யான் கூடிச்சேர்ந்து இன்பமுறச் செய்து, பிள்ளேகள் பெற்றுக்கொள்ளும் பொருட்டாக இங்கு வந்ததே அல்லது உன்னுடன் இருப்பதற்கன்று. நான் மாயவள் இதனே நீ அறிவாயாக எனக் கூறிவிட்டு மறைந்து போனுள். 3

**அருவினை சேறலும் அற்பு தத்தவண், வருபொருள் யாவையும் மறைந்து போயின**
**வெருவரு முறைபுரி வேந்தை விட்டகல் திருவொடு, பெயர்வதோர் செல்வம் போலவே.**

தனது உருவம் தோன்ருதவாறு மறைந்து மாயவள் போதலும் அற்புதத் துட ஞுகி அங்கு வந்துள்ள பொருள்களான மண்டபம், சோலே சிறப்பு அனேத்தும் மறைந்து போயின. இது எவ்வாறு போலுமெனின் உலக மக்கள் அச்சமுறும்படி அரசுசெய்கின்ற கொடிய அரசனே விடுத்து தரியாது நீங்கிவிடுகின்ற இலட்சுமிகரத் துடனுக கூடவே அகன்றுபோகும் செல்வம்போல ஆயது. 4

**மாணலன் எய்திய மாயை தன்னுருக் காணலன் ஆகிய கமலத் தோன்மகன்**
**பூணலன் தெளிவினைப் பொருமி ஏங்கியே ஆணலன் அழிவுற அழுங்கி மாழ்குவான்.**

பெரும் நலனுடன் பொருந்திய மாயவளின் உருவை காசிப முனிவன் இப்போது காணுதவனுய், தாமரை மலரில் இருக்கும் பெரியவரான பிரம தேவரின் மகன் காசிபன் கலக்கமுற்று உள்ளத்தெளிவைப்பெற முடியாதவனுய் உள் ளம்பொருமி ஏங்கி தனது ஆண்மை நலம் அழிவுறும்படி அழுது துயருற்று மோகத் தால் சோர்வானுயினன். 5

**வாவியுந் தடங்களும் வரையும் எனவுந் தேவருங் காமுறச் செறிந்த அற்புதம்**
**யாவையுங் காண்கிலான் இரங்கி நின்றனன் ஆவியில் குரம்பையன் ஆகு மென்னவே.**

தனக்கு இன்பமூட்டிய மாயவள் போனதுமன்றி அங்கு நன்நிலேப்பட விளங்கிய குளங்களும் நீர்வாவியும் செய்குன்றுகளும் மண்டபம் முதல் ஏனைய சிறந்த பொருள் களாய் தேவரும் பார்த்து ஆசை கொள்ளும்படியாக அமைந்துள்ள அற்புதங்கள் யாவற்றையும் இப்போது காணதவனுய் அவ்விடத்து கவலேயால் வாடி இரக்கத்து டன் நின்ருன். அவன் நிலே எவ்வாறெனில் உயிர் நீங்கிய உடம்பு போலாயினுன். 6

**மைந்தன துறுதுயர் மலரின் மேவிய, தந்தைதன் உணர்வினுல் தகவின் நாடியே**
**அந்தர நெறியில்வந் தங்கண் மேவலும், எந்தைவந் தனன்கொலென் றெழுந்து**
**தாழவே.**

மைந்தனுன காசிப முனிவருக்கு உற்ற துயரினே தாமரைமலர் ஆசனம்கொண்ட பிரமதேவர் தமது ஞான உணர்வால் தகுதியுடன் கண்டுகொண்டு உடனுக எழுந்து வான மார்க்கமாக வந்து அங்கு சேர்தலும் தந்தை வரவைக்கண்ட காசிப முனிவர் எனது அப்பனும் வந்தாரே! என எழுந்து தாழ்ந்து வணங்கினுர். 7

**ஆசிகள் செய்துநின் னரிய நோன்பொரீஇக் காசிப மெலிவது கழறு கென்றலும்**
**பேசினன் நிகழ்ந்தன பிரமன் கேட்டுளங் கூசினன் அவன்மனங் கொள்ளத்**
**தேற்றுவான்.**

வணங்கிய காசிபரை பிரமதேவர் ஆசீர்வதித்துவிட்டு சொல்வார் மகனே! நீ அரிதாகச் செய்த தவத்தை விடுத்திட்டு உடல் மெலிந்து துயருறுகிறுய் யாது காரணம் சொல்வாயாக என்னலும். அப்போது காசிப முனிவர் மாயையுடன் தனது தொடர்புகளைப் பேசி நிகழ்ந்தவை சொல்லலும் அதுகேட்ட பிரமதேவர் தனது மகனின் நிலை குறித்து உள்ளம் கூசி நாணமுற்று தனது மகன் மனதில் கொண்ட சஞ்சலங்கள் நீங்கி, தெளிவு கொள்ளும் பொருட்டாகத் அறிவு நிலையை போதித்துத் தேற்றுவார்.

**வேதமுங் கலைகளும் உணர்ந்து மேலதா மூதறி வெய்திய முனிவ நீயொரு**
**மாதுதன் பொருட்டினுல் மையல் எய்தியே பேதுறு கிற்றியோபேதை மாந்தர்போல்**

மகனே! வேதமும் வேறு கலைகள் யாவற்றையும் உணர்ந்து மேலான முதிர்ந்த அறிவைப்பெற்ற முனிவனுன நீ ஒரு பெண் பொருட்டினுல் மையல் அடைந்து பேதுறுகின்றியோ அறிவில்லாத பேயராகும் உலக மனிதரைப் போல். 9

**கண்டதோர் நறவமே காம மேயென எண்டரு தீப்பொருள் இருமைத் தென்பரால்**
**உண்டுழி அழிக்குமொன் றுணர்வை புள்ளமேற் கொண்டுழி உயிரையுங் கொல்லு மொன்றரோ.**

மகனே! உலகிலே பெருந் தீமைபயப்பது கள் காமம் என எண்ணப்பட்ட இரண்டாகும் என அறிஞர்கள் சொல்லுவார்கள். இதில் ஒன்றுன கள்ளு அதை உண்டபோது ஒருவனுடைய உணர்வைக்கெடுக்கும். ஆனுல் மற்றைய ஒன்றுன காமமோ அதை மனதினுல் நினைந்தபோதே ஒருவனுடைய உயிரையும் மோசம் செய்துவிடும். இதன் கருத்தை ''பொங்கி வரும் காமமே கூற்று'' எனும் யோக சுவாமிகள் திருவாக்குடன் ஒப்புநோக்குக. 10

**உள்ளினுஞ் சுட்டிடும் உணருங் கேள்வியிற் கொள்ளினுஞ் சுட்டிடு குறுகி மற்றதைத்**
**தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை ஈதினுல் கள்ளினுங் கொடியது காமத் தீயதே.**

இந்தக் கொடிய காமமென்னும் நெருப்பை எண்ணினுலும் சுடும், இதைப் பற்றிய நூல்களையோ அன்றி, காமலீலைகள் கற்பனைக் கதைகள் காதல் கதைகள் ஆகிய இவற்றினை வாசித்தோ, கேட்டோ உணர்ந்தாலும் சுட்டுவிடும். இந்த உணர்வை மேற்கொண்டபின் தீது என தன்னினுலும் சுடும். இத்தன்மையால் கள்ளிலும் பார்க்க கொடியது காமம் என்னும் நெருப்பாகும். 11

**ஈட்டுறு பிறவியும் வினைகள் யாவையுங் காட்டிய தினையதோர் காம மாதலின்**
**வாட்டமில் புந்தியான் மற்றந் நோயினை வீட்டினர் அல்லரோ வீடு சேர்ந்துளார்.**

திரும்பித் திரும்பி பிறப்பதற்கு வினையைச் சம்பாதித்து தருவதும் கொடிய பாவச் செயலைப் புரியுமாறு தூண்டுவதும் இத்தகைய காமம் ஆனமையால் சோர்வடையாத நிதானமான திட சித்தத்தினுல் மற்றும் இந்த காமம் எனும் நோயினை நீக்கிக் கொண்டவரல்லவோ முத்தி இன்பத்தை அடைந்தவராவர். காமம் என்பது நோய். அந்நோய் வந்தபோது தீர்ப்பதற்கு வழி சோர்விலாத திடமான சிந்தையே என்றுர் பிரமதேவர். 12

இக் கருத்தை,

> கடத்திற் குறத்தி பிரான் அருளால் கலங்காத சித்தத்
> திடத்தில் புனைஎன யான் கடந்தேன் சித்ரமா ரல்குப்
> படத்தில் தழுத்தில் பழுத்த செவ்வாயில் பணையில் உந்தித்
> தடத்தில் தளத்தில் கிடக்கும் வெங்கா மசமுத்திரமே.

எனும் அருணகிரியார் கந்தர் அலங்காரப் பாடல் கருத்தும் ஒப்பாதல் காண்க.

நெஞ்சினும் நினைப்பரோ நினைந்து ளார்தமை எஞ்சிய துயரிடை ஈண்டை உய்த்துமேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்தும் ஆதலால் நஞ்சினுந் தீயது நலமில் காமமே.

மகனே! நெஞ்சிலும் ஒருவர் காமமான நினைவுகளை நினைப்பாரோ. எனெனில் அவ்வண்ணம் இதை நினைந்துளார்தமை இது நீக்கமுடியாது பெருகும் துயரத்திலே அவதியுற இப் பிறவியிலே செலுத்தி அப்பால் மேலும்மேலும் பிறவி எனப்பெருகும் கடலிலே தள்ளிவிடும். ஆனதினால் நஞ்சிலும் பார்க்கக் கொடியது எது நலமில்லாத காமமே என்றார் பிரமதேவர். 13

ஆதலிற் காமமுற் றழுங்கல் நிபுணர் மாதரும் வஞ்சக மாயை யாகுமால்
தீதிவண் இழைத்தனை தீரத் தொன்மைபோல் நீதவம் புரிகென நிறுவி ஏகினான்.

ஆனதன்மையில் மகனே! நீ காம உணர்வால் அழுங்குறாதே. நீ கூடிப் புணர்ந்த பெண்ணும் வஞ்சனையுடைய மாயையாகும். தீதையே இவ்விடத்து நீ இழைத்துவிட்டாய், இத் தீவினைச் சேர்க்கையால் விழைந்த பாவம்தீர வேண்டி பழைமைபோல நீ தவம் செய்யச் செல்வாயாக என மகனிடம் கூறி தேறுதல் அடையச் செய்து தவ வழியில் நிறுத்திவிட்டுச் சென்றார் பிரமதேவர். 14

மாறகல் நான்முகன் வாய்மை தேர்தலுந் தேறினன் மையல்நோய் தீர்ந்து காசிபன்
ஏறமர் கடவுளை இதயத் துன்னியே வீறொடு நோற்றனன் வினையின் நீங்குவான்

மாறான செய்கைகள் அகன்று விளங்கும் பிரமதேவர் கூறிய உண்மையினை காசிபர் தேர்ந்து கொள்ளலும் உள்ளம் தெளிவாகி மையலான காம நோய் நீங்கப் பெற்று இடபத்தமர்ந்தருளும் கடவுளைச் சிவனை தனது இதயகமலத்து நினைந்து தியானித்து வினைகள் யாவினும் நீங்கும்படியாகத் வீறுடன் தவஞ்செய்தான். வீறுடன் என்பது முன்புபோல மனம் பிழையாகாது திடமுடன் தவஞ்செய்தான். 15

ஆண்டவண் அகன்றிடும் அணங்கு தன்சிறார் மூண்டிடு தீமகம் முயலு மெல்லையில்
வேண்டிய துதவுவான் விமலற் போற்றியே பூண்டனள் பெருந்தவம் புகரின் ஏவலால்

இப்பால் அவ்விடத்தை நீங்கி அகன்றுபோன மாயையும் தனது பிள்ளைகள் மூவரும் விதிமுறைமூட்டப்பெற்ற அக்கினிவளர்ந்தோங்கும் யாகத்தை முயன்று செய்கின்ற காலத்து வேண்டப்படுகின்ற பொருள்களை உதவும் பொருட்டாக சிவபிரானை நினைந்து அப்பொருள் பெறும்படியாகத் தவம் புரிந்தாள் குருவாகிய சுக்கிரனின் ஏவலின் படியாக. 16

காசிபன் மாயையைக் கலந்த வண்ணமும் ஆசுறும் அவுணர்கள் வந்த வண்ணமும்
பேசினம் அங்கவர் பெற்ற பேற்றினை ஈசன தருளினால் இனியி யம்புவாம்.

நாமிசாரண்ய முனிவர்களே! கேளுங்கள், உங்கட்கு இதுகாறும் காசிபமுனிவன் மாயை என்பாளைக் கலந்த வண்ணமும், குற்றம் பொருந்திய அசுரர்கள் வந்த வண்ணமும் சொன்னோம். இனியாக அந்த அசுரர் தவஞ்செய்து பெற்ற பேறுகளை ஈசன் அருளினால் உமக்கு எடுத்துச் சொல்வோம். 17

மாயை நீங்கு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 527

# அசுரர் யாகப் படலம்

அன்னைதன் ஏவலால் அழல்ம கஞ்செய, உன்னின ணுகியே ஓல்லே ஏகிய
முன்னவன் இளைஞர் தம் முகத்தை நோக்கியே, இன்னது கேண்மென இசைத்தல்
மேயினுன்.

தாயாகிய மாயவளின் ஏவல்படி ஓமாக்கினியில் செய்யப்படுகின்ற யாகத்தைச் செய்வதற்காக நினைவுகொண்டு முதல்வனை சூரபன்மன் விரைவாகப் புறப்பட முற்பட்டுக் கொள்பவன் தனது தம்பிமார் இருவரின் முகத்தை நோக்கி, நான் சொல்வதை நீங்கள் கேளுங்கள் என இதைச் சொல்லத் தொடங்கினுன். 1

அடல்கெழு பெருமகம் அதனை ஆற்றவே, வடதிசை செல்வுழி மல்கு தானையின்
கடையொடு நெற்றியில் காவ லாகியே, படருதி ராலெனச் சூரன் பன்னினுன்.

வலியுடன் பொருந்திய பெரிய யாகத்தைச் செய்யும்படியாக நாங்கள் வடக்குத் திசைநோக்கிச் செல்லுங்கால் நீங்கள் இருவீரும் சேனையின் முன்னணி பின்னணியாகிய இரண்டு பாலும் சேனைக்குக் காவலாகி வாருங்கள்'' என சூரபன்மன் கூறினுன். 2

இனிதென அடிதொழு திளவல் தாரகன், அணிகம திற்றினில் அடைவல் என்றனன்
முனிதரு கோளரி முகத்து மொம்பினுன், தனியகல் நெற்றியிற் சார்வல் என்றனன்.

அது கேட்ட தம்பியார் இருவரும் நல்லது எனக்கூறித் தமையன் காலில் தொழுது வணங்கிவிட்டு இளையவனை தாரகன், தான் சேனையின் பின்னணியாக வருவேன் எனக் கூறினுன். அவ்வேளை கோபமுடைய சிங்கமுகங்கொண்ட வீரனுன மற்றத் தம்பியானவன் தான் ஒப்பற்ற அசுரச் சேனையின் முன்னணியில் காவலாகி வருவேன் என்ருன். 3

பின்னவர் இருவரும் பேசி இத்திறம், முன்னவன் விடைகொடு முறையிற் போயினுர்
அன்னவர் பணியினல் ஆப்புற் றேயெழீஇச், சென்நெறி படர்ந்தன சேனை வெள்ளமே.

இவ்வாறு இத்தன்மையாக இருவரும் பேசி சூரபன்மன் அநுமதியைப் பெற்றுக் கொண்டு சொல்லியவண்ணமே முறையாக முன்னணியிலும் பின்னணியிலும் காவலாகச் சென்ருர். அவர்கள் காவல் அதிபராகிச் சேனையைப் புறப்படுமாறு கட்டளையிட அவர்களது பணியால் ஆரவாரித் தெழுந்து தாம் செல்லும் திசையை நோக்கிச் சென்றன அத்தனை சேனை வெள்ளமும். 4

தானவர் அனிக வெள்ளந் தரைமிசைப் பெயர்த லோடும்
மானில மடந்தை ஆற்ருள் வருந்தினள் பணிக ளோடு
கோனுமங் கயரா நின்ருன் குலவரை கரிகள் மேரு
ஆனவுஞ் சலித்த ஆதிகம டமும் அழுங்கிற் றன்றே.

அசுரர் சேனை வெள்ளம் இப்பூமியில் படர்தலோடும் இப்பூமிதேவி அவர்களைத் தாங்க இயலாது பெரிது வருத்தமுற்ருள். மற்ற துணையான பாம்புகளோடு பாம்புகளின் தலைவனுன ஆதிசேடனும் மயங்கினுன். எட்டுத் திக்குமலைகளும் திக்கு யானைகளும் மேரு மலையும் சலித்தது. எல்லாவற்றிற்கும் மூலஇடத்துள்ள ஆதியான ஆமையும் அழுங்கிச் சலித்தது. 5

மண்டுறு பூழி ஈட்டம் மலரயன் உலகந் தாவி
விண்டல மீது போதல் மேதினி அசுர வெள்ளம்
எண்டரு நிலைமைத் தன்றால் யான்பொறுக் கல்லேன் என்றுங்
கொண்டல்வண் ணத்த னோடு கூறுவான் சேறல் போலும்.

சேனை செல்லும்போது மண்டி எழுந்த புழுதித் தொகையானது மேலெழுந்து சென்று பிரமதேவனுடைய உலகமேல் தாவி அப்பாலும் மேலெழுந்து வானத்தில் போதல் எப்படியாயிற்றென்றால் இப்பூமிதேவியானது, என்மீது செல்கின்ற அசுரர் வெள்ளம் இவ்வளவு என கணக்கிடும் அளவல்ல நான் பொறுக்கமாட்டேன் என்று சொல்லி மேகநிறத்தையுடைய தனது கணவனாகிய விஷ்ணுபிரானிடம் கூறும் படி வைகுந்தத்திற்குச் செல்வதுபோல் இருக்கின்றது. 6

காழுறும் அவுணர் தானைக் கனைகழல் துழனி முன்னர்
ஆழியங் கடலும் நேரா ஆர்த்திடுங் கொல்லோ என்னா
ஊழுறு சினங்கொண் டென்ன உலப்பிலா அவுணர் தாளில்
பூழிய தெழுந்து சென்று புணரிவாய் பொத்திற் றன்றே.

அஞ்சாத மனத்திடத்தையுடைய அசுரர் சேனை வேகமுடன் செல்லும்போது அவைகள் காலிலே அணிந்த சிலம்புகள் சத்தமிட்டன. அதே நேரம் அளவிறந்த அசுரர் காலினின்றும் எழுந்த புழுதி என்செய்ததுபோலும் என்றால், இந்த ஆழமான சமுத்திரமும் எங்கள் சிலம்போசைக்கு எதிராக ஆர்த்து இரைய முடியுமோ என்று மாறான பெருங் கோபங்கொண்டு எழுந்துசென்று சமுத்திரத்தின் வாயைப் பொத்தியது. புழுதி எழுந்து சமுத்திரத்தை முற்றிலும் மூடியது. 7

மரந்துகள் பட்ட மேரு வரையெனச் சிறந்த மெய்ப்பூ
தரந்துகள் பட்ட யாதுந் தனதெனத் தாங்கு சேடன்
உரந்துகள் பட்ட நேரும் உயிர்துகள் பட்ட தொன்னாட்
புரந்துகள் பட்ட தேபோல் புவி துகள் பட்ட தன்றே.

இந்த அசுரர்சேனை செல்லும் வேகத்தில் மிடுக்கில், மரங்கள் துகளாயின. மேருமலை எனப் பேர்கொண்ட அழிவிலா மலையும் துகளாயது. எல்லாவற்றையும் தன்மேல் தாங்குவேன் என்னும் ஆதிசேடன் வலிமைகெட்டது. எதிர்பட்டு வந்த எந்த உயிரும் துகளாயின. இதுவன்றி முன்னாள் முப்புரங்கள் துகளானதுபோல இந்தப் பூமியும் துகளாயது. 8

ஆடலின் அவுண வெள்ளத் தரவமும் அனையர் செல்ல
நீடிய பூழி தானும் நெறிப்பட வருத லோடும்
நாடிய அமரர் அஞ்சி நடுக்குறு நமது வேதா
வீடினன் கொல்லோ நீத்தம் விண்ணுறும் போலும் என்றார்.

வலியுடல் மிகுந்தாடிக்கொண்டு செல்கின்ற அசுரர் சேனைவெள்ளத்தின் ஆரவாரமும், அவர்கள் செல்லும்போது எழுந்துகொண்ட புழுதியும், ஒழுங்காக வானத்தில் மேலெழுந்து வருதலும் இதனை நாடிக் கண்டுகொண்ட தேவர்கள் அஞ்சி நடுங்கி அம்மவோ! எங்கள் பிரமதேவர் இறந்துபோனாரா!? அதனால்போலும் சமுத்திர நீர் மேலெழுந்து வருகிறதோ என ஐயப்பாட்டுடன் பார்த்தார்கள். 9

மாசகல் திருவின் மிக்க மாயவள் முன்னந் தந்த
தேசுறும் அவுண வெள்ளந் திசையெலாம் அயுதம் என்னும்
யோசனை யெல்லையாக உம்பரி னிடத்து மற்றைக்
காசினி யிடத்து மாகிக் கலந்துடன் தழுவிச் சென்ற.

குறை ஏதும் இல்லாத திருவிலே மிகுந்த மாயவள் முன்னம்பெற்ற தேசுடைய அசுரரான வெள்ளம் திசைகள் எல்லாம் பரந்து பதினாயிரம் என்னும் யோசனையின் எல்லைப் பரப்பளவுமாகப் பரந்து, பூமியும் வானமுமாகக் கலந்து நெருங்கி ஒருங்கே ஒருவரை ஒருவர் தழுவிச் சென்றது. 10

அஞ்சினன் அமரர் வேந்தன் அயர்ந்தனன் அங்கிப் புத்தேள்
எஞ்சினன் வன்மை கூற்றன் இனைந்தனன் நிருதி எய்த்தான்
தஞ்சமில் வருணன் வாயுத் தளர்ந்தனன் தனதன் சோர்ந்தான்
நெஞ்சழிந் தனன்ஈ சானன் நிருதர்பேர் அரவஞ் சூழ.

இவ்வாறு செல்லும் அசுரச் சேனையின் பேரோசை எங்கும் பரவ அது கண்டு அஞ்சினான் தேவர்கட்கு அரசனான இந்திரன். அக்கினி தேவன் வாட்டமுற்று கிலேசங் கொண்டயர்ந்தான். இயமன் தனது வலிமை கெட்டான். நிருதிதேவன் வருத்த முற்று இளைத்தான். தஞ்சம் வேறு இலாமையால் வாயுபகவானும் வருண தேவனும் தளர்ந்தனர். குபேரன் சோர்ந்தான். ஈசானன் அறிவு மயங்கினான். எனவே எட்டுத் திக்குப் பாலகர் யாவரும் சோர்வும் வாட்டமும் கவலையுங்கொண்டு கலங்கினர். 11

வள்ளுறு மெயிற்றுச் செங்கண் வலிகெழும் அவுணர் தானை
வெள்ளம தேகப் பூழி விரிந்தெழீஇ யாண்டும் போகிப்
பொள்ளென மெய்யே தீண்டிப் புறத்தெழில் அழித்த வானோர்
உள்ளுணர் வழித்த தன்றே அனையர்கள் ஆர்க்கும் ஓதை.

கூரிய வளைந்த பற்கள் பொருந்தியவரும் சிவந்த கண்ணினை உடைய வலியவரான அசுரரின் சேனை வெள்ளம் செல்ல புழுதி விரிந்து எழுந்து இங்குமங்குமாக பரவிப்போய் வானத்தில் சஞ்சரிக்கும் தேவர்கள் மேனியைத் தீண்டி அவர்களின் மேனியின் புற எழிலை அழித்தது. இதோடு இந்த அசுரர்சேனை ஆரவாரித்ததால் எழுந்த பேரோசை தேவர்களது உள்ளத்து உணர்வை அழித்து ஏக்கமுற்றுச் சோரச்செய்தது. 12

பேருமிவ் வவுணர் தானைப் பெருக்கின தணியின் முன்னர்
ஆரழல் வெருவு சீற்றத் தரிமுகன் செல்லக் கூழை
தாரக விறலோன் செல்லத் தலையளி புரிந்து நாப்பட்
சூரனென் றுரைக்கும் வெய்யோன் துண்ணென ஏகி னானல்.

இவ்வாறு பேர்ந்து செல்கின்ற அசுரர் சேனைப்பெருக்கின் முன்னணியிலே நெருப்பும் நடுங்கும் சீற்றமுடைய சிங்கமுகாசுரன் செல்ல பின்னணியிலே தாரகன் என்னும் வலியோன் செல்ல அசுரர் எல்லார்க்கும் தலையளியான அன்பினைக்காட்டிய வண்ணம் நடுவணாக சூரன் என்று சொல்லப்பெறும் கொடியோன் விரைவாகச் சென்றனன். 13

**ஆன பொழுதத் தவர்க்கா ணியநினைந்து, தானவர்கள் போற்றுந் தனிக்குரவன் தண்டரள மானமிசை யூர்ந்து வந்தணுகி வல்லவுணர், சேனையெனச் செல்லுந் திரைக்கடலைக் கண்ணுற் றான்.**

இவ்வாறான நேரத்தினில் சூரன் முதலியோரைக்காண நினைந்தாராய், அசுரர்கள் போற்றி வணக்கம் செய்கின்ற தனிக் குருவாகிய சுக்கிரன் குளிர்ச்சி பொருந்திய முத்துச்சிவிகை ஒன்றினில் ஏறிக்கொண்டு அசுரரை வந்தணுகி அசுரர்சேனை எனச் செல்கின்ற திரைக்கடல் போன்றதைக் கண்ணுற்றான். 14

**கண்ணின்ற வீரர் கடுப்பும் பெருமிடலும், உண்ணின்ற காழ்ப்பும் உரனுங் கொடுந்திறமும் எண்ணங்கொள் வேர்வும் இகலுந் தெரிவுற்றுத், துண்ணென்ன நெஞ்சம் புகரும் துளக்குற் றான்.**

தனது கண் எதிரே நின்ற வீரருடைய கடுகடுத்த நடையையும் பெரிய மிடுக்கையும், நெஞ்சிலே கொண்ட கறுவியத்தையும் திடத்தையும் கொடுந்தன்மையையும் மனதில் பொருந்திய கோபமும் பகையுமான கொள்கையையும் தெரிந்து கண்டுகொண்டு குருவாகிய சுக்கிரபகவானும் நெஞ்சம் திடுக்கிட்டார். 15

**கண்டேன் இவர்தங் கடுந்திறலின் ஆட்சிதனைப், பண்டே அவுணர் அளப்பிலரைப் பார்த்துணர் வேன்**
**தண்டே னிதழியான் தன்னருளில் வண்ணமோ, உண்டே இவருக் கொருவர்நிகர் உற்றாரே.**

நான் இந்த அசுரர்களின் கடுமையான வீரத்தின் ஆட்சிச் செயல் பலவற்றையும் கண்டேன். இதற்கு முன்பாக எத்தனையோ அளவிடமுடியாத அசுரர்தமைப் பார்த்துள்ளேன். ஆனால் குளிர்ந்த கொன்றைமாலை சூடிய கடவுளின் இனிய அருளின் வண்ணம் இதுவோ அறியேன் இவர்களுக்குக்கு நிகர் உற்றவராக இங்கு ஒருவர் எங்காயினும் உண்டோ ? இல்லையே. 16

**வானோர் இறையுடனும் மாலுடனும் மற்றுள்ள, ஏனோ ருடனும் இகலாடி வென்றிடுகை தானோர் பொருளோ தமையெதிர்ந்த மாற்றலர்தம், ஊனோ டுயிரை யொருங்குண்ணுந் தீயவர்க்கே.**

தேவர்க்கு அரசனான இந்திரனுடனும், விஷ்ணுமூர்த்தியுடனும், மற்றும் எவரோடுமாகுதல் இந்த அசுரர் பகையாடி போர்செய்தல் இவருக்கு ஓர் பொருள்தானோ? இல்லை இல்லை ஏனென்றால் இவர்கள் தம்மை எதிர்ந்து போர் செய்த பகைவர்களின் ஊனையும் உயிரையும் ஒருங்கே உண்ணக்கூடிய வலியுடைய தீயவரானரே. 17

**இன்னோர் தம் வன்மைக் கிறுதி யிலவேனும், முன்னோர் தமைப்போல் முயலுந்தவவலியும் பின்னோர் வரமும் பெரும்படையுங் கொண்டிலரால், அன்னோ இவர்க்குங் குறையுண்மை ஆகியதே.**

இவ்வாறான இந்த அசுரரின் வீரத்திற்கு முடிவில்லை என்றாலும் இவர்களுடைய மூதாதையரைப்போல் இவர்கள் முயன்று பெறும் தவவலியும், தவத்தின் ஊடாகப் பின்னால் பெறப்படும் வரங்களும் பெரிய படைக்கலங்களும் இவர்கள் பெற்றுக்கொள்ளவில்லை. ஆகவே அம்மவோ உண்மையில் குறைஒன்றும் காணமுடியாத இவர்க்கும் குறை ஒன்று உளதாயிற்றே. 18

தண்டத் திறையைக் கடந்த தனியாற்றல், கொண்டுற் றவற்கே குறைகண் டிலம்ஏனை
அண்டத் தவர்க்கும் அனைவர்க்கும் ஒவ்வொர்குறை, உண்டத் தகைமை எவரும் உணர்கு
வரால்.

இயமனின் வலியைக் கடந்த தனியான ஆற்றல் கொண்டுற்றவராகிய சிவபிரானிடத்தாகத்தான் எக்குறையேனும் கண்டிலம். அதுவன்றி ஏனைய அண்டங்களில் வாழும் எந்தத் தேவர்க்கும் மற்று எல்லார்க்கும் ஒவ்வொரு குறை உண்டு. அந்த இயல்பினை எல்லாரும் உணர்வார்கள். 19

ஆதலின்இன் னேர்பால் அடைவுற் றிடும்வறுமை, போதுசில நோன்பு புரியின் அகன்
றிடுமால்
ஈதுநிலைத் தன்றே இழிந்தோர் உயர்ந்திடுவர், காதி புதல்வன் இதற்குக் கரியன்றே.

ஆதலினால் இயல்பாக இவரிடத்தாகச் சேர்ந்துள்ள குறையும் சிலகாலம் இவர் தவம் புரிந்தால் அகன்றுபோகும். இந்த குறை நிலையானதொன்றல்ல. இழிந்த குலமாகித் தாழ்ந்தவர்கள் உயர்ந்திடுவார்கள். காதிராசனுடைய புத்திரனை விசுவாமித்திர முனிவர் இந்த இழிந்த நிலையில் உள்ளோரும் உயர்ந்திடுவார் என்பதற்கு சாட்சியாவர் அல்லவோ. விசுவாமித்திரர் காதி என்னும் பெயருடைய அரசன் மகன். இவர் தானும் மேலோங்கிவர எண்ணி வசிட்ட முனிவருடன் வாது செய்து தோற்றுப் பின்னர் அருந்தவம் புரிந்து சிறப்படைந்து மேம்பாடுடைய பிரம்ம இருடியாகிச் சிறப்படைந்ததுபோல் இந்த அசுரரும் தேவர்க்குத் தாழ்ந்த நிலையில் இருப்பினும் யாகஞ் செய்தால் சிறந்த நிலையைப் பெறுவார்கள். 20

என்னப் பலவும் இசைத்துநின்று தானவர்கள், மன்னர்க்கு மன்னுசு வாழ்வெய்து
சூரபன்மன்
முன்னுற் றிடவும் முகமன் மொழிந்திடவும், உன்னுற் றனனுல் உணர்வுசேர் காப்பியனே.

என்று பலவார்த்தைகளையும் சுக்கிர பகவான் இசைத்தபடி நின்றுவிட்டு அசுரர் மன்னர்க்கும் தலைவனுன வாழ்வினை அடையும்படி நின்ற சூரபன்மன் முன்னுகத் தான் சென்றிடவும் முகமன் சொல்லிடவும் தனது மனதிலே வகையினை நினைத்தார் சிறந்த அறிவுடையவரான சுக்கிராச்சாரியார். 21

தீயின் திறமுருக்குஞ் சீற்றத் தவுணன்எதிர், போயச் குறவும் புகன்றிடவுந் தானரிதால்
ஏயுந் தகுவருடன் என்னுழையிற் சார்வதற்கோர், மாயங்கொள் விஞ்சை புரிவேன் என
மதித்தான்.

ஆகவே இத்திறத்தை இவர்க்கு நான் நேராகச் சென்று சொல்வேன் என்ருல் நெருப்பின் கொடும் வேகத்தையும் கெடுத்துவிடும் அவ்வளவு கொடிய கோபமுடைய அசுரர் எதிராக நான்போய் அங்கு பொருந்தவும் புத்தி புகட்டவும் அரிதாகும். ஆதலின் தகுதியுடைய அசுரருடன் சூழ்ந்துள்ள சூரன், சிங்கன், தாரகன், ஆகிய யாவரும் என்னிடத்து வசப்படும்படி நான் ஓர் மாயம் புரிவேன் எனமனதில் சுக்கிரபகவான் மதித்தார். 22

மண்ணில் உயிரை வசிகரிக்கும் மந்திரமொன், றெண்ணி விதிமுறையே நோக்கியெதிர்
சென்று
நண்ணிய வெஞ்சேனை நரலைநடு வட்புக்கான், அண்ணல் அவுணற் கணிந்தாய் அடைகுற்றுன்.

மனதில் இவ்வாறு எண்ணி இப்பூவுலகில் உள்ள எந்த உயிரையும் வசிகரிக்கின்ற மந்திரம் ஒன்றை எண்ணி விதிமுறைப்படி தியானித்துக்கொண்டு அசுரர் எதிராகச் சென்று அங்கு பொருந்திய சேனையாகும் சமுத்திரத்தின் நடுவே புகுந்து தலைவனுன சூரபன்மன் அருகில் சேர்ந்தார் சுக்கிரபகவான். 23

கள்ள மிகுமவுணர் சிந்தையெனுங் காழிரும்பா, புள்ள முருகி உரைகெழுமா யத்தீயின்
எள்ள வருங்கறையும் ஏகிநயந் திட்டனவால், வெள்ளி மிகப்புணர்க்கின் மேலையுரு
நின்றிடுமோ.

இவ்வாருகச் சுக்கிரன் சேர்தலும் வஞ்சகம் மிகுந்த அசுரர்களது மனமான உரத்த இரும்புபோல உள்ளனவாகிய அவைகள் யாவும், சுக்கிரனைக் கண்ட மாத்திரத்தே எல்லாராலும் புகழ்ந்து சொல்லப்பெறுகின்ற அவரின் மாயமான நெருப்பால் உருகப்பெற்று யாவரையும் இகழ்ந்து துயருறுத்தும் மன அழுக்கும் அசுரர் மனத்திலிருந்து நீங்கி இப்போ அவரைக் கண்டவுடன் பணிந்தும் உவந்தும் அன்பாகவும் அமையும் நயமான நிலையை அசுரர் யாவரும் அடைந்தார்கள். சுக்கிர பகவான் தனது சாமர்த்தியத்தால் மாய உபாயஞ் செய்தால் எவராகுதல் அவரின் வலையில் அகப்படாது தமது இயல்பான பழைய வடிவத்துடன் நிற்பாரா ? ஆகாதே ! விஞ்ஞான ரீதியிலும் வெள்ளியோடு வேறொரு உலகத்தைக் கலந்தால் பழைய உலகத்தின் உருவம் நிற்காது. இந்த உண்மையும் புலப்படுமாறு கூறினர். 24

சூழிக் கடலில் துவன்றும்அவு ணப்படைஞர், காழற்ற புந்தியொடு கைதொழலும் கேசரிக்கும்
பூழைக் கரன்றனக்கும் முன்னைப் புரவலன்முன், கேழுற்ற வாசி குரவன் கிளத்திடுவான்.

உலகைச் சூழ்கின்ற கடல்போல நெருங்கிப் பரந்த அசுரப்படைகள் யாவும் சுக்கிரபகவான் உட்செல்லலும் பணிவாக கைகளைக் கூப்பித் தொழலும் சுக்கிரபகவான் சென்று சிங்கமுகாசூரனுக்கும் துவாரம் பொருந்திய துதிக்கையை உடைய தாரகாசூரனுக்கும் மூத்தவனுன சூரன் முன்சென்று நட்புரிமையால் சிறப்புப் பொருந்திய ஆசி மொழிகளை குருவான சுக்கிரன் சொல்வார். 25

வாலாதி மான்தேர் மகபதிக்கும் ஏனையர்க்கும், மேலாதி தானவர்கள் வெய்யதுயர்
நோயகற்ற
ஏலாதி யேகடுகம் என்றுரைக்கும் இன்மருந்து, போலாதி யென்ன அவுணன் புகன்றிடு
வான்.

"வெண்ணிறமான குதிரை பூண்ட அழகிய தேரினை உடைய இந்திர தேவனுக்கும் மற்றைய ஏனையோரான எத்தேவர்க்கும் நீ மேலாக ஆவாய். அசுரர்களுடைய தாழ்வான நிலையால் ஏற்பட்டுள்ள கொடிய மனத்துயர நோய் அகற்றுதற்கு சூரனே நீயும், நோயுற்ருர் தமது நோய் நீங்குவதற்கு உட்கொள்கின்ற ஏலம் சுக்கு திப்பலி இவைகள் சேர்ந்ததோர் மிகதிவ்வியமான திரிகடுகம் என்னும் மருந்து போல ஆவாயாக" என ஆசீர்வதித்தருளுதலும் சூரன் சொல்லுகிருன். 26

காரையூர் தின்ற கடவுளர்கோன் வைகலுறும், ஊரையோ மேலை உலகுதனில் உள்ளாயோ
பாரையோ கட்செவிகள் பாதலத்தை யோஎந்தாய், யாரைநீ தேற்றேன் இவணுற்ற
வாறென்னே.

"ஐயனே நீர் மேகத்தை வாகனமாக ஊர்ந்து செல்லும் தேவர்க்கரசனுன இந்திரன் வாழ்கின்ற சொர்க்க உலகத்து இருப்பவரோ? அல்லது அதற்கும் மேலாகப் பொருந்திய சிறந்த ஊர்களில் உள்ளாயோ அல்லது பாம்புகள் வாழுகின்ற பாதாள உலகத்துள்ளீரோ? எந்தை பெருமானே நீர்யாராகும் ? இவ்விடத்து வந்த வரலாறு என்னுகும் அவைகளை நான் அறியேன்," 27

உன்பால்என் நெஞ்சம் உருகும் அஃதன்றி, என்பா னதும்உருகா நிற்கும் எனையறியா
தன்பாகி நின்ற தருந்தவத்தை ஆற்றவனம், தன்பா லணுகுதற்குத் தாளுமெழு
இன்றிலவே.

"ஐயனே உமதுபாலாக எனது நெஞ்சமும் உருகும். அதுவேயன்றி எனது எலும்பானதும் உருகிநிற்கும். என்னையே அறியாதபடி உனது பாட்டில் உம்மீது அன்பு பெருகி நிற்கின்றது. அரியதவத்தைச் செய்வதற்கு ஆலவனத்திற்கு செல்வதற்கு உம்மைக் கண்டபின்பாக எனது காலும் எழுகின்றதிலையே" 28

நன்னேயம் பூண்டு நடந்தாய் உயிரெல்லாம், அன்னே யெனவந் தளிக்குந் தகையாயோ
இன்னே யுனையெதிர்ந்தேன் யாக்கை மிகவருந்தி, முன்னே தமியேன் புரிந்ததவம் மொய்ம்பன்றோ.

"தேவரீர் இங்குவரும்போது எம்மீது நல்ல கிருபையாகி வந்தீர். நீர்தான் உயிர்கள் யாவரையும் நல்ல கருணையுடன் காத்து வளர்த்துவரும் தாயான தகமைஉடையீர்போலும். இவ்விடத்து இப்போது நான் உமது எதிரே வரப்பெற்றேன். என்து உடல் முன்னுள் வருத்தமுற்றுப் புரிந்த தவப்பலன்தான் இன்று தமயேனை உமது முன்னாக கொணர்வித்ததன்றே. 29

என்றலுங் கவிஞன் கேளா இருவிசும் பாற்றிற் செல்வேன்
உன்றனி மரபிற்கெல்லாம் ஒருபெருங் குரவ னானேன்
நன்றிகொள் புகரோன் என்னும் நாமமுற் றுடையேன் நின்பாற்
சென்றனன் உறுதி யொன்று தெளித்திடல் வேண்டி யென்றான்.

என்று சூரன் அன்பாகி உருகி பணிவுடன் இவை கூறலும் அந்நேரம் சுக்கிராச்சாரியார் சூரனை நோக்கிச் சொல்வார் மகனே! நான் பெரிய வான மார்க்கமாகச் செல்வேன். உனது தனியான அசுரர் குலத்திற்கெல்லாம் ஒரு பெரிய குருவானேன். நன்மையை யாவர்க்கும் செய்கின்ற சுக்கிரன் என்னும் பெயர் உடையேன். உனது இடத்தாக இப்போது நான் வந்தேன் யாது பொருட்டாக என்றால் உனக்கு ஓர் உறுதி தருகின்ற பொருளை தெளிவுற வைக்கவேண்டி என்றார். 30

அவுணர்கள் முதலா யுள்ளோன் ஆங்கது வினவி யாற்ற
உவகைய னாகி எந்தாய் உய்ந்தனன் இவண்யான் என்னாக்
கவிஞனை அணுகி நின்று கைதொழூஉப் பரவ லோடுஞ்
சிவனருள் நெறியால் அன்னோன் இத்திறஞ் செப்ப லுற்றான்.

அசுரர்க்கெல்லாம் முதலாக உள்ள சூரன் அதுகேட்டவுடன் அடங்காத மகிழ்வுடையானாய் எந்தாய்! உமது தரிசனத்தால் நான் இங்கு உய்ந்தேன் என்று கூறி சுக்கிரபகவானை அணுகி நின்று கைதொழுது வணங்கித் துதித்தலோடும், அப்போது சுக்கிரபகவான் சிவபிரான் அருளினால் கைகூடப் பெற்ற நெறியால் சூரனுக்கு இந்த வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினார். 31

நூல்தொடர் கேள்வி சான்றோய் நோற்றுநீ இருக்கு மெல்லை
ஊறுசெய் கிற்பர் ஒன்னார் உனையவை குறுகா வண்ணங்
கூறுதுந் திறனென் றென்னாக் கூற்றுவற் கடந்த மேலோன்
மாறின்மந் திரம தொன்று மரபுளி வழாமல் ஈந்தான்.

"நூல் பலவற்றையும் இயல்பாக உணர்ந்து கொள்ளும் வலிமையுடைய அன்பனே! நீ சென்று தவம்செய்து இருக்கும்காலை உனது பகைவர் உனது தவத்தைக் கெடுக்கும் முகமாக சில வஞ்சனைகளைப் புரிவார். ஆகவே அவைகள் உன்னைக் குறுகாவண்ணம்

ஒருமார்க்கத்தை நான் உபதேசிக்கின்றேன் என இயமனை வென்ற மேலவரான சிவ பெருமானது நாம மந்திரம் ஒன்றை அதன் மரபு வாழாதபடி உபதேசம் செய்து அதைக் கடைப்பிடிக்கும் முறையினையும் கற்பித்தார். 32

மொய்கெழு கூற்றை வென்ற முதல்வன்மந் திரத்தை நல்கி
வைகலும் இதனை யுன்னி மனத்தொடு புலனென் றுக்கிப்
பொய்கொலை களவு காமம் புன்மைகள் உறுமே போற்றிச்
செய்குதி தவத்தை யென்னச் செவியறி வுறுத்தல் செய்தான்.

எவராலும் நீக்கமுடியாத மரணத்தை விளைவிக்கின்ற இயமனை வென்ற முதல் வனான சிவபெருமான் மந்திரத்தைச் சொல்லிக்கொடுத்து, சூரனே நாள்தோறும் இதனை நினைந்து மனத்தோடு புலன்களையும் ஒன்றுக்கி அடக்கி, பொய், கொலை, களவு, காமம், பொருமை இன்னும் ஏனைய பாதகங்கள் உன்னை அணுகாவண்ணம் காத்துத் தவத்தைச் செய்வாயாக என போதித்தருளினர் சுக்கிரபகவான். 33

அப்பரி சனைத்துந் தேரா அவனடி வணங்கி எந்தாய்
இப்பணி புரிவன் என்ன எல்லைதீர் ஆசி கூறி
மெய்ப்புகர் மீண்டு சென்றுன் மேதகும் அவுணர் சூழ
ஒப்பரு மாயை செம்மல் வடபுலத் தொல்லை போனன்.

சூரபன்மன் அத்தன்மைகள் யாவற்றையும் தெளிந்து கொண்டு சுக்கிரபகவான் அடிகளில் வணங்கி எம்தாய்போல்பவனே! இந்தப்பணிகளை நான் புரிவேன் என லும் அப்போது அவர்மேலும் எல்லையற்ற ஆசிகளைக்கூறி உண்மை உணர்வுடைய சுக்கிரபகவான் மீண்டு சென்றுர். இப்பால் மேன்மையான அசுரர் தன்னைச்சூழ ஒப்பற்ற திருவுடைய மாயவள் புத்திரனை சூரபன்மன் வடதிசையை நோக்கி விரை வுடன் சென்றுன். 34

வழிமுறை பயக்க நோற்கும் வடபுலந் தன்னி லேகிப்
பழுமர வனத்தில் ஆங்கோர் பாங்கரில் குறுகிச் சூரன்
அழல்கெழு மகத்த யாற்ற அயுதயோ சனையுள் வைத்துச்
செழுமதி லதுசூழ் பான்மை செய்திடச் சிந்தை செய்தான்.

சூரபன்மன் தனது குலத்தார் பயனடையும்படி தவம் புரிதற்கேற்ற இடமான வடதிசையில் சென்று, தாய்சொல்லிய வண்ணம் ஆலவனத்தில் அங்கோர்பக்கராகச் சேர்ந்து நெருப்புச் சுடர்விட்டு எழுகின்ற யாகத்தை தான் புரியும்படியாக ஏற்ற தோர் இடமாக அமையும்படி பதினுயிரம் யோசனைப் பரப்பினை உடைய ஓர் நிலத் தைத் தேர்ந்தெடுத்து அதின் புறமாகச் சூழும்படி மிக வலிமையான, சிறந்த ஓர் மதிலை பின்னல் சொல்லப்பெறும் பிரகாரம் அமைக்கும்படி சிந்தை செய்தான். 35

அடல்கெழு தானை யாகும் அவுணர்தங் குழுவைக் கூவிப்
படிதனில் அடுக்கல் யாவும் பறித்தனர் கொணருவித்து
வடவரை நிவப்பிற் சூழ வாரியாப் புரிவித் தாங்கே
நடுநிலை வாயில் போக்கி ஞாயிலும் இயற்று வித்தான்.

அடம் நிறைந்த சேனையாகும் அசுரப்படையை வருதிரால் எனக் கூப்பிட்டு அவரை அனுப்பி இப்பூமியில் உள்ள மலைகள் எல்லாவற்றையும் பிடுங்குவித்துக் கொண்டு வருவித்து, வடக்கில் இருக்கும் மேருமலையைப்போல யாகபூமியின் நாற்புறமும் உயர்வுடன் மதிலாக அமைய நாட்டுவித்து ஒவ்வோர் திக்கிலும் நீண்ட பெரிய வாயில்களையும் உண்டாக்கி அதன் மேலாக உள்ள மதில் உறுப்புக்களையும் செய்தான். 36

நூற்படு செவ்வி நாடி நொய்தென அங்கட் செய்த
மாற்பெரு மதிலைச் சூழ வரம்பறு தானை தன்னை
ஏற்புடை அரண மாக இயற்றுவித் தியாருஞ் செல்ல
நாற்பெருந் திசையி னூடு நலனுற வாய்தல் செய்தான்.

சிற்ப நூலில் சொல்லிய வரலாற்றுக்களை நன்காக சூரன் தெளிந்துநாடி அதன் பிரகாரம் விரைவுடன் அங்கே செய்த பிரமாண்டமான மதிலைச்சூழ அளவற்ற சேனைகளைச் செலுத்தி அம்மதிற்புறம் அவர்களைப் பொருத்தமான காவல் அரணாக நிறுத்தி வைத்து இதன்மேல் யாரும் போக்குவரவு செய்தற்கு ஏற்றவகையில் நான்கு பெரும் திக்கிலும்நான்கு வாயில்களை நலம் பொருந்தும்படி செய்தான். 37

பூமியும் வானும் ஒன்றப் பொருப்பினுற் புரியப் பட்டு
நாமியம் பரிதா நின்ற நாமநீள் காப்பும் அப்பால்
ஏமுறும் அவுண வெள்ளத் தெடுத்திடும் எயிலுஞ் சேர்ந்து
நேமியங் கிரியுஞ் சூழ்ந்த நிசியுநேர்ந் திருந்த வன்றே.

இந்தப் பூமியையும் வானுலகத்தையும் ஒன்றுசேர்த்துப் பொருந்தும்படியாக மலையினுற் செய்யப்பட்டு நாங்கள் சொல்லற்கரிய சிறப்பினையுடையதாய் நின்ற புகழ் மிக்க மதிலும் அம்மதிலைச் சூழ்ந்து இறுமாப்போடு நிற்கின்ற அசுரர் சேனையால் ஆக்கப்பட்ட காவல் அரணும் சேர்ந்து விளங்கும் தன்மையைப் பார்த்தால் அவை சக்கரவாளமலையையும் அதனைச் சூழ்ந்த இருளையும் ஒத்து விளங்கியது. 38

ஞாயிலின் வேலி மான நகங்களால் அடுக்கல் செய்த
பாயிரு நொச்சி தன்னிற் படைகுலாம் புரிசை தன்னில்
வாயில்க டோறும் போற்ற மந்திர முறையாற் கூவி
நேயமொ டடுபோர் மாதை நிறுவினன் நிகரி லாதான்.

மதில் உறுப்புக்களுடன், பெரிய மலைகளால் வேலியைப்போன்று அடுக்கி வைக்கப்பட்ட பரந்த பெரிய மதிலிலும், அதனைச்சூழ அசுரர்சேனைகளால் அரணாக அமைக்கப்பட்ட மதிலிலும் உள்ள வாயில்கள்தோறும் நின்று காவல் செய்யும்படியாக கொலைத்தொழிலுடைய போரினைப் புரிகின்ற வீர இலக்குமியை மந்திர செபத்தின் மூலமாக அழைத்து அன்பால் வேண்டி அங்கு காவலாக நிறுத்திவைத்தான். 39

ஆளரி முகத்தன் முன்னோன் அடுக்கலாற் படையாற் செய்த
நீளிகல் வாரி முன்னர் நெறிகொள்மந் திரத்தாற் கூவிக்
கூளிகள் தொகையும் மோட்டுக் குணங்கரின் தொகையுஞ் சீற்றக்
காளிகள் தொகையுஞ் சூழ்போய்க் காப்புற நிறுவி விட்டான்.

சிங்கமுகாசூரனுக்கு முன்பிறந்தோனான சூரபன்மன் மலைகளாலும் தனது படைகளாலும் செய்யப்பெற்ற நீண்ட வலிமை உடைய மதில் முன்னர், குருவான சுக்கிர பகவான் உபதேசித்த நெறியாக மந்திரத்தை உச்சரித்து அழைத்து பூதக் கூட்டங்களையும், பெரிய பேய்க்கூட்டங்கள் தமையும், கோபமுடைய காளிகள் தொகையையும் மதிலை வளைத்து நின்று காவல் புரியும்படி நிறுத்தி வைத்தான். 40

கயிரவ மனைய செங்கட் காளிகள் முதலோர் தம்மைச்
செயிரற நிறுவிப் பின்னர்ச் சீர்கொள்மந் திரத்தாற் பன்னி
அயிரற நெடிது போற்றி அவுணர்கோன் அங்கண் வந்த
வயிரவ கணத்தை வேள்வி காத்திட வணங்கி வைத்தான்.

அசுரர்க்கரசனான சூரபன்மன் ஆம்பல் மலரை ஒத்த சிவந்த கண்களை உடைய காளிகள் முதலியோரை குற்றம்தீர அங்கே நிறுத்தி, அப்பால் சிறப்புடைய மந்திரத்தை உச்சரித்து சோம்பல் முதலிய குறைகள் இன்றி அசுரர் அரசன் நெடுநேரம் துதிப்ப அப்போது அங்கண்வந்த வயிரவர்கணத்தை வணங்கி யாகத்தைக் காத்துக் கொள்ளும்படியாக வைத்தான். 41

தள்ளரி தாகிய காப்பிவை செய்திடு தனிவீரன்
உள்ளுற ஆயிர வாயிர யோசனை யுறுநீளங்
கொள்வதொ ராழமு மாயிட வோரோம குண்டந்தான்
நள்ளிடை யேபுரி வித்தனன் மாமகம் நலமாக.

யாவராலும் விலக்க முடியாத இந்தக்காவலைச் செய்திட்ட தனிவீரனான சூரபன்மன், யாக நிலத்தின் நடுவனாக ஆயிரம் யோசனை ஆழமும் ஆயிரம்யோசனை நீளமும் ஆயிரம் யோசனை அகலமும் பொருந்தும்படியாக ஓர் ஓமகுண்டத்தினை தனது மகா யாகம் நலமுறும்படியாக செய்வித்தான். 42

ஆதித னக்கனல் வேள்வி இயற்றிட அடுசூரன்
வேதித னைப்புரி வித்திடு காலையில் வியன்ஞாலம்
பாதகர் எம்மை வருத்தினர் என்று பதைப்புற்றுப்
பேதுற வெய்தி இரங்கி ஒடுங்கினள் பெயர்வில்லாள்.

ஆதியான சிவபெருமானுக்கு அக்கினியில் செய்யப்பெறும் யாகத்தை இயற்றிட கொடிய சூரபபன்மன் ஓமகுண்டத்தினை சொல்லப்பெற்ற ஆழ நீளத்துடன் தோண்டிக் கொள்ளும் காலையில் மேலான இப்பூமிதேவி அந்தச் செயலைத் தாங்காதவளாய் பாதகர் எம்மை வருத்துகிறார்என பதைப்புற்றவளாய் வருந்தமடைந்து இரங்கி ஒடுங்கினாள், பொறுமை உடையாள் என்பதால் விலகிப்போகும் நிலை இயலாதவளாக. 43

ஆழம தாயிரம் யோசனை யாஅவண் அகழ்செய்கை
ஊழுற நாடிய சேடனும் ஆயிடை உறைவோருங்
கீழுறு வார்இவண் எய்துவர் தானவர் கிளையென்னாத்
தாழுற வேகினர் முன்னுறு தொன்னிலை தனைநீங்கி.

ஆயிரம் யோசனை ஆழமாக அவ்விடத்து ஓம குண்டத்தை தோண்டும் செய்கையின் திறத்தை ஊழ்முறையாக உணர்ந்துகொண்ட ஆதிசேடனும் அவனுடன் அவ்விடத்து உறைவோருமாகிய நாகங்கள் அசுரராகிய கிளை கிழ்மையான உலகில் போகப்போறார் எம்மிடத்து இங்குவருவார் போலும் என்று பயமாகி தாங்கள் முன்பிருந்த இடத்தினின்றும் நீங்கி இன்னமும் கீழே தாழ்ந்து போனார்கள். 44

ஆழ்ந்திட அம்மக வேதியி யற்றலும் அதுபோழ்தில்
தாழ்ந்திடு நீத்தமெ ழுந்திட நாடிய தனிவேந்தன்
சூழ்ந்தனர் நுங்களை உண்குவர் மீதெழல் துணிபன்றே
போழ்ந்தனை பாதல மேகென அவ்வழி போகிற்றால்.

மிக ஆழமாக அந்த ஓமகுண்டத்தைச் சூரபன்மன் செய்தலும் அதுவேளையில் பாதாள நிலத்தில் உள்ள கடல் நீர்கள் மேலெழுந்தன. இதனை அறிந்துகொண்ட சூரபன்மன் மேலெழுந்த நீர்களை நோக்கி "நீங்கள் இவ்வண்ணம் மேல்நோக்கி எழுந்து எனது செயலுக்கு இடைஞ்சல் உண்டுபண்ணினால் என்னைச் சூழ்ந்த அசுரர் உங்களையே உண்டு முடிவாக்கிவிடுவர். ஆகையால் மேலெழுந்து நீங்கள் வருதல் புத்தியுடையதல்ல. நீங்கள் கீழ் உள்ள நிலங்களைக் கிழித்துக்கொண்டு பாதாளம் போய்ச் சேருங்கள் என அந்நிலையே அந்த நீர்கள் கீழ்நோக்கிச் சென்றன. 45

போதலும் அப்புனல் அவ்வழி கீழிடை போகின்ற
பாதலம் ஈறெனும் ஏழ்நிலை யோரது பாராநின்று
தீதிவண் வந்துள தென்னென அற்புத வியல்எய்தாப்
பேதுறு கின்றனர் தீங்கிது வென்று பிடித்தாராய்.

சூரனின் ஆணைப்படி நீரானது அச்சமுடன் கீழ்நோக்கி அவ்வழியே பாதாளம் சென்றது. அதுகாலை ஏழு பாதாள உலகங்களில் இருக்கின்றவர்கள் இதைப்பார்த்து ஓகோ தீங்கும் இங்கு வந்துளது. ஏனெனில் மேற்செல்லவேண்டிய நீர் கீழ்நோக்கி வருகிறதே என அற்புதம் அடைந்து நடுக்கங்கொண்டவராகின்றார்கள் இங்கு தீங்கு நிச்சயமாக வந்துளது எனக் கருதியவர்களாய். 46

சீறரி மாமுகன் முன்னவ னாகிய திறன்மேலோன்
மாறகல் குண்டம திவ்வகை நாப்பண் வகுப்பித்தே
நூறுடன் எட்டது சூழ்தர ஆக்குபு நுவல்வேதி
வேறுமொ ராயிர வெட்டவை சுற்ற விதிப்பித்தான்.

சீறுகின்ற சிங்கமுகாசுரனுடைய மூத்தவனான வலிமைகொண்ட கொடிய சூரபன்மன் மாறு யாதும் இல்லாதபடி ஒழுங்குடன் விளங்கும் நடுவிலான் ஓம குண்டத்தை இவ்வகை இயற்றுவித்துப் பின்னராக அந்தக் குண்டத்தைச் சூழ நூற்றெட்டு வேறுவகையான குண்டங்களை விதிமுறையாக வகுப்பித்து செய்து அதன்பின் இவற்றைச் சூழ ஆயிரத்தெட்டு வேறு ஒரு வகையான குண்டங்களை ஆக்குவித்தான்.

யாகபூமி நடுவாக ஒன்று பெரியது. அதனைச் சூழ நூற்றெட்டு இவைகளைப் பின்னும் சூழ்ந்து வளைந்து ஆயிரத்தெட்டுக் குண்டம் விதிமுறை வகுப்பித்தான். 47

மூவகை வேதியும் ஆனபின் வேள்வியை முயல்வானுய்
ஆவதொர் பல்பொருள் வேண்டி நினைந்தனன் அருள்பாலைப்
பாவனை பண்ணலும் அங்கது கண்டனள் பரிவெய்தித்
தேவர்கள் தேவன தின்னரு ளால்இவை சேர்விப்பாள்.

நடுவாகவும் அதன் புறமும் இன்னமும் அதன் புறமாகவும் கோணம் வட்டம் சதுரம் எனப்பட்ட மூன்று வகையான குண்டங்களை ஆக்கியபின், யாகத்தை முயன்று

தொடங்கவேண்டி அதற்குரிய பொருள் திரவியம் யாவற்றையும் தந்துதவும்படி தன்னைப் பெற்ற தாயான மாயவளைத் தியானித்து வேண்டுதலும் அவ்வேளை மகனுருக்கு அவன் யாகம் செய்யும்பொருட்டு வேண்டிய பொருளைப் பெறவேண்டி சிவபிரானை நினைந்து தவஞ்செய்த மாயவள் மகனின் நிலை உணரப்பெற்று பரிவாகி தேவாதி தேவனின் இனிய நல்லருளினால் இவைகளை அங்கு சூரனிடம் சேர்ப்பிக்கின்றாள். 48

சியம் வயப்புலி யாளியொ டெண்கு திறற்கைம்மாப்
பாய்பரி செச்சைகள் ஆதிய வாகிய பன்மாவின்
தூய புழுக்கலின் ஊனவி நேமி தொகுப்பித்தாள்
ஆய வுடற்குரு திக்கடல் தன்னையும் அமர்வித்தாள்.

சிங்கம், வீரமுடைய புலி, யாளி கரடி வலியுடைய யானை, பாய்கின்ற குதிரை, ஆடு ஆகிய பலவகை மிருகங்களினாலாகிய விதவிதமான தூய்மையுடைய வெந்த இறைச்சியின் அவிப்பொருளை மலைபோல குவியச்செய்தாள். அந்த மிருகங்களின் உடலில் நின்றும் பெறப்பட்ட இரத்தக் கடலையும் கூடவே அமையச் செய்தாள். 49

பழிதரும் எண்ணெயெ னுங்கடல் ஓரிடை பயில்வித்தாள்
இழுதெனும் வாரிதி தானுமோர் சாரில் இருப்பித்தாள்
தொழுதகு பால்தயிர் நேமியும் ஓரிடை தொகுவித்தாள்
வழிதரு மட்டெனும் வேலையும் ஓரிடை வருவித்தாள்.

பழியினைத் தேடித்தருகின்ற எள்ளிடத்தாசப் பெறப்படும் எண்ணெயை ஓர் புறம் கடல்போல மாயவள் வருவித்தாள். அப்பால் நெய்யெனுங் கடலையும் ஓர் புறமாக வந்துசேரும்படி செய்தாள். யாவராலும் தொழத்தகுந்த பால், தயிர் என்னும் கடலையும் ஓர்புடையாகச் சேரும்படி செய்தாள். இனிமையில் பெருகிய தேன் என்னும் கடலையும் ஓர்புடையாக வந்து யாகபூமியில் சேரும்படி சேர்ப்பித்தாள் மாயவள். 50

ஐயவி காருறு தீங்கறி யேமுதல் அழல்காலும்
வெய்யன பல்வளன் யாவையும் ஓர்புடை மிகுவித்தாள்.
நெய்யுறு முண்டியின் மால்வரை யோர்புடை நிறைவித்தாள்
மையறு தொல்பசு யாவையும் ஓர்புடை வருவித்தாள்.

வெண்கடுகும் கார்ப்புப் பொருந்திய மிளகும் முதலாக வெம்மையைத் தருகின்ற கொடுமையான பல பொருள்களையும் ஓர்புறமாக மிகுதியாகக் குவித்து வைத்தாள். நெய்யுடன் சேர்த்து சமைக்கப்பெற்ற சோற்றினை (நெய்ச்சோறு) பெரிய மலைகள்போல் குவித்து நிறையச் செய்தாள். குற்றம் இலாததாய் தொன்றுதொட்டு யாகத்திற்கென விதிக்கப்பட்ட ஆடு முதலிய பசுக்கள் எல்லாவற்றையும் ஓர்புடை வரச்செய்தாள். 51

அரும்பெறல் நாயக மாகிய வேதியின் அகநாப்பண்
வரும்பரி சால்நிறு வுற்றிட மேலுயர் வடிவாகிப்
பெரும்புவி உண்டுமிழ் கண்ண பிரான்துயில் பெற்றித்தாய்
உரம்பெறு வச்சிர கம்பம தொன்றினை உய்த்திட்டாள்.

செயற்கரிய முறையால் சிறப்புடன் ஆக்கப்பெற்ற யாக பூமி நடுவணுகவுள்ள ஓம குண்டத்திலே நடுவில் விதிப்பிரகாரம் நாட்டும்படியாக, மிக உயர்ந்த வடிவுகொண்டு இப்பூமியை உண்டு உமிழ்ந்த கண்ணபிரான் யோகநித்திரை செய்யும் தன்மையைப் போன்றதாய் உரமுள்ள ஓர் வச்சிரகம்பம் ஒன்றினை அங்கு சேர்ப்பித்தாள். 52

தெரிதரு செந்நெலின் வால்அரி யோர்புடை செறிவித்தாள்
அரிசனம் நீவிய றண்டுல மோர்புடை அமைவித்தாள்
மருமலர் மான்மத மாதிய ஓர்புடை வருவித்தாள்
சுருவையும் நீடுத ருப்பையும் ஓர்புடை தொகுவித்தாள்.

யாகத்திற்கென விதிப்படி தெரியப்பெற்ற செந்நெல்லின் இருந்து எடுக்கப் பெற்ற வெண்ணிறமான அரிசியை ஓர் பக்கத்தில் வந்து செறியச்செய்தாள். மஞ்சள் பூசப்பெற்ற அரிசியை ஓர் பக்கராக அமைவித்தாள். வாசனைபொருந்திய பூக்களையும் மான்மதமெனும் கஸ்தூரி கோரோசனை முதலிய வாசனைத் திரவியங்களை ஓர்பக்கரில் வந்து சேரச்செய்தாள். யாகத்திற்கு நெய்விடுகின்ற சுருக்கு சுருவம் எனப்படும் கருவி யையும் நீண்ட தருப்பைப் புல்லையும் ஓர்பக்கராகத் தொகுத்து வைத்தாள். 53

ஆலமு யிர்க்கும் வரம்பில தாருவின் அணிகொம்பர்
வாலிதின் மெய்ச்சமி தைக்குல மாமென வரையேபோல்
சாலமி குத்தனள் ஓர்புடை வேள்வி தனக்கென்றோர்
பாலின்நி ரைத்தனள் கொள்கல மாகிய படியெல்லாம்.

நஞ்சைக் காலுகின்ற அளவிறந்து விளங்கும் மரங்களின் அழகிய கொம்பர்கள் பலவற்றைத் தூய்மைபொருந்த உண்மையான சமித்துக்களாக ஓர்பக்கராக மலை போல ஏராளமாகக் குவித்து நிரைத்து வைத்தாள். ஓர் பக்கராக யாகத்திற்கென வேண்டப்படுகின்ற விதமான பாத்திரங்கள் கிண்ணங்கள் யாவற்றையும் நிரையாகச் சேர்த்து வைத்தாள். 54

பொன்னின் அகந்தொறும் வெள்ளி முளைத்திடு பொருளேபோற்
செந்நெலின் உற்றிடு தீம்பொரி யோர்புடை செறிவித்தே
துன்னிய வெண்முதி ரைக்குல மோர்புடை தூர்த்திட்டாள்
பின்னரும் வேண்டுவ யாவையும் நல்கினள் பெருமாயை.

பொன்னின் இடந்தோறும் வெள்ளி முளைத்தால் எப்படி இருக்குமோ அதே போல் வடிவுடன் விளங்கும் செந்நெலில் இருந்து வறுத்தெடுக்கப்பெற்ற இனிய நெற் பொரியை ஓர்புடையாக சேர்ப்பித்து விதிமுறை அமைந்த கணக்கினை உடைய எள் பயறு உழுந்து கடலை துவரை முதலிய நவதானியங்களை ஓர்புடையாக நிறைத்து வைத்தாள், இன்னமும் யாகத்திற்கு அவ்விடத்தே வேண்டிய பொருள் யாவையும் கொடுத்தாள் பெருமாயவள். 55

மூவகை யாயிர யோசனை எல்லையின் முரண்வேள்விக்
காவன நல்கினள் போதலும் மாய்செய லதுநோக்கி
ஓவிது யாரின் முடிந்திடும் வேண்டுவ உய்த்தாளே
ஏவரு மெண்ணஇவ் வேள்விமி யற்றுவன் இனியென்றுன்.

தாயாகிய மாயவள் மூவாயிரம் யோசனைப் பரப்பளவிலான இடத்திலே மேற் சொல்லிய யாகத்திற்கு வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் அமைத்து மறைந்துபோதலும் தாயினுடைய அற்புதமான இந்தச் செயலை சூரபன்மன் பார்த்து ஓகோ! இப்படி வேண்டிய எல்லாவற்றையும் தருவித்தற்கு யாரால் முடியும்? வேண்டிய எல்லாப் பொருளும் நான் நினைந்து தேடாதபடி தந்தாளே என் தாய். இனி எல்லாரும் மதிக்கும்படியாக இந்த யாகத்தைச் செய்வேன் எனக் கூறினன். 56

ஊன்புகு பல்வகை ஆவியும் ஈண்டிய வுலகெல்லாந்
தாபுகு தன்விறல் காட்டிய நாட்டிய தாணுப்போல்
மேன்புகு சூரன் நடுத்திகழ் வேதியின் மிகுநாப்பண்
வான்புகு வச்சிர கம்பம் நிறீஇயினன் வலிதன்னால்.

மேன்மையான சூரபன்மன், ஊனுகிய உடம்பில் பொருந்திய பல வகையான உயிர்கள் யாவும் உலகம் எல்லாமும் பரவத்தக்க தனது வலிமையைக் காட்டும்படி நாட்டிய வெற்றித் தூண்போல நடுவாகப் பொருந்திய ஓமகுண்டத்தின் நட்டுக்கு நடுவிலே வானம் அளவும் நிமிர்ந்த வச்சிரகம்பத்தைத் தனது முழுப் பலத்துடன் நிறுவினன், 57

வச்சிர கம்பம் நிறீஇயின பின்னர் மகம்போற்றும்
நொச்சியின் நாற்றிசை வாயில் தொறுந்தொறும் நொய்திற்போய்
அச்சுறு வீர மடந்தையை உன்னி அருச்சித்துச்
செச்சைக ளாதிய ஊன்பலி நல்குபு செல்கின்றான்.

வச்சிரகம்பத்தை ஓமகுண்டத்திலே நடுவணாக நாட்டிய பின்னர் யாகத்தைக் காவல்கொள்ளும் மதிலின் நான்கு திக்கிலுமுள்ள வாயில்கள்தோறும் மிகு விரைவுடன் சென்று எவரையும் அச்சம்செய்யும் வீர இலக்குமியை நினைந்து பூசித்து ஆட்டுக்கடா முதலியவற்றின் தசைகளைப் பலியாகக் கொடுத்து வணங்கிச் செல்கின்றான். 58

செல்லுஞ் சூரன் நொச்சியின் நாப்பட் செறிகின்ற,
கல்லென் வெஞ்சொற் பூதர் தொகைக்குங் கணமென்றே
சொல்லும் பேயின் பல்குழு வுக்குஞ் சோர்வின்றி,
ஒல்லும் பான்மைஊன்பலி யாவையும் உதவுற்றான்.

அவ்வாறு பலிசெலுத்திப் பூசித்துச் செல்கின்ற சூரபன்மன் காவல் மதிலின் நடுவணாகச் செறிந்து காவல்கொள்ளும் கல்போல் கொடுமொழி பேசும் பூதங்களின் தொகைக்கும் கணங்கள் எனச் சொல்லப்பெறும் பலகூட்டமான பேய்களுக்கும் சோர்வு இல்லாதபடி அவைகள் விரும்பியபடி இறைச்சி முதலிய பலிகள் யாவற்றையும் கொடுத்துச் செல்வான். 59

சீற்றத் துப்பிற் காளிக ளுக்குந் தென்பாலில், கூற்றைக் காயும்வயிரவர் தங்கள் குழுவுக்கும்
ஏற்றத் தோடும் அர்ச்சனை செய்தே யினிதாகப், போற்றிப் போற்றி ஊன்பலி வேண்டுந
புரிகுற்றான்.

கோபவீறுடைய காளிகளுக்கும், தென்திசையிலுள்ள இயமனையும் கொல்லவல்ல வைரவர்களின் கூட்டத்திற்கும் ஏற்றமான சிறப்பினையுடைய அர்ச்சனையைப் புரிந்து இனிதுடன் போற்றிசெய்து ஊன் பலிகள் யாவையும் அவர்கள் விரும்பியபடி கொடுத்துச் செல்கின்றான். 60

சூழாம் எட்டே யாயிர வேதிதொறுநாப்பட், காழார் நஞ்சின் இந்தனம் இட்டுக் கனல்மூட்டித்
தாழா மேதன் தம்பிப ரோடுந் தகுசூரன், ஊழால் நாடுற் றுனவி வர்க்க முறநேர்ந்தான்.

இதன்பின்னராகச் சூரபன்மன் தன்னுடைய தம்பிமார் இருவருடனும் ஏதுமொரு தாமதமு மில்லாதபடி முன்பாகச் சூழத்திருக்கின்ற ஆயிரத்தெட்டு ஓமகுண்டங்கள் தோறும் சென்று சென்று அக்குண்ட நடுவிலே வைரம் பொருந்திய நஞ்சு விறகை இட்டு நெருப்பை மூட்டி அதிலே விரைவாக விதிமுறைகளை நன்கு தெளிந்து நாடிக்கொண்டு ஊன்களையும் ஏனைய அவிப்பொருள்களையும் மிகுதியாகச் சொரிந்து ஓமஞ் செய்தான். 31

நேருந் தோறும் எந்தைதன் நாம நெறிசெப்பிச்,
சேரும் அன்பா லன்ன தவன்பாற் செலவுய்த்துச்
சூரன் பின்னர் இம்மகம் ஆற்றுந் தொழில்வல்லோன்,
ஆரென் றுன்னித் தாரகனைப் பார்த் தறைகின்றான்'

யாக நெருப்பிலே அவிப்பொருள்களைச் சொரியும்தோறும் எந்தை பெருமானுடைய நாமத்தைச் செபித்து தன்மனத்திடத்து சேர்கின்ற அன்பால் அவையாவும் சிவபெருமான்பால் சேரும்படி செலுத்தி பின்னர் சூரபன்மன் இந்தவண்ணமாக ஆயிரத்தெட்டு குண்டங்களிலும் ஓமத்தைச் சோர்வின்றிச் செய்யவல்லவர் யார் எனச் சிந்தித்து தனது தம்பி தாரகனை விரைவுடன் நோக்கிச் சொல்கின்றான். 62

ஏற்றஞ் சேரிவ் வேதிகள் தோறும் இறைதாழா,
ஊற்றங் கொண்டே ஏகினை வேள்ளி புலவாமல்
ஆற்றுந் தன்மை வல்லவன் நீயே அதுவல்லே,
போற்றிச் கென்னுக் கூறி நிறுத்திப் போகுற்றான்.

தாரகாசூரனே! மகிமைபொருந்திய இந்த ஆயிரத்தெட்டெனும் ஓமகுண்டம் தோறும் நீ சென்று ஓர் இமைப்பொழுதேனும் தாமதமில்லாமல் மனதில் மிகு ஊக்கங் கொண்டு இந்த வேள்வியினை நான் புரிந்ததுபோல ஓரிடத்தேனும் ஓமாக்கினி ஓயாதபடி நீயே இதை இங்கு வலிமையுடன் செய்யவல்லவன். ஆகவே கவனத்துடன் இச்செயலைப் புரிவாயாக என நிறுத்திவிட்டு அப்பாலுள்ள நூற்றெட்டு குண்டத்திடத்தாக சூரன் சென்றான். 63

அப்பா லேகி நூறுடன் எட்டாம் அகல்வேதி,
துப்பா லெய்தி முன்னவை யேபோல் தொடர்வேள்வி
தப்பா தாற்றிச் சிய முகத்தோன் றனைநோக்கி,
இப்பா லுற்றிம் மாமகம் ஆற்றாய் இனிதென்றான்.

அப்பால் சூரன் நூற்றெட்டு எனச் சொல்லப்பெறும் முன்னதிலும் அகன்ற ஓமகுண்டங்களில் துரிதமுடன் சென்று முன்செய்த அப்பிரகாரம் தொடர்ந்து அங்கு நெருப்பை மூட்டி எமது அப்பன் நாமஞ் செபித்து அவிசொரிந்து செய்யும் யாகத்தினை தவறேதும் இன்றிச் செய்து பின்னர் சிங்கமுகாசூரனை நோக்கி நீ இந்தப் பக்கரில் இருந்து இந்த நூற்றெட்டுக் குண்டத்திலும் ஓமத்தை இனிதாகச் செய்வாயாக எனக் கூறினான். 64

தெரிய இன்னணஞ் செப்பி அவுணர்கோன், அரியின் மாமுகத் தானை அவண்நிறீஇப்
பெரிது நள்ளுறு பெற்றியிற் செய்ததன், உரிய வேதியின் ஒல்லையின் மேவினான்.

சிங்கனும் தெரியும்படி இவ்வண்ணஞ் சொல்லிய சூரபன்மன் சிங்கமுகாசூரனை அவ்விடத்து நிறுத்திவிட்டு மிகப் பெரிதான ஓமகுண்டமாய் நடுவிலே இருக்கும்படி செய்யப்பெற்ற தனக்குரிய ஓமகுண்டத்தினிடம் விரைவுடன் சென்றான். 65

வேதி யெய்தி விதி [illegible]ளி அர்ச்சனை, யாது மோர்குறை இன்றியி யற்றியே
மாதொர் பங்குடை வள்ளலை உன்னியோர், ஏதில் வேள்வி இயற்றுதல் மேயினன்.

ஓமகுண்டத்தை அடைந்து விதிப்படி யாதும் ஓர் குறையிலாமல் அர்ச்சனையை முதலில் புரிந்து பின்னர் பெண்ணொருபாகராய் கிருபையுடன் விளங்கும் அருள் வள்ளலான சிவபிரானைத் தியானம் செய்து ஏதும் ஒரு குறைவிலாத யாகத்தைச் செய்யத் தொடங்கினன் சூரபன்மன். 66

நஞ்சு பில்கு நவையுடைத் தாருவின், விஞ்சு சாகை வியன் துணி யாவையும்
புஞ்ச மோடு பொருக்கென வேதியில், துஞ்சி டும்வகை சூரனுந் தூவினன்.

நஞ்சை காலுகின்ற மிகும் தீமையுடைய மரங்களின் மதாளித்த கொம்பர்களின் துணிக்கப்பட்ட துண்டுகள் யாவற்றையும் திரளாகவே விரைவாக ஓமகுண்டத்தில் வீழும்வண்ணம் சூரபன்மன் அள்ளிச் சொரிந்தான், 67

ஆல மாகி அமர்தரு வின்ஞெலி, கோலின் ஆக்கிய கொழுந்தழ லிட்டுமுன்
ஏல மூட்டி இழுதெனு மாமழை, சில மந்திரத் தோடு சிதறினன்.

நச்சுத்தன்மையாகி இருக்கின்ற மரத்தில் வெட்டி எடுக்கப்பெற்ற தீக்கடைக் கோலினால் உராய்ஞ்சி உண்டாக்கப்பெற்ற நெருப்பை மூட்டி அதன் மேலாக, நெய்யை மழைசொரிவதுபோல சிலமான மந்திர செபத்துடன் தெளித்தான் சூர பன்மன். 68

அன்ன தற்பின் அம்பொற் குழிசிகள், துன்னு கின்ற துணிபடும் ஊன்தொகை
வன்னி யின்கண் மரபின்நின் றுய்த்தனன், செந்நி றக்குரு திக்கடல் சிந்தியே.

அன்னததற் பின்னரே அழகிய பொற்கிண்ணங்களில் நிறையப்பெறுகின்ற துண்டுசெய்த இறைச்சிகளை நெருப்பின்மேலாக முறைப்படி இட்டான். அதோடு சிவந்த நிறமுடைய கடல்போன்ற இரத்தத்தைச் சிந்தினன் யாக நெருப்பில். 69

செய்ய தோர்மகச் செந்தழல் மீமிசைத், துய்ய ஓதனஞ் சொன்முறை தூர்த்தனன்
நெய்யும் எண்ணெயும் நீடிய சோரியும், வெய்ய பாலுந் ததியும் விடுத்துமேல்.

செம்மையான இந்த யாகத்திடத்துள்ள ஓமகுண்டத்தில் சிவந்த சுடராக வளர்ந்தநெருப்பின் மேலாக தூயதான சோற்றினை சொல்லப்பெற்ற மந்திர செபத்துடன்சொரிந்தான். இடைஇடையாக நெய்யும் எண்ணையும் பெருமளவு இரத்தத்தினை யும் விரும்பத்தக்க பாலையும் குண்டத்திலே விதிமுறை விடுத்து அதன் மேலாக. 70

மேன சாலியின் வெண்பொரி யின்குவை, ஆன நல்கி அழிதரும் ஈற்றினில்
வானு லாய மறிகட லாமெனத், தேனும் ஆலியுந் தீமிசைச் சிந்தியே.

சிறந்த செஞ்சாலி நெல்லினின்றும் பெறப்பெற்ற வெண்மை நிறமான நெற் பொரியினைத் தூவி பின்பாக உலக அழிவு காலத்து வானை அளாவிப் பெருகுகின்ற கடலைப்போல மிகுதியாய் அங்கு தாயினால் வருவிக்கப்பட்ட தேனையும் கள்ளையும் யாகாக்கினியில் சொரிந்தான். 71

தோரை ஐவனஞ் சூழ்தடத் துற்றநீ, வாரம் ஏனல் இறுங்கொடு மற்றவும்
மூரி யெள்ளு முதிரையின் வர்க்கமுஞ், சேர வுய்த்தனன் நெய்க்கடல் சிந்தினன்.

பின்னுக மூங்கில் அரிசியையும் மலைநெல்லையும் நிறைந்து சூழும் குளத்தில் விளைந்த குளநெல்லும், தினையும், சோழமும் இன்னும் இவைபோன்ற தானியமும் வலியுடைய எள்ளும், பயறு, உழுந்து, கடலை முதலிய தானியங்களின் வகையான இவற்றையும் யாக நெருப்பிலே சொரிந்து நெய்யாகிய கடலை வார்த்தான். 72

கொடிய ஐயவி கூர்கறி யாதியாப், படியில் வெய்ய பலபொருள் யாவையும்,
நெடிதும் ஓச்சினன் நேயம தாகிய, கடலை வன்னி கவிழ்த்தன னென்பவே.

கொடிதாகிய வெண்கடுகும் உறைப்புடன் கூடிய மிளகு முதலியனவும் கார மான வேறு கறிவர்க்கத்தில் சேரப்படும் பொருள்களையும் ஓயாது நெடுநேரம் யாகாக் கினியிலே சொரிந்தான். எண்ணெயானகடலை யாக அக்கினியிலே கவிழ்த்து ஊற் றினுன். இப்படி யாகம் செய்தான் என்பார்கள். 73

இன்ன பல்வகை யாவும் இயல்பினுற், பொன்னு லாஞ்சடைப் புண்ணியன் றன்னையே,
முன்னி வேள்வி முயன்றனன் ஞாலமேல், துன்னு சீர்த்தியன் சூரபன் மாவென்பான்.

இன்ன பண்பால் பலவகையான பொருள்களையும் பொன்போல விளங்கும் சடையினை உடையபுண்ணியப் பொருளான சிவனை நினைந்து யாகத்தைச் சூரபன்மன் முயற்சியுடன் செய்தான். இப்பூமிமேற் பெருமையுடன் விளங்கும் சூரபன்மன் என் னும் சீர்த்தி உடையவன். 74

சூரனுமவன் அவ்வழிப் பெருவளஞ் சுட்டி, வீர வேள்வியை வேட்டலுஞ் செந்தழல் விரைவின்,
ஆரும் அச்சுற வெழுந்துமீச் சென்றன, அடுதிப் பாரை நுங்கிவா னுலகெலாம் உணவெழும் பரிசின்.

சூரபன்மன் எனப்படுகின்றவன் இவ்வகையாகப் பெருஞ் செல்வத்தினைப் பெற விரும்பி வீரம்பொருந்திய இந்த யாகத்தை இயற்றலும் அவ்வேளை யாக நெருப்பான சிவந்த தழல் விரைவுடனுக ஆரும் அச்சுறும்படி மேல்நோக்கி உயர்ந் சென்றது. அது எதுபோலும் எனின் உலகை அழிக்க வரும் நெருப்பானது பூமியை உண்டு வானத்தையும் அழிக்க மேலெழுதல் போலாயிற்று. 75

வானம் புக்கது மாதிரம் புக்கது மலரோன், தானம் புக்கதெவ் வுலகமும் புக்கது தரைக்கீழ்
ஏனம் புக்குமுன் நாடருங் கழலினுற் கியற்றுங், கானம் புக்கதோர் வேள்வியின் எழுங் கொழுங் கனலே.

முன்னர் பன்றிவடிவாகி பூமியின் கீழாக இடந்து சென்ற விஷ்ணு பெருமானும் நாடியறிதற்கரிய கழலினை உடைய சிவபிரானுக்காக ஆலந்தீவிடத்து செய்த யாகத்தில் கொழுந்தாய் எழுந்த செந்தழல் வான உலகம் புகுந்தது, திக்குள்ள உலகம் புகுந்தது. தாமரை மலராசனரான பிரமதேவர் உலகம் புகுந்தது மற்றை எல்லா உலகமும் புகுந்தது. 76

பானு வின்பதஞ் சுட்டது பனிமதி பதமும் மீனெ னும்படி நின்றவர் பதங்களும் மேலோர்,
போன மேக்குயர் பதங்களுஞ் சுட்டது புலவோர் கோனு றும்பதஞ் சுட்டது வேள்வியிற் கொடுந்தீ.

யாகத்தில் எழுந்த கொடிய செந்தழல் சூரியமண்டலத்தைச் சுட்டது. சந்திர மண்டலத்தைச் சுட்டது. நட்சத்திரங்கள் எனும்படியாக நின்றவர்கள் மண்டலங் களைச் சுட்டது. இவர்கட்கும் மேலுளோர்களான ஏனைய கிரகங்களின் பதங்களும் சுட்டது. அதன்மேலான தேவர்க்கரசனுன இந்திரன் இருக்கும் உலகமும் சுட்டது. 77

செற்று வாசவன் பதந்தனைச் சுட்டபின் சேண்போய், மற்றை மேலவர் பதமெலாஞ் சுட்டது மருங்கில்
சுற்று பாலர்தம் புரங்களுஞ் சுட்டது சூரன், அற்ற மில்வகை ஆற்றிய வேள்வியுள் அனலே.

இந்திரன் உலகை கோபத்துடன் எரித்து சுட்டபின் மிகமேல் சென்று மற்றை மேலவரான பிரமா விஷ்ணு முதலியோர் பதங்களும் சுட்டது, எட்டுத் திக்கிலும் சூழ்ந்திருக்கின்ற இந்திரன் முதல்யோர் பதங்களும் சுட்டது. சூரபன்மனானவன் தவறு ஒன்றும் இலாதபடி செய்த யாகத்திடத்தாக எழுந்த நெருப்பின் தழல் சொழுந்து. 78

காலம் எண்ணில தவம்புரி காசிப முனிவன்
பாலன் ஈண்டையில் வலியினேர் மகமதுபயில
ஏல நீடுதி புலகெலாம் முருக்கிய தென்னில்
மேல வன்செயும் பரிசெலாம் யாவரே விதிப்பார்.

எண்ணற்ற காலம்வரை தவம்புரிகின்ற காசிபமுனிவன் மகனான சூரபன்மன் இவ்விடத்து தனது வலிமையால் ஓர் யாகத்தைப் புரிய ஓமகுண்டத்திநின்றும் சிறப்புடன் மேலோங்கி எழுந்த தீயானது உலகம் எல்லாவற்றையும் உருகச்செய்தது என்றால் இதன்பின்னாக அவன் செய்யப்போகும் கருமங்களின் விளைவுபற்றி யார்தான் விதிக்கமுடியும். 79

கார்ம றைத்தன கதிர்மதி மறைத்தன கரியோன்
ஊர்ம றைத்தன அயன்பதம் மறைத்தன உலவா
நீர்ம றைத்தன நெருப்பையும் மறைத்தன நீடும்
பார்ம றைத்தன இடையிடை யெழும் புகைப் படலே.

இந்த ஓமகுண்டத்தில் எழும் தழலுக்கு இடையிடையே எழுகின்ற புகைப் படலமானது மேகங்களை மறைத்தது சூரிய சந்திரரை மறைத்தது இந்திரன் உலகை மறைத்தது பிரமன் உலகை மறைத்தது. ஒருகாலும் குறையாத நீரையும் மறைத்தன நெருப்பையும் மறைத்தன நெடிது பரந்த பூமியையும் மறைத்தது. 80

சொற்ற வேதிஇவ் வியற்கையால் எரிந்தது சூரன்
பிற்றை யோர்கள் தம் எட்டுநூ றுயிரபேதம்
உற்ற வேதிகள் யாவையும் எரிந்தன ஒருங்கே
முற்றும் வன்னிகள் இறுதிநாள் உலகின் மொய்த் தெனவே.

சூரபன்மன் ஓமம்செய்த தனியான குண்டம் இந்தஇயற்கையாக எரிந்தது. சூரபன்மன் தம்பிமார்களுடைய நூற்றெட்டு ஆயிரத்தெட்டு எனும் வேறுவகையான குண்டங்கள் யாவும் எரிந்தன. இவைகளிலிருந்து தோன்றும் அக்கினிச் சுடர் எப்படி யானது எனின் உலக முடிவுகாலத்தில் உலகை அழிக்கத் தோன்றும் ஊழித்தீ திரளாக எழுந்து உலகைப் பல திக்கிலும் பற்றிச் சுடராய் மொய்த்தது எனும்படியாக. 81

வேள்வி இத்திறஞ் சூர்புரி தன்மையை விரைவில்
கேள்வி யாலுணர் இந்திரன் அச்செயற் கேடு
சூழ நாடினன் முடிப்பருந் தன்மையில் துளங்கி
ஆழ்வ தோர்துயர்க் கடலிடை அழுந்தினன் அயர்ந்தே.

யாகத்தை இத்தன்மையாகச் சூரபன்மன் செய்துவரும் தன்மையை விரைவாகக் கேட்டு அறிந்துகொண்ட இந்திரன் சூரனுடைய இந்தச் செயலுக்குக் கேடுவிளைவிக்க

எண்ணி நாடியபோது அதைத் தன்னால் செய்யமுடியாததாக இருப்பக் கண்டு நடுங் கித் தான் மேலும் மேலும் ஆழப்போகின்ற துயரம் என்னும் கடலிலே இப்போதே அயர்வுடன் ஆழ்வானாய் இந்த யாகத்தைக் கெடுக்க முடியாதுபோது மிகத் துயருற்றான் இந்திரன். 82

சூன்மு கக்கொண்டல் மேனியும் முனிவரர் தொகையும்
நான்மு கத்தனுஞ் சூரபன் மன்செயல் நாடிப்
பான்மை மற்றிது யாவரே புரிவர்இப் பதகன்
மேன்மை பெற்றிட முயன்றனன் கொல்லென வெருண்டார்.

கருக்கொண்ட மேகம்போல் கருமை அழகுடைய மேனியரான விஷ்ணுபெரு மானும் முனிவர் தொகையும் நான்கு முகமுடைய பிரமதேவரும் சூரபன்மன் செய லினை நாடி உணர்ந்து இந்தப்பான்மையாக யாகத்தை யாவரே புரிவார். அம்மவோ! இந்தப் பாதகன் எல்லாரிலும் மேன்மைபெற்றிட முயற்சிகொண்டான்போலும் என்று வெருட்சிகொண்டார்கள். 83

இந்த வண்ணத்தின் ஒருபதி னுயிரம் யாண்டு
முந்து சூர்தன தினைஞரோ டருமகம் முயல
அந்தி வார்சடைக் கண்ணுதல் நின்மலன் அவன்பால்
வந்தி லானது தேர்ந்தனன் நிருதர்கோன் மாதோ.

இந்தவண்ணமாகச் சூரபன்மன் ஒரு பதினுயிரமாண்டு தனது தம்பியரோடும் அரிதான யாகத்தை முயன்று புரிய அப்பொழுதும்கூட அந்திக் காலத்துச் செக்கரை நிகர்த்த சடையுடைய நின்மலனான சிவபெருமான் சூரன்பாலாக வந்து தோன்ற வில்லை. இதனை அசுரர்க்கரசனான சூரன் அறிந்துகொண்டான். 84

கண்ணு தற்பரன் அருள்செயாத் தன்மையைக் கருத்தில்
எண்ணி இச்செயற் குறுவனே சிவனென இசையாப்
பண்ணு மத்தொழில் பின்னவர் தங்கள்பாற் பணித்து
விண்ண கத்தின்மீச் சென்றனன் கடவுளர் வெருவ.

நெற்றிக்கண்ணுடைய பரப்பொருளான சிவபிரான் தோன்றி அருள்புரியாத தன்மையைச் சூரன் எண்ணி இந்தப் பிற உயிரின் ஊனை அவிசொரியும் எனது செயலுக்கு சிவன் வருவாரா என எண்ணி மனதில் ஓர் உறுதி நினைந்து இசைவுடன் எழுந்து தன் யாககுண்டத்தில் தான் புரிந்துவந்த தனது செயலைத் தம்பி மார் செய்யும்படியாகப் பணித்துவிட்டு வானத்தின்மேலாக எழுந்து சென்றான் வானுலகில் உள்ள தேவர் அஞ்சி மருளும்படியாக. 85

வான கத்திடை நிற்புறு சூரபன் மாவாம்
தான வர்க்கிறை வாள்கொடே ஈர்ந்துதன் மெய்யின்
ஊன னைத்தையும் அங்கிமேல் அவியென ஓச்சிச்
சோனை யொத்ததன் குருதியை இழுதெனச் சொரிந்தான்.

வானத்திடத்து எழுந்து நிற்கின்ற சூரபன்மா எனும் அசுரர்க்கு அரசன் தனது உடைவாளை உருவி வாளினால் தனது மேனியிலுள்ள தசை யாவையும் அரிந்தரிந்து தனது ஊனம் அனைத்தையும் யாக நெருப்பின்மேலாக அவியெனும்படி சொரிந்து விடாமழைபோல் அரிபட்ட மேனியில் வடிகின்ற தனது இரத்தம் முழுவதையும் ஓமகுண்டத்தில் நெய்விடுவதுபோலச் சொரிந்தான். 86

சோரி நெய்யவா ஊன்களே அவியவாச் சூரன்
வீர மாமகம் புரிவுழித் தனதுமெய்ம் மிசையூன்
ஈர ஈரவே முன்னையின் வளர்தலும் இதுகண்
டாரும் அச்சுறத் தெழித்தனன் விம்மித மானன்.

தனது உடல் இரத்தமே நெய்யாகவும் தசைகளே அவியாகவும் சூரபன்மன் வீரயாகத்தைச் செய்யும்பொழுது தனது மேனிமிசை ஊனினை அரிந்தரிந்து எடுக்கவும் முன்போல அந்தத் தசைகள் வளர்தலும் சூரபன்மன் இதுகண்டு ஆரும் பயங் கொள்ளும்படி உரக்கச் சத்தமிட்டான், ஆச்சரியங்கொண்டான். தசைகள் அரிந்தும் முன்போலாதல் கண்டு ஆச்சரியமடைந்தான். 87

சிந்தை யிற்பெரு மகிழ்ச்சிய னாகியிச் செய்கை
எந்தை யற்புது நிலையதோ வெனமனத் தெண்ணு
மந்த ரப்புய நிருதர்கோன் பின்னும்அம் மரபால்
அந்த ரத்திடைத் தசைப்பெரு வேள்வியை அயர்ந்தான்.

தனது மனதிலே சூரபன்மன் பெருமகிழ்ச்சியனாகி எனது உடலின் தசையினை வெட்டினாலும் அது வளர்தல் எந்தைபெருமானின் அற்புதமடையும் செயலோ இல் லையே ஏனெனில் இந்த சித்துக்கள் வரினும் இறைவன் வருவாரோ என மனதிலே எண்ணி மந்தர மலைபோலும் தோளினையுடைய சூரபன்மன் பின்னரும் வானத்தில் நின்றபடியே தனது வளரும் உடல்தசைகளை வாளினால் அரிந்தரிந்து ஓமகுண்டத்தில் இட்டு தனது உடல் தசைகளை சொரிகின்ற யாகத்தைச் செய்தான். 88

ஆண்டோ ராயிரம் இம்மகம் அந்தரத் தியற்ற
நீண்ட மாலுடன் நான்முகன் தேடரும் நிமலன்
ஆண்டும் வந்திலன் சூரன்அத் தன்மைகண் டழுங்கி
மாண்டு போவதே இனிக்கட னெனமனம் வலித்தான்.

ஓர் ஆயிரம் ஆண்டுகள்வரையில் இந்த யாகத்தை வானத்தில் நின்றபடியே செய்துவந்தாலும் நெடிய உருவுடைய நாராயணப் பெருமானுடன் நான்கு முக முடைய பிரமதேவனும் தேடிக் காண்டற்கரியவரான சிவபிரான் அச்செயலினுக்கும் வந்திலன். இத்தன்மையைக் கண்டு சூரபன்மன் மனம் கலங்கித் துயரங்கொண்டு இனிமேலாக நான் மாண்டுபோவதே கடனாகும் என நினைந்து அச்செயல் செய்வதற்கு மனம் துணிந்தான். 89

உன்னி இத்திறஞ் சூரபன் மாவெனும் ஒருவன்
வன்னி சுற்றிய ஆதிகுண் டத்திடை வதிந்து
சென்னி றத்ததாய் ஆணையால் அங்கியிற் சிதையாக்
கொன்னு னைத்தலை வச்சிர கம்பமேற் குதித்தான்.

இவ்வாறு மனத்துணிவுகொண்ட சூரபன்மன் என்னும் ஒருவன் யாகநெருப்பு வலஞ் சுழித்து வளைந்துகொண்டு எரிகின்ற எல்லா ஓமகுண்டங்கட்கும் ஆதியாயுள்ள மூலகுண்டத்திலே நடுவில் நாட்டப்பட்டு நின்று நெருப்பினால் செந்நிறமுடையதாயும் ஆனால் ஆணியினால் நெருப்பினால் எரிந்து சிதைவுறாததாய் நின்ற கூர்மையான நுனியினை உடைய வச்சிர கம்பம் மேலாகத் தலைகீழாகக் குதித்தான். 90

கடிதின் உச்சிநின் றுருவியே வச்சிர கம்பத்
தடித நிற்சென்று சூரபன் மாவெனும் அவுணன்
படிவ முற்றுநுண் துகளுற உளம்பதை பதைத்து
முடிய மற்றது கண்டனன் மடங்கல்மா முகத்தோன்.

அதிவிரைவாக வச்சிர கம்பத்தின் உச்சியில் நின்றும் உருவிச் சென்று அதன் அடியிற் சேர்ந்து சூரபன்மன் என்னும் அசுரன் தனது உடலம் முழுவதும் நெருப்பிலே பட்டு எரிந்து சாம்பராக உள்ளம் பதைபதைத்து துடிதுடித்து இறந்துபோக மற்ற இச்செயலைக் கண்டான் சிங்கமுகமுடைய அசுரன். 91

கண்ட காலையின் உளம்பதை பதைத்தது கண்கள்
மண்டு சோரிநீர் கான்றன கரம்களும் வாயுங்
குண்ட வேள்வியில் தொழில்மறந் திட்டன குறிப்போர்
உண்டு போலுமென் றையுற ஒடுங்கிய துயிரே.

கண்ட நேரத்தில் சிங்கமுகன் உளம் பதைபதைத்து கண்களில் சோகத்தால் இரத்தம் கக்கிப் பெருக கைகளும் வாயும் ஓமகுண்டத்தில் செய்துவந்த மந்திரசெபமும் அவிசொரிதலுமான செயலை மறந்திட்டன. இவனைக் காண்பாருக்கு இவனுடைய உயிர் இருக்கிறதோ இல்லையோ என ஐயுறவுகொள்ளும்படியாக இவன் உயிர் ஒடுங்கி உடலம் மயங்கியது. 92

துயர்ப்பெ ருங்கடல் நடுவுற ஆழ்ந்துதொல் லுணர்ச்சி
அயர்த்து மால்வரை யாமென மறிந்தனன் அறிவு
பெயர்த்தும் வந்துழிப் பதைபதைத் தலமந்து பெரிதும்
உயிர்த்து வாய்திறந் தன்னவன் புலம்புதல் உற்றான்.

கவலை எனும் கடலுள் நடுவணாக ஆழ்ந்து தனது முன் உணர்வுகள் யாவும் மறந்து மயங்கி பெரியதோர் மலை சரிவதுபோலச் சரிந்து வீழ்ந்து பின்னர் அறிவுவந்த நேரத்து பதைபதைத்து அலமந்து ஏங்கி பெரிதும் மூச்செறிந்து வாயைத் திறந்து அழுது ஓலமிட்டுப் புலம்பினான் சிங்கமுகன். 93

மாயை தரும்புதல்வா மாதவஞ்செய் காசிபற்கு, நேய முருகா நிருதர் குலத்திறைவா
காயமுடன் நின்னையான் காணேனால் எங்கொழித்தாய், தீய மகம்பலநாட் செய்துபெற்ற
பேறிதுவோ,

மாயவள் உலகிற்கு தந்த புதல்வா! பெரும் தவஞ்செய்யும் காசிப முனிவனுக்கு அன்பான குழந்தையே! அசுரர் குலத்தரசே! உன்னை உடலுடன் நான் காணேன்! எங்கே ஒழித்தாய். ஐயோ! தீயதான இந்த யாகத்தை நாங்கள் பலநாள் செய்து அடைந்த பலன் இதுதானோ! 94

தாயுந் தலையளிக்குந் தந்தையுநீ தானவரை, ஆயுந் தலைவனும்நீ ஆவியும்நீ என்றிருந் தோம்
நீயங் கதனை நினையா திறந்தனையே. மாயுஞ் சிறியோர்க்கு மற்றிங்கோர் பற்றுண்டோ.

எங்களை ஆதரிக்கும் தாயும் நீ உயர் நல்நிலைமையில் நம்மை வைக்கும் தந்தையும் நீ அசுரர்க்கு எல்லாம் மேலான தலைவனும் நீ எமது உயிரும் நீ என்றிருந்தோம் நாங்கள். ஆனால் நீ மட்டும் அதனை நினையாமல் இறந்துபோனாய் இனிமேல் மாயப் போகின்ற சிறியேங்களுக்கு உன்னையன்றி வேறு பற்றுண்டோ. 95

வீரனே தானவர்க்குள் மிக்கோனே மிக்கபுகழ்ச், சூரனே நின்போல் தொடங்கி இந்த வேள்விதனை
ஆரனே கம்வைகல் ஆற்றினர் ஆற்றியநீ, ஈரனே யங்கொள்ளா தெம்மைஅகன் றேகினையே.

உண்மை வீரனே! அசுரர் எல்லார்க்கும் மிக்கவனே! மிக்க புகழினைக்கொண்ட சூரனே! உன்னைப்போல இந்த யாகத்தினைத் தொடங்கி வேறு ஆர்தான் அநேகம் நாளாக இதைச் செய்தார்கள்? இதனைச் செய்த நீ எங்கள்மேல் கொஞ்சமும் இரக்கமில்லாமலே எம்மைவிட்டுப் போயினாய். 96

நின்கண் அருளில்லா நீர்மையுண ராய்பன்னாட், புன்கண் உறுவாய்புரமூன்று முன்னெரித்த
வன்கண்ணரைக் குறித்தே மாமகஞ்செய் தாய்அதற்கோ, உன்கண்உளதாம் உயிர்தனையுங் கொண்டனரே.

உன்னிடத்தேயே இச்செய்கையால் இரக்கமில்லை என்பதை உணராய். பலநாள் வரை எவ்வளவு துயரை அடைந்தாய். அண்ணலே! முப்புரங்களை எரித்துப் பொடியாக்கிய அந்தக் கொடுந்தன்மைஉடையவரைக் குறித்தோ இந்த யாகத்தைச் செய்தாய். அவரை நினைந்து யாகம்செய்த அதற்காகவோ அந்தப் பெருமான் உன்னிடத்துள்ள உயிரையும் நீக்கி தான் எடுத்துக்கொண்டார். 97

உன்போல் உயிர்விட் டுயர்மகஞ்செய்தோரும்அரன், தன்போல் அருளாத்தகைமையரும் ஆங்கவைகண்
டென்போல் உயிர்ரொண்டிருந்தோரும் இல்இவருள், வன்போடியமனத்து வன்கண்ணர் ஆர்ஐயா.

உன்னைப்போல இந்த ஓமகுண்டத்தில் வீழ்ந்து உயிரைவிட்டு உயர்வான யாகத்தைச் செய்தோரும் தன்னை வழிபடுவார்க்கு சிவபிரானைப்போல் அருள் செய்யாத தகமை உடையவரும் ஆங்கு இவைகளையெல்லாம் கண்டுகொண்டும் என்னைப் போல உயிரை மாயாது தாங்கிக்கொண்டிருந்தோரும் இவ்வுலகத்து வேறொருவரும் இல்லை. இப்படியாயின் ஐயனே வன்நெஞ்சம் கொண்ட இரக்கமற்ற மனமுடையார் இவர்களில் யாவர் முதன்மையுடையார்கள். 98

ஈசன் அருளால் எரிவேள் வியைஓம்பிப், பேசரிய வன்மைதனைப் பெற்று நமதுயிரும்
ஆசில் வளனும் அகற்றுவரென் றேயயர்ந்த, வாசனும் இன்றே மனக்கவலை தீர்ந்ததுவே.

சிவபிரான் அநுக்கிரகத்தால் அக்கினி வளர்த்துச் செல்யப்படும் யாகத்தைப் புரிந்து அதனால் பேசுதற்கரிய வலிமையைப் பெற்று இந்த அசுரர்களானவர் நமது உயிரையும் மாசில்லாத செல்வத்தையும் அரசபதவியையும் அகற்றப்போகிறாரே என் செய்வேன் என மனச்சோர்வுகொண்ட இந்திரனும் இன்றல்லோ மனக்கவலை தீர்ந்தது. 99

எல்லாரும் போற்ற எரிவேள்வியை ஓம்பிப், பல்லாயிரநாட் பழகி எமக்குமிது
சொல்லா திறந்தாய் துணைவராய் நம்முடனே, செல்லார் இவரென்று சிந்தைதனிற்
கொண்டனையோ.

கண்டாரனைவரும் போற்றுதல் செய்ய சிறந்த அக்கினியை வளர்த்து அதில் ஈசனுக்கு அவிசொரிந்து செய்யப்பெறும் யாகத்தைச் செய்து பல ஆயிர நாட்களாக இதை எங்கள் உடனாகிப் பழகிப் புரிந்தும் நீ இறக்கப்போகின்றாய் என்பதை எங்கட்கும் சொல்லாது இறந்தாய். அவ்வண்ணம் நீ சொல்லாதிறந்த காரணம் துணைவராக இவர்கள் என்னோடு வரமாட்டார்கள் என நினைந்தனையோ. 100

ஈண்டாருங் காண எரியினிடைத் தம்பமிசை, வீண்டாய் உயிர்போய் விளிந்தாய் மிகும்வன்கண்
பூண்டாய்நின் மெய்யும் ஒளித்தாய் புலம்புமியாம், மாண்டாலும் உன்றன் மதிவதனங்
காண்போமோ.

இவ்விடத்து யாரும் காணும்படி நெருப்பின் நடுவே நின்ற யாகத் தம்பம் மேலாக வீழ்ந்தாய். உனது உயிர்போக இறந்தாய். மிகுந்த வன்மம் கொண்டாய். உனது உடலைக்கூடக் காணாதபடி சாம்பராகி மறைந்தாய். உன்னை நினைந்து புலம்புகின்ற யாங்கள் மாண்டுபோனாலும் உம்முடைய பூரண சந்திரனைப்போன்ற முகத்தைக் காண்போமோ ! 101

என்றின் னனசொற் றிரங்கி அரிமுகத்தோன், முன்றன்னை நல்கி முலையளிக்கும் தாய்காணுக்
கன்றென்ன வீழ்ந்தழுங்கக் கண்டதனைத் தாரகனுங், குன்றென்னத் தன்கை குலைத்தரற்றி
வீழ்ந்தனனே.

என்று இவ்வாறு சொல்லி இரங்கி சிங்கமுகாசுரன் முன்னர் தன்னைப் பெற்று பாலூட்டி வளர்க்கும் தாயின் முகத்தைக் காணாத கன்று கதறுவதுபோலக் கதறி நிலத்தில் வீழ்ந்து புலம்பி அழுதமை கண்டு தாரகாசூரனும் மலை சரிவதுபோன்று தனதுகையை உதறி கத்தி அழுதுகொண்டு வீழ்ந்தான். 102

வீழ்ந்தான் உயிர்த்தான் அவ்வேள்விக் களமுற்றுஞ், சூழ்ந்தான் புரண்டான் துளைக்கையி
னால்நிலத்தைப்
போழ்ந்தா னெனவே புடைத்தான் துயர்க்கடலுள் ஆழ்ந்தான்விண் ணஞ்ச அரற்றினான்
தாரகனே.

வீழ்ந்தான், மூச்செறிந்தான் அந்த யாகசாலை முழுவதும் புரண்டான் துதிக்கையினால் ஓங்கி நிலத்தைப் பிளப்பதுபோல நிலத்தில் அடித்தான். துன்பக்கடலில் அழுந்தினான். வானத்தில் உள்ளாரும்அஞ்சும்படி உரக்க ஓலமிட்டழுதான் தாரகன் 103

சிங்க முகனுந் திறல்கெழுவு தாரகனுந், தங்கண் முதல்வன் தவறுற் றதுநோக்கி
அங்கண் அரற்ற அதுகண்ட தானவர்கள், பொங்குங் கடல்போல் பொருமிப் புலம்பினரே.

சிங்கமுகாசூரனும் வலிமையுடைய தாரகாசூரனும் தங்கள் தமையன் தவறிப் போனமை குறித்து அங்கு அழுது புலம்புதலும் அதுவேளை அதனைக் கண்டுகொண்ட மற்றைய அசுரர்கள் யாவரும் பொங்கிப் பெருகும் கடல் இரைவதுபோலக் கூக்குரல் இட்டு விம்மி அழுதார்கள். 104

தாரகனுஞ் சீயத் தனிவீ ரனும்அவுணர், ஆரும் நெடிதே அரற்றும் ஒலிகேளாச்
சீரில் வியனுலகில் தேவர்கோன் தன்னெற்றுல் சூரன் மகத்தீயில் துஞ்சுசெயல்உணர்ந்தான்

தாரகாசூரனும் தனிவீரனுன சிங்கமுகாசூரனும் மற்று எல்லா அசுரரும் நெடு நேரமாகப் புலம்பி அழும் ஓசையைக் கேட்டு அசுரர் தவத்தின் மாண்பால் முன்னம் சீர்கெட்டிருந்த மேலான சொர்க்க உலக அரசனுன இந்திரன் அந்த ஓசைக்குக் காரணம் யாது என அறியத் தனது தூதுவன் ஒருவனை அவ்விடத்து விடுத்து தூதுவனுல் சூரன் யாக நெருப்பில் இறந்தான் என்னும் செயலை அறிந்துகொண்டான். 105

தண்டார் அகலச் சதமகத்தோன் தானவர்கோன், விண்டா னெனவே விளம்புமொழி கேளா,
அண்டா மகிழ்ச்சியெனும் ஆர்கலியிற் பேரமுதம் உண்டா னெனவேதன் உள்ளங்
குளிர்ந்தனனே.

குளிர்ச்சிபொருந்திய கற்பக மரத்தின் மலர் மாலை அணிந்த மார்பினையுடைய இந்திரன் அசுரர்க்குத் தலைவனுன சூரன் இறந்துபோனுன் என தூதுவன் சொல்லிய வார்த்தை கேட்டு அளவிடற்கரிய மகிழ்ச்சி எனப்படும் சமுத்திரத்தில் விளைந்த பேரமிர்தத்தினை உண்டான் என்னும் தகமையாகி தனது உள்ளம் குளிர்ந்தனன். 106

சிந்தை குளிர்ந்து செறியுமுரோ மஞ்சிலிர்த்து, முந்து துயர முழுதுந் தொலைத்தெழுந்து
வந்து புடைசூழும் வானே ருடன் கடவுள், தந்தி மிசையெய்தித் தனதுலகம் நீங்கினனே

தனது மனம் குளிர்ந்து மேனியில் செறிந்த உரோமஞ் சிலிர்த்து முன்னே கொண்ட துயரம் முழுதுந் தொலைத்துக்கொண்டு எழுந்து பெரும் மகிழ்ச்சியால் தன்னை வந்து சூழ்ந்துகொண்ட தேவரோடெழுந்து தெய்வத்தன்மை உடைய ஐராவதம் என்னும் யானைமேலாக ஏறித் தனது உலகமான இந்திர உலகத்தை விட்டு நீங்கினுன் இந்திரன் என்னும் கடவுள். 107

பொன்னுலகம் நீங்கிப் புரைதீர் மதிக்கடவுள் தன்னுலகம் நீங்கித் தபனன் பதங்கடந்து
துன்னும் அவுணர் துயருஞ் செயல்காண்பான் மின்னுலவு மேக வியன்பதத்தில் வந்தனனே.

பொன்னுலான தனது உலகம் விட்டு நீங்கி அதற்கு அடுத்துள்ள குறை நீங்கிய சந்திரக் கடவுளுடைய உலகம் நீங்கி சூரியபகவான் மண்டலமும் கடந்து கீழே வந்து, நெருங்கி நின்று பதப்புடன் துயரப்படுகின்ற அசுரர் செயல்களைக் கண்டு கொள்ள மின்னல் உலவும் மேகங்கள் சஞ்சரிக்கும் மேலான மேகமண்டலம் என்னும் பதத்தில் வந்து சேர்ந்தான் இந்திரன். 108

விண்ணுடர் தங்களுடன் வேள்விக் கிறைவிசும்பின், நண்ணு மகிழா நகையாத்தன்
நற்றவத்தை
எண்ணு வியவா இரங்கும் அவுணர்தமைக், கண்ணுர நோக்கிக் களிப்புற்று நின்றனனே.

வானநாடருடன் யாகங்கட்கு இறைவனுன இந்திரன் வானத்தில் நண்ணி மகிழ்வாகி அசுரர் துயரநிலைகண்டு மகிழ்ந்து சிரித்து தான் செய்துகொண்ட நல்ல தவம்தான் இவர்களைத் தன்னிலும் மேம்பாடு அடையாதபடி தடுத்துவிட்டது என எண்ணி வியந்து, இரங்கி அழுது புலம்பும் அசுரரைத் தனது கண்ணுரக் கண்டு களிப்புற்று வானத்தில் இந்திரன் நின்ருன். 109

நின்றதொரு காலை நிருத ருடன் அரற்றித், துன்றுதுயர் மூழ்கிச் சோர்கின்ற சீயமுகன்,
நன்றெனுயிர் போக நானிருப்ப தேயிங்ஙன், என்று கடிதுமனத் தெண்ணி எழுந்தனனே.

இந்திரன் இவ்வாறு நின்றகாலை, அசுரருடன் அழுதுபுலம்பிப் பெருகும் துயரத்து மூழ்கியவனாகச் சோர்கின்ற சிங்கமுகாசூரன் எழுந்து நல்லது எனது உயிர் போன்ற அண்ணன் மாண்டுபோக நானிங்கு உயிரோடு இருப்பதோ என்று விரைவாக தனது மனத்தில் எண்ணிக்கொண்டு அழுது புலம்புறும் நிலையைவிடுத்து எழுந்து கொண்டான். 110

அன்ன திறல் அவுணன் ஆயிரமென் றுள்ள அகன், சென்னிபல வுந்தனது செங்கைவா
ளாலீர்ந்து
முன்னம் முதல்வன் முயன்ற பெருவேள்வி, வன்னி அதனுள் மறம்பேசி இட்டனனே.

அவ்வாறு எழுந்து நின்ற வலிமையுடைய சிங்கமுகன் ஆயிரம் என்று உள்ள அகன்ற தனது தலைகள் பலவற்றையும் சிவந்த கையில் உள்ள வாளால் வெட்டி, முன்னம் முதல்வனான சூரன் தனது தசையைச் சொரிந்து செய்ததுபோன்ற அதே யாகத்தைத் தானும் தனது வெட்டிய தலைகளை யாகநெருப்பிலே போட்டு இதோ என் தலையும் சிவனுக்கு என மறம்பேசிப் போட்டான். 111

ஈர்ந்து தலைகள் எரியில் இடுமுன்னர்ச், சேர்ந்த வனையான் சிரங்கள் அவைமுழுதும்,
பேர்ந்தும் அரிந்து பிறங்கு தழலினிடை, நேர்ந்து தனிநின்றான் நிருதர்க் கிறையோனே.

வாளால் அறுத்துத் தலைகளை நெருப்பிலே போடும் முன்னராக வெட்டிய அவன் தலைகள் யாவும் பழமையாக வந்து சேர்ந்துகொள்ளலும் அப்படியானாலும் பின்னரும் தோன்றிய தலைகளை அரிந்து சுவாலிக்கும் நெருப்பிலே இட்டு தனியே ஏதும் தடுமாற்றம் இன்றி நின்றான் அசுரர் தலைவனான சிங்கமுகன், 112

முன்னோன் எழுந்து முயலுஞ் செயல்நோக்கிப், பின்னோன் தனது பெருஞ்சிரமுந் தான்
கொய்து,
மன்னோன் மகமியற்றும் வான்தழலினுள்ளிட்டான், அன்னோவெனவே அவுணர்குழுஇரங்க

தங்கள் தலைவனான சிங்கமுகாசூரன் எழுந்து நின்று முயற்சிக்கின்ற இச்செயலைப் பார்த்து மற்றத் தம்பியான தாரகாசூரனும் தனது தலையை வாளால் வெட்டி தான் யாகம் செய்கின்ற வானளாவிய யாக நெருப்பிலே இட்டான். இச்செயலை அங்கு பார்த்துநின்ற மற்றைய அசுரர் எல்லாரும் ஐயோ அம்மா எனக் கதறிப் பரிதவித்து அழுது இரங்கினார்கள். 113

சென்னி தனையரிந்து செந்தழலின் நாப்பணிடு, முன்ன மதுபோல வேறே முளைத்தெழலும்
பின்னும் அனையான் அப் பெற்றிதனை யேபுரிய, அன்ன படிகண்ட அவுணர் தமிற்சிலரே.

தாரகாசூரன் தனது தலையை அரிந்து சிவந்த சுடரினை உடைய நெருப்பின் நடுவிலே போடுவதன்முன்பாக அத்தலைபோல வேறொரு தலை முளைத்தெழுந்து பழமைபோல் தோன்ற பின்னரும் தாரகன் அத்தலையை முன்போல அரிந்து போட அன்னதன்மையைக் கண்டுகொண்ட அசுரர்களில் சிலர் என்செய்தார் என்றால், 114

தங்கள் சிரமுந் தனிவாளி னுல்துணியா, அங்கி மிசையிட்டும் அதன்கண் உறவீழ்ந்தும்
மங்கி உயிரதனை மாற்றிடலுஞ் சூரன்போல், சிங்க முகனும்எரி செல்லத் துணிந்தனனே,

தங்கள் தங்கள் தலைகளையும் தனியான வாளினுல் வெட்டி யாகநெருப்பின் மேலாகப் போட்டும், அந்த யாகநெருப்பிலே தங்கள் உடலுடன் குதித்தும் மற்ற அசுரர்கள் தங்கள் உயிரை மாற்றிடலும் இதுவேளை சூரபன்மனைப்போல யாக நெருப்பிலே தானும் வீழ்ந்து இறக்கும்படி சிங்கமுகாசுரன் துணிவுகொண்டான். 115

மோனத்தின் வேள்வி முயன்றதொரு முன்னவன்போல்
வானத் தெழுவான் வலித்துமனங் கொண்டிடலுங்
கானக் கடுக்கை கலைமதிசேர் செய்யசடை
ஞானப் பொடி புனையும் நாதனது கண்டனனே,

பிறருடன் பேச்சின்றி வேறு நினைப்பின்றி மௌனம் என்னும் பெருமைபொருந்திய நிலையில் தனது உடலையே நெருப்பில் இட்ட முன்னவனுன சூரனைப்போல் வானத்தில் எழும்படி சிங்கமுகன் துணிவாகி மனம்கொண்டிடலும் அதனைக் கானகத்தில் வளர்ந்த கொன்றை மலரும் ஒரு கலையுடன் கூடிய இளம் பிறையும் சேரும் சிவந்த சடையும் ஞானப்பொடியான திருநீற்றையும் திருமேனிமேல் அணிகின்ற எல்லார்க்கும் நாயகரான சிவபிரான் கண்டுகொண்டார். 116

அசுரர் யாகப் படலம் முற்றிற்று.

# வரம்பெறு படலம்

கண்ட கறைமிடற்றுக் கண்ணுதலோன் சுந்தரனை
விண்டு முதலோர் வியப்பவே வெண்ணெயிலாட்
கொண்ட தொருபனவக் கோலந் தனைத்தரித்துத்
தண்டும் ஒருகை தனிலூன்றி வந்தனனே.

இதனைக் கண்ட நஞ்சை உண்டு கறுத்த நீலகண்டமும் நெற்றிக் கண்ணும் உடைய மகாதேவன் விஷ்ணுமூர்த்தி பிரமன் முதலோர் வியந்துகொள்ளும்படி அன்றொருநாள் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருவெண்ணெய் நல்லூரில் ஆட்கொள்ள எழுந்தருளியபோது தான் கொண்டருளிய பிராமணக் கிழவர்போலும் கோலத்தையே அன்றும் அசுரர்க்கு அருள்செய்யக் கொண்டருளிக்கொண்டு கையினில் ஓர் தண்டும் ஊன்றிக்கொண்டு வந்தருளினர். 1

அங்கண் மகவேதி அணித்தாக வேகுறுகிச்
சிங்க முகனைச் சிவபெருமான் கண்ணுற்றே
இங்கு மிகநீ ரெவரும் இரங்குகின்றீர்
நுங்கள் பரிசு நுவலு மெனமொழிந்தான்.

அவ்விடத்து யாகத்தினைச் செய்யும் ஓமகுண்டத்தின் பக்கமாகச் சிவபெருமான் சென்று சிங்கமுகாசுரனை நோக்கி நீங்கள் இங்கு எல்லாரும் அழுது மிகவும் இரங்குகிறீர். அப்படித் துயருறும்படி உங்கட்கு நேர்ந்துள்ள செயல் யாது அதனைச் சொல்லுங்கள் என பிராமணப் பெரியோராக வந்த எம்பிரான் கேட்டருளினர். 2

எந்தை பெருமான் இயம்ப அதுநாடித்
தந்தை யனையார் தமியேந் துயர்கண்டு
வந்து வினவுகின்றார் மற்றிங் கிவர் அருள்சேர்
சிந்தை யினரென்று சீயமுகன் உன்னினனே.

எந்தை பெருமான் இப்படிச் சொல்ல அதனைச் சிங்கமுகன் பார்த்து ஓகோ! இவரைப் பார்த்தால் எமது தந்தையைப்போல இருக்கின்றார். இவர் தனித்து ஒரு ஆறுதலும் காணமுடியாதிருக்கும் எமது துயரங்கண்டு வந்து வினவுகிறார். ஆனமையால் இவர் அருள்கொண்ட சிந்தை உடையார் என்று நினைந்தான், 3

உன்னி அமலன் உகள மலர்ப்பதமேல்
சென்னி பலவுஞ் செறியப் பணிந்தெழுந்தெம்
இன்னல் வருவாயும் எமது வரன்முறையும்
பன்னி யிடுவ னெனவே பகர்கின்றான்.

இவ்வாறு சிங்கமுகன் நினைந்து நின்மல சொரூபியாய் விளங்கியும் கிழப்பிராமண வேடத்துடன் வந்துள்ள பெருமானின் தாமரை மலரின் செவ்வியினை ஒத்த பாதத்தில் தனது ஆயிரம் தலைகளில் பல தலைகள் பொருந்தும்படி தாழ்ந்து வணங்கி எழுந்து ஐயனே! எமக்கு நேர்ந்த துயரம் வந்த வரலாறும் எங்களுடைய வரலாறும் யாவும் நான் சொல்கின்றேன் கேட்பீராக எனச் சொல்கின்றான். 4

தந்தை யாவான் காசிபனே தாயும் மாயை தானென்பாள்
மைந்தர் யாங்கள் ஒருமூவர் மக்கள் பின்னும் பலருண்டால்
எந்தம் அன்னை பணி,தன்னா லியாங்கள் ஈசன் றனக்காக
இந்த வனத்தில் மூவருமிவ் வேள்வி தன்னை இயற்றினமே.

எமது தந்தையானவன் காசிபமுனிவன் தாயும் மாயை எனச் சொல்லப் பெறுவாள். இவர்க்கு பிள்ளைகள் நாங்கள் மூன்றுபேர். இன்னும் வேறு மக்கள் பலர் உண்டு. இப்போது எங்கள் தாயின் சொற்படியாக நாங்கள் சிவபிரானுக்காக இந்த வனத்திலே மூவருமாக ஓர் யாகத்தைச் செய்தனம். 5

அங்கப் பரிசே யாண்டுபல அகல மகத்தை ஆற்றிடவுங்
கங்கைச் சடையோன் முன்னின்று கருணை சிறிதுஞ் செய்திலனால்
எங்கட் கெல்லாம் முன்னவனும் இகல்வெஞ் சூர னதுநாடி
மங்குற் செறியும் வானிற்போய் வாளால் தசையீர்ந் திட்டனனே.

இங்கு இப்படியாக நாங்கள் பல ஆண்டுகள் கழிந்துபோக யாகத்தைச் செய்திடவும்கூட கங்கையைச் சடைமேல் வைத்த கடவுள் எங்கள் முன்னாக வந்து சிறிதேனும் கருணை செய்திலன், இதனை எங்களுக்கெல்லாம் மூத்தவனான வலிமையும் கொடுமையுமுடைய சூரன் அறிந்து மேகங்கள் செறிகின்ற வானத்தில் சென்று வாளினால் தனது உடலிலுள்ள தசைகளை எல்லாம் வெட்டி அரிந்து யாகநெருப்பில் போட்டான். 6

மின்போல் இலங்கும் வாளாற்றன் மெய்யிற் றசைகள் ஈர்ந்துளத்தில்
துன்போர் இறையும் இல்லாத சூரன் மகத்தீ மிசையிடலும்
முன்போல் தன்னூன் வளர்ந்திடவே பின்னும் அஃதே முயன்றதற்பின்
தன்போல் ஒளிர்வச் சிரகம்பத் தலைவீழ்ந் துருவித் தழல்புக்கான்.

மின்னலைப்போல ஒளியுடன் பிரகாசிக்கும் வாளினால் தனது மேனியில் உள்ள தசைகளையெல்லாம் வெட்டி அரிந்து இச்செயலால் தனது உளத்தில் துன்பம் இறையும் ஏதும் இல்லாதபடி சூரன் யாக நெருப்பில் போடுதலும் வெட்டிய தனது தசைகள் முன்புபோல வளர்ந்திடுதலும் பின்னரும் வளரும் தசையினை வெட்டி வெட்டி அதே செயலைச் செய்து அதன்பின்பு தன்னைப்போல் சிவந்து ஒளிவிடும் வச்சிரகம்பத்தில் தலைகீழாகக் குதித்து ஊடுருவிச் சென்று யாகநெருப்பில் வீழ்ந்தான். 7

புக்கு முன்னேன் ஈறுகிப் போந்த காலை யாங்கண்டு
மிக்க மனத்தில் துயர்கொண்டு வெருவிப் புலம்பி எமதுயிரும்
ஒக்க விடவே நினைந்தேமால் உம்மைக் கண்டோ ரிறைதாழ்த்தோம்
தக்க திதுநம் வரன்முறையுந் தமியேந் துயரு மெனமொழிந்தான்.

எங்கள் முன்னவனை சூரபன்மன் நெருப்பில் குதித்து சாம்பராகிப்போன காலையில் யாங்கள் அதனைக் கண்டுகொண்டு எமது மனத்தில் மிகுந்த துயரம் கொண்டு பயந்து புலம்பி அழுது எமது உயிரும் எமது தமையன் உயிருடன் கூடவே விடும்படி நினைந்தோம். எம் ஐயனே அதற்கிடையில் உம்மைக் கண்டோமாகி ஒரு இறைப்பொழுது நாம் நினைந்தபடி செய்யாது தாமதித்து நின்றோம். இதுவே உண்மை வாய்ந்த எமது வரலாறும் எங்களது துயரமும் என சிங்கமுகாசூரன் கூறினன். 8

மொழிந்த காலை அங்சண்நின்ற முக்கண் இறைநும் முன்னேன்போல்
ஒழிந்து நீரும் மாயாதே உமது சூரன் தனையின்னே
அழிந்த தீயுள்நின் றெழுவித் தருள்செய் கின்றும் அதுகாண்டிர்
கழிந்த சோகம் விடுதிரெனக் கங்கை தன்னை நினைந்தனனே.

சிங்கமுகன் இவ்வாறு சொன்னகாலை அங்கண் நின்ற முக்கண்ணுடைய சிவபிரான் சிங்கமுகனை நோக்கி நீங்கள் உமது மூத்தோனன சூரபன்மன்போல் மாயாத வண்ணம் உமது சூரனை இப்போதே அவன் வீழ்ந்திறந்த நெருப்பில் நின்றும் எழுந்தருளச் செய்கின்றோம். அதனைக் காண்பீராக. மிகுதியான உமது துன்பத்தை விடுவீராக என்று கூறிக் கங்காநதியை அவ்விடத்து வருமாறு சிந்தைசெய்தார். 9

முன்னாள் அம்மை அங்குலியின் முளைத்த கங்கை தனிலெங்கோன்
மின்னார் சடையிற் கரந்தனவே யன்றி மகவான் விரிஞ்சன்மால்
என்னா நின்ற மும்மையினர் இருக்கை தோறும் அளித்தவற்றுட்
பொன்னாட் டிருந்த நதிதன்னைப் புந்தி மீதில் உன்னினனே.

முற்காலத்தில் உமாதேவியாரது விரல்களில் தோன்றிய கங்கைநதிகளில் எங்கள் தலைவராகிய சிவபிரான் தமது சடைமுடியில் அடக்கியவற்றை விடுத்து அன்று இந்திரனும் பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் எனும் மூன்று கடவுளர்களது உலகங்கள் தோறும் இருக்கும்வண்ணம் கொடுத்தவற்றுள் இந்திரனுடைய பொன் நாட்டிலிருந்த கங்கையை மனதின்மீது நினைந்தருளினர். 10

மாயோன் தன்பால் முற்கொண்ட வலிசேர் தண்ட மேந்திவரு
தூயோன் உன்ன அக்கங்கை துண்ணென் றுணர்ந்து துளங்கி விண்ணோர்
ஆயோர் எவரும் வெருக்கொள்ள அளப்பில் முகங்கொண் டார்த்தெழுந்து
சேயோ ரெல்லாம் அணித்தாகத் திசையோர் அஞ்சச் சென்றதுவே.

ஆமை அவதாரமெடுத்த விஷ்ணுமூர்த்தி தன்பால் முன்னைநாளில் பறித்தெடுத்துக்கொண்ட முதுகெலும்பாகிய தண்டை ஊன்றி வந்தவராகிய சிவபிரான் உன்னியருள அந்தக் கங்கையானது விரைவில் உணர்ந்து நடுக்கத்துடன் தேவர்களாயுள்ளோர் யாவரும் பயப்படும்படியாக அளவில்லாத கிளைகளைக்கொண்டு இரைந்தெழுந்து தூரத்தில் உள்ளார் எல்லாரும் சமீபமாகுமபடியும் திக்கில் உள்ளார் பயங்கொள்ளும் படியும் பாய்ந்து வந்தது. 11

மேலா கியவிண் ணுலகனைத்தும் விரைவிற் கடந்து மேதினியின்
பாலாய் எங்கள் பிரான் பதங்கள் பணிந்து பணியாற் படர்செந்தீ
ஏலா நின்ற நடுக்குண்டத் திடையே புகலும் எறிகடல்வாய்
ஆலா லம்வந் துதித்ததென அவுணர் கோமா னார்த்தெழுந்தான்.

பூமியின் மேலாகிய வான உலகங்கள் அனைத்தும் விரைவில் கடந்து பூமியின் பாலாக வந்து எங்கள் பிரான் பாதங்களை வணங்கி அவர் அருளால் பரந்தெழுந்த சிவந்த அக்கினி பொருந்திய நடு ஓமகுண்டத்தில் புகுதலும் அதுவேளை திரைவீசுகின்ற சமுத்திரத்திடத்தினின்றும் ஆலகாலம் என்னும் நஞ்சு எழுந்தால்போல அசுரர்க்கரசனான சூரபன்மன் ஆரவாரிப்புடன் உயிர்பெற்று எழுந்தான். 12

தொன்மை போல வேதினியிற் சூர பன்மாத் தோன்றலுமத்
தன்மை கண்ட அரிமுகனுந் தார கப்பேர் வீரனுமாய்
இன்மை கொண்டோர் பெருவளம்பெற் றென்ன மகிழ்வுற் றெல்லையிலா
வன்மை யெய்திக் கடிதோடி மன்னன் பதமேல் வணங்கினரே.

ஓமகுண்டத்தினின்றும் சூரபன்மன் தொன்மைபோல உயிர்பெற்றெழுந்து தோன்றுதலும் அத்தன்மை கண்டுகொண்ட சிங்கமுகாசூரனும் தாரகன் என்னும் பேருடைய வீரனுமானோர்கள், பொருளிலாமையால் வறுமையுற்றோர் பெருஞ் செல்வத்தைப் பெற்றால் எப்படியோ அப்படி மகிழ்வுற்று எல்லை இல்லாத வலிமையடைந்து விரைவுடன் ஓடிச் சென்று சூரபன்மனது காலில் வீழ்ந்து வணங்கினார்கள். 13

தங்கோன் தன்னைப் பின்னோர்கள் தாழுஞ் செயலைத் தானவர்கண்
டெங்கோன் வந்தான் வந்தானென் றெவருங் கேட்ப எடுத்தியம்பிப்
பொங்கோ தஞ்சேர் கடன்மதியப் புத்தேள் வரவு கண்டதென
அங்கோ தையினல் வாழியவென் றவனைப் போற்றி ஆர்த்தனரே.

தங்கள் தமையனான சூரபன்மனை தம்பிமார் தாழ்ந்து வணங்கும் செயலை அசுரர்கள் கண்ணுற்று இதோ எங்கள் அரசன் வந்தான் வந்தானென்றெவருங் கேட்ப எடுத்து உரக்கச் சொல்லி பொங்கும் திரையுடைய கடல் சந்திரக் கடவுள் உதயமாவதைக் கண்டு இரைந்தால்ஒப்ப பேரோசையுடன் சூரபன்மன் நீடூழி வாழியவே என அவனைத் துதித்து ஆரவாரித்தார்கள். 14

எண்மேற் கொண்ட நிருதர்குழாம் ஏத்த எரிநின் றெழுசூரன்
மண்மேற் கொண்ட திறங்காணூஉ வானோர் தொகையும் மகபதியும்
விண்மேற் கொண்ட புயல்கண்ட வியன்கோ கிலம்போல் வெருவித்தம்
உண்மேற் கொண்ட செல்லலொடும் ஓடித் தம்மூர் உற்றனரே.

அளவுகாண்பரிய அசுரர் கூட்டம் இவ்வாறு வாழ்த்துரை எடுத்து துதிப்ப நெருப்பில் நின்றும் உயிர்பெற்றெழுந்த சூரன் பூமியில் நிலைபெற்று நிற்கும் அற்புதத்தைக் கண்டு தேவர் கூட்டமும் தலைவனை இந்திரனும் வானத்தில் மேலெழுந்த மழை மேகங்களைக் கண்ட பெரிய குயிற்பறைவையைப்போல் அஞ்சி ஏக்கமுற்றுத் தங்கள் உள்ளத்திலே கொண்ட வருத்தத்துடன் ஓடிச்சென்று தங்கள் ஊரைச் சேர்ந்து அடங்கியிருந்தனர். 15

அரந்தைதனை இகந்தஇரு துணைவர்களும் பாங்குற அவுணர் சேனை
பரந்துபல வாழ்த்தெடுப்பச் சூரபன்மன் திகழ்வேலை படியும் வானும்
நிரந்தபுனற் கங்கைதனை வருவித்து மறையவன்போல் நின்ற எம்மான்
கரந்துதனை உணர்கின்ற உருவினெடு தோன்றினனால் ககன மீதே.

துக்கத்தினை கடந்து களிப்புற்ற தம்பிமார் இருவரும் பக்கராக உற அசுரர் சேனை நாற்புறமும் சூழ்நது பரந்து வாழ்த்தெடுப்ப சூரபன்மன் மகிழ்சியுடன் திகழ்ந்திருக்கும் வேளையில் பூமியும் வானமுமாய் நிறையும் நீரையுடைய சங்கை நதியை வரச்செய்து பிராமணக் கிழவரான வேடத்துடன் நின்ற சிவபிரான் மறைந்தருளி தம்மை உணரத்தக்க உண்மை வடிவுடன் வானத்தின்மீது தோன்றியருளினர். 16

நாரிபாகமும்இமையா முக்கண்ணுந் திருப்புயங்கள் நான்குமாகி,
மூரிமால் விடைமேல்கொண் டெம்பெருமான் மேவுதலும் உன்னிநோக்கிப்
பாரின்மீ மிசைவீழ்ந்து பணிந்தெழுந்து பல்முறையும் பரவிப் போற்றிச்
சூரனு ராதபெரு மகிழ்சிறந்து துணைவரொடுந் தொழுது நின்றான்.

பார்வதி அம்மை இடப்பாகமாகவும் இமையாத மூன்று கண்களும் நான்கு திருத்தோள்களும் உடனுக வலிமைபொருந்திய வெள்ளை இடபமேற்கொண்டு தோன்றியருளுதலும், சூரபன்மன் தம்பிமாருடன் எம்பிரான் திருவுருவைத் தெரிந்து கண்டு பூமியின் மேலாக விழுந்து வணங்கி எழுந்து பலமுறையும் துதித்து வழிபட்டு சூரபன்மன் தீராத பெருமகிழ்ச்சி சிறந்தோங்கப் பெற்று தம்பிமார். இருவரொடும் தொழுது நின்றான். 17

நின்றுபுகழ் சூரபன்மன் முகநோக்கி நமையுன்னி நெடிது காலம்,
வன்றிறன்மா மகமாற்றி எய்த்தனையால் வேண்டுவ தென்வகுத்தி யென்னப்
பொன்றிகழு மலர்க்கமலப் பொகுட்டுறைவோன் முதலிய புத்தேளிர்யாரும்
இன்றெமது தலைமையெலாம் போயிற்று லெனஇரங்க இதனைச்சொல்வான்-

திருமுன்றாகத்தொழுது நின்று துதிக்கின்ற சூரபன்மன் முகத்தை எம்பெருமான் நோக்கியருளி நீவிர்கள் நம்மைத் தியானித்து நெடிதுகாலம் மிக்க வலிமையுடைய யாகத்தைச் செய்து களைத்துள்ளீர்கள். நீங்கள் வேண்டுவது யாதாகும் வகுத்துச் சொல்வீராக என அருள்செய்தலும் அந்நேரம் சூரபன்மன் பொன்போலத் திகழும் தாமரை மலர்மேல் இருக்கின்ற பிரமதேவர் முதலாய கடவுளர் யாரும் இன்றுடனுக எமது பதவிகள் எல்லாம் போயிற்றோ என்செய்வோம் எனத் துயர்கொண்டு இரக்கமுற இதனைச் சொல்வான். 18

பொன்னுரும் புவிப்பாலாய்ப் பலபுவனங் கொண்டவண்டக் குழுவுக் கெல்லாம்
மன்னுகி யுறல்வேண்டும் அவைகாக்குத் தனியாழி வரலும் வேண்டும்
உன்னுமுன் அவையனைத்துஞ் செல்லுவதற் கூர்திகளும் உதவல் வேண்டும்
எந்நாளும் அழியாமல் இருக்கின்ற மேனியுமெற் கீதல் வேண்டும்.

மேன்மையாகும் இப்பூமியின் தொடர்பால் விளங்கும் புவனங்களாகியுள்ள அண்டகூட்டங்கட்கெல்லாம் ஐயனே அரசனாகி யான் இருக்கவேண்டும். அந்த அண்டப் புவனங்களையெல்லாம் தனியே காத்து ஆளுகின்றமைக்கு எனது ஆணைக்கு அனைத் துலகும் அடங்கும்படி வலிமை யான் பெறுவதற்கு ஏற்ப அமைந்த தனியான ஆஞ்ஞாசக்கரம் கிடைக்கவேண்டும். நினைப்பதன் முன்னரே வானத்தில் பரந்த அண்டங்கள் அனைத்திற்கும் செல்வதற்கு வாகனங்களும் தரல்வேண்டும். எந்நாளும் அழியாமல் இருக்கின்ற மேனியும் எனக்குக் கொடுத்தல் வேண்டும். 19

அலையாழி மிசைத்துயில்கூர் பண்ணவனே முதலோர்கள் அமர்செய்தாலும்
உலையாது கடந்திடுபேர் ஆற்றலொடும் பலபடையும் உதவல் வேண்டும்
தொலையாமே எஞ்ஞான்றும் இருக்திடலும் வேண்டுமெனச் சூரன் வேண்டக்
கலையார்வெண் மதிமிலைச்சுஞ்செஞ்சடிலத் தனிக்கடவுள் கருணை செய்வான்.

அன்றியும் அலைகளையுடைய பாற்கடலில் பள்ளிகொண்ட நாராயணக் கடவுள் முதலோர்கள் என்னுடன் வந்து போர் செய்தாலும் நான் தோல்வியடையாமல் வெற்றியடையும் பெருவலிமையையும், பல படையையும் உதவல்வேண்டும். நான் அழியாமல் எஞ்ஞான்றும் இருந்திடவும் வேண்டுமென்று சூரன் வேண்ட அதேவேளை ஒரு கலையுடன் விளங்கும் வெண்ணிறமுடைய பிறையை அணிந்த சிவந்த சடையுடைய தனிக்கடவுளான சிவபிரான் அருள்புரிகின்றார். 20

மண்டனக்கா யிரகோடி அண்டங்க ளுளவாகு மற்ற வற்று
அண்டமோ ராயிரத்தெட் டுகநூற்றெட் டாள்கவென அருளால் நல்கி
எண்டொகைபெற் றிடுகின்ற அவ்வண்டப் பரப்பெங்கும் ஏகும் வண்ணம்
திண்டிறல்பெற் றிடுகின்ற இந்திரஞா லமதென்னுந் தேரும் நல்கி.

சூரனே! இப்பூமியின் தொடர்பாகி ஆயிரகோடி அண்டங்கள் உளவாகும். மற்றிவற்றுள் ஓராயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுக காலவரையும் நீ ஆள்வாயாக எனத் திருவருளின் செயலால் இப்பேற்றைக் கொடுத்து சொல்லப்பெறும் ஆயிரத்தெட்டெனும் அண்டப்பரப்பு எங்கும் செல்லும்படியாக வலிமை பெற்று விளங்கும் இந்திரஞாலம் என்னும் பேருடைய தேரையுங் கொடுத்தார் சிவபிரான். 21

எண்ணுபல புவனங்கள் கொண்டஅண்டத் தொகைதன்னையென்றும் போற்றக்
கண்ணனது நேமியினும் வலிபெறுமோர் அடலாழி கடிதின் நல்கி,
அண்ணலுறு சினவேற்றுக் கோளரியூர் தியும்நல்கி அகிலத்துள்ள
விண்ணவர்கள் யாவருக்கும் அன்றுமுதன் முதல்வனும் மேன்மை கல்கி.

ஆயிரத்தெட்டு என எண்ணப்படுகின்ற அண்டக் கூட்டங்களை என்றும் காவல் புரியும்படியாக விஷ்ணுபிரானுடைய சக்கரப்படையிலும் வலிபெறுகின்ற ஓர் ஒளியுடைய ஆஞ்ஞாசக்கரத்தையும் விரைவில் கொடுத்து பெருமைமிக்க கோபவீறுடைய ஆண்சிங்க வாகனத்தையும் கொடுத்து அகில உலகிலுமுள்ள தேவர்கள் யார்க்கும் அன்று முதலாகத் தலைமையுடையனாக விளங்கும் மேன்மையான பதவியையும் கொடுத்து. 22

மேற்றிகழும் வானவரைத் தானவரை ஏனவரை வெற்றி கொள்ளும்
ஆற்றலொடு பெருந்திறலும் பாசுபத மாப்படையே ஆதி யாகித்
தோற்றமுறு கின்றதெய்வப் படையனைத்துமெந் நாளுந் தொலைந்திடாமல்
ஏற்றமிகும் வச்சிரமா கியமணிமே னியுமுதவி இதற்குப் பின்னர்.

மேலுலகவாசிகளான தேவரை அசுரரை ஏனைய கடவுளரை வெற்றிகொள்ளும் வலியுடன் போர்செய்யும் திறமையும், பாசுபதம் முதலாகச் சொல்லப்பெற்றுத் தோற்றமுறுகின்ற தேவப்படைக்கலங்களையும் எந்நாளாயினும் அழிந்துபோகாத மிகச் சிறப்பு மிகுந்த வச்சிர உடம்பும் கொடுத்து இதற்குப் பின்னராகவும் எம்பெருமான். 23

ஆறுசேர் கங்கைதனை விண்ணுலகு தனிலேவி அக்கங் கைக்குங்
கூறுசேர் செருவேள்விச் செந்தழற்குந் தோற்றமெய்திக குலவும் வண்ணம்
வீறுசேர் பெருங்கடல்போல் ஒருபதினு யிரகோடி வெள்ள மாகுந்
தாறுபாய் கரிதிண்டேர் வயப்புரவி அவுணரெனுந் தானை நல்கி.

பெருகிவரும் ஆற்றின் இயல்பு பொருந்தி வந்த கங்கையாற்றை வானுலகம் செல்லுமாறு பணித்து அவ்வாறு செல்கின்ற கங்கையாற்றிற்கும் ஓமகுண்டத்தில் விளங்கிய சிவந்த சுடரினையுடைய அக்கினிக்கும் ஆகிய இரண்டிற்கும் தோற்றம் இது தான் என விளங்கிச் சிறக்கும்வண்ணம் வீறுடன் திரைவீசும் கடல்போல் ஒரு பதினுயிர கோடி வெள்ளம் என்னும் கணக்கினையுடைய மதம் பொழியும் யானைகள் திண்மையுடைய தேர்கள் வீரக் குதிரைகள் காலாட்படை அசுரர்கள் என்னும் இச் சேனைகளையும் கொடுத்தருளினர் சிவபிரான். 24

துன்னுறு பெரும்புகழ்ச் சூரபன்மனுக், கின்னதோ ரருள்புரிந் திட்ட வெல்லையில்
அன்னவற் கிளைஞர்வந் தடிபணிந்தெழத், தன்னிகர் இல்லதோர் தலைவன் கூறுவான்.

பெரும் புகழினை அடைந்துள்ள சூரபன்மனுக்கு இன்னதாகிய பெரும் அடைதற்கரிய வரங்களை அருள்புரிந்திட்டார் எம்பெருமான். அதேவேளையில் எம்பிரானைச் சூரபன்மன் தம்பியர் இருவரும் திருவடிமீது பணிந்தெழுந்து வணங்கி நிற்ப தனக்கு நிகரில்லாத பெருமான் கூறியருள்வார். 25

சூரன் என்பவன் தோளினை போலவே, வீரம் எய்தி விளங்கிநூற் றெட்டுகஞ்
சீரின் மேவுதிர் தேவர்கள் யாரையும், போரில் வென்று புறந்தரக் காண்டிரால்:

நீங்கள் சூரன் என்பவனுடைய தோள் இரண்டும் எப்படி அவனுக்கு வலிமையான துணையாமோ அதேபோல நீங்களும் வீரம் அடைந்து விளங்கி நூற்றெட்டுயுக காலவரையும் சீரோடும் வாழ்ந்திருப்பீர். திருமால் முதலிய தேவர்கள் யாரையும் போரிலே வெற்றிகொண்டு பயந்தோடும்படி செய்விர்கள். 26

தேவர் யாவருஞ் சென்று தொழப்படு, மூவராகி மொழிந்திடு நுங்களைத்
தாவி லாதநஞ் சத்தியொன் றேயலால், ஏவர் வெல்பவர் என்று விளம்பிமேல்.

தேவர்கள் யாரும் வந்து வணங்கப்படுகின்ற சூரன் சிங்கன் தாரகன் எனும் மூவராக உலகம் புகழும் உங்களைக் குறைவிலா நிறைவாகிய நமது சத்தி ஒன்று அன்றி வேறு யார்தான் வெல்லத் தகுந்தவர்? ஆகார் எனக் கூறியருளிப் பின்னரும் அவர்கட்கு. 27

ஈறுறாத விரதமுந் தன்பெயர், கூறு தெய்வப் படையுங் கொடுத்திடா
வேறு வேறு மிகவருள் வெய்துமேல், ஆறு சேர்சடை ஆண்டகை ஏகினன்.

அழிவுறாத தேரும் தன் பெயர்புனைந்த சிவப்படைக்கலம் எனும் படையும் கொடுத்து இவற்றுடன் இன்னமும் வேறு வேறான பேறுகளுடன் வாழும்படி கிருபை செய்தருளி அதன்மேல் கங்கையைச் சடையில் வைத்த கடவுள் மறைந்தருளிச் சென்றார். 28

641

# 10. சுக்கிரன் உபதேசப் படலம்

அற்று கின்ற வேலையின் முன்னோர் அரணம்போற்
சுற்று நிற்குந் தானவர் தங்கோன் தொலைவில்சீர்
பெற்றான் என்னுந் தன்மையை உன்னிப் பெருவன்மை
உற்று ரொல்லென் றார்த்தனர் ஆற்ற உவப்பெற்றார்.

அவ்வாறாகிய சமயத்தில் முன்னே மதிலை ஓர் அரண்போல மதிற்புறத்து சுற்றி காவலாக நின்ற அசுரர்கள் தங்கள் தலைவன் சிவபிரானிடத்தாக அழியாத சீர் பெற்றான் என்றும் தன்மையை நினைந்து பெரு வன்மைகொண்டார்கள்; கூச்சலிட்டு ஓய்யென ஆரவாரித்தார், மிகுந்த சந்தோஷமடைந்தார்கள் 1

ஊழியில் வேதன் கண்டுயில் வேலை உலகஞ்சூழ்
ஆழிக ளேழும் ஆணையின் நிற்றல் அதுநீங்கி
மாழைகொள் மேருச் சுற்றிய தென்ன மகத்தெல்லை
சூழுறல் நீங்கிச் சூர்முதல் தன்பால் துன்னுற்றார்.

சலப் பிரளய கால ஊழியில் உலகைப் படைக்கும் பிரமதேவர் நித்திரைசெய் யுங்கால் அவர் கட்டுப்பாட்டில் நின்ற ஏழு சமுத்திரமும் அவர் கட்டளையைக் கடந்து மேலோங்கி பொன்னனை மேரு மலையைச் சுற்றிக் கொள்வது ஒப்ப யாக மதிலைச் சூழ்ந்திருத்தலை விடுத்தெழுந்து சூரபன்மன்பால் நெருங்கிச் சூழ்ந்தார்கள்.

கண்டார் ஆர்த்தார் காலன்மிசை வீழ்ந்தார் கமழ்வேரி
கொண்டார் ஒத்தார் கைத்தொழு கின்றார் குப்புற்றார்
அண்டா ஓகை பெற்றனர் தொன்னாள் அயர்வெல்லாம்
விண்டார் வெஞ்சூர் தன்புடை யாகி விரவுற்றார்.

சூரனைக் கண்டார் சந்தோஷத்தால் கத்தினார்கள், காலில் வீழ்ந்தார்கள், வணங் கினார்கள். வாசனை கொண்ட கள்ளை உண்டவரை ஒத்தார், சிலர் கைகூப்பி வணங் கினார், சிலர் குதித்துக் கரணம்போடுகிறார்; அளவிடமுடியாத மகிழ்ச்சி பெற்றார், முன்னாளில் உள்ள அயர்வு துயரம் எல்லாம் நீங்கினார்கள்; கொடிய சூரன் தனது பக்கராக விரைந்து ஓடி வந்தார்கள்; 3

முன்னா குற்றே ரிற்சிலர் தம்மை முகநோக்கி
இந்நாள் காறும் நீர்வலி யீர்கொ லெனவோதி
மன்னா குற்றேன் நல்லருள் செய்ய மகிழ்வெய்தி
அன்னார் யாரும் இன்னதோர் மாற்றம் அறைகுற்றார்.

முன்னாக ஓடிவரும் சிற்சில அசுரர் முகத்தை சூரபன்மன் நோக்கி இன்னாள் வரையும் நீங்கள் வலியுடையீரா ? (இந்நாள் வரையும் நீங்கள் காவலாக அரும் வேதனையுடன் நின்றீர். இனிமேல் அத்தகைய வேதனைக்கு இடமேதும் இல்லை என்பதை குறிப்பால் உணர்த்தி) சூரபன்மன் சொல்லி நல்லருள் செய்ய அதுகேட்ட அசுரர் யாரும் மகிழ்ச்சி அடைந்து இந்த ஒரு வார்த்தை பேசுகின்றனர். 4

தீயுண் டாகுங் கண்ணுதல் கொண்ட சிவனுண்டு
நீயுண் டெங்கட் கோர்குறை யுண்டோ நிலையாகி
ஏயுஞ் செல்வஞ் சீரொடு பெற்றோம் இடரற்றோம்
தாயுண் டாயின் மைந்தர் தமக்கோர் தளர்வுண்டோ.

நெருப்பு உண்டாகும் நெற்றிக் கண்ணுடைய கடவுள் சிவன் உண்டு. அவன் அருள்பெற எமது தலைவனை நீயுண்டு. ஆதலின் எங்கட்கு ஓர் குறையுண்டோ ? இல்லையே. நிலையான செல்வத்தை பல சீருடனும் பெற்றுக்கொண்டோம், இடர் அற்றோம்; தாயிருந்தால் பிள்ளைகள் தமக்கு ஓர் தளர்வுண்டோ ? 5

என்பார் தம்பால் அன்பின னாகி இறைபின்னோர்
தன்பா லாக நிற்புழி இந்தத் தகுவன்றான்
வன்பா லானான் செய்வதென் என்னா வானோர்கள்
துன்பாய் அச்சுற் றேங்கினர் ஆவி தொலைவார்போல்.

எனக் கூறுவார்பாலாக சூரபன்மன் அன்பினனாகி தம்பிமார் தனது பக்கராக நிற்ப, நிற்கும்பொழுது இத் தன்மையைக் கண்டுகொண்ட தேவர்கள் யாரும் இந்த அசுரன் தானே வெல்லற்கரிய மிக வலிமையுடையான் ஆனான். நாம் இனி என் செய்வோம் எனக் கூறித் துன்பமடைந்து பயமாகி ஏங்கினார்கள். எதுபோலுமெனில் தமது உயிர் தொலைவாகிப்போவதை நினைந்து கவலை அடைவார்போல்;

சேனை நள்ளிடைச் சீர்கெழு வன்மையான், மேன தன்மை விருப்பினிற் கண்ணுறீஇ
மான மேற்சென்று மன்னெடுந் தானவர், சோனை மாரியில் தூமலர் தூவினார்;

சேனைகளின் நடுவனாகச் சிறப்புப் பொருந்திய வலிமையுடன் சூரபன்மன் நிற்கின்றதை அசுரர் விருப்பினுடன் கண்ணுற்று விமானத்தின்மேல் அசுரேந்திரனுடன் சென்று சோனாமாரி மழைபோல தூய பூக்களை சூரன்மேல் சொரிந்தார்கள்; 7

தூசு வீசினர் சூர்முதல் வாழியென், றாசி கூறினர் ஆடினர் பாடினர்
பேச லாத பெருமகிழ் வெய்தினார், வாச வன்றன் மனத்துயர் நோக்கினார்.

சிலர் தங்கள் உத்தரியத்தை எடுத்து உயர வீசினார்கள். அசுரர் முதல்வன் நீடூழி வாழியென ஆசி மொழி கூறினார்; சிலர் ஆடினர், பாடினர்; எம்மால் சொல்லமுடியாத பெருமகிழ்வு எய்தினார்; இந்திரனுடைய மனத்தில் கொண்ட துன்பம் பற்றி மகிழ்வுடன் நோக்கினர். 8

அண்ண லார்அரு ளால்அழல் வேதியின், கண்ணில் வந்த கணிப்பில் படைக்கெலாம்
எண்ணி லோரை இறையவர் ஆக்கினுன், நண்ணி நாளும் நவையறப் போற்றவே;

அண்ணலான சிவபிரான் அருளால் ஓம குண்டத்திடத்தாக வந்த கணக்கற்ற படைகட்கெல்லாம் எண்ணற்ற அசுரர்களைச் சேனைத் தலைவர்களாக்கினுன்; அச்சேனை களுடன் பொருந்தி குற்றம்குறையின்றிக் காக்கும்பொருட்டு 9

கண்ண கன்புயக் காவலன் தானைகள், மண்ணும் வானமும் மாதிர வெல்லையுந்
தண்ண றச்செலத் தம்பியர் தம்மொடும், எண்ணி வேள்வி இருங்களம் நீங்கினுன்;

அகன்று விசாலித்த தோள்களையுடைய சூரபன்மன் சேனைகள் புறப்பட்டு பூமியும் வானமும் திக்குகள் எங்குமாகிக் கலந்து பரந்து ஒழிவின்றிச் செல்ல தனது தம்பியருடன் போவதற்கு எண்ணி பெரிய யாகசாலையை நீங்கினுன். 10

நீங்கி மீண்டு நெடுந்தவத் தந்தைதன், பாங்கர் எய்திப் பணிந்து பரமனுல்
வாங்க லுற்ற வரத்தியல் கூறியே, யாங்கள் செய்வகை என்னினி யென்னவே;

சூரபன்மன் யாக பூமியைவிடுத்து நீங்கிச் சென்று நெடிது காலமாகத் தவம் செய்திருந்த தந்தையான காசிப முனிவன் பக்கராகச் சேர்ந்து அவரைப் பணிந்து சிவபெருமானிடம் தாங்கள் பெற்றுள்ள வரன்களின் திறமையை எடுத்துக்கூறி மேற்கொண்டு செய்யவேண்டியது யாதெனக் கேட்டான்; 11

தந்தை கேட்டுச் சதமகன் வாழ்வினுக், கந்த மாகிய தோவண்ட ருக்கிடர்
வந்த தோவெம் மறைநெறி போனதோ, எந்தை யார்அருள் இத்திற மோவெனு;

தந்தையான காசிபர்கேட்டு அந்தோ ! எனியாக இந்திரனுடைய வாழ்விற்கு முடிவாகியதோ. தேவர்கள் யாருக்கும் இடர்வந்துளதோ, எங்கள் வேத நேறிகள் அழிந்துபோனதோ. எந்தைபெருமான் திருவுள்ளம் இப்படியாயிற்ரூே என்ருர்; 12

உன்னி யுள்ளத் துணர்வுறு காசிபன், தன்னின் வந்த தனையரை நோக்கியே
முன்னை நுங்கண் முதற்குருப் பார்க்கவன்; அன்ன வன்கண் அடைகுதிர் அன்பினீர்;

இவ்வாறு காசிப முனிவர் நினைந்து உணர்ந்துகொண்டு தன்னுல் வந்த பிள்ளைகளை நோக்கி உங்களுக்கு முன்னம்தொட்டு முதன்மையுடைய குருவானவன் சுக்கிரன்; அவனை அன்புயீரே அடையுங்கள். 13

அடைதி ரேயெனின் அன்னவன் உங்களுக், கிடைய றுவகை இத்திரு மல்குற
நடைகொள் புந்தி நவின்றிடும் நன்றெனு, விடைபு ரிந்து விடுத்தனன் மேலையோன்;

அவ்வாறு நீங்கள் சுக்கிர பகவானை அடைந்து கேட்டால் அவன் உங்களுக்கு நீங்கள்பெற்ற செல்வம் இடையில் கெட்டுவிடாது நிலைக்கும்வண்ணம் நீங்கள் நடந்து கொள்ளவேண்டிய புத்திமதிகளை நன்கு சொல்லுவாரென அவரிடம் செல்ல விடை கொடுத்து விடுத்தார் காசிப முனிவர் 14

விட்ட காலை விடைகொண்டு வெய்யவன், மட்டி லாத வயப்படை யோடெழா
இட்ட மான இயற்புக ரோனிடங், கிட்டி னுனது கேட்டனன் ஆங்கவன்;

விட்டகாலேயில் விடைபெற்றுக்கொண்டு கொடியவனுன சூரபன்மன் மட்டிட முடியாத வீரமுடைய தனது சேனேயோடு எழுந்து தங்கட்கு இட்டமானவியல்புடைய சுக்கிரனிடம் அணுகினுன். சூரபன்மன் வருகையை சுக்கிரன்கேள்வியுற்ருர். 15

கேட்டு ணர்ந்திடு கேழ்கிளர் தேசிகன், வாட்ட நீங்கி மகிழ்நறை மாந்தியே
வேட்ட மெய்தி விரைந்துதன் சீடர்தங், கூட்ட மோடெதிர் கொண்டு குறுகவே.

சூரன் வரவைக்கேட்டு உணர்ந்திட்ட ஒளியுடைய சுக்கிரன் முன்பு சூரன் தவ நிலேபற்றிய வாட்டம் நீங்கி உவகை என்னும் தேனேப்பருகி சூரனேக்காண விரும்பி விரைவாக தனது சீடர்கூட்டத்துடன் சூரபன்மனே எதிர்கொண்டு சேர்தலும். 16

கண்ட சூரன் கதுமெனத் தன்பெருந், தண்ட முன்சென்று தம்பியர் தம்மொடு
மண்டு காதலின் மன்னிய தேசிகன், புண்ட ரீகமென் பொன்னடி தாழ்ந்தெழ.

குருவானவர் தம்மை நோக்கிவரக் கண்ட சூரன் அதிவிரைவுடன் தனது சேனேக்கு முன்னுகச் சென்று தனது தம்பிமாரொடு பெருகுகின்ற காதலுடன் குருதேவனின் தாமரை பூவையொத்த பொன்னடிகளில் தாழ்ந்து எழ. 17

நன்று வாழிய நாளுமென் ருசிகள், நின்று கூறி நிருதர்க் கிறைவனேத்
தன்று ணேக்கரத் தால்தழு விப்புகர், என்றும் வாழ்தன் னிருக்கைகொண் டேகினுன்.

நீவிர் நன்ருக நாளும் வாழ்வீராக என பல ஆசிமொழிகளேச் சூரன்முன் நின்று கூறி அசுரர் தலேவனுன சூரனே தனது துணேக்கரத்தால் தழுவி சுக்கிரன் தான் என்றும் வாழ்கின்ற இருக்கையில் அழைத்துச் சென்ருர். 18

ஏகு மெல்லே இளவற் கிளவலே, வாகு சேர்ந்தநம் மாப்படை போற்றென
யூக மோடு நிறீஇயுர வோனெடும், போகல் மேயினன் புந்தியில் சூரனே.

சுக்கிரன் சூரபன்மனே அழைத்துச் செல்லுங்கால் சிங்கனுக்கு இளேயதம்பியான தாரகனே சூரபன்மன் பார்த்து வீரம்பொருந்திய எமது பெரும்படையை போற்று வாயாக என அணி வகுத்து நின்ற சேனேயோடும் நிறுத்திவிட்டு உறுதியுடைய குருவோடும் நற்புத்தி இல்லாத சூரபன்மன் போவானுயினுன். 19

ஆரு யிர்த்துணே யான அரிமுகன், வார முற்றுடன் வந்திட வந்திடுஞ்
சூர பன்மனேச் சுக்கிரன் தன்னிடஞ், சேர வுய்த்துச் செயன்முறை நாடியே.

தனது உயிர் துணேயான சிங்கமுகன் மிகுவாரப் பாட்டுடன் பக்கராக வந்திட வருகின்ற சூரபன்மனே சுக்கிர பகவான் தனது இருப்பிடம் சேரும்படி அழைத்துச் சென்று அவனுக்குச் செய்யும் உபசாரங்களே நினேவிற் கொண்டு. 20

ஆச னங்கொடுத் தங்கண் இருத்தியே, நேச நெஞ்சொடு நீடவும் நல்லன
பேசி நீர்வரும் பெற்றியென் னேவெனுத், தேசி கன்சொலச் செம்மல் உரைசெய்வான்.

ஓர் ஆசனம்கொடுத்து அதில் சூரனே இருத்தி அன்புமிகும் நெஞ்சோடு நெடுநேரமாக நல்லவார்த்தைகளேப் பேசி, பின்னர் நீங்கள் என்னிடம் வந்த காரணம் யாதோ என குருவான சுக்கிரன் கேட்டலும் சூரபன்மன் சொல்லுவான், 21

**ஓங்கு வேள்வி உலப்பறச் செய்ததும், ஆங்க ணம்வந் தரனருள் செய்ததும்**
**தாங்க ரும்வளந் தந்ததுங் காசிபன், பாங்கர் வந்த பரிசும் பகர்ந்துமேல்.**

மேலோங்கிய யாகம் ஒன்றினை ஒய்வின்றிச் செய்ததும் அவ்விடத்து சிவ பிரான் வந்து அருள் செய்ததும் பெற்றுக்கொள்ள முடியாத பெருஞ் செல்வத்தைத் தந்ததும் அதன்பின்பு தந்தையான காசிபன்பால் வந்தமையும் கூறி இதன்மேலும். 22

**தாதை கூறிய தன்மையும் முற்றுற, ஓதி ,யாமினி ஊக்கி இயற்றிடும்**
**நீதி யாது நிகழ்த்துதி நீயெனத் தீது சால்மனத் தேசிகன் கூறுவான்.**

தந்தையான காசிபர் தங்களிடம் கூறியமையும் முற்றுகச் சொல்லி இனி யாங்கள் ஊக்கத்துடன் செய்யவேண்டிய நீதிகள் யாதென நீர் சொல்லுக எனலும் அது வேளை தீமை பொருந்திய மனமுடைய அசுர குரு சொல்வார். 23

**பாச மென்றும் பசுவென்றும் மேதகும், ஈச னென்றும் இசைப்பர் தலையெனப்**
**பேசல் மித்தை பிறிதலெ ஆவியுந் தேசு மேவு சிவனுமொன் றுருமே.**

சூரபன்மனே! இவ்வுலகில் அறிவுடையோர் எனப்படுவார் அறிய வேண்டிய பொருள்களாகப் பாசம் என்றும் பசு என்றும் எல்லார்க்கும் மேலான பதி என்றும் மூவகையாகச் சொல்வார்கள். இவைகள் மூன்றும் அநாதியாயுள்ள உண்மை பொருள் எனவும் சொல்வார்கள். ஆனல் பாசம் எனப் பேசப்படுவது பொய் வேறு இல்லை. உயிரும் ஒளியுடைய சிவனும் ஒன்றுகும். 24

**தீய நல்லன வேயெனச் செய்வினை, ஆயி ரண்டென்பர் அன்னவற் றேதுவால்**
**ஏயு மால்பிறப் ,பென்பர்இன் பக்கடல், தோயும் என்பர் துயருறு மென்பரால்.**

தீமையானது, நல்லது செயல் என செயப்படும் செயல்களை இரண்டு என்று சொல்வார்கள். இச் செயல்களுக்குப் பொருந்த ஓர் உயிரின் பிறப்பும் இறப்பும் அமையும் எனவும் நல்வினை புரிந்தார் இன்பக் கடலில் தோய்வாராகி இன்புறுவர் என்றும் தீயசெயல் செய்தார் துயரமடைவார் எனவும் சொல்வார்கள். 25

**ஒருமை யேயன்றி ஊழின் முறைவிராய், இருமை யுந்துய்க்கும் என்பர்அவ் வெல்லையில்**
**அரிய தொல்வினை யானவை ஈட்டுமேல், வருவ தற்கென்பர் மன்னுயிர் யாவையும்**

சீவான்மாக்களெல்லாம் தாங்கள் செய்த வினைகளின் பயனை அந்தப் பிறப்பின் மாத்திரமன்றி ஊழின் முறையாகப் பொருந்திய மறுபிறப்பிலும் அனுபவிக்கும் என்பார்கள். முன்னுள்ள வினையால் எய்திய பிறவியில் வினைகளை அனுபவிக்கும் அதே நேரத்து இனிவரும் பிறவிக்கும் ஏற்றதோர் வினையை அந்த மேலான உயிர்யாவும் பெறும் எனவும் சொல்லுவார். 26

**ஈட்டு கின்ற இருவினை யாற்றலான், 'மீட்டு மீட்டும் விரைவின் உதித்திடும்**
**பூட்டின் மேவும் பரிசுணர்ந் தன்னவை, கூட்டு மென்பர் குறிப்பறி தாஞ்சிவன்.**

இவ்வண்ணமாக பிறவிதோறும் தேடுகின்ற இருவகை வினையின் வலிமையால் பின்னும் பின்னும் விரைவில் இவ்வுயிர்கள் பிறக்கும் இறக்கும். இவ்வுயிர்கள் செய்த

வினைகளின் தன்மைகளுக்கேற்ப இன்ப துன்பங்களை கூட்டிவைப்பார் குறித்து யாவ ராலும் அறிதற்கரிய சிவபிரான் என்பார்கள். 27

சொற்ற ஆதியுந் தோமுறு வான்றனை, உற்ற ஆவியும் ஒன்றல ஒன்றெனில்
குற்ற மாகும்அக் கோமுதற் கென்பரால், மற்ற தற்கு வரன்முறை கேட்டிநீ.

ஆதியான சிவனும், குற்றம் உடைய பெரிய பாசத்தை பெற்றிருக்கின்ற உயிரும் ஒன்றல்ல. அப்படி ஒன்றெனக் கூறினல் அது அந்தப் பதியான சிவனுக்கு குற்றமாகும் எனச் சொல்வார்கள். இவர்கள் சொல்வது பொருத்தமில்லாதது. இதற்குரிய வரன் முறையை விளக்குகின்றேன் கேட்பாயாக. 28

ஆதி யந்தமின் றுகி அமலமாஞ், சோதி யாயமர் தொல்சிவன் ஆடலின்
காத லாகிக் கருதுதல் மாயையாற், பூதம் யாவும் பிறவும் புரிவனல்.

முதலும் முடிவும் இல்லாததாய் மலப்பற்றில்லாத தூய சோதியாய் முன்னைப் பழம்பொருளான சிவனே திருவிளையாடல் ஒன்றில் காதலாகி தானே நினைந்து தானே தனது மாயையால் மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனும் ஐந்து பூதங்களையும் வேறு தத்துவங்களையும் தோற்றுவித்தருளினர். 29

இடங்கொள் மாயையின் யாக்கைக ளாயின, அடங்க வும்நல்கி அன்னவற் றூடுதான்
கடங்கொள் வானிற் கலந்துமற் றவ்வுடல், மடங்குமெல்லையின் மன்னுவன் தொன்மைபோல்

தம்மிடத்தின் நின்றும் தோன்றிய மாயையின் காரணமாக சரீரங்கள் யாவற்றை எங்கும் படைத்து அந்த உடலங்களூடாக தான் குடத்துள் இருக்கும் ஆகாயம் போன்று கலந்து இருப்பார். அந்த உடலம் அழியும் காலத்தில் குடமுடைந்தால் வெளி வெளியானது போல தானும் பழமைபோல் ஒன்ருக இருப்பார். 30

இத்தி றத்தின்எஞ் ஞான் றும்அவ் வெல்லைநீர், நித்தன் ஆடல் நிலைமை புரிந்திடும்
மித்தை யாகும் வினைகளும் யாவையும், முத்தி தானு முயல்வதும் அன்னதே,

இத்திறமாக எக்காலத்தும் அந்த அளவு காணமுடியாத நித்திய பொருளான சிவன் தமது திருவிளையாட்டைச் செய்திடுவார். ஆதலினுலே நல்வினை தீவினை என்னும்இருவினைகளும் பிறவும் பொய்யாகும். முத்தி என்பதும் அதைப்பெற வேண்டுமென முயற்சி செய்வதும் அங்ஙனமே பொய்யாகும். 31

பொய்ய தாகும் பொறிபுலம் என்றிடின், மெய்ய தோவவை காணும் விழுப்பொருள்
மையில் புந்தியும் வாக்கும் வடிவமுஞ், செய்ய நின்ற செயல்களும் அன்னதே.

இவ்வண்ணமாக ஐம்பொறிகளும் ஐம்புலங்களும் பொய்யாகுமென்ருல் இந்தப் பொய்யான பொறிகள் காண்கின்ற சிறந்த பொருள்களானவை உண்மையாகுமா? ஆகவே குற்றமற்ற புத்தியும் வாக்கும் வடிவமும் செய்கின்ற செயல்களும் எல்லாமே பொய்யாகும். பொய்யால் காண்பன பொய்யாகும். 32

அன்ன செய்கைகள் அன்மைய தாகுமேற், பின்னர் அங்கதன் பெற்றியின் வந்திடும்
இன்னல் இன்பம் இரண்டுமெய் யாகுமோ, சொன்ன முன்னைத் துணிபின வாகுமே.

அதின் செய்கைகள் பொய்யானுல் பின்னதாக இந்தச் செயல்கள் ஊடாக வந்திடுகின்ற இன்னல்கள் இன்பங்கள் இரண்டும் மெய்யாகுமோ? நான் முன்னர் சொல்லிய துணிபாக பொய்யேயாகும். 33

**மித்தை தன்னையும் மெய்யெனக் கொள்ளினும், அத்த குந்துய ரானதும் இன்பமும்**
**நித்த மாகும் நிமலனை எய்துமோ, பொத்தி லான பொதியுடற் காகுமே.**

பொய்யான பொறிகளை உடலை மெய்யென்று சொன்னுலும் இன்ப துன்பங்களானவை நித்தியரான சிவபிரானை அடையுமோ? அடையாதே. தசை தோலால் மூடப்பெற்ற இல்லமாயிருக்கின்ற உடம்பிற்காகும். இன்ப துன்பம் உடம்பிற்கே அன்றி உயிராகிய சிவனுக்கு சேராது என்றுர். 34

**தோன்று கின்றதும் துண்ணென மாய்வதும், ஏன்று செய்வினை யாவதுஞ் செய்வதும்**
**ஆன்ற தற்பரற் கில்லை அனையதை, ஊன்றி நாடின் உடற்குறு பெற்றியே.**

பிறத்தலும் பின்னர் விரைவில் இறத்தலும் செயல்கள் யாவையும் முயன்று செய்வதும் ஆகிய இவை எங்கும் நிறைந்து நிற்கின்ற தற்பரனுன சிவனுக்கு இல்லை. இதனை மனதால் ஊன்றிச் சிந்தித்தால் பிறப்பு இறப்பு, இன்ப துன்பம் உடற்குப் பொருந்தியதே யாகும். 35

**போவ தும்வரு கின்றதும் பொற்புடன், ஆவ தும்பின் அழிவதுஞ் செய்வினை**
**ஏவ தும்மெண்ணி லாத கடந்தோறும், மேவு கின்றதோர் விண்ணினுக் காகுமோ.**

இதற்கு ஓர் காரணம் சொல்வதானுல் எண்ணற்ற குடங்களில் இருக்கும் ஆகாயத்திற்கு போவதோ, வருவதோ, பொலிவுடன் தோன்றுவதோ பின்னர் மறைதலோ அல்லது செய்கின்ற தொழில்களுமாகியவை சேருமோ. குடம் அசைந்ததேயன்றி வெளியசைவில்லை. 36

**அன்ன போல்எங்கும் ஆவியொன் றுகியே, துன்னி நின்றிடு தொல்பரன் வேறுபா**
**டென்ன தும்மிலன் என்றுமொர் பெற்றியான், மன்னும்அங்கது வாய்மையென்**
**றோர்திநீ**

அன்னத்தைப் போல எல்லாவிடத்தும் உயிர் ஒன்றுகியே அமைந்து நிற்கின்றுர் ஆதியான சிவன். அவன் வேறுபாடு எக்காலமும் இலன். அன்றும் இன்றும் என்றும் ஓர் தன்மையாய் இருப்பவன். இதுதான் உண்மை என நீர் உணர், 37

**தஞ்ச மாகும் தருமநன் றுலென, நெஞ்ச கத்து நினைந்து புரிவதும்**
**விஞ்சு கின்ற வியன்பவந் தீதென, அஞ்சு கின்றது மாம்அறி வின்மையே.**

நமக்கு நன்மையைத் தருவது தருமம் என நன்றுக நெஞ்சிலே நினைந்து செய்வதும் மிகுகின்ற பெரியபாவம் தீது எனப்பயப்பட்டு விலக்குகின்றது அறிவிலாமை. 38

**யாது யாதுவந் தெய்திய தன்னதைத், தீது நன்றெனச் சிந்தைகொள் ளாதவை**
**ஆதி மாயையென் றுய்ந்தவை ஆற்றுதல், நீதி யான நெறிமைய தாகுமே.**

வாழ்விலே யாது யாது செய்ய வந்து சேர்கின்றதோ அதை தீமையோ நன்மையோ எனச் சிந்தை செய்யாது அவை எவையாயிருந்தாலும் ஆதியான மாயையே என ஆராய்ந்துணர்ந்து அவைகளை செய்தலே நீதியான முறையாகும். 39

தருமஞ் செய்க தவறுள பாவமாங், கருமஞ் செய்யற்க என்பர் கருத்திலார்
இருமை தன்னையும் யாவர்செய் தாலுமேல், வருவ தொன்றிலை மாயம்வித் தாகுமோ.

தருமத்தைச் செய்யுங்கள், தவறான பாவ கருமங்களைச் செய்யாதையுங்கள் என புத்தியில்லாதவர்கள் சொல்வார்கள். இந்த நல்ல தீய இருவினைகளையும் யார் செய்தாலும் மேல் விளையும் பலன் ஒன்றுமில்லை. 40

கனவின் எல்லையில் காமுறு நீரவும், இனைய வந்தவும் ஏனை இயற்கையும்
நனவு வந்துழி நாங்கண்ட தில்லையால், அனைய வாம்இவண் ஆற்றுஞ் செயலெலாம்

இது எப்படி எனில் நித்திரையில் கனவு காண்கின்றபோது கனவிலே நாம் விரும்புவதும் துக்கப்படுவதும் வேறு இயல்பான நிலைகளை அடைவதும் விழிப்பு வந்துள்ளபோது நாம் காணவில்லையே, அதைப் போல உடலூடாகச் செய்யப்பெறும் செயல்கள் யாவும் உடலற்றபோது ஒன்றுமில்லாது போகும். 41

இம்மை யாற்றும் இருவினை யின்பயன், அம்மை எய்தின் அன் றேவடை யப்படும்
பொய்ம்மை யேயது பொய்யிற் பிறப்பது, மெய்ம்மை யாகும தோசுடர் வேலினோய்.

ஒளியான வேலையுடைய சூரனே! இப் பிறவியில் செய்யும் இருவினைகளின் பயனுவது மறுபிறப்பு உண்டாயினன்றோ அடையப்படும். மறு பிறப்பு உண்டென்பது பொய். பொய்யிலே தோன்றுவது உண்மையாகுமோ.

நெறிய தாகுமிந் நீர்மையெ லாம்பிறர், அறிவ ரேயெனின் அன்னதொர் வேலையே
பெறுவர் யாமுறும் பெற்றியெ லாமவை, உறுதி யுண்டெனின் உண்மைய தாகுமே.

முறையான இந்தத் தன்மைகள் யாவையும் பிறர் தெரிந்து கொண்டால் அந் நிலையில் நாம் அடைகின்ற தகுதிகள் எல்லாவற்றையும் அடைவார்கள். நாம் கூறுவதெல்லாம் மனத்திடமுண்டானால் உண்மையாக விளங்கும். மனச்சஞ்சலமுற்றார்க்கு இவை தெளிவுறாது, உறுதியுடையார் உணர்வர் என்றார் சுக்கிரபகவான். 43

சிறிய ரென்றுஞ் சிலரைச் சிலரைமேல் நெறிய ரென்றும் நினைவது நீர்மையோ
இறுதி யில்லுயிர் யாவுமொன் றேயென, அறிதல் வேண்டுமஃ துண்மைய தாகுமே.

சிலரைச் சிறியவரென்றும், சிலரை மேலான நெறியுடையவரென்றும் நாம் நினைப்பது தகுதியோ? முடிவில்லாத உயிர்யாவும் ஒன்றென்று நாம் அறிதல் வேண்டும் இதுதான் உண்மையாகும். 44

உண்மை யேயிவை ஓதிபி னுர்உணர், நுண்மை யாம்இனி நுங்களுக் காகிய
வண்மை யுந்தொல் வழக்கமும் மற்றவுந், திண்மை யோடுரை செய்திடக் கேட்டிநீ.

நான் சொல்வது முழுவதும் உண்மையே. இவைகளை ஞானிகள் அறிந்து உணரும் நுட்பங்களாம். இனி இவ்வளவுடன் நிற்க, மேலாக உங்களுக்காகிய சிவன் அருள் வளங்களும் உமது முன்னோர் ஒழுகிவந்த வழக்கமும் மற்றவை பற்றியும் உறுதியாகச் சொல்வேன் நீ கேட்பாயாக என்றார். 45

**தேவர் தம்மினுஞ் சீதர ஞதியோர், ஏவர் தம்மினுஞ் ஏற்றம தாகிய**
**கோவி யற்கையுங் கொற்றமும் ஆணையும், ஓவில் செல்வமும் உன்னிடை யுற்றவே.**

தேவர்கள் தம்மிலும் மற்று மகாலெட்சுமி நாயகரான விஷ்ணுமூர்த்தி முதலாகச் சொல்லப்பெறும் எல்லாக் கடவுளர் தம்மிலும்பார்க்க மேன்மையான அரசியலை நடாத்தற்குரிய இயல்பான தகைமையும், வெற்றிகளும், யாரையும் கட்டுப் படுத்தக்கூடிய ஆணையும் குறைவுருத செல்வ வளங்களும் உன்னிடத்தாகப் பொருந்திக் கொண்டன. 46

உற்றதோர் மேன்மை நாடி உன்னைநீ பிரம மென்றே
தெற்றெனத் தெளிதி மற்றத் திசைமுகன் முதலோர் தம்மைப்
பற்றலை மேலோ ரென்று பணியலை இமையோர் உங்கள்
செற்றலர் அவரை வல்லே செறுமதி திருவுஞ் சிந்தி.

ஏனையோரால் அடையொணுத சீர் உன்னிடத்து உற்ற தன்மையான மேன்மையை நீ உணர்ந்து உன்னையே பிரமம் என்று ஐயமின்றித் தெளிந்துகொள்ளக் கடவாய் மற்றவராகிய பிரமதேவர் முதலோர் தம்மை உன்னிலும் மேம்பாடுடையவர் என நீ நினையாதே வணக்கம் செய்யாதே. நீ சடப்பொருளல்ல நிறைவான சித்துப் பொருள். தேவர்கள் உங்கள் பகைவர்கள் அவர்களை நீ விரைவில் அவருடைய செல்வத்துடன் அழித்துவிடுவாயாக. 47

இந்திர னென்போன் வானேர்க் கிறையவன் அவனேமுநென்னல்
அந்தமில் அவுணர் தங்கள் ஆருயிர் கொண்டான் அன்னுன்
உய்ந்தனன் போகா வண்ணம் ஒல்லையில் அவனைப் பற்றி
மைந்துறு நிகளஞ் சேர்த்தி வன்சிறை புரிதி மாதோ.

இந்திரன் என்பவன் தேவர்கட்டு அரசனுவன். அவனே முன்னுளில் எத்தனையோ அசுரர்களுடைய உயிரைச் சிதைத்தவன். அப்படிச் செய்த இந்திரன் தப்பி ஓடிவிடாதபடி அவனை விரைவில் தேடிப் பிடித்து வலிமையுடைய விலங்கைப் பூட்டி நீங்காத கொடும் சிறையில் வைப்பாய். 48

சிறையினை இழைத்துச் செய்யுந் தியன பலவுஞ் செய்து
மறைபுகல் முனிவர் தம்மை வானவர் தம்மைத் திக்கின்
இறையவர் தம்மை நாளும் ஏவல்கொண் டிடுதி அன்னுர்
உறைதரு பதங்க ளெல்லாம் உதவுதி அவுணர்க் கம்மா.

இந்திரனைச் சிறைவைத்து அவனுக்கு நீ செய்யக்கூடிய தண்டனைகளான தீமைகளைச் செய்து வேதமோதுகின்ற முனிவர்களையும் தேவர்களையும் திக்குப் பாலகரையும் தினந்தோறும் உனக்கு ஏவல் செய்யும்படி செய்விப்பாயாக. அவர்கள் இருக்கின்ற பதங்கள் எல்லாவற்றையும் நீ கைப்பற்றி அவர்கள் பதவிகள் எல்லாவற்றையும் அசுரர்க்குக் கொடுப்பாயாக. 49

கொலையொடு களவு காமங் குறித்திடும் வஞ்ச மெல்லாம்
நிலையெனப் புரிதி யற்றல் நினக்குமேல் வருந்தி தொன்றும்
இலையவை செய்தி டாயேல் இறைவநீ விரும்பிற் றெல்லாம்
உலகிடை ஒருங்கு நண்ணு உனக்கெவர் வெருவும் நீரார்.

கொலையோடு காம இன்பம் களவு ஒருவரைக் கெடுக்கும்படி நினைந்து செய்யும் வஞ்சனை யாவையும் நீ உனக்கு அவசியமாக வேண்டப்படும் நிலையான கருமங்கள் என நினைந்துகொள். அதைப் புரிந்தால் உனக்குத் தீதுகள் ஏதும் வந்திடும் எனப் பயப்படாதே. உனக்கு அச்செய்கைகளால் ஏதாகிலுமொரு தீமையும் இல்லை. ஓர் அரசனுகின்ற நீ இச்செயல்களைப் புரியாயேல் உன்னால் விரும்பப்படும் பொருள்கள் எல்லாம் உனக்கு ஒருமித்து வராது. அதுமட்டுமன்றி உனக்கு அஞ்சுவார் யாவருளர். 50

வண்டுழாய் மிலைச்சுஞ் சென்னி மால்விடைப் பாகன் தந்த
அண்டமா யிரமே லெட்டும் அனிகமோ டின்னே ஏகிக்
கண்டுகண் டவண்நீ செய்யுங் கடன்முறை இறைமை யாற்றி
எண்டிசை புகழ மீண்டே ஈண்டுவீற் றிருத்தி யென்ருன்.

வளம்பொருந்திய துளசி மாலையணிந்த முடியுடைய விஷ்ணுவென்னும் கடவுளான இடபத்திலே எழுந்தருளி வருகின்ற சிவபிரான் உனக்குக் கொடுத்தருளிய ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் உனது சேனையோடு இப்பொழுதே சென்று அவைகளைக் கண்டு கண்டு அந்தந்த இடங்களில் நீ செய்யவேண்டிய கடமைகளை அதிகாரங்களைச் செய்து எட்டுத் திக்கிலும் உள்ளோர் புகழும்படி எல்லா அண்டத்திலும் வெற்றிகொண்டு திரும்பிவந்து இவ்விடத்து அரசாண்டிருப்பாயாக என்றார். 51

வரம்பெறு படலம் முற்றிற்று.

---

# அண்டகோசப் படலம்

.........................

தியதோ ரினைய மாற்றஞ் செப்பலும் இதுநன் றெந்தை
ஏயின பணியில் நிற்பன் இறையவன் எனக்குத் தந்த
ஆயிரத் தெட்டென் றேதும் அண்டங்கள் நிலைமை யாவும்
நீயுரை யென்ன ஆசான் நிருபனுக் குரைக்க லுற்ருன்.

தீயதான இந்தத் துர்ப்புத்திகளைச் சூரபன்மனுக்கு சுக்கிராச்சாரி சொல்லி நிற்றலும் அதுகேட்ட சூரன் எந்தைபிரானே அது நன்று, நீர் ஏவியபடியே இப் பணிகளை நான் புரிந்திருப்பேன், அதுநிற்ப சிவபிரான் எனக்குத் தந்த ஆயிரத்தெட்டு என்று சொல்லப்பெறும் அண்டங்களின் நிலைமைகள் யாவையும் நீர் இப்போது எமக்கு எடுத்துச் சொல்லியருள்க எனலும் அதுவேளை சுக்கிரன் அரசனுன சூரபன்மனுக்குச் சொல்லத் தொடங்குவார். 1

மேலுள பொருளுந் தத்தம் விளைவது நிற்க இப்பால்
மூலமாம் பகுதி தன்னின் முளைத்திடும் புந்தி புந்தி
ஏலுறும் அகந்தை ஒன்றின் எய்தும்ஐம் புலனும் ஆங்கே
வாலிய ககனந் தொட்டு மாநிலங் காறும் வந்த.

பிரமமும் புருஷனும் ஆகிய மேலானவை எனப்படும் பொருள்கள் தத்தம் இயல்பான நிலையில் தொழிற்படுவன, அவை எவருக்கும் தெரியப்படாது. இது நிற்ப இப்பால் மூலப்பிரகிருதியிடத்திருந்து புத்தி தத்துவம் முளைத்திடும். அப்புத்தியிலிருந்து

தோன்றுகின்ற அகங்காரதத்துவத்தில் ஒன்றிலிருந்து ஐந்து புலன்களும் தோன்றும். அந்த ஐந்து புலன்களிலிருந்து தூய்மையான ஆகாயம் முதல் பெரிய பூவுலகம் வரையுமுள்ள மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து பூதமும் வந்தன.

இங்கு கூறப்பட்ட தோற்றமுறையாவது அகங்காரத்தினின்று சத்தமும், சத்தத்தினின்று ஆகாயமும், ஆகாயத்தினின்று பரிசமும், பரிசத்தினின்று வாயுவும், வாயுவினின்று ரூபமும், ரூபத்தினின்று நெருப்பும், நெருப்பிலிருந்து ரசமும், ரசத்தினின்று சலமும், சலத்தினின்று கந்தமும், கந்தத்துநின்று பூமியும் தோன்றுவன. 2

அப்பெரும் புவிக்குத் தானோர் ஆயிர கோடி யண்டம்
ஒப்பில வென்ன உண்டால் ஒன்றினுக் கொன்று மேலாச்
செப்புறு நிலைமைத் தன்று தெரிந்திடிற் பரந்து வைகும்
வைப்பென லாகும் அன்ன மற்றவை அம்பொன் வண்ணம்.

இந்தப் பெரிய பூமிக்கு உறுதுணையான வைப்புப்போல ஓராயிர கோடியெனும் தொகைப்பட்ட அண்டங்கள் ஒன்றினுக்கொன்று நிகரற்றன எனும்படியாக உள்ளன. இவைகள் ஒன்றினுக்கொன்று மேலாக இருக்கின்றன எனச் சொல்ல இயலாது இவை களைத் தெரிந்து நாடினல் எங்கும் பரந்திருப்பன. இவைகள் நாம் இருக்கும் பூகோள மான இப்பூமியேயன்றி வேறு பல பூமிகளையும் அவற்றின்பாலுள்ள அண்டங்களையும் அடக்கி விளங்குதலால் பரந்திருக்கும் வைப்புப்போல இருக்கும். இந்த அண்டங்கள் அழகிய பொன்வண்ணமானவை. 3

அங்கண்மா ஞானத் தண்டம் ஆயிர கோடி தன்னில்
இங்குநீ பெற்ற அண்டம் ஆயிரத் தெட்டி னுள்ளுந்
துங்கமாம் அண்ட மொன்றின் இயற்கையைச் சொல்லு கின்றேன்
செங்கைசேர் நெல்லி யென்னச் சிந்தையிற் காண்டி யன்றே.

இவ்வாருக இடமகன்ற பெரிய பூவுலகத்தின் கூருகி விளங்கும் ஆயிரகோடி அண்டங்களில் இங்கு நீ பெற்றுக்கொண்ட அண்டங்கள் ஆயிரத்தெட்டினுள்ளும் மேன்மையான அண்டம் ஒன்றினுடைய இயற்கையைச் சொல்லுகிறேன். அதை உன்னுடைய சிவந்த கையிலிருக்கும் நெல்லிக்கனி என்னும்படி உனது மனதில் தெளிந்து கண்டுகொள்வாயாக.

இங்கு சொல்லப்பட்ட அண்டம் ஒன்ருவது இப்பூமி தொடக்கமாக உள்ள பதினுலு உலகமும் அவற்றிற்குரிய இயல்புகளும் அவையைப் பற்றிச் சூழ்ந்துள்ள புவனங்களும் ஆகியவையாகும். இவ்வாறு சொல்லப்பெறும் அண்டம் ஒன்றைப் போலவே சூரபன்மன் பெற்றுள்ள ஆயிரத்தெட்டும் இதேபோல அமைந்தன. ஆகையால் இதன் இயல்பைக்கொண்டு மற்றவைகளையும் நீ அனுமானித்துக் காண்பாயாக என்றார் சுக்கிரபகவான். இக்கருத்தை மணிவாசகரும்

அண்டப்பகுதியின் உண்டைப் பிறக்கம், அளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி
ஒன்றினுக்கொன்று நின்றெழில் பகரின், நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன. 4

எனக் கூறுதல் காண்க.

கதிரெழு துகள்எண் மூன்று கசாக்கிர கந்தான் ஆதும்
இதுதொகை இருநான் குற்ற திலீக்கையவ் விலீக்கை யெட்டால்
உதிதரும் யூகை யன்ன யூகைஎட் டியவை யென்ப
அதினிரு நான்கு கொண்ட தங்குலத் தளவை யாமே.

சூரிய ஒளி யன்னல் அல்லது துவாரம் ஊடாக உட்தோன்றினல் அப்போது அந்தக் கிரணத்தில் பரம அனுக்கள் தோன்றுவன. இந்த பரம அணுவான கதிர் ஏழு கொண்டது மயிர்நுனி எனப்படும், மயிர்நுனி (சசாக்கிரம்) எட்டுக்கொண்டது ஈர் எனப்படும், ஈர் எட்டுக்கொண்டது ஓர் பேனுகும். பேன் எட்டுச் சேர்ந்தால் ஓர் நெல் இடையாகும். நெல்லிடை எட்டுக் கொண்டது ஓர் அங்குலம் எனலாம். 5

அங்குலம் அறுநான் கெய்தின் அதுகரம் கரமோர் நான்கு
தங்குதல் தனுவென் ருகும் தனுவிரண் டதுஓர் தண்டம்
இங்குறு தண்ட மான இராயிரங் குரேசத் தெல்லை
பங்கமில் குரோசம் நான்கோ ரியோசனைப் பால தாமே.

இந்த அங்குலம் இருபத்தினன்கு கொண்டது ஒருமுழம். நான்கு முழம் கொண்டது ஓர் வில்விடை எனப்படும். வில்இடை இரண்டு கொண்டது தண்டம் எனப்படும். ஈங்கே அளவுகூறிய தண்டம் இரண்டாயிரம் கொண்டது ஓர் குரோசம் எனப்படும் எல்லையாகும். குறைவில்லாத குரோசம் நான்கு கொண்டது ஒரு யோசனை என்னும் தூர அளவாகும். இதன்படி நீட்டல் அளவையை முதல் சொன்னுர் சுக்கிரன். 6

அந்தயோ சனையின் எல்லை ஐம்பதிற் றிரண்டு கோடி
வந்ததிவ் வண்டத் திற்கும் மாயிரும் பரவை வைப்பு
முந்திய நிவப்புமாகும் மொழிந்திடும் அண்டங் கட்கும்
இந்தவா றளவைத் தென்றே எண்ணுதி இலைகொள் வேலோய்.

இவ்வாருகச் சொல்லப்பெற்ற யோசனையின் அளவு நூறுகோடி கொண்டது இந்த அண்டத்திற்கு மிகப்பெரிய விசாலமும், சிறந்துள்ள உயரமும் ஆகும். முன் சொல்லப்பெற்ற பதினன்கு உலகங்களும் புவனங்களுமாகியவைகளமைந்திருக்கும் பரப்பு நீளம் நூறுகோடி, அகலமும் நூறுகோடி யோசனையாகும். இதைப்போல மற்றைய அண்டங்கட்கும் அளவு உள்ளது என்றே எண்ணுவாயாக இலைபோலும் வடிவுடைய வேலேந்திய சூரபன்மனே. 7

ஒண்புவ னிக்குக் கீழாம் யோசனை ஐம்பான் கோடி
திண்புவி தனக்கு மேலாய்ச் சேர்தரும் அளவும் அஃதே
மண்புகழ் மேரு வுக்கு மாதிரம் அவையோ ரெட்டும்
எண்படும் ஐம்பான் கோடி கடாகத்தின் எல்லை யோடும்.

சிறப்புடைய இந்தப் பூமிக்கு கீழாக உள்ளது ஐம்பதுகோடி யோசனையாம். இந்தப் பூமிக்கு மேலாக உள்ளதும் அதேபோல ஐம்பது கோடியாம். பூமியில் உள்ளாரால் புகழப்படுகின்ற மேருமலைக்கு திக்குகளில் விளங்கும் எட்டுத்திசைகளும் அண்டச் சுவர்வரையும் இருபுறமுமாக ஐம்பது கோடி யோசனை நீண்டிருக்கும். அண்டத்தில் நடுவில் பூமியும் பூமியின் நடுவில் மேருமலையும் உண்டு. அதனலே மேருமலை மத்தியமாகக் கொண்டு இருபுறமும் திசைகள் எட்டும் ஐம்பது ஐம்பது கோடி யோசனைக் கணக்கில் ஓடும் என்ருர். 8

அண்டமார் கடமோர் கோடி அதற்குமீ தினிலோர் கோடி
திண்டிறல் காலச் செந்தீ உருத்திரர் செம்பொற் கோயில்
ஒண்டழற் கற்றை யுள்ள தொருபது கோடி மீக்கட்
கொண்டெழு தூம வெல்லை குனிக்கின்றைங் கோடி யாமே.

இந்த அண்டச் சுவரின் (கடாகம்) கனம் ஒருகோடி யோசனையாகும். இதற்கு மேலாக ஒருகோடி யோசனை தூரத்தில் மிக்க வலிமையுடைய காலக்கினி உருத்திர மூர்த்தியினுடைய செம்பொன் மயமான கோயில் இருக்கின்றது. அந்த உருத்திர பகவானின் அக்கினிச் சுவாலை பரம்புகின்ற இடம் பத்துக்கோடி யோசனை அளவாம். அதன் மேலாகக் கிளம்பி எழுகின்ற புகை செல்லும் எல்லையை அளவிடின் ஐந்து கோடி யோசனையாகும். 9

அரித்தவி சுயர்ச்சி ஆங்கோர் ஆயிரம் அளவைத் தாகும்
பரத்தலும் அதற்கி ரட்டி படர்தரு காலச் செந்தீ
உருத்திரர் அழலின் மேனி யோசனை அயுத மாகுந்
திருத்தரு பலகை வாள்வில் செஞ்சர மேந்திச் சேர்வார்.

இந்த காலாக்கினி உருத்திரமூர்த்தி வீற்றிருந்தருளுகின்ற சிம்மாசனத்தின் உயர்ச்சி ஆயிரம் யோசனை அளவை உடையதாயிருக்கும், அந்த சிம்மாசனத்தின் அகலமும் இரண்டாயிரம் யோசனை அளவையாகும். இந்த உருத்திர மூர்த்தியின் நெருப்பாகிய திருமேனி பதினாயிரம் யோசனை நீளமுடையதாயிருக்கும் அவர் கையிலே பலகையும். வாளும், வில்லும், சிவந்த பாணம் ஆகியவற்றை ஏந்திபவண்ணம் சிம்மாசனத்து வீற்றிருப்பர். 10

ஓங்கிய காலச் செந்தீ யுருத்திரர் தம்மைப் போல்வார்
ஆங்கொரு பதின்மர் சூழ்வர் அன்னவர் ஏவல் ஆற்றிப்
பாங்குற வொருபான் கோடிப் பரிசன மேவும் அன்னோர்
பூங்கழல் வழுத்தி ஆதி கமடம்அப் புவனம் வைகும்.

அவ்விடத்தில் சிறந்த காலாக்கினி உருத்திரமூர்த்தியை வடிவத்தில் ஒத்தவர்களாகிய இன்னும் வேறு பத்து உருத்திர மூர்த்திகள் சேர்ந்திருப்பர், இந்தப் பத்துப் பேருடைய ஏவல்களைச் செய்துகொண்டு பத்துக்கோடி கணங்கள் பரிவாரங்களாக இருக்கும். அவர்களுடைய மலர்போன்ற திருவடிகளைத் தியானித்து துதித்துக் கொண்டு ஆதியான ஆமை அந்தப் புவனத்தில் இருக்கும். 11

அன்னதோர் புவன மீக்கண் அடுக்குறு நிலைய வாகித்
துன்னுறு நாலேழ் கோடி தொகைப்படு நிரயத் தெல்லை
உன்னத மான கோடி ஒன்றெழி முப்பான் மேலும்
பன்னிரண் டிலக்கம் அண்டத் தளவுறும் பரப்பு மன்னே.

அப்படியான புவன மேலாக அடுக்கடுக்காகப் பொருந்திய நிலையில் இருபத்தெட்டுக்கோடி எனும் தொகையுடைய நரகங்கள் இருக்கும். இந் நரகத்தின் எல்லையின் உயரமானது இருபத்தொன்பது கோடியே பன்னிரண்டிலக்கம் யோசனை உடையதாயிருக்கும். இதன் பரப்பு (விலாசம்) அண்டச் சுவர்வரையும் இருக்கும். 12

உற்றிடு நிரய மீதில் ஒன்றிலா இலக்கம் நூறு
பெற்றிடு முயர்வு தன்னிற் பிறங்குமோர் புவனம் கீழ்மண்
பற்றிய இரும்பு நாப்பண் பச்சிமம் பசும்பொற் சோதி
மற்றதன் மேல்பா கதத்தில் வதிவர்கூர் மாண்டர் என்போர்,

இவ்வாறு சொல்லப்பெற்ற நரகத்தின் மேலாக தொன்னூற்றென்பது இலக்கம் யோசனை என்னும் உயர்வு பொருந்திய இடத்திலே ஓர் புவனம் (பூமி) விளங்கி இருக்கும். இந்த உலகின் கீழ்ப்பாகம் மண்மயமாகவும் நடுப்பாகம் இருப்பாகப்பற்றிக் கொண்டும், மேற்புறத்தாக சோதியாய் விளங்கும் பொன்னாகவும் இருக்கும். இதன் மேற்புறத்தில் கூர் மாண்டர் என்னும் உருத்திமூர்த்தி இருப்பார். 13

காழக முகத்தர் கூர்வாய்க் கணிச்சியம் படைசேர் கையர்
ஊழியங் கனலை அன்ன உருவினர் திரியுங் கண்ணர்
மாழையம் பீட மீக்கண் வைகுகூர் மாண்டர் தம்பால்
சூழுருத் திரராய் உள்ளோர் தொகுதியை அளக்கொ ணாதால்.

இந்தக் கூர்மாண்ட உருத்திரர் கருமையான முகம் உடையர். கூரிய வாயை யுடைய மழுப்படையைக் கையில் ஏந்தியவர். ஊழிக்காலத்து அக்கினியை ஒத்த உருவினை உடையராய் பொன்னாலாகிய பீடத்தின் மேலாக இருப்பார். இந்தக் கூர் மாண்ட உருத்திரமூர்த்தியைச் சூழ்ந்திருக்கும் பரிவார உருத்திர மூர்த்திகளின் தொகை இவ்வளவு என அளக்கமுடியாது. 14

அப்புவ னத்து மீதே அந்தரம் இலக்க மொன்பான்
செப்புவர் அதனுக் கும்பர் சிறந்தபா தலங்கள் என்ப
ஒப்பறு பிலமொன் றற்கே ஒன்பஃதி லக்க மாக
இப்படி அறுபான் மூன்றும் இலக்கமேழ் பிலத்தின் எல்லை.

இந்த உலகத்தின்மேலே ஓர் வெளி இடம் உண்டு. அதை ஒன்பது இலக்கம் யோசனை எனச் சொல்வார்கள். அதனுக்கு மேலாக உள்ள உலகங்களை சிறந்த பாதாள உலகங்கள் என்பார்கள். ஒவ்வொரு பாதாள உலகத்திற்கும் இடையே ஒன் பது இலக்கம் யோசனை தூரம் ஆக ஏழுபாதாள உலகங்களின் எல்லையானது அறுபத்தி மூன்று இலக்கம் யோசனையாகும். 15

பரத்தினி லுறுங்க னிட்ட பாதலம் எட்டி லக்கம்
அரத்தினுக் ககற்சி வெவ்வே றயுதமாம் அவைமுப் பாகம்
உரத்தகும் அவுணர் கீழ்ப்பால் ஒள்ளெயிற் றுரகர் நாப்பண்
திருத்தகும் அரக்கர் மேல்பால் சிறந்துவீற் றிருந்து வாழ்வோர்.

முற்கூறிய ஏழு பாதாள உலகங்கட்கும் மேலாக கனிட்ட பாதலம் என்னும் உலகம் எட்டிலக்கம் யோசனை உயரம் உடையதாய் இருக்கும். அந்தப் பாதாள உலகங்கட்கு அகற்சி தனித்தனி பதினாயிரம் யோசனையாகும். இந்த பாதாள உலகங்கள் மூன்று பாகமாயிருக்கும். இந்த மூன்று பாகத்தின் கீழ்ப்பாகத்து வலிமை மிகுந்த அசுரரும் நடுப்பாகத்து கூரிய பற்களைஉடைய நாகரும் மேல்பாகத்து சிறப் புடைய இராக்கதரும் சிறந்து வாழ்வோர். 16

இதன்மிசை இலக்க மொன்பான் ஆடகர் இருக்கை யாகும்
இதன்மிசை வெளியோர் கோடி இலக்கமும் இருப துண்டால்
இதன்மிசைக் களிறு பாந்தள் எட்டுடன் சேடன் ஏந்தும்
இதன்மிசைப் புவியின் ஈட்டம் எண்பஃதி லக்க மாமே.

இந்த பாதாளங்களுக்கு மேலாக ஒன்பது இலக்க யோசனை தூரத்தில் ஆடகேச உருத்திரமூர்த்தியின் இருப்பிடமாகும் இதற்குமேலாக ஒருகோடி இருபது இலக்கம் யோசனை தூரம் ஓர் வெளி உண்டு. அதற்கு மேலாக திக்கு யானைகள் எட்டு நாகங்கள் ஆதிசேடன் என்னும் நாகமானவை தாங்கி இருக்கின்ற பூமி உண்டு. இதன் அளவு எண்பது இலக்கம் யோசனையாம். 17

ஈடுறு பிலங்கட் கெல்லாம் இறைவராய்ப் பாது காப்போர்
ஆடகர் தாமே நாகர் அவுணர்வாள் அரக்கர் அன்னோர்
தாடொழு சனங்கள் அண்ட கடமுதல் தரையீ றாகக்
கோடியோர் ஐம்பான் ஆகுங் குணித்தனை கோடி யன்றே.

இவ்வாறான பாதாள உலகங்கட்கெல்லாம் அரசராக இருந்து இவற்றினைப் பாதுகாப்பவர் ஆடகேச்சரர் என்னும் உருத்திரமூர்த்தியர்கும். நாகர்களும் அசுரர்களும் வளைந்து கூரிய பற்களையுடைய இராட்சதர் ஆகிய சனங்கள் ஆடகேச உருத்திர மூர்த்தியின் திருவடி சேவிக்கின்றவர்களாவர். அண்டச்சுவர் முதல் இப்பூமிவரைக்கும் உள்ள கீழ்ப்பாகத்தின் உள்ள தூரத்தின் கணக்கு ஐம்பதுகோடி யோசனையாகும் இதனை நீ கணித்து அறிந்துகொள்.

பூமியின்கீழ் ஐம்பது கோடியோசனை விபரம்

| | |
|---|---|
| கிழண்டகடாகம் ( அண்டச் சுவர் ) | 1 00 00 000 |
| காலாக்கினி உருத்திரபதம் | 16 00 00 000 |
| நரகலோகம் | 29 12 00 000 |
| கூர்மாண்ட உருத்திரபதம் | 99 00 000 |
| வெளி இடம் | 9 00 000 |
| பாதாள உலகம் ஏழு | 63 00 000 |
| கனிட்ட பாதாளம் | 8 00 000 |
| ஆடகேசர் புவனம் | 9 00 000 |
| வெளியிடம் | 1 20 00 000 |
| பூமி | 80 00 000 |
| ஆகக் கூடியது | 50 00 00 000 |

18

பலவகைப் பிலங்கட் கெலாம் பரமதாய் உற்ற தொல்பார்
உலகினுள் விரியும் அங்கண் உள்ளவும் உரைப்பன் கேட்டி
குலவிய சம்பு சாகங் குசைகிர வுஞ்சம் கோதில்
இலவுகோ மேத கம்புட் கரம்இவை ஏழு தீவே.

சூரபன்மனே! பலவகையான பாதாள உலகங்கட்கெல்லாம் மேல் பொருந்திய தாய் உள்ள பழைமையான பூமியின் விரிவும் அங்குள்ள இயல்புகள்பற்றியும் உனக்கு உரைப்பேன் கேள். சிறப்புடைய இந்தப்பூமி மண்டலம் சம்புத் தீவு, சாகத்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, குறைவிலா சான்மலித்தீவு கோமேதகத்தீவு, புட்கரத் தீவு என ஏழு கோளங்களாகியன. 19

பரவுமிவ் வுலகில் உப்புப் பால்தயிர் நெய்யே கன்னல்
இரதமா மதுநீ ராகுஞ் எழுகடல் ஏழு தீவும்
வரன்முறை விரவிச் சூழும் மற்றதற் கப்பால் சொன்னத்
தரையது சூழ்ந்து நிற்கும் சக்கர வாளச் சயம்.

பரந்து விளங்குகின்ற இப் பூமிகள் ஏழிலும் சம்புத்தீவு உப்புச்சமுத்திரத்தாலும் சாகத்தீவு பால் சமுத்திரத்தாலும் குசைத்தீவு தயிர்சமுத்திரத்தாலும், கிரவுஞ்சத் தீவு நெய்ச்சமுத்திரத்தாலும், சான்மலித்தீவு கருப்பஞ்சாற்றுக் கடலாலும், கோமேதக்தீவு தேன் கடலாலும், புட்கரத்தீவு சுத்த நீர்ச்சமுத்திரத்தாலும் சூழப் பெற்று விளங்கும் கோளங்களாகும். இதற்கு அப்பால் உள்ள இடம் பொன்னினு லான பூமியாகும். அப்பூமியால் சூழப்பட்டு இருக்கும் சக்கரவாளம் என்னும் மலை. 20

அன்னதற் கப்பால் வேலைக் கரசனும் புறத்தி லாழி
பின்னது தனக்கும் அப்பால் பேரிருள் சேர்ந்த ஞாலம்
மன்னவ காண்டி அப்பால் வலிகெழும் அண்டத் தோடு
துன்னுமிப் பொருள்கள் யாவுஞ் சூழ்ந்துகொண் டிருக்கு மன்றே.

அதனுக்கும் அப்பால் சமுத்திரங்கட்கு எல்லாம் அரசனை புறவாழி என்னும் சமுத்திரம் உண்டு. அதற்கும் அப்பால் பெரிய இருள்சேர்ந்த இருட்பூமி உண்டு. இதனை எல்லாம் சூரனே நீ சென்று கண்டுகொள். அதற்கப்பால் வலிகொண்ட அண்டத்துடன் இங்குசொல்லிய பொருள்கள் யாவும் சூழ்ந்துகொண்டிருக்கும். 21

எல்லைதீர் முன்னைத் தீவோ ரிலக்கமாங் கடலும் அற்றே
அல்லன தீவும் நேமி அதற்கதற் கிரட்டி யாகச்
சொல்லினர் ஆங்ஙன் கண்ட தொகையிரு கோடி அன்றி
நல்லதோர் ஐம்பான் மேலும் நான்கெனும் இலக்க மாமே.

அளவு காணப்படாத சம்புத்தீவின் பரப்பு ஒரு இலக்கம் யோசனையாகும் அதனைச் சூழ்ந்த கடலும் அப்படி ஒரு இலக்கயோசனையாம். இதைவிட மற்றய ஆறு தீவு களும் அதனைச் சூழந்த கடல்களும் ஒவ்வொன்றும் முன்னதிலும் இரட்டிப்பங்கான பரப்பளவாக அமைந்துள்ளன. இவற்றையெல்லாம் கணக்கிட்டுக் கண்டதொகை நன்மையான இரண்டுகோடியே ஐம்பத்து நான்கு இலக்கம் யோசனை எனச் சொல் வார்கள். 22

| இதன்கணக்கு இப்படி | பரப்பு யோசனை |
|---|---|
| சம்புத் தீவும் உப்புக்கடலும் ( நாம் இருப்பது ) | 2 00 000 |
| சாகத் தீவும் பாற்கடலும் | 4 00 000 |
| குசைத் தீவும் தயிர்க்கடலும் | 8 00 000 |
| கிரவுஞ்சத் தீவும் நெய்க்கடலும் | 16 00 000 |
| சான்மலித் தீவும் கருப்பஞ்சாற்றுக் கடலும் | 32 00 000 |
| கோமேதகத் தீவும் தேன்கடலும் | 64 00 000 |
| புட்கரத் தீவும் சுத்த நீர்க்கடலும் | 128 00 000 |
| ஏழு தீவும் கடலும் ஆகக் கூடியது | 254 00 000 |

ஐயிரு கோடி சொன்னத் தணிதலம் அதுசூழ் நேமிச்
சைப்மோர் அயுத மாகும் சார்தரு புறத்தின் நேமி
எய்திய கோடி மேலும் இருபதோ டிலக்க மேழாம்
மையிருள் சேர்ந்த பாரின் எல்லைமேல் வகுப்பன் மன்னே.

இதனுக்கும் அப்பாலுள்ள பொன் பூமியானது பத்துக்கோடி யோசனை பரப் புடையதாகும். இப் பொன்பூமி சூழ்ந்துள்ள சக்கரவாளம் என்னும் மலை பதினாயிரம் யோசனைப் பரப்பாகும். இதனைச் சார்ந்திருக்கின்ற புறவாழிச் சமுத்திரம் இருபத் தொருகோடியே ஏழுஇலக்கம் எனலாகும். இப்பால் இருட் பூமியின் எல்லையை நான் வகுத்துச் சொல்வேன் கேட்பாயாக. 23

ஆரிருள் உலகம் முப்பான் அஞ்செனுங் கோடி மேலும்
ஓரொரு பத்தொன் பானூ றுற்றநான் கயுதமாகும்
பேரிருள் சூழ்ந்த அண்டப் பித்திகைக் கனமோர் கோடி
பாரிடை யகலந் தேரில் பாதியோர் ஐம்பான் கோடி.

கொடிய இருள் உலகம் பதினைந்து கோடி பத்தொன்பதிலட்சத்து நாற்பதி ஞயிரம் யோசனையாகும். இந்த இருள் பூமியைச் சூழ்ந்துள்ள அண்டச் சுவரின் கனம் ஒருகோடியாகும். பூமியின் அகலத்தை அறிவதனுல் சம்புத்தீவின் நடுவிலிருந்து ஒரு பாதியுடன் ஐம்பது கோடியாகும். பாதி அளவு என்றது சம்புத் தீவின் நடுவிலுள்ள மேருமலையின் இருபுறமும் கணக்கிடும் வழி ஒவ்வோர் புறமும் ஐம்பது கோடி யோசனையாகும். 24

இதன் கணக்கு விபரம்

| | | |
|---|---|---|
| சம்புத் தீவின் பாதி | 50 000 | யோசனை |
| ஏனைய ஆறுதீவுகளும் கடலும் | 2 53 00 000 | |
| பொன்னிலம் | 10 00 00 000 | |
| சக்கரவாளமலை | 10 000 | |
| புறவாழி | 21 27 00 000 | |
| இருள் நிலம் | 15 19 40 000 | |
| அண்டப் பித்தியின் கனம் | 1 00 00 000 | |
| ஆகக்கூடியது | 50 00 00 000 | யோசனை |

நடைதரு தொன்னூ லாற்றன் நாம்புகல் கணிதந் தன்னை
உடையதோர் திசையே இவ்வா றெழிந்தமா திரத்தும் வைக்கின்
வடகொடு தென்றி கீழ்மே மற்றுள கோண முற்றும்
நொடிதரிற் கோடி கோடி நூறுயோ சனைய தாமே.

உலக வழக்கமாகி நடைபெற்று வருகின்ற பழைய நூல்களின் பிரகாரம் நாம் சொல்லிய இந்தக் கணக்கினை ஒரு திக்கில் அல்லாது மற்றைய திக்கிலும் வைத்துச் சொன்னல் வடக்கிலிருந்து தெற்கும், கிழக்கிருந்து மேற்கும் மற்றுள்ள கோணங் களிலும் தனித்தனி ஐம்பதின் இரட்டியான நூறுகோடி யோசனை தூரமாகும். 25

முள்ளுடை மூலமான முண்டகத் தவிசின் மேய
வள்ளறன் வலது மொய்ம்பான் வசந்தசா யம்பு மைந்தன்
அள்ளிலை வேற்கை நம்பி அன்புடை விரதன் ஞாலம்
உள்ளதோ ரெல்லை முற்றும் ஒருதனிக் குடையுள் வைத்தான்,

முள்ளோடு கூடிய தண்டுடன் எவற்றிற்கும் மூலத்துள்ள தாமரை மலர் ஆசனத் தில் வீற்றிருந்த வள்ளலான பிரமதேவரின் வலது தோளின் நின்றும் தோன்றினன் சுவாயம்பு என்பவன். இவன் கூரிய இலைபோலும் வேலைக் கையில் ஏந்திய வள்ளலான முருகப் பெருமான்பால் அன்புடைய விரத நியமத்தை உடையவன். அவன் இப் பூமிமுழுவதும் உள்ள எல்லை அனைத்தையும் தனது ஒரு குடையின்கீழ் அமையும் வண்ணம் ஆணைசெலுத்தி அரசாண்டான். 26

அங்கவன் தனது மைந்தர் அங்கித் ரசன்மே தாதி
துக்கமாம் வபுட்டி ேேடு சோதிட்டுத் துதிமான் தொல்சீர்
தங்குமவ் வியனே மிக்க சவனனும் எழுவர் தாமும்
பங்குகொண் டேழு தீவும் பாதுகாத் தரசு செய்தார்.

அந்தச் சுவாயம்புவின் புதல்வராக ஏழுபேர் தோன்றினர்கள். அவர்கள் அங்கிதீரன், மேதாதி, உயர்வுடைய வபுட்டு, சோதிட்டு, துதிமான், தொன்மையான சிறப்புடைய அவ்வியன், மேலான சவனன் எனப்படுவர். இவர்கள் இந்த ஏழு தீவுகளையும் பங்கிட்டு பாதுகாத்து அரசாண்டார்கள். 27

சீரியசம் புத்தீபம் புரந்த அங்கி தீரன்என்போன் தான் அருளுஞ் சிறுவராயோர்
பாரதன்கிம் புருடன் அரிகேது மாலன் பத்திரா சுவனன் இளா விருத னென்போன்
ஏருடைய இரமியன்நல் லேமப் பேரோன் இயற்தருவாம் ஒன்பதின்மர் இவர்கன் பேரால்
ஓரொருவர்க் கொவ்வொன்று நாவற் றீவை ஒன்பதுகண் டமதாக்கி உதவி னுனல்,

சிறப்புடைய சம்புத் தீவை அரசாண்ட அங்கிதீரன் என்பவன் ஒன்பது பிள்ளைகளைப் பெற்றான். அவர்கள் பாரதன், கிம்புருடன், அரி, கேதுமாலன், பத்திராசுவனன், இளாவிருதன், அழகிய இரமியன்,நல்ல இரணியன், தகுதியுடைய குரு எனப்படுவர், இந்த ஒன்பது பிள்ளைகளின் பெயரால் சம்புத் தீவை ஒவ்வொரு பெயருக்கும் ஒரு கண்டமாக ஒன்பது கண்டமாக்கி அந்தப் பிள்ளைகளை அரசாளக் கொடுத்தான். 28

விண்ணுயர்சம் புத்தீவின் நடுவு நின்ற மேருவரை செங்கமலப் பொகுட்டுப் போல
நண்ணுமதற் கியோசனைஉன் னதம்எண் பத்து நான்குளவா பிரமாகும் ஞாலம் ஆழ்ந்த
தெண்ணிரண்டாயிரம் சென்னி யகலமும் முப்பா னிராயிரமா ம்பராரையெல்லை அதனிற்பாதி
வண்ணமிகு மேகலைமூன் றதனுள் உச்சி வாய்த்திடுமே கலையினிற் பல்சிகர மல்கும்.

மேலான உயர்வுடைய சம்புத் தீவில் நடுவில் நின்ற மேருமலையானது சிவந்த தாமரைப் பூ மொட்டுப்போல இருக்கும். அதன் உயரம் எண்பத்து நான்காயிரம் யோசனையாகும். அது பூமியில் ஆழ்ந்திருக்கும் பகுதியின் ஆழம் இரண்டாயிரம் யோசனையாகும். அதனுடைய முடியின் விசாலம் முப்பத்திராயிரம் யோசனையாகும், அந்த மலையின் அடிப்பாகம் பதினாறாயிரமாம். மேருமலையில் வண்ணம் உடைய மூன்று முடிகள் உள. உச்சியில் விளங்குகின்ற முடியில் பல சிறு குடுமிகள் இருக்கும். 29

மேருவரை அதற்குநடுப் பிரமன் மூதூர் மிக்கமனோ வதி,அதற்கு மேலைத் திக்கின்
நாரணன்வாழ் வைகுண்டம் வடகீழ் பாலின் நாதனுமர் சோதிக்கம் திசைக ளெட்டுஞ்
சீரியல்இந் திரன்முதலாம் எண்மர் தேயந் தெற்குமுதல் வடக்களவு மருங்கு தன்னில்
நேரிய தோர் தேசமது செவ்வே போகும் நெடும்பூழை யொன்றுளது நினைக்மாதோ.

மேருமலைக்கு நடுவணகப் பிரமதேவரின் முன்னை ஊராகிய மனோவதி இருக்கின்றது. அதற்கு மேற்குப் பக்கத்தில் நாராயணக் கடவுள் வாழ்கின்ற வைகுந்தம் இருப்பது, மேரு மலைக்கு வடகிழக்கே சிவபிரான் வீற்றிருக்கும் சோதிக்கம் என்னும் பதி இருக்கின்றது. மேரு மலையின் எட்டுத் திக்கிலும் சிறந்த இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் என எண்மருடைய தேசங்கள் இருக்கின்றன. நேராக இத்தேசங்களுக்குச் செல்வதற்காக தெற்கு முதல் வடக்கு வரையும் செல்கின்ற ஒரு நெடிய குகை பக்கத்திலுள்ளது. அதை நீ உணர்ந்துகொள்வாயாக. 30

அந்தவரைக் கீழ்த்திசைமந் தரமாம் வெண்மை அதன்தெற்குக் கந்தமா தனம்பொன்
சுந்தரமாம் விபுலம்நீ லம்வடக்குச் சுபார்சுவம்மா துளைப்போது கடம்பு சம்பு [மேல்பால்
நந்தியதோர் போதிஆல் குணபாலாதி நாற்றிசையில் வரைமீது நிற்கும் நாவல்
முந்துமிரண்டாயிரயோ சனையாம் ஏனை முத்தருவும் இதிற்பாதி மொழியும் எல்லே.

அந்த மேரு மலைக்குக் கிழக்குத் திக்கிலே மந்தர மலை இருக்கின்றது. அதன் நிறம் வெள்ளை. மேருவின் தெற்கிலே சந்தமாதனம் என்னும் மலை உள்ளது. அதன் நிறம் பொன். மேருவிற்கு மேற்கே அழகிய விபுலம் என்னும் மலை நிறம் நீலம். மேருவின் வடக்குத் திக்கிலே சுபார்ச்சுவம் என்னும் மலை மாதுளம்பூ நிறமுடையது. இப்பால் இந்த மேரு மலையின் கிழக்குமுதல் நான்கு திக்கிலுமுள்ள நாலு மலைகள் மேலாக முறையே கடப்ப மரம், நாவல் மரம், அரச மரம், ஆல மரம் ஆன நான்கு மரங்கள் நிற்கும். இந்த மரங்களில் நாவல் மரம் இரண்டாயிரம் யோசனை உள்ளது. மற்றயவை மூன்றும் தனித்தனி ஆயிரம் யோசனையாம். 31

அத்தகைய கீழ்த்திசையில் அருணம் மேல்பால் அசிதோதம் தென்றிசைமா னதமே யல்லா
உத்தரத்தின் மாமடுநீர் நிலையாய் மேவும் உய்யானஞ் சயித்திரத குணக்கு வைகும்
வைத்தபெரு நந்தனந்தக் கிணத்தில் ஓங்கும் வைப்பிரசங் குடக்கமரும் வடாது பாங்கின்
மெத்துதிரு தாக்கியம்உற் றிடுமிவ் வாறு மேருவரைச் சாரலிடை விரவுமன்றே.

இன்னமும் மேருவின் கிழக்கிலே அருணம் என்னும் நீர் நிலையும், மேற்கில் அசிதோதம் என்றும், தெற்கிலே மானதம் என்றும், இதன்றி வடக்கே மாமடு என்றும் பெயரினை உடைய நான்கு நீர் நிலைகள் இருக்கின்றன. இப்பால் சோலைவனங்களாக சயித்திரதம் என்னும் பெயருடைய சோலை மேருமலையின் கிழக்கிலும், மிகப் பரந்திருக்கும் நந்தன வனம் என்னும் சோலை தெற்கிலும், வைப்பிரசம் என்னும் சோலை மேற்கிலும் அடர்ந்துள்ள திருதாக்கியம் என்னும் சோலை வடக்கிலுமாக மேரு மலையின் சாரலிலே நான்கு சோலைகள் விளங்கும். 32

கடிகமழும் நாவலொன்று தென்பால் நின்ற காரணத்தால் பாரதன்றன் கண்ட முற்றும்
இடனுடைய நாவலந்தீ வெனப்பேர் பெற்ற தித்தருவின் தீங்கனிநீ ராருய் மேருத்,
தடவரையைப் புடைசூழ்ந்து வடபாற் சென்று சாம்புநதப் பெயர்பெறுமச் சலிலந் துய்த்தோர்
உடல்முழுதும் பொன்மயமாய் அயுத மேலும் ஒருமூவா யிரமாண்டங் குறுவர் அன்றே.

மணம் வீசுகின்ற நாவல் மரம் ஒன்று தென்திசையாக நின்ற காரணத்தால் பாரதன் என்பானின் கண்டம் முழுவதும் வலிமையுடைய நாவலம் தீவு எனப் பெயர் கொண்டு நின்றது. இந்த நாவல் மரத்தின் இனிய கனிகள் சாறுகி ஆறுகப் பெருகி மேரு என்னும் பெரிய மலையை புடையாக வளைந்து ஓடி வடக்குப் புறத்தே சென்று சம்பூநாதம் என்னும் பெயருடைய ஆறுகி விளங்கும். இந்த ஆற்று நீரை உண்டோர் தமது மேனி முழுவதும் பொன்னிறமாகி பதின்மூவாயிரமாண்டு ஆயுள் பெற்று அங்கு வாழ்வார்கள். 33

நாற்றிசையில் வரைப்பரப்பு மேல்கீழ் தானும் நவின் றிடின்மே ருவிற்பாதி அதற்குக்
மாற்றரிய மாலியவான் மேல்பாற் கந்தமாதனந்தென் றிசைநிசதம் ஏமகூடம் [கீழ்பால்
ஏற்றஇமம் வடபால்நீ லம்சுவேதம் இயற்சிருங்கம் எட்டுவரை இவையாம் நீலம்
மேற்றிகழ்பொன் மணிகனகம் பனியே நீலம் வெண்மைமதி காந்தம்இவை மேனி தாமே.

நாவற் தீவின் திக்கிலுமுள்ள மலைகளின் பரப்பு மேலுக்கும் கீழுக்கும் சொல்லிடின் (உயரமும் ஆழமும் சொல்லிடின்) மேரு மலையின் உயத்திற்குப் பாதி; அதாவது நாற்பத்தீராயிரம் யோசனை உயரமும், எண்ணுயிரம் யோசனை ஆழமுமாம். தீவின் கிழக்கிலே மாலியவான் என்னுப் மலையும், மேற்கில் கந்தமாதனமும், தென் திசையில் நிசதம் ஏமகூடம் தகுதியான இமயமும் வடபுறத்தே நீலப் சுவேதம் இயல்புடைய சிருங்கம் என எட்டு மலைகள் உள. இம்மலைகள் நீலம், மேலான பொன், பதுமராக இரத்தினம், பொன், மணி, நீலம், வெண்மை, சந்திரகாந்த நிறமுமான மேனியை உடைய. 34

நிசதமொடு பொற்கூடம் இமையங் கீழ்மேல் நெடுங்கடலைத் தலைக்கூடி நிமிரும் சோமன்
திசையுளபூதரமூன்றும் அனைய எட்டுத் திண்கிரியும் இராயிரயோ சனைவான் செல்லும்
வசையில்கந்த மாதனமா லியவான் என்னும் மால்வரைகள் தமதகலம் அயுதம் மற்றை
அசலமிரு மூன்றுமிரா யிரம்இத் தீவுள் அமருநவ கண்டவெல்லை அறைவன் மாதோ.

நிசதம் ஏமகூடம் இமயம் என்னும் மலைகள் மேற்கிலும் கிழக்கிலுமுள்ள கடல்களைச் சந்தித்து உயர்ந்திருக்கும். வடக்குத் திசையிலுள்ள நீலம் சுவேதம், சிருங்கம் என்னும் மூன்று மலையும் அப்படியே கிழக்கு மேற்குக் கடல்களைத் தொட்டு நிமிர்ந்திருக்கும். இந்த எட்டு மலைகளும் இரண்டாயிரம் யோசனை உயர்ந்திருக்கும். குறைவிலாத கந்தமாதனம் மாலியவான் என்னும் மலைகளின் அகலம் பதினுயிரம் யோசனையாம். மற்ற ஆறு மலைகளின் அகலம் இராயிரம் யோசனை. இனி இந்த நாவலந் தீவின் ஒனபது கண்டங்களின் எல்லையைச் சொல்வேன். 35

கோதில்வட கடல்முதலாச் சிருங்கஞ் காறுங் குருவருடம் சிருங்கமுதற் சுவேத மட்டும்
நீதிஇர ணியவருடம் சுவேத நீல நெடுங்கிரியின் நடுவண்இர மியமாம் மேருப்
பூதரஞ்சூழ் வருடம்இளா விருதமாகும் பொலிந்தகந்த மதனமேற் புணரி நாப்பண்
கேதுமால் வருடம்மாலியவான் தொட்டுக் கீழ்கடலின் இறுவாய்பத்திரம தாமே,

குற்றமில்லாத வடகடல் முதலாக சிருங்கம் என்னும் மலைவரையும் உள்ள பூமியைக் குருவருடம் என்றும் சிருங்க மலைமுதல் சுவேதம் என்னும் மலைவரையுமுள்ள பூமியை நீதியுடைய இரணிய வருடம் என்றும், நெடிய சுவேத மலைக்கும் நீல மலைக்கும் நடுவே உள்ள பூமியை இரம்மிய வருடம் என்றும் மேரு மலையைச் சூழ்ந்த பூமியை இளாவிருத வருடம் என்றும், பொலிவுடைய கந்தமாதன மலைக்கும் மேற்றிசைக் கடலுக்கும் இடைப்பட்ட பூமியைக் கேதுமால் வருடம் என்றும், மாலியவான் மலை தொடக்கம் கிழக்குள்ள கடலின் முடிவு வரையுமுள்ள பூமியை பத்திராசுவ வருடம் என்பார்கள். 36

அம்புவியின் நிசதமுதல் ஏமஞ் சாறும் அரிவருடம் ஏமமுதல் இமைய நாப்பண்
கிம்புருடம் தென்கடற்கும் இமைய மென்னுங் கிரிக்குநடுப் பாரதமாம் கேது மாலோ
டிம்பர்புகழ் பத்திரமுப் பத்து நாலாயிரம்நின்ற தொன்பதினுயிரமா மெல்லை
உம்பர் தமதுலகனைய பரதமென்னும் ஒன்றொழிந்த கண்டமெட்டும் உற்றுளோர்க்கே.

அழகிய இப்பூமியில் நிடத மலைமுதல் ஏம கூடம் என்னும் மலைவரையுமுள்ள பகுதியை அரி வருடம் என்றும் ஏம கூடமுதல் இமய மலைக்கு நடுவணுக உள்ள பகுதியை கிம்புருட வருடம் என்றும், தெற்குள்ள கடலுக்கும் இமயம் என்னும் மலைக்கும் நடுவணுன பகுதியை பாரத வருடம் என்னும் பூமியாகவும் சொல்லப்

பெறும். கேதுமால் வருடமும் இவ்வுலகத்தவர் புகழ்கின்ற பத்திராசுவ வருடம் என்னும் பூமியினது அளவு முப்பத்து நாலாயிர யோசனையாம். மற்றைய ஏழு பூமிகளும் (வருடங்கள் எனப்படுவன) ஒன்பதினாயிரம் யோசனையாம். பாரதம் என்னும் கண்டத்தை நீக்கி மற்றை எட்டுக் கண்டங்களில் வாழ்வார்களுக்கு அந்த எட்டு இடங்கள் தேவ உலகை ஒத்து இருப்பன. 37

ஆங்குருநாட் டுறைபவர்ஓர் பொழுதின் யாய்பால் ஆடவு மகடவு மாகத் தோன்றித்
தாங்கள்விழை விற்புணர்வர் அவர்க்குத் தெய்வத் தருமலர்கள் உதவும்உணுக் கனியுங் [காயும்
ஓங்குபச்சைநிறம் ஆயுள் அயுதமேலும் ஒருமூவாயிரம் அதற்குள் வடபாகத்திற்
பாங்கமர்வர் முனிவரர்சா ரணரே சித்தர் பதினிமூவாயிரம் ஆயுள்படிகம் வண்ணம்.

அங்கு குரு நாட்டில் வாழ்வார்கள் ஒரு தாய் வயிற்றில் ஆணும் பெண்ணுமாய்த் தோன்றித் தாங்கள் இருவரும் விரும்பிக் கூடுவார்கள். அவர்களுக்கு கற்பக விருட்சங்கள் பூக்களைக் கொடுக்கும். அவர்கள் உணவுகள் கனியும் காயும். மேலோங்கிய அவர்கள் நிறம் பசுமை. அவர்கள் வயசு பதின்மூவாயிரம் ஆண்டுகள். அப்பூமியின் வடபாகத்தில் முனிவர்களும் சித்தர்களும் சாரணர்களும் இருப்பர். இவர்கள் ஆயுள் பதின்மூவாயிர வருடம். பளிங்கு போலும் நிறமுடைய மேனி உடையவர்கள். 38

பரவுபத்தி ராசுவத்தோர் கனிகாய் துய்ப்போர் பதின்மூவாயிரம் ஆயுள் படைத்த சேயோர்
இரணியத்தோர் பலநுகர்வோர் மதிநேர் மெய்யர் ஈராயிரமைஞ் ஞூறயுதம் ஆண்டுபெற்றோர்
பொருவரிய இரமியத்தி னுள்ளோர் ஆலின் புன்கனிகள் மிசைகுவர்பூங்குவளை போல்வார்
வருடமவர்க் கொருபதினா யிரமே யன்றி மற்றுமிரண்டாயிரமாச் சொற்ற தொன்னூல்.

பரந்திருக்கின்ற பத்திராசுவம் என்னும் பூமியில் இருப்போர் கனிகள் காய்களை உண்பார்கள். பதின்மூவாயிரமாண்டு வாழ்வுடையவர்கள். சிவந்த நிறமுடையவர்கள். இராமியம் என்னும் பூமியில் இருப்பவர்கள் பழங்கள் சாப்பிடுவோர். சந்திரனை ஒத்த வெண்ணிற மேனி உடையவர்கள். பன்னீராயிரத்து ஐந்நூறு வருடம் வாழ்வு பெற்றவர்கள். நிகரற்ற இரணிய வருடம் என்னும் பூமியில் உள்ளோர் ஆலமரத்தின் இனிய கனிகளைப் புசிப்பவர்கள். செங்குவளை மலர்போலும் நிறமுடையவர்கள். அவர்கட்கு வயது பன்னீராயிரம் என்று பழைய நூல்கள் சொல்லும். 39

விராவும்இளா விருதத்தோர் வெளிய மெய்யர் மிசைவது தீங்கரும்பிரதம் அயுத மேலும்
இராயிரமா யுருங்கேது மாலந் தன்னில் இருப்பவர்பைங் குவளைநிறம் இனிதினுண்டல்
பராரையுள கண்டகியின் கனியே ஆயுள் பத்துளவாயிரம் அரிகண்டத்து வாழ்வோர்
ஓராயிரமோ டொன்பதினா யிரமதெல்லை உணவுகனி காய்மதியம் ஒளிய தன்றே.

இளாவிருதம் என்னும் பூமியில் உள்ளோர் வெள்ளை நிற மேனியை உடையவர்கள் புசிப்பது கருப்பஞ் சாறு. ஆயுள் பன்னீராயிரம் ஆண்டு. கேதுமால் வருடம் என்னும் பூமியில் உள்ளோர்கள் பசிய குவளைப் பூவைப் பேரலுப் நிறமுடையவர்கள். அவர்கள் நன்கு விரும்பிப் புசிப்பது பருத்த அடியினை உடைய கண்டகி மரத்தின் பழங்களாகும். இவர்கட்கு வயது பதினாயிரம் ஆண்டு. அரிவருடம் என்னும் பூமியில் இருப்பார்கள் பதினாயிரமாண்டு வயது உடையவர்கள் உணவு கனியும் காயும் சந்திரனைப் போல வெண்ணிறமுடையவர்கள். 40

போற்றியகிம் புருடத்தோர் இறலித் தீய புன்கனியே மிசைவர் நிறம் பொன்மை ஆயுள்
சாற்றியிடும் ஓரயுதம் ஏமகூடத் தடவரைத்தென் பால்இமைய வடபால் தன்னில்
ஏற்றமிகுங் கயிலைநிற்கும் அதற்கு மீதே இமையாமுக் கட்பகவன் உமையா ளோடும்
வீற்றிருப்பன் ஊழிதனில் அண்டங்காறு மேலொடுகீழ் சென்றிடுமவ் வெற்பு மாதோ.

புகழ்பெற்ற கிம்புருடம் என்னும் பூமியில் உள்ளார்கள் இத்தி மரத்தினது இனிய சிறிய பழங்களை உண்பார்கள். மேனி பொன்னிறமுடையவர்கள் பதினாயிரமாண்டு வயதுடையவர்கள் எனச் சொல்லப் பெறுவர். ஏமகூட மலைக்குத் தென்பாலில் இமய மலைக்கு வடபாலில் மேன்மையுடன் விளங்கும் கைலைமலை நிற்கும் அதற்கு மீதே இமையாத மூன்று கண்ணுடைய சிவபெருமான் உமையம்மையாரொடு வீற்றிருப்பார். உலக அழிவாகிய ஊழிக்காலத்தில் கைலை மலையானது மேலுள்ள அண்டம் வரையும் கீழுள்ள பாதாள உலகம் வரையும் நீண்டு நிற்கும் என்பதை அறி. 41

இந்தவிரு நாற்கண்டத் துறையும் நீரார் இன்னல்பிணி நரைதிரைமூப் பிறையுஞ் சேரார்
முந்தையுகம் போலேனை மூன்றினுள்ளும் மொய்ம்புநிறை அறிவுடலம் முயற்சி ஆயுள்
அந்தமில்சீர் முதலெல்லாம் ஒருதன் மைத்தா அடைகுவர்முன் பாரதத்தில் அவதரித்து
வந்துபுரி வினைப்பயனை நுகர்வர் என்பர் வானமுகில் சென்று புனல் வழங்கா தங்கண்.

இந்த எட்டுப் பூமிகளில் வாழ்வார்கட்கு இன்னல், பிணி, நரை, திரை, மூப்பு ஆகியதுயரங்களை ஓர் இறையளவேனும் சேர்ந்து கொள்ளார்கள். கிரேத, திரேத, துவாபர, கலியுகம் என்னும் நான்கு யுகங்களிலும் முன்னுள யுகத்திலுள்ளவை போல ஏனைய மூன்று யுகங்களிலும் தங்களினது வலியும் நிறையும் அறிவும் உடலும் முயற்சியும் ஆயுளும் எல்லையிலாச் சீரும் முதலான எல்லாம் ஒரு தன்மையாகப் பெறுவர். முன்னுகப் பாரதம் எனும் பூமியில் அவதரித்து அங்கு செய்த வினைப் பயன்களை இப்பூமிகளில் அனுபவிப்பர். அந்த உலகுகளில் வானத்தில் உள்ள முகில்கள் சென்று மழை பெய்வதில்லை. எனவே இப்பூமிபோல் காற்றோட்டம் இல்லை என்பது பொருளாகும். 42

பாரதத்துள் ளார்அவனி கிளைத்து மற்றும் பஃறொழிலும் புரிந்து மறம் பாவம் ஈட்டிப்
பேரருள்பெள திகமெழுவா யானமூன்றிற்பெறுபயன்கொண்டுய்வார்என்பர்பெருமையாற்றல்
சீரறிவு நிறைஆயுள் உருவம் உண்டி செய்கையுகங் களுக்கிசைந்த திறனே சேர்வர்
தோரைமுதற் பலபைங்கூழ் வினையுள் ஆக்கந் தூயகனி காய்கந்தம் பிறவுந் துய்ப்பார்.

பாரதம் என்னும் (நாம் வாழும் பூமி) பூமியில் உள்ளார்கள் பூமியை உழுதும் மற்றும் பல தொழிலைப் புரிந்தும் தருமம் பாவம் என்றும் இவற்றைப் புரிந்து ஆதிபௌதிகம். ஆதியாத்மிகம், ஆதிதெய்விகம், என்னும் மூன்றிலும் பெறுகின்ற பயன்களைக்கொண்டு வாழ்வார்கள் என்பார்கள். ஆனால் இவர்கட்கு மட்டும் முன் சொல்லிய உலகத்தவர் போலல்லாது இவர்களுடைய பெருமை ஆற்றல் சீர் அறிவு நிறை ஆயுள் உடலம் உணவு செய்கை ஆகியயாவும் நான்கு யுகங்களிலும் அந்தந்த யுகத்திற்கு ஏற்றபடியே அடைந்து கொள்வர். மலை நெல் முதலாகத் தாங்கள் விளைவுசெய்து பெறும் தானிய வகைகளையும் கனி காய் முதலியவற்றையும் பிறபொருள்களையும் உண்பார்கள். 43

நாலிருகண் டத்தோரும் விண்ணு ளோரும் நரகினரும் அவ்விடத்தில் நண்ணி வைகி
மேலையிரு வினையாற்றி அவற்றிற்கேற்ற வியன்பயன்கள் துய்ப்பரென விளம்பு யாற்றல்
சீலமிகு பாரதமாங் கண்டமொன்றே தீவினைநல் வினையாகுஞ் செய்கைக் கெல்லாம்
மூலமொரு குறைபெறினே வந்து தேவர் முனிவர்களுந் தவம்பூசை முயல்வர் அங்கண்

முன்சொல்லிய எட்டுக் கண்டத்தினேரும் வானுலகிலுள்ள தேவர்களும், நர கத்திருந்தாரும் இப்பாரத பூமியிடம் பிறந்து, வாழ்ந்து அவ்விடத்து புண்ணிய பாவ மென்னும் இரு வினைகளையும் செய்து அவ்வினைகளுக்கேற்ற மேலான பலன்களை அனுபவிப்பார் எனச் சொல்லப்பெறும் தன்மையால் சீலம்மிகுந்த வாழ்விற்கேற்ற பாரதம் என்னும் பூமி ஒன்றே தீவினை நல்வினை என்னும் செய்கைகளுக் கெல்லாம் மூல இடமாகும். வானில் உள்ள தேவர்களும் முனிவர்களும்தமக்கு யாதானுமொரு குறை நேரப்பெற்ருல் இப்பூமியில் வந்து பிறந்து தவம், பூசை முதலிய செயல்களைப் புரிந்து தங்கள் குறை நீங்கப் பெறுவார்கள். 44

கவிபுகழும் பரதனும்இந் திரனும் பேரோன் கசேருகன்தா மிரபன்னன் கபத்தி நாகன்
சவுமியனே கந்தருவன் வருணன் என்னுந் தனயருடன் குமரியெனும் வனிதைதன்னை
உவகைதனில் உதவிஅவர் தத்தம் பேரால் ஒன்றற்கோ ராயிரம்யோ சனையதாகப்
புவிபுகழ்பா ரதத்தை நவ கண்ட மாக்கிப் பொற்பினுடன் அனையவர்க்குப் புரிந்தான் அன்றே

புலவரின் பாராட்டிற்குரிய பரதன் என்னும் இப்பூமியின் அரசனும் இந்திரன் கசேருகன், தாமிரபன்னன் கபத்தி நாகன் சவுமியன், கந்தருவன், வருணன் என் னும் எட்டு ஆண் குழந்தைகளுடன் குமரி என்று சொல்லப் பெறும் பெண்ணையும் மனமகிழ்வால் பெற்றெடுத்து அவர்களுடைய பெயரால் ஒவ்வொருவருக்கு ஆயிரம் ஆயிரம் யோசனையதாகப் பலரும் புகழும் பாரதம் என்னும் பூமியை ஒன் பது கண்டமாக்கிக் கண்ணியத்துடன் அந்த ஒன்பது பேர்களுக்கும் அரசாளக் கொடுத்தான். 45

கங்கைகவு தமியமுனை கவுரி வாணி காவிரிநன் மதைபாலி கம்பை பம்பை
துங்கபத் திரைகுசைகோ மதிபாஞ்சாலி சூரிசிகி பாபகரை தூத பாபை
சங்கவா கினிசிகைபா ரத்து வாசி சார்வரிசந் திரபாகை சரயு வேணி
பிங்கலைகுண் டலைமுகலி பொருநை வெஃகாப் பெண்ணை முதல்ஆறனந்தம் பெருகிநண்ணும்

இப்பாரத பூமியில் கங்கை, கவுதமி, யமுனை, கவுரி, வாணி, காவேரி, நருமதை, பாலி, கம்பை, பம்பை, துங்கபத்திரை, குசை, கோமதி, பாஞ்சாலி, சூரி, சிகி, பாபகரை, தூதபாபை, சங்கவாகினி, சிகை, பாரத்துவாசி, சார்வரி, சந்திர பாகை, சரயு, வேணி, பிங்கலை, குண்டலை, பொன்முகலி, தமிரபர்ணி, வேகவதி, முதலிய அனந்த ஆறுகள் பெருகி ஓடும். 46

மன்னுமகேந் திரமலயஞ் சையஞ் சத்தி மாநிருடம் பாரியாத்திரமே விந்தம்
என்னுமலை ஒரேழுங் காஞ்சி யாதி எழுநகருந் தானமொரா யிரமேல் எட்டும்
பன்னும்அரு மறைமுதலோர் மேய தேயம் பற்பலவுஞ் சுருதிமுறை பயில்வு மேவி
மெய்ந்நெறிசேர் வதுகுமரி கண்டம் ஏனை மிலேச்சரிடம் ஒரெட்டும் வியப்பிலாவே.

மேவாகி மன்னும் மகேந்திரம் பொதியம் சையம் சத்திமான் இருட்சம் பாரி யாத்திரம், விந்தம் என்னும் ஏழு மலைகளும்; காஞ்சி, காசி, அயோத்தி, மதுரை, மாயை, அவந்திகை, துவாரகை முதலிய ஏழு முத்தி நகரமும் ஆயிரத் தெட்டுத் தலங்களும் பிரியமுடன் ஓதும் வேதத்தின்படி ஒழுகும் பிராமணர் வாழும் தேசங்கள் பற்பலவும் வேத முறை ஒழுகுகின்ற வாழ்வும் பொருந்தப்பெற்று உண்மை நெறிக

ளுடன் விளங்குவது இந்தக் குமரி கண்டம். ஆகவே சூரனே! இக்குமரி கண்டம் தான் மேலானது. மற்றைய எட்டுக் கண்டங்களும் பெருமை இல்லா மிலேச்சர்கள் வாழும் இடமாகும். அவை சிறப்புடையனவல்ல.

தபம் செபம் பூசை முதலியவற்றினுல் தன்னையும் உண்மைப் பொருளான உத்தமனையும் அறியத் திருவருள் கூடும்படி பொருந்தியது பாரதத்தின் ஒன்பது கண்டங்களிலே குமரிகண்டம் ஒன்றுதான். இங்குதான் தவம் புரிந்து தம்மீதுள்ள பற்றும் நீங்கி நிற்கும் தலையாய பெருமக்களைக் காண்கின்ருேம். மற்றும் எட்டெனக் கூறிய கண்டங்கள் அமெரிக்கா, ஐரோப்பா, ஆபிரிக்கா, ருசியா, சைனு, யப்பான், அவுஸ் திரேலியா வாகிய இடங்களில் எங்காவது இப்படியான வேதநெறி ஒழுகி கொல்லாமை பூண்டு அன்பு உருவாகி, அனைத்துயிரும் இறைவன் சந்நிதானம் எனக் கருதுகின்ற உத்தமர்களைக் காணமுடியுமா? அடக்குமுறை, ஆதிக்க வெறி, காம லீலைகள், கற்பு இலாமை, இந்திரிய வசமாதல், போகம், பெருமிதம், பொல்லாங்கு செயக் கூசாமை, கொலை முதலிய பாதகங்கள் நிரம்பி உண்மைப் பொருள் விளக்கமின்றி இரும்பு மனதுடன் இருப்பின் மூலம் வாழ்வைப் பெருக்கும் மனிதரையே காண் போம். ஆகவே பிறந்த பிறவியின் பேருன உண்மை ஒளிநாடி அறியும் நாட்ட மில்லாது உலக இன்பமே பெரிதென மதித்து அதைப் பேணிப் பெருக்கி வாழும் இயல்புடன் இன்னும் இன்னும் நவீன வாகனங்கள், இயந்திரங்கள் கற்பு நெறி உணராத மிருக வாழ்வு அனைத்தும் இக்கண்டத்துளோர் பெருக்கி நிற்றலால் இவர் களை மிலேச்சர் என்றும் பெருமை இல்லாதவர் என்றும் கூறினுர்கள்.

வியப்பிலார் எனக் கூறியது ஏனெனில் பெருமை என்பது ஏனைய மக்களைப் போலப் புலன்வழிச் சேராது மனத்தை அடக்கி ஆளுதல். இதனைச் செயற்கரிய செய்வர் பெரியர் என்பார். கற்புடமை என்பது பெண்ணினத்துப் பெருமை. அதாவது என்னிலையும் தான் விரும்பி வாழ்வது ஒரே நாயகனுடனன்றி பின்னரும் சிந்தையை அப்பெண் மாருகக் கொள்வான் எனின், அது பெருமையல்ல. இதேபோல ஓர் ஆடவனுக்கும் இல்லறத்திற்கு வேண்டியது ஒரு பெண். அவளுடன் புத்திர பாக்கியத்தின் பொருட்டு கூடிவாழ்வதே பெருமை. இச்சை வசப்பட்டு நினைத்த படி நடப்பானுகில் அது பெருமையல்ல. இதேபோல உலகில் செயற்கரிய சீரிய செய்கைகளைச் செய்யும் திருவுடைய பெருமக்கள் தவம், பூசை முதலியவற்றைச் செய்து உய்ய வழிதரும் கண்டம் குமரி கண்டமே. 47

இங்கிவைசம் புத்தீவி னிடனே தண்பால் இருங்கடல்சூழ் சாகத்தின் எல்லை தன்னில்
தங்கியகோ மேதாதி அவற்கு மைந்தர் சாந்தவயன் சிசிரன்கோ தயன் ஆனந்தன்
துங்கமிகு சிவனெடுகே மகன்சி றந்த துருவன்இவர் பேராலேழ் வருட மாக்கி
அங்கவருக் கருள்புரிந்தான் கடவுள் வாயு ஆரியர்விந் தகர்குகரர் ஆண்டு வாழ்வோர்.

இங்கு சொல்லிய இவைகள் சம்புத் தீவிலுள்ள இடங்களாகும். இப்பால் குளிர்மையான பாற்கடல் சூழப்பெற்ற சாகத்தீவு எனப் பேர்கொண்ட கோளத்தி னிடையாக வாழ்ந்திருந்த கோமேதாதி என்பவனுக்குப் புதல்வரானவர் சாந்தவயன். சிசிரன், கோதயன், ஆனந்தன் மேன்மையான சிவன் கேமகன் சிறந்த துருவன் என்னும் பெயருடைய எழுவர் ஆவர். அந்தசாகத் தீவை இப்பிள்ளைகளின் பெய ரால ஏழு கண்டங்களாக்கி அவர்கட்குக் கொடுத்தான். அத்தீவிற்குத் தெய்வம் வாயுவாம். அத்தீவில் வாழும் சனங்களின் பெயர் ஆரியர், விந்தர், குகரர் எனப்படுவர். 48

சோமகமே சுமனஞ்சந் திரமே முந்துந் துந்துபிவப் பிராசனநாரதியந் தொல்சீர்க்
கோமதமாம் எழுகிரியுஞ் சிவைவி பாவை குளிர் அமிர்தை சுகிர்தைமநு தத்தை சித்தி
மாமைதரு கிரமையெனும் ஆறங்கேழும் மருவியிடும் ததிக்கடல்தான் வளைய நின்ற
ஏமமுறு குசத்தீவில்வபுட்டு வென்னும் இறையவற்குஞ் சிறுவர்களாய் எழுவருண்டால்.

இத்தீவில் சோமகம், சுமனம், சந்திரம் சிறந்த துந்துபி, வப்பிராசனம், நாரதியம், தொன்மையான புகழ்கொண்ட கோமதம், என்னும் பெயருடைய ஏழு மலைகளும், சிவை விபாவை குளிர்ச்சியுடைய அமிர்தை சுகிர்தை மனுதத்தை சித்தி அழகுடைய கிரமை என்னும் ஏழு ஆறுகளும் அத்தீவிலிருக்கும். இதன்பால் தயிர்க்கடல் சூழநின்ற பொன்நிறமுடைய குசத்தீவில் வாழ்ந்த வபுட்டு என்னும் அரசனுக்கும் எழு பிள்ளைகள் உளர். 49

சுப்பிரதன் உரோகிதனே தீரன் மூகன் சுவேதகன்சித் திரன்வயித்தி தன்னென்றோதும்
இப்புதல்வர் பேராலேழ் வருடமாக்கி ஈய்ந்தனன்உன் னதங்குமுதங் குமாரம் மேகம்
வைப்புறுசந் தகம்மகிடமேது ரோணம் மலையேழுஞ் சோனைவெள்ளி மதியே தோமை
ஒப்பறுநேத் திரைவிமோ சனைவிருத்தி ஓரேழு நதியுளவால் உலவை புத்தேள்.

சுப்பிரதன் உரோகிதன் தீரன் மூகன் சுவேதகன் சித்தியன், வயித்தியன் என்னும் பெயருடையர் ஆவர். இந்த ஏழு பிள்ளைகளின் பேரால் குசத்தீவை ஏழு கண்டமாக்கி அவர்களை ஆளக்கொடுத்தான். உன்னதம், குமுதம், குமாரம், மேகம், நிலையான சந்தம், மகிடம், துரோணம் என ஏழு மலைகளும் சோனை, வெள்ளி, மதி, தோமை, ஒப்பற்ற நேத்திரை, விமோசனை, விருத்திஎனும் ஏழு ஆறுகள் உள. இத்தீவிற்கு கடவுள் வாயுபகவான். 50

தர்ப்பகரே கபில்ர்சா ரணர்நீ லத்தர் தண்டர்விதண் டகராண்டைச் சனங்கள் ஆவார்
அப்புற நெய்ப் புணரிகிர வுஞ்ச தீபம் அதற்கு மன்னன் சோதிட்டாம் அவன்றன் மைந்தர்
மெய்ப்படுசா ரணன் கபிலன் கிருதி கீர்த்தி வேணுமான் இலம்பகன்உற் பிதனே யென்னச்
செப்புமெழு பேராலேழ் வருடமாக்கிச் சிறப்புடனே அவரரசு செய் தற் கீந்தான்.

தர்ப்பகர் கபிலர், சாரணர், நீலத்தர், தண்டர், விதண்டர் ஆகியோர் அத்தீவின் சனங்களாவர். அப்பால் நெய்க்கடலால் சூழப்பெற்ற கிரவுஞ்சம் என்னும் தீவில் வாழ்ந்த அரசனுன சோதிட்டு என்பவனுக்கு பிள்ளைகளாக, சாரணன், கபிலன் கிருதி, கீர்த்தி, வேணுமான், இலம்பகன், உற்பிதன் எனும் பேருடைய எழுவர் உளர். இவர்கள் பேரால் இத்தீவை ஏழு கண்டமாக்கி சிறப்புடன் அவர்கள் அரசு செய்யும்படி கொடுத்தான். 51

மன்னுகுசே சயம் அரிவீத் துருமம் புட்பா வருத்தம்இமம் துதிமானே மந்தரந்தான்
என்னுமலை ஏழுசிவை விதூத பாபை இமை புனிதை பூரணையோ டகில பாபை
சென்னெறிசேர் தம்பைஎனு நதியோரேழு சேர்ந்துளது தபதர்சடா வகர்மந் தேகர்
பன்னுபுகழ் அனேகர் அவர் சனங்களாவார் பங்கயனே அங்குடைய பகவன் அம்மா.

விளங்கும் குசேசயம், அரிவித்துருமம், புட்பாவருத்தம், இமம், துதிமான், மந்தரம் என்னும் மலைகள் ஏழும் சிவை விதூதபாபை, இமை, புனிதை பூரணை, அகிலபாபை செந்நெறியாகப் பெருகுகின்ற தம்பை என்னும் ஏழு நதிகளும் இத்தீவில் பொருந்தப்பெற்றன. அத்தீவில் வாழுகின்ற சனங்களாயுள்ளார் தபதர் சடாவகர் மந்தேகர் பலரும் புகழும் அனேகர் எனப்படுவர் அத்தீவிற்குரிய கடவுள் பிரமதேவனே. 52

மற்றதனுக் கப்பாலை அளக்கர் கன்னல் வளைந்துடைய தீபஞ்சான் மலியாம் அங்கட்
கொற்றிவனுந் துதிமானன் அவன்றன் மைந்தர் குசலன் வெய்யன் தேவன்முனி அந்தகாரன்
அற்றமிலா மனோரதன் துந்துபியாம் அன்னோர்க் களித்தனன்ஏழ் கூறாக்கியசலம் ஏழுஞ்
சொற்றிமிரம் சுரபிவா மனம்விருத்தம் துந்துபிசம் மியத்தடம்புண்டரீகம் நிற்கும்.

இத்தீவிற்கப்பால் கருபஞ்சாற்றுக் கடலால் சூழப்பெற்ற சான்மலித் தீவாகும். இதனுக்கு அரசனுவான் துதிமான் என்னும் பேருடையவன். அவனது பிள்ளைகள் குசலன், வெய்யன், தேவன், முனி, அந்தகாரன் சோர்விலாத மனோரதன் துந்துபி எனும் ஏழுபிள்ளைகளாவர். அவன் தனது தீவை ஏழு கண்டமாகப் பிரித்து ஏழு பிள்ளைகட்கும் கொடுத்தனன். பலரும் சொல்கின்ற திமிரம், சுரபி, வாமனம், விருத்தம், துந்துபி, சம்மியத்தடம் புண்டரீகம் என்னும் பெயருடைய ஏழு மலைகள் உண்டு. 53

போதுகுமு தங்கவரி யாதி யாமை புண்டரீகை மனோபமை சந்தியையென் றேதுஞ்
சீதநதி யேழுசெல்லும் புட்க லாதர் சிறந்திடுபுட் கரர்தனியர் சிசிரர் என்போர்
ஏதமிலா துறைசனங்கள் கடவுள் ஈசன் இதற்குமப்பால் மதுக்கடல்சூழ் திருந்த தீபம்
மேதகுகோ மேதகம்அவ் வியனே தொன்னாள் வேந்தன் அவற் கெழுமைந்தர்
மேனாள் வந்தார்.

பெருகியோடுகின்ற குமுதம். சவரி, ஆதி, யாமை, புண்டரீகை மனோபமை, சந்தியை என்று ஓடுகின்ற குளிர்ந்த ஏழு ஆறுகளும், புட்கலாதர், சிறந்திட்ட புட்கரர், தனியர், சிசிரர் என்னும் சனங்களும் அத்தீவில் உண்டு. இத்தீவிற்கு கடவுள் சிவபிரான். இதற்கும் அப்பால் தேன்கடலால் சூழப்பெற்றிருக்கும் தீவு மேன்மை பொருந்திய கோமேதகமாம். அத்தீவிற்கு அவ்வியன் என்னும் பெயருடையவனே பழமைவாய்ந்த அரசனுவான். அவனுக்கும் ஏழு மைந்தர் முன்னாள் தோன்றினார். 54

தூயவிமோ சனன்மோகன் சகலன் சோமன் சுகுமாரன் குமாரன்மரீ சகனும் மைந்தர்க்
காயதையேழ் கூறுபுரிந் தளித்தான் சிங்கம்அத்தம்உத யம்சகல கிரவுமஞ்சம் ஆம்பி
கேயம்இர மியங்கிரியேழ் அயாதிதேனுக் கிளர்கபத்தி சுகுமாரி குமாரி இக்கு
மாயைநதி ஏழுளமந் தகர்ஆ மங்கர் மாகதர்மா னசர்மாக்கள் மதிமுன் தெய்வம்.

தூயவனான விமோசனன், மோகன், சகலன், சோமன், சுகுமாரன், குமாரன், மரீசகன், என்னும் பெயருடையார்கள். இந்த ஏழுபிள்ளைகளுக்கும் கோமேதகத் தீவை ஏழுகூறாக்கி, அவர் அரசாளக்கொடுத்தான். சிங்கம், அத்தம், உதயம், சகலம், கிரவுஞ்சம், ஆம்பிகேயம், இரமியம் ஆகிய ஏழு மலைகளும். அயாதி, தேனு. பெருகும் கபத்தி, சுகுமாரி, குமாரி, இக்கு, மாயை, எனும் ஏழு ஆறுகளும் அத்தீவில் உள. மந்தகர், ஆமங்கர், மாகதர், மானசர், ஆகியோர் அங்குள்ள சனங்களாவர். சந்திர தேவனே அங்குள்ளார்க்கு முதற் தெய்வமாகும். 55

புடையினது தூயபுனற் கடலாந் தீபம் புட்கரமன் னன்சவனன் புதல்வ ரானோர்
அடல்கெழுவு தாதகிமா பீத னென்போர்க் கதனையிரு கூறுபடுத் தளித்தான் என்ப
இடபமகேந் திரம்வருணம் வராகநீலம் இந்திரமிந் திரியமெனும் ஏழு வெற்புக்
குடிலைசிவை உமைதரணிசுமனை சிங்கை குமரியெனும் எழுநதியுங் கொண்டு மேவும்,

அப்பால் தூய நீர்க்கடலால் சூழப்பட்டு இருக்கும் தீவு புட்கரம் எனப்படும். அதற்கு அரசனானவன் சவனன் எனப்படுவன் அவனுக்கு இரு பிள்ளைகள் உண்டு. தாதகி மாபீதன் என்பது அவர்கள் பெயராகும் அத்தீவை இரண்டு கூறாக்கி இருவர்க்கும் கொடுத்தான் எனச் சொல்வார். இடபம் மகேந்திரம், வருணம், வராகம், நீலம், இந்திரம் இந்திரியம் என்னும் ஏழு மலைகள் உண்டு. குடிலை, சிவை, உமை, தரணி சுமனை, சிங்கை, குமரி எனும் ஏழுஆறுகள் அங்கு ஓடும். 56

மேனிலா வியநகரர் நாகர் என்போர் மேவியமர் பரிசனம் வெய்யவனே புத்தேள்
ஆனதோர் புட்கரத்தின் முடிவில் ஐம்ப தாயிரம்யோ சனைதன்னில் அகலமொன்று
மானசோத் தரம்எனவே சகடக் கால்போல் வட்டணைபெற் றிடும்அதன்கண் மகவானுக்கும்
ஏனையோர் எழுவருக்குங் குணபா லாதி எண்டிசையி னும்பதங்கள் எய்தும் அன்றே.

மேலாகிய நிலையுடன் கூடிய நகரர், நாகர் என்போரே அத்தீவில் மேவி இருப்பவரான சனங்களாவர். சூரயபகவானே அத்தீவிற்கு கடவுள். இப்படியான புட்கரத்தீவின் முடிவில் ஐம்பதாயிரம் யோசனை அகலமுளதாக ஒருமலை ஒன்று மானசோத்தரம் என்னும் பெயருடன் வண்டிச்சில்லைப்போல் வட்ட வடிவாய் இருக்கிறது. அம்மலை மேலாக இந்திரனுக்கும் ஏனைய அக்கினி இயமன் முதல் எழுவருக்குமாக கிழக்கு முதல் எட்டுத்திசையிலும் பதங்கள் பொருந்தி இருக்கும். 57

பொங்குதிரைப் புணரிகளின் முடிவுதோறும் புடையுறவே வளைந்தொவ்வோர் பொருப்பு நிற்கும்
இங்குளதோர் சாகமுதல் தீபமுற்றும் இருக்குநர்க்கு நரைதிரைமூப் பின்னல் இல்லை
அங்கவர்கள் கலியினுங்கிம் புருடர் தன்மை யடைவர்பதி னுயிரமாண் டமர்வர் அப்பால்
தங்கியது தபனியப்பார் அதனைச் சூழ்போய்த்தடம்பெருநே மிப்பொருப்புச்சார்வுற் றன்றே

பொங்கி எழும் திரையினை உடைய ஏழுவகைச் சமுத்திரங்களின் முடிவுதோறும் பக்கராாவே வளைந்து கொண்டு ஒவ்வோர் மலைநிற்கும். இங்குள்ள சாகத்தீவு முதல் ஆறுதீவுகளில் வாழ்கின்றார்க்கு நரை திரை மூப்பு வறுமை துயரம் முதலியன இல்லை. இங்குள்ளார்கள் கலியுகத்திலும் கிம்புருடர் என்னும் தேவ உலக வாசிகளின் தன்மை அடைவர். பதினுயிரம் ஆண்டு வாழ்வார்கள். இதற்கு அப்பால் இருக்கின்றது பொன்பூமி அதனைச் சூழ்ந்துகொண்டு சக்கரவாளமலை விளங்குகின்றது. 58

நேமிவரை அதற்கப்பாற் சுடரே அப்பால் நிசிப்படலஞ் செய்யமணி நிறனே மன்னர்
காமருசீர் இயக்கர்இராக் கதரே வெம்பேய்க் கணங்கள் அமர்ந் திடுவர்திசைக் கடவுளோருந்
தாமுடைய மாதிரத்தின் மேருவின்கண் தங்குதல்போல் வைகுவர்அங் கதனுக் கப்பால்
ஏமமுறு புறக்கடல்அங் கதனுக் கப்பால் இருளாகும் அதற்கப்பால் எய்தும் அண்டம்.

சக்கரவான மலைக்கு அப்பால் ஒளியிடமாகும். அதற்கப்பால் இருட்படலம். இங்கு சிவந்த இரத்தின நிறமுடைய மன்னரும் அழகுடைய இயக்கரும், இராக்கதர்களும் அமர்ந்திருப்பர். இச்சக்கரவாள மலைமேல் திக்குக் கடவுளரான இந்திரன் முதலியோரும் தங்கள் திக்கிற்கு முதலான மேரு மலையில் இருப்பதுபோல வந்து உறைவார்கள். இதற்கும் அப்பால் சிறப்புடைய புறவாழிச் சமுத்திரம் இருக்கிறது. இதற்கு அப்பால் ஓர் அண்டம் தென்படும். 59

ஊழினெறி யால்தத்தம் உயிரைத் தாமே ஒழிவுசெய்தோ ருந்தெருளு முணர்வி லோரும்
ஆழிவரைப் புறஞ்சூழ்வர் அப்பா லாகும் ஆரிருள்சேர் எல்லைதனில் அநாதி யீசர்
வாழுமொரு பெருங்கயிலை யுண்டவ் வண்ட மருங்கதனிற் கணநிரைகள் வதிந்து மல்குஞ்
சூழுறுசம் புத்தீப முதலா அண்டச் சுவர்காறும் புவியென்பர் தொல்லையோரே.

ஊழ்நெறியால் தத்தம் உயிரைத் தாமே மாய்த்துக் கொண்டோரும் உண்மை ஒளியை அறியும் உணர்விலாதவரும் இந்த சக்கரவாள மலையின் புறத்து சூழ்ந்திருப்பார்கள். அதற்கு அப்பாலுள்ள இருள்சேர்ந்த எல்லையில் அநாதியான ஈசன் வாழுகின்ற ஒரு பெருங்கையிலை உண்டு. இந்த அண்டத்தின் பக்கரில் பேய்க்கூட்டங்கள் பொருந்தி இருக்கும். முன்னையுள்ள அறிஞர்கள் உருண்டைவடிவாயிருக்கின்ற சம்புத்தீப முதலாக அண்டச்சுவர் வரையும் பூமி யென்பார்கள். 60

இப்புவியின் மேற்கணத்தின் உலக மாகும் இதன்மிசைக்குய் யகலோகம் இதற்கு மீது
வைப்புடைய ஈரைங்கால் வயங்கு தேயம் மற்றதன்மேல் எழுபுயலும் வழங்கு மெல்லை
முப்பதினு யிரகோடி மூகில்ஒவ் வொன்றை முறைசூழ்வுற் றிடும் அதற்கு முன்ன ராகச்
செப்பரிய கிம்புருடர் கருட ரானோர் சித்தர்கள்விஞ் சையர் இயக்கர் செறியும் மூதூர்.

இந்தப் புவியின் மேலாக கணங்கள் இருக்கின்றன உலகம் உண்டு. இதற்கும் மேலாக குய்யர் இருக்கின்ற உலக மிருக்கின்றது. இதற்கு மேலாக நிலையாக உள்ள பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் எனும் பத்து வாயுக்கள் இருக்கும் இடம் இருக்கின்றது. அதற்கு மேலாக ஏழு மேகங்களும் சஞ்சரிக்கின்ற இடமிருக்கின்றது. இந்த மேகங்கள் ஒவ்வொன்றையும் முப்பதினுயிரம் கோடி முகில்கள் ஒவ்வொன்றைமுறையே சூழ்ந்திருக்கும். அதற்கும்மேலாத செப்புதற்கரிய கிம்புருடர்களும், கருடர்களும், சித்தர்தளும் வித்தியாதரர்களும் இயக்கர்களும் நெருங்கிவாழும் பழைய நகரம் உண்டு. 61

இங்கிதன்மேற் சுரநதிசெல் லிடனே அப்பால் இரவிபதம் தரணிக்கோர் இலக்கமாகும்
அங்கதனின் முப்பான்முக் கோடிதேவர் அருக்கனுடன் வழிக்கொள்வர் அதற்குமீதே
திங்கள்உல கோரிலக்கம் உம்பர் தன்னில் செறிதருதா ரகையுலகம் இலக்கஞ் சேணிற்
பொங்கொளிசேர் புதன்உலகீ ரிலக்கம் அப்பாற் புகர்உலகம் ஈரிலக்கம் பொருந்திற் றன்றே.

இங்கிதன் மேலாக தேவகங்கை செல்கின்ற இடமாகும். அப்பால் சூரியபகவானின் மண்டல மிருக்கின்றது. அது பூவுலகத்தினின்றும் ஒருகோடி யோசனைதூரத்திலுள்ளது அங்கு முப்பத்து முக்கோடி தேவர்கள் சூரிய பகவானுடன் வலமாகவந்து சஞ்சரிப்பார்கள். அதற்கு மீதே சந்திரதேவனின் மண்டலமாகும். இதுவும் ஓரிலக்கம் யோசனை தூரத்திலுள்ளது. அதற்கும் மேலாக செறிந்து பரந்திருக்கும் நட்சத்திர மண்டலம் ஓர் இலக்க யோசனை தூரத்திலுண்டு. அதற்கு மேலாக பொங்கிய ஒளி விளங்கும் புதனுடைய உலகமாகும். இது இரண்டிலக்கம் யோசனை தூரத்திலுள்ளது. அப்பால் சுக்கிரன் உலகம் இது இரண்டிலக்கம் யோசனை தூரத்திலுள்ளது. 62

அந்தரமேற் சேய்உலகீ ரிலக்கம் மேலே அரசன்உல கீரிலக்கம் அதற்கு மீதே
மந்தன்உல கீரிலக்கம் அதன்மேல் ஒரேழ் மாமுனிவர் உலகிலக்க மாகும் அப்பால்
நந்துருவன் உலகிலக்கம் புவர்லோ கத்தின் நலத்தகைய தொகைபதினைந் திலக்க மாகும்
இந்தவுலகத்துமிசை புடையதேயம் எழுவகையா மருத்தினமுங் கெழுவு மெல்லை:

அதற்கு அப்பாலாகிய மேலிடத்தில் செவ்வாயுலகம் இது இரண்டிலக்கம் யோசனை தூரத்திலுள்ளது. அதற்கு மேலாக வியாழபகவான் மண்டலம் இரண்டிலக்கம் யோசனை தூரத்தில் உள்ளது. அதன்மேல் சனிபகவான் உலகம் இரண்டிலக்கம் யோசனை தூரத்தில் உள்ளது. அதற்குமேல் ஏழு முனிவர் இருக்கின்ற உலகம் ஒரு இலக்க யோசனை தூரத்தில் உள்ளது. அப்பால் நமது துருவனுடைய உலகம் ஓர் இலக்கம் யோசனை தூரத்தில் உள்ளது. இவ்வாறு புவர்லோகம் எனச் சொல்லப்பெறும் இந்தக் கிரகங்கள் நட்சத்திரங்களின் உலகம் யாவும் சேர்ந்து பதினைந்திலக்கம் யோசனையாகும். இதற்கு மேலாக ஏழு வகையான வாயுக்களும் தங்கும் இடமாகும்.

ஏழுவகை வாயுக்களாவன; ஆவகம், பிரவகம், உத்வகம், சம்வகம், சுவகம் பரிவகம், பராவகம் என்பன.

## புவர்லோகத்தின் பதினைந்து இலக்க யோசனையின் கணக்கு

| | | |
|---|---|---|
| சூரிய மண்டலம் | 1 00 000 | யோசனை |
| சந்திர மண்டலம் | 1 00 000 | ,, |
| நட்சத்திர மண்டலம் | 1 00 000 | ,, |
| புதன் மண்டலம் | 2 00 000 | ,, |
| சுக்கிர மண்டலம் | 2 00 000 | ,, |
| செவ்வாய் மண்டலம் | 2 00 000 | ,, |
| வியாழ மண்டலம் | 2 00 000 | ,, |
| சனி மண்டலம் | 2 00 000 | ,, |
| ஏழுமுனிவர் மண்டலம் | 1 00 000 | ,, |
| துருவ மண்டலம் | 1 00 000 | ,, |
| ஆகக் கூடியது | 15 00 000 | யோசனை |

தொகலோடு சேர்தருமிப் பதத்தின் மீதிற் சுவர்லோகம் எண்பத்தைஞ் சிலக்க மாங்கே
புகலோடு வானவருஞ் பிறரும்போற்றப் புரந்தரன்வீற் றிருந்தரசு புரிவன் அப்பால்
மஹலோகம் இருகோடி மார்க்கண்டாதி மாமுனிவர் பலர்செறிவர் மற்ற தன்மேல்
இகலோகம் பரவுசனலோகம் எல்லை எண்கோடி பிதிர்தேவர் இருப்பர் அங்கண்.

தொகுதியாகப் பொருந்திய இந்தப் புவர்லோகத்தின் மேலாக சுவர்க்கலோகம் எண்பத்தைந்திலக்கம் யோசனை தூரத்திலுள்ளது. அந்த உலகத்து இந்திரனையே அடைக்கலமாக இருந்து தேவர்களும் பிறருந் துதிப்ப இந்திரக் கடவுள் வீற்றிருந்து அரசு செய்வான். அதற்கு மேலாக மகலோகம் இரண்டு கோடி யோசனை தூரத்தில் இருப்பது. அங்கு மார்க்கண்டேயர் முதலிய பெரிய பல முனிவர் செறிந்திருப்பர். இதன்மேலாக இவ்வுலகத்தாராற் துதிக்கப்படுகின்ற சனலோகம் உள்ளது. அதன் உயரம் எட்டுக்கோடி யோசனை. அவ்விடத்தில் பிதிர் தேவர்கள் இருப்பார்கள். 64

தவலோகம் உன்னதமீ ராறு கோடி சனகர்முத லாவுடையவனகர் சேர்வர்
அவண்மேற்சத் தியவுலகம் ஈரெண் கோடி அயன்இன்பத் தலம்உலக மளிக்குந் தானம்
நவைதீரும் பிரமபதம் மூன்றுகோடி நாரணன்வாழ் பேருலகம் ஓர்முக்கோடி
சிவலோகம் நாற்கோடி அதற்குமீதே திகழண்ட கோளகையுங் கோடியாமே.

அதற்கு மேலாக பன்னிரண்டு கோடி யோசனை தூரத்தில் தவலோகம் உண்டு. அங்கு சனகர் முதலாகவுள்ள முனிவர்கள் இருப்பார்கள். அதற்குப் பதினாறு கோடி யோசனை தூரத்தில் சத்திய உலகம் இருக்கின்றது. அதுவே பிரமதேவர் இன்புற் றிருக்கும் உலகமாகும். அங்கிருந்து சகல உலகங்களையும் படைக்கும் இடமுமாகும். அதற்கு மேலாகக் குற்றமற்ற பிரம உலகமாம். இது மூன்றுகோடி யோசனை தூரத் தில் உள்ளது. அதற்கு மேலாக நாராயணக் கடவுள்வாழ்கின்ற பெரிய விஷ்ணு உலகம் மூன்றுகோடி யோசனை தூரத்தில் உள்ளது. அதற்குமேல் சிவலோகம் நான்கு கோடி யோசனை தூரத்திலுள்ளது. அதற்கு மேலாக விளங்குகின்ற அண்டகோளகையும் ஒரு கோடி யோசனையாம்.

பூவுலகு மேலாக ஐம்பதுகோடி யோசனை கணக்கு விபரம்

| | | |
|---|---|---|
| புவர்லோகம் | யோசனை | 15 00 000 |
| சுவர் லோகம் | ,, | 85 00 000 |
| மகலோகம் | ,, | 2 00 00 000 |
| சனலோகம் | ,, | 8 00 00 000 |
| தவலோகம் | ,, | 12 00 00 000 |
| சத்தியலோகம் | ,, | 16 00 00 000 |
| பிரமலோகம் | ,, | 3 00 00 000 |
| விஷ்ணுலோகம் | ,, | 3 00 00 000 |
| சிவலோகம் | ,, | 4 00 00 000 |
| மேலண்ட கடாகம் (கோளகை) | | 1 00 00 000 |
| ஆகக் கூடியது | | 50 00 00 000 யோசனை |

வேதமொடு தந்திரமும் அவற்றின் சார்பு மிருதிகளும் பிறநூலும் வேறு வேரு
ஓதிடுமண் டத்தியற்கை மலேவோ வென்ருல் உண்மைதெரிந் திடிற்படைப்பும் உலப்பில் பேதம்
ஆதலினுல் அவ்வவற்றின்றிருபு நாடி அறிந்தஉனக் கிண்டுண்மை யதுவே சொற்ரும்
ஏதமில் இவ்வண்டத்தில் புவன நூற்றெட் டிறையருள்சேர் உருத்திரர்தம் மிருக்கையாமே.

வேதங்களும் ஆகமங்களும் அவற்றின் சார்பு நூல்களும் மிருதிகளும் ஏனைய நூல்களும் வேறு வேருக அண்டங்களின் இயற்கையைப்பற்றிச் சொல்லிடும். அப்படியானுல் அவைகள் தவருே என்ருல் இல்லை. உண்மையைத் தெரிந்திட்டால் உலகப் படைப்பும் அளவிறந்த பேதங்களாகும். ஆதலினுல் அந்தந்த நூல்களின் வேற்றுமைகளை ஆராய்ந்து விவேக புத்தியையுடைய உனக்கு உண்மையானதையே இங்கு சொன்னும். குற்றமற்ற இந்த அண்டத்தில் நூற்றெட்டுப் புவனங்கள் உள்ளன. அவை சிவபிரானது கருணையைப்பெற்ற உருத்திர மூர்த்திகளது இருப்பிடங்களாகும். 66

இந்த அண்டத்தின் இயற்கைய முன்னுனக் கிறைவன்
தந்த அண்டங்கள் ஆயிரத் தெட்டுமித் தகைமை
மைந்த நீசென்று காணுதி யெனவகுத் துரைப்ப
அந்த மில்லதோர் மகிழ்ச்சியின் உணர்ந்தனன் அவுணன்.

புதல்வனே! முன் ஈசன் உனக்கு அரசாளும்படி தந்தருளிய ஆயிரத்தெட்டு அண்டங்களும் நாம் இப்போது சொல்லிய இந்த அண்டத்தின் இயல்பாகவே அமைந்திருப்பன. இத்தன்மையை நீ சென்று உனது ஆயிரத்தெட்டு அண்டங்களையும் காணும்போது இந்த அண்டங்கள் யாவும் நாம் சொல்வதுபோல மேலும் கீழுமாக பதினான்கு உலகங்களைக் கொண்டு ஒவ்வொன்றும் விளங்குவதைக் காண்பாய் என்று சுக்கிரபகவான் வகுத்துக்கூற அதுகேட்ட சூரபன்மன் முடிவில்லாததோர் மகிழ்ச்சியுடன் உணர்ந்துகொண்டான். 67

அண்டகோசப் படலம் முற்றிற்று.

ஆகத்திரு விருத்தம் 789

# திக்குவிசயப் படலம்

குணங்கள் பற்பல உணர்த்திய குரவன்றன் கழல்கள்
வணங்கி வாளரி முகனொடு விடைகொண்டு வயமான்
அணங்கு வைகிய திறலுடைச் சூரர்கோன் அவுணர்
இணங்கு தானையங் கடலிடைப் புக்கன் இமைப்பில்.

அண்டங்களின் குணங்கல் பலவற்றையும் சூரபன்மன் ஒழுக வேண்டிய நிலை பற்றியும் பல தன்மையாகப் பேசிய குருவான சுக்கிரபகவானின் பாதங்களில் சூர பன்மன் வணங்கி ஒளியுடைய சிங்கமுகா சூரனொடு விடைபெற்றுக் கொண்டு ஆச்சி ரமத்தை விட்டுப் புறப்பட்டு வெற்றி மடந்தையான வீரலக்குமி வாசம் செய்யும் திரு வுடைய சூரபன்மன் அசுரர் நெருங்கி இணக்கமுடன் நின்ற தனது சேனையின் கட லின் இடையாக ஒரு இமைப்பொழுதில் சென்று சேர்ந்தான். 1

சேனை யின்றலை புகுதலுந் தார்கன் சென்று
கோனை வந்தனை செய்துதன் முன்னவற் குறுகி
ஆன பான்மையின் வணங்கிமுன் னின்றிட ஆசான்
போன எல்லையிற் புகன்றன பரிசெலாம் புகன்றான்.

சூரபன்மன் சேனையின்பால் வந்து சேர்தலும் தாரகா சூரன்சென்று சூரபன் மனை வணங்கி வந்தனைசெய்து தனது தமையன் முன்னாகக் குறுகிச் சென்று தமை யனை விதிப்பிரகாரம் வணங்கி முன்னாக எழுந்து நின்றபொழுதில் அதுவேளை சூரபன் மன் தாரகனிடம் தான் குருவானவரிடம்போன காலத்து அவர் தமக்கு எடுத்துக் கூறிய அந்த வாசகங்களை எல்லாம் சொன்னான். 2

ஆவ தாகிய பரிசெலாங் கேட்டுணர்ந் தவனுந்
தாவி லாததன் மனங்கொடு நன்றிது தலைவ
மேவ லார்களை யாமினி வென்றிட விரைவில்
போவ தேகடன் என்றனன் அன்னதோர் பொழுதின்.

குருவினுடைய உபதேச வார்த்தைகளின் தத்துவங்களை எல்லாம் கேட்டுணர் திட்ட தாரகனும் குறைவிலாத தனது மனத்தால் அதுதான் நன்றெனத் தெளிந்து சூரனை நோக்கித் தலைவா! எமது பகைவர்களை நாம் வெற்றிகொள்ளும்படியாக விரைவில் புறப்பட்டுப்போவதே இனிமேல் எமது மேலான கடமையாகும் எனக் கூறினான். அப்படித் தாரகன் கூறிய நேரத்து 3

அந்தி வார்சடைக் கண்ணுதற் கடவுள்தன் அருளான்
மைந்தர் மூவரும் பெற்றதொல் வரங்களும் வலியுஞ்
சிந்தை யுள்ளுற நாடியே யளியொடுஞ் சேணில்
வந்து தோன்றினள் தொல்லைநாள் நோற்றிடு மாயை.

மாலையில் தோன்றும் செக்கர்போலும் சிவந்த சடையுடைய கண்ணுதற் கட வுள் சிவன் தனதருளாளன் தனது பிள்ளைகள் மூவரும் பெற்ற முதிய வரங்களும் வலியும் தனது மனதில்தோன்ற அதை உள்ளுறநாடி அறிந்து கொண்ட தாயாகிய மாயவள் மனதில் பெரு மகிழ்வுடனும் கருணையுடனும் வானத்தில் வந்து தோன்றி னாள். முன்னாள் தொடக்கமாகத் தனது பிள்ளைகள் மேம்பாடடைய வேண்டுமென்று தவம் செய்திருந்த மாயவள். 4

தோன்று மெல்லையின் முந்துறக் கண்டுவெஞ் சூரன்
ஆன்ற தம்பியர் தம்மொடும் அசமுகி யோடும்
ஊன்றும் அன்பொடு பணிதலும் அன்னைதன் உள்ளம்
ஈன்ற ஞான்றினும் உவந்தனள் ஆசிகள் இசைத்தாள்.

மாயவள் தோன்றும் எல்லையில் அவளை முன்பாகக் கண்டுகொண்ட கொடிய சூரபன்மன், தன்னுடன் துணையான தம்பியருடனும், தங்கை அசமுகியுடனும் உள்ளத்து ஊற்றெடுத்துப் பெருகுகின்ற அன்புடன் பணிதலும் அவ்வேளை தாயான மாயவள் தனது உள்ளமானது அப்பிள்ளைகளைப் பெற்றிட்ட நாளிலும் பார்க்கப் பெரிதும் மகிழ்வாகி அன்புடன் வணங்கிய மக்களுக்கு ஆசீர்வாதம் செய்தாள். 5

ஆசி கூறியே வேள்வியிற் செய்கையும் அதனுக்
கீசன் நல்கிய வரங்களுங் கேட்டனன் ஈண்டு
நேச மோடுமைக் காணிய வந்தனன் நீவிர்
வாச வன்முத லோர்தமை வெல்லுதிர் வலியால்.

பிள்ளைகளுக்கு ஆசிகூறியே அவர்களை நோக்கிச் சொல்வாள்; யாகத்தின் செய்கையையும் அதற்குச் சிவபிரான் நல்கிய வரங்களையும் பற்றிய விபரங்களையும் நன்றாகக் கேள்வியுற்றேன். உம்மை உள்ளத்துப் பெருகின்ற அன்போடு காணும்படி வந்தனன். நீவிர் இந்திரன் முதலியோர்தமை உமது வலியால் வெற்றிகொள்வீராக. 6

வென்ற பின்னர்எவ் வுலகமும் புரந்துமே தினியில்
என்றும் வாழுதிர் மாயைகள் வேண்டிடின் என்னை
ஒன்றும் அன்புடன் உன்னுதிர் உன்னிய பொழுதே
சென்று வேண்டிய தன்மைகள் செய்தியான் முடிப்பேன்.

வெற்றிகொண்டபின் எவ்வுலகமும் உமது ஆணைக்குள்ளாக்கி அரசாண்டு இப் பூமியில் எஞ்ஞான்றும் வாழ்வீராக. மாயைத் தன்மைகள் புரிய நீர் விரும்பினால் என்னை ஒருமைப்பாடுடைய அன்பினால் தியானியுங்கள். அவ்வண்ணம் நினைத்த போதே நான் தோற்றிவந்து நீங்கள் விருப்பிய கருமங்களைச் செய்து முடிப்பேன். 7

ஈத லால்உமைப் பிரியலன் பன்முறை யானே
காத லோடுமைக் காணிய செல்குவன் கலந்து
பேத நீரற இருத்திரால் ஈண்டெனப் பேசி
மாதும் ஏகினள் மைந்தர்கள் மூவரும் வணங்க.

இதுவுமல்லாமல் நான் உமைப் பிரிந்திருக்கேன். உங்கள்பால் காதலாகி உம்மைக் காணும்பொருட்டால் பலமுறையும் வருவேன், நீங்கள் உடலம் வேறாயும் உயிர் ஒன்றுபோலக் கலந்து உங்களுக்குள் எவ்வித வேறுபாடுமின்றி இங்கு இருப்பீராக எனப் பேசிக்கொண்டு மாயவள் மறைதலுற்றாள். ஆசி செய்த தாய் மறையும் போதே மூவரும் அவளை வணக்கம் செய்ய. 8

தோடு லாவிழிப் பொற்றொடி ஏகலுஞ் சூரன்
கோடி தேருடன் தானவர் தங்களைக் கூவி
நீடு நம்பெருந் தானைகள் நிதிபதிக் கேகப்
பாடல் மாமுர சறைமினோ கடிதெனப் பணித்தான்.

தோடுவரையும் உலாவுகின்ற கண்ணினையுடைய மாயவள் மறைந்து போதலும் சூரபன்மன் கோடி தேருடன் பொலிவுற்ற அசுரரைக் கூவி அழைத்து நீங்கள் அளவு காண்பரிய பெருஞ் சேனையைக் குபேரனுடைய பட்டினத்திற்குப் போகுமாறு ஓசை யுடைய முரசப் பறையை முழக்கி விரைவுடன் எனது கட்டளையைச் சொல்வீராக என்றான் சூரபன்மன், 9

அரசன் ஏவலும் அவுணர்கள் அன்னவா றறைந்து
முரசம் எற்றினர் கேட்டலும் அத்திசை முன்னி
உரைசெய் நான்முகன் உறங்குழிப் புவிகொள ஒருங்கே
திரைசெய் வான்கடல் சென்றெனச் சென்றது சேனை.

சூரபன்மன் இவ்வாறு கட்டளையிடுதலும் அந்த அசுரர்கள் அப்படியே முரசப் பறையை முழக்கி முழக்கி சேனையை குபேரபட்டிணம் செல்லும்படி தூண்டலும் அப்பறை ஓசை கேட்டலும் அந்தக் குபேரபட்டினத்தின் திசையை நோக்கி யாவரும் புகழும் பிரமதேவன் நித்திரையான காலத்து இப்பூமியை உண்ணும்படியாகத் திரையினை உடைய பெரிய கடல் எழுந்ததுபோல சேனை எழுந்து சென்றது. 10

பத்து நூறுடன் ஆயிர மாதியாய்ப் பலவாங்
கொத்து நீடிய சென்னியர் கொடுமைசேர் குணத்தோர்
மெத்து பல்படை ஏந்திய கரத்தினர் விறலோர்
கத்து வார்கடல் ஆர்ப்பினர் அவுணர்தங் கணத்தோர்.

இவ்வாறு செல்லும் அசுரராயுள்ளோர்கள் பத்துத் தலை, நூறு தலை, ஆயிரம் தலை எனும்படியாக தொகுதியுடன் கூடிய பலவகையான தலைகளை உடையவரும் கொடுமை சேர்ந்த குணமுடையோரும், மிகுதியான பல படைக்கலங்களை ஏந்திய பல கைகளினை உடையவரும், வலியுடையரும், இரைகின்ற கடல்போல் கூச்சலிடு பவரும், ஆகிய தன்மையுடன் விளங்குவாராயினர். 11

விண்ணிற் பாய்வன இரவிதேர் பாய்வன வேலைக்
கண்ணிற் பாய்வன திசைகளிற் பாய்வன கனல்மேற்
பண்ணிற் பாய்வன வரைகளிற் பாய்வன பரவை
மண்ணிற் பாய்வன புரவிகள் அளப்பில மாதோ.

இப்பால் அளவிடமுடியாத கணக்கினையுடைய குதிரைகள், வானத்தில் பாய்வன வாகியும், சூரியனுடைய தேரிற் பாய்வனவாகியும் சமுத்திரத்தின் மேலாகப் பாய்வன வாகியும் திக்குகளில் பாய்வனவாகியும் நெருப்பின் மேலாக இசைவுடன் பாய்வன வாகியும் மலைகளில் பாய்வனவாகியும், கடல் சூழ்ந்த பூமியில் பாய்வனவாகியும் விரைந்தோடிச் செல்கின்றன. 12

பாறு சென்றிடக் கொடியினஞ் சென்றிடப் பலபேய்
வேறு சென்றிடப் பாரிடஞ் சென்றிட விண்மேல்
மாறு சென்றிடப் பிளிறொலி சென்றிட மதநீர்
ஆறு சென்றிடச் சென்றன யானையின் அனிகம்.

வேகமுடன் அசுரர்சேனை செல்லலும் அதனைத் தொடர்ந்து பருந்துகள் வட்டமிட்டுச் செல்லவும், காகங்கள் செல்லவும், வேருகப் பேய்கள் செல்லவும், பூதங்கள் செல்லவும், வானமுகில் முழக்கத்திற்கு மாறுகொள்வதுபோல் யானைகளின் பிளிற்ருேசை முழக்கத்துடன் மதநீர் ஆறுபோல வழிந்தோடவும் திரண்டு யானைப்படை சென்றன. 13

மேருச் சையமுங் கயிலையும் அல்லது வேறு
நேரற் கொத்திடு கிரிமிசைச் செல்வன நீலக்
காரிற் செல்வன விண்மிசைச் செல்வன கடல்சூழ்
பாரிற் செல்வன செல்வன ஆழியம் பலதேர்.

மேருமலையும், கைலைமலையுமே, அல்லது வேறு தமக்கு நேராகச் சொல்லமுடியாத மலைமேலாகச் செல்வன, நீலவானத்திலுள்ள முகில்மேலும் செல்வன, வானத்தில் செல்வன, கடல் சூழ்ந்த பூமியிலும் செல்வன பெரிய சில்லுடைய பல தேர்கள். 14

மூன்று கோடியோ சனையதாய் நாற்றிசை முற்றும்
ஆன்ற வெல்லையின் அவ்வகைத் தாகிய அனிகம்
ஏன்று சென்றன சென்றதோர் அளவையின் இனன்போல்
தோன்று பொன்சுடர் அளகையை அடைந்தன தூசி.

மூன்று கோடி யோசனைப் பரப்பளவாய் நான்கு திக்குகள் முற்றும் பொருந்திய எல்லையில் அவ்வகையாக காலாட் படை, தேர்ப் படை, குதிரைப் படை, யானைப் படையான அசுரப்படை அணிவகுத்துச் சென்றன. அவ்வண்ணம் செல்லும்காலையில் இச்சேனையின் முன்னணிச் சேனையானது சூரியதேவனைப்போல் பிரகாசமுடைய அளகாபுரியெனும் குபேரபட்டினத்தைச் சேர்ந்துகொண்டது. 15

பூதம் ஐந்தினும் மிகவலி புடையது பொலன்சேர்
ஆத வன்தனித் தேரினுஞ் சிறப்புற்ற தவனில்
சோதி பெற்றது பேருணர் வுள்ளது தொல்சீர்
மாதி ரங்களை அகற்சியான் மறைப்பது மன்னே.

பஞ்சபூதங்களிலும் மிகவலியுடையது, மிக ஒளியுடையதும் பொன்மயமானதுமான சூரியதேவனின் தேரிலும் சிறப்புடையது. சூரியனுடைய ஒளியிலும்பார்க்க மிகுந்த பிரகாசமுடையது. பேருணர்வுடன் விளங்குவது. முந்திய சிறப்புடைய திக்குகளைத் தனது விசாலத்தன்மையால் மறைப்பது. 16

என்று மேயழி வில்லது மேருவோ டிகலுங்
குன்று போலுவ தகிலமும் இமைப்பினிற் குறுகிச்
சென்று மீள்வது குறிப்பினிற் செல்வது சிதையா
ஒன்று கோடிய வாம்பரி பூண்டுள தொருங்கே.

என்றுமே அழிவில்லாதது மேருமலையுடன் எதிர்த்து நின்ற விந்தமலை போல்வது. அகில உலகமெல்லாம் ஒரு இமைப்பொழுதில் சென்று மீளவல்லது. சூரபன்மன் குறிப் பின்வழிச் செல்வது அழிவிலாதிருக்கும் ஒருகோடி குதிரைகள் ஒருங்கு பூட்டப்பெற்றது. 17

அழிவி லாப்பல சாரதி உள்ளதங் களப்பில்
விழுமி தாகிய படையெலாங் கொண்டது மேவார்
ஒழிய அன்னவர் தேர்மிசைச் செல்லுவ துருமேற்
றெழிலி அச்சுறப் பன்மணி கறங்குவ தென்றும்.

அழிவிலாத வலியுடைய பல சாரதிகளை உடையது அதனிடத்து மிக உன்னதமான படைகளை உடையது. பகைவர் அழியும்படி அவர் தேர்மேல் நேராகப் பாய்வது. இடியினை உடைய மேகங்கள் அச்சுறும்படி சத்தமிடும் பல மணிகள் அதனிடம் கொண்டது. 18

பாரை நேர்தரு பரப்பின துலகெலாம் படைத்த
நாரி பாதியன் அளித்தருள் இந்திர ஞாலத்
தேரின் மால்வரை மிசையுறும் வயப்புலி செலல்போல்
சூரன் ஏறியே போந்தனன் அவுணர்கள் தொழவே.

பூவுலகத்தை ஒத்த அகற்சியை உடையது. இவ்வண்ணமாகிய சிறப்புடையதாய் பெண்ணொரு பாகராகிய சிவபிரான் கொடுத்தருளப்பெற்றதாகிய இந்திரஞாலம் என்னும் தேரின் மேலாக பெரிய மலைமேல் எழுந்து செல்லும் ஓர் வீரப்புலிபோல சூரபன்மன் ஏறிக்கொண்டு அசுரர் சூழ்ந்து தொழுதபடிவர செல்வானாயினன். 19

ஆண்டவ் வெல்லையின் ஆயிர மாயிரம் யாளி
தாண்டு வெம்பரி ஆயிர மாயிரந் தடந்தோள்
நீண்ட பாரிடம் ஆயிர மாயிர நிரலே
பூண்ட தேர்மிசை ஏறியே அரிமுகன் போந்தான்.

அவ்விடத்து அந்த எல்லையில் ஆயிரம் ஆயிரம் யாளிகள் பூட்டப்பெற்றதும் ஆயிரம் ஆயிரம் தாவிப்பாயும் குதிரைகள் பூட்டப்பெற்றதும் தோள்கள் நீண்ட பூதங்கள் ஆயிரமாயிரமாகப் பூட்டப்பெற்றதுமான ஓர் தேர்மேலாகச் சிங்கமுகாசூரன் ஏறிச் சென்றான். 20

காலும் உள்ளமும் பின்னுற முன்னுறு கவனக்
கோல மாப்பதி னாயிரம் பூண்டதோர் கொடிஞ்சிச்
சால மார்தரு வையமேற் புகுந்துதா ரகனும்
ஆல மென்பது சென்றென நடந்தனன் அன்றே.

காற்று வேகமும் மனோவேகமும் பிற்பட முன்னாக வேகமுடன் செல்லும் கடிவாளமுடைய அழகிய குதிரைகள் பதினாயிரம் பூட்டப்பெற்ற கொடிஞ்சிகள் பல வாகவுடைய ஒரு தேர்மேலாக ஏறிக்கொண்டு தாரகாசூரன் ஆலகாலம் என்னும் நஞ்சு வேகமுடன் செல்லுதல்போலச் சென்றான். 21

அன்ன தாரக வீரனும் அரிமுகத் தவனும்
மன்ன னோர்இரு பாங்கரு மாயினர் வந்தார்
துன்னு தானவத் தானையந் தலைவர்கள் தொலையாப்
பொன்னின் மாமணித் தேரொடும் ஏகினர் புடையில்.

அவ்வாருகிய வேகத்துடன் செல்லும் தாரக வீரனும் சிங்கமுகாசூரனும் அரசனை சூரபன்மனின் இருபக்கமுமாக வந்தார்கள். இவர்களைப் புடைசூழ்ந்து வீரமுடைய அசுர சேனதிபதிகள் பொன்னுலும் இரத்தினத்திலும் சிறப்புற்றமைந்த தேர்களில் ஏறிச் சென்றார்கள். 22

விரவு கின்றதோர் ஏனையர் சேனையின் வீரர்
கரியெ னுங்கடல் மீதினுங் கலினமார் கவனப்
பரியெ னுங்கடல் மீதினும் முதல்வனைப் பரவி
இரும ருங்கினும் போயினர் கூற்றனும் இரங்க.

நெருங்கிச் செல்கின்ற ஏனைய அசுர வீரர்களும் சேனை வீரர்களும் கடல்போல் பெருகிய யானைகள் மீதும் கடிவாளத்தையுடைய குதிரைகள் மீதிலும் ஏறிக்கொண்டு முதல்வனுகிய சூரனை வணங்கியவாறு சூரபன்மன் இரண்டுபாலும் சென்றனர் இவர்கள் செல்லும் நிலையைக் கண்டு இயமனும் ஏக்கத்தினுல் இரங்கும்படியாக. 23

அடல்செ றிந்திடும் ஒன்பதிற் றிருவகை யாகும்
படைக ளேந்தியே அளவிலா அவுணர்கள் பரவிக்
கடல்கி ளர்ந்தவண் சூழ்வன போன்றுகா வலர்தம்
புடையில் வந்தனர் அசனியும் அச்சுறப் புகல்வார்.

அளவிலா அசுரர்கள் கொடுமைகள் மிக்குள்ள பதினெட்டு வகைகள் எனச் சொல்லப் பெறும் படைக்கலங்கள் யாவையும் கைகளிலே ஏந்திக்கொண்டு வணக்கமும் செலுத்திக்கொண்டு கடல் கிளர்ந்து அவ்விடத்தே சூழ்வதுபோன்று தங்கள் சேனுதிபதிகளை வளைத்துக்கொண்டு பாங்கரில் வந்தார்கள். அவர்கள் இடியும் அஞ்சும்படி பேசிக்கொண்டு வருகிருர்கள். 24

இன்ன தன்மையி னுற்படை சூழ்தர இதன்பாற்
துன்னு தேரென உள்ளவுந் துரகமுள் ளனவும்
பன்னெ டுங்கரி உள்ளவும் அவுணர்கள் பலரும்
மன்னி வந்திட நடுவுற ஏகினன் மன்னன்.

இன்னதன்மையாக காலாட் படை, குதிரைப் படை, யானைப் படை, தேர்ப் படை என்னும் நான்கு வகையான படைகள் சூழ்ந்து வர இதன் பக்கத்தில் நெருங்கிய தேர்களாயுள்ளவைகளும் குதிரைகளாயுள்ளவைகளும் பல நெடிய யானைகளாயுள்ளவைகளும் அசுரர்கள் பலரும் சூழ்ந்துவர நடுவணுகச் சூரபன்மன் சென்ருன். 25

வயங்க ளார்த்திடு தானவ ரோதையும் மான்தேர்
அயங்க ளார்த்திடு மோதையும் அன்னவை அணித்தாய்க்
கயங்க ளார்த்திடு மோதையுங் கண்டையின் கலிப்பும்
இயங்க ளார்த்திடு மோதையும் மிக்கன வெங்கும்.

வெற்றிகளைப்பற்றி மிக்க அசுரர்கள் பேசெடுக்கும் ஆரவாரவோசையும், தேர்களில் பூட்டிய குதிரைகள் கனைக்கின்ற ஓசையும் அவைகளின் பக்கராக யானைகள் ஆரவாரிக்கின்ற ஓசையும் வீரகண்டைகளின் ஓசையும் வாத்தியங்கள் முழங்குகின்ற ஓசையும் எங்கும் மிகுந்துள்ளன. 26

**அரியெ னுந்திறல் அவுணர்கள் அங்கையி லேந்தும்**
**உரிய வெம்படை முழுவதும் ஒன்றெடொன் றுரிஞ்ச**
**எரிபி றந்தன செறிந்தன எம்பிரான் முனிந்த**
**புரமெ னும்படி யாகிய வரைகளும் புவியும்.**

சிங்கத்தைப்போன்ற வலிமையுடைய அசுர வீரர்கள் தமது அழகிய கைகளில் ஏந்தியிருக்கின்ற தங்கட்குரிய கொடிபடைக்கலங்கள் யாவும் சேனைகள் நெருக்கமாகச் செல்வதால் ஒன்றோடொன்று உராஞ்ச அதில்நின்றும் நெருப்புப் பிறந்தது. அந்தப் பொறிகளாகிய தீ எங்கும் பரந்து மலைகளையும் பூமியிலுள்ள பொருள்களையும் பொடிசெய்தது. இது எதுபோலும் எனில் சிவபிரான் கோபித்தெரித்த முப்புர மெனும்படியாயது. 27

**நிரந்த தானவர் எழுந்திடப் பூழிகள் நிலமேற்**
**பரந்து வானகம் புகுதலும் அனையது பாரா**
**விரிந்து போவதை நீங்கியே அவைதனை எய்தக்**
**கரந்து வைகினன் ஆழியந் தேருடைக் கதிரோன்.**

நிரந்து போர்க்கெழுந்த அசுரர் புறப்பட எழுந்த புழுதியானது நிலமேல் எங்கும் பரந்து வான உலகம் புகுந்து செல்லலும் அதனைக் கண்டுகொண்ட ஒற்றை யான பெரிய சில்லினைக்கொண்ட தேரினையுடைய சூரியன் அசுரசேனையைக் கண்டு பயந்தோடுவதை விடுத்து தன்னைஅடைந்த புழுதிக்குள்ளே மறைந்திருந்தான் தனக்கு ஆபத்தில்லை எனும்படியாக. 28

**பூந டுங்கின பணிக்குலம் நடுங்கின புரைதீர்**
**வான டுங்கின மாதிரம் நடுங்கின வரைகள்**
**தாந டுங்கின புணரிகள் நடுங்கின தறுகட்**
**தீந டுங்கின நிருதர்கோன் பெரும்படை செல்ல.**

அசுரர்க் கரசனான சூரபன்மனின் பெரும் படை செல்ல, பூமிநடுங்கியது, பூமி யைத் தாங்கும் பாம்புகள் கூட்டம் நடுங்கியது, குற்றம் நீங்கிய வான உலகம் நடுங் கியது, திக்குகள் நடுங்கியன, மலைகள் தாமும் நடுங்கியது, சமுத்திரங்கள் நடுங்கியது, கொடும்தன்மையான நெருப்புமே நடுங்கியது 29

**இனைய தன்மையிற் சேனைகள் தம்மொடும் இறைவன்**
**தனதன் மாநகர் வளைந்தனன் அன்னதோர் தன்மை**
**வினவி யோடியே தூதுவர் இயக்கர்கோன் மேவுங்**
**கனக மாமணிக் கோநகர் சென்றனர் கடிதின்.**

இனைய தன்மையாக சேனைகள் தட்முடன் அரசனான சூரபன்மன் குபேர னுடைய பட்டணத்தை வளைந்து முற்றுகையிட, அத்தன்மையை அறிந்தோடி தூதுவர் இயக்கர் தலைவனான குபேரன் இருக்கின்ற பொன்மயமான தலைநகருக்கு விரைவில் சென்றனர். 30

சென்றிடும் ஒற்றர் தங்கோன் சேவடிக் கமலந் தாழ்ந்து
வன்றிறற் சூரபன்மன் மாநகர் வளைந்து கொண்டான்
இன்றினி யழியும் போலும் ஈண்டுநீ யிருத்தல் சால
நன்றல அனிகத் தோடு நடத்தியால் அமருக் கென்றார்.

சென்றிட்ட தூதுவர் தங்கள் தலைவனான குபேரனின் சிவந்த தாமரை மலர் போலும் திருவடிகளில் தாழ்ந்து வணங்கி, சொல்வார், ஐயனே மிக்க வலிமையுடைய சூரபன்மன் தனது சேனையுடன் வந்து எமது நகரை வளைந்துகொண்டான். நிலைமையைக் கவனிக்குமிடத்து எமது நகரம் இன்று அழிந்துபோகும்போலும். ஆகவே நீர் இதைத் தெரிந்தும் சும்மா இருத்தல் நன்றல. உமது சேனையுடன் புறப்பட்டு போருக்கு நடப்பாயாக என்றார்கள். 31

தூதுவர் உரைத்தல் கேளாத் துன்புகூர் துளக்க மெய்தி
ஏதமில் அவுணர் தம்மை யாம்வெலற் கரிது முக்கண்
ஆதிதன் வரங்கொண் டுள்ளார் அவர்ப்புகழ்ந் தாசி செய்வான்
போதுதல் கடனே யென்னுப் பெருக்கென எழுந்து போனான்.

குபேரன் தூதுவர் உரைத்தவற்றைக் கேட்டு துன்பம் பெருகும் நடுக்கமடைந்து குறைவிலா வலியுடைய அசுரர்களை யான் வெற்றிகொள்வது அரிது. ஏனெனில் மூன்று கண்ணுடைய ஆதியாம் பகவானில் அருளால் பெருவரங்கொண்டார்கள். ஆகவே நான் அவர்களைச் சென்றடைந்து ஆசிசெய்தலே யுத்தியான கருமமென எண்ணித் திடீரெனத் தனதிருப்பிடம் விடுத்துப் போனான். 32

போயினன் அளகை அண்ணல் புட்பகமீது சென்று
தூயதோர் இயக்கரோடுஞ் சூரனைத் தொழுது போற்றி
ஏயின ஆசிகூறி யான்நுமக் கடிய னென்ன
நீயினி திருத்தி யென்றே விடுத்தனன் நிருதர் போற்ற.

புறப்பட்டுச் சென்ற அளகாபுரி அரசனான குபேரன் புட்புக விமானத்தின்மீது சென்று தன்னுடன் துணையாக வந்த தூயவரான இயக்கர்களுடன் சூரபன்மனைத் தொழுது போற்றி பொருத்தமான நல்ல ஆசி மொழிகளைக் கூறி சூரபன்மனே! நான் உனக்கு அடியனானேன் என்னலும் அதுகேட்ட சூரபன்மன் அப்படியாயின் நீ இனி இங்கே இருப்பாயாக என குபேரனை விடுத்தான். குபேரன் சரண்புகுந்தமை கண்ட அசுரர் யாரும் சூரனைப் போற்றிசெய்ய. 33

அன்னது கண்டுழி அவுணர் மாப்படை, மின்னவிர் முகிலினம் வெருவ ஆர்த்தன
துன்னுறும் இளையவ ரோடுஞ் சூரனும், மன்னவன் அவ்வழி மகிழ்ச்சி எய்தினான்.

அதனைக் கண்டபொழுது அசுரரான பெரும் படை மின்னலுடன் விளங்கும் முகில்களும் வெருக்கொள்ள மிகவும் ஆரவாரித்தன அவ்வேளை தன்னுடன் கூடிய தம்பியரோடும் சூரபன்மன் என்னும் அரசன் அவ்வழியாகப் பெருமகிழ்ச்சியடைந்தான். 34

அதுபொழு தவுணர்கள் அளகை யூடுபோய், நிதிகளும் மணிகளும் நீடு மானமுஞ்
சிதைவறு படைகளுந் தேரும் மாக்களுங் கதிகெழு களிறுடன் கவர்ந்து மேவினர்.

அதுபொழுது அசுரர்கள் அளகாபுரியின் இடையே புகுந்து அங்குள்ள நிதிகளும், இரத்தினங்களும் அழிவிலா புஷ்ப விமானங்களும் சிதைவாகாத பெரும் படைக்கலங்களும் தேர்களும் குதிரைகளும் வேகமுடன் செல்லும் யானைகளுமாகிய பொருள் யாது விசேடமாக உண்டோ அவற்றைச் சூறையாடிக்கொண்டு திரும்பினர்கள். 35

மைம்மலி தானவர் வலிந்து வௌவலாற், பொய்ம்மையில் பெருவளம் யாவும் போக்கிய
செம்மையில் அந்தகர் திருவும் நீங்கிய, கைம்மைதன் வடிவெனுங் காட்சித் தாயதே.

இருள்மிகுந்த அசுரர்கள் வலிந்து பறித்தெடுத்துக்கொண்ட அழிவற்ற பெரு வளங்களான பொருள்கள் யாவையும் இழந்து நின்ற செம்மையுடன் முன் விளங்கிய அளகாபுரி சிறப்பு நீங்கி, நாயகன் இலாத கைம்பெண்ணின் நிலைபோன்றிருந்தது. 36

ஆறலை கள்வரின் அவுணர் யாவருஞ், சூறைகொண்டதந்நகர் தொலைத்துப் போதலும்
ஊறுகொள் நிதிபதி உள்ளம் நாணியே, வீறகல் அளகையின் மீண்டும் ஏகினன்,

வழிப்பறி செய்யும் கள்வரைப்போல் இரக்கமின்றி அசுரர் யாரும் அளகாபுரியைச் சூறையாடிக்கொண்டு அந்நகரினைத் தொலைத்துவிட்டுப் போதலும் இப்போ சிதைவாகிய நகரை நோக்கிய செல்வங்கட்கு அரசனாகியும் அடிமையாக்கப்பட்ட குபேரன் மனம் நாணமடைந்து வலிமை கெட்ட தனது நகருள் திரும்பிப் போனான். 37

ஆண்டுறு தனதனை அடித்தொண்டாற்றுவான், மாண்டனன் இவனெனமனத்தி லுன்னியே
ஈண்டிய தானையொ டிமைப்பிற் பாகரைத், தூண்டுதிர் தேரெனச் சூரன் போயினான்.

அளகாபுரியுற்ற குபேரனைத் தனது அடித்தொண்டு செய்யும்படி வைத்தேன். இவன் இனி இறந்தாரை ஒத்தான என மனதில் உன்னிய சூரன் தனது சாரதிகளை நோக்கி அதிவிரைவுடன் இமைப்பொழுதின்முன் எனது சேனையுடன் தேர்களை அப்பால் செலுத்துங்கள் எனச் செப்பிச் சூரன் போயினான். 38

அளகையை நீங்கியே ஆசைக் கிறதாய், உளநகர் எய்தினன் ஒளிரு நீலமார்
களனுரு வெய்திய கடவுள் வைகிய, வளநகர் ஈதென மன்னன் உன்னினான்:

சூரபன்மன் அளகாபுரியை நீங்கி திக்குகளுக்கெல்லாம் இறுதியிடமெனப்படும் வடகிழக்கிலிருக்கும் ஈசான உருத்திரமூர்த்தியின் நகரை அணுகியபோது ஒளிரும் நஞ்சை கண்டத்துடைய சிவபிரானது வடிவத்தை உடைய ஈசான உருத்திரமூர்த்தி இருக்கும் வளமுடைய நகரம் ஈது என மனதில் எண்ணினான். 39

அந்தமா நகரைவிட் டவுணர் கோமகன், முந்துதன் படையொடு முனிந்து கீழ்த்திசை
இந்திரன் நகர்புக இதனை நாடியே, வெந்துயர் அமரர்கோன் விண்ணிற் போயினான்:

ஆகையால் அந்த நகரை விடுத்து சூரபன்மன் தனது முன்னுள்ள பெரும் படையுடன் கிழக்கிலிருக்கும் தங்கட்கு பெரும் பகைவனான இந்திரன் நகரில் போவதற்கு பெரும் கோபவேகத்துடன் செல்லலும் இதனை நாடியறிந்திட்ட இந்திரதேவன் தாங்கொணாத பெருந் துயரமடைந்து வான உலகில் ஒழித்தோடினான். 40

போயதை நாடிஅப் புரத்தை முற்றவுங், காயெரி கைக்கொளக் கடிதின் நல்கியே
ஆயிடை அனிகமோ டகன்று வெய்யசெந், தீயுறு நகரிடைச் சேறல் மேயினான்.

இந்திரன் ஒழித்தோடியதை சூரபன்மன் அறிந்து இந்திரனிருந்த அந்த நகர முழுமையும் கொடிய அக்கினிக்கு விரைவாக இரையாகக் கொடுத்துச் சாம்பராக்கி

அவ்விடத்தினின்றும் தனது சேனையோடு அப்பாலாக நீங்கிச் சென்று கொடுமையான செந்திக் கடவுள் இருக்கும் தென்கிழக்கிலுள்ள நகரத்தினிடையாகச் சூரபன்மன் சேர்வானாயினான். 41

சேறலும் நாடியத் தீயின் பேரினான், ஈறகல் வெஞ்சினம் எய்தி ஆயிர
நூறெனுங் கோடியர் நொய்திற் சூழ்தரக், மாறிகல் புரிந்திட வந்து நேர்ந்தனன்.

தனது நகர் மேலாகச் சூரபன்மன் அசுரரோடு சேர்தலும் அதுவேளை அக்கினி என்னும் பேருடைக் கடவுள் முடிவிலாத கொடிய சோபங்கொண்டு ஆயிரநூறு கோடிக்கணக்குடைய தன் அக்கினிகளான பரிவாரங்கள் சேனைகளாகச் சூழ சூரபன்மனோடு மாறுபட்டுப் போர்புரியும்படி வந்துசேர்ந்தான். 42

நேர்தலும் அங்கிதன் நீடு தானையுஞ், சார்தரும் அவுணர்தம் படையுந் தாமுருப்
போர்தலை மயக்குறப் பொருத எல்லையிற், சூர்தரு கனல்படை தொலைந்து போயதே.

அசரச் சேனையோடு எதிர்பட்டுப் போர்புரிய அக்கினிக்கடவுள் சேர்தலும் அக்கினிக் கடவுளின் சேனையும் அசுரர்களுடைய சேனையும் இரண்டுமாக ஆளை ஆள் அறியொணாவண்ணம் வேகமுடன் போர்செய்த நேரத்தில் அசுரர்முன் நிற்க வாற்றாது யாவருக்கும் அச்சம் விளைவிக்கும் அக்கினியின் படைகள் தொலைந்துபோயது. 43

தன்படை உடைதலுந் தழலின் பண்ணவன், துன்படை மனத்தனாய்த் தொல்லை ஊழிநா
ளின்படை உலகெலாம் ஈறு செய்திடு, வன்படை பேருரு வல்லை தாங்கினான்.

தனது படையானது தொலைவாகிப் போதலும் அக்கினிக் கடவுள் துன்பமடைந்த மனமுடையனாய் முன்னர் ஊழிக்காலத்தில் இன்புடைய உலகம் எல்லாவற்றையும் முடிவுசெய்திடுகின்ற வலிமையுடைய ஊழித்தீயின் பேருருவை மிக விரைவாக எடுத்துக்கொண்டான். 44

சிறந்திடும் அவுணர்கோன் சேனை மாக்கடல், வறந்திட இப்பகல் மாய்ப்பன் யானென
நிறைந்திடும் அவுணமா நீத்தம் எங்கணுஞ். செறிந்தனன் வளைந்தனன் சிதைத்தல் மேயினான்,

சிறப்புடன் விளங்குகின்ற சூரபன்மனின் சேனையான பெருங்கடலானது வற்றி அழிந்திட இன்றைப் பொழுதிலே நான் முடிவுசெய்திடுவேன் என நிறைந்து எங்கும் சூழ்ந்திருக்கும் அசுரச்சேனையான கடல் எங்கும் செறிந்து வளைந்து தான் கொண்ட ஊழித்தீயின் பேருருவினால் எரித்துச் சிதைக்கத் தொடங்கினான். 45

கடல்கெழு சேனையைக் கலந்து பாவகன், சடசட முதிரொலி தழங்கப் புக்குலாய்
அடலுறு மெல்லையில் அதுகண் டாழிவாய், விடமென உருத்தனன் வீரன் தாரகன்,

கடல்போல் பரந்த தமது சேனையைக் கலந்து அக்கினிதேவன் சடசட என்னும் பேரொலியுடன் விளங்கும்படி உட்புகுந்து எரித்து நீருக்கும் நேரத்தில் அதனைக் கண்டு வீரமுடைய தாரகாசூரன் சமுத்திரத்திடத்துத் தோன்றிய நஞ்செனும்படி உருத்தெழுந்தான். 46

உருத்திடு தாரகன் ஒருதன் தேரொடு, மருத்தினும் விசையுற வந்து தானையை
எரித்திடும் அங்கியை எதிர்ந்து செங்கையில், தரித்திடு கார்முகந் தன்னை வாங்கினான்.

கோபித்தெழுந்த தாரகன் என்னும் அசுரன் தனது தேரோடு காற்றிலும் மிக்க விசையுறும்படி வந்து தனது சேனையை எரித்திடுகின்ற அக்கினிக்கடவுளை எதிர்த்து தனது செங்கையிலே தரித்திருந்த வில்லை எடுத்து வளைத்துக்கொண்டான். 47

வானவர் தமையும் இவ்வன்னி தன்னையும், ஏனையர் தம்மையும் முடிப்பன் இன்றெனத்
தேனிவர் இதழியந் தேவன் மாப்படை, ஆனதை எடுத்தனன் அருச்சித் தேத்தியே.

இந்தத் தேவர்தம்மையும் அக்கினிக் கடவுளையும் எல்லாரையும் இன்று முடிப்பேன் என நினைந்து தேன் சொரியும் கொன்றை மலர்மாலையை அணிந்தருளும் சிவபிரானின் படையைக் கையில் தாரகன் எடுத்து அருச்சனை வழிபாடு செய்து 48

எடுத்திடு மெல்லையில் எரிகண் டிங்கிது, தொடுத்திடின் உலகெலாந் தொலைக்கும் என்னையும்
முடித்திடும் நான்முகன் முதலினோரையும் படுத்திடும் இன்றெனப் பையுள் எய்தினான்.

தாரகன் சிவபிரான் படையை எடுத்திட்ட எல்லையில் அக்கினிதேவன் கண்டு, அம்மவோ ! இப்படையை விடுத்திட்டால் உலகெலாம் தொலைவாக்கும் என்னையும் முடிவுசெய்திடும், இதல்லாமலும் நான்கு முகமுடைய பிரமன் முதலினோரையும் கொன்றிடும் என அடக்கமுடியாத நடுக்கங்கொண்டான். 49

சுடுங்கனற் கடவுளுஞ் சுருக்கித் தன்னுரு, ஒடுங்கினன் ஆகுலம் உற்றுச் சிந்தையும்
நடுங்கினன் தாரகன் முன்னர் நண்ணினான், கடுங்கதி அதனொடுங் கரங்கள் கூப்பியே.

எல்லாரையும் சுடுகின்ற அக்கினிக் கடவுளும் உடனே தனது ஊழித்தீ வடிவத்தைச் சுருக்கி ஒடுங்கி ஆகுலம் கொண்டு சிந்தை நடுங்கினான். தாரகாசூரன் முன்பு ஓடிச்சென்று மிகுவேகத்துடன் கைகளைக் குவித்து கூப்பி வணங்கி 50

தோற்றுவித் துலகெலாந் தொலைக்கும் எம்பிரான், மாற்றரும் படைக்கலம் மற்றென் மேல்
போற்றினைஎடுத்திஎப்புவனத் துள்ளவர், ஆற்றலும் உயிர்களும்அதன்முன் நிற்குமோ. [விடப்

அக்கினி சொல்வான், உலகெல்லாவற்றையும் தோற்றுவித்துப் பின்னர் தொலைவு செய்கின்ற யாதொரு படையாலும் மாற்றொணாத எம்பெருமானின் படையை என் மேல் விடும்படி வணக்கத்துடன் எடுத்துக்கொண்டாய், எந்தப் புவனத்துள்ள பொருள்களும் அளவிறந்த உயிர்களும் அப்படைமுன்னாக நிற்குமோ. 51

கழிதரு சினங்கொளல் கடவுள் மாப்படை, விழுமிய தன்னதை விடுத்துளாயெனின்
அழிதரும் உலகெலாம் அதுவும் அன்றியே, பழிபெறும் அன்னதோர் படையின் வேந்துமே.

பெருங்கோபத்தை நீர் கொள்ளவேண்டாம் சிவப் படைக்கலமானது மிக மேலானது அதை விடுத்துளாய் என்றால் அகில உலகமெல்லாம் அழியும் அன்றியும் எல்லாவற்றையும் அழித்தலாலே அப்படையை தந்தருளிய கடவுளும் குற்றமடைவார். 52

பொறுத்தியென் பிழையெனப் போற்றி நிற்றலும், கறுத்திடு மிடறுடைக் கடவுள் மாப்படை
செறுத்வன் மீமிசைச் செல்ல விட்டிலன், மறுத்தனன் சினத்தினை மகிழ்ச்சி எய்தினான்.

நான் செய்த பிழையினைப் பொறுப்பாயாக எனத் தாரகனை அக்கினிதேவன் போற்றி நிற்றலும் அதுவேளை தாரகன் கறுத்திட்ட கண்டமுடைய சிவபிரான் படையை போரிட்ட அக்கினிதேவன்மேல் செல்லும்படி விடாது தனது கோபத்தை மாற்றி மகிழ்ச்சி எய்தினான். 53

எற்றிடும் எற்றிடும் இல்லை வல்லையிற், செற்றிடுஞ் செற்றிடுந் தீயன் சாலவுங்
குற்றிடுங் குற்றிடு மென்று கூறியே, சுற்றினர் அவுணர்கள் தீயைச் சூழவே.

அதுவேளை அசுரர் அக்கினிதேவன் சரண்புகுந்தமை கண்டு அக்கினிதேவனை அடியுங்கள் ! அடியுங்கள் ! விரைவாகக் கொல்லுங்கள் ! கொல்லுங்கள் ! பொல்லாங்

குடைய தீயவன், இவனைக் குற்றுங்கள், குற்றுங்கள் எனக் கூறிப் பலர் அக்கினிக் கடவுளை வளைந்துகொண்டார்கள். 54

தானவர் யாரையும் விலக்கித் தாரகன், நீநம தேவலின் நிற்றி நின்னுயிர்
போனதை உதவினம் போதி போதிநின், மாநக ரிடையென வல்லை கூறினுன்.

நெருங்கிய அசுரர் யாரையும் தாரகாசூரன் விலக்கிவிட்டு அக்கினிதேவனை நோக்கி நீ எங்கள் ஏவலைப் புரிந்து நிற்பாய் உனது உயிர் போகப் போனதைத் திருப்பித் தந்துள்ளேன் உனது பெரிய நகருக்கு ஓடிப் போவாயாக எனவிரைவாகத் தாரகன் கூறினுன். 55

விடுத்தனன் அங்கியை விடுக்கு முன்னரே, அடுத்திடு தானவர் அவன்நன் ஊர்புகா
மடுத்திடு வளனெலாம் வாரி வாரிமின், படுத்திடு கொலைஞர்தம் பரிசின் மீண்டனர்.

அக்கினிதேவனை தப்பிச்செல்லுமாறு விடுத்தனன் விடுக்குமுன்பாகவே அங்கு நின்ற அசுரர்கள் அக்கினிதேவன் ஊரிற் புகுந்து பெருகி நின்ற பெருஞ் செல்வங்களை எல்லாம் வாரி சூறையாடிக்கொண்டு, கடலிலே சென்று அங்குள்ள மீனை வலையை வீசிப் பிடித்துவரும் கொலைஞர்களைப்போல மீண்டனர். 56

மீண்டனர் அவுணர் அங்கி வெள்கியே தன்னூர் புக்கான்
ஆண்டவண் அகன்று போனுன் தாரகன் அவ்வா றெல்லாங்
காண்டலுஞ் சூர னென்போன் கலினமான் தேரைப் பாக
தூண்டுதி நடுவன் மேவுந் தொல்லைமா நகரத் தென்றுன்.

அசுரர் சூறையாடிக்கொண்டு மீண்டனர். அக்கினிதேவன் வெட்கமடைந்து தனதூரிற் புகுந்தான். அவ்விடத்தைவிட்டு அகன்றுபோனுன் தாரகாசூரன். அவை களையெல்லாம் சூரபன்மன் கண்டு கடிவாளமுடைய குதிரை பூட்டிய தேரை சாரதி தூண்டுவாயாக இயமராசனின் எமபுரத்திற்கு என்றுன். 57

கடவுதி தேரை என்னக் கைதொழு தைய நெய்தின்
அடுதொழில் அவன்பால் உய்ப்பன் அன்னது காண்டி யென்னுப்
படர்தரும் வலவ ரோடும் பலிங்கன்என் றுரைக்கு மேலோன்
சுடர்மலி கதிரும் நாணத் துண்ணெனத் தூண்டி ஆர்த்தான்.

தேரைச் செலுத்துவாயாக எனலும் சாரதி கைதொழுது ஐயனே நொடிப் பொழுதில் எல்லாரையும் முடிவுசெய்யும் தொழிலுடைய இயமராசனுடைய ஊருக்கு தேரைச் சேர்ப்பேன், அதைக் காண்பீராக என்று தன்னுடனுகப் பொருந்திய துணைச் சாரதிகளோடும் பலிங்கனெனும் தலைவன் ஒளிபெருகும் கதிருடைய சூரியனும் நாணத் துண்ணெனத் தேரைத் தூண்டியார்த்தான். 58

ஆர்த்தன படருஞ் சேனை அதிர்ந்தன முரச மெங்கும்
போர்த்தன கரிதோர் வாசி புகுந்தன பூழி வேலை
தூர்த்தன துவசம் விண்ணைத் தொடர்ந்தன தூசி யென்னுந்
தார்த்தொகை முன்ன மேகித் தண்டனூர் அடைத்த வன்றே.

அவ்வாறுன நேரத்து புறப்பட்ட சேனை ஆர்த்தது. முரசப்பறை முழங்கி அதிர்ந் தது. எங்குமாகி யானைப் படையும் குதிரைப் படையும் தேர்ப்படையுமாக சூழ்ந்து கொண்டது, புழுதியெழுந்து சமுத்திரத்தை மூடியது. கொடிகள் வானத்தில் உயர்ந் தன. இதன்முன்பாக சேனையின் முன்னணிப் படை ஓடிச் சென்று யமனுடைய ஊரை அடைந்துகொண்டது. 59

அடைதலும் நடுவன் தன்பால் ஆங்கொர்தூ தெய்தி நந்தங்
கடிநகர் கலந்த அந்தக் காசிப முனிவன் மைந்தர்
கொடியவெஞ் சேனை யென்னக் கூற்றெனுங் கடவுள் கேளா
இடியுறும் அரவம் என்ன ஏங்கினன் இரங்கு கின்றான்.

அசுரசேனையின் முன்னணிப்படை அடைதலும் தூதுவன் இயமராசன்பால் சென்று தொழுது, அரசே நமது காவலுடைய நகரத்தைக் காசிப முனிவனுடைய மைந்தரின் கொடிய சேனை வளைந்துகொண்டது என்னலும் இயமன் என்னும் கடவுள் கேட்டு இடியுண்ட பாம்புபோல ஏங்கி இரங்குகின்றான். 60

முன்னுறு தனதனும் முளரித் தேவனும், மன்னனை யெதிர்கொளா வழுத்திப் போயினர்
அன்னது புரிவதே அழகி தாமென, உன்னினன் நடுவனும் உணர்வி னும்பரான்.

முன்னுள்ள குபேரனும் அக்கினிக் கடவுளும் சூரபன்மனை எதிர்கொண்டு துதித்துச் சென்றார்கள் அதைச் செய்வதுதான் எனக்கும் இப்போது தகுதியான செயல் என எண்ணினான். இயமன் இப்படி எண்ணியமையால் அறிவிலே மேம்பாடுடையனானான். 61

தேற்றமொ டெழுந்துதன் மகிடஞ் சேர்ந்தனன், ஏற்றமில் படைஞரும் ஈண்ட ஏகியே
கூற்றுவன் இமைப்பினிற் குறுகிச் சூரனைப், போற்றினன் தொழுதனன் புகலும் ஆசியான்.

இவ்வாறு இயமன் தேறிக்கொண்டெழுந்து தனது எருமைக் கடாவில் ஏறி வலியிழந்த தனது கிங்கரர் என்னும் சேனைகள் புறம்சூழச் சென்று ஒரு இமைப் பொழுதில் சூரனைக் கிட்டி போற்றுதல் புரிந்து தொழுது நல்லாசிமொழிகளைக் கூறிய படி நின்றான். 62

திருத்தகு மறலிதன் செய்கை நோக்கியே, அருத்தியின் மகிழ்வுறும் அவுணன் நம்பணி
பரித்தனை யீண்டுநின் பரிசனத்தொடும், இருத்தியென் றனைவனை ஏவிப் போயினான்.

திருவுடைய இயமனின் இச்செய்கையைச் சூரன் நோக்கி பெருவிருப்புடன் மகிழ்ந்து எனது பணிவிடைகளை நீ இன்றுதொட்டு ஏற்றுச் செய்துகொண்டு உனது பரிசன மக்களுடன் இவ்விடத்து இருப்பாயாக எனக் கட்டளையிட்டு அப்பால் போயினான். 63

இறுதியை இயற்றுவான் இருக்கையென்பதோர், மறிகடல் அதனிடைவளங்கொள்வாரியைத்
திறலுறும் அவுணர்தஞ்சேனை சென்றரோ, முறைமுறை கவர்ந்தன முகிலின்தன்மைபோல்.

எல்லார்க்கும் முடிவினைச் செய்கின்றவன் எனப்படும் இயமனுடையஅசுரர்சேனை உட்புகுந்து அங்குள்ள செல்வங்களை எல்லாம் திரைவீசும் கடலிடத்தாக முகில்கள் படிந்து நீரை உண்டெழும் தன்மைபோல, முறைமுறையாகக் கவர்ந்தெடுத்துச் சென்றன. 64

கூற்றுவன் பெருவலி குறைந்த வண்ணமும், போற்றினன் போயதும் புந்தி உன்னியே
ஆற்றவும் மகிழ்வுறீஇ அனிக மோடுதென், மேற்றிசை நிருதிமேல் விரைவின் ஏகினான்.

இயமராசன் பெருவலி குறைந்து கும்பிட்டுப் போனதன்மையை எல்லாம் சூரன் மனதில் எண்ணிப் பெரிதும் மகிழ்ந்து தனது சேனையுடன் தென்மேற்குத் திசையிலுள்ள நிருதிதேவனுடன் போர் செய்ய விரைவில் போயினான். 65

நிருதியும் இஃதெல்லாம் நேடியாமிவர்ப், பொருவதும் அரியதாற் போரியற்றினும்
வருதிறல் இல்லையால் வசைய தேயெனக் கருதினன் அவரொடு கலத்தற் குன்னினன்.

நிருதியென்னும் தென்மேற்குத் திசையில் இருப்பவனும் இத்தன்மைகள் யாவற்றையும் உணர்ந்து எமது நகரத்தை வளைந்துள்ள சூரனைப் போர்செய்து வெல்வதும் அரிது. போர் செய்தும் வரும் பயன் இலை தோல்வியடைந்த வசைபிறக்கும் என எண்ணி அசுரருடன் தனது உறவுமுறை கூறிக் கலக்க எண்ணினன். 66

உன்னினன் தானையோ டொருங்கு மேவியே, மன்னவன் எதிர்புகா வழுத்தி மற்றவன்
தன்னடி வணங்கியுன் தமரி யானெனப், பன்னினன் தாரகன் பாங்கர் ஏகினன்.

உன்னிய நிருதிதேவன் தனது சேனையோடு ஒருங்கே புறப்பட்டெழுந்து சூரபன்மன் முன்புசென்று நின்று துதித்து பாதம் தொழுது அரசே உனது சுற்றத்தவன் யான் எனப் பலரறியச் சொல்லி தாரகன்பக்கராகச் சேர்ந்துகொண்டு படையுடன் சென்றான். 67

அருகுற வருதலும் அவுணர் கோமகன், நிருதியின் நகரினை நீங்கி யேகலும்
வருணனும் மருத்துவும் வாரி தன்னினும், இருள்செறி உலகினும் இமைப்பிற் போயினர்.

தனது பக்கராக நிருதி வருதலும் அசுரர் தலைவனான சூரபன்மன் நிருதிதேவனின் நகரினைக் கடந்து அப்பால் போதலும் அடுத்து மேற்குத் திசையிலுள்ள வருண பகவானும் வடமேற்குத் திக்கிலுள்ள வாயுபகவானும் சூரபன்மன் சேனையின் வருகையை உணர்ந்து வருணன் சமுத்திரத்திலும் வாயு இருள்செறிந்த பூமியிலும் இமைப்பொழுதில் ஓடி மறைந்தார்கள். 68

போதலும் அவரவர் புரத்தைச் சூறைகொண், டேதம திபற்றுவித் தெழுவ கைத்தெனும்
பாதல வுலகினிற் படர்ந்து தானவ, ராதியர் போற்றிட அருள் செய்தேகினன்:

அவர்கள் ஓடிவிடுதலும், அவர்களுடைய நகரத்துச் சூரபன்மன் சென்று அந்நகரைச் சூறையாடிக்கொண்டு அங்கு தீங்குகளை இயற்றுவித்து அப்பால் தொடர்ந்து பாதாள உலகங்களாகிய ஏழு உலகத்துச் செல்லும்போது அங்குள்ள அசுரராயினோர் போற்றிவணங்கிட அவர்கட்கு அருள்செய்து அப்பால் போயினன். 69

உற்றனன் நாகர்கோன் உலகில் அன்னவன், செற்றமொ டேசெரு செய்யத் தானையால்
வெற்றிகொண் டேயவன் வியந்து போற்றிட, மற்றவன் இருக்கையோர் வைகல் வைகினன்.

அங்கு சென்று நாகராசனின் உலகில் சேர்தலும் அப்போது அவன் எழுந்து கோபத்துடன் போர்செய்யத் தனது சேனையால் நாகராசனை வெற்றிகொண்டு தோல்வியுற்ற நாகராசன் சூரபன்மனை வியந்து பாராட்டிப் போற்ற நாகராசனுடைய இருப்பிடத்தில் ஓர்நாள் சூரன் தங்கினன். 70

அத்தலை உரகர்கோன் அமரர் தந்திட, வைத்திடும் அமுதினை வலிதின் வாங்கியே
மெய்த்தகு தம்பிய ரோடு மேன்மையால், துய்த்தனன் அகன்றனன் சூர பன்மனே.

அப்பொழுது சூரபன்மன் தேவர்கள் யாவரும் கொடுத்திட அங்கு நாகராசன் வைத்திருந்த அமிர்தத்தை அதிவிரைவுடன் வலித்து வாங்கி தன்னுடன் உண்மை அன்புபூண்ட தம்பிமார் இருவருடன் அந்த அமிர்தத்தை மிகமேன்மையான பெருமிதத்துடன் உண்டுவிட்டு அப்பால் போயினன். 71

ஏனைய பிலந்தொறும் ஏகி அவ்வயின், மேனநோர் விருந்தினை வியப்பின் நாடியே
மானவர் படையொடும் வல்லை மீண்டனன், போனதோர் நிலைதொறும் புகழை நாட்டினன்

ஏனைய பாதாள இடங்கள் தோறும் சென்று அவ்விடத்துப் பொருந்திய கண்ணினுக்கினிய காட்சிகளை ஆச்சரியத்துடன் பார்த்து தனது வீரர்களான படையொடும் விரைவாக பாதாள நிலையங்கள் நீங்கினன். சூரபன்மன் சென்றுள்ள திக்கெலாம் வெற்றியாகிய புகழை நாட்டினன். 72

பூவுலகிடையே போந்து புணரியொன் றகன்று மற்றைத்
தீவினை யொருவிச் சூரன் சேனைமா நீத்தஞ் சூழ
மாவொடு புவனி போற்ற வரியரா அணையின் நேமிக்
காவலன் துயில்கூர் பாலின் கடலிடைக் கடிது புக்கான்.

இப்பால் பூவுலகத்தினிடையாகச் சூரபன்மன் சென்று அங்குள்ள சமுத்திரத்தைக் கடந்து அப்பாலுள்ள சாகத் தீவை நீங்கிப் பெரிய சேனையான சமுத்திரம் தன்னைச் சூழ மகாலெட்சுமியோடு பூமிதேவி போற்றிட நாராயணக் கடவுள் வரியினையுடைய அநந்தன் என்னும் நாகமேலாக யோகநித்திரை செய்யும் பாற்கடலின் இடையாக விரைவுடன் சென்றான். 73

புக்கதோர் வேலை யன்னான் போர்ப்படை அவுணர் யாரும்
மைக்கடன் மேனி மாயோன் மன்னினன் ஈண்டை யென்னா
அக்கடல் அதனைத் தொன்னாள் அமரர்கள் கடைந்ததேபோல்
மிக்கதோர் ஆர்ப்பினோடும் விரைவுடன் கலக்க லுற்றார்.

சூரன் சேனையோடு புகுந்த நேரத்து போர்ப்படைவீரர்கள் யாவரும் ஓகோ! இங்குதான் கரியகடல் நிறமுடைய மேனிகொண்ட நாராயணர் இருந்தார் எனக் கூறி அந்தப் பாற்கடலை முன்னாள் தேவர்கள் கடைந்த தன்மைபோல தமது கால்களால் பெரும் கூச்சலுடன் கலக்கலுற்றார்கள். 74

ஆர்த்திடு முழக்கங்கேளா அம்புயத் திருவும் பாரும்
வேர்த்துடல் பதைப்ப அஞ்சி வெருக்கொடு கரிய மேனித்
தீர்த்தன தகலத் தூடு சேர்ந்தனர் தழுவ அன்னோன்
பார்த்தனன் அஞ்சல் என்று பகர்ந்தனன் துயிலை நீங்கி.

அசுரர் ஆர்த்திட்ட முழக்கத்தைக் கேட்ட தாமரை மலர் மேலான இலக்குமி தேவியும் பூமிதேவியும் உடலம் நடுங்கி பயத்தால் வேர்வைகொள்ள கரிய மேனியராகிய நாராயணப் பெருமான் திருமார்பூடு அணைந்து தழுவ அந்நேரம் அதனை நாராயணக் கடவுள் பார்த்து அஞ்சாதீர் என்று துயிலினின்று நீங்கி அருள்செய்தார். 75

இம்மெனப் பணியின் மீதும் எழுந்தனன் இறுதி செய்யும்
வெம்மைகொள் கடவுட்டீயும் வெகுவர உருத்துச் சீறி
நம்மையும் பொரவுந் தீயோர் நண்ணினர் போலும் அன்னார்
தம்வலி காண்டும் என்னாத் தடக்கைகள் புடைத்து நக்கான்.

திடீரென பாம்பினின்றும் பெருமான் எழுந்தார். உலகை முடிவுசெய்கின்ற ஊழித்தீ எனும் கடவுளும் அச்சுற உரத்துச் சீறினார். என்னுடன் போர்செய்ய அசுரர் நண்ணினார்போலும், அவர்களது வலிமை எவ்வளவு எனக் காண்பேன் எனத் தனது பருத்த கைகளைத் தட்டிச் சிரித்தார். 76

சிந்தையில் உன்னும் முன்னந் திறல்மிகும் உவணர்கோமான்
வந்தனன் அவன்பொற்றேள்மேல் மடங்கலே றென்னப் புக்குச்
சந்திரன் அனைய சங்கஞ் சக்கரங் கதைவாள் சாபம்
ஐந்தெனும் படையும் ஏந்தி அவுணர்தம் படைமுற் சென்றான்.

மனதால் நினைப்பதற்கு முன்னதாகவே வலிமைமிகுந்த கருடபகவான் வரவும் அவர் பொற்றோள்மேலாக ஆண்சிங்கம்போல வீரத்துடன் எழுந்தருளிக்கொண்டு சந்திரனையொத்த வெள்ளிய சங்கு சக்கரம் கதாயுதம் ஒளியுடைய வாள் வில்லு என்னும் ஐந்து மேலான படைகளையும் ஏந்தி அசுரப்படை முன்பு சென்றார். 77

கோட்டினன் சார்ங்க மென்னுங் குனிசிலை யினைநாண் ஓதை
காட்டினன் அவுணர் உள்ளங் கலக்கினன் கொண்ட செற்றம்
விட்டினன் தானை யாவும் விலக்கினன் பகழி மேன்மேற்
பூட்டினன் சோனைக் கொண்மூ வாமெனப் பொழித லுற்றான்.

சார்ங்கம் என்னும் நீடிய வில்லை வளைத்தார், நாணின் ஓசையைக் காட்டி அசுரர் உள்ளங் கலக்கினார், அசுரரை ஏங்கவைத்துத் தான் கொண்ட கோபம் நீங்கினார். அசுரர் சேனை முழுவதையும் முன்னில்லாதபடி அழித்தார். அம்புகளை மேலும் மேலும் சோனாவாரி மழைபோல செலுத்தினார். 78

பொழிந்திடுகின்ற காலைப் போர்கெழும் அவுணர் தானை
அழிந்தன தேரும் மாவும் ஆடலங் கரிகள் தாமும்
ஒழிந்தன விறலும் போரின் ஊக்கமும் படையு மெல்லாங்
கழிந்தன சூறை புற்ற காரெனல் ஆய வன்றே.

அம்புகளைப் பொழிந்திடுகின்றகாலை போர் விரும்பி எழுந்த அசுரர் சேனை அழிந்தன தேரும் குதிரையும் வீரமுடைய பெரிய யானைகளும் இறந்து ஒழிந்தன, அசுரர்கள் போர்செய்யும் ஊக்கமும் கையிலுள்ள படைகளெல்லாம் அற்றன. இவைகள் யாவும் சூறுவளிக் காற்றினால் அள்ளுண்ட மேகம்போலானது. 79

சூழ்ந்திடும் அவுணர் சென்னி துணிந்தன தோளுந் தாளும்
வீழ்ந்தன கரங்கள் சிந்தி விரவின குருதி நீத்தம்
ஆழ்ந்திடு புணரி யெல்லாம் ஆயின அவனி தானுந்
தாழ்ந்தன பிணத்தின் குன்றந் தகைந்தன தபனன் தேரை.

வளைந்து நின்ற அசுரர் தலை துணிந்தன. தோளும் காலும் அம்பினால் அறுந்து வீழ்ந்தன கைகள் சிதறிப் பரவின. இரத்த வெள்ளம் ஆழமான பாற்கடல் எல்லாமாயின. பூமியும் தாழ்ந்தது, பிணக்குவியல்கள் மலைபோலக் குவிந்து சூரியன் தேர் செல்ல முடியாதபடி தடுத்தது. 80

ஒடிந்தன இரதம் ஆழி உருண்டன கவனப் பாய்மா
மடிந்தன களிறு நொந்து மாண்டன வயவர் பல்லோர்
முடிந்தனர் குருதி நீத்தம் மூடின அதனுள் மூழ்கிய்
படிந்தன அலகை ஈட்டம் பாரிடம் பரந்த வன்றே.

தேர்கள் முறிந்தன. சில்லுகள் கழன்று உருண்டோடின, கடிவாளமுடைய குதிரைக் கூட்டங்கள் மடிந்தன, யானைகள் அறுபட்டு மாண்டன வீரர்கள் பல்லோர் முடிந்துபோயினர். இரத்தக் கடல் பெருகி மூடிக்கொண்டது. அதனுள் மூழ்கியடித்து பேய்கள் கூட்டம் விளையாடின. நிணம் தின்னும் பூதங்கள் பரந்துகொண்டது. 81

சுடர்கெழு நேமி அண்ணல் துயிலுறு பாலின் வேலை
இடையொரு சிறிது மின்றி எங்கணும் எருவையாகி
அடைவது கடவுளாடும் ஆரழல் அதனை உண்ணக்
கடையுகம் விரவுகின்ற காட்சியைப் போன்ற தம்மா.

பிரகாசமுடைய சக்கரப்படை ஏந்திய விஷ்ணுபிரான் அறிதுயில்கொள்ளும்பால் சமுத்திரம் எங்கும் ஒரு சிறிதளவு இடையிலாது இரத்தமாகி அடைகின்ற தன்மை சிவபிரான் திருநடனம் செய்யும் பெருநெருப்பானது உலக அழிவான கடையுகத்திலே அப் பாற்கடலை உண்ணும்படி கலந்து எங்கும் பற்றிக்கொள்வது போல்வது. 82

விண்ணுலாம் படிவ மாயோன் மேதகும் உவணத்தோடு
மண்ணுலாம் கடலா மென்ன அவுணரை வளைந்து சுற்றி
எண்ணிலா உருவங் காட்டி யாவரும் போகாவண்ணம்
அண்ணல்வாம் பகழிசிந்தி அமர்செய்தான் அமரர் ஆர்ப்ப.

வானமெங்குமாய் வியாபித்தருளும் திருமேனியுடைய விஷ்ணுபெருமான் மேன்மையான கருடபகவான் மீதாக மண்ணைச் சூழ்ந்துள்ள கடல்போல அசுரரை வளைந்து சுற்றி எண்ணற்ற மாய உருவங்களைக்கொண்டு யாவரும் தப்பியோடாவண்ணம் மேலான கொலைபுரியும் அம்புகளைச் சொரிந்து போர் செய்தார் தேவர்கள் ஆரவாரித்து வெற்றிகொண்டாட. 83

அடுசமர் புரியும் எல்லை ஆங்கவை உருத்து நோக்கி
உடைவதோர் அணிகந் தனை யொன்றுநீர் அஞ்சலென்னு
வடவரை யனைய ஆற்றல் மாபெருந் தனுவொன் றேந்தி
இடியுறழ் கலிமான் தேர்மேல் தாரகன் இமைப்பின் வந்தான்.

கொலைநிகழும் போரைச் செய்யும் எல்லை அவற்றை அங்கு தாரகாசூரன் கோபவீறுடன் பார்த்து நிற்கமாட்டாது ஓடிச் சிதைகின்ற தமது சேனையை நோக்கி ஒன்றும் அஞ்சவேண்டாம் நான் பார்ப்பேன் என மகாமேருமலையைப் போன்ற ஆற்றலுடைய பெரிய வில்லை ஏந்தி இடியைப்போல் வேகமும்கொண்ட குதிரைகள் பூட்டிய தேர்மேலாக இமைப்பொழுதில் வந்தான். 84

வானிலமளவு செய்த மலர்ப்பதத் தண்ணல் முன்னந்
தானெதிர் புகுந்து வெய்யோன் தன்பெருந் தனுவை வாங்கி
மேனகு சரங்கள் கண்ணன் மிசையுற வேலைமீதில்
சோனைவிண் பொழிவ தென்னத் துண்ணெனத் தூவி ஆர்த்தான்.

ஈரடியாலே மூவுலகு அளவு செய்த மலர்பதமுடைய விஷ்ணுபிரான் முன் கொடிய தாரகன் எதிர்வந்து தனது பெரிய வில்லை வளைத்து மேம்பாடுடைய அம்புகளைப் பகவான்மீது படும்படி சமுத்திரம்மேல் மேகம் சோனவாரி மழை பொழிவது போல் விரைவுடன் சொரிந்து ஆரவாரித்தான். 85

ஆர்த்திடும் அளவை தன்னில் அச்சுதன், அயில்வே லென்னக்
கூர்த்திடும் உலப்பில் வாளி கொடியதா ரகன்றன் மேனி
தூர்த்தனன் தேரும் பாகுந் தொலைத்தலுஞ் சோர்விலாதான்
பேர்த்தொரு தடந்தேர் உற்றுப் பெருஞ்சிலை வாங்கினுனல்:

தாரகன் ஆரவாரித்த அளவையில் நாராயணக் கடவுள் வேலென்னும்படி கூர்மைகொண்ட அளவற்ற அம்புகளை கொடியவனுன தாரகாசூரனின் மேனியில் படுமாறு சொரிந்து அவனுடைய தேரையும் பாகனையும் தொலைவுசெய்தார். அப்போது சோர்வடையாத தாரகன் மீண்டுமொரு தேரில் ஏறி இன்னெரு பெரிய வில்லை எடுத்து வளைத்துக் கொண்டான். 86

உற்றிடும் அவுணன் மால்மேல் ஓராயிரம் பகழி ஓச்சி
அற்றமில் கருடன் மீதும் ஆயிரம் விசிக முய்ப்ப
மற்றவை அவன்பால் தீய மாசுணம் பலவும் தங்கள்
பற்றலன் தன்னை வவ்வும் பரிசெனச் செறிந்த வன்றே.

தேர்மேல் கொண்ட தாரகன் நாராயணக் கடவுள் மேலாக ஓர் ஆயிரம் அம்புகளைச் செலுத்தி குற்றமில்லாக் கருடன் மீதிலும் ஆயிரம் அம்புகளைச் செலுத்தலும் அந்த அம்புகள்யாவும். தீய பாம்புகள் தங்கள்பகையாகிய கருடன்மேல் செல்லுவதுபேலச் சென்றன. 87

ஆயிடை உவணர் கோமான் அலக்கணுற் றதனை நோக்கி
மாயவன் உலப்பிலாத வடிவினை யெய்தி அந்தத்
தீயவற் சூழ்ந்து வெம்போர் செய்துழி அவனுந் தங்கள்
தாயருள் மனுவை உன்னித் தானுமந் நிலையனுனன்.

தாரகன் விடுத்த அம்புகள் கருடன்மேல் படுதலும் அவர் கலக்கங்கொண்டு நின்றதனை நாராயணக் கடவுள் பார்த்து முடிவிலாத மாய வடிவங்களைக்கொண்டு அத்தீயவனுன தாரகனைச் சூழ்ந்து உக்கிரமான போரைச் செய்தலும் தாரகனும் விடாது தாய் மாயவள் கற்பித்த மந்திரத்தைத் தியானித்துத் தானும் மாய வடிவ நிலையானுன். 88

தாரக வசுரன் தானுந் தணப்பில்பல் லுருவங் கொள்ளா
ஈரிரு வைகல் காறும் இந்திரை கேள்வனேடு
பேரமர் புரிந்த வெல்லைப் பிதாமகன் இதனை நோக்கி
யாரிவன் எதிர்நிற் பாரென்றதிசய நீரனுனன்.

தாரகாசூரன் தானும் விலக்குதற்கரிய மாயவடிவங்களைக்கொண்டு நான்கு நாட்கள் வரையிலும் இலக்குமி நாயகரான நாராயணக் கடவுளோடு பெரிய போரினைப் புரிந்த நேரத்து விஷ்ணுபிரான் இதனைப் பார்த்து யார்தான் இத்தாரகனேடு எதிர்நின்று போர்புரிய வல்லார் என அதிசயம்கொண்டார். 89

எல்லையங் கதனின் மாயோன் எறுழ்வலி அவுணன் ஏறுஞ்
சில்லியந் தேரும் மாவுந் திறன்மிகு வலவன் தானும்
வில்லொடு துணிந்துவீழ விசிகமோர் கோடி உய்த்தான்
ஒல்லையின் அதனை நாடி உம்பர்கோன் உவகை பூத்தான்.

அவ்வாருகிய நேரத்தில் நாராயணக் கடவுள் பெருவலியுடை தாரகாசூரன் ஏறிய சில்லினையுடைய தேரும் குதிரையும் வலிமைமிக்க சாரதியும் கையில் பிடித்த வில்லும் எல்லாம் சிதைவாகத் துணிபட்டு வீழும்படி கோடிக்கணக்கான அம்புகளைச் செலுத்தினர், அதனை விரைவாகத் தெரிந்து கொண்ட தேவேந்திரன் உவகை கொண்டான். 90

திண்டிறற் பரியுந்தேருஞ் சிலையொடு வலவன் தானுந்
துண்டம தடைத லோடுஞ் சூரனுக் கிளைய தோன்றல்
தண்டமொன் றெடுத்துக் கீழ்ப்போய்த் தலைபணித் தமரர் அஞ்ச
அண்டமுங் குலுங்க ஆர்த்தங் கரிதனை யெதிர்த்து சென்றான்.

திண்ணிய வலிகொண்ட குதிரைகளும் தேரும் வில்லும் சாரதியும் அம்புகளினால் துணிபட்டு வீழ்தலும் சூரபன்மனுக்கு இளைய தம்பியான தாரகன் ஓர் தண்டாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு கீழே குதித்து தேவர்கள் தலைநடுங்கி அச்சம் கொள்ள அண்டமும் குலுங்க இரைந்து கத்திக்கொண்டு விஷ்ணுபிரானை எதிர்ந்து சென்றான். 91

எதிர்வரு அவுணன் தன்மேல் எண்ணிலாப் பகழிமாரி
விதியினை அளித்த மாயன் வீசலும் அவற்றை யெல்லாங்
கதைகொடு விலக்கிச் சிந்திக் கனன்றுமுற் கடிதிற் செல்ல
அதுதனை நோக்கி மாலும் ஆழியம் படையை உய்த்தான்.

எதிர்த்து வரும் தாரகாசூரன் மேலாக எண்ணற்ற அம்புகளை பிரமதேவரைப் பெற்ற நாராயணக் கடவுள் மழைபோலச் சொரிந்து வீசுதலும் அவற்றையெல்லாம் அவன் தண்டாயுதத்தினால் அடித்து விலக்கி மேல்நோக்கி எதிர்த்து வருதலும் அதனைக் கண்டு நாராயணக் கடவுள் தனது கையில் வைத்திருந்த சக்கரப் படையைச் செலுத்தினார். 92

ஓரிமை யொடுங்கு முன்னர் உலகெலாந் தொலைக்குந் தன்மைப்
போரயில் நேமி தானும் புராரிதன் வரத்தாற் சென்று
தாரக வசுரன் கண்டந் தன்னைவந் தணுகிச் செம்பொன்
ஆரம தாயிற் றம்மா தவத்தினும் ஆக்க முண்டோ.

ஒரு இமைப்பொழுதின் முன்பாக உலகமெல்லாம் தொலைக்கக்கூடிய போர் வலி கொண்ட பெரிய ஒளியுடைய சக்கரப்படைதானும் சிவபிரான் வரத்தினால் சென்று தாரகாசூரனுடைய கழுத்தைக் கிட்டியவுடன் செம்பொன்னான மாலையாக மாறியது ஆகவே தவத்தினும் மேலான செல்வம் உண்டோ. 93

பணியுறு கடவுள் நேமிப் படையுமாங் கவுணன் கண்டத்
தணியதா யிருத்த லோடும் அரனருள் வரத்தை யுன்னித்
தணிவிலற் புதத்த னாகித் தாரகன் வலிய னென்னா
மணிகிளர் மேனி மாயோன் மற்றிது புகலல் உற்றான்.

அனந்தன் என்னும் பாம்பின் மேலாக அறிதுயில்கொள்ளும் கடவுளான தனது சக்கரப் படையும் தாரகாசூரனுடைய கழுத்திலே ஆபரணமாக இருத்தலோடும் சிவன் அருளிய வரத்தின் சிறப்பை நினைந்து அடக்கமுடியாத அற்புதமுடையவராய் தாரகாசூரன் வலியுடையவன் என்று நீலமணிபோலும் நிறமுடைய விஷ்ணுமூர்த்தி தாரகனை நோக்கு இதனைச் சொல்வார். 94

அயனெடு கதீசி யென்னும் அருந்தவத் தோனும் வெம்போர்
முயலுறும் அவுணர் யாரும் மொழிந்திடின் உனக்கொப் பல்லார்
செயலுரை யின்றி உண்டாற் சிறுவிதி மகத்தைச் செற்ற
வயமிகு கழற்கால் வீரன் மற்றுனக் கிணையா மென்றான்.

தாரகனே கேள், என்னுடனாக கொடிய போரினைச் செய்யும் பிரமதேவனுடன் ததீசி என்னும்அரிய தவம்புரிந்த முனிவரும் அசுரர் யாரும் சொல்லப்போனால் உனக்கு

ஒப்பாகார். இவர்கள் எல்லாரும் என்னேடு வெற்றியடையாமல் போர் செய்தவர்கள் ஒரு சந்தேகமான வார்த்தைக்கு இடமில்லாமல் உன்னேடு ஒப்பாகப் பேசக்கூடிய ஒருவர், உண்டெனில் அவர் தக்கனதுயாகத்தை அழித்த வெற்றிமிகு வீரக்கழல் அணிந்த வீரபத்திரக்கடவுளாகும் என்றுர். 95

வன்றிறற் கடவுளாழி மணிப்பணி யாயிற் றென்றல்
வென்றியும் உனதே யன்றே வேறினிப் போரும் உண்டோ
உன்றிறம் இதுவே என்னின் உனக்குமுன் னவராய் அங்கண்
நின்றவர் பெருமை தன்னை யாவர்கொல் நிகழ்த்தற் பாலார்.

வலிமைகொண்ட கடவுள் தன்மையான எனது சக்கரப்படையும் உனது கழுத்திலே மாலையான ஆபரணமாயிற்றென்றல் வெற்றியும் உனதாயிற்று அல்லவோ! இனிமேலாகப் போரும் உண்டோ உனது திறமை இதுவென்றல் உனது முன்னவராயுள்ள சூரன் சிங்கன் வலிமை எவ்வாறுரும் என யார்தான் சொல்லமுடியும். 96

சங்கரன் மகிழும் ஆற்றல் தழல்மகம் பன்னுள் ஆற்றி
உங்களின் வலிபெற் றுள்ளார் அவுணரில் ஒருவர் இல்லை
இங்குமை வெல்வார் யாரோ எமக்குநீர் தமரே யென்னு
மங்கல மரபின் ஆசிவரம்பில புகன்று போனன்.

சிவபிரான் மகிழும்படி அக்கினி வளர்த்து யாகத்தைப் பலநாள் செய்து உலகில் உங்களைப்போல் வலிபெற்றுடையார்கள் அசுரர்களில் வேறு ஒருவரும் இல்லை. உங்களை இங்கு வெல்வார் யாரே? எமக்கும் சுற்றத்தவராவீர் என மங்கல முறையாக அளவிறந்த ஆசிமொழிகளைக் கூறிவிட்டு விஷ்ணுபிரான் மறைந்துபோனர். 97

பார்த்தனர் அனைய தெல்லாம் பாயிருள் கான்ற மேனி
நீர்த்திரை அனைய செங்கை நிருதாம் புணரி யாயோர்
ஆர்த்தனர் அமரர்யாரும் அகன்றனர் அஞ்சி அங்கம்
வேர்த்தனர் விளிவோ ரென்ன மெலிந்தனர் விழுமத் துள்ளார்.

நீர்த் திரையை ஒத்த சிவந்த கையினையுடையரும் இருள் பரந்த மேனியை உடையவருமான கடல்போல் பரந்த அசுரரானேர் அதனைப் பார்தனர். இரைந்து ஆரவாரித்தார்கள். தேவர்கள் யாரும் ஒடிச்சென்று அகன்று இறந்தாரெனும்படி பயத்தால் மேனி வேர்வைகொள்ள நீக்கற்கரிய துயரத்தில் ஆழ்ந்தார்கள். 98

மாதவன் அகன்ற காலை மற்றுமோர் வையத்தேறித்
தாதவிழ் தொடையல் வாகைத் தாரகன் தம்முன் நேராய்ப்
போதலும் அவனு மீண்டு புகுந்தவா றுணர்ந்து புல்லி
ஆதர மகிழ்ச்சி எய்தி அனிகமோ டகன்றுன் அப்பால்.

நாராயணக் கடவுள் அகன்ற நேரத்து தேன் சொரியும் பூமாலை அணிந்து வெற்றிவாகை கொண்ட தாரகாசூரன் தனது முன்னவனுன சூரபன்மன் முன்பாகப் போதலும் சூரபன்மன் அதுவேளை அங்கு நிகழ்ந்த தன்மையெல்லாம் கேட்டு மகிழ்வால் தம்பி தாரகனைத் தழுவி உள்ளத்தில் பெரிய ஆதரவுடைய மகிழ்ச்சிகொண்டு சேனைகளோடு பாற்கடல் நீங்கிப் போனன். 99

ஆழியங் கிரியின் காறும் அகலிட வரைப்பு முற்றச்
சூழுற நாடிப் போந்து தொல்லிரு விசும்பின் ஏகித்
தாழுறு நிலையிற் செல்லுந் தபனனே முதலோர் யாரும்
வாழியென் றுசிகூற வானுயர் துறக்கம் புக்கான்.

சக்கரவாள மலே வரையும் உள்ள மற்றைய தீவுகள் இடங்கள் முழுவதையும் நாடிச் சென்று எல்லார்க்கு முன் தோன்றிய வானத்தில் சென்று வானநிலேயில் தாழ்ந்து செல்கின்ற சூரியன் முதலாய தேவர் யாரும் சூரபன்மனே வாழ்வாயாக என ஆசிகூறிட மேலும் மிக உயர்ந்த சொர்க்க உலகத்தில் புகுந்தான் சூரபன்மன். 100

இந்தவா றவுணர்கோன் துறக்கத் தேகலும், முந்திய ஒற்றரில் சிலவ ரோடியே
வந்தனன் சூரனும் வலியன் தானெனு, அந்தர நாயகன் அறியக் கூறவே.

இந்தவாறு சூரபன்மன் சொர்க்க உலகில் செல்லலும் அங்கு முன்னின்ற தூதுவர்களில் சிலர் இதைக் காண்டலும் ஓடிச்சென்று வலியுடைய சூரபன்மன் வந்தான் என்று தேவ உலக நாதனுன இந்திரன் அறியும்படி கூறினுர்கள். 101

அஞ்சினன் உயிர்த்தனன் அலந்து தேம்பினன், துஞ்சினனேயென உணர்வுசோர்ந்துளான்
எஞ்சலில் வன்மைய திகந்து தன்னுடை, நெஞ்சினில் இனேயன நினேத்தல் மேயினுன்.

கேட்டவுடன் இந்திரன் பயந்தான் பெருமூச்செறிந்தான். அலமந்து தேம்பி அழுதான். இறந்தானெனும்படி உணர்வுசோர்ந்தான். குறைபடாத தனது வலிமை குன்றி தனது நெஞ்சினிலே இதையெல்லாம் நினேக்கத் தொடங்கினுன். 102

அவ்வயிற் போந்திடும் அவுணன் தன்னெதிர், செவ்விதிற் சென்றியான்செருவில் நேர்வனேல்
இவ்வுயிர்க் கிறுதியாம் இருப்பனேல்இடர்ப், பவ்வமுற்றிறந்திடாப் பழியில் மூழ்குவேன்.

அவ்வாறு வந்த சூரனேடு நேரிடையாக செப்பமுடன் சேனேயுடன் சென்று நான் போர்செய்வேனேல் எனது இந்த உயிர்க்கு முடிவாகும். அஃதன்று இங்கு இருப்பனேல் நீங்கிடாத பெரும் பழியில் மூழ்கி ஒழியாத இடரான கடலுள் அமுங்குவேன். 103

புன்செயலாய் இவட்புகுந் திடுஞ்செயல், என்செயலால்வரும் இயற்கை யல்லது
பின்செயல் ஒன்றிலே பிறர்செய் கின்றதுந், தன்செயல் என்பரால் சார்பின் மேலேயோர்.

தீங்குவிளேயும்ப - இங்கு நேர்ந்துள்ள செயல் என்செயலால் வரும் இயற்கை யானதே ஒழிய வேருக நிகழப்படும் அசுரர்கள் செயலில்லேலே. பிறர் நமக்குச் செய்யும் தீங்குகளும் நாம் முன்செய்த தீமையின் விளேவெனப் பற்றினே நீங்கிய பெரியோர் சொல்வார்கள். 104

திருவுறுகின்றுழி மகிழ்துந் தீர்வுழிப், பருவரல் எய்தியும் பாசந் தன்னிடை
அரிதுணர் கேள்வியர் அழுங்கு வார்கொலோ, வருவது வரும் அது மறுக்கலாகுமோ,

செல்வம் வருகின்றபோது மகிழ்ச்சிகொண்டும் அது நீங்கியபோது துயரமடைந்தும் இவ்வாருகப் பாசத்திடத்தில் மூழ்கி நன்ருக நூல்களே நுணுகி ஆராய்ந்த நுட்ப அறிவுடையார் சங்கடப்படுவாரோ இல்லே. ஆதலால் வருவது வரும் அதை மறுக்கலாகுமோ. 105

ஆதலின் அமர்இழைத் தாவி நீங்கலன், பேதுறுகின்றிலன் பீழை யுற்றுளோர்
ஓதருமகிழ்ச்சியும் உறுவர் ஆங்கது, தீதுசெய் அவுணர்தந் திறத்துக் காண்பனுல்.

ஆதலின் போர்செய்து எனதுயிரைப் போக்கேன், பேதமைப்படவும் மாட்டேன். துயரப்பட்டு வருந்தினேர் சொல்லற்கரிய மகிழ்ச்சியும் அடைவர். அதனே எங்கட்குத் தீமை செய்த அசுரரிடத்தாக இப்போது காண்கின்றேன். முன் என்னுல் வெல்லப் பட்டுத் துயரமுற்ற இவர்கள் என்னே இன்றுவென்று மகிழ்கிருர்கள். 106

நாளெடும் ஒன்னலர் நகையுங் கொள்ளலன், தூணமதுறழ்புயச் சூரபன்மனேக்
காணுவன் என்னினுங் கறுவு சிந்தையான், ஏணுறு தலேயிடும்எனேயென் றெண்ணினுன்.

பகைவர் என்னை வெற்றிகொண்டு சிறைப்படுத்தி இகழ்ந்து சிரிக்கின்ற நிலைக்கு இடங்கொடேன். தூண்போலும் தோளுடைய சூரபன்மனைச் சென்று காணுவன் என்னிலும் எங்கள்பால் கறுவியமுள்ள சூரன் உடனே என்னைக் கொடிய விலங்கைப் பூட்டி சிறைசெய்வான் என இப்படியாக மனதில் இந்திரன் எண்ணினன். 107

இம்முறை வாசவன் எண்ணி யேயெழீஇக், கொம்மென மனையுடன் குயிலு ருக்கொடே
விம்முறு பீழையன் விண்ணிற் போயினன், தெம்முனை அவுணர்கள் தேடிக் காண்கிலார்.

இம்முறையாக இந்திரன் எண்ணி எழுந்து விரைவுடன் தனது மனைவியுடன் குயில் வடிவம் பெற்றுக்கொண்டு விம்மி விம்மித் தன்நிலை நினைந்து அழுது வானத்தில் மறைந்தோடிப் போயினன். கொடிய அசுரர் சொர்க்லோகத்தில் இந்திரனைச் தேடிச் சென்று காண முடியாமல் போயினர். 108

ஒன்னலர் நாடுவ துணர்ந்து வானவர், மன்னவன் ஆக்கமும் மாயும் போலுமால்
என்னினிச் செய்வதென் றிரக்க மெய்தியே, பொன்னகர் எங்கணும் பொலிவு மாய்ந்ததே.

பகைவர் வந்து நாடுவதை இயல்புடன் அறிந்து, தேவ அரசன் செல்வமும் இனி அழியும்போலும் என்னதான் இனிச் செய்வதென இரக்கங்கொண்டு பொன்னுன தேவ உலகம் எங்கும் பொலிவு மாய்ந்துபோயது. எல்லாரும் கவலைகொண்டார்கள். 109

பிடித்தனர் அமரரை அவுணர்பேதுற, அடித்தனர் குற்றினர் அனையர் தானையால்
தடித்திடுந் தோள்களைத் தமது கைகளால், ஒடித்தன ராமென ஒல்லை வீக்கினர்.

இந்திரனைத் தேடிக் காணுத ஆத்திரத்துடன் அசுரர்கள் தேவரைப் பிடித்தனர். பேதுற்றுத் துன்புறும்படி அவர்களை அடித்தனர் குற்றினர் அவர்கள் தோள்களைப் பெரிய கயிற்றினுல் தமது கையால் முறிப்பதுபோல விறுவிறென இறுகக் கட்டினுர்கள். 110

தண்ணளி யாவுமின் றுய தானவர், விண்ணவர் தங்களை வீழுமஞ் செய்திடா
அண்ணலந் திருவுறும்அரசன் முன்னுறத், துண்ணென உய்த்தலுந்தொழுதுபோற்றுவார்.

இரக்கம் கொஞ்சமும் இல்லாத நெஞ்சுடைய அசுரர் தேவர்களை பெரிதும் துன்புறுத்தி மேலான திருவுடன் விளங்கும் சூரபன்மன் முன்பாக திடுக்கிடும்படி கொண்டுசென்று நிறுத்தலும் தேவர்கள் சூரனைத் தொழுது போற்றுவார்கள். 111

அவுணரில் உதித்தனை ஆற்று நோன்புறீஇச் சிவனருள் பெற்றனை திசையி னேர்முதல்
எவரையும் வென்றனை என்னின் இங்கெமை, நவைபடச் செய்வதே நன்று போலுமால்.

சூரபன்மனே நீயோ அசுரகுலத்தில் தோன்றினை அவ்வாருயினும் செயற்கரும் தவம்செய்து சிவனருள் பெற்றனை திக்குளார் முதல் யாரையும் வென்றனை என்றுல் இங்கு நாம் துயரப்படச் செய்வதோ உனக்கு நன்மையாகும். 112

மறலியும் இருக்குமோ மற்றைமாதிரத், திறைவரும் இமையவர் யாரும் உய்வரோ
இறுதியின் றுதமே உலகம் ஈங்கொரு, சிறிதுநீ வெஞ்சினஞ் சிந்தை செய்யினே.

அரசே நீ சிறிது கொடும் கோபத்தை மனதிலே கொண்டால் இயமனும் உயிரோடு இருப்பாரோ, மற்றைத் திக்குள்ள தலைவரும், தேவர் எல்லாரும் உய்வாரே அஃதன்றி உலகம் எல்லாம் இன்றே முடிவாகிவிடுமே! 113

இற்றையிப் பகல்முதல் என்றும் எங்களுக், குற்றதோர் கடவுள்நீ ஓம்பும் வேந்துநீ
பற்றுள தமரும்நீ பலரும் யாம்இனி, மற்றுன தேவலை மரபிற் செய்துமால்.

இன்று இந்தநாட் தொடக்கமாக என்றும் எங்களுக்கு உற்ற கடவுள் நீதான். எம்மைக் காக்கும் அரசனும் நீதான். எமக்குப் பற்றுடைய சுற்றமும் நீ. நாங்கள் பலரும் இனிமேலாக உனது ஏவல் பணிகளை குல முறையாகச் செய்வோம். 114

என்றிவை புகன்று போற்றும் இமையவர் தம்மை நோக்கி
நன்றுநுஞ் செய்கை யென்னு நகைசெய்து யாப்பு நீக்கி
மன்றநம் பணிமேல் கொண்டு வைகுதிர் இனிநீ ரென்னு
அன்றவர் தம்மை விட்டான் அழல்மகத் தாவி விட்டான்.

என்று இவைகளைச் சொல்லிப் போற்றுதல் செய்கின்ற தேவர் கூட்டத்தாரைப் பார்த்து நல்லாயிருக்கிறது உமது செயல்கள் என்று புன்சிரிப்புக்கொண்டு அவர்களைக் கட்டிய கட்டுக்களை நீக்கிவிட்டு இன்றுதொட்டு தவருது எனது பணிகளை நீங்கள் மேற்கொண்டு இருப்பீராக எனச் சொல்லி அவர்களை விடுத்தான் யாரெனில் எரி கின்ற யாக நெருப்பில் குதித்து தனது உயிரைவிடுத்த சூரபன்மன். 115

வாசவன் வளத்தை யெல்லாம் அவுணர்கள் வவ்விச் செல்லப்
பேசரு மகிழ்ச்சி கொண்டு பின்னவர் பாங்கர் ஏகக்
காசிபன் அளித்த மேன்மை காதலன் அனிகஞ் சூழ
ஓசைகொள் மறைகள் ஆர்க்கும் உயர்மக லோகம் புக்கான்.

இந்திரனுடைய செல்வத்தை எல்லாம் அசுரர்கள் களவாண்டதுபோல முற் றிலும் எடுத்துச் செல்ல பேசற்கரிய மகிழ்ச்சிகொண்டு தனது தம்பிமார் பக்கராக வர காசிப முனிவன் தந்த மேன்மையுடைய தலைவனுன சூரபன்மன் தனது சேனை சூழும்படி ஓசைகொண்ட வேதங்கள் ஆர்க்கும் ஒலிகள் நிறையும் உயர்வுகொண்ட மகலோகம் புகுந்தான். 116

கற்றுணர் கேள்வி யான்மார்க் கண்டேயனுதி வானோர்
உற்றிடும் பதமாக் தொல்பேர் உலகமே முதல மூன்றும்
மற்றவர் பரவ நீங்கி மலரயன் பதத்திற் போகத்
தெற்றென அதனைத் தேர்ந்து திசைமுகன் துணுக்க முற்றுன்.

அங்கு கற்றுணர்ந்த மார்க்கண்டேய ஞுதியானோராய முனிவர் வீற்றிருக்கின்ற மேலான பழம் புகழ்கொண்ட மகலோகம் சனலோகம் லவலோகம் முதல் மூன் றிலும் அவர்கள் சூரபன்மனை வணக்கஞ் செய்ய அந்த உலகினைவிடுத்து தாமரை மலர் மேலிருக்கும் பிரமதேவர் பதத்தில் போதலும் அதனை உடனடியாக உணர்ந்து கொண்ட பிரமதேவர் திடுக்கம்கொண்டார். 117

வசையில் நோன்புடை வாலறி வுள்ளோர், இசைகொள் வேதம் இயம்பினர் சூழ
நசையி னீரொடு நான்முகவேதா, அசுரர் கோனைய டைந்தன னன்றே.

வசையில்லாத நோன்பு விரதங்களையுடைய உண்மை அறிவுடையவர்கள் இசை யுடைய வேதங்களை ஓதியவாறு சூழ்ந்துவர உள்ளத்து பற்றுமிகுந்துள்ள தன்மையுடன் நான்கு முகமுடைய பிரமதேவர் அசுரர் தலைவனுன சூரபன்மனை அடைந்தார். 118

ஆழி மால்கடல் அன்னதொர் சேனை. சூழவேவரு சூரனை யெய்தி
வாழி வாழிய வைகலும் என்னுக், கேழிலாசி கிளத்திய பின்னர்.

ஆழ்ந்த பெரிய கடல் ஒத்ததோர் சேனை சூழவே வருகின்ற சூரனைப் பிரம தேவர் அடைந்து சூரபன்மனே நீ வாழி வகையிலும் வாழியவே என்று அன்பான ஆசிகளை சொல்லியவண்ணம் வரவேற்றபின்னர். 119

மன்ன நீயிவண்வந்திட மேனுள், என்ன நோன்பை இயற்றின னேயான்
அன்ன வாறுண ரேன்சிவன் அல்லால், உன்னிநாடி யுணர்ந்துளர் யாரே.

அரசே நீ இவ்விடத்து வந்திடமேனுளில் நான் என்ன தவத்தை செய்தேனே அதன் வரலாற்றை அறியமாட்டேன். சிவபிரான் அல்லால் அதன் தன்மையை உன்னி நாடி உணர்ந்துளார் வேறு யாராவார். 120

கற்றை வார்சடை யான் கழல்பேணி. அற்றம் நீங்கி அருந்தவம் ஆற்றி
மற்றிவ்வாறு வளத்தியல் யாவும், பெற்றுளாய்பெரு வன்மை பிடித்தாய்.

கற்றையாக உடைய வார்ந்த சடைகொண்ட சிவபிரான் திருவடிகளைப் பேணி குற்றம் நீங்கி அரிய தவத்தைச் செய்து இந்தவாறு இப்படியான பெருமைவாய்ந்த இயல்புடைய வளங்கள் யாவற்றையும் பெற்றுக்கொண்டாய். பெருவலியையும் அருளினால் அடைந்துள்ளாய். 121

பொன்னை மேவு பொலன்கெழு மார்பன், தன்னை வானவர் தங்களை யெல்லாம்
இன்ன நாள்இளை யோற்கொடு வென்றாய், உன்னை நேருள ரோவுலகத்தில்.

மகாலக்குமியை மார்பில் பொருந்த வைத்திருக்கின்ற விஷ்ணுபிரானை தேவர் தங்களையெல்லாம் இற்றை நாளில் உமது தம்பியரைக்கொண்டே வெற்றியடைந்தாய் உன்னை ஒப்பாருளரோ வேறு ஒருவர் இந்த உலகத்தில்! 122

காதலான்மிரு காசிபன் மைந்தன், ஆதலால் அவுணர்க் கிறைநின்மு
தாதையான்சர தம்மிது நின்சீர், ஏதும் என்புகழ் யான்பிறன் அன்றே.

நீயோ எனக்குக் காதல் மிகுந்த மைந்தனான காசிபமுனிவன் பிள்ளையாயினாய். ஆதலால் அசுரர் தலைவனே! உனது தந்தைக்கும் தந்தையான பாட்டனானேன். நான் சொல்வது உண்மை. உனது சீர் ஏதும் எனது புகழாகும். யான் பிறன் அல்ல உனது ஆளாகும் என்றார் பிரதேவர். 123

என்று பன்முக மன்கள் இசைத்தே, நின்று தம்பியர் தங்களை நேர்ந்து
பொன்றிடாத பொலஞ்சிலை திண்டேர், ஒன்று தன்படை யும்முதவுற்றான்.

என்று பல முகமன்கள் யாவையும் பிரமதேவர் முன்னின்று இசைத்து அவன் பக்கராக நின்ற தம்பிமார்களைப் பார்த்து அழியாத பெருவலியுடைய வில்லு, வலியுடையதேர்கள், மேலோங்கிய தனது படையான பிரமாஸ்த்திரத்தையும் அவர்கட்குக் கொடுத்தார் பிரமதேவர். 124

வெருவ ரச்சுரர் வீற்றுறுபான்மை, இருவருக்கும் உளித்தலும் யாரும்
பரவு கொற்றவன் அன்னது பாராப், பெருமகிழ்ச்சிகொள் பெற்றியன் ஆனான்.

தேவர்கள் வெருண்டு அஞ்சும்படியான திறலுடைய இருவருக்கும் இவைகளைக் கொடுத்தலும் யாரும் வணங்கும் சூரபன்மன் அதனைப் பார்த்து பெருமகிழ்ச்சி கொள்கின்ற தன்மையனானான். 127

அருத்தி யெய்தி அயன்றனை யங்கண், இருத்தி மாயைமுன் ஈந்தருள் மைந்தன்
மருத்து மூய்முடி மன்னவன் வைகுந், திருத்த கும்முல கத்திடை சென்றான்.

பிரமதேவரின் உபசாரத்திற்கு மகிழ்வாகி அவரை அங்கு இருத்திவிட்டு மாயவள் பெற்ற புத்திரனான சூரபன்மன் வாசனையுடைய துளசிமாலை வேய்ந்த முடியுடைய விஷ்ணுபிரான் வீற்றிருந்தருளும் உலகமான வைகுந்தம் சென்றான். 126

அந்த வேலையில் ஆண்டுறும் மாலோன். வந்து சூரபன் மாவினை யெய்தி
நந்தல் இல்லதெசர் நாளொடு வாழ்கென், றந்த மில்பல ஆசி புகன்றான்,

அந்த வேளையில் அங்கிருக்கும் நாராயணக் கடவுள் எழுந்து வந்து சூரபன்மனை வரவேற்புடன் அடைந்து குறைவேதுமில்லாத பல நாட்களாக நீ வாழ்வாயாக என அளவற்ற ஆசிமொழிகளைப் புகன்றார் 127

ஆசி கூறினன் ஆற்றவும் இன்சொற் பேச வேபெரு மாமகிழ் வெய்தி
மாசில் அவ்வுல கெங்கணும் வல்லே பாச னத்தொடு பார்த்தனன் அன்றே,

பல ஆசிகளை விஷ்ணுமூர்த்தி. மிகவும் மேலான இனிய சொற்களைச் சொல்லி கூறினார். கூறுதலும் சூரபன்மன் பெருமகிழ்வெய்தி மாசில்லாத வைகுந்த உலகெங்கணும் திடமுடனாகத் தனது பரிசனத்துடன் பார்த்தான். 128

பார்த்த பின்பணி யின்மிசை வைகுந், தீர்த்தன் ஆண்டு திகழ்ந்துற நல்கிக்
கார்த்தி லங்குறு கந்தர முக்கண், மூர்த்தி வைகிய மூதுல குற்றுன்,

பார்த்த பின்பு அனந்தன் என்னும் பாம்பின்மீது பள்ளிகொண்டருளும் அருட்செல்வராகிய விஷ்ணுமூர்த்தியை அங்கு தங்குயிருக்குமாறு விடைகொடுத்து அப்பால் மிக முதுமைவாய்ந்த கரிய கண்டம் இலங்குறும் முக்கண்மூர்த்தி சிவபிரான் வீற்றிருந்தருளும் சிவலோகத்துச் சூரபன்மன் சென்று சேர்ந்தான். 129

அரியயன் முதலா வுள்ள அமரர்கள் யார்க்குந் தத்தம்
உரியதோ ராணை யெல்லாம் உலப்புறு துதவி வைகும்
பரமன துலகம் நண்ணிப் பரிசனம் யாவும் நீங்கிச்
சுரர்புகழ் சூரபன்மன் துணைவர்க ளோடு போனன்.

பிரமா விஷ்ணு முதலாவுள்ள தேவர்கள் யார்க்கும் உரியதான ஆஞ்ஞைகளை எல்லாம் ஒழிவின்றி அருள்புரிந்தருளியவாறு வீற்றிருந்தருளும் சிவபிரானுடைய சிவலோகத்தைச் சூரன் சேர்ந்து வெளியே தனது படைகளை நிறுத்திவிட்டு அவர்களை நீங்கித் தேவர்களும் புகழும் சூரபன்மன் தனது தம்பியருடன் உள்ளே சென்ருன். 130

போந்தனன் அமலன் கோயிற் புறங்கடை வாயில் நின்றே
ஆய்ந்திடு நந்தி யெந்தை அருள்முறை உய்ப்பச் சென்று
காந்தளை யனைய செங்கைக் கவுரியோ டுறையும் முக்கண்
ஏந்தல்முன் அணுகி ஆர்வத் திறைஞ்சியே ஏத்தி நின்றுன்.

சிவலோகத்தில் சூரபன்மன் சென்றபோது சிவபிரான் கோவிலின் புறங்கடைவாயில் நின்று உட்செல்வாரின் தகுதியினை ஆராய்கின்ற நந்தியெம்பெருமான் சூரன் வருகையின் அருளிப்பாட்டை உணர்ந்து உள்ளே அவனைச் செல்லுமாறு விடுப்ப உட்சென்று செங்காந்தட் பூவையொத்த சிவந்த மிருதுவான கைகளையுடைய கௌரியம்பாளுடன் வீற்றிருந்தருளுகின்ற மூன்று கண்ணுயுடைய எமது பெருமான் திருமுன்பு அணுகிச் சென்று வணங்கியே ஏத்தி நின்ருன். 131

கண்டநஞ் சுடைய அண்ணல் கருணைசெய் தினிநீ யேனை
அண்டமுஞ் சென்று நாடி ஆணையால் அகிலம் யாவும்
எண்டிசை புகழும் ஆற்றல் இறைபுரிந் திருத்தி யென்னப்
புண்டரீ கத்தாள் போற்றி விடைகொண்டு புறத்து வந்தான்.

கண்டத்திடையாக நஞ்சினையுடைய பெருமான் வணங்கிய சூரபன்மனுக்குக் கருணைசெய்தருளி சூரனே நீ இதேபோல அமைந்த ஏனைய அண்டமுஞ் சென்று பார்த்து உனது ஆணையால் எல்லா உலகமும் எட்டுத்திக்கும் உன்னைப் புகழும்படி அரசுபுரிந்து இருப்பாயாக எனத் திருவருள் செய்ய சூரன் பெருமானின் செந்தாமரை மலரையொத்த சிறந்த திருவடிகளில் வணங்கி விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்தான். 132

புறந்தனில் வந்து சூரன் பொம்மெனத் தானை யெய்திச்
சிறந்திடு கின்ற அண்ட கோளகை சேர்த லோடு
மறந்தரு ளுமலிமேலோர் உருத்திரர் வரம்பி லோர்கள்
உறைந்தனர் அனைய ரெல்லாம் உமாபதி யருளுட் கொண்டார்,

வெளியே வந்த சூரபன்மன் விரைவாகத் தனது சேனையையடைந்து அப்பால் சிறந்திடுகின்ற அண்டச்சுவரென்னும் இவ்வுலகமெல்லாவற்றையும் காக்கும் சக்தி நிறைந்த அப்பகுதிகளுக்குக் செல்லலோடும் அங்கே காவல்செய்திருக்கும் கொடுநிலை கொண்ட நாய்மேலான வைரவக் கடவுளரும் உருத்திரமூர்த்திகளுய ஆகிய அளவிறந்தோர் இருந்தார்கள். அவர்கள் எல்லாரும் சூரன் வருகையைக் காண்டலும் உமையம்மையார் பாகரான சிவபிரான் அருளினை நினைந்துகொண்டார்கள். 133

பாங்குறும் அண்டஞ் செல்லும் பான்மையில் வாயில் காட்டி
ஆங்கவர் விடுப்ப மற்றை அண்டத்துச் சூர பன்மன்
ஓங்கிய தானை யோடும் ஒல்லையிற் போகி யாண்டும்
ஈங்கிது போல நாடி யாரையும் வென்று போனன்.

அவர்கள் யாரும் இதன்பக்கராக உள்ள அண்டங்கட்குச் செல்லுதற்குரிய வாயில்களைக் காட்டி அங்கு அவர்கள் விடுப்ப மற்றஅண்டத்தில் சூரபன்மன் மேலோங்கிய சேனையோடும் விரைவுடன் சென்று அங்கு இங்கு கண்டவாறே பதினலு உலகை நாடி அறிந்து எல்லாரையும் வென்று போனன், 134

ஏனையண் டங்களெல்லாம் எம்பிரான் கணமா யுள்ளோ
ரானவர் அருளிற் போகி அகிலமும் நாடி அங்கண்
வானவர் தம்மை வென்று வளமெலாங் கவர்ந்து தன்பால்
தானவர் பலரை அங்கண் தன்னர சளிப்ப உய்த்தான்.

அவ்வாறாக ஏனைய அண்டங்களிலெல்லாம் எம்பிரான் கணமாயுள்ளோர்களான உருத்திரமூர்த்திகள் வைரவக் கடவுளின் அருளினல் சென்று அங்குள்ள தேவர்களை வென்று செல்வம் எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டு தன்பால் உள்ள அசுரப்படைகளை அங்கிருந்து தனது அரசாட்சியைப் புரியும்படி சூரபன்மன் வைத்தான். 135

இந்திறம் வீற்று வீற்ரு எல்லையில் அண்டந் தோறும்
மெய்த்தம ராகி புள்ள அவுணரை வேந்த ராக
வைத்தனன் துணைவ ரோடு மீண்டனன் மற்றிவ் வண்டப்
பித்திகை அதனுட் சென்று பெறலருந் துறக்க முற்ருன்.

இத்திறமாக வேறுவேருக உள்ள எல்லையிலா அண்டங்கள் தோறும் தனது நெருங்கிய சுற்றத்தவராகியுள்ள அசுரரை ஆங்காங்கு வேந்தராக வைத்துவிட்டபின் தனது துணைவர்களோடும் மீண்டான். இந்த அண்டங்களின் புறச்சுவரின் ஊடாக பழையபடி வந்து பெறுதற்கரிய சொர்க்க உலகத்தைச் சூரபன்மன் அடைந்தான். 136

ஆகத்திரு விருத்தம் 925

திக்குவிசயப் படலம் முற்றிற்று.

697

# 13. எதிர்கொள் படலம்

திண்டிறன் மாயையின் செம்மல் இத்திறம், அண்டர்தந் துறக்கமேல் அடைந்த காலையிற்
பண்டிமை யோர்களாற் படருந் தானவர், கண்டனர் மகிழ்ந்தனர் களிப்பின் முழ்கினர்,

மாற்றமுடியாத திண்மையாம் திறலினை உடைய மாயவள் புத்திரனான சூரபன்மன் இத்திறமாகத் தேவர்களுடைய சொர்க்கலோகத்தில் அடைந்த அக்காலத்தில் முன்னர் தேவர்களால் துயரப்படுத்தப்பட்டு துன்பம் அடைந்துள்ள அசுரர்கள் சூரனைக் கண்டார்கள், மகிழ்ந்தார்கள், ஆனந்தத்தில் மூழ்கினார்கள். 1.

ஆயவன் வருவதை அவுணர் தம்பெரு, நாயகற் கொற்றர்போய் நவில அன்னவன்
தூயநல் லமுதினைக் கிடைத்துத் துண்ணென, மேயின னுமெனக் களிப்பின் மேயினான்.

சூரபன்மன் அங்கு வருவதை அசுரர்களின் முந்திய தலைவனான அசுரேந்திரனுக்குத் தூதுவர் போய்ச் சொல்லலும், அந்த வார்த்தையைக் கேட்ட அசுரேந்திரன் தூயதான நல்ல அமிர்தத்தினை இலேசாகக் கிடைக்கப்பெற்று அதனை உடனாக உண்டவன் போல உளம்குளிர்ந்து களிப்பிற் பொருந்தினான். 2.

தானையம் படையொடு தகுவர் கோமக, னானவெஞ் சூர்பெறும் அளப்பில் ஆக்கமுங்
கூனலம் பிறைதவழ் குடுமிச் செஞ்சடை, வானவன் கருணையுங் மனங்கொண் டேகினான்.

அசுரர் சேனையான படைகளை உடன் அசுரேந்திரன் அழைத்துக்கொண்டு சூரபன்மன் பெற்றுள்ள அளவு கடந்த செல்வத்தையும் முன்னாக இவற்றையெல்லாம் கொடுத்தருளிய கூனிய இளம்பிறையை அணிந்து விளங்கும் சிவந்த சடையினை உடைய சிவபிரான் கருணையையும் தனது மனதில் உற்று எண்ணியவாறு சென்றான். 3.

அன்னவன் புகர்தனை யடைந்து நங்குல, மன்னனை உற்றிட வல்லை செல்லுவன்
முன்னுற ஏகியெம் முறையுஞ் செய்கையும், பன்னுதி யென்றுமுன் படர்வ தாக்கினான்.

அவ்வாறு மகிழ்வுடன் சென்ற அசுரேந்திரன் குருவான சுக்கிரனை அடைந்து குருவே, எங்கள் குல அரசனான சூரனை நான் சென்று அடைய அதி விரைவில் செல்வேன். அதற்கு முன்னராக தேவரீர் அவனிடம் சென்று எங்களது உறவு முறையையும் எமது செய்கைகளைப் பற்றியும் சொல்வீராக என வேண்டி சுக்கிரனைச் சூரன்பால் முன்னாக அனுப்பி வைத்தான். 4.

அன்னதோர் காலையில் அவுணர் தேசிகன். முன்னுற மானமேல் முடுகி ஏகலுந்
தன்னுறு கிளைஞருந் தானும் ஆங்கவன், பின்னுற மன்னவன் பெயர்ந்து போயினான்;

அன்னதோர் காலையில் அசுரர் குருவான சுக்கிரன் அசுரேந்திரன் வேண்டுதல்படி முன்னாக ஓர் விமானத்தில் வேகமாய்ச் செல்லுதலும் அசுரேந்திரன் தனது சுற்றத்தவரும் தானுமாக குருவின் பின்னாக தனதிடம் நீங்கிப் போயினான். 5.

மாசறு பேரொளி மான மீமிசைத், தேசிகன் விரைவொடு செல்லும் எல்லையில்
காசிபன் அருள்மகன் கண்டு சேணிடை, ஈசனை யெதிர்ந்தென எதிர்கொண் டேகினான்;

மாசில்லாத பேரொளியுடைய விமானத்தின் மேலாக குருவான சுக்கிரன் விரைவோடு செல்லுகின்ற நேரத்தில் காசிப முனிவன் பெற்ற சூரபன்மன் கண்டு வானத்திடத்தில் ஈசனைக் கண்ட தன்மைபோல குருவை எதிர்கொண்டு முன்பாகச் சென்றான். 6

அஞ்சலி செய்தனன் அவுணன் அத்துணை, நெஞ்சக மகிழ்வொடு நின்று தேசிகன்
விஞ்சுக திருவொடு விசயந் தானெனா, எஞ்சலில் ஆசிகள் எடுத்துக் கூறினான்.

குருதேவனை சூரன் அஞ்சலி கூப்பி வணங்குதலும் அத்துணை குருவான சுக்கிரன் தமது நெஞ்சமுள்ளாக மகிழ்ந்து நின்று சூரபன்மனே! உனக்கு செல்வமும் வெற்றிகளும் மேலோங்குக எனப் பல ஆசி மொழிகளை எடுத்துக் கூறினான். 7

ஆயது காலையில் அனையன் பாங்கரின், மேயின அரிமுகன் வேழ மாமுகத்
தீயவன் இருவருந் தேரொ டேகியே, தூயதோர் புகர்அடி தொழுது போற்றினர்.

அவ்வாறாகிய காலையில் சூரபன்மன் பாங்கராக வந்துள்ள சிங்கமுகா சூரனும், யானை முகமுடைய தாரகா சூரனுமாகிய தீயவர் இருவரும் தங்கள் தேருடன் வந்து தூய்மை நிறைந்த குருவான சுக்கிரனின் பாதகமலங்களை தொழுது போற்றினார்கள். 8

ஏத்திடும் அவர்தமக் கியலும் ஆற்றினால், மீத்தகும் ஆசிகள் விளம்பி வேந்தனைப்
பார்த்தனன் உனக்கியாம் படுத்து கின்றதோர், வார்த்தையுண் டனனது வகுத்துங்
[கேட்டிநீ

இவ்வாறு துதித்து வணங்கிய சிங்கனுக்கும், தாரகனுக்கும் சுக்கிரன் பொருத்தமான முறையால் மேலோங்கிய ஆசி மொழிகளைச் சொல்லி ஆசீர்வதித்து, அதன்பின் சூரனைப் பார்த்து உனக்கு யான் இப்போது சொல்லப் போகின்ற ஓர் வார்த்தை உண்டு அதை விளக்கமுடன் சொல்கிறேன் கேட்பாயாகவென்றான். 9

பங்கமில் காசிபன் பன்னி யாகிய, நுங்கையைப் பயந்துளான் நுனித்த கேள்வியான்
சங்கையற் றிருந்ததா னவரைத் தாங்கினான், எங்களுக் கோர்துணை யென்னுந்
தன்மையான்;

குற்றம் குறையில்லாத காசிப முனிவனின் மனைவியும் உனது தாயுமான மாயை என்பாளைப்பெற்ற தந்தையானவனும், நுட்பமான நூல்களை ஆராய்ந்து அறிவைப் பெற்றுக்கொண்டவனும். பெருமை நீங்கியிருந்த அசுரர்களைக் காத்து வைத்திருந்தவனும் எங்களுக்கு எக்காலமும் ஓர் துணைவனுயவனும். 10

சண்டையில் வாசவன் எதிர்ந்து பற்பகல், மூண்டிடு வெஞ்சமர் முற்றி வீரத்தைப்
பூண்டனன் ஆதலிற் புழுங்கி மாரிநாள், மாண்டிடு கதிரென மாழ்கி வைகினான்.

இப்போ இங்கிருக்கும் இந்திரன் எதிர்ந்து பற்பகல் பெருமளவில் மூண்டிடுகின்ற கொடிய போரைச் செய்து இவர்களை வெற்றிகொண்டு வீரம் பூண்டான்; ஆதலினால் கவலையால் உள்ளம்புழுங்கி மாரிகாலத்தில் ஒளிகுன்றி இருக்கும் சூரியனைப்போல் பொலிவிழந்து வாட்டமுடன் இருந்தான். 11

அத்தகு மேலையோன் அவனி மீமிசை, வித்திடு நாறுசெய் விளைவு காணுரு
எய்த்திடு நிரப்பினன் என்ன நின்னையே, நித்தலும் நோக்கினான் சிறுமை நீங்கவே;

அவ்வாறான மேலவனை அசுரேந்திரன் இப்பூமியினிடத்தாக வறுமையால் வாடிய ஒருவன் வித்திட்ட நாற்று நெற்பயிரின் விளைவு எப்போது வருமெனக் காண அவாக் கொண்டதைப் போல் உன்னுடைய பெருவாழ்வையே நித்தலும் நோக்கி நின்றான் தனது சிறுமை நீங்கும் பொருட்டாக. 12

தவங்கொடு முந்துநீ தழலை வேட்டதுஞ், சிவன்புரி வரங்களுஞ் செப்பக் கேட்டனன்
உவந்தனன் ஆகுலம் ஒழித்து வைகினான், நிவந்தன ஆங்கவன் நெடிய தோள்களே.

தவத்தை புரிந்துகொண்டு முன்பாக நீ அக்கினி வளர்த்துச் செய்யப்பெறும் யாகத்தைச் செய்ததும், அதற்காக சிவபிரான் புரிந்துள்ள வரங்களும் இங்கு சொல்லக் கேட்டானாகி மகிழ்வாகி கவலை ஒழிந்திருந்தான். பூரிப்பினால் அவனுடைய தோள்கள் நிமிர்ந்து நின்றன. 13

பற்றலர் புரமடு பரமன் ஈந்திடப், பெற்றதோர் வரத்தொடு பெயர்ந்தி யாரையும்
வெற்றிகொண் டிவண்வரும் மேன்மை கேட்புறு, மற்றுனை அடைந்திட வருகின்றனனே

பகையசுரரின் முப்புரத்தை எரித்தவரான சிவபிரான் கொடுத்திடப்பெற்றதோர் வரத்தோடு நீசென்று யாரையும் வெற்றிகொண்டு இவ்விடத்து வருகின்ற மேன்மையைக் கேட்டு உன்னை இங்கு அடையும்படியாக இதோ வந்துகொண்டிருக்கின்றான். 14

வன்றிறல் அவுணர்கோன் வருதல் காட்டியே, புன்றொழில் படுத்திய புகரு ரைத்தலுந்
துன்றிய கனைகழற் சூர னென்பவன், நின்றனன் உவகையால் நிறைந்த நெஞ்சினான்

எனக்கூறி வலிமையுடைய அசுரேந்திரன் வருதலைக் காண்பித்து சூரனைத் தீயசெயலைச் செய்யும்படி தூண்டிவிட்ட சுக்கிராச்சாரி அங்கு நிற்றலும் அப்போது ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்திருக்கின்ற சூரன் என்பவன் அங்கு அசுரேந்திரன் வருகையை நோக்கி உவகை நிறைந்த நெஞ்சோடு நின்றான். 15

ஆர்ந்ததொல் கிளையொடும் அவுணர் காவலன், சேர்ந்தனன் சூரனைச் செங்கையால் தொழாப்
பேர்ந்திடும் ஆவியைப் பிரிந்த தோருடல், சார்ந்திடு கின்றதோர் தன்மை என்னவே.

நிறைந்த பழைய தனது சுற்றத்துடன் அசுரேந்திரன் சூரனிடம் வந்து சேர்ந்து அவனைத் தனது சிவந்த கைகளைக் கூப்பித் தொழுது வணங்கினான். எப்படியெனில் பிரிந்துபோன தனது உயிரிரைச் சேர்ந்துகொண்ட உடல்போல மிளிர்ந்து விளங்கினான் அசுரேந்திரன். 16

ஆயிடை வெய்யசூர் அவணர் கோவினை, நீயினி திருத்திகொல் என்ன நீயுளை
தீயன அடையுமோ சிறுமை எய்துமோ, மேயநுங் குலமுறை விளங்கத் தோன்றினேய்.

அவ்விடத்து கொடிய சூரபன்மன் அசுரேந்திரனை நோக்கி நீ இன்பமுற வாழ்ந்தனையோ என்று கேட்டலும் அதுவேலை அசுரேந்திரன் சொல்வான் அப்பனே! நீ இருக்கின்றாய் ஆகையால் எமக்கு தீயதானவை அடையுமோ! சிறுமைவருமோ! அஃதன்றி நீ இவ்வுலகில் வாழும் முன்னான உனது குலமுறை விளங்கும்படி அவதாரமெடுத்தவனல்லவோ. 17

என்றிவை நயமொழி இயம்பி யேபுடை, சென்றனன் மாயையின் செய்யன் காதலன்
துன்றிய தகுவர்தம் அனிகஞ் சூழ்தர, வென்றியொடுஅவுனிமேல் விரைவின் மீளவே.

என்றிவ்வகைகளான நயமொழிகளைச் சொல்லி அசுரேந்திரன் சூரன்பக்கராக தானும் பரிவாரப் படையாகப்புடை சூழ்ந்து சென்றனன். மாயவனின் அன்புடைய திருக்குமாரனை சூரபன்மன் நெருங்கிச் சூழும் தனது அசுரசேனை சூழ்தர வெற்றி களை எங்கும் பெற்றுக்கொண்டு பூமிக்கு மீண்டு விரைவில் வந்தான். 18

மண்ணுல கத்தில் வெஞ்சூர் வந்தனன் எனுஞ்சொற் கேளா
அண்ணலங் கமலத் தேவும் அமரர்கோ மானும் ஏனை
விண்ணவ ராயுள் ளோரும் வியத்தகு முனிவர் யாருந்
துண்ணென வந்து மாயோன் துயில்கொளுங் கடலிற் புக்கார்.

சூரன் மண்ணுலகத்தில் வந்தான் என்னும் சொல்லைக் கேட்ட மேலான தாமரை மலரில் இருக்கும் பிரமதேவரும் இந்திரனும் ஏனைய தேவர்களாயுள்ளோ ரும் மேன்மையான முனிவர்கள் யாவரும் திடீரென வந்து நாராயணக் கடவுள் யோக நித்திரை செய்யும்பாற் கடலிடத்தாகப் புகுந்தார்கள். 19

கொய்துழாய் அலங்கல் மோலிக் குழகனைக் குறுகி நின்று
கைதொழு திறைஞ்சித் தாங்கள் கனைகழற் சூரன் தன்னால்
எய்திடு சிறுமை யெல்லாம் இயம்பினர் இனிமேல் யாங்கள்
செய்திடு கின்ற தென்கொல் செப்புதி பெரும வென்றார்.

கொய்யப்பெற்ற துளசிப் பூமாலையை அணிந்த முடியுடைய நாராயணப் பெருமானை கிட்டிநின்று கைதொழுது வணங்கித் தாங்கள் யாரும் ஒலிக்கும் வீரக் கழல் அணிந்த சூரனால் அடைந்திட்ட சிறுமைப் பாடெல்லாவற்றையும் சொல்லி நின்று இனிமேலாக நாங்கள் யாது செய்யலாம் என்பதை பெருமானே! நீர் செப்பும் எனத் தொழுது நின்றார். 20

அன்றவர் உரைத்த மாற்றம் அச்சுதக் கடவுள் கேளாப்
புன்றொழில் தக்கன் வேள்வி புகுந்திடுந் தீமை தன்னால்
இன்றிது பொருந்திற் றம்மா யாரிது விலக்கற் பாலார்
ஒன்றினிச் செய்யுந் தன்மை கேண்மின்என் றோதலுற்றான்.

அன்றவர் சொன்ன வார்த்தையை நாராயணக் கடவுள் கேட்டு இழிதொ ழிலைச் செய்திட்ட தக்கனுடைய யாகத்தில் நாம் சென்றிருந்த தீமை தன்னால் இன்று இது எமக்குப் பொருந்திற்று அம்மவோ! யார் இதை விலக்க முடியும். எனிச் செய்யக் கூடிய தன்மை ஒன்றிருக்கின்றது அதைக் கேளுங்கள் என்று சொல லத் தொடங்குவார். 21

பண்டெயின் மூன்றும் அட்ட பராபரன் வரம்பெற் றுள்ளான்
அண்டமெங் கெவையும் வென்றான் ஆதலால் நம்மால் வென்றி
கொண்டிடு திறத்தான் அல்லன் கொடியவச் சூரன் தன்னைக்
கண்டுசென் றிடுதும் ஈதே காரியம் போலு மென்றான்

முன்னாள் முப்புரங்களை எரிசெய்த பராபரன் சிவனருள் பெற்றவன் சூரபன்மன். அண்டம் எல்லாவற்றையும் வெற்றிகொண்டான், அதனால் அவன் எம் மால் வெற்றிகொள்ளப்படும் நிலையுடையானல்லன். கொடியதாகிய அச்சூரன் தன்னை நாம் கண்டு புகழும்படி செல்வோம், இதுவே செய்யக்கூடிய காரியமென்றார். 22.

செங்கம லத்தோ ஞதி தேவரும் முனிவர் யாரும்
இங்கிது கரும மென்றே இசைந்தன ராகி நிற்ப
அங்கவ ரோடு மாயோன் அரவணைப் பள்ளி நீங்கித்
துங்கம துடைய தொல்சீர்ச் சூரனைக் காண வந்தான்.

இதனை செந்தாமரைப் பூவிலிருக்கும் பிரமதேவனுதியான தேவரும் முனிவரும்கேட்டு இதுதான் செய்யத்தக்க கருமம் என்று யாரும் இசைவு கொண்டு நிற்றலும் அங்கவருடனுக நாராயணப் பெருமான் அனந்தன் என்னும் பாம்பின்மேலாகக் கொண்ட துயிலை நீங்கி மேன்மையான சீரினைக்கொண்ட சூரபன்மனைக் காணும்படி வந்தார். 23

மருத்துழாய் மவுலி யாதி வானவர் முனிவர் யாருந்
திருத்தகு சூரன் நேரே சென்றுநின் ருசி கூறி
அருத்திய தாகப் போற்ற அவர்களுட் பதினோர் கோடி
உருத்திரர் தொகுதி யானோர் ஒருங்குடன் நிற்பக் கண்டான்.

வாசனை பொருந்திய துளசிமாலையணிந்த முடியுடைய நாராயணக்கடவுள் ஆதியான தேவர் முனிவர் யாரும திரு உடைய சூரபன்மன் நேரே சென்று முன்னின்று ஆசிகூறி தங்கள் மேலாகச் சூரன் பிரீதிகொள்ளும்படி போற்றி செய்தலும் அவ்வேளை சூரபன்மன் இவர்களுள்ளே பதினொருகோடி உருத்ரமூர்த்திகள் தொகுதியாக ஒருங்கே நிற்பதைக் கண்டான். 24.

கண்டிடும் அவுணர் தங்கள் காவலன் இமையா முக்கண்
அண்டர்தம் பெருமான் என்ன அமைந்ததொல் வடிவ முள்ளார்
எண்டரு தொகையின் மிக்கார் ஈங்கிவர் யாவ ரென்னத்
தண்டுள வலங்கல் மோலிப் பண்ணவன் சாற்றல் உற்றான்.

கண்டிட்ட அசுரரின் காவலனுன சூரபன்பன் இந்த உருத்திரமூர்த்திகள் தேவர்கள் தம் பெருமானுன சிவபிரானைப் போல் அமைந்திருக்கும் வடிவத்தைப் பெற்றார்கள். இவர்கள் யாவரும் மிகமேலான தொகையுடன் காணப்படுவார்கள், இங்கு இவர்கள் யாவராகும் என்னலும் அந்நேரம் குளிர்ந்த துளசி மாலையணிந்த நாராயணக் கடவுள் கூறத் தொடங்குவார். 25.

எதிர்கொள் படலம் முற்றிற்று:

ஆகத் திருவிருத்தம் 950.

## 14. உருத்திரர் கேள்விப் படலம்

மன்னவர் மன்ன கேண்மோ மற்றிது புகல்வன் வேதா
முன்னொரு கற்பந் தன்னில் மூவகை யுலகும் நல்கித்
துன்னுயிர் முழுதும் நல்கித் துண்ணென அகந்தை கொண்டு
தன்னையும் பரமென் றுன்னித் தாணுவை அயர்த்தான் அன்றே.

அரசர்க்கரசனுன சூரபன்மனே கேட்பாயாக: இந்த வரலாற்றை நான் சொல்வேன், பிரமதேவர் முந்திப ஒரு கற்பகத்திலே சொர்க்கம், மத்தியம் பாதாளம் என்னும் மூவகையான உலகுகளைப் படைத்து அப்பால் விளங்குகின்ற பல உயிர்களையும் படைத்து எல்லாம் தனது செயலால் கைகூடினமையால் தான் மிக தீவிரமுடைய அகந்தைகொண்டு தன்னையும் ஓர் பரம்பொருளென நினைந்து சோதியாகிய சிவபிரானை மறந்தனன். 1

எந்தையை மறந்து போதன் யாவையும் விதித்த லோடுந்
தந்திடும் அளவே யன்றிச் சராசரம் பெருகா வாக
நொந்தனன் குறையென் என்றே நோக்கினன் எமைமுன் ஈன்ற
ஐந்தொழில் முதல்வன் தன்னை அயர்த்தனன் போலு மென்றான்.

எந்தை பெருமானைப் பிரமதேவர் மறந்து எல்லாவற்றையும் வழமைபோல் படைத்தலோடும், தான் முன்னர் படைத்தனவேயன்றி மீண்டு சராசரங்கள் பெருகாது போகவே பிரமதேவர் உளம்நொந்து தான் படைத்தவை பெருகாதமை யாது குறையாலோ என எண்ணிப் பார்த்து அம்மவவோ! என்னை முன்னர் ஈன்றவராகிய படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என ஐந்து தொழிலையுடைய ஆதிப்பிரானைநான் மறந்துள்ளேன் போலும் என்றான். 2

இனியவன் அருள்பெற் றன்றி இவ்விதி முடியா தென்னுத்
தனயனும் அளவில் காலந் தவம்புரிந் திடவும் முக்கட்
பனிமதி முடியோன் அன்னான் யாற்படா தொழிய அந்தோ
வினையினேன் முன்னந் தாதை வெளிப்படும் எவன்கொ லென்றான்.

இனி அப்பெருமான் அருளைப் பெற்றல்லாமல் இந்த எனது படைப்புத் தொழில் நடைபெறாது என்று புதல்வனான பிரமதேவனும் அளவில் காலம் சிவபிரானை நினைந்து தவம்புரிந்திடவும் முக்கண்ணும் பனிமதியுமணிந்த சடையுடைய சிவபிரான் பிரமன்பால் தோன்றாமைகண்டு அந்தோ வினையினேன் முன்பு தந்தையான பெருமான் எவ்வண்ணமாக வெளிப்படுவார் என்றார். 3

கழியுடல் புயமேற் கொண்ட கண்ணுதல் உறுத துன்னி
இழுதைய ரென்ன ஏங்கி இன்னலுற் றுயிர்த்து வல்லே
அழுதனன் மகவென் செய்வான் அன்னதோர் வேலே கண்ணீர்
விழவிழ அலகை யாகி மிகதெழுந் தீண்டிற் றன்றே.

எலும்புமாலைகளை தோள்மேல் கொண்ட கண்ணுதற் கடவுள் தன் முன் தோன்றாமைக்கு பிரமதேவன் நினைந்து வருந்தி அறிவிலாத மூடர்களைப் போல் இன்னற்பட்டு பெருமூச்செறிந்து விரைவாக அழுதனர், தந்தை இரங்காதபொழுது பிள்ளை வேறு என் செய்வான். அழுததான நேரத்தில் கண்ணீர் விழவிழ, அக் கண்ணீர் துளிகள் யாவும் பேய்வடிவம்கொண்டு பெருவாரியாக எழுந்து பிரமதேவரை நோக்கிச் சூழ்ந்தது. 4

காண்டலும் அலகை ஈட்டங் கருத்திடர் உழப்ப வீழ்ந்து
மாண்டனன் போலச் சோர மன்னுயிர்க் குயிராய் நின்ற
ஆண்டகை யுணர்வு நல்கி அனையவன் கனவில் நண்ணி
ஈண்டினி வருந்தல் மைந்த எழுகென அருளிச் செய்வான்.

பேய்க் கூட்டத்தைப் பிரமதேவர் காண்டலும் மனம் இடர்ப்பட்டு கலங்கி கீழே வீழ்ந்து இறந்தான் என்னும்படி சோர்தலும், அப்போது மேலான எவ்வுயிர்க்கும் உயிராய் நின்ற ஆண்டகையாகிய சிவபிரான் மயங்கிய பிரமனுக்கு தெளிவாகும்படி உணர்வைக் கொடுத்து அப்பிரமனின் கனவில் தோன்றி மகனே! எனிமேலும் இவ்விடத்து வருத்தமுறாது எழுவாயாக என்று இதனை அருளிச் செய்தார். 5

மதித்தனை பரமென் றுன்னை மறந்தனை யெம்மை யற்றால்
விதித்திறங் கூடிற் றில்லை விரைந்தது முடிய நந்தம்
பதத்துளார் தம்மை உன்றன் பாங்குற விடுத்தும் என்றான்
உதித்திடல் இறத்த லின்றி உலகளித் துதவும் ஐயன்.

பிரமனே உன்னையே நீ பரம்பொருளென மதித்தாய், எம்மை மறந்தாய். அத்தன்மையால் உனது படைக்கும் தன்மை கைகூடவில்லை. அது விரைவாக உனக்கு மீண்டும் கைகூடும்வண்ணம் எமது பதத்துள்ள உருத்திரமூர்த்திகளை உனது பாங்கராக விடுப்போம் எனக் கூறியருளினான், யாரெனில் தான் பிறத்தல், இறத்தல் இன்றி உலகைத் தோற்றியும் காத்தும் திருவருள் புரியும் ஈசன். 6

அந்நெறி கனவிற் காணும் அற்புதத் தெழுந்து வேதன்
செந்நெறி பூண்டு வைகிச் சிந்தையில் தேற்ற மெய்தி
உன்னலும் அறுவ ரைவர் உருத்திர கணத்தோர் தாதை
தன்னரு ளதனால் நெற்றித் தலத்தினும் போந்து நின்றார்.

அந்நெறியாகக் கனவில் கண்ட பிரமதேவர் அற்புதத்துடன் விழித்தெழுந்து செம்மையான்ற ஒழுக்க நெறிகள்கொண்டு அங்கு தனது மனதில் தேறுதல் அடைந்து ஈசன் அருளினை நினைத்தலும் அந்நேரம் பதினொரு உருத்திர மூர்த்திகள் சிவபிரான் நல்லருளினால் பிரமதேவர் நெற்றியில் நின்றும் தோன்றி அவர்முன்பு நின்றார்கள். 7

நிற்றலும் அவரை நோக்கி நெற்றியந் தலத்தில் நீவிர்
உற்றதை எவன்கொ லென்ன உன்செயல் முடியுமாற்றால்
மற்றெமை விடுத்தான் நம்பன் ஆதலின் வந்தே மென்றார்
பற்றலர் புரமூன் றட்ட பண்ணவன் வடிவங் கொண்டோர்.

பிரமதேவர் முன்பாக பதினொரு உருத்திரமூர்த்திகளும் தோன்றி நிற்றலும் அவரை நோக்கி எனது நெற்றித்தலத்தின் இடமாக நீங்கள் வந்த காரணம் யாதோ எனலும் அவர்கள் சொல்வார், பிரமனே உனது படைக்கும் செயல் கைகூடும்படியாக சிவபிரான் எம்மை விடுத்தார் ஆதலின் வந்தோம் என்றார்கள், யாரெனின் தம் மீது பற்றிலாத அசுரரின் முப்புரங்களையும் எரித்தருளிய சிவபிரான் வடிவங்கொண்ட உருத்திர மூர்த்திகள். 8

பரமன துருவாய் நின்றோர் பதினொரு வோரும் இவ்வா
றருள்செய விரிஞ்சன் கேளா அன்பினால் என்பால் வந்தீர்
விரைவுடன் உயிர்கள் தம்மை விதிக்குதிர் என்னத் தத்தம்
உருவுபோற் பதினோர் கோடி உருத்திரர் தொகையைத் தந்தார்.

சிவபிரான் உருவமாய் நின்றோரான பதினொரு உருத்திர மூர்த்திகளும் இவ்வாறு பிரமதேவர்க்குக் கூறியருள அதனை பிரமதேவர் கேட்டு அன்பினால் என்பால்

வந்துளீரான நீங்கள் விரைவுடன் உயிர்கள் தம்மைப் படைப்பீராக எனலும், அப் போது அவர்கள் தங்கள் தங்கள் வடிவம்போல பதினெரு கோடி உருத்திரரைப் படைத்தார்கள். 9

ஆங்கது தெரிந்து வேதா ஆவிகள் வினைக்கீ டன்றி
நீங்களிவ் வாறு செய்கை நெறியதன் றென்ன லோடும்
ஓங்கிய உருத்தி ரேசர் ஒல்லையெம் பதத்திற் போதும்
ஈங்கிவண் உயிரை முன்போல் ஈந்தனை இருத்தி யென்றார்.

அதனை பிரமதேவர் தெரிந்து அவர்களை நோக்கி உயிர்கள் வினைகளை அனு பவிக்கும் பொருட்டல்லாமல் இவ்வாறு உங்கள் வடிவம்போல் படைத்தல் நெறி ஆகாது என்ன அதுவேளை ஓங்கிய உருத்திரமூர்த்திகள் யாரும் பிரமனே ! அப்படி யாயின் நாம் இப்பொழுதே எமது பதங்களில் சொல்வோம். நீ முன்போல உயிர் களைப் படைத்துக் கொண்டிருப்பாயாக என்றார்கள். 10

என்றிவை உரைத்துப் போதன் யாவையும் படைப்பான் நல்கி
ஒன்றிய உணர்வின் மிக்க உருத்திரர் யாரும் வெள்ளிக்
குன்றுடை முதல்வன் தொன்னாட் கொடுத்திடும் புவனம் புக்கார்
அன்றுதாம் அளித்து ளோரை அமரரோ டிருத்தி ரென்றார்.

என்று இவைகளைக் கூறி பிரமதேவனே எல்லாவற்றையும் படைக்கும்படி அருள்கொடுத்துவிட்டு ஒருமைப்பாடுடன் கூடிய உணர்வில் மிகுந்த உருத்திரமூர்த் திகள் யாரும் வெள்ளிமயமான கைலை மலையை உடைய முதல்வனை சிவபிரான் முன்னாள் தங்கட்குக் கொடுத்திட்ட புவன உலகில் புகுந்தார்கள். புகுமுன் அன்று தாம் படைத்த பதினெரு கோடி உருத்திர மூர்த்திகளை நோக்கி நீங்கள் தேவர்களு டன் இருப்பீராக எனக்கூறிவிட்டுச் சென்றனர். 11

அவனியை அளித்தோன் தன்பால் அடைந்துளார் அண்டந் தன்னில்
புவனமே லிருந்தார் அன்னார் புரிந்திடத் தொன்னாள் வந்த
பவர்முதல் உருத்தி ரேசர் பதினெரு கோடி யுள்ளார்
இவர்சிவ னருளால் வானோர் இனத்துடன் ஈண்டி யுற்றார்.

பூமியைப் படைதிதுள்ள பிரமதேவன் தன்பால் அடைந்துள்ள பதினெரு உருத்திரமூர்த்திகளும் அண்டங்கள் மேலாக உள்ள தங்கள் உருத்திர புவனம்புகுந்து இருந்தனர். அவர்கள் முன்னாள் படைத்திடவந்தவரானவர் என்பவர் முதலாக உள்ள பதினெரு கோடி உருத்திரமூர்த்திகளுமாகிய இவர்கள் சிவபிரான் அருளினல் தேவர் கூட்டத்துடன் பொருந்தி இருந்தார்கள். 12

உருத்திரர் கேள்விப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 962

# 15. நகர்செய் படலம்

என அரி புகலக் கேளா இன்னதோ நிகழ்ச்சி யென்றான்
அனையதற் பின்னர் ஆண்டை அமரகம் மியனை நோக்கி
வனை கழற் சூர பன்மன் மற்றியாம் உறைதற் கொத்த
புனைதிரு நகரம் வல்லே புரிமதி புலவ வென்றான்.

என விஷ்ணு பெருமான் சொல்லுதலோடும் இதுவா இவர்களது நிகழ்ச்சி என்றான் சூரபன்மன், பின்னர் தேவதச்சனை நோக்கி வீரக்கழலை அணிந்த சூர பன்மன் யான் தங்கி வாழ்வதற்கொத்த சிறப்புக்களுடன் கூடி உருவாக்கப்பெற்ற ஓர் நகரத்தை விரைவில் உண்டாக்குவாயாக அறிவில் சிறந்தவனே என்றான். 1

என்றலுங் கடவுள் தச்சன் இறைஞ்சியே நுமக்குச் செய்யும்
வென்றிகொள் மூதூ ருக்கு வியலிடம் உரைத்தி யென்ன
நன்றெனப் புகரோன் தானே நகர்களுக் கெல்லை கூற
அன்றவை வினவித் தென்பால் அளக்கரை அடைந்தான் அன்றே.

என்று சொல்லலும் தேவர்தச்சன் சூரனை வணங்கி அரசே! உமக்குச் செய்கின்ற முதிய நகரத்திற்கு பெருமையான இடம் எங்கிருக்கிறது சொல்வீராக என அதுவேளை சுக்கிரன் நன்று நானே நகரத்திற்கு இடத்தின் எல்லை கூறுகிறேன் என்று தான் நகரங்களுக்கு எல்லையைக் கூற அன்று அவற்றையெல்லாம் தேவ தச்சன் கேட்டறிந்து பூமியின் தென்பாலுள்ள சமுத்திரத்தை சென்றடைந்தான். 2

ஆசறு கடலி னூடே அயுதமோர் எட்டா யுள்ள
யோசனை எல்லை முன்னோன் உறுநக ராகக் கோலிக்
காசினி வரைகள் தம்மால் கதுமெனத் தூர்த்து மிக்க
பாசறை கொண்டே ஒப்ப அணித்தலம் படுத்துப் பின்றை.

குறை நீங்கிய தென் கடலூடே எண்பதினாயிரம் யோசனைப் பரப்பு உள்ளிட்ட எல்லையை சூரபன்மன் நகரமாக அடிகோலி பூமியில் உள்ள மலைகளைக் கொண்டு விரைவாக அவ்விடத்து நீரை மூடி அடைத்து அதிலே அடித்தளமான பாசறை உண்டாக்கி ஒப்பனையாகும்படி அடித்தளத்தை செப்பமாகச் செய்து; 3

காயுறு கதிர்கள் காஞ்சிக் கம்பைமா நீழல் வைகும்
நாயகி நகர மென்ன நாடொறுஞ் சூழு மாற்றால்
சேயுயர் விசும்பிற் போகச் செம்பொனால் மதிலைச் செய்து
வாயில்கள் நான்க மைத்து ஞாயிலும் வகுத்து நல்கி.

காய்கின்ற வெப்பக் கிரணங்களை உடைய சூரியர்கள் கம்பையாற்றின் கரையில் பொருந்திய மாமர நீழலில் வீற்றிருக்கும் காமாட்சி அம்மையாரது நகரம் சூழ்ந்து செல்வதுபோல, நாடோறும் தான் சூரபன்மனுக்குச் செய்யும் நகரத்தையும் சூழ்ந்து செல்லும்படி, மிக உயர்ந்த வானமேல் ஓங்கியெழ செம்பொன்னால் மதிலைச் செய்து உட்புற மதில்களையும் வகுத்து உண்டாக்கினான். 4

நாற்பெரு வாயி லூடு மேருவே நண்ணிற் றென்ன
மாற்பெருங் கோபு ரங்கள் மணிவெயில் எறிப்ப நல்கி
நூற்படும் ஒழுக்கம் நாடி நூறியோ சனையொன் றுகப்
பாற்படு மாட வீதி பற்பல அமைத்து மன்னோ

நான்கு பெருவாயில்கள் ஊடாக அந்த இடங்களில் மேருமலை தான் வந்திருந்தது எனும்படி பெரிய கோபுரங்களை அதில் பதித்துள்ள இரத்தினங்கள் ஒளி விடும்படி உண்டாக்கி, சிற்பநூலிலே சொல்லப்பெற்ற விதிகளின் நுணுக்கங்களை நாடியறிந்து நூறுயோசனை அளவாக ஒவ்வொன்றும் பொருந்தும்படியான வீதிகள் பலவற்றை அமைத்து. 5

முப்புரம் ஒருங்குற் றென்ன மும்மதில் அவற்றுள் நல்கி
ஒப்பருந் திருவின் வீதி உலப்பில புரிந்து சோமன்
வைப்பெனச் செம்பொன் மாடம் வரம்பில வகுத்து மாதர்
மெய்ப்படும் ஆடல் கூரும் வியலிடம் பலவுஞ் செய்து

முப்புரங்கள் ஒருங்கே அங்கு சேர்ந்துள்ளது எனும்படி மூன்று மதில்களை அவற்றினுள் உண்டாக்கி ஒப்பனை காணமுடியாத திருவுடைய வீதிகள் அளவு காண்பரியதாயவற்றை உண்டாக்கி சந்திரகாந்த வைப்பு மாடங்கள் எனும்படியான அளவிறந்த பொன்னினாகிய மாடங்களை வகுத்துச் செய்து பெண்களது உண்மை நிறைந்த நடனங்கள் புரிதற்கான மேலோங்கிய நாட்டிய அரங்குகள் பலவற்றையும் புரிந்து. 6

மாளிகை தோறுந் தெற்றி மண்டபம் அணிசேர் முன்றில்
கோளரி தயங்கு பொற்பிற் கோபுரங் குன்றம் அம்பொற்
சூளிகை அரங்க மன்றஞ் சுடருமேற் றலங்கள் தூய
சாளரஞ் சோலை வாவி தனித்தனி யாகத் தந்து.

அவ்வீதிகளில் அமைக்கப்பெற்ற மாளிகைகள் தோறும் திண்ணைகளையும் மண்டபங்களையும், இரத்தினம் பதித்த முற்றங்களையும், சிங்கம் போலும் வடிவாய் விளங்குகின்ற தகுதியை உடைய கோபுரங்களையும், செய் குன்றுகளையும், அழகு பொருந்தும் பொன்னாலான சூளிகைகளையும் சபைகளையும், மன்றங்களையும், ஒளி விளங்குகின்ற மேல்தலங்களுடைய மாளிகைகளையும், தூய்மையான சாளர வாயில்களையும், சோலைகளையும், குளங்களையும் தனித்தனியாகச் செய்து. 7

ஆயதன் நடுவுற அயுத வெல்லையில், பாயதோர் நெடுமதில் பயில நல்கியே
மாயவள் திருமகன் வைக ஆங்கொரு, கோயிலை எழில்பெறக் குயிற்றி னானரோ.

இதன் நகரின் நடுவிற் பதினாயிரம் யோசனை எல்லையில் பரந்த நெடிய ஓர் மதிலைப் பொருந்தும்படி செய்து அதனுளே மாயவனின் திருக்குமாரனான சூரன் வாழ்ந்திருக்க அங்கு ஓர் அரண்மனையை எழில்பெற செய்தமைத்தான். 8

வாரணம் விரவுதேர் மக்கள் போந்திடுந், தோரண வாயில்கள் தொடர்ந்த தெற்றிகள்
சீரணி தப்னியச் சிகர கோபுரங், காரணி மணிவரை கவின்கொள் சூளிகை.

யானைகளும், நெருங்கிவரும் தேர்களும் அசுரர்களும் பவனி போவதற்கமைந்த தோரண முகப்புடைய வாயில்களும், தொடர்ச்சியான திண்ணைகளும், சீருடன் அழகுற விளங்கும் பொன்னாலான சிகரங்களையுடைய கோபுரங்களும், மேகங்கள் தங்கும்படியான செய் குன்றுகளும் அழகுற விளங்கிய சூளிகைகளும். 9

ஆனைகள் பயிலிடம் அயங்கள் சேரிடம், சேனைகள் உறைவிடம் தேர்கள் வைகிடம்
தானவர் தலைவர்கள் சாருந் தொல்லிடம், ஏனைய அரக்கர்கள் இனிது சேரிடம்

யானைகள் தங்குதற்குரிய இடங்களும், குதிரைகள் தங்கும் லாயங்களும், சேனைகள் உறைதற்குரிய இடங்களும், தேர்கள் தங்குமிடங்களும், அசுரர்களின் சேனைத் தலைவரும், மற்றுள் தலைவரும், சபைகூடும் இடங்களும், ஏனைய இராட்தர்கள் இனிதுடன் சேர்வதற்குரிய இடங்களும் 10

நாடரும் விசும்புறை நாரி யாரெலாம், ஆடலை இயற்றிடும் அரங்க மண்டபம்
பாடலின் முறைபயில் பைம்பொன் மண்டபம், மாடக யாழ்முரல் வயிர மண்டபம்

நாடிக் காண்டற்கரிய சொர்க்கவுலகில் உறையும் பெண்கள் யாரும் ஆடலைச்செய்கின்ற நாட்டிய அரங்கமண்டபம், வாய்ப் பாடல்களை முறையாக இசையுடன் பயில்கின்ற பசிய பொன்னினாலாய மண்டபங்களும், முறுக்காணியுடன் கூடிய யாழை இசைபடுத்தி மகிழ்விக்கின்ற வைர இரத்தினத்தினாலாக்கப்பெற்ற மண்டபங்களும். 11

மயில்புற வோதிமம் வன்ன மென்கிளி, குயில்முத லாகிய குலவு மண்டபம்
இயலுறு யூகமா ரிரலை செச்சைகள், பயிலுறு வாரணம் பரவும் மண்டபம்

மயில், புறு, அன்னம், அழகிய மெல்லிய கிளிகள், குயில் முதலிய பறவைகள் உலாவுகின்ற மண்டபங்களும்; இயல்பாக சிறந்த குரங்குகள், மான்கள், கலைமான்கள், ஆட்டுக் கடாக்கள், போர் முதலிய பயிற்றப்பட்ட கோழிகள் நிறைந்திருக்கின்ற மண்டபங்களும். 12

சந்ததம் மறையொலி தழங்கு மண்டபம், முந்திய வேள்விகள் முயலும் மண்டபம்
மந்திர வியல்பினோர் மருவு மண்டபம், இந்திரன் முதலினோர் இருக்கும் மண்டபம்

நித்தியமும் வேதவொலிகள் கேட்கப்படும் மண்டபங்கள், முந்திச் செய்த யாகங்கள் முயல்கின்ற மண்டபங்களும், மந்திரங்களைப் பயில்வோர் பொருந்தும் மண்டபங்களும், இந்திரன் முதலினோரிருக்கும் மண்டபங்களும். 13

திருமிகு நிருதர்கோன் தேவர் போற்றிட, அரசியல் புரியுமத் தாணி மண்டபம்
இருநிதி உளவெலாம் ஈண்டும் மண்டபம், பரனருள் படைக்கலம் பயிலும் மண்டபம்

திரு மிகுந்த அசுரர் தலைவனான சூரபன்மன் தேவர்கள் போற்றி செய்திட அரசியல் செய்கின்ற அத்தாணி மண்டபமும், சங்கநிதி பதுமநியானவற்றின் பெருக்குங்களெலாம் பொருந்துகின்ற மண்டபங்களும், சிவபிரான் அருள்புரிந்த படைக்கலங்கள் வைத்தற்கேற்ற மண்டபங்களும். 14

அருந்துறும் அமிர்துறழ் அடிசில் மண்டபம், நரந்தையே பாளிதம் நறைகொள் சாந்தகில்
பெருந்துவர்க் காயடை பிறவுஞ் சாலவும், இருந்திடு கின்றபேர் எழில்கொள் மண்டபம்

தேவர்கள் உண்கின்ற கிடைத்தற்கரிய அமிர்தத்தை ஒத்த அன்னத்தை உண்ணும் மண்டபங்களும், கஸ்தூரியும் பச்சைக் கற்பூரமும் மணம்கொண்ட சந்தனம், அகில் பெரிய பாக்குகள் வெற்றிலை பிறவும் மிகுதியாய் இருக்கின்ற பேரெழிலுடைய மண்டபங்களும் 15

மானனை யார்பலர் மருவு மண்டபம், ஆனதோர் ஊசலாட் டயரும் மண்டபம்
பானிலா உமிழ்தரு பளிங்கின் மண்டபம், வானுயர் சந்திர காந்த மண்டபம்

மான் போலும் அழகிய பெண்கள் பலர்கூடித் தங்கும் மண்டபங்களும், அவர்கள் விரும்பி ஊஞ்சலாடும் ஊஞ்சலுள்ள மண்டபங்களும், பால்போலும் வெண்

ணிற நிலவு கால்கின்ற பளிங்கு மண்டபங்களும், வானில் உயர்ந்து நீண்ட சந்திர காந்த மண்டபங்களும். 16

மாமணி யொளிர் தரு வசந்த மண்டபம், காமரு பவளமார் கவின்கொள் மண்டபம்
ஏமரு மரகதத் தியன்ற மண்டபம், தாமரை உயிர்த்திடு தரள மண்டபம்

பெரிய ஒளி வீசும் இரத்தினங்கள் பிரகாசிக்கின்ற வசந்த மண்டபங்கள் அழகிய பவளங்கள் விளங்கும் சித்திரம் நிறைந்த மண்டபங்கள், சிறந்த மரகதத் திறற் செய்யப்பட்ட மண்டபங்களும், தாமரைப் பூவில் தோன்றும் முத்துக்களாலாயின மண்டபங்களும். 17

கோவியல் மரபினோர் கொள்கைக் கேற்றன, யாவையும் நல்கியே இதனுக் குள்ளுற
மாவுறு சூரபன் மாவுந் தன்குலத், தேவியும் உறையவோர் உறையுள் செய்தரோ.

இவ்வாறாக அரச இயல்பினை உடையார்க்கு ஏற்றனவாகிய யாவையும் தேவ தச்சன் அமைத்து இதனுக்கு உள்ளுற இலட்சுமீகரம் பொருந்திய சூரபன்மனும் அவன் குலத்தேவியான பட்டத்தரசியும் உறைதற்கு ஏற்ப சிறந்துள்ள ஓர் அரண் மனையையும் செய்தான். 18

இங்கிது சூழ்தர எண்ணி லாதன, மங்கல நிறைதரு மாட வீதிகள்
அங்கவன் துணைவிய ராகி வந்திடும், நங்கையர் மேவர நலத்தின் நல்கியே.

இங்கு இவைகளைச் சூழ்தர எண்ணிலாதனவான மங்கலம் நிறைந்திருக்கும் மாடங்களையுடைய வீதிகள் பலவற்றை அவ்விடத்து சூரபன்மனுக்கு காமக் கிழத்தியர் என்னும் மனைவியராய் வரப்போகின்ற அப்பெண்கள் தங்கிவாழ நலத்துடனாகச் செய்து முடித்தான் தேவதச்சன். 19

காவியுங் குமுதமுங் கமல மூஞ்செறி, வாவிக ளோடைகள் பொய்கை வான்றொடு
பூவியல் தண்டலை பொலன்செய் குன்றுடன், யாவையும் முறைபட இயற்றி னானரோ.

இப்பால் கருங்குவளை மலரும், குமுதமலரும், தாமரைப் பூவும் செறிந்து விளங்கும் வாவிகளும், நீரோடைகளும், குளங்களும், வானத்தைத் தொடும்படி நீண்டு வளர்ந்துள்ள பூக்கள் நிரம்பிய சோலைகளும், அழகுடைய செய்குன்றுகளுடன் இன்னும் வேண்டிய யாவற்றையும் முறைப்படச்செய்து முடித்தான் தேவதச்சன். 20

அள்ளலந் திரைக்கடல் அகழி யாகவே, யுள்ளுறு நகரிடை உறையும் கோயிலில்
தள்ளரும் பொன்சுடர் தழைத்த பொற்பினால், வெள்ளிய தானது மேலைப் பொன்னகர்

சேறுடைய திரைக் கடலையே புறத்தில் சூழ்ந்த அகழிக்கிடங்காக இயல்புடன் பொருந்த உள்ளாக அமைக்கப்பட்ட நகரத்திடத்து உறைகின்ற அரண்மனையின் நீக்கற்கரிய பொன்னொளியானது தழைத்து விளங்குகின்ற தன்மையால் இதைக் கண்ணுற்ற முன்பே பொன்னொளியுடன் விளங்கிய மேலுள்ள தேவ உலகம் நாணமடைந்து வெட்கி ஒளிகேட்டு வெண்ணிறமாயது. 21

இன்னவையும் ஏனவையும் எண்ணிமனத் தால்அருளித்
தன்னிகரில் அவுணர்பிரான் சயத்தோடு பெருந்தலைமை
மன்னவரு தலின்வீர மகேந்திரமே யாமென்றே
அந்நகருக் கோர்நாமம் அணிபெறுத்தி அளித்தனனே.

தேவதச்சன் இன்னவை யாவையும் ஏனைய பொருள்களையும் மனத்தினால் எண்ணி படைத்து உண்டாக்கியபின் தனக்கு வேறொருவர் நிகரில்லாத அசுரர் பெருமான் சூரன் வெற்றியுடனும் பெருந் தலைமையுடனும் பொருந்தி வாழும்படி

நகரம் அமைந்து வந்துள்ளதால் இதற்கு வீரமகேந்திரம் என்று அந்த நகருக்கு ஓர் நாமம் வடிவாகப் பொருந்தச் சூட்டினுன் தேவதச்சன். 22

**ஏமபுரம் இமையபுரம் இலங்கைபுரம் நீலபுரம்**
**சோமபுர மெனப்புகலுஞ் சுவேதபுரம் அவுணர்புரம்**
**வாமபுரம் பதுமபுரம் மகேந்திரமா புரமென்னும்**
**காமர்புரத் தெண்டிசைக்குங் காட்சிபெற உதவினனுல்**

இதன்பின் இந்த மகேந்திரபுரம் என்னும் அழகுடைய நகரத்தின் எட்டுத் திக்கிலும் சோபிக்கின்ற காட்சியுடன் காவல்கோட்டை நகரமாக விளங்கும்படி தனித்தனியே ஏமபுரம், இமையபுரம், இலங்கைபுரம், நீலபுரம் குபேரனது அழகாபுரி எனச் சொல்லத்தகுந்த வளம் நிறைந்த சுவேதபுரம், அவுணர்புரம், வாமபுரம், பதுமபுரம் என்னும் எட்டு நகரங்களை மேற்கிருந்து கடலூடே முறையே அமையும்படி செய்து முடித்தான் 23

**மாண்டகுசீர் கெழுவீர மகேந்திரமிவ் வாறுதவி**
**ஆண்டதுபோல் அகன்பரப்பில் ஆசுரம்என் ஞெருநகரம்**
**நீண்டவட கடல்நடுவண் நிருதர்புகழ்ந் திடுமாற்றல்**
**காண்டகைய சீயமுகக் காவலற்கு நல்கினனே.**

மாட்சிமை நிறைந்த சீருடைய வீரமகேந்திர புரத்தை இவ்வாறு உண்டாக்கி அதுபோல் அகன்ற பரப்புடையதாய் அமைய ஆசுரம் என்று ஒரு நகரத்தை அசுரர் பார்த்து புகழும் தன்மையாக வீரக்காட்சி மிகுந்துள்ள சிங்கமுகாசூரன் வீற்றிருக்க வேண்டி நெடிய வட கடலின் நடுவண் படைத்தான். 24

**மற்றுளவெம் புணரிதொறும் வயினயின்சேர் தீவுதொறுங்**
**கொற்றமிகுஞ் சூரபன்மன் குலவுபெருந் தானையெலாஞ்**
**சுற்றமுடன் மேவுதற்குத் தொன்னகரம் பலவமைத்துக்**
**கற்றுணருஞ் சிறுவரொடுங் கம்மியன்மீண் டேகினனே**

மற்றுள்ள கொடுமை நிறைந்த சமுத்திரங்கள் தோறும் வேறு வேறுடன் விளங்கும் தீவுகள் தோறும் கொற்றமுடைய சூரபன்மன் உடனுக விளங்குகின்ற பெருஞ் சேனையெல்லாம் தங்கள் தங்கள் சுற்றத்தாரோடும் இருப்பதற்காக வேண்டி பழைய நகரங்களையும் படைத்து அமைத்து தேவதச்சன் தன்னிடத்தாகச் சிற்பக் கலைகளைகற்று உணர்கின்ற தனது புதல்வர்களோடும் அங்கிருந்து மீண்டு சென்ருன். 25

நீடு மேரு நெடுவரைத் தென்புடை, நாடு சீர்கெழு நாவலந் தீவினில்
கூடு கின்றபொற் கூடந் தனக்கொரு, மாடு போந்தனன் மாமயன் தாதையே.

மீண்ட அவன் நீண்ட மகாமேருவின் தென்பக்கராக யாவரும் விரும்பி நாடுகின்ற சிறப்பு பொருந்திய நாவலந்தீவினில் பொருந்தியிருக்கின்ற இமயமலைக்கு ஒரு பக்கத்தில் வந்து சேர்ந்தான் பெரியமயனுடைய தந்தையான தேவதச்சன். 26

பகரு கின்ற அப் பாற்படும் எல்லையில், தகுவர் போற்றிடுந் தாரகற் காகவே
மகிழ்வின் நீரொடு மாயா புரமெனு, நகர மொன்றை அணிபெற நல்கினுன்.

சிறந்து பேசப்படுகின்ற அந்த நிலத்தில் அசுரர் போற்றி வணங்கும் தாரகாசூரனுக்காக வேண்டி உள்ளத்தே பெருகியெழும் மகிழ்ச்சியுடன் தேவதச்சன் மாயாபுரம் எனப்படும் நகரமொன்றை அழகுற படைத்து அமைத்தான், 27

வினையர் தம்மொடு விச்சுவ கன்மனும். இனைய வூர்கள் இயற்றியம் மாயையின்
தனய னுக்கிவை சாற்றலும் நன்றெனு, அனிக மோடங் கடைந்தனன் என்பவே.

தனது ஏவலாளர் தங்களுடன் விச்சுவகன்மன் எனப் பேர்கொண்ட தேவ தச்சனும் இனைய ஊர்களை இயற்றி அந்த மாயவளின் மகனை சூரனுக்கு இவைகள் ஆக்கியமை பற்றிச் சென்று சொல்லலும் நன்றென்று தனது சேனையுடன் அங்கு வீரமகேந்திரபுரத்தை அடைந்தான் சூரன் என்ப. 28

நகர்செய் படலம் முற்றிற்று.

**ஆகத் திருவித்தம் 950**

## 16. பட்டாபிஷேகப் படலம்

மற்றவ் வீர மகேந்திரம் நண்ணியே, உற்று நாடியவ் வும்பர்தங் கம்மியன்
கற்ற விஞ்சை வியந்து களிப்புறீஇக், கொற்ற நீடுதன் கோயிலை நண்ணினன்.

இவ்வாறு சிறப்புற அமைந்த வீரமகேந்திரபுரத்தைச் சேர்ந்த சூரபன்மன் நகர முழுமையும் உற்று நாடிப்பார்த்து தேவதச்சன் கற்றுள்ள வித்தைகளின் திறமையை வியந்து களிப்புற்றுக் கொற்றம் மிகுந்த அரண்மனையை அடைந்தான். 1

நண்ணு கின்றுழி நான்முக னுதியாம், விண்ணு ளோர்கள் வியன்முடி சூட்டுதும்
அண்ண லுக்கென் றவற்றிற்கு வேண்டிய, எண்ணில் பல்பொருள் யாவுமுய்த் தாரரோ.

அரண்மனையை நண்ணிய நேரத்தில் பிரமதேவர் ஆதியான வானஉலகுள்ள தேவர்கள் யாவரும் அண்ணலான சூரபன்மனுக்கு பெருமையான முடியை சூட்டுவோமென அவற்றிற்கு வேண்டிய எண்ணற்ற பொருள்களையும் கொண்டுவந்து சேர்த்தார்கள். 2

கோவில் நண்ணிய கொற்றவன் மற்றெரு, தாவில் பீடிகை தன்மிசை வைகியே
மாவு லாவிய மால்கடல் தெண்புனல், தேவர் ஆட்டச் சிறப்புடன் ஆடினன்.

அரண்மனை சென்ற சூரபன்மன் வேறொரு குறைவிலாத ஆசன பீடத்தின் மேல் வீற்றிருப்ப, மகாலட்சுமி உலாவரும் பெரிய பாற்கடல் இடத்தாகப் பெறுகின்ற தெளிந்த நீரை தேவர் எடுத்துவந்து நீராட்டச் சிறப்புடன் ஆடினன். 3

ஆடி யம்பொனின் ஆடையு டீஇமலர், சூடி ஒண்கலன் தூயன பூண்டுபின்
பீடு சேர்தரு பின்னவர் பால்வர, நீடு காதல் நிருதர் புகழ்வே.

நீராடியபின் சூரபன்மன் அழகிய பொன்னிலான ஆடை உடுத்து பூமாலை சூடி அழகிய ஆபரணங்கள் தூயதானவற்றை அணிந்து பின்னர் பெருமைபொருந்திய தம்பிமார் பக்கராகவர, சூரன்மேல் பெரும் காதலுடைய அசுரர் புகழவும். 4

நிகரி லாத நிருதர்க் கிறைதொழப் புகரு மாமுனி வோரும் புகழ்ந்திட
மிகந டுங்கிய விண்ணவர் போற்றிட, மகப திக்கு மனந்தளர் வெய்தவே.

நிகரில்லாத வலிமையுடைய அசுரர்க்கிறையான அசுரேந்திரன் தொழவும், சுக்கிர பகவானும் பெரியமுனிவர்களும் புகழ்ந்திடவும் அசுரர்க்குப் பயந்து மிகவும் நடுங்கிய தேவர்கள் போற்றிட இந்திரனுக்கு சூரனின் பெருநிலைகண்டு மனம்தளர்வடையவும். 5

வந்து சீய மணித்தவி சேறினன், அந்த வெல்லையில் அச்சுதற் காமெனும்
இந்தி ரத்திரு மாமுடி ஏந்தியே, சுந்த ரத்தொடு நான்முகன் சூட்டினன்.

இவ்வாறுன சிறப்புக்கள் மரியாதைகளுடன் வந்து இரத்தின சிம்மாசனத்து சூரபன்மன் ஏறினன். அந்த எல்லையில் விஷ்ணு மூர்த்திக்கே இது உகந்தது எனும்

படியான செய்யும் தொழில் அனைத்தும் நிறைந்து சிறந்ததோர் முடியை நான்முகக் கடவுளான பிரமதேவர் பெருமையோடு சூரபன்மனுக்கு சூட்டினர். 6

கண்டு தானவர் காசிபன் காதலன், புண்ட ரீகப் பொலன்கழல் தாழ்ந்தெழா
அண்டோ ணுமகிழ் வால்அடுந் தேறலை. உண்டு ளாரின் உளங்களிப் பெய்தினர்.

இந்த நிலையைக் கண்ட அசுரர் எல்லாம் காசிப முனிவன் மைந்தனை சூர பன்மனின் தாமரைப் பூவையொத்த பொற்சிலம்பு பூண்ட காலில் தாழ்ந்து எழுந்து தாங்கற்கரிய பெருமகிழ்வால் காய்ச்சப்பெற்ற கள்ளை உண்டார்களைப் போல உள்ளங் களிப்பானர்கள். 7

அன்ன வேலை அமரர் முனிவர்கள், பொன்ன வாநறும் போது கரங்கொடே
மன்னர் மன்னன் மணிமுடி யின்மிசை, முன்னி வாழ்த்தி முறைமுறை வீசினர்.

அவ்வேளையில் தேவர்களும் முனிவர்களும் பொன்னில் பொலியும் வாசனை நிரம்பிய பூக்களைக் கைகளில் ஏந்தியே அரசர்க்கரசனை சூரபன்மனின் இரத்தினக் கிரீடத்தின் மேலாக நன்றுவாழ நினைந்து வாழ்த்தி முறைமுறை வீசினர்கள். 8

பாங்குறு தவிசின் பாலில் துணைவர்பங் கயன்மால் தம்மை
ஈங்கினி திருத்திர் என்ன இருந்தனர் ஏவ லாலே
ஓங்கிய மகவான் கொண்டான் களாசிஒண் ணிதியின் கோமான்
தாங்கினன் அடைப்பை மற்றச் சமீரணர் கவரி கொண்டார்.

பக்கராக உள்ள சிம்மாசனங்கள் பாலாக, தனது தம்பிமாரையும், பிரம தேவர், திருமால் தங்களை இதன்மேல் இருப்பீராக என்று சூரபன்மன் சொல்ல அவர்கள் அவன் ஏவல்படி இருந்தனர். அப்பொழுது மேலோங்கிய இந்திரதேவன் காளஞ்சியை கைக்கொண்டான். சிறந்த சங்கநிதி பதுமநிதிக்கு அரசனை குபேரன் வெற்றிலை முதலாய பொருள் வைத்திருக்கும் அடைப்பையை ஏந்தி நின்றான். அளங்குள் வாயுக்கள் வெண்சாமரை வீசினர்கள். 9

நிருதர்தங் குரிசி லான நெடுந்தகை யுடைவாள் கொண்டான்
பரிதியும் மதியும் அங்கட் பனிக்குடை நிழற்றி நின்றார்
வருணனும் பகாரும் ஆல வட்டம்வீ சினர்யாழ் வல்ல
கருடர்கந் தருவர் சித்தர் கானமங் கிசையா நின்றார்.

அசுரர்க்குத் தலைவனை நீண்ட வடிவுடைய அசுரேந்திரன் உடை வாளை எடுத்து ஏந்தி கட்டியம்கொண்டான். சூரியனும், சந்திரனும் குளிர்ச்சியான நிழல் தரும் குடையைப் பிடித்து நின்றார். வருணதேவனும் அவனது பிள்ளைகளும் ஆல வட்டம் வீசினர்கள். யாழில் வல்லமைபூண்ட கருடர் கந்தருவர் சித்தர் ஆகிய கணங்கள் இனிய தேவகானத்தைப் பொழிந்தார்கள். 10

முத்தலை அயில்வே லேந்தி முறைநெறி ஆற்றுங் கூற்று
மெய்த்தழற் கடவுள் தானும் வேத்திர மேந்தி யாண்டும்
எத்திறத் தவரும் நீங்க எரிவிழித் திடியி னுர்த்துப்
பத்தியின் நிறுவிச் சூரன் பல்புகழ் பரவி நின்றார்.

மூன்று சுடரினைக் கொண்ட சூலப்படையை ஏந்தி உலகில் உயிர்கட்கு தண்டனைகளை முறைப்படி செய்யும் இயமதேவனும் உண்மை ஒளியுடைய அக்கினி தேவனும் தங்கள் கைகளில் பிரம்பொன்று ஏந்தி எந்தெந்த இடத்திலும் எத்திறத்தவ

ரும் நின்ற நிலை நீங்கி வரிசையாக நிற்பதற்கு நெருப்பைப்போல அவர்களை வெறித்துப் பார்த்து இடிபோல் சத்தமிட்டு ஒழுங்காக பந்திபந்தியாக அவர்களை நிறுத்தி சூரபன்மனின் பல புகழ்களையும் எடுத்துக் கூறி துதித்து நின்றார்கள். 11

குரைகழல் நிருதி என்போன் கோடிக மதனைக் கொண்டான்
இருமைசேர் குரவர் தாமும் எல்லைதீர் முனிவர் யாருந்
திரைகெழு கங்கைத் தூநீர் செம்பொனங் கலசஞ் சேர்த்துக்
துருவையின் மறையால் வாங்கித் துவலைதூர்த் தாசி சொற்றார்.

வீரக்கழல் அணிந்த நிருதிதேவன் என்போன் பூந்தட்டைக் கையிலேந்தி நின்றான். தேவ குருவான வியாழ பகவானும், அசுர குருவான சுக்கிர பகவானும் ஆகிய இரு குருமாரும் அளவுகடந்த முனிவர்களும் திரைகொண்ட கங்கையாற்றின் தூய நீரினைத் செம்பொன்னினாற் செய்த கலசத்தில் எடுத்துக்கொண்டு தர்ப்பையினால் வேத மந்திரங்களை ஓதியவாறு அந்நீரைத்தொட்டு சூரபன்மன்மேல் தெளித்து ஆசிகூறினார்கள். 12

அரம்பைமே னகையே மிக்க உருப்பசி யாதி யாகி
வரம்பறும் அமரர் மாதர் வரன்முறை விதியின் நாடி
நரம்பியல் சுருதி பாடல் இயத்தொடு படிந்து நண்ணித்
திரம்பியல் நடனம் மூன்றுஞ் செவ்விதிற் புரிய லுற்றார்.

அரம்பை, மேனகை, திலோத்தமை மிகுந்த அழகுடைய ஊர்வசி ஆதியான வரம்பு கடந்த தேவப்பெண்கள் வரன்முறையாக விதிப்பிரகாரம் நாடி, நரம்பினையுடைய யாழ் இசை, வாய்ப்பாட்டு, வாத்திய இசை இவற்றோடு வேறுபடாது ஒன்றிப் படிந்து பொருந்தி சிறப்புடன் விளங்கும் தேசிகம், வடுகு, சிங்களம் என்னும் மூவகை நடனத்தையும் புரியலுற்றார். 13

இத்திறம் அமரர் யாரும் ஏனையர் தாமும் ஈண்டித்
தத்தம துரிமை தன்னைத் தவாநெறி தலைக்கொண் டாற்ற
மைத்தகு சூர பன்மன் மடங்கலந் தவிசின் மீதே
மெய்த்திரு நிகழ மன்னிப் பின்னிவை விளம்ப லுற்றான்.

இத்திறமாக தேவர்கள் யாவரும் மற்றுமுள்ள அனைவரும் ஈண்டிச் சேர்ந்து தத்தமக்குரிய உரிமைப்பாட்டைச் தவறிலாத நன்னெறிகளுடன் மேலாகக் கொண்டு இயற்றியிட கருமை நிறமுடைய சூரபன்மன் சிங்கங்கள் சுமக்கும் சிம்மாசனத்தேறி உண்மை விளங்கும் சீரும் சிறப்பும் நிகழ அரசு வீற்றிருந்தபிற்பாடு இவற்றை அங்கு அரசகாரியமாகச் சொல்லலுற்றான். 14

பட்டாபிடேகப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 1,004

# அரசுசெய் படலம்

களித்திடு ஞிமிறும் வண்டுங் கலந்திட நறவம் பொங்கித்
துளித்திடு துழாய்மால் தன்னைச் சூரனும் அவுணன் பாரா
அளித்தவன் தன்மூ தாதை யாயினை அதனல் நின்னை
விளித்திடு மெல்லை தோறும் விரைந்திவண் மேவு கென்ருன்.

களிப்படைத்த ஆண்வண்டும் பெண்வண்டும் கலந்து உண்ணும்படி இனிமையான தேன் பொங்கித் துளிக்கின்ற துளசிமாலையணிந்த திருமுடியையுடைய நாராயணப் பெருமானை சூரன் என்னும் அசுரன் பார்த்து, நீ உலகைப் படைத்த பிரமதேவரின் தந்தை ஆயினுய். ஆனதன்மையின் இங்கு நீர் அழைக்கப்படும்போதெல்லாம் விரைவுடன் வரல்வேண்டும் என்ருன்.

எனது தந்தையின் தந்தைக்கும் தந்தையானமையின் ஏனையருக்கு இடப்போகும் பணிகளை உமக்கு இட விரும்பவில்லை. அழைக்கப்பட்டபோது வருவதே உமக்கு இடப்பட்ட மதிப்பிற்குரிய பணியாகும். ஏவல்கொள்வதிலும் மரியாதையாக ஏவல் கொள்கிறேன் என்னும் குறிப்புத் தோன்ற இவ்வண்ணம் சூரன் விஷ்ணுவுக்குக் கூறினுன். 1

செங்கம லத்தின் மேவுந் திசைமுகத் தொருவன் தன்னைத்
துங்கமோ டரசு செய்யுஞ் சூரனும் விரன் பாரா
இங்குநின் மைந்த ரோடும் என்னிடந் தன்னி லேகி
அங்கமைஐ வகையும் நாளும் அறைந்தனை போதி யென்ருன்.

செந்தாமரை மலர்மேலிருக்கும் திக்குகளுக்கொன்ருக நான்கு முகமுடைய பிரமதேவரை மேன்மையுடன் அரசுசெய்யும் சூரபன்மன் எனும் வீரன் பார்த்து இங்கு நீர் உமது மைந்தர்களுடன் என்னிடம் தினமும் வந்து எனக்கு நாள், நட்சத்திரம், திதி, யோகம், கரணம் என்னும் ஐந்து வகையான சுபாசுப முகூர்த்தம் உணர்வதற்குரிய உறுப்புக்களைக் கூறுவீராக என்ருன். படைத்தல் காத்தல் என்னும் செயல்களைச் செய்வோரையும் தனது பணி செய்யும்படி கட்டளையிட வல்லவன் ஆயினன் என்பது தோன்ற சூரனும் வீரன் எனக் கூறினர் ஆசிரியர். 2

அறத்தினை விடுத்த தீயோன் அருக்கனை நோக்கி நம்மூர்ப்
புறத்தினில் அரண மீதாய்ப் போகுதல் அரிது கீழ்மேல்
நிறுத்திய சிகரி யூடு நெறிக்கொடு புக்கு வான்போய்
எறித்தனை திரிதி நாளும் இளங்கதிர் நடாத்தி யென்ருன்.

தருமத்தைக் கைவிடுத்த தீயவஞன சூரன் சூரியதேவனை நோக்கி நீ நமது ஊரின் புறத்துள்ள மதில்மேலாகச் செல்லல் அரிது. ஆகையால் கிழக்கு மேற்கில் நிறுத்தப்பட்டிருக்கின்ற கோபுரங்களூடாக முறையே உட்புகுந்து வானம் சென்று எஞ்ஞான்றும் இளங் கிரணங்களைப் பரப்பியவாறு பிரகாசித்துத் திரிவாயாக என்ருன். 3

அறைகழற் சூர பன்மன் அவிர்மதி தன்னை நோக்கிப்
பிறையென வளரு மாறும் பின்முறை சுருங்கு மாறும்
மறைவொடு திரியு மாறும் மற்றினி விடுத்து நாளும்
நிறைவொடு கதிரோன் போல்இந் நீள்நகர் வருதி யென்ருன்.

வீரக்கழல் அணிந்த சூரபன்மன் அழகிய சந்திரனை நோக்கி இன்றுடனுக நீ பிறையென வளருமாறும் பின்னர் சுருங்கி வருமாறும் அதனுலே உலகில் சிலநாட்களில் மறைவாகத் திரியும் தன்மையுமான இவைகளை விடுத்து நாள்தோறும் நிறைவுடைய பூரணசந்திரனுகி சூரியதேவனைப்போல எமது நீண்ட நகரிடத்தாக வரல் வேண்டும் என்ருன். 4

பொங்கழல் முதல்வன் தன்னைப் புரவலன் விரைவின் நோக்கி
இங்குநம் மூதூர் உள்ளோர் யாவரே எனினும் உன்னின்
அங்கவர் தம்பா லெய்தி அவர்பணி யாவு மாற்றிச்
செங்கம லம்போல் யாவர் தீண்டினுங் குளிர்தி யென்றான்.

பொங்கியெழுகின்ற சுவாலைகளையுடைய அக்கினிக் கடவுளைச் சூரபன்மன் விரைவுடனைப் பார்த்து இந்த நகரில் இருப்போர் யாவர் என்றாலும் உன்னை நினைந்த போது நீ அவர்பாலாக அடைந்து அவர்கள் ஏவிய பணிகள் யாவற்றையும் செய்து செந்தாமரைப் பூப்போல யாவரென்றாலும் உன்னைத் தொட்டால் குளிரவேண்டும் சுடக்கூடாதென்றான். 5

சுடர்முடி யவுணர் செம்மல் தொல்பெருங் கூற்றை நோக்கிப்
படிமுழு துயிரை நாளும் படுப்பது போல நந்தங்
கடமத கரீயை மாவைக் கணிப்பிலா அவுணர் தம்மை
அடுவது கனவும் உன்னு தஞ்சியே திரிதி யென்றான்.

சுடர்கொண்ட முடியினையுடைய அசுரர் தலைவனான சூரன் மிக முதிய இயம தேவனை நோக்கி நீ பூமியிலுள்ள உயிர்களை நாளும் கொல்வதுபோன்று என்னுடைய மதயானையையோ குதிரையையோ அளவுபடுத்த முடியாத அசுரரையோ எவரை யேனும் கொலைபுரிவதைக் கனவிலும் எண்ணாது அவைகள் உன்னைக் கண்டு அஞ்சாது நீ அவைகளைக் கண்டு அஞ்சித் திரிவாயாக என்றான். 6

அண்டரும் உலவை யானை அவுணர்மாத் தலைவன் பாரா
எண்டரு நம்மூ தூரில் யாவரும் புனைந்து நீத்த
தண்டுளி நறவ மாலை தயங்குபூண் கலிங்கஞ் சாந்தம்
நுண்டுக ளாடு சுண்ணம் மாற்றுதி நொய்தின் என்றான்.

எவரும் அண்டமுடியாத மேன்மையும் வலிமையும் உடைய வாயுதேவனை அசுரர்களின் பெருந்தலைவன், சூரன் பார்த்து புகழ்மிகுந்த நமது முதிய ஊரில் யாவர்களும் அணிந்து நீக்கிவிட்ட தேன்துளிக்கும் பூமாலைகள் பிரகாசமுடைய ஆபரண நகைகள் பட்டாடைகள் சாந்துவகைகள் நுண்ணிய துகளாக வீசி விளையாடப்படும் பொற்சுண்ணப் பொடிகள் ஆகியவைகளை விரைவில் அகற்றி எல்லா இடங்களையும் தூய்மையாக வைத்திருப்பாயாக என்றான். 7

காவலன் வருணன் தன்னைக் கண்ணுறீஇ நம்மூ தூரில்
நாவிவெண் பளிதஞ் சாந்தம் நரந்தமோ டளாவித் தீம்பால்
ஆவியின் வெளிய நொய்ய அரும்பனி நீரிற் கூட்டித்
தூவுதி இடங்க டோறுங் காற்றது துடைக்க வென்றான்.

அசுரர்கள் அரசன் சூரபன்மன் வருணபகவானை நோக்கி நமது முதிய ஊரில் வாசனை புனுகு வெண்ணிற கற்பூரம் சந்தனம் கஸ்தூரி இவற்றைக் கூட்டி அரைத்து பசுப்பாலின் ஆவியிலும் மிக நொய்தாகிய பன்னீரில் சேர்த்துக் கரைத்து எல்லா இடங்களும் தூவித் தெளிக்கவேண்டும் காற்று அதன் ஈரத்தைத் துடைத்துக்கொண்டு உனது பின்தொடரட்டும் என்றான். 8

வாசவன் றன்னை நோக்கி மால்கெழு திருவின் மேலோன்
தேசுறு துறக்கம் வைகுந் தேவர்தங் குழுவி னோடும்
ஆசையங் கிழவ ரோடும் அருந்தவ ரோடும் போந்து
பேசிய பணிகள் ஆற்றித் திரிமதி பிழையேல் என்றான்.

யாவரும் இச்சைகொள்ளும்படியான செல்வத்தில் மேலான சூரபன்மன் இந்திர தேவனை நோக்கி நீ ஒளிபொருந்திய சொர்க்கலோகத்திருக்கின்ற தேவர் கூட்டத்துடனும் திக்குப் பாலகர்களுடனும் அரிய தவத்தைச் செய்கின்ற முனிவர்களுடனும் இங்கு வந்து இங்குள்ளாரால் உனக்கு இடப்பெறுகின்ற பணிவிடைகளைச் செய்து கொண்டு திரிவாயாக இதில் பிழைவிடக்கூடாதென்றான். 9

இந்நெறி சூர பன்மன் யாவர்க்கும் வீற்று வீற்றுத்
தன்னுறு பணியின் நிற்பான் சாற்றலும் அனையர் அஞ்சி
அன்னது செய்து மென்றே அனையவா றெழுக அன்னான்
மன்னினன் அரசில் பின்றை மணஞ்செய உன்னி னானல்.

இம்முறையாகச் சூரபன்மன் யாவர்க்கும் வேறு வேறாக தனக்குச் செய்யப்படும் பணிவிடைகளின் இலக்கினைச் சொல்லலும் அதுகேட்ட அவர்கள் எல்லாம் அஞ்சி அதனைச் செய்வோமென்று கூறி அவன் கட்டளைப்படியே தவறாது ஒழுகி அவனுக்கும் ஏனைய அசுரர்க்கும் தொண்டுகள் செய்துவர சூரன் அரசாண்டிருந்தான். பின்னர் அவன் திருமணம் செய்ய நினைந்துகொண்டான். 10

மதிமுகத் திருவே போல்வாள் வானவர் புனைவன் தந்த
பதுமகோ மளைஎன் றேதும் பாவையைப் புகரோன் நாடிச்
சதுர்முகன் முதலாந் தேவர் தானவர் பிறரும் போற்ற
விதிமுறை வதுவை செய்து விழைவொடு மேவி யுற்றான்.

சந்திரனையொத்த அழகிய முகமுடைய மகாலெட்சுமியைப்போலும் தன்மை வாய்ந்தவளும் தேவதச்சன் மகளாயவளுமான பதுமகோமளை என்று புகழ்ந்து சொல்லப்பெறும் பெண்ணையே சூரபன்மனுக்கு பொருத்தமான மனைவியாவாள் என குருவாகிய சுக்கிரன் நாடி ஆராய்ந்து சொல்ல அதன்பிரகாரம் அவளை பிரமதேவர் முதலான தேவரும் அசுரரும் இன்னும் பிறரும் போற்றிட விதிமுறையாகத் திருமணம் செய்து மிகு அன்பினால் அவளைக் கூடி இன்புற்றிருந்தான் சூரபன்மன். 11

அன்னதன் பின்னர் வானோர் அசுரர்கந் தருவர் சித்தர்
கின்னரர் இயக்கர் நாகர் கிம்புரு டாதி யானோர்
கன்னியர் அளப்பி லாரைக் கடிமணஞ் செய்து கூடித்
துன்னுபன் மலர்த்தேன் உண்ணுஞ் சுரும்பென இன்பந் துய்த்தான்.

அதன்பின்னராக தேவர் அசுரர் கந்தருவர் சித்தர் கின்னரர் இயக்கர் நாகர் கிம்புருடர் ஆதியானோருடைய கன்னிப்பெண்களாயுள்ள எண்ணற்ற பலரை மங்கலச் சிறப்புடன் திருமணம் செய்து அவர்களையும் தனக்கு மனைவிமாராக்கி, விளங்கும் பல பூக்களில் தேனைச் சென்று சென்று உண்ணுகின்ற வண்டுபோலச் சூரனும் இந்தப் பலவகையான கன்னியரைக் கூடி அவர்கள் நலத்தை உண்டு இன்பத்தை அனுபவித்தான். 12

அரிமுகத் தவுணர் வேந்தற் கந்தகன் மகளா யுள்ள
திருமிகு விபுதை தன்னைச் சீர்மணஞ் செய்து நல்கி
நிருதிதன் புதல்வி யான நேரிழை சவுரி தன்னைக்
கரிமுக இளவல் சேரக் கடிமணம் புரிவித் திட்டான்.

சிங்கமுகமுடைய அசுரர் தலைவனான சிங்கமுகாசூரனுக்கு இயமன் மகளாயுள்ள திருமிகுந்த விபுதை என்னும் பெண்ணைத் திருமணம் செய்துகொடுத்து பின்னர் நிருதி என்பானின் புதல்வியான அழகிய சவுரி என்னும் பெண்ணை யானைமுகமுடைய தம்பி தாரகாசூரனுக்கு மனைவியாகும்படி திருமணம் செய்வித்திட்டான். 13

இவ்வகை மணஞ்செய் பின்றை இருதுணை வரையும் நோக்கி
மெய்வளம் பெறநுங் கட்கு விதித்திடும் மூதா ரேகி
அவ்விரு கோடி வெள்ளம் அனிகமோ டிருத்தி ரென்னத்
தெவ்வடு சூரன் அன்னோர் செல்லுமா றேவி னுனல்.

இவ்வகையாகத் திருமணம் செய்த பிற்பாடு இரு துணைவரான சிங்கனையும் தாரகனையும் நோக்கி அழிவிலாச் சீரையும் சிறப்புடைய செல்வத்தையும் நீவிர் பெறும்படி உங்கட்கெனச் செய்யப்பட்டிருக்கின்ற முதிய ஆசுரம் என்றும் மாயபுரம் என்றும பேர்கொண்ட நகரங்களில் சென்று உங்கட்காகிய அந்த இரண்டுகோடி வெள்ளச் சேனையுடன் இருப்பீராக என்று பகைவர் எவரையும் அழித்துத் தொலைக்கும் சூரன் தம்பிமார் இருவரையும் அங்கு செல்லுமாறு விடுத்தான். 14

ஏவியே தனது தானைக் கிறைவரில் பலரை நோக்கி
நீவிர்கள் இரண்டு கோடி நீத்தமாம் அனிகத் தோடு
தீவுக டோறும் ஆழி இடந்தொறுஞ் செய்த மூதூர்
மேவுதிர் விரைவின் என்னு அனையரை விடுத்தான் மன்னே.

ஏவிவிட்டபின் தனது சேனைத் தலைவர்களில் பலரைப் பார்த்து நீங்களும் ஆளுக்கு இரண்டுகோடி வெள்ளம் சேனைகளுடன் இப்பால் உள்ள தீவுகள்தோறும் சமுத்திர இடங்கள்தோறும் செய்யப்பட்ட முதிய நகரங்கள்தோறும் விரைவாகச் சென்று தங்கி இருப்பீராக என அவர்களையும் விடுத்தான் சூரபன்மன். 15

மாறிலாத் திசைக ளெட்டும் வானுல கேழும் இப்பாற்
கூறுபா தலங்கள் யாவும் ஒழிந்தவுங் குறுகி யேதன்
ஈறிலா ஆணை போற்ற எல்லையில் அவுணர் தம்மை
ஆறெனுங் கோடி வெள்ளத் தனிகமோ டேகச் செய்தான்.

மாறுபாடில்லாத எட்டுத்திக்குகளும் மேலுள்ள வானஉலகம் ஏழும் பாதாள உலகம் எனக் கூறும் ஏழும் ஆகிய இவற்றுடன் இன்னமும் வேறாகிய பல இடங்களிலும் தங்கியிருக்கும்படி சென்று, முடிவிலாத தனது கட்டளைகளைக் கண்காணித்துச் செலுத்தும்படி ஆறுகோடி வெள்ளம் அசுரச் சேனையுடன் அளவிறந்த அசுரர்களை ஆங்காங்கு போகும்படி செய்தான் சூரபன்மன். 16

விட்டிடு காலை தானே விண்ணுமண் ணுலகுந் திக்கோர்
எட்டொடு பிலனே ரேழும் ஏனைய வரைப்பு மாகிக்
கிட்டின செறிந்து மொய்த்த கேடில்சீர் அவுணர் தானை
மட்டகல் வானம் பூத்த உடுக்களின் மலிந்த அன்றே.

இவர்கள் அனைவரையும் இவ்வாறு விட்டிட்டகாலையில் கேடு எக்காலமும் இல்லாத அசுரச் சேனைகள் சூரன் கட்டளைப்படி சென்று விண்ணுலகும் மண்ணுலகும் எட்டுத் திக்கும் பாதாள ஏழுலகும் ஏனைய இடங்கள் எங்குமாகி நெருங்கிச் சென்று மொய்த்திருந்தன. இந்த அசுரர்கள் பரிவாரச் சேனைகளுடன் ஆங்காங்கே இருந்தமை அளவு காண்பரிய ஆகாயத்தில் பூத்திருக்கும் வெள்ளிகளைப் போன்றிருந்தது. 17

எங்கணுந் தனது தானை இடையறு நீண்ட லோடுந்
துங்கவெஞ் சூர பன்மன் தானுறை தொன்மு தூரில்
அங்கனே ரிலக்கம் வெள்ளத் தவுணர்தந் தானை தன்னை
மங்கல இருக்கை தோறும் மரபுளி இருத்தி மன்னே.

எங்கணும் தனது சேனை இடையறுது கட்டளைப்படி நெருங்கி இருத்தலோடும மேன்மையுடைய கொடிய சூரபன்மன் தான் இருக்கின்ற வீரமகேந்திரம் என்னும் பழைமையான முதிய நகரத்தில் ஒரு இலக்கம் வெள்ளம் அசுர சேனைகளை மங்கல கரமான இருப்பிடங்கள்தோறும் முறமையுடன் இருத்திவைத்தான். 18

கரிபரி யாளி எண்கு கடுவயப் புலியே ஏனம்
அரிமரை முகத்து வீரர் அவுணர்தந் தலைவ ராஞேர்
இருவகை நான்மை யோர்க்கும் எண்டிசை நகரும் ஈந்து
வருபடை அயுதத் தோடும் மகேந்திரங் காக்கச் செய்தான்.

யானைமுகம் குதிரைமுகம் யாளிமுகம் கரடிமுகம் கொடிய புலிமுகம் பன்றிமுகம் சிங்கமுகம் மரைமுகம் என்னும் முகங்களை முறையே கொண்ட கயமுகன் பரிமுகன் யாளிமுகன் கரடிமுகன் புலிமுகன் பன்றிமுகன் அரிமுகன் மரைமுகன் என்னும் வீரராயுள்ள எட்டு அசுரர்களின் தலைவர்களாயினேர்க்கு இலங்கைபுரம், ஏமபுரம், தேவபுரம் நீலபுரம் சுவேதபுரம் அசுரபுரம் வாமபுரம் பதுமபுரம் என்னும் எட்டு காவல் நகரங்களிலும் பதிஞயிரம் வெள்ளம் சேனைகளுடன் ஒவ்வொருவரும் சென் றிருந்து வீரமகேந்திரபுரத்தை எட்டுத் திக்கிலும் காக்கும்படி வைத்தான். 19

ஞாயில்கள் செறிந்த நொச்சி நாற்பெருந் தகைமைத் தான
வாயில்க டோறும் நாப்பண் வளநகர் இஞ்சி தோறும்
கோயிலின் இருக்கை தோறுங் குணிப்பிலா வீரர் தம்மை
நீயிர்கள் காமின் என்ஞ நிலைப்பட நிறுவி யிட்டான்.

சிறந்த இயந்திர உறுப்புக்கள் அமைந்த மதிலின் நான்கு பெரும்தகமை யுடையதானகோபுரவாயில்களின் இருப்பிடங்கள்தோறும் அளவிலாத வீரர்கள்தம்மை அழைத்து நீங்கள் கோபுரங்களிலிருந்து எமது நகரத்தைக் காப்பீராக என நிலைப்பட அவர்களை அதனிடையாக நிற்பாட்டி காவல்செய்யவைத்தான் சூரபன்மன். 20

துர்க்குணன் தரும கோபன் துன்முகன் சங்க பாலன்
வக்கிர பாலன் தீய மகிடனே முதலோர் தம்மைத்
தொக்கமந் திரிக ளாகத் துணைக்கொடே சூர பன்மன்
மிக்கவா னவர்கள் போற்ற வீற்றிருந் தரசு செய்தான்.

துர்க்குணன் தருமகோபன் துன்முகன் சங்கபாலன் வக்கிரபாலன் தீமையுடைய மகிடன் முதலாக உள்ளோர் தங்களைத் தனக்குக் கூட்டான மந்திரிகளாக்கி இந்த தீயவர்களின் புத்தியையேகேட்டு மிக்க மேம்பாடுடைய தேவர்கள் பயத்தால் போற்றிட இனிதே வீற்றிருந்து அரசுசெய்தான் சூரபன்மன். 21

அரசுசெய்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 1,025

———

718

# தேவரை ஏவல்கொள் படலம்

அரசு செய்தலும் அந்நர நாதனுஞ், சுரரு மேனை முனிவருந் தொக்குறீஇ
வரைசெய் மாட மகேந்திர மாபுரத், தொருவன் ஏவலின் முன்னம் ஒழுகுவார்.

இவ்வாறு சூரபன்மன் சிறப்புடன் அரசுசெய்து வருங்கால் வான உலகிற்கு அதிபனாகிய இந்திரதேவனும் தேவர்களும் ஏனைய முனிவர்களும் கூட்டமாகக் கூடி மலைபோன்ற மாடங்கள் நிரம்பிய வீரமகேந்திரபுரத்தமர்ந்து அகில உலகமும் தான் ஒருவனாகியே அரசாளும் சூரனின் கட்டளைகளை அவன் சொல்வதற்கு முன்பே குறிப் பறிந்து ஏவல்செய்து ஒழுகுவார்கள். 1

கொலைவல் சிங்க முகன்பதி குஞ்சரத், தலைவன் மாப்பதி சார்ந்தவர் தம்பதி
பலவு மேகிப் பணித்தன ஆற்றியே, உலைவர் வைகலும் ஊசலின் நீர்மையார்.

கொலையினைப் புரிகின்ற சிங்கமுகன் பதியான ஆசுரம், யானைமுகமுடைய தாரகன் பெரும்பதியான மாயபுரம் இவர்களைச் சேர்ந்த ஏனைய தலைவர்கள் ஊர்கள் பலவும் சென்று அங்கு அசுரர்கள் செய்யும்படி பணித்த ஏவல் தொண்டுளைச் செய்து கொண்டு அங்குமிங்குமாக ஒடி ஒடி நாள்தோறும் ஊஞ்சல் அசைவதுபோன்று உலைந்துதிரிவார்கள். 2

ஊனமுற்றோர் போலிவ்வா றுலைகின்ற காலத்தில் ஒருநாட் சூரன்
வானகத்துத் தலைவனையும் அமரரையும் வருகவென வலித்துக் கூவித்
தானவர்க்குத் தம்பியர்நீர் அவர்பணிநும் பணியன்றோ தரங்க வேலை
மீனனைத்துஞ் சூறைகொண்டு வைகலுமுய்த் திடுதிரென விளம்பினானால்.

சித்தசுவாதீனமற்றவர்களைப் போன்று தேவர்களும் இந்திரனும் இந்தவாறு உலைகின்ற காலத்தில் ஒருநாள் சூரபன்மன் வானஉலகத் தலைவன் இந்திரனையும் தேவர்களையும் இங்கு வாருங்கள் என அதிகாரத்துடன் கூப்பிட்டு தேவர்களை நோக்கி முறையால் நீங்கள் அசுரர்க்கு தம்பிமார் ஆவீர். அவர்களுக்குச் செய்யும் பணிகள் உங்களுக்குச் செய்யப்பெறும் பணிகளே. ஆகவே சமுத்திரத்திடத்தாக உள்ள மீன்கள் அனைத்தையும் வாரிப்பிடித்து இவ்விடம் நித்தலும் கொண்டுவருவீராக எனக்கூறினான். 3

உரைக்குமொழி யதுகேளா அனையரெலாம் உள்நடுங்கி உயங்கி வெள்கித்
திரைக்கடலின் மீன்றனக்குத் தருகென்றான் இதற்கினிநாஞ் செய்வதேதோ
விரைக்கமலத் தனிக்கடவுள் இப்படியும் நந்தலையில் விதித்தான் என்னா
இரக்கமொடு மறுத்தலஞ்சி அத்திறமே புரிதுமென இறைஞ்சிப் போனார்.

உரைத்த இந்த வார்த்தையைக் கேட்ட அவர்கள் எல்லாரும் உள்ளம் நடுங்கிச் சோர்ந்து வெட்கமடைந்து திரைக்கடலில் உள்ள மீன்களையெல்லாம் தமக்குப் பிடித்துத் தாருங்களென்றான். இதற்கு இனி நாம் செய்வது ஏதாகும். வாசனைகொண்ட தாமரைமலர்மேலிருக்கும் தனிக்கடவுளான பிரமன் இப்படியும் இவர்க்கு ஆகட்டும் என்று எமது தலையில் விதித்துள்ளாரே என்று கவலைகொண்டு அவன் கட்டளையை மறுத்துரைக்கப் பயந்து அரசே அத்திறமே நாம் புரிவோம் எனக்கூறி வணங்கிச் சென்றார்கள். 4

போகின்ற நெறியின்கண் இமையவரும் புரந்தரனும் பொருமி யேங்கி
ஆகின்ற தெமக்கேயோர் பழியன்றே அனையதுவந் தணுகா முன்னர்ச்
சாகின்ற தேமிகவும் இனிதாகும் எமக்கதுவுஞ் சாராதந்தோ
வேகின்ற சிந்தையினேஞ் செய்வதெவண் எனப்புலம்பி வேலை புக்கார்.

போகின்ற பாதை நெடுகிலும் தேவர்களும் இந்திரனும் பொருமி ஏங்கி ஐயகோ செய்யாத பாதகத்தை நாம் செய்தலாலே எமக்கோர் பெரும்பழி வருகின்றதே. இப்பழி வந்து எம்மை அணுகாமுன்னர்ச் சாகின்றதே மிகவும் இனிதாகும் ஆனால் எமக்கு அந்தச் சாவும் சேராததே! வேகின்ற மனமுடையேம் யாங்கள் என்னதாம் செய்யலாம்எனப் புலம்பியவாறு சமுத்திரத்திடம் சேர்ந்தார்கள். 5

அவ்வேலை இமையவர்கோன் வருணனெனுங் கடவுளை நின்றழையா இந்த
மைவேலை தனக்கிறைவன் நீயன்றே நின்னினுமோர் வலியா ருண்டோ
கைவேலைப் பணியியற்றித் திமிங்கிலமே முதலாய கணிப்பின் மீன்கள்
இவ்வேலை ஏற்றுதியேல் இடர்வேலைக் கரையிலெமை யெடுத்தி யென்றான்.

அவ்வேளை தேவர் அரசனான இந்திரன் வருணன் என்னும் கடவுளை கரையில் நின்று கூவி வருணபகவானே! இந்தக் கடலுக்கிறைவன் நீயன்றே உன்னிலும் பார்க்க வலியுடையார் உண்டோ. நீ உனது கைகளென்னும் திரைகளால் எமக்காக இந்தப் பணியைச் செய்து கடலிடத்துள்ள திமிங்கிலமே முதலாகச் சொல்லப்பெறும் அளவற்ற மீன்களை இக்கரைமேலாக வாரிக்கொண்டுவந்து தருவாயானால் எங்களுக்கு நேர்ந்துள்ள இடரெனும் கடலில் நின்றும் எம்மைகரையெடுத்தவனாகின்றாய் என்றான். 6

வெள்ளைவா ரணக்கடவுள் உரைசெய்த மொழிகேட்டு விண்ணுளோர்க்கு
வள்ளல்நீ இரங்குதியோ அத்தொழில்யான் புரிவனென வருணன் கூறி
அள்ளல்வே லையுட்புகுந்து தனதுபெருங் கரதலத்தால் அலைத்து வாரி
உள்ளமீன் குலங்களெல்லாந் தடங்கரையில் வரையேபோல் உயர்த்தலுற்றான்.

வெள்ளை யானையையுடைய இந்திரனெனும் கடவுள் இவ்வாறு உரைசெய்த வார்த்தையை வருணபகவான் கேட்டு ஐயா! இந்திரனே தேவர்கட்கெல்லாம் வள்ளலான நீ இப்படியும் துயருற்று இரக்கின்றாயோ! நீ சொல்லிய அத்தொழிலை யான் புரிவேன் என வருணபகவான் கூறி கடலிடத்துப் புகுந்து தனது பெரிய கைகளால் கடலை அலைத்து வாரி அங்குள்ள பல்வேறு வகையான மீன்களையெல்லாம் கரையிலே மலைபோலக் குவியும்படி சேர்க்கலுற்றான். 7

தடக்கடலின் வேலைதனில் வருணர்பிரான் ஒல்லைதனில் தந்த மீனத்
தடுக்கல் முழுவதுநோக்கிக் கடவுளரை விளித்திவற்றை ஆற்றலாலே
எடுப்பதுநுந் தொழிலென்றே இந்திரன்றான் விளம்புதலும் இமையோரெல்லாம்
நடுக்கமுடன் உளம்பதைப்ப விழிபனிப்பக்கரங்குலைத்து நாணுக் கொண்டார்.

விசாலமான கடலினிடத்துள்ள மீன்களெல்லாவற்றையும் வருணபகவான் விரைவாகக் கரையினிடத்துச் சேர்த்தலும் மலைபோல் குவிந்த மீன்கள் அனைத்தையும் இந்திரதேவன் கண்ணுற்று தேவர்களைப் பார்த்து இவற்றையெல்லாம் உங்களது முழு வலியினாலும் எடுத்துச் செல்வது உங்களது வேலையாகும் என்று இந்திரன் சொல்ல அதுகேட்ட தேவர்கள் யாரும் நடுக்கத்துடன் உள்ளம் பதைப்ப கண்ணீர் பெருக கையைஉதறித் துயருற்று நாணம்கொண்டார்கள். 8

சின்னேதிமிங் கிலகிலமீ ஞதியமீன் அடுக்கலினைத் தென்பால் வைகும்
மன்னனுயிர் தனைவாங்கச் செங்கதிரோன் பெரும்புனலின் வடிவை வாட்டப்
பன்னகரா கியதிறத்தாற் பிணித்திடும்அச் சுமையதனைப் பகட்டின் வேந்தன்
இன்னலுறு வானவர்பால் எடுப்ப அவர் கொண்டேகி இரங்கு கின்ருர்.

சின்னே திமிங்கிலம் கிலம் ஆகியன மீன்களின் மலைகளைத் தென்பாலுள்ள இயமன் அம்மீன்களின் உயிரைப் பிடிக்கச் சிவந்த கிரணமுடைய சூரியபகவான் மீன்களின் ஈரப்பற்றை நீக்க பாம்புகளாகிய கயிற்ருல் பிணிக்கப்பட்டுள்ள அந்த மீன்களின் சுமை தன்னே ஐராவத யானைக்கதிபனை இந்திரன் மனத்துயர் கொண்டு நாணி நின்ற தேவர்கள் தலைமேல் சுமத்திவிட அவர்கள் அவற்றைக் கொண்டேகி எல்லாத் தேவரும் இரங்கித் துயருறுகின்ருர்கள். 9

பன்னும் புகழ்ச்சூர பன்மனெனுந் தீயவனுன்
முன்னுந் துயர்க்கடலின் மூழ்கி முரணழிந்தேம்
துன்னும் பழியாந் தொழிலிதுவுஞ் செய்தனமால்
இன்னும் படுவதொழில் ஏதோ உணரேமே.

யாவராலும் பேசப்படும் புகழுடைய சூரபன்மன் என்னும் தீயவனுல் முன்னமும் துயரமெனும் கடலில் மூழ்கினேமாய்த் துயருற்று எமது வலிமையெல்லாம் கெட்டு நின்ருேம். போதாமைக்கு எக்காலமும் நீங்காத பழியைத் தருகின்ற தொழிலான இதனையும் செய்தனமால் இன்னமும்தான் செய்யவேண்டிய இழிதொழிலாய் வருவன ஏதேதுளதோ அதை நாங்கள் அறியோமே. 10

பேர்கின்ற நீலப் பிறங்கல்அனை யான்பணியால், ஆர்கின்ற தின்ருே ரலரே அஃதுயிரை
ஈர்கின்ற தந்தோ விதியே எமக்கிதுவுந், தீர்கின்ற காலம் உளதோநீ செப்பாயே.

நிலைவிட்டுப் பேர்ந்து செல்கின்ற நீல மலைபோல் பவனுன சூரபன்மனுக்கு நாம் செய்யும் இழிதொழிலான செயலால் உலகெலாம் பரவுகின்ற வசைச் சொல்லால் வரும் மானயீனம் எமது உயிரை அரிகின்றதுபோல துயருறுத்திறதே. ஐயோ விதியே எமக்கு நேர்ந்துள்ள வசையும் தீர்கின்ற காலம் வருமோ இதை நீ சொல்லாயோ! 11

பூவுலகந் தன்னில்பொருந்துகின்ற மானுடரும், பாவமென நூலில்பகருகின்ற இத்தொழிலை
ஏவர்புரி கின்ருர் எமக்கோவந் தெய்துமதோ, தேவகதியின் நிரயஞ் சிறப்புடைத்தே.

பூவுலகத்தில் பொருந்தி வாழும் மனிதரும்கூட மீன்பிடித்தல் உண்ணல் பாவம் என்று நூல்களிலே பாடிவைத்துள்ள இப்போது நாம் புரியும் இத்தொழிலை பின்னர் வேறுயார்தான் செய்வார். ஐயகோ மனிதரிலும் மேம்பாடுடைய தேவர்களான எங்கட்குமோ இது வந்து அடைவது மேலான கதியுடைய எங்கள் நிலை இப்படியானுல் இந்த தேவராகப் பிறப்பதிலும்பார்க்க நரக பூமிக்குச் செல்வது சிறப்புடையதன்றே 12

தக்க துணராத தானவர்கள் தங்களினும், மக்களினுந் தாழ்வாம் வலைஞர்தொழில் செய்
இக்ககனவாழ்வைவிரும்பியேயாஞ்செய்த, மிக்க தவமும்வினையாய்விளைந்ததுவே. [தனமால்

தக்கது இது என உணரமாட்டாத மூர்க்கநிலையுடைய அசுரர் தங்களிலும் மனிதர் எனும் குலத்தினரிலும் தாழ்ந்துளோர் எனப்படும் வலைவீசி மீன்பிடிக்கும் தொழில் புரியும் வலைஞர் தொழிலை நாமே இப்போது செய்தனமால். ஆனமையால் இந்த சொர்க்க உலகவாழ்வை விரும்பியே நாம் செய்துகொண்ட எங்களது மேலோங்கிய தவமும் எங்கட்கு வினையாய் தீங்காய் முடிந்துள்ளது. 13

வேத நெறியை விலக்கினேம் மிக்குள்ள
போத நெறியாம் அதற்குப் புறம்பானேம்
தீதுடைய வெஞ்சூரன் சீற்றத்தாற் செப்புகின்ற
ஏதநெறி செய்வேமேல் எம்மினுயர்ந் தாரெவரே.

வேதத்திற்கூறிய நெறியாக வாழ்வதை அசுரர்க்கு ஏவல் செய்தலால் விலக்கினேம். இதனிலும் மேலானதூய ஞானநெறியானதைப் பெறுதற்கும் தகுதியற்றவரானேம். தீமைசொண்ட கொடிய சூரன் கோப வெறியுடன் எமைநோக்கிச் சொல்கின்ற குற்றமும் பழியும் நிறைந்த இச்செயல்களைச் செய்வோமேல் எம்மில் உயர்ந்தார் வேறுயார்; கடவுளர்கள் எனஉயர்வாகப் பேசப்படும் பெருமை உடையோம் இதைச் செய்தால் எம்மில் உயர்ந்தார் யார்என தம்மையே நிந்தித்து பேசாது பேசினர்கள். 14

தேனுலவுந் தாருத் திருநிழற்கீழ் இன்பமுறும்
வானவர்க ளென்றே மதிக்குந் தகைமையினேம்
ஈனமொடு மீன்சுமந்தே எல்லோர் களும்நகைக்கத்
தானவர்முன் செல்வதிலுஞ் சாதல்மிக நன்றுநன்றே.

தேன் சொரிகின்ற மலர் சிறக்கும் கற்பக விருட்சங்களின் செல்வவளம் நிறையும் நீழலின் கீழாக இன்புறுகின்ற மேலான தேவர்கள் என்றே பலரும் மதிக்கும் தகவினை உடையோங்களான நாங்கள்; ஈனமிகுந்து, மீன்சுமந்து எல்லோரும் எமைப் பார்த்துச் சிரித்து நகைக்க அசுரர்முன் செல்வதிலும் சாதல் மிகநன்றாகும். 15

என்னு மொழிகள் இயம்பிப் புலம்புற்றுத்
துன்னு நிருதர்புகழ் சூரன் திருநகரின்
மன்னுதிசை யாளரொடும் வந்தனரால் அவ்வளவில்
அன்னசெயல் கண்டே அவுணர்உரை செய்குவார்.

என்னும் இந்த வார்த்தைகளைத் தேவர் சொல்லிப் புலம்பி அழுது; மேம்பாடு கொண்ட அசுரர் புகழ்கின்ற சூரபன்மனின் திருநகரில் நிலைபெற்ற திக்குபாலகரான இந்திரன் முதலியோருடன் மீனையும் சுமந்தவாறு வந்தார்கள். அவ்வளவில் அவர்களின் அச்செயலைக் கண்டுகொண்டு அசுரர்கள் பேசத் தொடங்குவார். 16

மாதோயந் தன்னை வயிறலைத்து மற்றிவர்தாம்
ஈதோ சிலமீன் தருகின் றனரென்பார்
மீதோ டியபரிதி வெய்யோன்முன் னுண்டவெறுங்
கோதோ எமக்குக் கொணர்கின்றார் என்றுரைப்பார்.

பெரிய கடலில் இவர்கள் சென்று அதனைக் கலக்கி இந்நேரமளவும் தொழில் புரிந்து இதோ சில மீனைமட்டும் தானேகொண்டு வந்து தருகின்றார் என்பார் சில அசுரர்கள்; இன்னும் சில அசுரர் சொல்வார். கொண்டு வந்ததைத்தான் நல்லதாக இவர்கள் கொண்டுவந்தாரா அதுவுமில்லை; வானமேலாக ஓடிச் செல்கின்ற சூரிய தேவனின் வெயிலால் உண்ணப்பட்ட மீனின் சோதல்லவோ எமக்கு கொண்டுவருகின்றார் என்றார்கள். 17

தாங்கடற்குள் மீனந் தலைக்கொண்டு மேவுகின்றார்
ஈங்கிவர்க்கு நாணம் இலையோ சிறிதென்பார்
தீங்கிழைக்கின் யாரேனுஞ் செய்யாத தேதென்பார்
மூங்கையொத்து ளாரோ மொழியார் இவரென்பார்.

தாங்களாகவே கடலுக்குள் சென்று மீனைப்பிடித்து தலையிலே வைத்து சுமந்து இங்கு வருகின்றார். இங்கு இவர்கள் இப்படிச் செய்வதற்கு சிறிதேனும் வெட்கம் இல்லையோ என்பார்கள் சிலர். தீங்குகளைச் செய்தால் யார் எனினும் செய்யாத காரியம் ஏதிருக்கின்றது என்பார் சில அசுரர். இன்னும் சில அசுரன் சொல்வான்; இஃதென்ன இது இவர்கள் ஊமைகளாயினரோ ஒன்றும் பேசாது போகின்றனரே என ஏளனமாகக் கூறுவர். 18

முந்துற்ற தொல்லை முழுநீரின் வேலைதொறும்
பந்தத் துடன்வாழ் பரதவரே செய்கின்ற
இந்தத் தொழிலும் இவர்க்குவரு மோவென்பார்
சிந்திப்ப தென்னோ விதியின் செயலென்பார்.

மண்ணுக்கு முன்தோன்றிய முழு நீரினால் நிரம்பிய கடல்கள்தோறும் தொழில் செய்யும்படி பந்திக்கப்பட்டு இதில் விருப்பத்துடன் பயிற்சிகொண்டு வாழ்கின்ற பரதவர் எனும் மீன்பிடித் தொழிலாளர் செய்கின்ற இந்தத் தொழிலும் தேவர்களான இவர்க்கு எப்படி வருமோ என சில அசுரர் சொல்வார்கள்; அதுவேளை இன்னும் சில அசுரர் சொல்வார் இதைப்பற்றி நாம் ஏன் சிந்திக்கவேண்டும் உயர்ந்த நெறிநின்றாரும் சிறு தொழில் செய்ய நேருதல் விதியின் செயலல்லவோ. 19

வேத நெறிமுறைமை விட்டார் வினைசெய்யும்
பேதை நெறியே பிடித்தார் இவரென்பார்
கோதுபடா நந்தங் குலத்தை மிகநலிந்தார்
ஏதுபடார் இன்னம் இமையோ ரெனவுரைப்பார்.

வேதநெறிப்படி வாழ்கின்ற வாழ்க்கையை கைவிட்டார்கள் இத்தேவர்கள் இப்போது வினைவிளையும் கருமங்களைச் செய்கின்ற பேதை நெறியே கடைப்பிடித்துள்ளார் என்பார்கள் சிலர். அப்போது சில அசுரர் சொல்வார் வசைபடாத நமது குலத்தை முன்னாள் மிக துயருறுத்தி வாட்டினார்கள் இத்தேவர்கள் அதனால் இவர்கள் என்ன பாடுதான் படார்கள் என்பார் 20

மண்ணோர் கழுமிகழும் வன்பழிதன் பால்வரவும்
விண்ணோர்க் கிறைவன் விரைவினுயிர் விட்டிலனாற்
கண்ணோ பெரிது கருத்தோ சிறிதென்பார்
பெண்ணோ அலிதானோ பேடோ வெனவுரைப்பார்.

பூவுலகில் வாழ்கின்றோர்களும் இகழுகின்ற கொடும்பழியானது தனதுபால் வரவும் தேவர்கட்கு அரசன் இந்திரன் மானத்தினால் தனது உயிரை விரைவாக விடவில்லையே? அம்மவோ இவனுக்கு மேனி எல்லாம் பெரிய கண்களை உடையனாகியும் இவனின் கருத்துமட்டும் சிறிதாகியுளதே! மானம்போயும் உயிர்தரிப்பேன் என எண்ணினனே இந்த இந்திரன்; இவன் என்ன பெண்ணோ, அலியோ, அல்லது பேடியோ? எனவும் பேசினார் சிலர். 31

இந்த வாறு பலரும் இயம்பிடப், புந்தி நொந்து புலம்புபுத் தேளிர்கள்
தந்தி யூருந் தலைவனை முற்கொடு, வந்து தீயவன் வாய்தலுற் றாரரோ.

இந்தவாறு பல அசுரரும் பேசிக்கொள்ள அதைக் கேட்டுக்கேட்டு தாமும் பதில் பேசுதற்குப் பயத்தினால் இயலாது மனம் நொந்து புலம்பியபடி வருகின்ற கடவுளர்கள் யானைமீது ஊர்ந்து வரும் தலைவனான இந்திரனை முன்னாக விடுத்து வந்து தீயவனான சூரபன்மன் அரண்மனை வாய்தலைச் சேர்ந்தார்கள். 22

பரிதி வேந்தன் பணிமுறை நாடியே, வருதிர் ஈண்டென்று வாயிலர் கூறிடப்
பொருதி ரைக்கடல் மீன்கொடு போய்ச்சுரர், ஒருத னிப்பெருங் கோயிலுள் உய்த்தனர்.

ஆஞ்ஞா சக்கரத்துடன் அரசாளும் சூரபன்மனின் பணியை முன்னே உணர்ந்து கொண்ட காவல் அசுரர்கள் ; மீன் சுமந்துகொண்டு வந்த தேவர்களை இங்கே வாருங்கள் என கூறிடுதலும் ; பொருதலைக்கும் திரைக்கடலின் மீனைச் சுமந்துகொண்டு சென்ற தேவர்கள் யாரும் சூரபன்மனுடைய பெரிய தனிச்சிறப்புடைய அரண்மனையில் சேர்த்தார்கள். 23

எளித்தல் எய்தும் இமையவர் உய்த்தமீன், துளித்த தேன்ருெடைச் சூர்முதல் காணுறீஇக்
களித்து வந்து கடவுளார் வைகலும், அளித்தி ரென்ன அழகிதென் றேகினர்.

ஊழின் முறையாக இகழப்படற்குரிய எளிய வாழ்வை அடைந்து கொண்ட தேவர்கள் ; கொண்டுவந்து சேர்த்த மீன்கள் யாவற்றையும் தேன் துளிக்கும் பூமாலையணிந்த முதல்வனன சூரபன்மன் கண்ணுற்று பெருங்களிப் புற்று ; தேவர்களை நோக்கி. தேவர்களே ! நாள்தோறும் நீங்கள் இப்படியே மீனைக் கொடுப்பீராக எனலும் ; அவர்கள் சூரனை நோக்கி, அழகாகச் செய்கின்றோம் எனக் கூறிச் சென்றார். 24

என்றும் ஆங்கவர் இச்செயல் ஆற்றியே, பொன்றி னாரின் புலர்ந்து புலம்புறீஇத்
துன்றுகின்ற துயர்க்கடல் மூழ்கியே, ஒன்றும் வேத வொழுக்கமற் றாரரோ.

எஞ்ஞான்றும் அத்தேவர்கள் இந்த மீன்பிடிக்கும செயலைசெய்தே இறந்தவரைப் போல வாடிப்புலம்புற்று நாளும் பெருகுகின்ற துயர்க் கடலில் மூழ்கியே தாங்கள் கடைப்பிடித்து ஒன்றி வாழ்ந்த வேத ஒழுக்கம் அற்று நின்றார்கள். 25

தேவரை ஏவல்கொள் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 1, 050

## புதல்வரைப்பெறு படலம்

அதுபொழு தவுணர் கோமான் ஆற்றிய தவத்தின் சீரால்
பதுமகோ மளையென் றேதும் பாவைதன் உதரம் போந்து
புதுமதிக் குழவி யேபோல் பொற்பொடு பொலிந்து முன்னம்
மதலையங் கொருவன் வந்தான் மறலிக்கு மறலி போல்வான்.

அவ்வாறு சூரபன்மன் அரசாண்டுவரும் காலத்தில் அவன் செய்து கொண்ட நல்ல தவத்தின் சீரினல் பதுமகோமளை என்று சொல்லப்பெறுகின்ற அவனுடைய மனைவியின் திருவயிற்றினில் வந்து தங்கி; புதிய இளப்பிறையே போன்று; பொற்புடன் அழகமைய விளங்கி முதலாவதாக ஓர் ஆண் குழந்தை பிறந்தான். அவனது இயல்பை நோக்கினல் எமனுக்கும் எமன்போல வலிமையுடையவனய் இருந்தான். 1

வந்ததோர் மதலை தன்னை மன்னவர் மன்னன் காணூஉ
அந்தமில் மகிழ்ச்சி பொங்க அவுணர்தங் கிளைஞர்க் கெல்லாம்
நந்திய வெறுக்கை தன்னை நலத்தக வீச லுற்றான்
இந்திரன் முதலி னேரும் யாவரும் இடுக்கண் எய்த.

இவ்வாறு பிறந்ததோர் பிள்ளையை அரசர்க்கரசனுன சூரபன்மன் கண்ணுற்று முடிவில்லாத மகிழ்ச்சி பொங்கிடத் தனது அசுரர் கிளைகளான சுற்றத்தவர்களுக்கெல்லாம்; யாவரும் விரும்பும்படியான மிகு செல்வங்களை அவர்கள் பெற்று அனுபவித்து இன்புறும் பொருட்டாக ஓயாது அள்ளி வீசலுற்றுன். இதனைப் பார்த்து நின்ற இந்திரன் முதலியோர் யாவரும் துயரப்பட்டு இடுக்கண்படும்படியாக; அசுரர்கள் அடைகின்ற இன்பமும் சந்ததிப் பெருக்கமும் அவர்களால் துயரப்பட்டும் தேவர்கள் மனதில் மீண்டும் துன்பத்தை இயற்கையாகவே தந்து நின்றது. 2

வீசிய பின்றை வானேர் மெல்லியர் அவுணர் மாதர்
ஆசிகள் புகன்று போற்றி அன்னதோர் மைந்தன் தன்னைக்
காசொடு வயிர முத்தங் கதிர்பொலந் தொட்டில் சேர்த்தார்
மாசகன் மதிய மேபோல் பைப்பய வளர்தல் உற்றுன்.

பிள்ளை பெற்ற மகிழ்வால் செல்வங்களைஅள்ளி வீசிய பிற்பாடு தேவப் பெண்களும் அசுரப்பெண்களும் ஆயினேர் நல்லாசி கூறிவாழ்த்திப் போற்றி நிற்க, அப்பிள்ளையை மாணிக்கமும் வயிரமும் முத்தும் பிரகாசிக்கின்ற பொன்னுலாய தொட்டிலினில் சேர்த்து வளர்த்தலும் அப்பிள்ளையானவன் மாசில்லாத இளம்பிறையான சந்திரன் வளர்தல்போன்று பையப்பைய வளர்தலுற்றுன். 3

கட்டழ குடைய மைந்தன் கம்பலங் கொண்ட செம்பொன்
தொட்டிலில் துயிலு மெல்லை ஒருபகல் சுடரின் என்றூழ்
விட்டதோர் நூழை தன்னுன் மேவியே அனையன் மெய்யிற்
பட்டதங் கதனை நாடிப் பரிதியைச் சுளித்துப் பார்த்தான்.

பேரழகு வாய்ந்த அப்புதல்வன் மேற்கட்டிகளான சித்திர வஸ்திரங்களால் விநோதமுற அமைத்து வைக்கப்பெற்ற பொன்னுன தொட்டிலினில் துயிலும் காலத்து ஒருநாள் சூரிய தேவனுடைய வெய்யிலானது திறக்கப்பட்டிருந்த யன்னல் (சாளரம்) வழியாகப் பிள்ளையின் மேனியில் பட்டது. அதனை அப்பிள்ளை கண்டுகொண்டு சூரிய தேவனைக் கோபமுடன் வெறித்துப் பார்த்தான். 4

பார்த்திடு கின்ற மைந்தன் பன்மணித் தொட்டில் நின்றுஞ்
சீர்த்தெழுந் தண்டம் பாய்ந்து செங்கதிர்ச் செல்வற் பற்றிக்
கார்த்திடு புயங்கங் கவ்வும் படித்தெனக் கரத்திற் கொண்டு
பேர்த்துமோர் இறையில் வந்தான் தவத்தினும் பெரிதொன் றுண்டோ.

பார்த்திட்ட அப்பிள்ளை பல மணிகள் பதித்துள்ள அத்தொட்டில் நின்றும் கோபித்தெழுந்து அண்டத்தில் பாய்ந்து சிவந்த கிரணங்களைப் பரப்புகின்ற செல்வனுன சூரியபகவானைப்பற்றி. கறுத்த ஒரு பாம்பு சூரியனைக் கௌவி வருகிறது எனும் படியாக சூரியனைக் கையினுல் பிடித்துக்கொண்டு ஓர் இமைப்பொழுதிலே திரும்பவும் வந்து சேர்ந்தான். இப்படியான ஒரு செயலை அவன் செய்தலால் இது அவன் தந்தையின் தவத்தின் வலியையே காட்டிற்று; ஆனபடியால் தவத்திலும் பார்க்க மேலான செயல் ஒன்றுண்டோ? இல்லையே! 5

தானுறை இருக்கை தன்னில் தகுவர்கோன் தனயன் சாரா
ஆனதோர் செம்பொற் றெட்டில் அணிமணிக் காலி னூடே
பானுவை வலிதிற் கட்டிப் பண்டுபோல் துயின்றுன் அங்கண்
வானவர் அதனை நோக்கி மனம்வெரீஇ மறுக்க முற்றூர்.

தான் இருந்த இருப்பிடத்தில் அசுரர் அரசனுன சூரபன்மனின் பிள்ளை சேர்ந்து தான் படுத்துறங்கிய பொற்றொட்டிலின் அழகிய மணிகள் பதித்த காலின் இடத்து சூரியபகவானை வலிதிறற் கட்டிவிட்டு முன்னர்போல் துயிலலுற்றுன். அவ்விடத்து அதனைத் தேவர்கள் நோக்கிப் பெரிதும் மனம் பயந்து தளர்ச்சி கொண்டார்கள். 6

பரிதிவிண் சேறல் இன்றிப் பிழைத்தலும் பார்தந் துள்ளோன்
கருதியிந் திரனே ஏனைக் கடவுளர் யாருஞ் சூழ
நிருதர்கோன் தன்பால் வந்து நீடிருட் பகைவன் தன்னைத்
தருதிநின் மைந்தன் செய்த தனிச்சிறை நீக்கி யென்றுன்.

தொட்டில் காலோடு கட்டப்பட்டு சிறைப்படுதலாலே சூரியபகவான் வானத்தில் தோன்றுது நிலை தவறுதலும் அதனை இப் பூமியைப் படைத்தவரானபிமதேவர் தனது கருத்தில் உணர்ந்து இந்திரனும் மற்று ஏனைய கடவுளரும் தன்னைச் சூழ்ந்து வரும்படியாக அசுரர் அரசனுன சூரபன்மனிடம் வந்து அவனை நோக்கி; அரசே! நீண்டு பரக்கும் இருளின் பகைவன் எனப்படும் சூரியதேவனை உனது மகன் சிறை வைத்துள்ளான். அச்சிறையினின்றும் நீக்கிச் சூரியனைத் தருவாயாக என்றுர். 7

மறைபு ரிந்தநான் முகன்இவை புகறலும் வானத்
திறைபு ரிந்திடும் இரவியை என்மகன் இன்னே
சிறைபு ரிந்ததை உணர்கிலேன் அவனது செய்யக்
குறைபு ரிந்ததென் பகர்தியென் றுரைத்தனன் கொடியோன்.

வேதங்களை உலகில் வெளிப்படுத்திய பிரமதேவர் இவற்றை சொல்லுதலும் வான உலகெலாம் அரசபுரிகின்ற சூரியதேவனை என்மகன் இப்பொழுது சிறைபுரிந்ததை அறியமாட்டேன். எனது மகன் அவ்வாறு சூரியனைச் சிறைபுரியும்படி சூரியன் எனது மகனுக்குச் செய்த குறையாது அதை பிரமதேவரே சொல்லும் என்று கொடியவனுன சூரபன்மன் சொன்னுன், 8

சொற்ற வாசகங் கேட்டலும் ஆருயிர்த் தொன்மை
முற்று நாடிய நான்முகன் நின்மகன் முகமேல்
அற்ற மில்சுடர் ஆதபந் தீண்டிய ததனுல்
பற்றி வெய்யவற் சிறைபுரிந் தானெனப் பகர்ந்தான்.

சொல்லிய வாசகத்தை கேட்டலும் முழு உயிர் வர்க்கங்களினதும் பழைய வினைகளை ஒருங்கே உணர்ந்துள்ள பிரமதேவர் சூரனை நோக்கி அரசே உனது மகனின் முகம்மேலாக குற்றமிலாத சூரியனுடைய வெயிலின் கிரணம்பட்டது அதனுல் சூரியனைப் பற்றி சிறைபுரிந்தான் என கூறினுர். 9

மகவு தன்செயல் கேட்டலுஞ் சூரபன் மாவாந்
தகுவர் கோன்மிக மகிழ்ந்துநீர் என்மகற் சார்ந்து
மிகவும் நன்மொழி கூறியே ஆங்கவன் விடுப்பப்
பகல வற்கொடு போதிரால் ஈண்டெனப் பகர்ந்தான்.

தனது மகனின் அரிய செயலை சொல்லக் கேட்டலும் சூரபன்மன் என்கின்ற அசுரர் அரசன் மிக மகிழ்ந்து நீர் இப்பொழுது எனது மகனிடம் சென்று மிகவும் நயமான வார்த்தைகளைக்கூறி அதன் பொருட்டால் சூரியனை என்மகன் சிறைவிடுப்ப இவ்விடத்து நின்றும் நீர் சூரியனைக்கொண்டு போவீராக எனக் கூறினுன். 10

கேட்ட நான்முகன் நன்றென விடைகொண்டு கிளர்பொன்
நாட்டின் மேனகை முதலினோர் பாடலின் நலத்தால்
ஆட்டு பொன்மணித் தொட்டிலின் மிசையுறும் அண்ணல்
மாட்டு மேவிநின் றளவையில் ஆசிகள் வகுத்தான்.

சூரபன்பனின் இந்த வார்த்தையைக் கேட்ட பிரமதேவர் அரசே அது நன்று என்று விடைபெற்றுக்கொண்டு பொன்னொளிகிளர்கின்ற சொர்க்கலோகப் பெண்க ளான மேனகை திலோத்தமை முதலிய பெண்களின் பாடல்நலத்தினுடன் ஆட்டப்பெறு கின்ற பொன்னில் செய்த தொட்டிலின்மேல் சயனித்திருக்கின்ற அப்புதல்வனிடத்து சென்று அணுகி அளவில்லாத ஆசிமொழிகளைச் சொல்லி நின்றார். 11

அன்பின் மைந்தனைப் புகழ்ந்துமுன் நிற்றலும் அனையான்
என்பெ றும்பரி சுமக்கென இன்னதோர் இரவி
துன்பு றுஞ்சிறை அகற்றுதி என்றலுந் தொல்லோய்
உன்பெ ரும்படை தருதியேல் விடுவனென் றுரைத்தான்.

உள்ளத்துப் பெருகும் அன்பினால் அப்புதல்வனை பிரமதேவர் புகழ்ந்து முன் னிற்றலும் அப்போது அப்பிள்ளை பிரமதேவரை நோக்கி நீர் எம்மிடத்து பெறவேண் டும் பொருளாய கருமம் உமக்கு யாதெனலும் அதுவேளை பிரமதேவர் அப்பிள்ளையை நோக்கி இங்கிருக்கும் இந்த சூரியன் துன்புறுகின்ற சிறையினை அகற்றுவாயாக என்ற லும் அப்பிள்ளை பிரமதேவரைப்பார்த்து முதியவரே உமது மிகவலிமையான படைக் கலத்தை தருவாய் எனில் யான் சூரியனை விடுவேன் என்று கூறினான். 12

உரைத்த மைந்தனுக் கயன்றன தகன்படை யுதவ
நிரைத்த செங்கதிர்ச் செல்வனை விடுத்தனன் நிருதன்
விரைத்த பங்கயக் கிழவனும் புதல்வனை வியந்து
பரித்தி யாலென உதவினன் மோகவெம் படையே.

சொல்லிய சூரபன்மன் மைந்தனுக்கு பிரமதேவர் தனது பெரிய படைக்கலமான பிரமாஸ்த்திரத்தைக் கொடுத்தலும் அவ்வேளை நிரையாகப் பொருந்திய கிரணங்களை உடைய சூரியபகவானை கட்டு நீக்கி அவிழ்த்து விடுத்தான். விடுத்தலும் வாசனை பொருந்திய தாமரைமலர் மேலிருக்கின்ற பிரமதேவரும் அப்பிள்ளையின் செயல்களை வியந்து முன்தந்த எனது படையுடன் இந்தப் படையையும் பெறுவாயாக என்று கூறி மோகனாஸ்திரத்தையும் கொடுத்தார். 3

படைய ளித்தலும் பகலொடு பங்கயத் தவற்கு
விடைய ளித்தனன் தாதையத் தன்மையை வினவி
நடைய ளித்தனன் புதல்வனுக் கன்னதோர் நன்னா
ளிடைய ளித்தனன் பானுகோ பன்எனும் இயற்பேர்.

இப்படையைக் கொடுத்தலும் அந்த அசுரகுமாரன் பிரதேவனுக்கும் சூரிய பகவானுக்கும் சென்றுவருமாறு விடைகொடுத்தான், இந்த வரலாறுகளை எல்லாம் தந்தையான சூரபன்மன் கேள்வியுற்று தானும், பிரமதேவர்க்கும் சூரியனுக்கும் சென்று வர விடை கொடுத்தான். அப்படியான நல்ல நாளிலேயே தனது மகனுக்கு பானு கோபன் என்னும் இயற்பெயரை இட்டு பெரும் சிறப்புகளைச் செய்தான். 14

பானு கோபனென் றொருபெயர் பெற்றஅப் பாலன்
மானே நேர்விழி மங்கையர் மதனென மயங்க
ஆன பேருரு வெய்தியே அம்புயத் திருவின்
கோனோ டேபொரு தவன் றனைப் பெருந்திறல் கொண்டான்.

பானுகோபன் என்று ஒரு தனியான பெயரைப்பெற்ற அந்தப்பாலன் வளர்ந்து அழகு விளங்கிட மான்போலும் பார்வையுடைய பெண்கள் இவன்தானே மன்மதன் என மயங்கும்படியாக அத்தகைய வசீகரமுடைய உருவத்துடன் திகழ்ந்து மகாலட்சுமி நாயகரான விஷ்ணுமூர்த்தியோடு போரிட்டு அவரை பெரு வெற்றி கொண்டான். 15

பரிதி யின்பகை யாமிவற் பெற்றபின் பரிவால்
நிருதர் காவலன் அங்கிமா முகத்தனை நிறஞ்சேர்
இரணி யன்றனை வச்சிர வாகுவை எழிலார்
மருவு லாங்குழற் பதுமகோ மளைதர மகிழ்ந்தான்,

பானுகோபன் என்ற இந்தப் பிள்ளையைப் பெற்றபின் அசுரர்க்கு காவலனான சூரபன்மன், அன்பினால் அக்கினி முகாசூரன் என்னும் பிள்ளையையும் பொன்னிறம் மிகுந்த இரணியனையும் வச்சிரவாகு என்பானையும் எழில் விளங்கும் வாசனைகொண்ட கூந்தலையுடைய பதுமகோமளை என்னும் மனைவி பெற்றெடுக்க அதுகண்டு மகிழ்வுற்றான். 16

மைத்த கூர்விழி ஏனைய தேவியர் மகிழ்வால்
உய்த்து நல்கிடச் சூரனும் வெய்யவன் ஒருங்கே
பத்து நூறுள மும்மைசேர் பாலரைப் பயந்தான்
இத்தி றந்தவர் தம்முடன் அங்கண்விற் றிருந்தான்.

மைபோலும் கருமை கூர்ந்த கண்களையுடைய ஏனை தேவியர்கள் உவகையுடன் சருப்பமெய்தி பெற்றெடுத்துத்தர சூரபன்மன் என்னும் கொடியவன் ஒரே காலத்தில் மூவாயிரம் பிள்ளைகளை அம்மனைவியர் பாலாகப் பெற்றெடுத்தான். இவ்வாறு இதுதன்மையாகப் பெற்றெடுக்கபெற்ற பிள்ளைகளுடன் மகிழ்ந்து இனிதுடன் அரசுசெய்திருந்தான் 17

சீற்ற முற்றிடு சிங்க முகன்கணே தோற்றி, னன்அதி சூரன்என் றோர்மகன்
வீற்று நூற்றுவர் மேவினர் அன்னவர், ஆற்றல் யாவர் அறைந்தி டவல்லரே.

கோபம் இயல்புடன் மிகுந்துள்ள சிங்கமுகா சூரனிடத்தாக அவனது மனைவி வயிற்றின் கருவுற்றிருந்து வந்து உதயம் செய்தான் அதிசூரன் என்னும் பெயருடைய மகன், அதன்பின் மேலும் நூறு அசுரர்கள் பிள்ளைகளாக தோன்றினார்கள். அவருடைய வலிமையைப் பற்றி யார்தான் எடுத்துப்பேச முடியும்? 18

அந்த நாளில் அவன்றன் இளவலாந், தந்தி மாமுகத் தாரகன் தன்னிடை
முந்து செய்தவ மொய்ம்பினோர் மாமகன், வந்து தோன்றினன்வான்கதிர்ப் பிள்ளைபோல்.

அந்தநாட்களில் சிங்கமுகா சூரனுடைய தம்பியாகிய தாரகாசூரனுடைய மனைவி சவுரி என்பாளின் திருவயிற்றில் முன்னே செய்துள்ள தவத்தின் பயனாக ஒரு பெருமையான பிள்ளை வந்து தோன்றினான். அவன்வானத்திடத்தில் தோன்றிய பாலசூரியனைப் போன்று விளங்கினான். 19

ஆமி வன்அசு ரேந்திரன் என்றவற் கேழ்மான குரவன் இசைப்பஅந்
நாமம் எய்தி நலம்பெறு காளையாய்க், காமன் என்னக் கவின்றனன் யாக்கையே.

இவ்வாறு தோன்றிய பிள்ளையை இவன் அசுரேந்திரன் என்னும் நாமம் உடையன் ஆகட்டும் என்று அப்பிள்ளையின் இயல்பு நோக்கி மகிழ்ந்த குருவாகிய சுக்கிரன் பெயர் சூட்ட அந்த அசுரேந்திரன் என்னும் நாமத்தைப் பெற்றுக்கொண்டு எல்லா நலத்தையும் உடையவாலிபனாகி மன்மதன் எதனும்படி உடலம்அழகுடன் விளங்கினான். 20

ஓத ருங்கலை யாவும் உணர்கினும், ஏத மாவதோர் விஞ்சை இயற்றிடான்
பாத கம்புரி யான்பழி பூண்கிலான், நீதி யன்றி எவையும் நினைகிலான்.

கல்வி கற்றற்கு அரிய வித்தைகள் யாவற்றையும் கற்றுணர்ந்துகொண்டானாயினும் தீங்கு விளைவிக்கும் செயல் எதனையேனும் செய்யான்; பாதகம் செய்யான்; பழி அடையமாட்டான். நீதி அல்லாமல் வேறு எவையும் நினையமாட்டான். 21

வீறு கொண்டிகல் வீரம் புகன்றெதிர், மாறு கொண்டவர் உண்டெனின் மற்றவர்
ஈறு கொண்டிட ஏற்றுர மேற்படை, ஊறு கொண்டிட உன்னுந் தகைமையான்.

யாரேனும் இவனுடன் மாறுபட்டு வீறுகொண்டெழுந்து வீரப்பேசி எதிராக வருபவர் உண்டெனின் அவர்கள் முடியும்படி எதிர்த்து அவர்கள் நெஞ்சின்மேல் படைகளை வீசித் தழும்பு ஏற்படும்படி செய்யும் தகைமையை உடையவன். 22

சிகரம் எண்ணில சேட்படு கள்ளிதான், அகரும் நல்கி அமர்ந்தென அன்னதோர்
மகனை நல்கி வளங்கெழு மாயமா, நகர வாழ்க்கையின் நண்ணினன் தாரகன்.

அளவிறந்த தலைகளுடன் வளரப்பெற்ற கள்ளிமரமானது அகில் என்னும் வாசனைபொருந்திய பொருளைத் தந்து நிற்பதையொத்து தாரகாசுரன் அப்படியான அசுரேந்திரன் என்னும் மகனைப் பெற்றெடுத்து வளங்கொண்ட பெரிய மாயபுரி என்னும் நகரத்தில் தனது வாழ்க்கையை மேற்கொண்டிருந்தான். 23

புதல்வரைப் பெறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 1073.

——

729

# 20. வில்வலன் வாதாவிப் படலம்

அன்னவ ருடன்வந்தாள் அசமுகி எனுநாமம்
மன்னினள் ஒருவன்றன் மனையெனும் முறையில்லாள்
தன்னிறை தவிர்கின்றுள் தருமம திலள்வானோர்
பன்னியர் தமைமுன்னோர் படர்புயம் உறவுய்ப்பாள்.

அவ்வாறு புதல்வர்களைப் பெற்றுச் சிறப்புற்று அரசாண்டிருக்கின்ற; சூரபன்மன், சிங்கமுகாசூரன், தாரகன் என்னும் இவர்களுடன் கூடப் பிறந்தவளாயவள்; ஆட்டு முகமுடையவள் ஆனமையால், அசமுகி என்னும் பேருடையவள்; அவளது இயல்பைச் சுருங்கச் சொல்லுங்கால் ஒருவனுடைய மனைவி என்னும் முறை இல்லாதவள்; தான் ஒரு பெண் என்ற அளவில் இருக்கவேண்டிய நிறை என்னும் கற்பு இல்லாதவள்; இவளுடைய கொடுஞ்செயலாவது, தேவர்களுடைய பத்தினிகளைக் கண்டால் தூக்கிச்சென்று தனது தமையன்மாரிடத்து; அவர்கள் தோளை அணைந்து; அவர்கள் காம இச்சை தீரும்படி கொடுப்பவள். 1

ஒரு பெண்ணின் பெருமையாவது, ஒருவனுக்கே வாழ்க்கைப்பட்டேன் என்பதாகும்; ஆனால், இவள் அப்படியன்றிக் காண்பார் எவரையும் வலிதே பற்றிக் கணவனுக்கும் வெறிகொண்டவள்; ஆகையின், ஒருவனது மனைவி எனும் முறையில்லாதவள். இஃதன்றித் தான்மட்டுமன்றி தேவப் பெண்களைக்கூட தங்கள் கணவன்மாரை விடுத்து சூரபன்மன், சிங்கன், தாரகன்பால் சேர்ந்து அவர்களின் மனைவியாக வாழும்படி வைப்பாள் என்பதையும்; பின்னர் அவளின் முறை கேடுகள் பற்றியும் கூறினர்.

ஆள்வினை புரியுள்ளத் தவமுனி வரர்ஆற்றும்
வேள்விநை யுறும்வண்ணம் வெந்தொழில் புரிகின்றுள்
நீள்வினை வடிவானுள் நிருதர்கள் குலமெல்லாம்
மாள்வினை யெனயாண்டும் வைகலும உலவுற்றுள்.

பஞ்ச புலன்களின் இயல்பை அறிந்து; அவற்றை அடக்கி ஆண்டுகொள்ளும் உளளத்துடன் மேலான தவநெறிகளைச் செய்கின்ற; முனிவரது யாகங்கள் அழிந்துபோய்ச்; சிதைவாகும்படியான கொடிய செயல்களைச் செய்பவள்; இவள், ஒருகாலும் நீங்கிடாத பெரிய பாவத்தின் வடிவமானவள்; அசுரர் குலமெல்லாம் சீக்கிரத்தில் அழிந்துபோகும்படியான; குலநாசம் விளைவிக்கும் கொடிய செயலைப் புரிபவளாய் நிற்றலும் எங்கும் உலாவி வருவாள். 2

அழிப்பர் ஐவர் புரவுடையார்கள்
ஐவரும் புரவாசற ஆண்டு
கழித்து காற்பெய்து போயினபின்னைக்
கடைமுறை உனக்கே பொறையானேன்.

எனும் தேவாரக் கருத்தின்படி புலன்களால் தாம் ஆட்டுணுதே; புலன்களை அடக்கி ஆளும் உள்ள வலிமை கொண்ட தபோதனர்கள் என்பதை — ஆள்வினை புரியுள்ளத் தவமுனிவரர் என்றார் என்க. அப்படியானவர்களது செயலையும் இவள் கெடுப்பள் என்றமையின் அசமுகியினது கொடுமையின் வலிமை கூறப்பட்டது.

கட்டழ குளதாகுங் காளையர் தமைநாடிக்
கிட்டினள் புணர்கிற்பாள் கேளிரை இகழ்வோரை
அட்டனள் நுகர்கின்ருள் அனையவள் ஒருவைகல்
முட்டினள் துருவாச முனியுறு தனியெல்லை.

பேரழகு உடையதாய் விளங்கும் இளந்தாரிகளைக் கண்டால், அவர்களைக் கிட்டி வலிதே அவருடன் தான் புணருவாள்; தனது சுற்றத்தாராகிய அசுரரை யார் எனினும் இகழ்ந்தால்; அவரைக் கொன்று அவர்களின் இறந்த உடலத்தை உண்கின்றவள்; அப்படியானவள் ஒருநாள் துருவாச முனிவர் இருக்கின்ற தனியான ஆச்சிரமத்தின் இடத்தாக விறுவிறு என்று எதையும் எண்ணுமல் மிடுக்குடன் உட்பிரவேசித்தாள். 3

அந்தநன் முனிதன்னை ஆயிழை அவள்காணுச்
சிந்துவன் இவனின்னே செய்தவம் அஃதன்றி
மைந்தர்கள் பெறுவேனல் வல்லையில் இவணென்னுப்
புந்தியில் நினைவாயே போய்அவன் எதிருற்ருள்.

அந்த நல்ல துருவாச முனிவனை அசமுகி கண்ணுற்று; இவன் செய்த தவத்தை இப்பொழுதே சிதைப்பேன்; அதுவல்லாமல் இவனைக் கூடிப் பிள்ளைகளையும் பெற்றுக்கொள்வேன்; என்று மனதில் நினைந்துகொண்டு; துருவாச முனிவர் முன்பாக; நேரடியாக விறுக்கென்று சென்று நின்ருள். 4

உறுதலும் முனிநாடி ஒண்டொடி தனியேநீ
குறுகிய தெவன்மாதோ கூறுதி யெனலோடும்
மறுவறு முனிநின்பால் மனமகிழ் வொடுமேவிச்
சிறுவர்கள் பெறவந்தேன் செப்புவ திதுவென்ருள்.

எதிரே நின்ற அசமுகியைத் துருவாச முனிவர் பார்த்து; பெண்ணே! நீ தனியே வந்த காரணம் யாது; கூறுவாயாக என்னலும், அதுவேளை அசமுகி சொல்வாள்; குற்றம் நீங்கிய துருவாச முனிவரே உம்மோடு மன மகிழ்வுடன் நான் கூடி; குழந்தைகளைப் பெற்றுக்கொள்ளும் நினைவாகி வந்தேன்; இதைத் தான் இப்போது உமக்குச் சொல்வேன் என்ருள். 5

என்றலும் முனிசூரற் கிளையவள் எனநாடி
வெற்றிகொள் மடமாதே மேலுறு தவமெல்லாங்
குன்றிடும் உனையின்னே கூடுவ னெனின்நீயும்
நின்றிடல் பழியல்லால் நீதியும் அலவென்ருன்.

என்ற மாத்திரத்தே இதனைத் துருவாச முனிவர் உணர்ந்து; ஓகோ! இவள் சூரபன்மன் தங்கை அசமுகியல்லவோ என எண்ணி; அவளை நோக்கி; செல்கின்ற இடமெல்லாம் வெற்றி பெறுகின்ற மடம் பொருந்திய குணமுடைய பெண்ணே! நான் பலகாலமாக முன்பு செய்துகொண்ட தவமெல்லாம் குன்றிடும் உனை இப்போது இங்கு கூடுவேனுகில்; அதோடு நீயும் இங்கு நின்றிடல் பழியு மாகும்; அல்லாமல் நீதியும் அல்ல என்ருர். 6

முனியிது பகர்வேலை மொய்குழன் மடமானுள்
இனியுனை மருவாதே ஏகலன் ஒருவிப்போம்
மனநினை வொழிகென்றே வன்மையி னெடுபுல்லி
அனையவன் இதழூறல் ஆரமு தயிலுற்ருள்.

தூருவாசமுனிவன் இதனைச் சொல்லிய நேரத்து, கருமையுடன் மொய்த்திருக்கும் கூந்தலை உடைய அசமுகி அவரை நோக்கி, அப்படியாயின் இனி உன்னை வலிந்து நான் புணராமற் போகமாட்டேன். இவ்விடம் விட்டு விலகிப்போகும் எண்ணத்தை விட்டிடுவாயாக என்று கூறி, தூருவாசமுனிவனைத் தனது வலியால் இறுகத் தழுவி அவருடைய உதரத்தினின்று ஊறுகின்ற சிறந்த அமிர்தத்தை உண்ணத் தொடங்கினுள். 7

ஆடெனு முகவெய்யாள் அனையனை வலிதாகக்
கூடினள் அதுபோழ்தில் குறுகினர் இருமைந்தர்
ஈடுறு வலிமிக்கார் இன்னவர் தமையன்னை
மாடுற வருகென்றே மகிழ்வொடு தழூவுற்ருள்.

ஆடெனும் முகமுடைய கொடியவளான அசமுகி என்பாள் தூருவாசமுனிவனை வலிதே பிடித்துப் புணர்ந்து கூடுதலும், அதுபோழ்தில் இரண்டு பிள்ளைகள் அங்கு தோன்றினர். அவர்கள் மாளாது பெருகி விளங்கும் வலிமை மிக்கவர். அவர்களை அசமுகி நோக்கி, என் மக்களே! எனது பக்கராக வருவீராக என அன்புடன் அவர்களை அணைத்துத் தழுவிக் கொண்டாள். 8

தழுவினள் பரிவோடுந் தன்புதல் வரைநோக்கி
மழகளி றனையிர்காள் வல்லவு ணரில்வந்தீர்
விழுமிய தவமாற்றி மேவுதிர் வலியென்ன
அழிதரு நிறைகொண்ட அசமுகி உரைசெய்தாள்.

பரிவால் தழுவியபின் தனது பிள்ளைகளை அசமுகி நோக்கி, இளமையுடன் விளங்கும் மதயானையை ஒத்த எனது செல்வர்களே! நீங்கள் வலிமை உடைய அசுரகணத்தவர்களில் உதித்தீர்கள். நீங்கள் பெருமை மிக்க தவத்தைச் செய்து அதனுல் வலியடைந்துகொள்வீராக என்று அழிந்து பாழாகிப் போகின்ற கற்பினை உடைய அசமுகி கூறினுள்.

நிறைவெனும் கற்பு எனப்படுவது உலகில் தோன்றுகின்ற அனைத்துப் பெண்களுக்கும் பொதுவாக ஈசனுல் தரப்பட்டது. ஆனுல் இங்கே இவள் தனது நடத்தையால் கற்பினை பாழாக்கித் தனது பெருமை நீங்கி, அதனுல் தனது குலத்தின் அழிவிற்கு வழியானுள் என்றமையின், அழிதரு நிறைகொண்ட அசமுகி என்ருர். 9

தாயின துருவாயுந் தந்தைதன் உருவாயும்
ஏயின இருமைந்தர் வில்வலன் வாதாவி
ஆயதொர் பெயர்பெற்ருேர் அன்னைதன் உரைகொண்டே
தூயதொர் குரவோன்றன் துணையடி பணிகுற்ருர்.

இவ்வாறு தோன்றிய இரு புதல்வர்களும், ஒருவன் இளையவன் தாயின் உருவான ஆட்டுமுகம் உடையவனாய் வாதாவி என்றும், மற்றையன் தந்தை தாருவாசமுனிவனைப் போன்று அழகிய பிராமண உருவாய் வில்வலன் என்னும் பெயருடனும் விளங்கினார்கள். இந்த வில்வலனும் வாதாவியும் தாயின் சொல்லை ஏற்றுக்கொண்டு தூய்மை கொண்ட வாழ்க்கையுடைய தந்தை தாருவாசமுனிவரின் இரண்டு பாதங்களையும் வணங்கினார்கள். 10

மூண்டிடு வெகுளித்தீ முனிவரன் அடிதன்னைப்
பூண்டிடு திறன்மிக்க புதல்வரை யெதிர்நோக்கி
வேண்டிய தெவனென்ன வெய்யவள் தருமைந்தர்
ஈண்டுன தவமெல்லாம் யாம்பெற அருளென்றார்.

எக்காலமுமே மூண்டு எரியும் கோபமான பெருநெருப்புடைய தூருவாச முனிவனின் பாதத்தைத் தாழ்ந்து வணங்கிய வலிமை மிக்க புதல்வர்களை நேராகத் தூருவாசர் பார்த்து, உங்களுக்கு வேண்டியது எதுவாகும் என்னலும், கொடிய அசமுகி பெற்றெடுத்த இரு மைந்தரும் அவரை நோக்கி இவ்விடத்து நீர் செய்த தவத்தை எல்லாம் நாம் பெறும்படி நீர் கருணையுடன் அருள் செய்வீர் என்றார்கள். 11

ஆற்றிடு தவமெல்லாம் அருளெனின் அவைதாரேன்
வீற்றொரு பொருளுண்டேல் வினவுதிர் எனமேலோன்,
சீற்றம துளராகிச் சிறுவர்கள் இவன்ஆவி
மாற்றுதும் இவண்என்னா வல்லையின் எழலுற்றார்.

அப்போது அதுகேட்டுப் புதல்வரை நோக்கி, நான் செய்த தவமெல்லாவற்றையும் தருவீராக என நீர் கேட்டால், அவற்றைத் தரமாட்டேன். அதை விடுத்து வேறொரு பொருள் வேண்டுதிராயின் அதைக் கேளுங்கள் தருவேன் என மேலோரான தூருவாசமுனிவர் சொல்லலும், தாம் கேட்டதை தராமையினால் அவர்மேல் கோபம்கொண்ட இரு பிள்ளைகளும் இந்த முனிவனுடைய உயிரை இப்போதே நாம் மாய்ப்போம் என விரைவுடன் தந்தையைக் கொல்லும்படி எழுந்தார்கள். 12

இறுதிசெய் திடவுன்னி இகலுடன் எழுகின்ற
சிறுவர்கள் செயல்நாடிச் சினமொடு முனிநீவிர்
மறுவறு தவருக்கே வைகலும் இடர்செய்வீர்
குறுமுனி நுமதாவி கொள்ளுக இனியென்றான்.

தன்னை முடிவு செய்ய நினைந்து வலியுடன் எழுகின்ற தனது பிள்ளைகளின் செயலை நாடி அறிந்துகொண்ட தூருவாசமுனிவர் கோபம்கொண்டு அவர்களை நோக்கி, நீங்கள் என்னைக் கொல்ல எண்ணியமையால் நிற்றலும் முனிவர்க்கே இடர்செய்து கொலைபுரிந்து வருவீர்கள். இறுதியில் உங்கள் உயிரை அகத்திய முனிவன் நீக்குவான்; அவனால் இறப்பீர்கள் என்று சாபமிட்டார். 13

இனையது முனிசொற்றே எமையடு வர்களென்னு
மனமுறு தனிவிஞ்சை மாயையின் மறைபோழ்தில்
தனயர்கள் இருவோருந் தந்தைத னைக்காணார்
அனைதனை விடைகொண்டே யாயிடை ஒருவுற்றார்.

இந்த வார்த்தையைத் தூருவாசமுனிவர் கூறி நாம் இங்கு நிற்பின் எம்மை இவர்கள் கொல்வார்கள் என்று, மனதில் முன்னர் கற்றுணர்ந்த வித்தையான மாயையால் மறைகின்ற நேரத்தில், பிள்ளைகள் இருவோரும் தந்தை தூருவாசரைக் காணாது தாயினை அடைந்து அவளிடம் விடைபெற்றுக்கொண்டு அவ்விடத்தை நீங்கிச் சென்றார்கள். 14

வேறொரு வனமெய்தி மெய்த்தவர் குழுவெல்லாங்
கோறலை மனமுன்னிக் குமரர்கள் இருவோரும்
தேறிய வுணர்வோடுந் திசைமுக வனைநோக்கி
ஈறகல் பகலாக எரியத னிடைநோற்றார்.

வேறொரு வனத்தில் சென்று உண்மையான தவத்தைச் செய்கின்ற முனிவர் கூட்டத்தைக் கொலைபுரிந்து வாழ்வதே நோக்கமாகப் புதல்வர்கள் இருவோரும் மனதில் எண்ணித் தெளிந்துகொண்ட உணர்ச்சியுடன் நான்கு முகமுடைய பிரமதேவரை நினைந்துகொண்டு முடிவில்லாத பல நாட்களாக நெருப்பினிடத்தாக நின்று தவம் செய்தார்கள். 15

செந்தழ லிடைநோன்பு செய்யவும் அயன்அங்கண்
வந்திலன் அதுநாடி மற்றொரு செயலுன்னி
வெந்திறல் இளையோனை வில்வல னெனும்வெய்யோன்
சுந்தர மணிவாளால் துணிபட எறிகுற்றான்.

இவர்கள் கொடும் வெப்பமுடைய சிவந்த சுடர்கொண்ட நெருப்பின்மீது நின்று தவத்தைச் செய்யவும்கூட பிரமதேவர் அங்கண் தோன்றவில்லை. அதை அறிந்துகொண்ட வில்வலன் எனும் கொடியவன் வேறொரு உபாயத்தை நினைந்து தனது பொல்லாத வலியுடைய தம்பியான வாதாவி என்பானைக் கூரிய வாளினால் இரண்டு துணியாக விழும்படி வீசி வெட்டினான். 16

கையன துடல்கீறிக் கறையொடு தசையெல்லாம்
நெய்யுடன் அவியாக்கி நீடிய கனலூடே
வையகம் அருள்தாதை மந்திர முறையுய்த்து
வெய்யவன் ஒருவேள்வி விரைவொடு புரிகுற்றான்.

வஞ்சனையுடைய தம்பியான வாதவியின் உடலை பின்னர் வாளால் அரிந்து இரத்தத்துடன் தசைகள் யாவற்றையும் நெய்யுடன் சேர்த்து அவிப்பொருளாக்கி அதனை நீண்ட சுடருடைய அக்கினியிலே பூமியைப் படைத்த தந்தையான பிரமதேவரின் மந்திரத்தை முறைப்படி செபித்துக்கொண்டு சொரிந்து கொடியவனான வில்வலன் ஒரு யாகத்தை விரைவாகச் செய்யலுற்றான். 17

தவமொடு மகமாற்றச் சதுர்முகன் அதுகண்டே
அவனியின் மிசைவந்தே அரியதொர் செயல்செய்வாய்
எவனருள் பரிசென்ன இணையடி தொழுதேத்தி
அவுணர்கள் வடிவாம்வில் வலன்இவை அறைகின்றான்.

தவத்துடனுகை யாகத்தையும் இவ்வண்ணம் செய்யப் பிரமேதவர் அதனைக் கண்டு பூமியின்மீதாகத் தோன்றி வில்வலனை நோக்கி, அரியதான செயலைச் செய்வாய் உனக்கு யான் தரும் வரத்தின் இயல்பு யாது சொல்லுக எனலும், அப்போது பிரமதேவரின் திருவடிகளில் தொழுது வணங்கி அசுரர்கள் வடிவுடைய வில்வலன் இதைச் சொல்கின்றான். 18

வன்னியில் அவியூணாய் மாண்டிடும் ஒருபின்னோன்
மெய்ந்நிறை வடிவோடும் விரைவுடன் வரல்வேண்டும்
என்னலும் வாதாவி எழுகென அயன்ஓத
அன்னதொர் பொழுதின்கண் ஆர்த்தவன் எழுந்திட்டான்.

ஐயனே, நெருப்பின்மீது சொரியப்பட்ட அவிப்பொருளாகி இறந்துபோன எனது தம்பி மேனி நிறைந்த வடிவுடன் பழையபடி வரல் வேண்டும் என்று கூறலும், அதுவேளை பிரமதேவர் வாதாவியே எழுவாயாக என மொழிந்தருள அம்மாத்திரத்தே தம்பி வாதாவி இரைந்து ஆர்த்துக்கொண்டு எழுந்திட்டான் 19

ஆங்கனம் அசுரேசன் அதிசய முளனாகித்
தீங்குடன் ஒருசூழ்ச்சி சிந்தையி னிடையுன்னிப்
பூங்கம லத்தோனைப் போற்றிசெய் தடியேனுக்
கீங்கொரு வரம்எந்தாய் ஈகென உரைசெய்வான்.

தம்பி உயிர்பெற்றெழுந்ததைக் கண்டுகொண்ட வில்வலன் அங்கு அதிசயம் கொண்டு தீங்குடனாகிய ஒரு சூழ்ச்சியைத் தனது சிந்தையிலே நினைந்துகொண்டு பூவாகிய தாமரைமீதிருக்கின்ற பிரமதேவரைப் போற்றுதல் புரிந்து ஐயனே, அடியேனுக்கு இங்கு இன்னுமொரு வரத்தை எந்தைபிரானே தரல் வேண்டுமென்று அதன் இயல்பைச் சொல்லுவான். 20

புல்லயின் மறியேபோற் பொலிவுறும் வாதாவி
ஒல்லையின் இனிமேலும் உடல்துணி படுவானேல்
எல்லையில் பரிவால்யான் எம்பியை எழுகென்னத்
தொல்லையில் வடிவோடுந் தோன்றிமுன் வரல்வேண்டும்.

புல்லினை உண்கின்ற ஆட்டினைப்போலப் பொலிவுற்றிருக்கின்ற வாதாவி என்பான் விரைவுடன் இனிமேலும் தனது உடல் துணிபடுவானேல், நான் அவன் மீதுள்ள அளவற்ற பற்றினால் எனது தம்பியே எழுவாயாக என அழைத்தால் அப்போது அவன் தனது பழைய உருவுடன் என் முன் தோன்றிவரல் வேண்டும். 21

இப்படி வரமொன்றே யான்பெற அருள்கென்றே
மெய்ப்படும் உணர்வில்லா வில்வலன் உரைசெய்ய
அப்படி பலகாலம் அதுமுடி கெனநல்கிச்
செப்பரு மறைவேதாச் சேணுடை நெறிசென்றான்.

இப்படியான வரம் ஒன்றினை யான் பெறும்படி நீ அருள் செய்வாயாக என்று உண்மை விளைவான உணர்வு இல்லாத வில்வலன் உரைத்து நிற்ப, அப்போது பிரமதேவர் அப்படியே பலகாலம் அது முடிவுபெறட்டும் என வரம் கொடுத்து, சொல்லற்கரிய வேதங்களை ஓதியருளும் பிரமதேவர் வானமார்க்கமாக மறைந்தருளினார். 22

சேறலும் அதுகாலைச் சிறுவர்கள் இருவோரும்
ஏறெனை அமர்சூர்முன் ஏகியுன் மருகோர்யாம்
வேறல எனவோதி மேதினி முனிவோரைக்
கோறல்செய் பெருவன்மை கொண்டதும் உரைசெய்தார்.

பிரமதேவர் சென்றுவிடுதலும், அதுகாலையில் வில்வலன், வாதாவி எனும் புதல்வர் இருவோரும் அங்கு நின்றும், ஆண்சிங்கம்போன்றிருக்கின்ற சூரன் முன்பு சென்று சூரனைநோக்கி, நாங்கள் உனது மருமக்களாவோம் வேறல்ல எனக் கூறி, பூமியிலுள்ள முனிவோரைக் கொலை செய்வதற்குரிய பெருவலிமையைத் தாங்கள் பிரமதேவரிடமிருந்து தங்கள் உபாயத்தினால் வரமாகப் பெற்றுக் கொண்ட வரலாற்றை உரைசெய்தார்கள். 23

மன்னவன் அவர்தம்மை மகிழ்வொடு நனிபுல்லி
என்னுழை மருகீர்காள் இனிமையொ டுறுமென்ன
அன்னவர் சிலவைகல் ஆயிடை தனில்வைகிப்
பின்னுற இருவோரும் பெருநில மிசைவந்தார்.

அதைக் கேட்ட அரசனான சூரபன்மன் அவர்களை அன்பு மகிழ்வுடன் நன்றாக அணைத்துத் தழுவி, எனது மருமக்களே! நன்றாக நீங்கள் எனது இடத்தில் இனிமையுடன் இருப்பீராக எனலும், அப்படியே அவர்கள் இருவரும் சில நாட்கள் அவ்விடத்து இருந்த பிற்பாடு இரண்டுபேரும் மீண்டும் இப்பெரிய பூமியில் வந்தார்கள். 24

நவைதவிர் குடகின்கண் நால்வகை நெறிகூடுங்
கவலையின் வளமல்குங் கானக விடைதன்னில்
அவுணர்கள் தாம்அங்கோர் ஆச்சிர மஞ்செய்தே
எவரெவ ரும்வெஃகும் எப்பொருள் களுமுய்த்தார்.

குறைவெல்லாம் நீங்கிய தமிழ் வழங்குதேசத்தின் மேற்கெல்லையில் இருக்கும் குடகநாட்டில் நான்கு தெருக்கள் கூடுகின்ற ஒரு சந்தியில், வளங்கள் எல்லாம் செறிந்த ஒரு வனத்திடத்து இந்த அசுரர்கள் தாங்களாக ஓர் ஆச்சிரமம் செய்து அங்கு எவரெவரும் விரும்பும் எல்லாப் பொருள்களையும் அங்கு சேர்த்தார்கள். 25

அன்னதோ ரிடைதன்னில் ஆரிட ராயுள்ளோர்
இன்னுயிர் கொளவுன்னி இருவருள் இளமைந்தன்
பொன்னிவர் திரிகோட்டுப் பொருதகரா ய்நிற்க
முன்னவன் விரதஞ்செய் முனிவரின் இனிதுற்றான்.

அந்த இடத்திலே முனிவராயுள்ளோர்களது உயிரை மாய்த்து அவர்களது ஊனை உண்ண விரும்பி இரண்டு அசுரரில், இளையவனான வாதாவி என்பான் பொன்விளங்கும் முறுகித் திரிந்த கொம்பினை உடைய போர் செய்யும் ஆட்டுக் கடா போல நிற்ப, மூத்தவனான வில்வலன் தவவிரதச் செயல்கொண்டுள்ள முனிவரைப்போல இனிதுடைய வடிவுகொண்டு நின்றான். 26

வில்வலன் எனவோதும் வெய்யவன் அவ்வெல்லைச்
செல்வதோர் முனிவோரைச் செவ்விதின் எதிர்கொண்டு
வல்விரை வொடுதாழ்ந்து மற்றும தடியேன்றன்
இல்வரு வீரென்னா இயல்பொடு கொடுசென்றே.

வில்வலன் எனச் செல்லப்படும் அக்கொடியவன் அவ்வெல்லையில் அவ்வழி யாகச் செல்லும் முனிவரை செவ்விதின் முறையாக எதிர்கொண்டு அவர் முன்பு மிகு விரைவுடன் தாழ்ந்து வணங்கி, ஐயன்மீர்! நாங்கள் உங்கட்கு ஏவல் புரியும் அடியரானோம். எமது இல்லமாகிய ஆச்சிரமத்திற்கு வருவீராக என்று இயல் பான இன்பவார்த்தைகளுடன் அழைத்துக்கொண்டு சென்று: 27

இப்பகல் அடிகேளுக் கிவ்விடை உணவென்னா
ஒப்பறு நெறிகூறி ஓதன வகையெல்லாம்
அப்பொழு தினிலட்டே அயமெனும் இளையோனைத்
துப்புறு கறியாகத் துண்டம துறுவித்தே.

இன்று பகல் பெரியோய் உமக்கு இவ்விடத்துப் போசனம் ஆகட்டும் என சொல்லற்கரிய நெறிமுறைமைகளுடன் வேண்டுதல் செய்து, அவர் உணவிற்கு வேண்டிய சாத வகைகளையெல்லாம் அப்பொழுதினில் சமைத்துக்கொண்டு, ஆட்டுக்கடா வடிவமுடைய இளையவனை மிகவும் சுவையுடைய கறியாகும்படி துண்டமதாக வாளால் வெட்டுவான். 28

உள்ளுறு குறியாகும் ஊன்முழு வதும்நாடி
வள்ளுறு சுடர்வாளால் வகைவகை படவீர்ந்தே
அள்ளுறு கறியாக அட்டபின் அவரவ்வூண்
கொள்ளுற நுகர்வித்தே கூவுவன் இளையோனை.

தோலினை நீக்கி உள்ளே இருக்கும் கறிசமைக்கும் பொருள்களான இறைச்சி, ஊனம் முழுவதையும் நாடி அவைகளை கூர்மையான வாளால் அரிந்தெடுத்துக் கொண்டு தித்திப்புடைய கறியாகச் சமைத்தபின், அந்த முனிவர்களை அந்த இறைச்சியையும் அமுதினையும் உண்ணும்படி செய்வித்துக்கொண்டு, தம்பியான வாதாவியை வாவெனக் கூவி அழைப்பான் வில்வலன்; 29

கூவிய பொழுதின்கட் கொறியெனும் உருவானேன்
ஆவிமெய் யுளனுகி அன்னவர் உதரத்தை
மாவலி யொடுகீண்டே வருதலும் இருவோருந்
சாவுறு முனிவோர்தந் தசையினை மிசைவாரால்.

வாதாவி வாவென வில்வலன் கூவியழைத்த பொழுதினில், ஆட்டுவடிவ முடைய வாதாவி என்பவன் உயிரையும் உடலையும் மீண்டும் உடையவனுகி, அவனை இறைச்சியாக உண்ட முனிவர்களுடைய வயிற்றைப் பெரும் வலியுடன் கிழித்துக்கொண்டு வருதலும், வயிறு கிழிபட்ட முனிவர் இறப்ப, பின்னர் இறந்த முனிவோர் உடலங்களின் தசைகளை வில்வலனும் வாதாவியும் உண்பார்கள். 30

வேறு

வீடுறு முனிவர்ஊன் மிசைந்து தொன்மைபோல்
ஆடென முனியென அனையர் மேவியே
நாடொறும் இச்செயல் நடாத்தி யுற்றனர்
கேடறு முனிவர்தங் கிளைகள் மாளவே.

இறந்துபோன முனிவர்கள் ஊனினை உண்டு பழமை போல வில்வலனும் வாதாவியும், ஆடெனவும் முனிவன் எனவும் வடிவங்கொண்டு மீண்டும் ஆச்சிரமத்தில் இருந்துகொண்டு, அவ்வழியால் வரும் முனிவர்களை அவ்வண்ணம் வஞ்சித்துக் கொன்று, நாடோறும் இச்செயலை நடாத்திக்கொண்டு இருந்தனர். இதனுல் கேடிலாத முனிவர் கூட்டம் மாய்ந்துபோயது. 31

**வில்வலன் வாதாவிப் படலம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம் — 1104.

---

# 21. இந்திரன் கரந்துறை படலம்

**இப்படி அவுணர்கள் இனையர் ஏனையோர், செப்பரு முனிவரைத் தேவர் தங்களை ஒப்பறு நரர்தமை ஒறுப்ப மாயைதான், வைப்புறு காதலன் அரசின் மன்னினுன்.**

எம்பிரானே! திருச்செந்தூர் அமர்ந்த தேவே! கேட்டருள்க என வியாழ பகவான் மீண்டும் சொல்வார்:

இப்படியாக அசுரர்கள் இருவரும் ஏனையோர்களான வேறு அசுரரும் சொல்லற்கரிய தவநெறியுடைய முனிவர் தங்களை, தேவர்களை, ஒப்பற்ற மனிதர்களைக் கொன்று துயருறுத்தி வர, மாயை தன்னுடைய நித்திய வாழ்வுடைய மகன் சூரபன் அரசாட்சியில் பொருந்தி இருந்தான். 1

**ஆயிரத் தெட்டெனும் அண்டம் யாவையுஞ், சேயுயர் இந்திர ஞாலத் தேர்மிசை ஏயெனும் அளவையில் ஏகி வைகலும், நாயக முறையினை நடாத்தி நண்ணினுன்.**

ஆயிரத் தெட்டெனும் அண்டங்கள் யாவையும் மிக வானளாவி உயர்ந்த இந்திரஞாலம் என்னும் தேர் மேலாக எழுந்து, ஏ என்னும் அளவையில் சென்று ஆங்காங்கு தனது நாயகமாகிய அரசியல் முறையினைக் கவனித்து நடாத்தி வருவானாயினன். 2

**ஒருபகற் பாதலத் தூடு வைகிடும், ஒருபகல் மாதிரம் உலவிச் சேர்தரும்**
**ஒருபகல் விண்பதந் தோறும் உற்றிடும், ஒருபகல் அயன்பதத் துன்னி மன்னுமே.**

ஒருநாள் பகற்பொழுதில் பாதாள உலகத்தில் சென்றிருப்பான். ஒருநாள் பகற்பொழுது திக்கில் உள்ள உலகங்களில் சென்றிருப்பான். ஒரு பகற்பொழுது வான உலக பதந்தோறும் சென்று இருப்பான். ஒருநாள் பகற்பொழுது இதனிலும் மேலான பிரமதேவனுடைய உலகுதோறும் சென்று இருப்பான். 3

**தண்ணறுந் துளவினான் தனது தொல்பதம், நண்ணிடும் ஒருபகல் நாளு மிவ்வகை**
**எண்ணரும் உலகுதோ றேகி மாலையில், துண்ணென மீள்வனால் சூர பன்மனே.**

வாசனையுடன் குளிர்ச்சிபொருந்திய துளசிமாலையையணிந்த விஷ்ணுமூர்த்தியின் வைகுந்தபதத்தில் ஒருபகல் வீற்றிருப்பான். இப்படியாக நாளும் நாளும் எண்ணற்ற உலகுகள்தோறும் காலையிற் சென்று மாலைப்பொழுதில் மீண்டும் திடீரென வீரமகேந்திரபுரம் மீண்டுவருவான் சூரபன்மன். 4

**அவ்வகை யால்அர சாற்றும் எல்லையில், எவ்வமில் சூர்முதல் இந்தி ரன்னெனுந்**
**தெவ்வினை வன்சிறை செய்து தேவியை, வவ்விய வுன்னினன் வருவ தோர்கிலான்.**

அவ்வகையால் இன்பமுற அரசாண்டுவரும் எல்லையில் ஏதொன்றாலும் குறைவிலாத சூரபன்மன், இந்திரன் என்னும் தனது பகைவனைச் சிறைப்படுத்திக் கொண்டு, அழகு மிகுந்த இந்திரன் தேவியான இந்திராணியைத் தனக்கு மனைவியாக்கிக்கொள்ளவும் எண்ணினன் சூரபன்மன். இப்படி எண்ணுங்கால் தனக்கு இதனால் என்ன நேரும் என்பதை உணர்ந்து கொள்ளாதவனாகி. 5

**உன்னிய தீயவன் ஒருதன் தானையின், மன்னனை விளித்துநீ வாச வன்றனை**
**இன்னதோர் பொழுதினில் எய்திப் பற்றியென், முன்னுற விடுகென முன்னம் ஏவியே.**

இவ்வாறு எண்ணிய தீயவனான சூரபன்மன் ஒப்பற்ற வலிகொண்ட தனது சேனையின் தலைவன் ஒருவனை அழைத்து, அவனை நோக்கி, நீ இந்திரனை இப்பொழுதுதானே சென்று அடைந்து, அவனைப் பற்றிப்பிடித்துக்கொண்டு வந்து என் முன்னாக விடுவாயாக என அந்தச் சேனைத்தலைவனை அதைச் செய்யும்படி முன்னாக ஏவிவிட்டு. 6

**நீடிய தன்பெரு நிலையங் காப்பவர், கோடுறு நிசிசரர் குலத்துள் தோன்றினர்**
**கேடகம் வாள்அயில் கெழுவு கையினர், பாடவ மடந்தையர் பவங்கள் போன்றுளார்.**

பரந்து விளங்கும் தனது அரண்மனையில் உள்ள நிலையங்களைக் காவல் கொள்பவரும்; நெறிதவறிய அசுர குலத்தில் தோன்றியவரும்; கேடயம், வாள், வேல் இவைகளைப் பொருந்திய கையினை உடையவரும்; தீய ஒழுக்கமுடைய பெண்கள் செய்கின்ற பாவ விளைவின் வண்ணமான வடிவங்களைப் போன்றிருக்கும் காவல் பெண்களாகியவர்? 7

**ஒன்பது கோடியர் தம்மை ஒல்லையில், அன்புடன் விளித்துநீர் அமரர் தம்மிறை**
**இன்புறு தேவியைப் பற்றி யீமென, வன்பொடு போக்கினன் மன்னர் மன்னனே.**

ஒன்பது கோடியர் என்னும் தொகையுடையோரை அழைத்து, அன்புடன் அவரை நோக்கி, நீங்கள் சென்று தேவ அரசனான இந்திரன் இன்புற்று மகிழ்கின்ற அவனது மனைவியை, இந்திராணியைப் பிடித்துக்கொண்டு இங்கு கொண்டு வருவீராக என வலியுடன் அவர்களைப் போகச்செய்தான் மன்னர் மன்னனான சூரபன்மன். 8

**போக்கலும் அவரெலாம் பொன்னின் நாட்டின்மேல், ஊக்கம தாகியே உருத்துச் சேறலும்**
**நோக்கிய தூதுவர் நொய்திற் போகியே, மாக்கிளர் இந்திரன் மருங்கு நண்ணினர்.**

இவ்வாறு அந்தச் சேவகப் பெண்களைப் போக்கலும், அவர்கள் எல்லாம் பொன்மயமான சொர்க்க உலகமேலாக உருத்துக் கோபத்துடன் செல்லலும், இவர்களது வரவைக் கண்ணுற்ற தேவதூதுவர்கள் விரைவுடன் ஓடிச்சென்று இலட்சுமீகரம் பொருந்தி விளங்கும் இந்திரன்பால் சேர்ந்து இதனைச் சொல்வார்கள். 9

**வந்தனர் அவுணரும் வயங்கொள் மாதரும், அந்தமில் படையொடும் அடல்செய் நீரர்போல்**
**சிந்தனை யாவதோ தெரிந்தி லோமென, இந்திரன் வினவுற இசைத்து நிற்கவே.**

அரசே கேட்பீராக! எங்கள் நாட்டின் மேலாக என்றும் இல்லாதபடி அசுரரும் அசுரப் பெண்களும் அளவற்ற படைகளைக் கையில் ஏந்தி, எமது நாட்டின்மேல் போர்புரிய வரும் வீரரைப்போல் வந்துள்ளார்கள். அவர்களின் சிந்தனை எதுவாகிறதோ நாம் அதை அறியமாட்டோம் என்று இந்திரன் கேட்கும்படி தூதுவர்கள் சொல்லி நிற்றலும். 10

**பொம்மென அவர்தமைப் போக்கித் தீயினும், வெம்மைகொள் நெஞ்சினர் வினைய முன்னியே**
**அம்மனை மனைவியோ டகன்று மாயையான், இம்மென இப்புவி தன்னில் ஏகினன்.**

அவர்கள் சொன்னதை இந்திரன் கேட்டலும் விரைவுடன் அவர்களை அப்பால் போகுமாறு அனுப்பிவிட்டு, நெருப்பினும் கொடுமைகொண்ட நெஞ்சினை உடைய அந்த அசுரர்கள் செய்யவிருக்கும் கருமங்களை உணர்ந்து விளங்கிக் கொண்டு, உடனாக அழகுடன் விளங்கும் தனது இருப்பிடத்தை விடுத்து மனைவி இந்திராணியுடன் எழுந்து, மாயையால் ஒருவருக்கும் தெரியாதபடி சீக்கிரமாக இந்தப் பூமியில் வந்தருளினன். 11

**ஏகிய வெல்லையின் இகல்வெஞ் சூர்விடப், போகிய மாதரும் பொருவில் வீரரும்**
**நாகர்தம் மிறையமர் நகரை நண்ணினர், ஆகர முதலிய இடந்தொ றுய்குவார்.**

இந்திரன் மனைவியுடன் ஒளித்தோடிய நேரத்தில், போர்நிலைமை குன்றாத கொடிய சூரன் அனுப்பிவைக்கச் சென்றுள்ள பெண்களும், நிகரற்ற வீரர்களும் தேவர்கள் தலைவனான இந்திரக்கடவுள் இருக்கும் நகரத்தைச் சேர்ந்தார்கள். சேர்ந்து, அங்கு இந்திரனையும் மனைவியையும் அந்தப்புரம் முதலிய எல்லா இடமும் தேடினார்கள். 12

**வினைவயிற் சென்றிடும் வீரர் யாவருந், துனைமகத் திறைவனைத் துருவிக் காண்கிலர்**
**மனைவியைக் காண்கிலர் மாதர் யாவரும், நினைவயர்த் துள்ளுறு கவலை நீடினார்.**

சூரபன்மன் கட்டளையான கொடுஞ் செயலைப் புரியுமாறு சென்றுள்ள அசுரவீரர்கள் யாவரும், சிறப்புமிக்க யாகங்களுக் கிறைவனான இந்திரனை, அவன் மனைவியைத் துருவி ஆராய்ந்து பார்த்தும் காணாதவராய், அப்பெண்கள் யாவரும் தாங்கள் வந்துள்ள நோக்கம் தவறியமையால் நினைப்பும் அயர்த்து, உள்ளத்துப் பெருங்கவலையால் நெடிது வருந்தினார்கள். 13

**நாயகன் இவ்விடை நம்மைக் கூவியே, ஏயின செயலினை ஈறு செய்கிலம்**
**போயினன் சசியொடும் புலவர் கோனெனா, ஆயவன் நகரெலாம் ஆய்வுற் றாரரோ.**

எங்கள் நாயகனான சூரபன்மன் இவ்விடத்து நம்மை அழைத்து அனுப்பி வைத்துள்ள காரியத்தை முடித்துக்கொள்ள மாட்டாமல் போயினோம். அந்தோ! தேவர் தலைவனான இந்திரன். இந்திராணியுடன் ஒளித்தோடி விட்டான் என்று இந்திரனது நகரமெங்கும் ஆராய்ந்து பார்த்தார்கள். 14

**சுற்றினர் நகரெலாந் துருவித் தேவரைப், பற்றினர் விலங்கலின் பகைவற் காட்டென**
**எற்றினர் புலோமசை யாண்டை யாளெனக், குற்றினர் வாய்தொறுங்**
**குருதி பாயவே.**

நகரமெல்லாம் அசுரர்கள் தேடுதலில் சுற்றித் திரிந்தார்கள். தேவர்களைப் பிடித்தார்கள்; அடித்தார்கள். இந்திராணி எங்குற்றாள் சொல்லுங்கள் என அவர்களைக் குற்றினார்கள். அடித்த அடியால் வாயிலிருந்து இரத்தம் கக்கிப் பாயும்படியாக. 15

**விண்ணவர் யாவரும் வேந்துந் தேவியும், நண்ணிய துணர்கிலம் நாங்கள் எங்களைத்**
**துண்ணென வருத்தலிர் துயரின் றேமெனாத், தண்ணளி வருநெறி**
**தளர்ந்து சாற்றவே.**

அடிபடும் தேவர்கள் யாவரும் அசுரர்களை நோக்கி, எங்கள் அரசனும் தேவியும் போன இடம் நாங்கள் அறியமாட்டோம். எங்களை விறுவிறென அடித்து வருத்தாதீர்கள். நாங்கள் மிகவும் வருந்துகின்றோம் என்று கொடுமையுடைய அசுரர்களிடம் இரக்கம் வருமாறு புலம்பி அழுது தளர்வுடன் சொல்லலும்: 16

**விட்டனர் தேவரை விண்ணை நீங்கினர், முட்டினர் மகேந்திர முதிய மாநகர்**
**கிட்டினர் வேந்தனைக் கிளர்ந்து வானிடைப், பட்டது புகன்றனர்**
**பழிகொள் நெஞ்சினர்.**

அவ்வேளை, அசுரர் தேவர்களை இப்போது அடியாது விடுத்தார்கள். தேவ உலகைவிட்டு நீங்கினார்கள். வீரமகேந்திரபுரம் என்னும் முதிய பெரிய நகரத்தை மீண்டும் சேர்ந்தார்கள். சூரபன்மன் முன் சென்று அடைந்தார்கள். அவர்கள் வான உலகில் தாம் சென்ற வரலாறு யாவற்றையும் வெட்கமும் கவலையும் மிகுந்த நெஞ்சுடன் சொன்னார்கள். 17

போயினர் இருவரும் புறத்த ராயென, ஆயவர் மொழியவே அவுணர் மன்னவன்
தீயென வெகுண்டனன் தேடொ ணாததோர், தூய்மணி இழந்திடும் அரவின்
துன்புளான்.

அரசே! இந்திரனும் இந்திராணியும் அந்நாட்டில் வாழாதவர் போன்று ஓடிச்சென்றார்கள். நாங்கள் தேடியும் காண்கிலம் என அவர்கள் கூறுதலும், அசுரர் தலைவனான சூரபன்மன் அது கேட்டு நெருப்பைப்போல வெகுட்சி கொண்டான். அவன் தேடமுடியாத ஓர் அழகிய இரத்தினத்தினை இளந்துள்ள ஒருவனைப்போன்று துயரங் கொண்டான். 18

ஒற்றரிற் பலர்தமை யொல்லை கூவியே, பொற்றொடி அணங்கொடு பொன்னின்
நாட்டவர்
கொற்றவன் இருந்துழிக் குறுகி நாடியே, சொற்றிடு வீரெனச் சூரன் தூண்டினன்.

தனது தூதுவரிற் சிலர் தங்களை விரைவுடன் அழைத்து, பொன்னினாலாய வளையல்கள் அணிந்த தெய்வப் பெண்ணான இந்திராணியோடு சொர்க்க நாட்டுக் கதிபனாகிய இந்திரன் இருந்துள்ள இடத்தை நீங்கள் குறுகி ஆராய்ந்து அறிந்து வந்து என்னுடன் சொல்வீராக என சூரபன்மன் அவர்களைச் செல்லுமாறு தூண்டினான். 19

தோடவிழ் தெரியலான் தூண்ட ஒற்றர்கள், ஓடினர் வேற்றுவேற் றுலக மெங்கணும்
தேடினர் காண்கிலர் திரிகுற் றார்இனி, நீடிய பொன்னகர் நிகழ்ச்சி கூறுகேன்.

இதழ் விரியும் அழகிய பூமாலையணிந்த சூரபன்மன் தூண்டலும், தூதுவர்கள் வேறு வேறு திக்குகளின் உலகம் எங்கும் ஓடினார்கள்; தேடினார்கள்; காண முடியவில்லை. தேடித் தேடி அலைந்து திரிந்தார்கள். எமது பெருமானே ஆறுமுகவா! இப்பால் பொன்மயமாகப் பெருகிநிற்கும் திருவுடைய சொர்க்க லோகத்தின் தலைவன் நீங்கிவிட, அங்குள்ள நிகழ்ச்சிகளைக் கூறுகின்றேன் கேட்பீராக என்று வியாழபகவான் மேலும் சொல்வார். 20

வேறு

செல்லெனும் ஊர்தி அண்ணல் தேவியுந் தானும் நீங்கச்
சொல்லருங் ககனம் பூத்த சோமனும் உடுவும் போன
எல்லியம் பொழுது போன்றே யாதுமோர் சிறப்பும் இன்றாய்ப்
புல்லென லாய தன்றே பொருவில்பொன் னகர மெல்லாம்.

மேகம் என்னும் வாகனத்தை உடைய அண்ணலான இந்திரதேவன், இந்திராணியும் தானுமாக நீங்கிப் போய்விட, தேவ உலகமானது சொல்லற்கரிய வானத்தில் இரவில் பூத்து மலர்ந்திருந்த வெள்ளிகளும் சந்திரனும் நீங்கிப்போன இராப்பொழுதுபோல் யாதுமொரு சிறப்புமில்லாது கீழ்மையாகி, சிறப்பின்றி, தனக்கு வேறு உலகம் நிகரற்றிருந்த தேவ உலகம் இருந்தது. 21

அழிந்தன வளங்களெல்லாம் ஆகுல மயங்கிற் றின்பம்
ஒழிந்தது வானோர் உள்ளம் ஒடுங்கிய துலக மெங்கும்
எழுந்தது புலம்ப லோதை யாவர்தங் கண்ணுந் தெண்ணீர்
பொழிந்தது சுவர்க்கம் ஆவி போனவர் போன்ற தன்றே.

அங்குள்ள வளங்களெல்லாம் அழிந்தது. எங்கும் கவலையும் சோகமும் பெருகியது இன்பம் ஒழிந்தது. தேவர்கள் உள்ளம் ஒடுங்கியது. தேவ உலகம் எங்கும் துயரத்தால் புலம்பி அழும் ஓசை எழுந்தது. எல்லாருடைய கண்களில் நின்றும் தெள்ளிய கண்ணீர் பொழிந்து வழிந்தது. சுவர்க்கம் எனப்படும் தேவ உலகம் உயிர் நீங்கினவர் போன்று இருந்ததன்றே. 22

இன்னனம் நிகழும் முன்னர் இந்திரன் இளவ லாகி
மன்னிய உபேந்தி ரன்றான் வானவர் உலகை நீங்கி
முன்னைவை குண்டம் புக்கான் முனிவரர் கலிக்கா வஞ்சிக்
கன்னிகை நோற்று மேவுங் காஞ்சியை யடைந்த வாபோல்.

இவ்வாறு தேவ உலகில் சோகநிலை நிகழும் காலத்து முன்பாக, இந்திரன் தம்பியாகி அவனுக்குக் கருணை செய்யும்படி அவதரித்த உபேந்திரன் என்னும நாமத்துடன் அங்கு இருந்த விஷ்ணுமூர்த்தி தேவர்கள் உலகை விட்டு நீங்கி, முன்னர் தோன்றிய தனது உலகமான வைகுந்தம் சென்றார். அது எப்படி யெனில், கலி என்னும் ஆசைப்பெருக்கத்திற்காகப் பயந்து முனிவர்கள் யாவரும் வேறு இடத்தில் இருப்பதை விடுத்து, நித்திய கன்னிகையான காமாட்சி அம்மை யார் இருந்து தவஞ்செய்யும் காஞ்சியம் பதியை அடைந்தவர்போல.

தேவ உலகம் போக இன்பங்களிற் சிறந்தது: ஆகவே, அதை விடுத்து உபேந்திரன் என்பானும் தேவ உலக இன்ப இச்சைகள் தம்மையும் பற்றிக் கொள்ளுமோ எனப் பயந்து வைகுந்தம் சென்றது போலச் சென்றார் என்பதை முனிவர்கள், உலக இன்ப இச்சைகள் தம்மையும் பற்றுமோ எனப் பயந்து காமாட்சி அம்மையார் தவஞ் செய்திருக்கும் காஞ்சியை அடைவது போன் றிருந்தது என்றார். 23

சேண்பதந் தன்னை நீங்குஞ் சிறியதோர் தந்தை தன்னைக்
காண்பது கருதிப் போந்து கடவுளர்க் கிறைவன் மைந்தன்
தூண்புரை கின்ற செம்பொற் றோளுடைச் சயந்தன் என்போன்
மாண்பொடு சிறிது வைகல் வைகுண்டத் திருந்தான் அன்றே.

வான உலக பதத்தை நீங்கிச் சென்ற சிறிய தந்தையான உபேந்திரனைக் காண்பதைத் தனது கருத்தில் கொண்டு, தேவர்கட்கு அரசனான இந்திரன் மைந் தன், தூணை ஒத்து நிற்கின்ற செம்பொன்னன தோளுடைய சயந்தன் என்போன் சென்று வைகுண்டத்திலே மாட்சிமையோடு சிலநாட்கள் தங்கி இருந்து கொண் டான். இச்செயல்கள் தேவ உலகில் நிகழும் காலத்து. 24

இருந்திடு சயந்தன் என்போன் இந்திரன் இறைவி யோடுங்
கரந்துடன் போந்த வாறுங் காமரு துறக்கந் தன்னில்
விரைந்துவந் தவுணர் தேடி மீண்டிட விண்ணு ளோர்கள்
அரந்தையோ டுற்ற வாறும் அங்ஙனந் தேர்ந்தான் அம்மா.

இருந்திடுகின்ற சயந்தன் என்பவன் இந்திரன் இந்திராணியோடும் மறைந்து உடனுக ஒளித்தோடியவாறும், அழகிய தேவ உலகில் விரைவுடனுக அசுரர் வந்து தேடிய தன்மையும், தேடிக் காணுமல் அசுரர்கள் மீண்டிட, தேவர்கள் அவர்களால் அடிபட்டதாலும் இந்திரன் பிரிவாலும் கவலையால் அங்கு உறைகின்ற தன்மையையும் அவ்விடத்துத் தேர்ந்து அறிந்துகொண்டான். 25

தந்தைதன் மெலிவு காணில் தங்குடித் தலைமை யெல்லாம்
மைந்தர்கள் பரித்துக் கோடல் வழக்கதாம் அறனும் அஃதே
எந்தையு மில்லை யான்போய் என்னகர் காப்ப னென்னுப்
புந்தியி லுன்னி மைந்தன் பொன்னகர் தன்னில் வந்தான்.

தந்தையினுடைய மெலிவினைக் கண்டால் தனது குடிகளின் தலைமைப் பாட்டையெல்லாம் பிள்ளைகள் தாங்கிக் கொள்ளல் வழக்கமாகும். அதன்றி, அஃது தருமமாகும். எனது தந்தையும் இங்கு இல்லை; யான் சென்று எனது நகரைக் காப்பேன் என்று மனத்திலே நினைந்து, மகனுன சயந்தன் பொன்னுன சொர்க்க உலகில் வைகுண்டத்தினின்றும் நீங்கி வந்தான். 26

பொன்னகர் புக்க மைந்தன் புலம்புறு சுரரைக் கண்டு
தன்னுயிர் போலுந் தந்தை தாய்தனைக் காணு னுகி
இன்னலங் கடலின் மூழ்கி ஏக்கமோ டிரக்க மிக்குப்
பின்னெரு செயலு மின்றிப் பித்தரே போல வுற்ருன்.

பொன்னகரான தேவ உலகில் புகுந்த சயந்தன் அங்கு புலம்பி அழுகின்ற தேவர்களைக் கண்ணுற்றுத் தனது உயிர்போன்ற தந்தையைத் தாயைக் காணுதவனுய், இன்னலான கடலிலே மூழ்கியவனுய், ஏக்கமுற்று இரக்கம் மிகுந்து, பின்னுல் ஏதொரு செயலும் செய்ய இயலாதுபோய் பைத்தியகாரரைப் போன்றிருந்தான். 27

உற்றிடு மெல்லை தன்னில் உம்பர்கோன் மதலை யுள்ளந்
தெற்றெனத் தெளிப்ப வுன்னி நாரதன் என்னுஞ் சீர்சால்
நற்றவ முனிவன் செல்ல நடுக்கமோ டெழுந்து தாழ்ந்து
மற்றெரு தவிசு நல்கி இருத்தியே மருங்கு நின்ருன்.

இவ்வாறு இருக்கின்ற நேரத்து, தேவர்க்கரசனுன இந்திரனுடைய மகன் சயந்தனின் மயங்கிய உள்ளத்தை உறுதியுடன் தெளிவுகொள்ளும்படி தெளிவிக்க நினைவுகொண்டு நாரதன் என்னும் சிறப்பு நிறைந்த நல்ல தபோதனரான முனிவன் அங்கு வருதலும், அவரைக்கண்டு சயந்தன் நடுக்கத்துடன் எழுந்து தாழ்ந்து வணங்கி வேருெரு சிம்மாசனத்தை இட்டு அதின் மீதாக முனிவரை இருத்தியே அதன் பக்கராகச் சயந்தன் நின்ருன். பெரியோர்கட்குத் தாம் இருந்த ஆசனம் கொடுத்தல் நன்றல்ல; வேருேர் ஆசனம் கொடுப்பது முறைமையாகும். இது தோன்றவே மற்ருெரு தவிசு நல்கி என்ருர். 28

நின்றிடு சயந்தன் சொல்வான் நித்தலும் வருத்தஞ் செய்யும்
வன்றிறற் சூரற் கஞ்சி மற்றெனைப் பயந்த மேலோர்
சென்றனர் சென்ற வெல்லை தெரிந்திலேன் எமக்குத் தீமை
என்றினி யகலுங் கொல்லோ எம்பிரான் இயம்பு கென்றான்.

நின்றிடுகின்ற மைந்தன் சயந்தன் சொல்வான்: நித்தலும் எம்மை வருத்தம் செய்யும் வலிமை மிக்க திறலுடைய சூரனுக்குப் பயந்து என்னைப் பெற்றெடுத்துக் கொண்ட மேலோரான தந்தையும் தாயும் எங்கோ சென்றார்கள். அவர் சென்ற இடம் அறிந்திலேன். எமக்கு இந்தத் தீமை என்று தான் இனி அகன்றுபோகுமோ? எம்பிரானே! சொல்லியருளுக என நாரத முனிவனைக் கேட்டான். 29

தருக்கினை இழந்து நின்ற சயந்தன்இத் தன்மை கூறப்
பொருக்கென முனிவன ஓர்ந்து பொங்குபே ரருளால் நோக்கித்
திருக்கிளர் கின்ற தாங்கோர் செழுமணித் தவிசின் மீதில்
இருக்கென இருத்திப் பின்னர் இன்னன இசைக்க லுற்றான்.

செல்வத்தாலும் மற்றைய நிலைகளாலும் முன்னர் கொண்ட செருக்குநிலை யாவும் அகன்று நின்று மெலிவுடன் இத்தன்மையைச் சயந்தன் கூற, உடனே நாரத முனிவன் அதனை உணர்ந்து உள்ளத்து நிறைகின்ற பேரருளால் சயந்தனை நோக்கி, சீர்மை விளங்குகின்றதாய் இரத்தினங்களால் ஆக்கப்பெற்ற அழகிய சிம்மாசனத்தின் மீதில் இருப்பாயாக எனச் சயந்தனை இருத்திவிட்டு, பின்னராக இந்த வாசகங்களை இசைக்கத் தொடங்குவார். அவர் கூறப் புகுந்தது எக்காலத்திற்கும் யாவருக்கும் பொருந்துவதானமையின் இன்னன இசைக்கலுற்றார் என்றார். 30

தீங்குவந் தடையு மாறும் நன்மைதான் சேரு மாறும்
தாங்கள்செய் வினையி னாலே தத்தமக் காய அல்லால்
ஆங்கவை பிறரால் வாரா அமுதநஞ் சிரண்டி னுக்கும்
ஓங்கிய சுவையின் பேதம் உதவினர் சிலரும் உண்டோ.

தீங்கு வந்தடையுமாறும், நன்மைதான் சேருமாறும் ஒவ்வொருவரும் தாங்கள் செய்துகொண்ட வினையினாலே தங்கள் தங்கட்குப் பின்னர் ஆகிக்கொள்வதே அல்லாது பிறரால் ஒருபோதும் வராது. பிறர் நமக்குத் துன்பஞ் செய்கிறார் என்பது பேதமை. பிறர் செய்வதெல்லாம் நாம் முன்னர் செய்துகொண்ட வினையின் விளைவே அங்கு வருகின்றது என்பதே உண்மை. இது எதுபோல என்றால், அமுதம் இருக்கின்றது; நஞ்சிருக்கின்றது. இவை இரண்டினுக்கும் மேலோங்கிய சுவைகளான அமுதத்திற்கு இனிமையும், நஞ்சிற்குக் கசப்பும் ஆரேனும் கொடுத்தார் உண்டோ? இல்லையே! அதேபோல, முன்னர் செய்த தீமையின் விளைவால் துயரமும், நன்மையின் விளைவால் இன்பமும் நமக்காகின்றது. 31

இன்பம தடைந்த காலை இனிதென மகிழ்ச்சி எய்தார்
துன்பம துற்ற போதுந் துண்ணெனத் துளங்கிச் சோரார்
இன்பமுந் துன்பந் தானும் இவ்வுடற் கியைந்த வென்றே
முன்புறு தொடர்பை ஓர்வார் முழுவதும் உணர்ந்த நீரார்.

தமக்கு இன்பம் அடைந்த நேரத்து இது இனிதாயது நன்று என்று மகிழ்ச்சியெய்தார்கள். அது நீங்கி தமக்குத் துன்பம் வந்துற்றபோது திடுக் காட்டத்துடன் ஏங்கிச் சோரார்கள். இன்பமும் துன்பமும் இந்த உடலுக்கு முன்பாக இயைந்து வந்ததொன்று என்று முன்பு தான்செய்து கொண்ட வினை யின் காரணமான இன்னல் இன்பங்கள் இரண்டின் தொடர்பையே இப்போது கண்டுகொள்வார்கள் எல்லாவற்றையும் கற்றுத்தெளிந்துகொண்ட பெரியோர் கள். 32

வறியவர் செல்வ ராவர் செல்வர்பின் வறிய ராவர்
சிறியவர் உயர்ந்தோ ராவர் உயர்ந்துளோர் சிறிய ராவர்
முறைமுறை நிகழும் ஈது முன்னையூழ் வினையே கண்டாய்
எறிகதிர் வழங்கும் ஞாலத் தியற்கையும் இனைய தன்றே.

வறியவர் பின்னொருகால் செல்வராவர்; செல்வராயிருந்தவர் பின்னர் வறியவராவர். சிறியவர் உயர்ந்தோராவர்; உயர்ந்தவராய் மதிக்கப்பட்டோர் சிறியவராவர். இது முறைமுறையாக நிகழ்வதொன்றாகும். முன்னே உள்ள ஊழின் பிரகாரமாகும். பிரகாசமுடைய கிரணங்களைக்கொண்ட சூரிய பகவா னின் ஒளிவிளங்கும் பூமியின் இயற்கையும் அப்படியல்லவோ. இரவின்பின் பக லும், வெப்பின் பின் மழையும், குளிரின் பின் வெப்பும் காலநிலைகளும் அப்படியே உள்ளன. பெரியோர்கள் இதனை அறிந்துதான் ஒரு பொல்லாப்பும் இல்லை எனக் கூறுவர். பிச்சைக்கும் வழியிலாது அலைந்துளான் ஒருவன் இன்னொரு பிறவியில் வேந்தனாக உலகாளவும் வைக்கப்படும். கஷ்டப்பட்டோர் இன்பம் அடைவர். 33

ஆக்கமும் வறுமை தானும் அல்லலும் மகிழ்வு மெல்லாம்
நீக்கமில் உயிர்கட் கென்றும் நிலையெனக் கொள்ளற் பாற்றே
மேக்குயா கடவுட் டிங்கள் வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவு நாளும் முறைமுறை பொருந்திற் றன்றே.

செல்வமும் வறுமைதானும் துயரமும் மகிழ்வும் ஆன இவை எல்லாம் நீக்கமில்லாது எங்கும் இருக்கின்ற உயிர்கள் யாவற்றிற்கும் என்றும் நிலையான பொருள்கள் என்று நாம் கொள்ளலாமோ. அல்லது அப்படி எண்ணவும் முடி யுமோ: மேலாகி உயர்ந்த வானத்திடத்தில் தோன்றும் கடவுளான சந்திர தேவனின் வெண்ணிறமான நிலவின் கதிர்களின் கற்றைகள் தேய்ந்து தேய்ந்து போய் பின்னர் வளர்ந்து வளர்ந்து நிறைந்துகொள்வது முறைமுறையாகப் பொருந்திக் கொள்வதன்றே. 34

ஆதலின் உமது தாழ்வும் அவுணர் தம்உயர்வும் நில்லாது
ஈதுமெய் யென்று கோடி இந்நகர் தணந்து போன
தாதையும் பயந்த தாயும் தம்முருக் கரந்து போந்து
மேதினி வரைப்பி னூடு மேவினர் போலுமன்றே.

ஆதலின், உங்களது தாழ்வும் அசுரர்களின் உயர்வும் நில்லாது; இது உண்மையென்று கடைப்பிடித்துக்கொள். இந்த நகரை விட்டு நீக்கிப்போன உனது தந்தையும், உன்னைப் பெற்ற தாயும் தம்முடைய உருவத்தை மறைத் துக்கொண்டு சென்று இந்தப் பூமியின் எல்லையில் எங்கோ ஓரிடத்துத் தங்கி இருப்பார் போலும் அல்லவோ. 35

மைந்தநீ தோற்று முன்னம் வானவர்க் கலக்கண் செய்த
தந்தியின் முகங்கொண் டுற்ற தானவன் துஞ்சும் வண்ணம்
அந்தநாள் உனது தந்தை முயன்றனன் அதனைப் போல
இந்தவெஞ் சூரன் மாய இன்னமும் முயல்வன் கண்டாய்.

மகனே நீ பிறப்பதற்கு முன்னுகத் தேவர்கட்கு அலக்கண்ணுன துயரத்தைச் செய்த யானை முகங் கொண்டிருந்த கயமுகாசூரன் மாண்டுபோகும்வண்ணம் அந்த நாளில் உனது தந்தை இந்திரதேவன் முயற்சிப்பட்டார். அதனைப் போல இப்போது உமக்குத் துயர்புரியும் இந்தக் கொடிய சூரன் மாய்ந்து போக இன்னமும் முன்போல முயற்சி செய்வான் உனது தந்தை அதனை நீ உணர்வில் கண்டுகொள்வாய். 36

என்றிவை பலவுங் கூறி இன்னினி வெஞ்சூர் தானும்
பொன்றிடும் உமது துன்பும் பொள்ளென அகன்று போகும்
நன்றிது துணிதி யென்றே நாரத முனிவன் தேற்றிச்
சென்றனன் சயந்தன் அங்கண் இருந்தனன் தெட்பமெய்தி.

என்று இவை பலவும் கூறிவிட்டு, நாரதமுனிவர் சயந்தனை நோக்கி, இனி மேலாக கொடிய சூரபன்மன் தானும் பொன்றி அழிந்திடுவன். உமது துன்பமும் விரைவுடன் அகன்றுபோகும். இதை நன்முகச் சயந்தனே உனது மனதில் திடமாகத் துணிந்து கொள்வாய் என்று கூறி நாரதமுனிவன் சோர்வடைந்த சயந்தன் உள்ளத்தைத் தேற்றிவிட்டு அப்பால் போயினர். இந்த உபதேசம் போலும் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்ட சயந்தன் தெளிவுகொண்டு மனத்திடத்துடன் இப்பொழுது அங்கு இருந்தான். 37

வருந்திய அமரர் தம்மை மனப்படத் தேற்றி நாளுந்
திருந்தலன் பணித்த ஏவல் செய்திடத் தூண்டி வான்மேல்
இருந்தனன் சயந்த னென்போன் இருநிலத் திடைமுன் போன
புரந்தரன் செய்த தன்மை யானினிப் புகலுகின்றேன்.

சயந்தன் என்போனும் பின்னர் வருத்தமடைந்த தேவர்கட்கு ஆறுதலான பல வார்த்தைகளைச் சொல்லி அவர்களையும் மனதில் தேறுதல் அடையச் செய்து நாள்தோறும் பகைவனுக சூரன் இட்ட பணிகளை, ஏவல்களைத் தொடர்ந்து செய்யுமாறு தூண்டி வானமேலான தேவ உலகில் இருந்தனன். எம்பிரானே இந்தப் பெரிய பூமி இடத்தாக முன்னர் மறைந்தோடிச் சென்றுள்ள இந்திரன் செய்துள்ள தன்மைகளை யான் இனிச் சொல்லுகின்றேன். 38

மெய்த்தரு நீழல் வைகும் வெறுக்கையை வெறுத்துப் பாரில்
சித்திர மனைவி யோடுந் தெக்கிண தேயம் புக்குப்
பத்துடன் இரண்டு நாமம் படைத்ததொல் காழி நண்ணி
இத்தல மினிதே யென்ன இருந்தனன் இமையோர் கோமான்.

உண்மையாக என்றும் போக இன்பங்களான செல்வங்களை எல்லாம் வெறுத்து, பூமியில் சித்திரம் போலும் சிறப்புடைய அழகிய மனைவி இந்திராணியோடும், தென்னுடான தமிழ் நாட்டில் புகுந்து பன்னிரண்டு பெயர்களை அங்கு நிகழப்பெற்ற அற்புதங்களின் காரணமாகப் பெற்றுக்கொண்ட மிகப் பழைமையான சீகாழியைச் சேர்ந்து, இந்தத் தலமானது எனது துயர நிலையெல்லாம் நீங்கி இருப்பதற்குப் பாதுகாப்பான இடம் எனத் தெளிந்து அங்கு தேவர்க்கு அரசனை இந்திரன் இருந்தான்.

சீகாழியின் பன்னிரு பெயர்கள்: சிரபுரம், கொச்சைவயம், சண்பை, புறவம், பூந்தாராய், பிரமபுரம், புகலி, வெங்குருகு, சீகாழி, வேணுபுரம், கழுமலம், தோணிபுரம் என்பனவாகும். 39

அந்தநல் லிருக்கை தன்னில் அயர்வுயிர்த் திறைவி யோடும்
இந்திரன் இருந்த பின்னர் என்றுநாம் இறைவற் போற்றிப்
புந்திகொள் மகிழ்வாற் பூசை புரிதுமென் றுன்னி யாண்டோர்
நந்தன வனத்தை வைப்பான் நாடியே இனைய செய்வான்.

அந்த நல்ல இருப்பிடத்தே தனது கவலைகளை இந்திரன் நீக்கிக்கொண்டு தனது மனைவி இந்திராணியோடும் இருந்த பிற்பாடு இங்கு நாம் என்றும் எமது பெருமானைப் போற்றுதல் புரிந்துகொண்டு, மனதில் கொண்ட மகிழ்ச்சியாற் பூசனை புரிவோம் என்று நினைந்து, அதற்காகப் பூவெடுக்கவேண்டி அங்கோர் நந்தவனத்தை வைப்பதற்காக மத்னதில் நாட்டம் கொண்டு இந்திரன் இவற்றைச் செய்கிறான். 40

சந்தகில் பலவு தேமாச் சரளமே திலகந் தேக்குக்
கொந்தவிழ் அசோகு புன்கு குரவொடு நாளி கேரம்
நந்திய கதலி கன்னல் நாகிளம் பூகம் வன்னி
முந்துயர் காஞ்சி வேங்கை முதலிய வேலி கோலி.

இந்திர தேவன் தான் உண்டாக்க விரும்பிய அந்த நந்தவனத்திற்குச் சந்தனமரம், அகில், பலா, மாமரம், தேவதாரு, மஞ்சாடி, தேக்கு, கொத்துக் கொத்தாக மலரும் அசோகு, புன்னை, குராமரம், இவற்றுடன் தென்னை மரம், யாரும் விரும்பும் வாழை, கரும்பு, பசிய இளமை பொருந்திய கமுகு, வன்னி, மிக உயர்ந்து வளரும் காஞ்சிமரம், வேங்கைமரம் முதலிய மரங்களால் வேலி அமையும்படி செய்து. 41

சாதியே கோங்கு நாகஞ் சண்பகம் இதழி ஞாழல்
பாதிரி வழையே குந்தம் பாரிசா தஞ்செ ருந்தி
போதுறு நரந்தம் வில்வம் பொலிகர வீரஞ் செச்சை
கோதறு மயிலை மௌவல் கொழுந்துசெவ் வந்தி முல்லை.

இவ்வாறு வேலியிடப்பட்டதன் உட்புறமாகப் பிச்சி, கோங்கு, புன்னை, சண்பகம், கொன்றை, குங்குமமரம், பாதிரி, சுரபுன்னை, குருந்து, பாரிசாதம், செருந்தி, பூக்கள் நிறைந்த நாரத்தை, வில்வம், பொலிவுடன் பூக்கும் அலரி, வெட்சி, குற்றம் இல்லாத இருவாட்சி, மல்லிகை, மருக்கொழுந்து, செவ்வந்தி, முல்லை. 42

இவைமுத லாகி யுள்ள தருக்களும் புதலு மெல்லாம்
நவையறந் தெரிந்து வைத்தோர் நந்தன வனத்தைச் செய்ய
அவைமிக மலர்ந்த அம்மா அம்மலர் கொண்டு நாளுஞ்
சிவனடி அருச்சித் தங்கட் டேவியோ டிறைவன் உற்ருன்.

இவை முதலாக உள்ள பெரிய பூமரங்களும் செடிகளும் கொடிகளும் எல்லாவற்றையும் குற்றம் இல்லாதனவாகியுள்ளவற்றைத் தெரிந்து வைத்து உண்டாக்கி ஒரு நந்தவனத்தை இந்திரன் செய்ய, அம்மரங்கள் தளிர்த்து மிக வளர்ந்து சிறப்புடன் பூத்து மலர்ந்தது. அந்தப் பூக்களைக் கொண்டு நாளும் சிவபிரான் திருவடிகளை அன்புடன் அருச்சனை புரிந்து அவ்விடத்தின்கண் இந்திரன் இந்திராணியோடு இருந்தனன். 43

உற்றிடு மெல்லை தன்னில் உலகினில் அவுணர்க் கெல்லாங்
கொற்றவன் விடுத்த ஒற்றர் குவலயந் துருவிச் செல்ல
அற்றது தெரிந்து வல்லே அமரர்கோன் துணைவி யோடு
மற்றவண் வேணு வாகி மறைந்துநோற் றிருந்தான் மாதோ.

அவ்வாறு இந்திரன் அங்கு சீகாழியில் இருக்கின்ற எல்லை தன்னில், உலகில் உள்ள அசுரர்க்கெல்லாம் அரசனான சூரபன்மன் விடுத்த தூதுவர்கள், இந்தப் பூமியில் இந்திரன் இருப்பானே என ஆராய்ந்து ஒவ்வோர் இடங்களையும் நாடிக் கொண்டு செல்ல, அதனை உடனடியாகத் தெரிந்து தனது மனைவி இந்திராணியோடு மூங்கில் வடிவாகித் தனது உருவத்தை மறைத்து உயிர்க்குயிராகிய சிவபிரானை நினைந்து தவம் செய்திருந்தான். 44

வேணுவின் உருப்போல் நின்று மெலிவொடு நோற்று நாளுந்
தாணுவை வழிபட் டங்கட் சதமகன் சாரும் நாளிற்
காணிலர் ஒற்றர் போனர் கருமுகில் அவுணர் தங்கள்
ஆணையிற் பெய்யா தாக அவ்வனம் வாடிற் றன்றே.

மூங்கில் மரத்தின் உருவம்போல நின்று உடலம் மெலிவோடு தவஞ் செய்து, நாள்தோறும் சோதியாகிய சிவபெருமானை வழிபட்டு, அவ்விடத்து இந்திரன் இருக்கின்ற காலத்தில் தூதுவர்கள் இந்திரனை அங்கு மூங்கில் வடிவாய் இருந்தபடியால் காணமுடியாது போய்விட்டார்கள். ஆனல், இத் தூதுவர்கள் அந்தப் பூஞ்சோலையைக் கண்டு அவ்விடத்திற்கு மழைபெய்யக்கூடாது என மழைக்கருவுடைய மேகங்களைக் கட்டளையிட, அம்முகில்கள் அசுரர் கட்டளைப்படி பெய்யாது விடலும், அந்தப் பூஞ்சோலையானது நீரில்லாது வாடிக் கொண்டது.

நீடிய காமர் பூங்கா நெருப்புறு தன்மைத் தென்ன
வாடின நீரின் றுகி மற்றது மகத்தின் கோமான்
நாடினன் கவன்று தொன்னுள் நான்முகத் தவனும் மாலுந்
தேடரும் பரனை யுன்னி இரங்கினன் செயல்வே றில்லான்.

அழகு நிறைந்து நீடி நின்ற பூஞ்சோலை நெருப்புப்பட்ட தன்மை போன்று வாடின நீர் இல்லாமல். இந்தத் தன்மையை யாகங்கட்கு அதிபனுன இந்திரன் பார்த்தான். மனக்கவலைகொண்டு முன்னுன் நான்கு முகமுடைய பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் நாடித் தேடுதற்கரிய சிவபிரானை நினைந்து இரங்கி வேறு ஒரு செயல்தானும் அவ்விடத்துத் தான் செய்யமுடியாதவனுய் நொந்தான். முகில்களை வாகனமாக உடைய அவனே அசுரர் ஆணைக்கு மிஞ்சி வேறு ஒரு செயலும் செய்ய இயலாது போயினுன். 46

திருந்தலர் புரமூன் றட்ட சேவகற் பரவ லோடும்
பொருந்தலர் பூங்கா வாடிப் போயின எனினும் பொன்ரு
இருந்தலம் இதனில் யாறென் றெய்துமால் மகவான் இன்னே
வருந்தலை என்றோர் மாற்றம் வானிடை எழுந்த தன்றே.

திருந்தாத வாழ்க்கையால் உலகை வருத்திய முப்புரத்து அசுரர்களின் மூன்று புரங்களையும் எரித்தருளிய தேவாதி தேவனுன சிவபிரானைத் துதித்து வணங்குதலோடும், அங்கு இந்திரன் கேட்கும்படி ஓர் அசரீரி வாக்கியம் ''பகைவர் செயலால் பூஞ்சோலை வாடிப் போயது எனினும், பட்டொழிந்துபோகாது மேலான இத்தலத்தினில் ஆறு ஒன்று வந்து சேரும். இந்திரனே இப்போது வருந்தாதே'' என வானத்திடத்து எழுந்தது. 47

எழுவதோர் செஞ்சொற் கேளா எம்பிரான் அருளி தென்னுத்
தொழுதனன் போற்றி மேனி துண்ணெனப் பொடிப்பச் சிந்தை
முழுவதும் மகிழ்ச்சி பொங்க மொய்ம்பொடே இருந்தான் அங்கண்
அழகிய நதியொன் றுற்ற வரன்முறை அறைய லுற்றேன்.

வானத்தில் எழுவதாகிய தித்திப்பாகிய செஞ்சொல்லை இந்திரன் கேட்டு, எம்பிரான் அருள் இது என்று தொழுதனன். போற்றுதல் புரிந்து அவன் மேனி துண்ணெனப் புளகாங்கிதம் கொண்டு கூச்செறிய மனம் முழுவதும் மகிழ்ச்சி பொங்க மிச்க தைரியத்துடன் அங்கு இருந்தான். இப்பால் எம்பிரானே அவ்விடத்தாக அழகிய ஆறு ஒன்று வந்த வரன் முறையைச் சொல்லலுற்றேன். 48

இந்திரன் கரந்துறை படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 1152.

---

# 22. விந்தகிரிப் படலம்

அந்தப் பொழுதத் தளிகொண் டுடையோர், சிந்தைக் கெளிதாஞ் சிவன்மெய் யருளான்
முந்துற் றுணர்நா ரதமா முனிவன், விந்தக் கிரிமுன் னுறமே வினனுல்.

அந்தப் பொழுதத்தினில் அன்பு கொண்டுடையோரின் சிந்தைக்கு எளிதாய் அருள்புரிகின்ற சிவபிரானின் உண்மைப் பொருளான அருளினுல் எல்லாவற்றையும் முன்னுடியே உணர்ந்துகொள்கின்ற நாரத பகவான் என்னும் மேலான முனிவன், இங்கு ஓர் ஆறு வரும்; பூஞ்சோலை வாடாது என்னும்; எம்பிரானுடைய அசரீரி வாக்கிற்குச் செயறபடத் தொண்டு புரியவேண்டி விந்தமலை முன்னுக வந்து சேர்ந்து கொண்டார். 1

**மேவிப் பலஆ சிவிளம் புதலுந், தேவப் படிவங் கொள்சிலம் புதொழா**
**ஆவற் புதம்வந் ததெம்மண் ணலென, ஏவப் படுபான் மையிசைத் திடுவான்.**

விந்தமலை முன்னுகச் சென்று நின்று பல ஆசிமொழிகளை நாரதமுனிவர் சொல்லுதலும், தேவ வடிவங்கொண்டு அந்த மலை எழுந்து நாரதமுனிவனைத் தொழுது, ஆகா! அற்புதமாக இருக்கின்றதே தேவரீர் வந்தது எனலும், அப்போது நாரதமுனிவன் அந்தமலை ஏவப்பட்டு எது செய்யப்போறேன், இதனுல் என்னவரும் என்பதைச் சிந்திக்க முடியாதபடி திடீரென ரோசத்தால் செயற் படும்படியாககப் பான்மையைச் சொல்லிவிடுவார். 2

**மேருத் தனிவெற் புவிதிக் கரியோன், மூரிச் சிலையா கியமொய்ம் பதனுல்**
**தாரித் துலகீன் றவள்தன் மரபாற், பேரற் பொடுவந் துபிறக் கையினுல்.**

விந்தமலையே கேள். தனியாகச் சிறந்த மேருமலையானது தான் பிரமனும் காண்டற்கரிய சிவபிரானது வலிமைகொண்ட வில்லாயின வலியாலும், உலகம் எல்லாவற்றையும் தன்னிடத்துத் தாங்கிப் பெற்றவளாகிய உமையம்மையார் தனது இனமான இமயமலையில் வந்து பிறக்கையினுலும் 3

**குன்றுக் கிறையாய் உறுகொள் கையினுல், என்றைத் தொடவிண் ணிலெழுந் துறலால்**
**இன்றிப் புவியா வையும்நித் தன்அடும், அன்றைப் பகல்கா றும்அளித் திடலால்.**

மலைகளுக்கெல்லாம் அரசனுய் உற்ற கொள்கையாலும், சூரியனைத் தொடும் படி வானத்தில் எழுந்து வளர்ந்து நிற்றலாலும், இன்று இந்தப் பூமி யாவையும் நித்தனை சிவபிரான் சங்காரம் செய்கின்ற அந்தக் காலம் வரையும் தாங்கிக் காத்து நிற்கையினுலும், 4

**ஓரா யிரமாம் முடியுள் ளதனுல், காரார் களன்மே யகவின் கயிலை**
**சாரா வொருசார் வுறுதன் மையினுல், சூரா னவனுல் தொலைவில் லதனுல்.**

ஓராயிரமான முடியுள்ளதனுலும், கருமை கொண்ட கண்டத்தை உடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் கயிலை மலையின் சாராகி ஒருபக்கம் சார்ந்திருக்கும் தன்மையினுலும், சூரபன்மன் என்பவனுல் தான் தொலைவிலாது போனவலியாலும். 5

**தாழுங் கதிருந் தகுமேல் நெறியில், வாழுஞ் சசியும் மலிதா ரகையும்**
**ஏழென் றிடுகோ ளுமியா வர்களுஞ், சூழும் படிநின் றிடுதொன் மையினுல்.**

தாழ்ந்து செல்லும் சூரியனும், தகுதியுடைய மேல்நிலையில் வாழ்கின்ற சந்திரதேவனும், மலிந்து எங்கும் காணப்படும் நட்திரங்களும், இவை நீங்க ஏழு எனப்படும் மற்றைய செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது என்னும் கிரகங்களும் மற்றும் யாவர்களும் தன்னைச் சூழ்ந்துவரும் தன்மையாகி நின்றிடுகின்ற மிக முந்திய நிலையாலும். 6

**கொன்னே இமையோர் குடிகொண் டதனுல், பொன்னேர் கொடுயர்ந் துபொருந் துதலால்**
**பன்னே மிகள்சூழ் வருபான் மையினுல், தன்னேர் இலையென் றுதருக் கியதே.**

சிறப்புடனுகத் தேவர்கள் யாவரும் தன்னிடத்துக் குடியாகத் தங்கி இருக்கின்ற தன்மையால், பொன்மயமான தன்மையுடன் உயர்ந்து விளங்கி நிற்றலால், பல சமுத்திரங்கள் தன்னைச் சூழ்ந்துவரும் பான்மையால் தனக்கு வேறொரு மலையும் நேர்லை என்று தருக்கம் கொண்டது. 7

**பரந்தும் பர்நிமிர்ந் திடுபைம் பொன்வரை, பெருந்தன் மைமதித் திடுபெற் றியைநீ தெரிந்தில் லைசொல்அன் னசெயற் கையெலாம், விரைந்துன் னுேடுசெப் பியமே வினனே.**

இவ்வாறு உள்ளத்தே கொண்ட செருக்கினுல் பரந்து வானத்தில் உயர்ந்து நிமிர்ந்து நிற்கும் பொன்மயமான மேருமலை தற்பெருமை கொண்டுள்ள தன்மையை நீ தெரியவில்லைப் போலும். அவ்வாறுகிய மேரு மலையின் செய்கைகள் எல்லாவற்றையும் உன்னுேடு விரைவாகச் சொல்லிவிட வேண்டும் என உன்பால் வந்தேன் என்று தேவவடிவங்கொண்ட விந்தமலையை நோக்கி, அந்தமலை பொய்யான இவ்வார்த்தைகளால் ஏவப்பட்டுத் தீய செயலைப் பெருமிதத்துடன் மேற்கொள்ளும்படி கூறினுர் நாரதமுனிவர். 8

**என்றுன் முனிவோன் இதுகேட் டிடலும், ஒன்ரு கியதே வுருவாய் எதிரும் வன்ருழ் கிரிமா மறமுற் றுயிரா, நன்ருல் இஃதென் றுநகைத் தறையும்.**

என்றுன் நாரதமுனிவன். இது கேட்டிடலும் தேவஉருவம் ஒன்றுகி நாரத முனிவன் முற்பட்டு நின்ற மிகத் தாழ்ந்திருந்த விந்தமலை பொருமையால் வேகங்கொண்டு பெருமூச்சு விட்டு, நன்றுயிருக்கின்றது இந்த மேருமலையின் பெருமிதம் எனச் சிரித்துவிட்டு இதைச் சொல்லும். சின்னத்தனமான குணமுடையர் தான் இன்னொருவர் கபடவார்த்தை சொல்லி ஏவ அதனுல் ஏவப்படுவர். இதனை வன்ருழ்கிரி எனும் பதத்தால் ஆசிரியர் உணர வைக்கின்றுர். 9

**இல்லா யுளதொல் லிறுமாப் பகலப், பல்லார் இகழப் பகரும் விதியான் அல்லா ரெனவே நனிநா ணமுரு, வில்லா கிவளைந் ததுமேன் மையதோ.**

முனிவரே! இது என்ன? இந்த மேருமலையின் பெருமிதம். அதற்கு முன் தொட்டே இருப்பிடமாகி இருந்த இறுமாப்பு அகன்றுபோக, பலரும் பார்த்து அதனை இகழ, சொல்லப்படுகின்ற விதியினுல் பகைவரெனும்படியாக மிகவும் நாணமுற்று வெட்கமடையும்படி எல்லார்க்கும் கடவுளான சிவபிரானுல் வில்லாகி வளைக்கப்பட்டது மேன்மையென்று நினைக்கின்றது. என்னை ஒருவரும் என்ன செய்யவும் முடியாது என்று இறுமாப்புடன் நிமிர்ந்திருந்த மலை, பலரும் இதுதான் விதி எனக் கூறிட, இதன் நிலைகண்டு இகழ, சிவபிரானுல் வளைக்கப்பட்டது. வளைக்கப்பட்டமையால் பகைவரைத் தண்டித்ததுபோல் ஆயிற்றே ஆனமையால் இது மேருமலைக்கு என்ன பெருமை என விந்தமலை கேட்டது. 10

**பொன்னுர் இமவான் புரிநோன் பதனுல், அன்னுன் இடைவந் தமர்வுற் றனளால் மன்னு குமவன் மகளா யினளோ, எந்நா ளுமியா ரையுமீன் றருள்வாள்.**

பொன்னார்ந்து விளங்கும் மேனியை உடைய மலையரசன் புரிந்துள்ள தவத்தின் பயனாக அந்த மலையரசனின் இடத்தாய இமயமலையில் வந்து எந்நாளும் யாரையும் ஈன்றருளுகின்ற தாயாகிய பரமேஸ்வரி குழந்தை வடிவாகத் தாமரை மலரில் மலையரசன் புத்திரியாகும் பொருட்டு அமர்ந்தருளினாள். அஃதன்றி, மேலான மலையரசனுடைய மகள் என வந்து தோன்றினாளோ? இல்லையே! தவத்தின் பயனாக அவனது புத்திரி எனும்படி வந்தனளே ஒழிய, அவனுக்குக் குழந்தையாகப் பிறக்கவில்லை. இதனால் மேருமலைக்கு என்ன பெருமை என்றது விந்தம். 11

பாங்குற் றிடுபா ரினையாற் றுவனென், றோங்குற் றனன்எவ் வுலகும் பரியா
ஆங்குற் றனவோ பலஅன் னவையுந், தாங்குற் றதுகண் ணுதல்சத் தியதே.

பக்கராக இருக்கின்ற பூமிகளை நான் தாங்குவேன் என மேருமலை பெருமையால் ஓங்குற்றது. ஆனால், எல்லாவுலகங்களையும் தாங்கிக்கொண்டு நிற்கின்ற பொருள்கள் இன்னும் பல உண்டு. இவைகள் எல்லாம் தாங்கிக்கொண்டு நிற்பது நெற்றிக்கண்ணுடைய சிவபெருமானின் சத்தி ஒன்றேயாகும். ஆகையால் இதனாலும் மேருமலைக்கு என்ன பெருமிதம். 12

விற்சூழ் கதிரோன் முதல்விண் ணவர்கள், தற்சூழ்ந் தனர்அல் லதுசந் ததமும்
எற்சூழ்ந் திலரோ எழுதீ வுளவாங், கற்சூழ்ந் திலரோ கடல்சூழ்ந் திலரோ.

ஒளி சூழ்ந்து விளங்கும் சூரியதேவன் முதலாய தேவர்கள் தன்னைச் சூழ்ந்தார்கள் என இம்மலை பெருமிதங்கொண்டது. ஆனால், அவர்கள் அதனைச் சூழ்ந்துகொள்வதல்லாமல் என்னைச் சூழவில்லையோ? ஏழு தீவாய் உள்ள உலகினைச் சூழவில்லையோ அல்லது கடல் சூழ்ந்திலரோ? 13

பன்னிற் குவடும் பலவுண் டெனவே, உன்னுற் றிடுமோ உயர்கள் ளிகளின்
சென்னிந் தொகையைத் தெரிசிக் கின்அயன், தன்னேத் திலனோ தலைநான் குளவே.

சொல்லப் புகுந்தால் அதற்குப் பல முடிகள் உண்டென்று நினைக்க முடியுமோ? அதில் என்ன பெருமை? ஏனெனில், உயர்ந்த கள்ளி மரங்களுக்கு உள்ள தலைகளின் தொகையைப் பார்த்தால் அந்தக் கள்ளி நான்கு புறமும் தலையுடன் இருத்தலால் அவையும் நான்கு தலையுடைய பிரமதேவரை ஒத்திருக்கவில்லையோ. இதனால் பலதலைகளைக் கள்ளிமரம் கொண்டதனால் பிரமதேவர் என நாம் எண்ணலாமோ? 14

கடிதா கியசூர் இதுகல் லெனவே, அடா மல்விடுத் தனன்அன் றுதனை
நெடிதே யதுவுன் னிலன்நீள் பரிதிப், படையா னினும்ஆற் றல்படைத் துளதே.

கொடுமையுடைய சூரபன்மன் இந்த மலையைப் பார்த்து இது கல் என எண்ணித்தான் இதை அடிமையாக்காது விடுத்தனன். அதனை அந்த மேருமலை நெடிது சிந்தித்துப் பார்க்கவில்லை. அந்த மேருமலை நீடிய ஒளியுடைய சூரிய தேவனைப்போன்ற சக்கரப் படையைக் கையில் ஏந்திய நாராயணப் பெருமானிலும் மிக வலிமை படைத்துள்ளதோ! 15

தண்ணுற் றிடுபொன் மைதயங் குருவம், நண்ணுற் றனமென் றுளநா டினனோ
எண்ணுற் றவன்நல் லுணர்வெய் திலனோன், மண்ணிற் புனைபா லைவனப் பதுவே.

குளிர் பொருந்திய பொன்மயம் விளங்குகின்ற உருவம் நான் அடைந்துள்ளேன் என்று உள்ளத்தே மேருமலை நாடினதா? சரி. அப்படியாயின் அந்த மலை மனத்திலே எண்ணி நல்ல உணர்வைக் கொள்ளவில்லை. ஏனெனில், மண்ணினால் செய்தபாவைக்குப் பொன்பூச்சுக் கொடுத்த அழகு போலுமே ஒழிய உண்மையில் அது பொன்மயமில்லை. 16

தன்கண் ணுறுவா னவர்தாம் பலரும், என்கண் ணமரா மல்இகழ்ந் தனரோ
நன்கண் ணுதல்நா யகனுர் கயிலை, யின்கண் அருகுற் றிலதெக் கிரியே.

அதனிடத்தே இருக்கின்ற தேவர்களெல்லாம் வந்து என்னிடத்தாக இருக்காமல் என்னை இகழ்ந்து நீக்கினரோ இல்லையே. இதன்றி நல்ல நெற்றிக்கண்ணுடைய சிவபிரானுரின் திருக்கைலாய மலையின் அருகாக இருக்காத எந்தமலை உளது? 17

திருவைத் தவர்கண் டுயில்செங் கண்அரா, மருவித் தனைமுந் துமறைத் திடுநாள்
விரைவிற் படரு தைவெகுண் டுபறித், தொருமுத் தலைகொண் டதுணர்ந் திலதே.

மகாலெட்சுமியைத் தனது மார்பில் வைத்தவரான விஷ்ணுபிரான் யோக நித்திரை செய்கின்ற சிவந்த கண்ணுடைய அனந்தன் என்னும் பாம்பு, முன்னர் வாயுதேவனேடு பகைகொண்டு வந்து அந்த மேருமலையில் மறைந்திருந்த நாளில் விரைவிற் செல்லும் வாயுதேவன் வெகுண்டெழுந்து மேருமலையின் மூன்று முடிகளையும் பறித்தெறிந்த தன்மை மேருமலை உணரவில்லையோ. 18

கிளர்ப்புற் றிடுசிம் புளோர்கே சரிமுன், அளப்பற் றிடுதன் னுருவண் டமெலாம்
வளர்ப்புற் றிடுஞான் றெர்மணிப் பரல்போல், குளப்புற் றனன்ஈ துகுறித் திலதே.

நரசிங்க வடிவுகொண்ட விஷ்ணுபிரானின் அகந்தை நீக்க வானத்தில் கிளர்ந்து எழுகின்ற வீரபத்திரக் கடவுள் எடுத்துக்கொண்ட சரபப்பட்சி வடிவமானது, அந்த நரசிங்க வடிவம் முன்னுக அண்டம் எல்லாம் நிறைய வளர்ந்துள்ள காலத்து இந்தமலை அவருடைய வடிவத்தில் ஒரு சிறிய மணிக்கல்போல சிறுத்து நின்ருன். அதை இந்த மேருமலை நினைக்கவில்லையோ. 19

வரபத் திரைகேள் வன்மறம் புரியுஞ, சரபத் துருவுற் றுழிதாழ் சிறையின்
விரவிப் படரு தையின்மின் மினிபோல், திரிகுற் றனன்அன் னதுதேற் றிலதே.

பத்திரகாளி அம்பாளின் நாயகர் வீரபத்திரக் கடவுள் கொடுமை புரியும் சரபப்பட்சி உருவத்தைக் கொண்டுள்ளபோது அவருடைய தாழ்ந்த சிறகுகளை அசைப்ப எழுந்துள்ள வேகமாகச் செல்லும் காற்றின் விசையினுல் ஒரு மின்மினிப் பூச்சிபோல திரிகுற்றனன் இந்த மேருமலை. அதை அந்த மலை இன்னமும் உணரவில்லையோ. 20

அறியுற் றிடுபா ரதமா னவெலாங், குறியுற் றிடுதோல் முகக்குஞ் சரன்மேல்
எறியுற் றமருப் பினிலே டெனலாய்ப், பொறியுற் றிடுமென் பதுபொய்த் திடுமோ.

அனைவராலும் அறியப்படவேண்டி நடைபெறுகின்ற பாரதம் ஆன சருக்கம் யாவற்றையும் யானை முகக் குறிகொண்டுள்ள விநாயப் பெருமான், முன்னுகக் கயமுகாசுரன் மேல் எறிந்த தனது கொம்பினுலே இந்த மேருமலையை ஏடாகக் கொண்டு பின்னுளில் எழுதிடுவார் என்பது பொய்யாகி விடுமோ? 21

**தானோர் வரையல் லதுதா ரணியுண், கோனோ அலன்அல் லதுகோ கனத**
**வானோன் அலன்வா சவன்அல் லன்அவன், ஏனோ தனைமே லெனவெண் ணியதே.**

இந்த மேருமலைதான் ஒரு மலை மட்டுமே அல்லாது வேறு பூமியை உண்ட நாயகரான விஷ்ணுவோ அலன், அல்லது தாமரைப் பூவில் வாசம செய்கின்ற பிரமதேவனோ அலன், அல்லது இந்திரனோ அல்லன். இப்படியானமையின் மேரு மலை ஏனோ தன்னை மேலென எண்ணியது என்றது விந்தமலை. 22

**என்னா வடவெற் பையிழித் துரையா, அந்நா கம்வியக் கும்அகந் தையினை**
**நன்னா ரதநீக் குவன்நா டுகெனா, முன்னா வுருநீக் ததுமொய் வரையே.**

என்று இவ்வாறு வடக்கே உள்ள மேருமலையை இகழ்ந்துரைத்து, அந்த மேருதலை தன்னையே பெரிதென வியக்கின்ற அதன் அகந்தையை, நல்ல நாரத முனிவரே! நீக்குகின்றேன். நீர் அதைப் பார்த்து அறியும் என்று தனது முந்திய வடிவத்தை விந்தமலை நீக்கிக் கொண்டது. 23

வேறு

எண்டரு முகுந்தர் கோடி எல்லையின் மாயை யாக்கை
கொண்டனர் திரண்டு நீண்டு குலாய்நிர் கொள்கைத் தென்ன
விண்டொடர்விந்த மாங்கோர் விஞ்சையால் அகன்று சேண்போய்ப்
புண்டரி கத்தன் மேய புரத்துனை நிமிர்ந்த தன்றே.

எண்ணிக்கையில் மிகுந்த நாராயணக் கடவுளர் கோடிக்கணக்கில் மாயை பொருந்திய உடம்புகள் கொண்டு ஒருங்கே திரண்டு நீண்டு கொள்கின்ற கொள்கைபோல, வானத்தைத் தொடரும்படி நீண்டு நின்ற விந்தமலை, அவ் விடத்தே ஒரு வித்தையால் அகன்றெழுந்து வானத்தின்மேல் போய்த் தாமரை மலரில் இருக்கின்ற பிரமதேவரின் சத்திய உலகம்வரையில் சென்று நிமிர்ந்தது.

காவிரி என்னும் ஆறு தோன்றி இந்திரனுடைய பூஞ்சோலைக்கு நீர் வர வேண்டி விதி இருப்பதால், நாரதன் தனது ஞான உணர்வால் நாடி, இன்னாரை இப்படிச் செய்தால் இன்னார் வருவர். இவர் இதைக் கொண்டு வருவார். கொண்டுவரும் பொருள் இப்படியானது. அதை இன்னாரைக்கொண்டு கவிழ்த்து விட்டால் ஆறாக மாறி இந்திரனுக்கு உதவும் என நினைந்து ஒன்றும் அறியாத மேருமலை கர்வங்கொண்டு தானே பெருமைப்பட்டது என்னும் பொய்யான வார்த்தையால் விந்தமலையின் அற்பத்தனத்தை முன்கூட்டியே உணர்ந்த நாரத முனிவன் எடுத்துக்கூற, அதுகேட்ட மோட்டு மனமுடைய விந்தம் நாரதர் பக வானின் வார்த்தையை நம்பி, தான் மேருமலையிலும் பெரிதெனக் காட்ட வேண்டும் என எண்ணி, பிரமதேவனின் உலகுவரையும் வளர்ந்தது. 24

உருக்கிளர் விந்த மென்னும் உருகெழு பிறங்கல் மேல்போய்ப்
பரக்கம தாகி அம்பொற் பனிவரை காறும் ஆன்று
நெருக்கிய தனைய பான்மை நிலமுழு தளந்த மேலோன்
திருக்கிளர் பொன்னந் தூசு புனைத்தெனத் திகழ்ந்த தம்மா.

பெரிய உருவம் கொண்டு கிளர்ந்தெழுந்த விந்தம் என்னும் மலை, நாரதமுனிவன் வார்த்தையால் ஆவேசப்பட்டு, எழுந்து மேலே போய் வளர்ந்து இன்னமும் அடியும் பருத்து விளங்கி, அழகிய பொன்மயமான இமயமலை வரையும் அகன்று இமயமலையை நெருக்கிக்கொண்டு நின்ற பான்மை எதுபோலும் விளங்கியது எனில், இப்பூமி முழுவதையும் தனது பாதத்தால் அளந்தபோது வானளவு வளர்ந்த மேலோரான விஷ்ணுமூர்த்தி, சிறப்புத் திகழும் பொன்னிறலாய பட்டாடையை அரையில் உடுத்தது போன்று பொன்மயமான இமயமலை வரையும் அகன்று அதனை நெருக்குகின்ற விந்தமலை காட்சி தந்தது. 25

விந்தமிந் நெறியால் ஆன்று மேக்குறக் கிளர்ந்து போகி
அந்தர நெறியை மாற்ற அலரிவெண் டிங்கள் சேயோன்
புந்திபொன் புகரே காரி புயங்கநாள் பிறரும் நோக்கிச்
சிந்தையில் துணுக்க மெய்தி இனையன செப்ப லுற்றார்.

விந்தமலை இவ்வகையால் அகன்று மேலெழுந்து கிளர்ந்துபோய் வான வெளியில் உள்ள அந்தரப் பாதையை மாற்றி இடைமறித்து நிற்ப, அதனால் சூரியன் வெண்ணிறமுடைய சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, பாம்புகள் இரண்டான ராகு, கேது நட்சத்திரங்கள், இன்னும் வானசஞ்சாரிகளான பிற தேவரும் கணங்களும் இதை நோக்கி மனத்தில் திகைப்படைந்து இந்த வார்த்தைகளைச் சொல்வார்கள். 26

தானவர் செயலோ என்பார் தருமமில் அரக்க வெய்யோ
ரானவர் செயலோ என்பார் அல்லவேல் அயன்மா லென்னும்
வானவர் செயலோ என்பார் மாயமீ தாகும் என்பார்
மேனிமிர் பிறங்க லின்றி வெள்ளிடை இலைகொல் என்பார்.

சிலர் இந்த விந்த மலையின் செயலினை நோக்கி, இது அசுரர் செயலோ என்பார் அல்லது தருமமில்லாத நெஞ்சினை உடைய இராட்சதரான கொடியவரின் செயலோ என்பார். அல்லாதிருந்தால் பிரமன் விஷ்ணு என்னும் கடவுளரின் செயலோ என்பார்கள். அம்மவோ இது மாயமீதாகும் என்பார். வானத்தில் மேல் நிமிர்ந்து நிற்கின்ற மலையேயன்றி, ஓர் இடமும் வெள்ளிடையாகக் காணப்படவில்லையே எல்லாம் மலையாகப் பரந்து மறைந்ததே என்பார் சிலர். 27

என்னிது வென்று போதத் தெம்பிரான் அருளால் நாட
அன்னது தெரித லோடும் ஆமிது விந்த மேருத்
தன்னுடன் இகலொன் றுண்டாய்த் தராதல வரைப்பில் வானில்
சென்னெறி விலக்கிற் றென்று சிந்தனை செய்து தேர்வார்.

இது என்னவாகும் என ஞானத்தினால் எம்பிரான் அருளின் துணையினால் நாடி ஆராய்ந்த நேரத்து அது அவர்கள் சிந்தையிலே தெரிதலோடும், ஆம் இது விந்தம் என்னும் மலை மேருமலையோடு ஒரு விகற்பம் உண்டாகி இப்பூமியின் எல்லையில் வானத்தில் செல்லக்கூடிய மார்க்கங்களைப் பாதைகளை, வளர்ந்து விலக்கிற்று என்று சிந்தனை செய்து அதுதான் உண்மையெனத் தெளிந்து, இதற்குச் செய்யவேண்டிய கருமம் யாதாகும் எனத் தங்களது சிந்தையால் பின்னரும் தெளிந்து உணர்வார்கள்; 28

செம்பொன்மால் வரையின் பாங்கிற் சிவனடி யுன்னி நோற்றே
அம்புரா சியைமுன் னுண்டோன் அமர்ந்தனன் அவனீண் டுற்ருல்
உம்பர்போய் நின்ற விந்தம் ஒடுங்குமென் றியாகும் ஓர்ந்து
கும்பமா முனியை யுன்னி இனையன கூற லுற்ருர்.

செம்பொன் மயமான பெரிய மேருமலையின் பக்கராகச் சிவனடி நினைந்து தவஞ்செய்துகொண்டு முன்னர் சமுத்திரங்களை உண்டு உமிழ்ந்த அகந்திய முனிவர் வீற்றிருக்கின்ருர். அம்முனிவர் பெருமான் இவ்விடத்து வந்தால், வானத்தில் போய் நீண்டு எல்லாவற்றையும் தடுத்துநிற்கும் விந்தமலை ஒடுங்கும் என்று எல்லாத் தேவரும் நினைந்து, குடத்திலே தோன்றியவரான சிறிய தெய்வ வடிவுடைய அகத்திய முனிவரை நினைந்து இனைய வார்த்தைகளைக் கூறுகின்ருர்கள்: 29

விந்தகிரிப் படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் — 1181.

---

## 23. அகத்தியப் படலம்

பொன்ஞர் கழல்கள் அருச்சித்திடப் போது கொய்யுங்
கைந்நாக மாலை நினைந்தே கராவொன்று கௌவ
என்ன யகனே எனத்தன் கையெடுத் தழைப்ப
அன்னான்அங் கெய்தி விடுவித்த தறிகி லாயோ.

ஐயனே! அகத்திய முனிவனே! உன்னையே எமது துயரான இக்கட்டில் நினைந்தோம். முன்பொருகால் பொன்ஞர்ந்த திருவடிகளை அர்ச்சனை புரியும்படி தாமரைப் பூக்களைக் கொய்யவேண்டி துதிக்கையுடைய யானையொன்று குளத்திற்குச் சென்றபோது, அங்கு அக்குளத்தில் இருந்த முதலை ஒன்று அந்த யானையின் காலைப் பற்றிக் கௌவி இழுக்க, யானை செய்வதறியாது திருமாலை நினைந்து என் நாயகனே! ஆதிமூலமே அபயம் எனத் தனது துதிக்கையை நீட்டி ஓலமிட்டு அழைத்தபோது நாராயணப் பகவான் வந்து தோன்றி, முதலை வாய் நின்றும் யானையை விடுவித்தது முனிவா நீ உணர்கிலாயோ? 1

பூவார் கமலத் தயன்நல்கிய பூவை தன்மேல்
தூவா மயலாய்க் கிளியாகித் தொடர்ந்து செல்லக்
காவாய் பரனே எனலோடுங் கலங்கல் என்றே
தேவாதி தேவன் அருள்செய்தது தேர்கி லாயோ.

தாமரை மலர்மேல் இருக்கும் பிரமதேவன் தான் படைத்த பெண்ணுகிய திலோத்தமை என்னும் பெண்மேல் ஒவ்வாத மோகங்கொண்டு கிளி ரூபமெடுத்து அவளைப் பின்தொடர்ந்துசெல்ல, அப்போது திலோத்தமை இதையுணர்ந்து ஈசனே! என்னைக் காப்பாயாக என ஓலமிட்டு அழுதலோடும் ஈசன் அவள்முன் தோன்றி, நீ கலங்காதே என்று தேவாதி தேவன் சிவன் திலோத்தமையைப் பிரமதேவரின் தீய எண்ணச் செயலினின்றும் காத்தருள் செய்தமையை அகத்திய முனிவனே தெரிந்துகொள்ளமாட்டாயோ? 2

சத்தார் பிருகு தனதில்லைத் தடிந்த வெல்லை
இத்தா ரணியில் அளவில்பிறப் பெய்து கென்ன
அத்தா அருளென் றரிநோற்றுழி ஐயன் வந்து
பத்தாக என்று நிறுவுற்றது பார்த்தி டாயோ.

தவத்தினல் சக்தி நிறைந்த பிருகுமுனிவனுடைய மனைவி கியாதி என்பாளை, விஷ்ணுபிரான் தனது பகைவருக்கு இடங்கொடுத்த காரணத்தால் அவளைக் கொன்ற நேரத்து அப்போது அதை அறிந்த கணவர் பிருகுமுனிவர் விஷ்ணுபிரானுக்கு, நீ இந்தப் பூமியில் அளவற்ற பிறவி அடையக் கடவாய் எனச் சாபமிட, அப்போது விஷ்ணுபிரான் சிவபிரானை நினைந்து, அத்தா! அடியேனை அருள் செய்து இச் சாபத்தினின்றும் காப்பாய் என விஷ்ணுபிரான் தவஞ்செய்ய, சிவபிரான் அவ்வேளை தோன்றி விஷ்ணுபிரானுக்கு ஏற்பட்ட அளவிலாத பிறவி என்னும் சாபத்தைப் பத்துப் பிறவி ஆகட்டும் என்று நிறுத்தி வைத்த கருணையை அகத்திய முனிவா! நீ உணரமாட்டாயா? 3

தேவர்க் கெனினும் நிலத்தின்கட் செறிந்து வாழ்வோர்
ஏவர்க் கெனினும் ஒருதுன்புறின் எய்தி நீக்கல்
காவற் குரியார் கடனும்அக் கடமை தூக்கின்
மேவற் கரிதாந் தனிமுத்தியின் மேல தன்றே.

தேவர்க்கென்றாலும், நிலத்தின்கண் செறிந்து வாழ்கின்ற மனிதர் எவர்க்கெனினும் ஒரு துன்பம் உற்றால் அதை அடைந்து நீக்கல் காவற்கு உரியவரின் கடமையாகும். அந்தக் கடமையை நாம் சீர்தூக்கிப் பார்த்தால் அடைதற்கரிதாகிய முத்தி இன்பத்தின் மேம்பட்டதாகும்.

காவற்குரியார் என்றது தவத்தினல் நல்நிலைகொண்டு மேம்படுவோர் உலக சேமத்தில் கருணையாகி, உலக மக்கள் தீமைகளால் துன்புறும்போது அத்துன்பங்களைத் தமது தவவலியால் நீக்குவர். இத்தன்மை உண்மை ஒன்றாகும். இதை இக்காலத்தில் வாழ்ந்தருளிய ஈழத்துத் தவச்செல்வர் யோகசுவாமிகளும் தான் யாழ்ப்பாணத்தின் காவலன் என்று பரிபாஷையால் சொல்வது இங்கு நோக்கற்பாலது. ஆகவே, தேவர்களும் அகத்தியர்பெருமானைக் காவலுக்குரியார் என நினைந்து போற்றினர். 4

தெள்ளத் தெளிந்த மறைக்கள்வனைச் செற்ற மீன்போல்
அள்ளற் கடலை ஒருநீ அகன்கை யடக்கிக்
கள்ளத் தவுணன் நிலைகாட்டிநங் கண்ணில் வைத்த
கொள்ளைக் கருணை உலகெங்கணுங் கொண்ட தெந்தாய்.

யாவராலும் தெள்ளத் தெளியும்படி சிவன் அருளைப் பேசுகின்ற வேதங்களைக் களவாண்டுகொண்டு சமுத்திரத்தில் ஒளித்துவிட்ட வேதக்கள்வன் என்னும் அசுரனை, விஷ்ணுபிரான் மீன்வடிவங் கொண்டு சென்று அவனைக் கொன்று வேதங்களை மீட்டமைபோல, முன்னொரு காலத்து எமக்குத் துயர்புரிந்த கள்ள அசுரனின் நிலையைக் காண்பிக்கச் சேறுபொருந்திய கடலை நீ ஒரு உழுந்தளவாக்கி உனது திருக்கையில் ஏந்தி, அந்த அசுரனைக் காண்பித்து எம்மைக் காத்தருளி வைத்த கொள்ளையான கருணையை, இந்த உலகம் எங்கும் கண்டு அறிந்து

கொண்டதொன்றாகும். எந்தை பிரானே! அவ்வாறாக நீ அசுரரை அழித்துத் தீமையை நீக்கி எமை வாழவைத்த கருணையை உலகம் எங்கும் நாமும் உணர்ந்து கொண்டோம் எனப் போற்றினர் தேவர்கள். 5

விந்தக் கிரிநாரதன் சூழ்ச்சியின் மேரு வெற்போ
டிந்தப் பொழுதத் திகல்கொண் டுலகெங்கும் ஈறும்
அந்தத் துயருங் கயிலைக்கிணை யாவ லென்றே
சிந்தித் ததுகொல் எழுந்திட்டது சேண தெல்லாம்.

விந்தமலையானது நாரதமுனிவருடைய சூழ்ச்சி ஒன்றால் மேருமலையோடு பகைகொண்டு இந்த நேரத்தில் நாம் அசுரரால் மெலிவுறும் காலத்திலே உலகெல்லாம் முடிவாகும் காலத்து எங்குமாய்ப் பரந்து நீளுகின்ற கைலைமலைக்கு நான் இணையாவன் என்று சிந்தித்ததுபோலும். அப்படியே அது வானமெல்லாம் நிறைந்து வெளியிடமின்றி மேலெழுந்திட்டது. 6

மண்ணுற்ற வெல்லை அளவிட்டிடு மால்கொ லென்றே
எண்ணுற் றெவரும் வெருக்கொண்டிட ஈண்டை விந்தம்
விண்ணுற்ற அண்டத் துணையாய்மிசைப் போவ தையா
கண்ணுற்ற நோக்கம் விடுத்தேயிது காண்கி லாயோ.

மண்ணின் எல்லையை அளவிட்டிடும்படி நீண்டு வளர்ந்த நாராயணக் கடவுள் போன்று யாரும் எண்ணி வெருண்டு அச்சமுறும்படி விந்தமலையானது வானத்தில் தோன்றும் அண்டங்கள் வரையும் சென்று மீண்டும் மேல்நோக்கிச் செல்கின்றது. ஐயனே! நீ கண்ணுற்ற வேறு நோக்கங்களை விடுத்திட்டு இந்த விந்தமலையின் செயலை நீ காண்கிலாயோ. 7

மல்லற் கிரிவிண் ணெறிமாற்றலின் மற்றெ மக்குஞ்
செல்லற் கரிதாயது பாருடைத் தேய முற்றும்
எல்லைப் பொழுது மயக்குற்ற இவற்றை நீக்க
ஒல்லைக் குறியோய் வரல்வேண்டுமென் றுன்ன லுற்றார்.

வலிமை மிக்க விந்தமலை வளர்ந்து எமது வான வழிகளை மாற்றி நிற்றலின் இதனால் மற்றும் எமக்கும் செல்லுதற்கு அரிதாயது. பூமியினுடைய தேசம் முழுவதும் சூரிய தேவனுடைய ஒளி தென்படாது எல்லாரும் இருளில் மயங்கினார்கள். ஆதலின் கருணையே குறுகி விளங்கியதுபோலும் மிகச்சிறிய திருவுரு உடைய பெருமானே! நீ இங்கு வரல்வேண்டும் என்று தேவர்கள் யாவரும் நினைக்கலுற்றார்கள். 8

வேறு

உன்ன லோடும் உலகம் நனந்தலைப், பொன்னின் மேருப் புடையொர் பொதும்பரின் மன்னி நோற்றுறை வண்டமிழ் மாமுனி, தன்னு ளத்தில்அத் தன்மைகண்டானரோ.

தேவர்கள் இவ்வாறு நினைத்தலோடும் உலகின் முதலாகிற எல்லையில் விளங்கும் பொன்னான மகாமேருமலையில் உள்ள ஒரு சோலையில் தங்கி இருந்து தவம் செய்கின்ற இனிய சுவை நிறைந்த தமிழ் முனிவனான பெருமை மிக்க அகத்திய முனிவர் தனது திருவுள்ளத்து, தேவர்கள் தன்னை உன்னி நினைந்ததை யும், விந்தத்தின் வீம்புச் செயலையும் கண்டுகொண்டார். 9

மேக்கு யர்ந்திடும் விந்தத்தின் ஆற்றலை, நீக்கி வான நெறியினைத் தொன்மைபோல்
ஆக்கி அண்டர் குறையும் அகற்றுவான், ஊக்கி னான்முன் உததியை உண்டுளான்.

வானத்தில் மேலாகி வளர்ந்து உயர்ந்திடுகின்ற விந்தமலையின் வலிமையை நீக்கி, வான வழிகளைப் பழைமைபோல ஆக்கித் தேவர்கள் குறைகளையும் அகற் றும்படியாகத் திருவுளத்து எண்ணியருளி ஊக்கம் கொண்டான் சமுத்திரங்களை முன்னர் உண்டு உமிழ்ந்த அகத்திய முனிவன். 10.

துள்ளி கண்ணிடைத் தூங்குறக் கைதொழ, உள்ளம் என்பொ டுருகவு ரோமமார்
புள்ளி பொங்கப் புகழ்ந்து புரிசடை, வள்ளல் தன்னை மனத்திடை முன்னினான்.

உடனாக இச்செயலைப் புரிந்தருளச் சிவபிரான் அருள் பெற வேண்டி, கண் களில் நீர்த்துளிகள் தோன்றிச் சொரிந்து வடிந்திடக் கைகளைக் கூப்பித் தொழுது உள்ளம் என்புடன உருகும்படியாக, உரோமமானவை பொடித்துப் பொங்கிடத் திரண்ட சடைமுடியுடைய அருள் வள்ளலான சிவபெருமானை மனத்திடை நினைந்து தியானித்தருளினார் அகத்திய முனிவர். 11.

முன்னும் எல்லையில் மூரிவெள் ளேறெனும், மின்னு தண்சுடர் வெள்ளிவெற் பின்மிசைப்
பொன்னின் மால்வரை போந்தெனப் புங்கவன், துன்னு பாரிடர் சூழ்தரத் தோன்றினான்.

இவ்வாறு நினைந்தருளும் எல்லையில் வெண்மையான வடிவுடைய வலி கொண்ட இடபம் என்னும் மின்னுகின்ற குளிர்ந்த பசிய ஒளியுடைய வெள்ளி மலை மேலாகப் பொன்னிலான பெரியதோர் மலை எழுந்தருளியது என்பது போன்று எம்பிரான் நெருங்கிச் சூழ்கின்ற பூதங்களுடன் தோன்றியருளினார். 12.

ஆதி யுற்றுழி அச்சமொ டேயெழீஇ, மூது ரைத்தமிழ் முற்றுணர் மாமுனி
கோதை யுற்றிடக் கொம்பொடு வாங்கிய, பாத வத்திற் பணிந்தனன் பன்முறை.

ஆதியாகிய பெருமான் தோன்றியருளிய நேரத்து அது கண்டு அச்சத்துடன் எழுந்து மிகவும் முதிய காலம்தொட்டே சிறந்த பெருங் காவியங்களை, பாடல் களை உடைய தமிழினை உலகிற் தந்த அகத்திய மாமுனிவர் காற்று வேகமாக வீசி அடிப்ப, அதனால் தனது கிளைகளுடன் சாய்ந்து வீழுகின்ற ஒரு பெருமரத் தின் தன்மை போன்று எம்பிரானுடைய பாத பங்கயங்களின் முன் பன்முறை வீழ்ந்து பணிந்தனன். 13.

சென்னி பாரில் திளைத்திடத் தாழ்ந்துபின், முன்னர் நின்று முறைப்படப் போற்றலும்
மின்னு லாஞ்சடை விண்ணவன் வெஃகிய, தென்னை மற்ற தியம்புதி யாலென்றான்.

அகத்திய முனிவர் தனது தலையானது பூமியிற் படிந்து திளைக்கும்படி தாழ்ந்து வணங்கிய பின் எமது அப்பன் முன்னாக நின்று முறையாகத் தோத்

திரம் செய்து போற்றுதலும், மின்னல் உலாவி விளங்குவது போலச் சோதி காலு கின்ற திருச்சடையினை உடைய தேவாதி தேவன் அகத்திய முனிவனை நோக்கி, நீ விரும்பியது யாது அதனைச் சொல்லுவாயாக எனக் கேட்டருளினார். 14.

**விந்த மால்வரை மேருவை மாறுகொண், டந்த ரத்தை யடைத்த ததன்வலி**
**சிந்த என்கட் சிறிதருள் செய்கெனச், சந்த நூற்றமிழ்த் தாபதன் கூறினன்.**

பெருமானே! விந்தம் என்னும் பெரிய மலை மகாமேரு மலையோடு மாறு பட்டுக்கொண்டு வானவெளியினை அடைத்துள்ளது. அந்த விந்தம் என்னும் மலை யின் வலியை அடக்கும்படி என்னிடத்து சிறிது அருள் செய்வீராக என்று சந்தம் நிறைந்த இனிமையுடன் கூடிய தமிழ் நூலைத் தந்த அகத்திய முனிவன் கூறி னன். 15.

**அக்க ணத்துனக் காற்றல் வழங்கினும், மிக்க விந்தத்தை வேரோடும் வீட்டிஅத்**
**தெக்கி ணஞ்சென்று சீர்ப்பொதி யத்திடைப், புக்கு வைகெனப் புங்கவன் செப்பினன்.**

அந்தப்பொழுதில், அகத்திய முனிவனே! உனக்கு விந்தம் என்னும் மலையின் வலியை அடக்க ஆற்றலைக் கொடுத்தருளினோம். நீ சென்று மிக்க வலியுடைய விந்த மலையை வேரோடும் அழித்து, அப்பால் அந்த தென்னாடு சென்று சிறப்பு வாய்ந்த பொதிய மலையின் இடத்தாக அடைந்து அங்கிருப்பாயாக என்று சிவபிரான் கூறியருளினார். 16.

**என்ற லுந்தொழு தேத்திநின் பூசனை, நன்று செய்ய நளிதடங் கூவலும்**
**நின்றி டாப்புனல் நீடவுந் தென்றிசைக், கொன்றோர் தீர்த்தம் உதவுகென்**
**றோதினன்.**

என்று எம்பிரான் செப்பலும் அகத்திய முனிவன் எம்பிரானைத் தொழுது வணங்கி, ஐயனே! நினது பூசனையை நன்றுடன் நான் பொதிய மலையில் இருந்து புரிவதற்குக் குளிர்ந்த நல்ல நீர் எக்காலமும் குன்றுதிருக்கின்ற நன்று விசாலித்த கிணறாக அமையும்படி ஒரு தீர்த்தத்தினை நெடிது காலம் நிலை பெறும்படி தந் தருள வேண்டும் என வேண்டியருளினார் அகத்திய முனிவர். 17.

**அனைய காலை அருங்கயி லாயமேல், இனிது வைகிய ஏழ்நதி தன்னுளும்**
**புனித மாகிய பூம்புனற் பொன்னியை, பனிம திச்சடைப் பண்ணவன் முன்னினன்.**

அவ்வாறாகிய காலையில் அரிய கைலாய மலை மேலாக இனிதே பொருந்தி விளங்குகின்ற ஏழு ஆறுகள் தம்மில் புனிதமாகச் சொல்லப் பெறுகின்ற பூவினைப் போலும் மிருதுவான நீரினை உடைய காவிரி ஆற்றினை, குளிர்ச்சியான சந்திரனை அணிந்த சடையுடைய கடவுள் நினைந்தருளினார். 19.

**அந்த வேலை அஃதுணர்ந் தேவரீஇச், சிந்தை பின்னுறச் சென்று திருமுனம்**
**வந்து காவிரி வந்தனை செய்தலும், எந்தை நோக்கி இதனை இயம்புவான்.**

அந்த வேளையில் அதனைக் காவிரி என்னும் ஆறு உணர்ந்து மிகவும் அச்சம் கொண்டு மனவேகமும் பிற்பட அதிவிரைவாக ஓடி வந்து பெருமான் திரு முன்பு சென்று வந்தனை செய்தலும், காவிரி என்னும் பெண்ணை எந்தை பெருமான் நோக்கி, இதனைச் சொல்லியருளுவார். 19.

தீது நீங்கிய தென்றிசைக் கேகிய, கோதி லாத குறுமுனி தன்னொடும்
போதல் வேண்டும் பொருபுனற் காவிரி, மாது நீயென மற்றவள் கூறுவாள்.

நிகரற்ற தூய நீராய் நிரம்பும் காவிரி என்னும் பெண்ணே! நீ தீது நீங்கிய சிறப்புடைய தென் திசையான தமிழ்நாட்டுக்குச் செல்கின்ற குற்றம் ஏதும் இல்லாத அகத்திய முனிவனுடன் போதல் வேண்டும் என்று எம்பிரான் கூறலும் அது கேட்ட காவிரி கூறுவாள். 20

இன்மை ஐம்பொறி செற்றுளன் ஆயினும், அண்ண லேயிவன் ஆண்டகை யாகுமால்
பெண்ணி யானிவன் பின்செலல் நீதியோ, எண்ணின் ஈதும் இயற்கையன்
றென்னவே.

எவராலும் நீக்க முடியாத ஐம்புலன்களின் இச்சைவழிச் செல்லாது அடக்கிக் கொண்டவன் இந்த அகத்திய முனிவனாயினும், பெருமானே! இவன் ஆண்பிள்ளையானவனே. நான் ஒரு பெண். இவன் பின்னாகச் செல்லல் நீதியோ? எண்ணிப் பார்த்தால் இது இயற்கையான தொன்றல்லவே எனக் காவிரி கூறலும். கற்புடைய பெண்கள் தனது நாயகன் இல்லாவழி இன்னுமொரு ஆடவனுடன் போதல் நீதியாகாது இயல்பானதும் ஒன்றல்ல என்னும் தன்மை இங்கு தோன்றுதல் காண்க. 21.

திரிபில் சிந்தையன் தீதுநன் கிற்படா, ஒருமை கொண்ட உளத்தன்நம் மன்பருள்
பெரியன் ஈங்கிவன் பின்னுறச் செல்கென, அருள்பு ரிந்தனன் ஆல மிடற்றினன்.

அப்போது நஞ்சினை உண்டு கழுத்தில் தங்க வைத்தருளிய பெருமான் காவிரியை நோக்கி, இவன் எந்த ஒரு மாறுதலும் எக்காலமும் இல்லாத சிந்தை உடையவன். தீமை இவனிடத்து எக்காலமும் நன்றாக வந்து சேர்ந்து கொள்ளாது. ஒருமை கொண்ட உளத்தை உடையவன். நமது அன்பருள் மிகவும் பெரியவன். ஈங்கு நீ இந்த அகத்திய முனிவன் பின் செல்வாயாக என அருள் புரிந்தார். 22.

ஆங்க தற்கிசைந் தந்நதி யின்றியான், நீங்கி லாத முனியொடு பின்செல்வன்
ஓங்கல் மேய வொருவ இவன்றனை, நீங்கு காலத்தை நீயருள் கென்னவே.

ஆங்கு எம்பிரான் திருவார்த்தைக்கு இசைவுகொண்டு அந்தக் காவிரி எம்பிரானை நோக்கி, கைலைமலை மேல் இருந்தருளும் ஒருவா! யான் இம்முனிவன் பின்னாகச் செல்வேன். ஆனால், இம்முனிவனை விட்டு நீங்குகின்ற காலம் எப்போது என நீ அருள் செய்வாயாக என்னலும். 23.

நன்று நன்றிது நங்கைநின் காரணத், தென்று நோக்கி இவன்கரங் காட்டுவன்
அன்று நீங்கி அவனியின் பாலதாய்ச், சென்று வைகெனச் செப்பினன் எந்தையே.

அப்போது எந்தைபிரான் காவிரியை நோக்கி நீ கேட்டது நல்லது, நல்லது பெண்ணே! உனது காரணமாக என்று உன்னை இம்முனிவன் பார்த்து நீ போவாயாக எனச் சொல்வதுபோல இவன் தனது கையினை அசைப்பானோ, அன்றே இவனை விடுத்து நீ நீங்கி பூமியின் பாலாகச் சென்றிருப்பாயாக எனக் கூறியருளினார். 25.

செப்பு மாற்றஞ் செவிக்கமு தாதலும், அப்பெ ரும்புன லாறவன் பின்செல
ஒப்ப லோடும் உயிர்க்குயி ராகியோன், தப்பின் மாமுனிக் கின்னது சாற்றினன்.

எந்தைபிரான் செப்பியருளிய திருவார்த்தை காவிரியின் செவியில் அமுதம் போலத் தித்திப்பாதலும் அந்தப் பெரிய நீர் வடிவான காவிரி என்னும் பெண் வடிவங்கொண்ட ஆறு அகத்திய முனிவன் பின்னுகச் செல்லும்படியாக ஒப்புக் கொள்ளலோடும், உயிர்க்குயிராகிய சிவபிரான் தவறுதல் ஏதும் இலாத அகத்திய மாமுனிவனை நோக்கியருளி இதனைச் சொல்லியருள்வார். 25.

நீடு காவிரி நீத்தத்தை நீயினிக், கோடி உன்பெருங் குண்டிகைப் பாலென
நாடி யத்திறஞ் செய்தலும் நன்முனி, மாடு சேர்ந்தனள் மாநதி யென்பவே.

அகத்திய முனிவனே! நீடியதாய்க் குறைவின்றிருக்கும் காவிரி என்னும் தீர்த்தத்தை உனது பெரிய கமண்டலத்தினூடு நீ இனிச் சேர்த்துக் கொள்வாயாக எனலும், அதனை நாடி அறிந்துகொண்ட அகத்திய முனிவன் அவ்வண்ணமே தனது கமண்டலத்தினூடு (தூக்குச் செம்பு போல்வது) சேர்த்துக் கொள்ளலும், நன்மையே வடிவான அகத்திய மாமுனிவன் பாலாகப் பெரிய காவிரி என்னும் ஆறு சேர்ந்தது. 26.

ஆய காலை அகத்திய தென்றிசைத், தேய மேகெனச் சீர்விடை நல்குராப்
பாயு மால்விடைப் பாகன் மறைந்தனன், போயி னன்செறி பூதரி னத்தொடும்.

அவ்வாருகிய நேரத்து அகத்திய முனிவனே! நீ தென்திசை நோக்கிச் செல்வாயாக எனச் சிறந்த உத்தரவை அம்முனிவனுக்கு கொடுத்தருளி, பாய்ந்து செல்கின்ற விஷ்ணுவாகிய இடபத்தினை நீங்காது வாகனமாகக் கொண்டருளிய பெருமான் தன்னுடனுக வந்த பூத இனங்களோடும் மறைந்தருளிப் போயினர். 27.

வேறு

அத்தனங் கொருவ அன்னுன் அருளடைந் தங்கண் நீங்கி
மெய்த்தகு மதலே வேண்டி விதர்ப்பர்கோன் பயந்த லோபா
முத்திரை தனைமுன் வேட்டுமு துக்குறைத் திண்மை சான்ற
சித்தனை யளித்த வள்ளல் தென்றிசை நோக்கிச் சென்ருன்.

சிவபிரான் மறைந்தருள அவர் அருளினைப் பெற்றுக்கொண்டு அவ்விடத்தை விட்டு நீங்கி, உண்மை நிலையைக் கொண்டருளிய ஒரு பிள்ளையைத் தான் பெற்றுக்கொள்ள வேண்டி விதர்ப்பராசன் பெற்ற கன்னியாகிய லோபாமுத்திரையை முன்னர் திருமணம் செய்து அதன் பேருகப் பேரறிவின் வலிமைமிக்க சித்தன் என்னும் புதல்வரைப் பெற்றெடுத்த அருள் வள்ளலாகிய அகத்திய முனிவர் தென்திசையை நோக்கிச் சென்ருர். 28.

அகத்தியப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 1,209.

---

# 24. கிரவுஞ்சப் படலம்

பொன்றிகழ் வரையின் நின்றுங் குறுமுனி புவியே ஆருத்
தென்றிசைக் கேகு மெல்லைத் திறலரிக் கிளவல் வாழ்க்கை
வன்றிறல் மாய மூதூர் வந்தெய்த ஆண்டை வைகும்
அன்றிலம் பேர்பெற் றுள்ள அவுணன்அத் தன்மை கண்டான்.

பொன்னாகித் திகழ்கின்ற மேரு மலையின் நின்றும் அகத்திய முனிவன் பூமியின் வழியாகத் தென் திசை நோக்கி வருங்கால்; திறமைமிக்க சிங்கமுகாசுரனுக்குத் தம்பியான தாரகாசூரன் வாழ்க்கை நடத்தும் வலிமையின் திறமிக்க மாயபுரி என்னும் முதிய நகரினை வந்துசேர; அந்த மாயபுரியில் இருக்கும் கிரவுஞ்சன் என்னும் பெயரினையுடைய அசுரன்; அவர் வரவின் தன்மையைக் கண்டான். 1

வானுயர் உலகந் தன்னை வசுந்தரை யாக்கும் பாரை
ஏனைய ககன மாக்கும் எறிதிரைப் பரவை தன்னை
மேனிமிர் பிறங்க லாக்கும் வெற்பினைப் புணரி யாக்கும்
பானுவை மதிய மாக்கும் மதியினைப் பகலாகச் செய்யும்.

இந்த கிரவுஞ்சன் மாயம் வல்லவன் ஆகையால், அவன் வானத்தில் உயர்ந்த உலகை மண்ணுலகமாகச் செய்வான்; பூவுலகத்தை அதுவல்லாத ஏனைய தேவ உலகமாகச் செய்வான்; புரண்டு வீசுகின்ற திரையுடைய சமுத்திரத்தை வானத்து நிமிர்கின்ற மலையாக்குவான், மலையைச் சமுத்திரமாகச் செய்வான்; சூரியனைச் சந்திரனாக்குவான், சந்திரனை சூரியனாகச் செய்வான். 2

அணுவினை மேரு வாக்கும் அன்னதோர் மேரு வெற்பை
நுணுகிய அணுவே யாக்கும் நொய்தெனப் புவனி தன்னைப்
புணரிய தாக்கும் நேமிப் புணரியைப் புவன மாக்கும்
இணருறு நேமித் தீயை எல்லைநீ ராகச் செய்யும்.

அணுவினை மேரு மலையாகும்படி செய்வான்; அவ்வாறான மேரு மலையை நுண்மையான அணுவாகச் செய்வான்; விரைவுடன் இப்பூமியை சமுத்திரமாக்குவான்; பூமியைச் சூழ்ந்த கடலை பூமியாக்குவான்; சுவாலை பொருந்திய வடவாமுகாக்கினியை எல்லை காண்பரிய நீராக்குவான். 3

கன்னலின் அயுதத் தொன்றிற் கடவுளர்க் கேனும் நீத்தோர்
என்னவர் தங்கட் கேனும் எனைப்பல மாயஞ் சூழ்ந்து
பன்னெடுங் காலஞ் செல்லப் படுத்திடும் என்னின் அம்மா
அன்னவன் வன்மை யாவும் ஆரறிந் துரைக்கற் பாலார்

ஓர் நாழிகைப் பொழுதில் பதினாயிரத்தொரு பகுதியில் கடவுளர்க்கென்றாலும்; பற்றினை நீக்கிய எந்த துறவிகளுக்கேனும் இது போலே பல மாயங்களைச் செய்து பின்னர் அவர்களைக் கொன்றுவிடுவான் என்றால்; அம்மவோ அந்த கிரவுஞ்சனது வலிமைகள் யாவற்றையும் யார் அறிந்து சொல்லமுடியும்? 4

அத்தகு தகுவர் கோமன் அடற்கிர வுஞ்சன் என்போன்
மெய்த்தமிழ் முனிவன் செல்லும் வியநெறி விந்த மேபோல்
கொத்துயர் குவடு மல்கிக் குன்றுருக் கொண்டு தன்பால்
உய்த்திடு மாறு போககி உறுதலுங் குறியோன் கண்டான்.

இந்த தீய செயல்களை உடைய அசுரர் தலைவனை கொடுமை புரியும் கிர வுஞ்சன் என்னும் பெயருடையவன்; உண்மை விளைவுதரும் தமிழை வளர்த்த அகத்திய முனிவன் செல்லுகின்ற மேலான இவ்வழியில்; விந்தமலை எப்படி தோன்றி வளர்ந்துள்ளதோ அதே போன்று; தொகுதியாக உயர்ந்த சிகரங்கள் நிறையப்பெற்று மலைவடிவங்கொண்டு; தன்னிடத்து உள்ளே போவதற்கு அமைய ஒரு வழியும் காண்பித்து அங்கு நிற்றலும் அதனை அகத்திய முனிவர் கண்டார். 5

காண்டலும் வியந்து நன்றிக் கடிவரை நடுவ ணாக
ஈண்டிதோ ரத்தம் உண்டால் இவ்வழி நடத்தும் என்னா
ஆண்டத னிடையே போக அந்நெறி குரோச வெல்லை
மாண்டலும் இலதே யாக மற்றொரு சுரமுற் றன்றே

அகத்திய முனிவர் பிரான் மலையின் இயல்பைக் காண்டலும்; என்னே இது இப்படியும் இவ்வழியில் இது நிற்பது என வியந்து; சரி நல்லது இந்த சிறந்த மலையின் நடுவே இதோ இவ்விடத்தில் ஓர் வழி உண்டு; இந்த வழியால் யாம் நடப்போமென்று அவ்விடத்து அவ்வழியால் போக அந்த வழியும் ஓர் குரோச எல்லை போக பின்னர் இல்லாமல் போய் வேறுமொரு வழி தோன்றியது. 6

அந்நெறி கண்டு தொன்னூல் அறைமுனி ஏக லோடுஞ்
சென்னெறி மேலின் றாகத் திரும்பினன் செல்லுங் காலை
முன்னுள நெறியுங் காணான் முனிவரன் மயங்க ஓர்சார்
பின்னொரு வட்டை கண்டு பேதுற லோடும் போனான்.

அந்த வழியைக் கண்டு பழைய நூலான அகத்தியம் என்னும் நூலைச் அருளிச் செய்த அகத்திய முனிவர்; அவ்வழியாலும் செல்லுதலும் சிறிது தூரஞ்சென்ற பின் அப்பால் செல்லுதற்குரிய வழியில்லாதொழிய; திரும்பி வரும்போது முன் வந்த வழியையும் காணாது அகத்திய முனிவர் திகைத்தலும்; பின்னோர் சாராக ஓர் சிறு வழியைக் கண்டு அகத்திய முனிவன் அதனுள்ளாக பதைப்புடன் சென்றான். 7

ஆறது செல்லுமெல்லை அடலெரி கனைந்து சூழச்
சூறைகள் மயங்க மங்குல் துண்ணென மாரி தூவ
மாறகல் உருமுச் சிந்த வல்லிருட் படலை சுற்ற
வீறகல் மாயை சூழ்ந்தான் எறுழ்வலி அவுணர் கோமான்.

அந்த வழியால் செல்லும்போது கொடிய நெருப்பு சுவாலித்து சுற்றிவளையவும்; சூறவளிக் காற்று சுழற்றி அடித்து துயரப்படுத்தவும்; வானம் திடீரென மழை பொழியவும்; ஒப்பற்ற இடிகள் விழவும்; கொடிய இருளான படலம் சுற்றிமூடவும் முடிவில்லாத பல மாயங்களைச் செய்தான்; மிக்க வலிமைகொண்ட அசுர தலைவன் கிரவுஞ்சன் என்பவன். 8

மட்டுறு குறிய செம்மல் மற்றது நோக்கித் தீயோர்
பட்டிமை யொழுக்கீ தென்னுப் பயின்றிடு போத நீரால்
உட்டெளி பான்மை நாட ஊழ்திறந் தெரித லோடுங்
கட்டழல் என்னச் சீறிக் கரதலம் புடைத்து நக்கான்.

தேன்போலும் காண்பவர்க்கு இனிய சிறிய வடிவுகொண்ட அகத்திய முனிவர்; அத் தன்மையைப் பார்த்து ஓகோ! இது தீயவரின் கள்ளத்தனமான செயலாகும் என்று: தான் கற்றுக்கொண்ட ஞான நீர்மையால் உள்ளத்தே தெளிந்து நாடியறிய; இந்த கருமம் வரவேண்டிய தன் ஊழின் திறன்தெரிந்து கொள்ளளோடும் கொடிய நெருப்பைப் போலச் சீறி கைகள் இரண்டினையும் தட்டிச் சிரித்தார். 9

நன்றுநன் றவுணன் கொல்லாம் நமக்கிது புரியு நீரான்
இன்றிவன் வன்மை நீப்பன் யானென அவுண வெய்யோன்
குன்றுரு வதனிற் குற்றிக் குறுமுனி பாணித் தண்டால்
துன்றிடும் பூழை யாக்கிச் சூளிவை புகல லுற்றுன்.

நல்லது நல்லது இந்த அசுரனே நமக்கு இதைச் செய்ய வல்லான்; இன்று இந்த அசுரன் வலியை நீக்குவேன் யான் என்று; அசுரனை கொடியவனின் மலை வடிவில் தனது கையில் உள்ள தண்டால் குற்றி நெருங்கிய பெரிய துவாரங்களை உண்டாக்கி; பின்வரும் சாபங்களைச் சொல்லத் தொடங்குவார். 10

மாண்மதி பெருத வெய்யோய் மற்றுநின் தொன்மை நீங்கி
நீண்மலை யாகி ஈண்டே நின்றுதீ யவுணர்க் கெல்லாம்
ஏண்மிகும் இருக்கை யாகி இருந்தவத் தோர்க்கும் ஏனைச்
சேண்மலி கடவு ளோர்க்குந் தீத்தொழில் இழைத்தி பன்னுள்.

மாட்சிமையுடைய நற்புத்தியைப் பெருத கொடியவனே! இப்போதே நீ இதுகாறும் உற்ற பழையநிலை நீங்கி நீண்ட மலையாக இவ்விடத்தே நின்று கொள்; இனி நீ அசைந்து திரிய முடியாது நின்று அசுரர்களுக்குகெல்லாம் நெடிதுகால இருப்பிடமாகி இருந்து; பெரிய தபோதனர்க்கும் ஏனைய வான உலகில் உள்ள தேவர்களுக்கும் இந்த தீய தொழிலைச் செய்வாயாக பலநாட்கள் வரை. 11

மாற்படு நமது பாணி வலிகெழு தண்டால் உன்றன்
பாற்படு புழைகள் யாவும் பற்பல மாயைக் கெல்லாம்
ஏற்புடை இருக்கை யாகு எம்பிரான் உதவுஞ் செவ்வேள்
வேற்படை தன்னிற் பின்னுள் விளிததி விரைவின் என்றுன்.

பெருமை மிகுந்த எனது வலியுடைய கைத் தண்டினுல் உன்னிடத்தாக உண்டாக்கப்பெற்றிருக்கும் துவாரங்கள் யாவும் பல பல மாயங்களுக்கு எல்லாம் ஏற்புடையதான இருக்கையாக இருக்கும்; அப்பால் எம்பெருமான் திருக்குமாரராகி உலகினைச் சேமமுற வைக்கும்படியாக வந்தருளும் முருகப் பெருமானின் வேற்படையினுல் பின்னுளில் அழிந்து போவாயாக; இது விரைவில் ஆகும் என சாபமிட்டார் அகத்திய முனிவர். 12

பழிதரும் இனைய சாபம் பகர்ந்துதன் சிகரந் தன்னில்
உழிதரு புனலை வாங்கி உளங்கொள்மந் திரத்தால் வீசி
அழிதர மாயை நீக்கி ஆண்டொரீஇ மீண்டு தென்பால்
வழியது செவ்வன் நாடி வண்டமிழ் முனிவன் போனன்.

தீங்கு பயக்கத்தக்க இந்த சாபத்தை செப்பி; தனது கமண்டலத்தூடு வைக்கப்பட்டிருந்த காவிரி என்னும் தீர்த்தத்தை கையில் எடுத்து; உள்ளத்தில் சிந்தித்த மந்திரத்தை செபித்து அங்கு கிரவுஞ்சனின் மாயை அழிந்துபோக வீசி அவ்விடத்தை விடுத்து தென்பாலில் உள்ள வழியினை இப்பொழுது செவ்வனே ஆராய்ந்தறிந்து கொண்டு வண்மைமிக்க தமிழ் முனிவனான அகத்தியர் போயருளினர். 13

கிரவுஞ்சப் படலம் முற்றிற்று.

**ஆகத் திருவித்தம் 1,222**

## 25. விந்தம் பிலம்புகு படலம்

**அன்னதோ ரவுணர் கோமான் அன்றுதொட் டசல மாகித்**
**துன்னெறி அவுணர் யாருந் துவன்றிய அரண மாகி**
**நென்னலின் முதனாள் காறு நின்றனன் அனையான் தன்னை**
**என்னையா ளுடைய நீயன் றிவாவரே அடுதற் பாலார்**

அவ்வாறான அசுரர் தலைவன் கிரவுஞ்சன் என்போன் அன்று தொட்டு அசைந்து திரியாது நிலைபெற்றிருக்கும் மலையாகி தீய செயல்களைக்கொண்ட அசுரர் யாரும் நெருங்கி இருக்கின்ற கோட்டையாகி நேற்றுக்கு முந்திய நாள் வரையும் நல்லோர்க்குத் தீங்கு விளைவிப்பனாகவே நின்றனன். அப்படியான கிரவுஞ்சனை என்னை முற்றிலும் ஆளுடைய நீயல்லாது வேறு யார் தான் சங்காரம் செய்யமுடியுமென வியாழ பகவான் எம் பன்னிருபுயத்து பகவானை நோக்கிச் சொல்லுவார். 1

**பைந்தமிழ் முனிவன் வான்றோய் பனிவரை யதனை நீங்கிக்**
**கந்தரஞ் செறிபொற் கோட்டுக் கடவுளர் வரைச்சா ரெய்தி**
**அந்தம தடைந்தோர்க் கங்கண் அருளினால் தனது மூல**
**மந்திரம் உணர்த்தும் முக்கண் வானவன் காசி புக்கான்.**

பசியதும் இனியதுமான தமிழை ஓதியருளிய அகத்திய முனிவர் வானத்தை முட்டிடும் குளிர்ச்சி வாய்ந்த பனிப்படலம் மூடிய இமயமலையை நீங்கி; அழகுசெறிந்த பொன்முடியுடைய தேவகிரியின் சாரலை அடைந்து; மரணமான முடிவை அங்கிருந்து அடைவோர்க்கெல்லாம் அருளினால் தனது மூலமந்திரத்தை உபதேசிக்கும் மூன்று கண்ணுடைய தேவாதிதேவன் சிவன் இருக்கும் காசியை அடைந்தார். 2

**கங்கைசென் றொழுகுங் காசிக் கறைமிடற் றகில நாதன்**
**பங்கய அடிகள் தாழ்ந்து பரவல்செய் தாண்டு நீங்கித்**
**துங்கதை கொண்ட விந்தத் தொல்வரைக் கொருசா ரேகி**
**அங்கதன் நிலைமை நோக்கி அறிவன்ஒன் றியம்ப லுற்றான்.**

கங்கையாறு சென்று சிறந்து ஓடுகின்ற காசியில்; நஞ்சைக் கண்டத்தில் தரித்த அகில உலகங்கட்கும் நாதனான சிவபிரானின் தாமரை போலும் திருவடிகளைத் தாழ்ந்து துதித்து வணங்கி; அவ்விடத்தை விடுத்து நீங்கி பெருமிதம்கொண்டு நின்ற விந்தம் என்னும் முதிய மலைக்கு ஒரு பக்கராகச்சென்று; அங்கு அந்த மலையின் நிலையை நோக்கி அகத்தியமுனிவன் ஒன்று சொல்லுகின்றான். 3

சேயுயர் நிவப்பிற் ருகிச் சேண்புகும் விந்த மென்னும்
மாயிருங் குவடு கேண்மோ மற்றியாம் பொதிய வெற்பில்
போயிருந் திடவே உன்னிப் போந்தனம் அதனுக் கின்னே
நீயொரு சிறிது செல்லும் நெறியளித் திடுதி யென்ருன்.

வானத்தில் உயர்வதில் உனக்கு ஒருவர் நிகரில்லாது மேலோங்கி வானம் புகுந்த விந்தமென்னும் மிகப்பெரிய மலையே கொஞ்சம் இதைக் கேட்பாயாக; நாம் இப்போது பொதிய மலையில் போயிருந்திடும்படியாகவே நினைந்து வந்தனம்; அங்கு நான் போவதற்காக நீ மறித்து நில்லாது கொஞ்ச வழிவிடுத்துத் தருவாயாக என்ருர். 4

எறிகதிர் மதியி னுக்கும் ஏகருந் திறத்தால் வான
நெறியினை யடைத்துத் தொல்லை நெடியமால் போன்று நின்றேன்
குறியநிற் கஞ்சி யாறு கொடுப்பனோ எனது தோற்றம்
அறிகிலை மீண்டு போகென் றவ்வரை மொழிந்த தன்றே

பிரகாசித்து வரும் கிரணங்களையுடைய சந்திரனுக்கும் செல்ல முடியாத தன்மையால் யான் வானவழியையே இடைமறித்து அடைத்து; முன்வளர்ந்த நெடிய நாராயணக் கடவுள் போன்று நின்றேன். அப்படி இருப்ப குறுகிய வடிவுடையவனை உனக்குப் பயந்து வழிகொடுப்பேனே; எனது தோற்றம் அறியாய் போலும்; திரும்பி நீ சென்றுவிடு என்று அந்த விந்தமலை சொல்லியது அன்றே. 5

கேட்டலும் அதனைச் சீற்றங் கிளர்ந்திட நகைத்து நாதன்
தாட்டுணை யுன்னித் தொன்னாட் சதமகன் வேண்ட ஆழி
மாட்டுறச் செறித்த கையை மலரயன் பதத்தின் காறும்
நீட்டினன் தவமே யன்றி நெடும்பொருள் பிறவு முண்டோ.

விந்தமலையின் இந்த வார்த்தையைக் கேட்டதும் அகத்திய முனிவர் கோபம் தோன்றிடச் சிரித்து சிவபிரான் திருவடிகளை நினைந்து; முன்னுளில் இந்திரன்; சமுத் தில் ஒளித்த விருத்திராசுரனை காட்டித் தருப்படி வேண்ட அப்போது கடலை ஒருங்கே உழுந்தனவாக்கும்படி நீட்டிய அதே திருக்கையை; பிரமதேவரின் உலக வரையின் காறும் செல்லுமாறு நீட்டினர். நீட்டலும் கை வளர்ந்தது ஆகையால் தவமேயன்றி மேலான பெரிய பொருள் வேறுண்டோ. 6

அற்புதம் அமரர் கொள்ள ஆற்றவுங் குறியோன் விந்த
வெற்பினை தும்பர் தன்னில் மீயுயர் குடங்கை சேர்த்தி
நீற்புற வூன்ற வல்லை மற்றது புவிக்கட் டாழ்ந்து
சொற்பிலம் புகுந்து சேடன் தொன்னிலை அடைந்த தன்றே.

இது நோக்கித் தேவர் அற்புதம் கொள்ள; மிகவும் குறுகிய வடிவுடைய அகத்திய முனிவர் விந்தமலையின் உச்சியில் மிக உயர நீட்டிய தனது கையின்; உள் ளங் கையினை வைத்து வலிமையுடன் ஊன்றலும்; விரைவாக அந்த விந்தமலை பூமி யின் உள்ளாகத் தாழ்ந்து சொல்லப்பெறும் பாதாளம் சென்று ஆதி சேடனுடைய உலகை அடைந்து கொண்டது. 7

அள்ளலை யடைகின் றேரில் அரம்புகும் அடுக்க லஞ்சி
வள்ளலை யருளிக் கேண்மோ மற்றுனை வழிப டாமல்
எள்ளலை யிழைத்து மேன்மை இழந்தனன் தமியன் குற்றம்
உள்ளலை எழுவ தென்ஞான் றுரையெனக் கூறிற் றன்றே

சேற்றில் ஆழ்பவரைப்போன்று பாதாளம் புகுந்த மலையானது பயந்து வள்ளலே அகத்திய முனிவா! யான் சொல்வதை இரக்கமுடன் கேட்டருள்க! நீயே தெய்வமென்பதை நான் உணர்ந்து வழிபடாமல்; இகழ்ச்சியைப் புரிந்து எனது மேன்மை இழந்தனன். தமியேனுடைய குற்றத்தை எண்ணுதீர்; பொறுத்தருளி நான் மீண்டும் எழுவது என் நாளில் சொல்லியருள்க எனக் கூறியது. 8

அன்னதோர் பொழுது தன்னில் அலைகடல் செறித்த அங்கை
முன்னவன் விந்த வெற்பின் மொழியினை வினவி யான்போய்
இந்நெறி யிடையே மீளின் எழுதியால் நீயு மென்று
நன்னகை யோடு சொற்றான் நாரதன் சூழ்ச்சிக் கொப்ப

அன்னதோர் பொழுதில் அலையினையுடைய கடலை உமந்தளவாக்கி அடக்கி வைத்திருந்த அழகிய திருக்கையினையுடைய முன்னவரான அகத்திய முனிவன்; விந்த மலையின் இந்த வார்த்தைக் கேட்டு விந்த மலையே கேள்! யான் போய் பின்னொரு முறை இந்த வழியாகத் திரும்பிவந்தால்; நீ மீண்டு எழுவாயாக என்று நல்ல புன் சிரிப்புடன் சொல்லியருளினுர். நாரத முனிவனின் சூழ்ச்சிகளுக்கு ஏற்றவாறு. 9

வன்புலப் புவிக்குள் விந்தம் மறைதலும் அறிவின் நீராற்
புன்புலப் பகையை வென்றோன் கரத்தைமுன் போலச் செய்து
துன்புலப் புற்ற சிந்தைச் சுரர்கள்பூ மாரி தூர்ப்பத்
தென்புலப் பொதிய வெற்பிற் செல்வது சிந்தை செய்தான்.

கடினம் மிகுந்த பூமியின் உள்ளே விந்தமலை மறைதலும் தனது அறிவின் திறத்தால்; அற்ப சுகங்களைக் காட்டும் பஞ்ச புலங்களாகிய பகையை வெற்றிகொண்ட அகத்திய முனிவர் நீட்டிய கையினை வழமைபோல் அமையும்படி ஆக்கிக் கொண்டு; விந்தமலை ஒடுக்கப்பட்டபடியால் தமது துன்பங்கள் நீக்கப்பட்டு மகிழ்வான சிந்தையுடைய தேவர்கள்; பூமழை சொரிய தென் திசையிலே உள்ள பொதிய மலையில் செல்வதற்கு சிந்தை கொண்டார். 10

ஆயிடை விந்தம் பார்புக் கழுந்திட அகல்வா னத்துத்
தேயம்வெள் ளிடைய தாகத் தினகரன் முதலாந் தேவர்
பாய்சுடர் விளக்கம் யாண்டும் பரந்தன சிறையை நீங்கி
ஏயென அளக்கர் நீத்தம் எங்கணுஞ் செறியு மாபோல்.

அவ்விடத்து விந்தமலை பூமியின் உள்ளே ஆழ்ந்து அழுந்திடுதலும்; அகன்ற வானத்தில் உள்ள தேசங்கள் வெளியாதலோடும்; சூரியதேவன் முதலாகிய தேவர்களுடைய பரக்கின்ற ஒளிக்கிரணங்கள் எங்கும் பரந்தன; இது கட்டுப்பட்டிருந்த கடல் நீரானதுதனது கட்டினை நீங்கி; கரையை உடைத்து எங்கணும் பரத்தல்போலாயது. 11

**அதுபொழு தலரி யாதி அமரர்கள் அகத்தி யன்பாற்**
**கதுமென அடைந்து போற்றிக் கைதொழு தெந்தை செய்த**
**உதவியார் புரிவர் நின்னால் உம்பரா றெழுகப் பெற்றேம்**
**பொதியமேல் இனிநீ நண்ணி இருத்தியெம் பொருட்டா லென்றார்.**

அதுபொழுதில் சூரியதேவன் முதலாகிய தேவர்கள் அகத்திய முனிவன் பாலாக விரைவுடன் வந்து; அவரை போற்றுதல் புரிந்து கைதொழுது எந்தைபெருமானே; தேவரீர் எமக்குச் செய்த உதவியை வேறுயார் செய்வார்கள்; உம்மால் வானவழிகளில் மீண்டும் செல்லக்கூடிய நிலையைப் பெற்றுக்கொண்டோம்; இனிமேலாகப் பொதியமலையில் சென்று சேர்ந்து எம்பொருட்டாக அங்கு இருப்பீராக என்றார்கள். 12

**என்றலும் விழுமி தென்னா இசைவுகொண் டமரர் தம்மைச்**
**சென்றிட வானிற் றூண்டித் தெக்கிணந் தொடர்ந்து செல்லக்**
**குன்றுமர் குடாது தேயங் குறுகும்வில் வலன்வா தாவி**
**அன்றுயிர் இழப்ப நின்றார் அகத்தியன் வரவு கண்டார்.**

எனக் கூறலும் அது சிறந்தது என்று அதற்குச் சம்மதங்கொண்டு; முன் நின்ற தேவரை வான உலகுகள் மீதாகச் சென்று கடமைபுரிய ஏவிவிட்டு; தெற்கு நோக்கித் தொடர்ந்து அகத்திய முனிவன் செல்லலும்; மலைகள் நிரம்பிய மேற்கு நாட்டில் வாழ்கின்ற வில்லவன் வாதாவி என்னும் அசுரர்கள் அன்று; தமது உயிரை இழக்கும்படி நின்றார்கள்; அகத்திய முனிவர் வருதலைக் கண்டார்கள். 13

விந்தம் பிலம்புகு படலம் முற்றிற்று.

**ஆகத் திருவிருத்தம் 1,235**

---

# 26. வில்வலன் வாதாவி வதைப் படலம்

**கண்டனர் இவனே போலுங் காய்சினத் தவுணர் ஆவி**
**கொண்டனன் வேலை முன்னங் குடித்துமிழ் கின்ற நீரான்**
**அண்டரை யருள்வா னுங்கொல் அடைந்தனன் அவனுக் கின்னே**
**உண்டியை யுதவி ஆவி கொள்ளுதும் ஊனை டென்றார்**

கண்டவுடன் இவனே போலும் கொலைசெய்யும் கோபமுடைய அசுரர் பலர் உயிரை மாய்த்தவன்; சமுத்திர நீர் முழுமையும் முன்னங் குடித்து உமிழ்கின்ற தன்மையுடையான்; இவன் தேவர்களைப் பாதுகாக்க வேண்டிப் போலும் இங்கு அடைந்தனன்; அவனுக்கு இப்பொழுதே உணவினை வழமைபோலக் கொடுத்து அவன் உயிரை மாய்த்து உடலை உண்போம் என்றார்கள்; 1

என்றிவை புகன்ற பின்னர் இளவலாம் வாதாவி யென்போன்
குன்றதன் புடையில் ஓசார் கொறியுருக் கொண்டு போந்து
மென்றழை புதலின் மேய வில்வலன் என்னு மேலோன்
ஒன்றிய புலத்தின் மிக்கோர் உருவுகொண் டுற்றான் அன்றே.

என்று இவைகளைப் பேசியபின் தம்பியான வாதாவி என்பவன்; மலையின் பக்கரில் ஒரு புறமாக ஆட்டு வடிவங்கொண்டு சென்று; மெல்லிய இலைகளை அவ்வி டத்தில் மேய்ந்து நிற்ப, வில்வலன் என்னும் மூத்தவன் ஒருமைப்பாடுடைய அறி வில் மேம்பட்டோரான முனிவர் உருவுகொண்டு அங்கு நின்றனன். 2

மீதுறு சடையும் நீறு விளங்கிய நுதலும் வேடங்
காதணி குழையின் சீருங் கண்டிகைக் கலனும் மேற்கொள்
பூதியுந் தண்டுங் கையும் புனைஉரி யுடையு மாக
மாதவ வேடந் தாங்கி முனிவனேர் வல்லை சென்றான்.

உச்சியின்மீது முடிந்துள்ள சடைமுடியும்; திருநீறு விளங்கிய நெற்றியுடன் விளங்குகின்ற வேடத்திற்கேற்ப; காதிலே அணியப்பெற்ற குண்டலங்களின் சிறப்பும் உருத்திராக்க மாலையான ஆபரணமும், மேனி முழுவதும் செறியப் பூசிய திருநீறும் யோகத் தண்டுகொண்ட கையும்; மர உரியான ஆடையுமான பெரிய தபோ வேடம் தாங்கிக்கொண்டு அகத்திய முனிவன் நேராக விரைவில் சென்றான். 3

மெய்தரு புறத்துக் காமர் வியனுருக் கொண்டு தன்னுட்
கைதவங் கொண்டு செங்கேழ்க் காஞ்சிரங் கனிபோல் மேய
மைதிகழ் மனத்தின் நேர்போய் வண்டமிழ் முனிவற் போற்றி
ஐதென வணங்கி முக்கால் அஞ்சலி செய்து சொல்வான்.

மேனியின் புறத்திலே அழகிய முனிவர் வடிவைக் கொண்டு; உள்ளத்து வஞ்சனையும் கொண்டு; சிவந்து அழகுடன் விளங்கும் காஞ்சிரைப் பழம்போல உள்ளே நஞ்சும் வெளியில் அழகும்கொண்டு; கறுவியங் கொண்ட மனத்துடன் அகத்திய முனிவன் நேராகச்சென்று; வண்மையுடைய தமிழ் தந்த அகத்திய முனிவரைப்போற்றி செய்து சீராக வணங்கி; 'மும்முறை அஞ்சலிசெய்து இதனைச் சொல்வான். முக்கால் என்பது முழுமனதுடன் இல்லாத எனும் பொருளும் தோன்றுகிறது. 4

அடிகள்நீர் போத இந்நாள் அருந்தவம் புரிந்தேன் இன்று
முடிவுற வந்தீர் யானும் முனிவர்தம் நிலைமை பெற்றேன்
கொடியனேன் இருக்கை ஈதால் குறுகுதிர் புனித மாகும்
படியென உரைத்துப் பின்னும் பணிந்தனன் பதங்கள் தம்மை.

முனிவர் பிரானே நீர் வரவேண்டி இந்நாள் வரையும் அரிய தவம்செய் திருந்தேன்; எனது தவமும் முடிவுற இன்று வந்தீர்; யானும் இன்று தான் முனிவர் நிலையை பெற்றுக்கொண்டேன். கொடியேனை எனது இருப்பிடம் ஈதாகும்; அங்கு நீர் வாரும் அது புனிதமாகும்படியாக என்றுகூறி பின்னரும் அகத்திய முனிவரின் பாதங்களைப் பணிந்தனன் முனிவடிவங்கொண்ட வில்வலன். 5

பணிதலும் ஒருதன் கையிற் பரவையம் புனலை வாரி
மணிபடு பதுமம் போல வாய்க்கொளும் முனிவன் தீயோன்
துணிவினை யுணரா னாகித் துண்ணென உவகை தோன்ற
இணையறு தவத்தின் மிக்கோய் எழுதியென் றிதனைச் சொற்றான்.

வில்வலன் பாதங்களில் வீழ்ந்து பணிதலும், அதுவேளை தனது ஒரு கையிலே எழு சமுத்திரங்களின் அழகிய நீரை வாரி; முத்துள்ள தாமரைப் பூவினைப் போல வாயில் இட்டு உண்டவராகிய அகத்திய முனிவர்; தீயவனான வில்வலன் உள்ளத்தே கொண்டதும்; முன்புள்ள முனிவர்க்குச் செய்துவந்த துரோகமான துணிவினை அறியாதவராய்த் திடீரென மகிழ்ச்சி தோன்ற; வில்வலனை நோக்கி. ''இணையிலா தவத்தில் மேம்பட்டவனே எழுவாயாக'' என்று கூறியபின் இதனைச் சொல்வார். 6

ஆறெதிர் எண்ம ராகும் ஆயிர முனிவர் தம்பால்
வேறுள தவத்தர் தம்பால் மிக்கநின் னியற்கை தன்னில்
கூறுசெய் அணுவின் காறும் குணமில சரதம் ஈது
தேறுதி இருக்கை யேது செல்லுதும் வருக வென்றான்.

நாற்பத்தெண்ணாயிரம் என்னும் தொகையுடைய முனிவர்கள் தம்பாலோ அல்லது வேறுள தவத்தர்களிலோ; எவரிடத்தாகுதல் மேம்பட்ட உன்னிடத்திருக்கும் முனிவர்க்கு வேண்டிய குண இயல்புகளில் ஒரு அணுவின் அளவுதானும் இல்லை. இது உண்மையாகும் என திடங் கொள்வாய். நிற்ப, உனது இருப்பிடமேது அங்கே நாம் போவோம் வருவாயாக, என்றார். 7

என்றருள் முனியை நோக்கி ஈதென துறையுள் என்னச்
சென்றனன் முடிவான் வந்த தீயவன் அவற்கொண் டேகி
மன்றதன் இருக்கை யுற்று மரபுறு தவிசிற் சேர்த்திப்
பொன்றிகழ் அடிகட் கேற்ற பூசனை புரிந்து சொல்வான்.

என்ற அகத்திய முனிவனை வில்வலன் பார்த்து, ஈதாகும் எனது இருப்பிடம் என்று அவரை அழைத்துச்சென்று; தனது வாழ்க்கை முடியும்படி வந்த தீயவனான வில்வலன்; தனது இருப்பிடத்தைச் சேர்ந்து; விதிமுறையாக அமைவுற்ற ஓர்சிம்மாசனத்தில் இருத்தி; அகத்தியமுனிவருடைய பொன் திகழும் பாதங்களுக்கு ஏற்ற பூசனைகளை விதிமுறை புரிந்தபின்னர் சொல்வான் 8

எந்தைநீ யானும் ஏனை என்குலத் தவரும் உய்ய
வந்தனை போலும் இந்நாள் மற்றென திருக்கை வைகி
வெந்திடு புற்கை யேனும் மிசைந்தனை எனக்குச் சேடந்
தந்தருள் புரிந்து போதி தவத்தரில் தலைவ என்றான்.

"எந்தை பிரானே நீர் யானும் ஏனைய எனது குலத்தவரும் உய்யும் காரணமாகப் போலும் இன்று வந்துள்ளீர்; ஆகவே எனது இந்த இருப்பிடத்தில் இன்று தங்கி; நான் தருகின்ற வெந்திட்ட வெறும் சாதமேனும் உண்டு; எனக்கு மிகுதியைத்தந்து; உமது மிகுதியான பிரசாதத்தை உண்டு நான் அருள்பெறும்படி தந்தருளி; தவத்தரிற் தலைவனே பின்னால் போவீராக'' என்றான். 9

சொல்வல முனிவர் மேலோன் சூர்முதன் மருகா யுள்ள
வில்வலன் மாற்றங் கேளா விழுமிது பரிவின் மிக்கோய்
ஒல்வதோர் உணவு நின்பால் உவந்தியாம் அருந்திப் பின்னர்ச்
செல்வது கடனு மென்று செப்பினன் தீமை தீர்ப்பான்.

தமிழ் என்ற சொற்களை வனப்புடையவாகச் சொல்ல வல்லவரும்; தனது சொல்லின் பயனால் உலகைச் சேமமுற வைப்பவருமான முனிவர்களில் மேம்பட்ட அகத்தியமுனிவர்; சூரபன்மனின் மருமகனாக உள்ள வில்வலனின் வார்த்தையைக் கேட்டு, "அது மிகவும் நன்று. அன்பில் மிகுந்தவனே! நீ தருகின்ற பொருத்தமிக்க உணவினை நான் அருந்தி பிற்பாடு செல்வது எனது கடமையாகும்" எனக் கூறினர் எத்தகைய தீமையையும் தீர்ப்பவர். 10

மேலவன் இதனைக் கூற வில்வலன் வணங்கி எந்தாய்
சீலமோ டடிசில் செய்வன் சிறிதுபோ திருத்தி யென்று
காலையங் கதனில் ஆண்டோர் கயப்புனல் படிந்து மூழ்கிச்
சாலவும் புனித னாகி அடுவதோர் சாலை புக்கான்.

மேலவரான அகத்தியமுனிவர் இதனைக் கூற வில்வலன் வணங்கி "எந்தை பிரானே! மிகவும் தூய்மையாக அமுது சமைப்பேன், சிறிது பொழுது அங்கு இருப்பீராக" என்று கூறி அக்காலையிலே சென்று அவ்விடத்திலுள்ள ஓர் குளநீரில் அமுந்தி மூழ்கி எழுந்து; மிகவும் புனிதனாகி சமையல் செய்யும் சாலையில் புகுந்தான். 11

அத்தலை நிலத்தை நீரால் ஆமயம் பூசி யாண்டுஞ்
சித்திரம் உறுத்தி யாவுந் தேடிவால் வளையின் சின்னம்
ஒத்ததண் டுலமா சேக ஒண்புன லிடையே இட்டு
முத்திறம் மண்ணி மற்றோர் முழுமணிக் குழிசி உய்த்தான்.

அந்தச் சாலையிலுள்ள நிலத்தை நீருடன் சேர்த்த பசுவின் சாணத்தினால் மெழுகி எல்விடத்திலும் கோலமிட்டு; சமையலுக்கு வேண்டிய பாத்திரம் முதல் பொருள் எல்லாம் தேடி; வெள்ளிய சங்கின் சிறிய துணிகளைப் போன்ற நல்ல அழகிய அரிசியை; அழுக்கு நீங்கும்படி நல்ல நீரில் இட்டு மூன்று முறை கழுவி; அந்த அரிசியை வேறொரு பெரிய குழிந்த வடிவுடைய மணியான பாத்திரத்தில் இட்டான். 12

தாக்குறு திறலின் வெய்ய தழல்பொதி கருவி யான
ஆக்கிய செய்த தொன்றில் அழலினை அதனுள் மூட்டித்
தேக்ககில் ஆர மாட்டிச் சீருணத் தசும்ப ரொன்றில்
வாக்கிய வுலைப்பெய் தேற்றி மரபில்வால் அரியுள் ளிட்டான்.

வேகமுடன் உராய்ஞ்சுகின்ற மையினால் நெருப்புத் தோன்றும் கொடிய நெருப்பிருக்கும் கருவியான தீக்கடைக் கோலினின்றும் உராஞ்சிப் பெறப்பட்ட நெருப்பை (தீக்கடைக்கோலின் நின்று பெறுகின்ற நெருப்பே மேலானது என விதிக்கப்பட்டது ஆகையால்) சமையல் செய்வதற்காக அமைக்கப்பட்ட ஓர் அடுப்பில் மூட்டி; தேக்கும் அகிலும் சந்தனமுமாகிய விறகைச் செருகி மாட்டி எரியச் செய்து ஓர் செப்புப் பாத்திரத்தில் செய்யப்பெற்ற உலையை அந்த அடுப்பில் வைத்து; கழுவிய வெள்ளை அரிசியை அதனுள் போட்டான் 13

பதனறிக் துண்டி யாக்கிப் பாலுற வைத்துப் பின்னர்
முதிரையின் அடிசி லட்டு முன்னுறு தீம்பால் கன்னல்
விதமிகும் உணாக்கள் யாவும் மேவுற அமைத்துக் கொண்டு
புதுமணங் கமழுந் தெய்வப் புனிதமாங் கறியுஞ் செய்தான்.

வேகுற்ற பதம் அறிந்து அதனை இறக்கி பக்கராக வைத்து ; பின்னர் சிறு தானியங் கலந்த அன்னத்தைச் சமைத்து ; அதனோடு பின்னரும் இனிய பாலிலும் சர்க்கரையிலும் விதவிதமாகச் செய்யப்பெறும் இனிப்புடைய அமுது வகைகள் யாவும் பொருந்துற அமைத்துக் கொண்டு ; புதுவாகிய வாசனை விசுகின்ற தெய்வத் தன்மைக்கேற்ற தூயகறி வகைகளையும் செய்தான். 14

ஆற்றலால் மேடம் போலாய் ஆரிடர் உயிரை யெல்லாம்
மாற்றுவான் அமைந்து நின்ற இளவலை வலிதிற் பற்றிக்
கூற்றமே போல மேவும் முனிவன்முற் கொணர்ந்து கையில்
ஏற்றகூர்ங் குயத்தாற் காதி இருதுணி யாக்கி னனே.

பின்னர் தனது வலியால் ஆட்டுக் கடாவின் வடிவாகி ; முனிவர் உயிரையெல்லாம் அழிக்கும்படி நினைவுகொண்டு நின்ற தம்பியை ; வலியால் பிடித்து அவனுக்கு இயமன் போன்று வந்திருக்கும் அகத்தியமுனிவன் முன்னுகக் கொணர்ந்து; கையில் பொருந்திய கூரிய வாளால் இரண்டு துண்டாக வெட்டினன். 15

அணிப்படு போர்வை நீக்கி அங்கமும் அகற்றி வாளால்
துணிப்பன துணித்தும் ஈர்ந்தும் சுவைத்திடும் உறுப்பூன் எல்லாங்
குணிப்பொடு குட்ட மிட்டுக் குழிசிகள் பலவிற் சேர்த்தி
மணிப்புனல் கொண்டு முக்கால் மரபினுல் மண்ணல் செய்து.

வெட்டப்பட்ட ஆட்டின் அழகுடன் அமைந்த புறத்தோலை நீக்கி, எலும்புகளையும் விலக்கி, துணிக்கவேண்டியதைத் துணித்தும்; அரியவேண்டியதை ஈர்த்தெடுத்தும் சுவையான உறுப்புக்களின் ஊன் இறைச்சிகள் யாவற்றையும் அவதானத்துடன் குடைந்து எடுத்துக்கொண்டு; பல சிறு சிறு பாத்திரங்களில் வைத்து; (இவைகள் பொரிப்பதற்கு, ஆக்குவதற்கு வேறு வேறு வேருக உகந்த இறைச்சிகள் ஆதலினுல் அவை எவை என அசுரனுனபடியால் நன்கு முன்னர் உணர்ந்துகொண்டவனுனமையின் குணிப்பொடு குட்டமிட்டுக் குழிசிகள் பலவில் சேர்த்தி என்றார்) இவைகளையும் மூன்று முறை முத்துப்போல் தண்ணீரால் முறையாகக் கழுவினன். 16

உரைத்தவக் கறிக்கு வேண்டும் உவர்முதல் அமைந்த நல்கி
வருத்துறு கனன்மேற் சேர்த்தி வாலிதிற் புழுக்கல் செய்தே
அரைத்திடு கறியின் நுண்தூள் ஆதிதூய் இழுது பெய்து
பொரிப்பன பொரித்திட்டாவி போந்திடா வண்ணம் போற்றி.

சொல்லியபடி இந்தக் கறிக்கு வேண்டப்பட்ட உப்பு முதலாக அமைந்த பொருள்களை இட்டு; வேகின்ற நெருப்பின் மேலாக வைத்து நன்ருக வெந்துகொள்ளும்படி சமைத்துக்கொண்டு; அம்மியில் வைத்து அரைக்கப்பட்ட மிளகு தூள் ஆதியான கூட்டுகளைத் தூவி நெய்யை ஊற்றி பொரிக்கவேண்டியதைப் பொரித்து அவற்றின் மணம் வெளிப்போகாதபடி மூடி வைத்தான். 17

கறியினுண் பொடியும் ஏனைக் கந்தமார் துகளும் அந்நாள்
வறையல்போ குற்ற தூய வாலரிப் பொடியும் நீவி
உறைகெழு துப்பும் வாக்கி யொழுகுபல் காயங் கூட்டித்
திறனெடும் அளாவி யாங்கோர் சிற்சில பாகு செய்து.

நுண்மையான மிளகுத் தூளையும் வேறு வாசனையுடைய இலைகளின் பொடிகளான வைகளையும்; அன்று இக்கறிக்கென வறுத்தெடுக்கப்பட்ட வெள்ளை அரிசி மாவையும் தடவி; உறைந்த கட்டியான நெய்யையும் வார்த்து நீர்ப்பதமாக மஞ்சள் முதலியவற்றைச் சேர்த்து அரைத்தெடுத்த காயங்களையும் கூட்டி; வலியால் பல தடவை துளாவி அதிலே சில சில விதமான பாகங்களையும் செய்து. 18

பின்னரும் பலகால் வேண்டும் பெற்றியிற் கரித்துச் செம்மி
முன்னுற அளிக்க நின்ற முதிரையின் புழுக்கல் அட்டுச்
செந்நல நீடும் கன்னல் தீம்புளிங் கறியுஞ் செய்யா
அன்னதோர் தொடக்கம் யாவும் அருளினன் அருளி லாதான்,

அதன் பின்னரும் பலமுறையும் வேண்டியபடியாக தாளித்து அவற்றையும் மூடி வைத்து, முதலில் படைக்கவேண்டிய பருப்புக் கறியையுஞ் சமைத்து; செப்பமான சுவையமைந்த இனிப்புக் கறிகளையும்; இனிய புளிக்கறிகளையும் சமைத்து; இக்கறி முதலாக விருந்திற்கு வேண்டிய பொருள் யாவற்றையும் செய்தான்; இரக்கம் இலாத வில்வலன். 19

ஆசினி வருக்கை யாதி அளவையில் கனிகள் கீறித்
தேசமர் கன்னல் தீந்தேன் சேர்தரச் சிவணி யேனை
வாசமும் மலரும் இட்டு வரம்பில அமைத்துப் புத்தேள்
பூசனைக் குரிய அன்பாற் பொருக்கெனக் குவவு செய்தான்.

ஈரப்பலா, பலா முதலிய மரங்களின் அளவிலாத பழங்களைக் கீறி; எடுத்து அவைகளுடன் நல்ல நிறமுடைய சர்க்கரையையும் இனிய தேனையும் நன்கு சேரும் வண்ணம் கலந்து; ஏனைய சுகந்தப் பொருளையும் பூக்களையும் வேறுவேறாக அளவிறந்தன அமைத்து; கடவுட் பூசைக்கு ஏற்றவகையால் விரைவுடன் ஒழுங்காக அழகுடன் விளங்க குவித்து நிரப்பினன். 20

குய்வகை யுயிர்ப்பின் மாந்திக் குவலயம் விரும்பு கின்ற
ஐவகை உணவும் ஆறு சுவைப்பட அளித்துப் பின்னும்
எவ்வகை யனவுந் தானே இமைப்பினில் அமைத்து வல்லே
கவ்வையி னோடுஞ் சென்று கடமுனி கழல்மேல் தாழ்ந்தான்.

சமையல் செய்த உணவுப் பொருள்களின் வாசனையை தங்களது சுவாசத்தால் முகர்ந்து; இப்பூமியிலுள்ளார் விரும்புகின்ற; உண்ணுவன, தின்பன, நக்குவன, பருகுவன, உறிஞ்சுவன ஆகிய ஐந்து வகையான உணவுகளையும்; கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, புளிப்பு, இனிப்பு, கைப்பு என்னும் ஆறு சுவையுடன் பொருந்த சமைத்து பின்னர் அமுது செய்வதற்கு வேண்டிய எவ்வகையான பொருளையும் அமைத்துக் கொண்டு விரைவுடனாகச் சென்று; அகத்திய முனிவர் திருவடிகளில் தாழ்ந்து வணங்கினான் வில்வலன். 21

எந்தைநீ இன்ன காலை இரும்பசி யுடற்ற ஆற்ற
நொந்தனை போலும் மேனி நுணங்கினை தமியேன் ஈண்டுத்
தந்தனன் உணவி யாவுந் தளர்வற நுகரு மாறு
வந்தருள் என்று வேண்ட மற்றதற் கியைந்து போனான்.

எந்தைபிரானே, தேவரீர் இவ்வளவு நேரமும் பெரும் பசி வருத்த மிகவும் நொந்துளீர் போலும். மேனியும் வாடியுள்ளீர்; தமியேன் உமக்கு வேண்டிய உணவு எல்லாம் சமைத்துள்ளேன். உமது தளர்வு நீங்கிக்கொள்ளுமாறு உணவருந்த வந்தருளும் என்ன வேண்டலும்; அகத்திய முனிவர் அதற்கு இசைவுகொண்டு சென்றார். 22

அட்டிடு சாலை மாட்டே அகத்தியற் கொடுபோய் ஆங்கண்
இட்டதோர் இருக்கை தன்னில் இருத்தியே முகமன் கூறி
மட்டுறு தூநீர் கந்த மலர்புகை தீபங்கொண்டு
பட்டிமை நெறியிற் பூசை புரிந்துபின் பதநேர் குற்றான்.

சமையல் செய்கின்ற அந்தச் சாலையின் இடத்தாக அகத்தியமுனிவரைக் கொண்டு சென்று; அங்கே இடப்பட்ட ஓர் ஆசனத்தில் இருத்தி முகமன் பல கூறி வாசனை பொருந்திய சுத்தமான நீர், சந்தனம், பூ, தூபம் தீபம் இவற்றை எடுத்துக் கொண்டு; அன்பிலாது வஞ்சனையினால் வெளிப்பார்வைக்காக பூசை புரிந்து; பின்னராக அன்னத்தைப் படைக்கத் தொடங்கினான். 23

வேறு

தெள்ளுஞ் சுடர்ப்பொன் இயல்கின்ற தட்டை திருமுன்னர் வைத்து நிரையா
வள்ளங்கள் வைத்து மிகுநாரம் உய்த்து மரபில் திருத்தி மறையோன்
உள்ளங் குளிர்ப்ப அமுதன்ன உண்டி உறுபேதம் யாவும் உதவா
வெள்ளம் படைத்த நறுநெய்ய தன்கண் விட்டான் தன் னாவி விடுவான்.

தெளிவான ஒளிபொருந்திய பொன்னாற் செய்யப்பட்ட தட்டத்தை அகத்திய முனிவர் திருமுன்னிலையில் வைத்து; வரிசையாக கிண்ணங்களை வைத்து; மிகுந்த நீரை விட்டு முறைப்படி கழுவி; அகத்திய முனிவரது உள்ளங் குளிரும்படி அமுதம்போலும் அன்னவகைகள் எல்லாவற்றையும் படைத்து; அதன்மேலாக வெள்ளம் ஊற்றுவது போல் வாசனை கலந்த நெய்யை ஊற்றினான்; தனது உயிரை விரைவில் விடப் போகும் வில்வலன். 24

முறைவைப்பு நாடி முதன்மைக்கண் மேவு முதிரைப் புழுக்கல் மறியின்
கறிவர்க்கம் ஏனை யவைசுற்றின் மேய கவினுற்ற கிண்ணமிசையே
உறவிட்டு நீட மதுரித்த யாவும் உடனுய்த் தொழிந்த வளனுஞ்
செறிவித்து மேலை முனிகைக்குள் நீடு சிரகத்தின் நீருதவினான்.

கறிவர்க்கம் படைக்கவேண்டிய முறையை உணர்ந்து முதலில் படைக்கவேண்டியதும் சத்துள்ளதுமான பருப்புக் கறியும், ஆட்டு இறைச்சியின் கறிவர்க்கமும், முன்வைக்கப்பட்டிருந்த அழகாய கிண்ணங்களில் பொருந்தும்படி இட்டு; நெடுகவும் இனிமை தருவனவாய பொருள்கள் எல்லாவற்றையும் கூடவே படைத்து; மற்றைய பொருள்களையும் அங்கு வைத்து; மேலான அகத்தியமுனிவர் கையிடத்து நீண்ட கமண்டலத்தில் உள்ள நீரை வார்த்தான். 25

பெருநீர் அடங்கு சிறுகையி னூடு பெறவுய்த்த தோயம் அதனை
இருபான்மை உண்டி யதுசூழும் வண்ண மிசையோடு சுற்றி யதுதான்
ஒருகால் நுகர்ந்து பலகாலி னுக்கும் உதவிப்பின் உள்ளபடியும்
அருகாது செய்து மிகவே விரும்பி அயில்வான் தவங்கள் பயில்வான்.

பெரிய கடலை அடக்கிய தமது சிறு கையினூடு பெரும்படி வில்வலன் கமண்டலத்தால் வார்த்த நீரை அகத்திய முனிவர், முன்பாக படைத்த உணவைச் சூழும்படி மந்திர செபத்துடன் இருமுறை சுற்றி அந்நீரைப் பின்னொருமுறை ஆசமனஞ் செய்து ஐந்து வாயுக்களுக்கும் ஆகுதி செய்து அதன்பின் உள்ள காரியங்களையும் குறைவின்றிச் செய்து மிக விருப்பத்துடன் உணவை உண்டார், 27

**அடுகின்ற உண்டி கறிவர்க்க மேனை அவையன்பி லாத அசுரன்**
**இடுகின்ற தேது முடிவெய்து காறும் இனிதுண்டு பின்றை முனிவன்**
**கடிகொண்ட நாரம் அனையன் கொணர்ந்து கரமுய்ப்ப நுங்கி யெழுவான்**
**பொடிகொண்டு தன்கை மலர்நீவி மிக்க புனல்கொண்டு மண்ணல் புரியா.**

சமையல் செய்கின்ற உணவும் கறிவர்க்கமும் ஏனைய பொருள்களையும் அன்பிலாத அசுரன் இடுகின்ற எதனையும் உண்டுவிட்ட பின்னர்; வாசனைகொண்ட நீரினை வில்வலன் கொண்டுவந்து கையில் கொடுப்ப; அந்நீரை உண்டு எழுகின்ற அகத்திய முனிவர்; தூய்மை செய்யும் பொடி கொண்டு தனது தாமரை மலர்போலும் கையைத் தேய்த்து; மிகுந்த நீரைக் கொண்டு தனது கையினைக் கழுவி. 27

**மைக்காரின் மெய்யன் அருள்கின்ற நாரம் வாய்க்கொண்டுமிழ்ந்து பலகால்**
**முக்காலின் நுங்கி வாய்பூ சறுத்து முறைநாடி அங்க மெவையும்**
**மிக்கானு மூறு புரியாவ தன்றி வேறுள்ள செய்கை பலவும்**
**அக்காலை யங்கொர் புடையுற் றியற்றி அவண்வீற் றிருக்கும் அளவில்.**

கருமேகம் போன்று கருமை உடைய மேனி கொண்ட வில்வலன் கொடுக்கின்ற நீரினை பலகாலும் வாயில் கொண்டு கொப்பளித்து; மூன்று முறை நீரை உட்கொண்டு வாயை ஈரம் நீங்கத் துடைத்து; விதிமுறைகளைச் சிந்தித்து தொடவேண்டிய உறுப்புக்கள் எல்லாவற்றையும் தொட்டு; அது மாத்திரமல்லாமல் வேறுள செய்கை எல்லாம் அக்காலையில் அங்கு ஓர் பக்கராக இருந்து செய்து; பின்னர் அவ்விடத்து அகத்தியமுனிவர் வீற்றிருக்கும் காலத்து, 28

**வேதா அளித்த வரமுன்னி யேவில் வலனென்னும் வெய்ய அசுரன்**
**போதா விருந்த முனியாவி கோடல் பொருளாக நெஞ்சின் நினையா**
**வாதாவி மைந்த இளையாய் விரைந்து வருகென்று கூற முனிவன்**
**தீதார் வயிற்றின் இடையே எழுந்து திறல்மேட மாகி மொழிவான்.**

பிரமதேவர் கொடுத்துள்ள வரத்தை வில்வலன் என்னும் கொடிய அசுரன் நினைந்துகொண்டு; அங்கு வந்திருந்த அகத்தியமுனிவரின் உயிரைக் கவருதலையே பொருளென்று மனத்தில் நினைந்து; எனது தம்பி வாதாவி என்னும் குமரனே! விரைவுடன் வருவாயாக என்று கூற; அதுபோதுவாதாவி தனக்குதீமை பொருந்திய அகத்தியரது வயிற்றின் இடையாக வலிமையுடைய ஆடாக எழுந்துநின்று சொல்லுவான். 29

**எண்ணும லேமுன்பு கடலுண்ட தேபோல என தூனும் உண்ட கொடியோன்**
**உண்ணடும் உயிர்கொண்டு வலிகொண்டு குறிதான உதரங் கிழித்து வருவான்**
**அண்ணவில் வலனேயெ னக்கூறியே தம்பி அரிபோல் முழங்கி யிடலும்**
**மண்ணுடர் புகழ்கும்ப முனிநீயர் செய்திட்ட மாயந் தெரிந்து வெகுள்வான்.**

தீங்கு நேருமென்று ஆலோசனை செய்யாமல் முன்னுளில் கடல் உண்டதே போல; எனது தசையையும் உண்ட கொடிய அகத்தியமுனிவரின் உயிரையும் மாய்த்து

உடலைக் கிழித்துக்கொண்டு வருவேன்; அண்ணா வில்வலனே பார். எனக் கூறியே தம்பி வாதாவி அகத்தியமுனிவர் வயிற்றிலிருந்து முழக்கஞ் செய்திடலும்; பூவுலகெங்கும் உள்ளார்புகழ்கின்ற அகத்தியமுனிவர்; தீயவரான இவர்கள் செய்திட்ட மாயத்தினை இப்போது தெரிந்து கோபங் கொள்வார். 30

ஊன்கொண்ட கறியாகி நுகர்வுற்ற வாதாவி உயிர்போகி யுண்ட இயல்பே
தான்கொண்டு முடிகென்றுசடரத்தை யொருகாலை தழிழ் வல்ல முனிதடவலுங்
கான் கொண்ட எரிமண்டு சிறுபுன் புதற்போன்று கடியோனுமுடி வாகவே
வான்கொண் டலெனஅங்கண் முன்னின்ற வன்தம்பிமாய்வுற்றதுன்னிவருவான்

கோபங்கொண்ட அகத்தியமுனிவர்; இறைச்சிக் கறியாக சமைக்கப்பட்டு இப்பொழுது உண்ணப்பட்ட வாதாவி என்பவன்; எப்படி வெட்டியதும் உயிர் போய் மாண்டானே; அதே இயல்பாக எனது வயுற்றுள் இறந்தொழிவனக என்று தமது திருவயிற்றை ஒருகால் அகத்தியமுனிவர் தடவுதலும், காட்டினில் பற்றிக்கொண்ட பெருநெருப்பில் அகப்பட்ட சிறு புல்லுச் செடி போன்று; கொடிய வாதாவியும் எரிந்து சாம்பராகி இறந்துபோதலும்; வானத்தில் உள்ள மேகத்தைப் போன்று முன்நின்ற வில்வலன்; தனது தம்பி வாதாவி மாண்டுபோனதை உணர்ந்துகொண்டு வருவான். 31

மெய்க்கொண்ட தொன்னாள் உருக்கொண்டு முனிதன்னை வெகுளுற்றெரர் தண்ட மதனைக்
கைக்கொண்டு கொலையுன்னி வருபேழ்தில் முனிவன் கரத்தில் தருப்பை ஒன்றை
மைக்கண்டர் படையாக நினைகுற்று விடவில் வலன்றானு மடிவெய்தலும்
அக்கண்ட கக்கள்வர் உறையுற்ற இடம்நீங்கி அப்பால் அகன்றனனரோ.

தனது உண்மையான அசுரத்தன்மையுடைய பழைய உருவை இப்போது எடுத்துக்கொண்டு; அகத்தியமுனிவனைக் கோபித்துக்கொண்டு; ஓர் தண்டாயுதத்தைக் கைக்கொண்டு வில்வலன் முனிவரைக் கொலைசெய்ய நினைந்து வருதலும்; அப்போது அகத்தியமுனிவர் தனது கையில் தருப்பை ஒன்றை எடுத்து அதனைச் சிவபிரானுடைய படையாக நினைந்து விடுதலும்: அப்படையால் வில்வலன் தானும் மடிந்துபோதலும் அந்தக் கொடிய கள்வர் உறைகுற்ற இடத்தைவிட்டு நீங்கி; அப்பால் அகன்று போயினார் அகத்திய முனிவர். 22

வில்வலன் வாதாவி வதைப் படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 1267

# காவிரி நீங்கு படலம்

செங்கை தூங்கிய தீர்த்த நீரொடுங், கொங்கின் பாற்செலக் குறிய மாமுனி
மங்கு கின்றஅம் மைந்தர் நேருற, அங்கண் மேவினர் அருந்த வத்தர்போல்.

தமது சிவந்த திருக்கரத்தில் தூக்கிக்கொண்டிருக்கும் காவிரி என்னும் தீர்த்தத்துடன் குறுகிய வடிவத்தையுடைய அகத்தியமாமுனிவன்; கொங்கநாட்டின்பாலாகச் செல்லும்போது; இறந்துபோன வில்வலன் வாதாவியான மைந்தர்இருவரும் அவ்விடத்து அரியதபோதனர் வடிவங் கொண்டு அகத்தியர் முன்பு எதிர்ப்பட்டு வந்தார்கள், 1

நேரு மைந்தர்கள் இருவர் நீணிறக், காரின் மேனியர் கறங்கு கண்ணினர்
தீரர் ஆற்றவுஞ் சினத்தர் ஒல்லென, ஆர வாரஞ்செய் தணுகி னாரரோ.

எதிர்ப்பட்ட பிரமகத்திவடிவான பிள்ளைகள் இருவரும் நீண்ட மேகம் போலும் உருவுடையர்; சுழல்கின்ற கண்ணினை உடையவர்; வீரமுடையவர் மிகவும் கோபமுடையவராயும் ஒல்லென்று ஆரவாரஞ் செய்துகொண்டு அணுகி வந்தனர். 2

அண்மை யாகுவார் அகல்வர் மாமுனி, கண்முன் எய்துவர் கரந்து காண்கிலார்
விண்மு கிற்குளே மேவி ஆர்ப்பரால்' மண்மி சைப்பினும் வருவர் சூழ்வரே.

இப் பிரமகத்தி வடிவான இரு புதல்வர்களும் அகத்தியமுனிவருக்குக் கிட்ட வருவார்கள், அகன்று செல்வார்கள். பெருமுனிவனின் கண்முன் நிற்பர், மறைவர் காணப்படார். வானமுகிலிற்குள் மறைந்து இரைவார்கள், மண்ணின்மேலாகவும் வரு வர், முனிவனைச் சூழ்ந்துகொள்வார்கள். 3

கோதில் ஆற்றல்சேர் கும்ப மாமுனி, ஈது நோக்கியே இவரை முன்னமே.
காதி னும்நமைக் கருதி வந்தனர், மாத வத்தினேன் மைந்தர் ஆதலால்.

உலக சேமத்திற்கென குறைவிலாத பெருவலிமை கொண்ட அகத்தியமுனிவர் இதனை நோக்கி இவர்களை முன்பு நாம் கொலைபுரிந்தோமாயினும் நம்மை மீண்டும் பகையாகக் கருதி வந்துள்ளார்க்ள்; இறந்த இவர் இப்படி வரக்காரணம் பெரும் தவவாளியான துர்வாச முனிவர்க்குத் தோன்றிய புதல்வர்கள் ஆதலால். 4

பேர்கி லாதஇப் பிரம கத்திநோய், திரு மாற்றினால் சிவன தாள்களை
ஆர்வ மோடிவண் அருச்சிப் பாமெனு, நேரின் மாமுனி நினைந்து நின்றரோ.

எம்மை விட்டுப் பிரியாத பிரமகத்தி நோயானது திரும்படியாக; சிவபிரானு டைய திருவடிகளை அன்பினால் அர்ச்சினை புரிவேன்; என்று தனக்கு வேறொரு வர் நேரில்லாத அகத்தியமாமுனிவர் நினைவுகொண்டு நின்றார். 5

ஆசில் கொங்கினுக் கணித்தின் ஓரிடை, வாச மீதென மகிழ்ந்து வீற்றிரீஇ
ஈச னார்தமை இலிங்க மேனியில், நேச நெஞ்சினன் நினைந்து தாபித்தான்.

குறைவிலாத கொங்கநாட்டிற்கு கிட்டவாக ஓர் பக்கரில் தங்கி; பூசனை புரிவ தற்கு இது பொருந்துவதொன்றாகுமென மகிழ்வுற்று அங்கு வீற்றிருந்து; ஈசனை சிவ லிங்கத் திருமேனியில் அன்புடைய நெஞ்சால் நினைந்து தாபித்தார். 6

தூய குண்டிகைத் தோயம் அன்றியே, சேய மாமலர் தீபந் தீம்புகை
ஆய போனகம் ஆதி யானவை, ஏயு மாற்றினால் இனிது தேடினான்.

தூய்மையான கமண்டலத்தூடுள்ள காவிரி தீர்த்தம் மட்டும் அல்லாது; இன்ன மும் சிவந்த தாமரை மலர், தீபம், இனிய தூபம், அருமையாகச் செய்த திருவமுது ஆதியானவற்றை பொருந்தக்கூடிய நிலையால் இனிதுடன் மகிழ்ந்து தேடிக்கொண் டான். 7

விழுமி தாகிய விரதர் வீயவே, வழியி ருந்திடும் வஞ்சர் ஆவிகொள்
பழிய கன்றிடப் பரமன் தாழ்மிசை, அழிவில் அன்பொடே அருச்சித் தானரோ.

விழுமிதாகச் சிறந்துள்ள நெறிநின்ற முனிவர்கள் மாண்டுபோக; வழியில் இருந்து ஏமாற்றி உணவு கொடுத்துக் கொலை புரிந்த வஞ்சனையுடைய இரு அசுரரின் உயி ரைக் கொன்ற பழியானது; அகன்றிடும்படியாக சிவபிரான் திருவடிகள் மீதாக அழி வில்லாத பேரன்புடன் அர்ச்சனை புரிந்து துதித்தார் அகத்தியமுனிவர். 8

மங்கை பாகனை மற்றும் பற்பகல், சிங்கல் இன்றியே சிறந்த பூசைசெய்
தங்கண் மேவினான் அவன்க ளாகிய, துங்க வெம்பவந் தொலைந்து போயதே.

பெண்ணொருபாகராகிய பெருமானை இம்வண்ணம் பற்பகலாக சங்கடம் ஏதும் இன்றிச் சிறந்த பூசனை செய்து; அகத்தியமுனிவர் அங்கு அந்த இடத்திலே தங்கி இருந்தார். அகத்தியமுனிவர் பாலான மேலான பாவம் தொலைந்துபோயது. 9

அனைய காலையில் அரிய தீந்தமிழ், முனிவ ரன்செயல் முற்றும் நாடியே
துனியில் நாரதன் தொல்லை வானவர்க், கினிய கோமகன் இருக்கை எய்தினான்.

அவ்வாறாகிய நேரத்தில் அரியதும் இனியதுமான தமிழைத் தந்த அகத்திய முனிவனின் செயல் முழுவதையும்! ஞான உணர்வால் தெரிந்துகொண்டு; அச்சம் இல் லாத நாரத முனிவன் முன்னைத் தேவர்க்கெல்லாம் இனிய தலைவனான இந்திரனது இருப்பிடத்திற்கு சென்றருளினர். 10

**தாணு வின்பதந் தன்னை உன்னியே, வேணு வாகியே மெய்த்த வருசெயுஞ்**
**சேணின் மன்னவன் செல்லு நாரதற், காணும் எல்லையிற் கழல்வ ணங்கினன்.**

ஆதியும் அந்தமுமில்லாத அரும்பெரும் சோதியின் திருவடி மலரைத் தியானித்த வண்ணம் மூங்கில் மரமாகி உருக்கொண்டு, அசுரர்க்கு அஞ்சி, உண்மையான தவத்தினைச் சீகாழியில் இருந்து புரிந்துள்ள வானஉலக மன்னவன் இந்திரன் அங்கு எழுந்தருளி வந்த நாரத முனிவரைக் கண்டமாத்திரத்தே எழுந்து அவர் பாதங்களை வணங்கினன். 11

**எழுதி மன்னவென் றெடுத்து, மார்புறத், தழுவி நன்றிவட் சார்தி யோவென**
**உழுவ லன்பினல் உரைப்ப வாசவன், தொழுத கையினன் இனைய சொல்லுவான்.**

பாதங்களில் முன்பு வீழ்ந்து வணங்கிய இந்திரனை நாரத பகவான் பார்த்து, தேவமன்னனே எழுவாயாக என்று அவனைத் தமது கையால் எடுத்து மார்புடன் அணைத்துத் தழுவி, நன்றாக இவ்விடத்து இருக்கின்றாயோ என மேலான அன்பினால் உரைத்தலும், இந்திரன் அவரை வணங்கிய கையுடன் இனைய வார்த்தைகளைச் சொல்லுவான். 12

**இன்று காறுநின் னருளின் யானிவண், நன்று மேவினன் நாதன் பூசனைக்**
**கொன்ற துண்டுநீங் குரைப்பன் கேட்டியால், குன்ற மன்னதோர் குணத்தின்**
**மேலையோய்.**

இன்றுவரையும் உமது நல்லருளினால் யான் இவ்விடத்து நன்றுடன் இருந்தேன்; ஆனால், எம்பிரானின் பூசனைக்குக் குறை ஒன்று உண்டு. அது யாதென இங்கு நான் சொல்வேன் கேட்பீராக மலைபோன்ற கருணையான குணமுடைய மேலான முனிவர் பிரானே! என்றனன் இந்திரன். 13

**கோதின் மாமலர் குழுவு தண்டலைக், கேது நீரிலை இறந்து வாடுமால்**
**போதும் இல்லையால் பூசை செய்வதற், கீத ரோகுறை யென்றி யம்பினன்.**

எம்பிரான் அர்ச்சனைக்கெனக் குறைவில்லாத பெரிய பூக்களைத் தருகின்ற மரங்கள் உடைய பூஞ்சோலை எதுதானும் நீரில்லாமல் பட்டு வாடுகின்றன. அதனாலே எம்பிரான் அர்ச்சனைக்குப் பூவும் இல்லை இதுதான் எனக்கு இங்குற்ற ஒரு குறையாகும். 14

வேறு

இன்னவை பலவுங் கூறி இந்திரன் தவிசொன் றிட்டு
முன்னுற இருத்தித் தானும் முனிவரன் பணியால் வைக
அன்னதோர் அறிஞன் நின்னூர் அரசியல் பிறவும் ஈசன்
தன்னருள் அதனால் மேனாள் வருவது தளரேல் மன்னே.

இன்ன வார்த்தைகள் பலவற்றையும் இந்திரன் கூறி, ஒரு சிம்மாசனத்தை அங்கு இட்டு நாரத முனிவன் அதன் மீதிருத்தித் தானும் முனிவர் ஆணைப்படி வீற்றிருத்தலும், அன்ன நேரத்தில் அந்த மேலான அறிவுடைய நாரத முனிவர் இந்திரனை நோக்கி இழந்த உனது ஊர், அரசாட்சி, பிறசெல்வங்கள் யாவும் ஈசன் அருளினால் இன்னும் சில நாளில் வரும். ஆகவே, தளர்ச்சியடையாதே என்று கூறிப் பின்னரும், 15

ஆறணி சடையி னானுக் கருச்சனை புரிதற் கிங்கோர்
ஊறுள தென்றே ஐய உரைத்தனை அதுவும் வல்லே
மாறிடுங் காலம் ஈண்டு வந்ததப் பரிசை யெல்லாங்
கூறுவன் கேட்டி யென்னாக் கோமகற் குரைக்க லுற்றான்.

கங்கை நதியை அணிந்த சடையுடைய சிவபெருமானுக்கு அர்ச்சனை புரிய உனக்கு இங்கு ஒரு குறை உளது என ஐயனே நீ உரைத்தனை; அக்குறைதானும் மாறிப்போகின்ற காலம் ஒன்று உனக்கு இப்போது வந்துள்ளது; அந்தத் தன்மை எல்லாவற்றையும் நான் இப்பொழுது கூறுவேன்; கேட்பாயாக என்று தேவ அரசனான இந்திரனுக்கு நாரத முனிவர் சொல்லத் தொடங்குவார். 16

தன்னிகர் இலாத முக்கட் சங்கரன் பொதிய வெற்பின்
முன்னுறை கென்று கும்ப முனிவனை விடுத்த வாறும்
அன்னவன் விந்தந் தன்னை அகன்பிலத் திட்ட வாறும்
துன்னெறி புரிந்த வெஞ்சூர் மருகரைத் தொலைத்த வாறும்.

தனக்கு நிகரில்லாத மூன்று கண்ணுடைய பரம்பொருளான சிவபிரான் அகத்திய முனிவனை, நீ சென்று பொதிய மலையில் இருப்பாயாக என விடுத்த வாறும், அந்த அகத்திய முனிவர் விந்தம் என்னும் மலையை அகன்ற பாதாளத்தில் இட்ட தன்மையும், தீய நெறிகளைச் செய்து உலகில் முனிவரைக் கொலைபுரிந்த சூரபன்மன் மருமக்களான வில்வலன் வாதாவியைத் தொலைத்த வரலாறும். 17

அப்பழி தீரு மாற்றால் ஐதெனக் கொங்கின் நண்ணி
முப்புர மெரித்த தொல்லை முதல்வனை அருச்சித் தேத்தி
மெய்ப்பரி வாகி அங்கண் மேவிய திறனும் முற்றச்
செப்பினன் பின்னும் ஆங்கோர் செய்கையை உணர்த்த லுற்றான்.

அவ்வாறான பழி தீரும்பொருட்டாக மிகு விரைவுடன் கொங்குநாட்டை அகத்திய முனிவர் அடைந்து, முப்புரமெரிசெய்த முன்னவர்க்கும் முன்னான பகவானை அருச்சனை புரிந்து வழிபட்டு, உண்மையான அன்பாகி அங்கு பழிதீர்ந்து தங்கி இருக்கின்ற திறங்களாம் முழுவதையும் இந்திரதேவனுக்குச் சொன்னார்; பின்னரும் அவனுக்கு ஒரு சூழ்ச்சியான முறையையும் சொல்லிக்கொடுத்தார் நாரத முனிவர். 18

அருந்தவ முனிவன் கொங்கின் அமலனை அருச்சித் தங்கண்
இருந்திடு கின்றான் நாடி ஏகினன் அவன்பா லாகப்
பொருந்துகுண் டிகையின் மன்னும் பொன்னியா றதனை இங்கே
வரும்பரி சியற்றின் உன்றன் மனக்குறை தீரு மென்றான்.

இந்திரனே! அருந்தவ முனிவன் அகத்தியன் மலைநாடான கொங்க தேசத்தின்பால் சிவபிரானை அருச்சித்துக்கொண்டு அங்கு இருந்திடுகின்றான். அதனை நான் நாடிக் கண்டு கொண்டு இங்கு வந்தேன். அவன் பக்கராகம் பொருந்திய கமண்டலத்தூடே இருக்கின்றது காவிரி என்னும் தீர்த்தம்; அந்தக் காவிரியாற்றினை இங்கே வரக்கூடிய செயலை நீ புரிந்தால் உன்னுடைய பூஞ்சோலைக்கு நீரில்லாத உனது மனக்குறை தீரும் என்றார் நாரதபகவான். 19

குரவனீ துரைத்த லோடுங் குறுமுனி கொணர்ந்து வைத்த
வரநதி தனையிக் காவில் வரவியற் றிடுமா றென்கொல்
பெருமநீ யுரைத்தி யென்னப் பேரமு தருத்தி யேத்திக்
கரிமுகத் தேவை வேண்டில் கவிழ்த்திடும் அத்தை என்றான்.

மேலோரான நாரத முனிவர் இதைச் சொல்லலோடும் இந்திரன் சொல்வான். ஐயனே! அகத்திய முனிவர் கொணர்ந்து அங்கு வைத்திருக்கின்ற வரத்தால் சிறப்புடைய காவிரியை நான் இப்பூஞ்சோலையில் வரும்படியாகச் செய்வதற்கு வழி எப்படியாகும் பெருமானே நீர் அதனை சொல்வீராக என்னலும், அப்போது நாரத பகவான் நிறைந்து சிறந்த அமுதினை நிவேதித்து வணங்கி, யானை முகமுடைய கடவுளை வேண்டுதல் புரிந்தால் எம்பெருமான் அந்தக் கமண்டலத்தைக் கவிழ்த்திடும் என்றார். 20

குணப்பெருங் குன்ற மன்ன கோதிலா அறிவன் இன்ன
புணர்ப்பினை இசைத்த லோடும் புரந்தரன் பொருமல் நீங்கிக்
கணிப்பிலா மகிழ்ச்சி யெய்திக் காசிபன் சிறுவர் கொண்ட
அணிப்பெருந் திருவும் நாடும் அடைந்தனன் போன்று சொல்வான்.

நற்குணம் என்னும் மலைபோன்று விளங்கும் குறைவிலாத நாரதமுனிவன் இந்த வகையான சூழ்ச்சியினைச் சொல்லிக்கொடுத்தலோடும் இந்திரதேவன் அது கேட்டுத் தனது கவலை யாவும் நீங்கி அளவு காணபரிய மகிழ்ச்சி அடைந்து காசிப முனிவன் பிள்ளைகளான சூரன் முதலியோர் தன்னிடமிருந்து பறித்து எடுத்துக்கொண்ட, அழகுடன் விளங்கும் செல்வ நிலைகளும், நாடும் திரும்பப் பெற்றுக் கொண்டான் போன்று சொல்கின்றான். 21

எந்தைநீ இனைய எல்லாம் இயம்பினை அதனால் யானும்
உய்ந்தனன் கவலை யாவும் ஒருவினன் முனிவன் பாங்கர்
வந்திடு மாறும் ஈண்டு வரவுன தருளால் இன்னே
தந்திமா முகற்குப் பூசை புரிகுவன் தக்கோய் என்றான்.

எந்தை பிரானே! நீர் எல்லாம் சொன்னீர் அதனால் யானும் உய்ந்தேன். கவலை யாவும் நீங்கினன். அகத்திய முனிவன் பால் பொருந்தி இருக்கின்ற ஆறு இங்கு வருதற்கு உமது அருளால் இப்பொதே யானைமுகமுடைய விநாயகப் பெருமானுக்குப் பூசைசெய்வேன் தகுதியுடைய முனிவர் பிரானே என்றான் இந்திரதேவன். 22

அருள்முனி இதனைக் கேளா அன்னதே கருமம் வல்லே
புரிகரி முகவற் கைய பூசனை யென்று கூறிப்
பரவிய இமையோர் கோனைப் பார்மிசை நிறுவிப் போந்து
சுரரெலாம் பரவு கின்ற தொல்லையம் பதத்தி னுற்றான்.

அருளே வடிவான நாரத முனிவன் இதனைக் கேட்டுச் சொல்வார். இந்திரனே! அதுதான் செய்யவேண்டிய கருமம் விநாயகப் பெருமானுக்குப் பூசனையைப் புரிவாயாக எனக்கூறிவிட்டுத், தன்னை வணங்கிய தேவர்கள்அரசனைப் பூமியிடத்தாக நிறுத்திவிட்டுத் தேவர்களெல்லாம் போற்றுதல் செய்கின்ற தனது தொன்மையான அழகிய உலகிற் சென்றார். 23

சேறலும் புணர்ப்பு வல்லோன் திங்களும் அரவுங் கங்கை
யாறெடு முடித்த அண்ணல் அருள்புரி முதல்வன் றன்னை
மாறகல் மேனி கொண்டு வரன்முறை தாபித் தன்னுன்
சீறடி அமரர் கோமான் அருச்சனை செய்து பின்னர்.

சூழ்ச்சி வல்லவரான நாரதமுனிவர் செல்லுதலும், இந்திரதேவன் இளம் பிறையையும் நாகபாம்பையும் கங்கையாற்றுடன் சேரத் திருச்சடைமீதணிந்து கொண்ட சிவபிரான் தந்தருளிய முதல்வரான விநாயகப் பெருமானின் அழகுடன் விளங்குவதும் குறைவு, அகன்றதுமான திருமேனி ஒன்றினைச் செய்துகொண்டு முறைப்படி அத்திருவுருவைத் தாபித்து அவருடைய திவ்விய பெருமையான்ற சிறிய பாதங்களை அர்ச்சனை புரிந்து பிற்பாடாக, 24

இக்கொடு தென்னங் காயும் ஏனலின் இடியுந் தேனும்
முக்கனி பலவும் பாகும் மோதக முதல முற்றுந்
தொக்குறு மதுர மூலத் தொடக்கமுஞ் சுவைத்தீம் பாலும்
மிக்கபண் ணியமு மாக விருப்புற நிவேதித் தானுல்.

கரும்புடன் இளநீரும் தினைமாவும் தேனும், வாழை மா பலா என்னும் மூன்று கனிகள் பலவும், சர்க்கரைப் பாகும் மோதகம் முதலாக உள்ள பண்டங்கள் முழுவதும் தொகுதியாக உற்ற மதுரமான கிழங்குவகைகள் முதலியனவும், சுவைமிக்க இனிய பாலும், மிகுந்த பலகார வகைகளுமானவற்றை மனதில் நிறைந்த பெருவிருப்புடன் எம்பிரானுக்கு நிவேதித்தான் இந்திரதேவன்: 25

இவ்வகை நிவேதித் தேபின் எம்பிரான் றன்னை ஏத்த
மைவரை யனைய மேனி மதகரி முகத்துத் தோன்றல்
கவ்வையோ டனந்த கோடி கணநிரை துவன்றிச் சூழ
அவ்விடை விரைவால் தோன்ற அஞ்சினன் அமரர் கோமான்.

இவ்வகை நிவேதித்த பிற்பாடு எம்பெருமான் தன்னை வணங்க, கரிய மலைக்கு ஒப்பான திருமேனி உடைய மதம்பொழியும் யானை முகங்கொண்ட அருள்வள்ளலான விநாயகக் கடவுள் பேரொலியுடன் அநந்தகோடி பூதகணங்கள் நெருங்கிச் சூழ அவ்விடத்து விரைவுடன் தோன்றுதலும், அவரைக் கண்டவுடன் பயம் கொண்டான் தேவர்க்கரசனுன இந்திரதேவன். 26

அஞ்சலை மகவா னென்ன ஐங்கரக் கடவுள் கூற
நெஞ்சகந் துணுக்கம் நீங்கி நிறைந்தபே ருவகை யெய்தி
உஞ்சன னென்று வள்ளல் உபயமா மலர்த்தாள் மீது
செஞ்செவே சென்னி தீண்டச் சென்றுமுன் வணக்கஞ் செய்தான்.

இந்திரனே! அஞ்சாதே என்று ஐந்து கரமுடைய கடவுள் கூறுதலும், இந்திரதேவன் தனது நெஞ்சிற் கொண்ட பயம் நீங்கி நிறைந்த பெரிய மகிழ்ச்சி கொண்டு, உய்ந்தேன் யான் என்று வள்ளலாகிய எமது ஐயனின் தாமரை மலர்போன்ற இரண்டு பாதங்களிலும் செம்மையுடன் தனது தலையானது தீண்டிடும்படி முன்னுகச் சென்று வணங்கஞ் செய்தான். 27

பூண்டிகழ் அலங்கல் மார்பில் பொன்னகர்க் கிறைவன் முக்கண்
ஆண்டகை சிறுவன் தாள்மேல் அன்பொடு பணிந்து போற்ற
நீண்டதோர் அருளால் நோக்கி நின்பெரும் பூசை கொண்டாம்
வேண்டிய பரிசென என்றான் வேழமா முகனை வென்றான்.

ஆபரணங்களுடன் திகழ்ந்து விளங்கும் மலர்மாலைகள் அணியப்பெற்ற தேவ உலகிற்கு அரசனான இந்திரதேவன், மூன்று கண்களை உடைய சிவபிரானது திருக்குமாரரின் திருவடி மலர்மீது அன்பொடு பணிந்து போற்றிநிற்ப, எம்பிரான் நெடுகிய அருளுடன் இந்திரனை நோக்கி நினது பெரும் பூசனையை யாம் ஏற்றுக்கொண்டோம். நினக்கு வேண்டிய வரம் யாது? எனக் கேட்டருளினார் யானை முகமுடைய கயமுகாசூரனை வென்றருளிய விநாயகக் கடவுள். 28

இந்திரன் அதுகேட் டைய எம்பிராற் காக ஈண்டோர்
நந்தன வனத்தை வைத்தேன் அன்னது நாரம் இன்றிச்
செந்தழ லுற்று லென்னத் தினகரன் சுடரால் மாய்ந்து
வெந்துக ளான தண்ணல் மேலடு புரமே யென்ன.

இந்திரன் அதுகேட்டு, ஐயனே! எம்பிரான் பூசைக்காகப் பூக்கள்வேண்டி இவ்விடத்து ஒரு நந்தவனத்தை வைத்தேன். அந்த நந்தவனம் நீரில்லாது நெருப்புப் பட்டதன்மை போலக் கருகி சூரிய தேவனின் வெயிலினால் மாய்ந்து துகளாகிப் போயது. எதுபோலும் எனில், எமது பெருமான் முன்னர் எரித்தருளிய முப்புரம் போன்று. 29

என்னலும் ஏந்தல் கேளா ஏழ்பெருந் தலத்தின் நீரும்
முன்னுறத் தருகோ வான முழுப்பெருங் கங்கை தானும்
பன்னதி பிறவும் இங்ஙன் விளித்திடோ பரவை யாவுந்
துன்னுறு விக்கோ ஒன்று சொல்லுதி வேண்டிற் றென்றான்.

என்று இந்திரன் கூறலும் எம்பிரான் கேட்டருளி, இந்திரனே! உனக்கு முன்னாக ஏழு பெரிய உலகில் உள்ள நீரையும் தரட்டோ, அல்லது வானத்தில் உள்ள மிகப்பெரிய ஆகாய கங்கையையும் இன்னும் வேறு ஆறுகளையும் இங்கே அழைத்திடட்டோ அல்லது சமுத்திரங்கள் யாவையும் வரும்படி செய்வோமா? இதில் விரும்பியதொன்றைச் சொல்வாயாக என்றார். 30

ஐங்கரக் கடவுள் இவ்வா றறைதலும் அனைத்தும் நல்கும்
பங்கயத் தயனு மாலும் பரவுறு பழையோய் இங்ஙன்
அங்கவற் றொன்றும் வேண்டேன் அதுநினக் கரிதோ யானொன்
றிங்குனைக் கேட்ப னென்னா இனையன இசைக்க லுற்றான்.

ஐந்து கரங்கொண்ட கடவுள் இவ்வாறு கூறியருளலும் அதுகேட்டு, அனைத்தையும் படைக்கின்ற பிரமதேவனும், நாராயணக் கடவுளும் வணக்கஞ் செய்யும் முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பரம்பொருளே இங்கு தேவரீர் சொல்லியவற்றுள் ஒன்றும் வேண்டேன் அவையெல்லாம் தேவரீருக்கு அரியதோ. யான் அதல்லாது ஈதொரு காரியத்தை மட்டும் உன்னைக் கேட்பேன் என்று இந்த வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினான் இந்திரதேவன். 31

சகத்துயர் வடபொன் மேருச் சாரலின் நின்றும் போந்து
மிகத்துயர் எவர்க்குஞ் செய்யும் வெய்யவள் சிறுவர்ச் செற்று
மகத்துயர் விதியின சேய்க்கு வருவித்த நிமலன பொற்றாள்
அகத்தியன் கொங்கின் பால்வந் தருச்சனை புரிந்து மேவும்.

பூமியில் உயர்வாய் விளங்கி நிற்கும் வடக்கேயுள்ள பொன்மயமான மேரு மலைச் சாரலில் நின்றும் அகத்திய முனிவர் புறப்பட்டுவந்து; வரும் வழியில் மிகவும் துயரப்பாடுகளை எவர்க்கும் செய்யும் கொடியவளான அசமுகியின் பிள்ளைகள் வில்வலன் வாதாவி என்னும் இருவரையும் கொன்று; சிவபிரானை நீக்கிச் செய்த யாகத்கலே துயரததை, பிரம்ம புத்திரனுன தக்கனுக்கு வருவித்த நின்மல சொரூபியான சிவபிரான் பொன்னடிகளை, தனக்கு உற்ற பாவவினை நீங்குமாறு அகத்திய முனிவர் கொங்க நாட்டின் பாலாக வந்து அருச்சனை புரிந்து கொண்டிருக்கின்றார் 32

அன்னவன் தனது மாட்டோர் அணிகமண் டலத்தி னூடே
பொன்னியென் றுரைக்குந் தீர்த்தம் பொருந்தியே இருந்த தெந்தாய்
நன்னதி யதனை நீபோய் ஞாலமேற் கவிழ்த்து விட்டால்
இன்னதோர் வனத்தின் நண்ணும் என்குறை தீரு மென்றான்.

அந்த அகத்திய முனிவனின் பாங்கராக அழகிய கமண்டலத்துள் காவிரி என்று சொல்லப்பெறும் தீர்த்தம் பொருந்திக்கொண்டு இருந்தது. எந்தை பிரானே! அந்த நல்ல நதியினை நீர் சென்று இந்தப் பூமியிலே கவிழ்த்துவிட்டால் இந்தச் சீகாழி வனததில் வரும்; எனது குறையும் நீங்கும் என இந்திரன் கூறினான். 33

பாகசா தனன்இம் மாற்றம் பகர்தலும் பிறைசேர் சென்னி
மாகயா னனத்து வள்ளல் மற்றிது செய்து மென்னா
ஓகையால் அவனை அங்கண் நிறுவிப்போய் ஒல்லை தன்னில்
காகமாய் முனிபா லான கமண்டல மிசைக்கண் உற்றான்.

இந்திரன் இந்த வார்த்தையைச் சொல்லும் அதுவேளை; இளம்பிறையணிந்த திருமுடியை உடைய யானை முகமுடைய அருள் வள்ளலான விநாயகப் பெருமான், இந்திரனே! நீ விரும்பியபடி இதனைச் செய்வோமென்று மகிழ்வுடன் இந்திரனை அங்கே நிற்பாட்டிவிட்டுச் சென்று; விரைவுடன் காகமாய்த் திருவுருக்கொண்டு அகத்திய முனிவனது கமண்டலத்தின் வாயின் மேலாக அமர்ந்தருளினார். 34

கொங்குறு முனிவன் பாங்கர்க் குண்டிகை மீதிற் பொன்னி
சங்கரன் அருளின் வந்த தன்மையும் புணர்ப்பு முன்னி
ஐங்கரன் கொடியாய் நண்ண அகத்தியன் அவனென் றோரான்
இங்கொரு பறவை கொல்லாம் எய்திய தென்று கண்டான.

கொங்க நாட்டில் இருக்கின்ற அகத்திய முனிவன் பக்கராகக் கமண்டல மீதில் காவிரியாறு, சிவபிரான் அருளினால் வந்த தன்மையும், அகத்திய முனிவன் உன்பொருட்டாகக் கையை; போ என்று சொல்வதுபோல அசைத்தாலே நீ அவனைவிட்டு நீங்கலாம் எனச் சிவபிரான் அருள்செய்த சூழ்ச்சியையும்; திருவுளத்து எண்ணியே அதன்படி காகவடிவாய் வந்து கமண்டலமீது எம்பிரான் இருத்தலும் அகத்திய முனிவன் அதனைக்கண்டு; ஈது விநாயகப் பெருமானென அறியாதவனாய்; இதேது இங்கொரு பறவையல்லவோ வந்திருக்கிறது என எண்ணிக் கொண்டான். 35

கண்டனன் பிள்ளை செல்லக் கரதல மெடாநின் றேச்ச
அண்டருக் கலக்கண் செய்த கயமுகத் தவுணற் செற்றேன்
குண்டிகை அதனைத் தள்ளிக் குளிர்புனற் கன்னி யன்னான்
பண்டையில் இசைவு செய்தான் பாரில்நீ படர்தி என்றான்.

கண்ட அகத்தியமுனிவன் காகத்தைக் கலைக்கும்படி தனது கையினை எடுத்து வீசுதலும்; அதுவேளை தேவர்கட்கு இடுக்கண் செய்து நின்ற கயமுகாசுரனைச் சங்காரம் செய்த விநாயக் கடவுள்; தமது திருக்காலால் கமண்டலத்தைக் கவிழ்த்துவிட்டு; அதனுள் இருக்கும் காவிரியை நோக்கி, குளிர்ந்த நீரையுடைய கன்னிப்பெண்ணே! அதோ பார். அந்த அகத்திய முனிவன் முன்னர் தான் போ என்னும்படி உன்னைக் கை காட்டினால் நீ போகலாம் எனச் சம்மதம் கொண்டான். அப்படியே உன்னைப் போகும்படி கை தூக்கிக் காண்பிக்கின்றான். பூமியில் நீ செல்வாயாக என்றார். 36

என்னலுங் காஞ்சி தன்னில் எம்பிரான் உலகம் ஈன்ற
அன்னைதன் அன்பு காட்ட அழைத்திட வந்த கம்பை
நன்னதி போல விண்ணும் ஞாலமும் நடுங்க ஆர்த்துப்
பொன்னியா றுலகந் தன்னில் பொள்ளெனப் பெயர்ந்த தன்றே.

என்று எம்பிரான் செப்பலும், காஞ்சியம்பதியிலே எம்பெருமான் உலகம் யாவையும் பெற்ற தாயான காமாட்சி அம்மையாரது அன்பினைக் காட்ட கம்பையாற்றை அழைத்தபொழுது அங்கு வந்த கம்பையாறான நல்ல ஆற்றின் வேகங்கொண்ட பெருக்கினைப்போல; வானுலகும் மண்ணுலகும் நடுங்கும்படி இரைந்து கொண்டு காவிரியாறு உலகிலே விரைவுடன் பாய்ந்தோடியது. 37

பெயர்தலும் உமைதன் பிள்ளை பிள்ளையின் உருவம் நீத்துப்
பயிறரு மறைநூல் வல்ல பார்ப்பன மகன்போற் செல்லச்
சயமிகு தவத்தின் மேலோன் தன்மையங் கதனை நோக்கி
உயிர்முழு தடவே தோன்றும் ஒருவன்போல் உருத்து நின்றான்.

காவிரியாறு பெயர்ந்தோடுதலும் உமையம்மையார் பாலகர், தான் கொண்ட காக வடிவினை நீக்கி, பயின்று ஓதுகின்ற வேதங்களில் வல்லமையுடைய பிராமணப் பிள்ளைபோல வடிவங்கொண்டு செல்லலும், வெற்றிதரும் விளைவினையுடைய தவத்தின் மேலவரான அகத்திய முனிவர் தன்மை இதனைக் கண்டு கொண்டு உயிர் முழுவதையும் வதைசெய்யும்படி, கோபத்தினால் நின்ற உருத்திர மூர்த்தியைப் போன்று கோபங் கொண்டு நின்றார். 38

தேவனோ அவுணன் தானோ அரக்கனோ திறலின் மேலோன்
யாவனோ அறிதல் தேற்றேன் ஈண்டுறு நதியைச் சிந்திப்
போவனோ சிறிது மெண்ணா அகந்தையன் போலும் அம்மா
யாவனோ வன்மை தன்னை அறிகுவன் விரைவின் என்றான்.

இவன் தேவனோ? அசுரன் தானோ? இராட்சதனோ? வலியின் மேலான யாவனோ? அறிய மாட்டேன்; இங்குள்ள எனது காவிரியெனும் ஆற்றைச் சிந்திக் கவிழ்த்துவிட்டுப் போவனோ; சிறிதும் எதுவும் வருவது பற்றி எண்ணாத அகந்தையன் இவன்போலும்; அம்மம்மா யாவனாய் இருக்கட்டும் இவனது வலிமையைக் கெட்டித்தனத்தை விரைவில் யான் அறிகுவேன் என்றான். 39

விரைந்தவன் பின்ன ரேக மெய்வழி பாடு செய்வோர்
அரந்தையை நீக்கும் எங்கோன் அச்சுறு நீரன் போல
இரிந்தனன் போத லோடும் இருகையுங் கவித்த மாக்கித்
துரந்தனன் முனிவன் சென்னி துளக்குறத் தாக்க உன்னி.

அகத்திய முனிவன் விரைவுடன் பிராமாணச் சிறுவர் பின்னாக ஓடிச் செல்ல; உண்மை வழிபாடு செய்வோரது கவலை துயரம் எல்லாம் நீக்கும் எங்கள் கடவுள்; தான் அகத்தியருக்குப் பயந்துள்ளான்போல, விரைவுடன் பயந்தோடலும்; அகத்தியமுனிவர் தனது இரண்டு முன் கைகளையும் மடக்கிப் பிடித்துக்கொண்டு ஓடுகின்ற சிறுவனைக் கலைத்துச்சென்றார்; அச்சிறுவனின் தலை அதிரும்படி குட்ட நினைந்துகொண்டு. 40

குட்டுவான் துணிந்து செல்லுங் குறுமுனிக் கணிய ளுகிக்
கிட்டுவான் விசும்பி னூடு கிளருவான் திசைக டோறும்
முட்டுவான் பின்பு பாரின் முடுகுவான் அனையன் கைக்கும்
எட்டுவான் சேய ளுகி ஏகுவான் எவர்க்கும் மேலோன்.

குட்டும்படி துணிந்து செல்லுகின்ற குறிய வடிவுடைய அகத்திய முனிவருக்குச் சமீபித்தவராய் கிட்டே நிற்பார்: திடீரென வானமீது கிளர்ந்து, எழுவார் திக்குகள் தோறும் அணுகி, திக்கு மாறி ஓடுவார்; அகத்திய முனிவருடைய கைக்கும் குட்டும்படி எட்டுவார்; விரைவில் தூரச் சென்றிடுவார்; எவர்க்கும் மேலாகிய பிராமணச் சிறுவரின் திருவுருவங் கொண்ட எமது கடவுள். 41

இப்படி முனிவன் சீற்றத் தலமர யாண்டு மேகித்
தப்பினன் திரித லோடுஞ் சாலவுந் தளர்ச்சி யெய்திச்
செப்பரி திவன்றன் மாயஞ் செய்வதென் இனியா னென்ளு
ஒப்பருந் தவத்தோன் உன்ன எந்தையஃ துணர்ந்தான் அன்றே.

இப்படி அகத்திய முனிவன் கோபத்தால் உலைய; எல்லா விடமும் ஓடி ஓடி அகத்திய முனிவருக்கு எட்டாது எம்பிரான் திரிதலோடும்; அகத்திய முனிவர் ஓடி ஓடிக் களைத்து மிகவும் தளர்ச்சி எய்தி; இப்பிள்ளையினுடைய மாயம் சொல்ல முடியாது; ஐயகோ செய்வது இனி யான் என்னவாகும் என்று ஒப்பற்ற தவத்தாளியான அகத்திய முனிவர் வேதனையுடன் நினைப்ப; அவரின் உள்ள நோவை எந்தை பெருமான் உணர்ந்து கொண்டார். 42

ஓட்டமோ டுலவு முன்னேன் ஒல்லையில் தனது மேனி
காட்டினன் முனிவன் காணுக் கதுமெனக் கலங்கி அந்தோ
கோட்டிப முகனே ஈண்டுக் குறுகினன் அவனை யானே
ஈட்டொடு துரந்தேன் கொல்லென் றேங்கினன் இரங்கு கின்ருன்.

ஓட்டமோடு திருவிளையாட்டாக உலாவி நின்ற முன்னவரான விநாயகப் பெருமான் விரைவுடன் தனது உண்மையான திருமேனியைக் காட்டினன்; அகத்திய முனிவர் கண்ணுற்று திடீரென அச்சங் கொண்டு உள்ளங் கலங்கி; அந்தோ கொம்பினை உடைய யானை முகமுடைய கடவுளோ இவ்விடத்து வந்தருளினுர்; அவரை யானு குட்டும்படி வலியுடன் தொடர்ந்து துரத்தினேன்; என்று ஏங்கினுர் இரக்கப்பட்டு வருந்துகின்ருர் அகத்திய முனிவர். 43

இரங்கிய முனிவன் முன்னம் ஏந்தலைப் புடைப்பான் கொண்ட
கரங்களை எடுத்து வானில் காருரும் ஏறு வெற்பின்
உரங்கிழி தரவே நீங்கா துரப்பினில் வீழ்வ தேபோல்
வரங்கெழு தனது நெற்றி வருந்துறத் தாக்கல் உற்றான்.

இரங்கித் துயருற்ற அகத்திய முனிவர், முன்னே எமது கடவுளைக் குட்டும்படி தான் கவித்துப் பிடித்துக்கொண்ட முன்கைகளை எடுத்து; வானத்திற் தோன்றும் மேகங்களிலிருந்து வெளிப்படும் கொடிய இடியேறு; மலையினுடைய வலிகெட அதன் மீது வீழ்வதே போன்று; வரத்தால் மிகுந்த தனது நெற்றியில் நன்றாக வருந்தி நோவும்படி குட்டினார். 44

தாக்குதல் புரிந்த காலைத் தாரகப் பிரம மான
மாக்கய முகத்து வள்ளல் வரம்பிலா அருளி னோடு
நோக்கியுன் செய்கை என்னை நுவலுதி குறியோய் என்னத்
தேக்குறு தமிழ்தேர் வள்ளல் இனையது செப்பு கின்றான்.

அகத்திய முனிவன் தனது நெற்றியில் தாக்கி மளமளவெனக் குட்டிய காலையில், தாரக எழுத்தென்னும் ஓங்காரத்தின் சூழிவடிவமான பெரிய யானை முகமும் உட்பொருளான பிரமசொரூபமுமாய் விளங்கும் அருட்கொடையாளி யாகும் விநாயகக் கடவுள், அளவுகடந்த பேரருளால் அகத்திய முனிவனைப் பார்த்து, அகத்திய முனிவனே! இது என்ன உனது செயல்? சொல்லுவாயாக என்னலும், அதுவேளை தித்திப்புடன் தேக்குகின்ற தமிழைத் தந்த அகத்திய முனிவர் இதனைச் சொல்லுகின்றார். 45

அந்தண குமரன் என்றே ஐயநின் சிரமேல் தாக்கச்
சிந்தனை புரிந்தேன் யாதுந் தெளிவிலேன் அதற்குத் தீர்வு
முந்தினன் இயற்று கின்றேன் என்றலும் முறுவல் செய்து
தந்தியின் முகத்து வள்ளல் அலமரல் தவிர்தி யென்றான்.

பிராமணச் சிறுவனென நினைவுற்று, ஐயனே! நினது தலை மேலாகக் குட்டும்படி நினைவுற்றேன். யாதொன்றும் தெளிந்து கொள்ளும் நிலையுடையேன் அல்லனாயினேன்; அப்படியாக நினைந்த எனது பாதகத்திற்கு ஏற்ற தண்டனையை முன்னுக்குச் செய்துகொள்ளுகின்றேன் என்று கூறலும்; எம்பிரான் புன்சிரிப்புக் கொண்டு யானைமுகமுடைய அருட்செல்வர், அகத்தியனே! மனத்துயரத்துடன் இதைச் செய்தலை நீக்குவாயாக என்றார். 46

என்றலுந் தவிர்ந்து முன்னோன் இணையடி மிசையே பல்கால்
சென்று சென்றிறைஞ்சி யன்னோன் சீர்த்திய தெவையும் போற்றி
உன்றிறம் உணரேன் செய்த தவற்றினை உளத்திற் கொள்ளேல்
நன்றருள் புரிதி என்ன நாயகன் அருளிச் செய்வான்.

என்றலும் அகத்திய முனிவர் குட்டுதலைத் தவிர்ந்து முன்னவரான விநாயகப்பெருமானின் என்றும் துணையான திருவடிகளை; சென்று சென்று பலகாலும் வணங்கி, பெருமானுடைய சிறப்புக்கள் எவைகளையும் எடுத்துப் போற்றுதல் புரிந்து; ஐயனே! உம்முடைய திருவிளையாடலை நான் உணரேன்; யான் செய்த தவற்றினைத் திருவுளத்துக் கொள்ளவேண்டாம். நன்றாகிய அருளினைத் தந்தருள்வீராக என்னலும் எம்பிரான் அருளுடன் திருவாய் மலர்ந்தருளுகின்றார். 47

புரந்தரன் எந்தை பூசை புரிதரு பொருட்டால் ஈண்டோர்
வரந்தரு காமர் தண்கா வைத்தனன் அதுநீ ரின்றி
விரைந்தது பொலிவு மாழ்கி வெறுந்துகள் ஆத லோடும்
இரந்தனன் புனல்வேட் டெம்மை இயல்புடன் வழிபட் டிந்நாள்.

அகத்தியனே! கேட்பாயாக, இந்திரதேவன் எந்தை பெருமான் பூசை புரியும் பொருட்டாக இவ்விடத்து எல்லாச் சிறப்பையும் தரவல்ல ஓர் அழகிய குளிர்மை தங்கிய பூஞ்சோலையை வைத்தனன். அது நீர் இல்லாமல் விரைவுடன் பொலிவு மாழ்கி துகளாகி எரிந்து போதலும்; நீர்வேண்டி எம்மை இரந்து இன்று இயல்பான முறையினால் வழிபட்டு வேண்டினான். 48

ஆதலின் கொடிபோல் யாமுன் னரும்புனற் குடிகை மீது
காதலித் திருந்து மெல்லக் கவிழ்த்தனம் அதனை ஈண்டுப்
போதலுற் றிடவுஞ் சொற்றும் பொருதுநீ செய்த வற்றில்
யாதுமுட் கொள்ளேம் அவ்வா றினிதென மகிழ்தும் அன்றே.

ஆனதன்மையில் யாம் காகம்போல் வடிவுகொண்டு உனது அரிய காவிரி என்னும் தீர்த்தம் நிறைந்த கமண்டலத்தின் மீது காதலுடன் வந்திருந்து மெதுவாக அதனைக் கவிழ்த்துவிட்டு, அந்த ஆற்றை இவ்விடத்து ஓடிப் போகவும் சொன்னேம்; இத்தன்மைகண்டு நீ சகிக்கமுடியாது செய்தவற்றில் யாதினையும் யாம் எண்ணமாட்டோம். நீ செய்ததெல்லாம் நன்றென்றே நாம் மகிழ்ந்து கொள்வோம்; 49

ஈண்டுநீ புரிந்த தெல்லாம் எமக்கிதோ ராட லென்றே
காண்டுமா லன்றி நின்பால் காய்சினங் கொண்டேம் அல்லேம்
நீண்டசெஞ் சடையெம் மையன் நேயன்நீ எமக்கும் அற்றே
வேண்டிய வரங்கள் ஈதுங் கேண்மதி விரைவின் என்றான்.

இவ்விடத்து நீ செய்தது எல்லாம் எமக்கிதோர் ஆடல் என்றே கண்டு கொள்வோம்; அன்றி உன்பால் எக்காரணம் பற்றியும் வருத்துகின்ற கோபத்தைக் கொண்டோம் அல்லம். நீ நீண்ட சிவந்த சடையுடைய எமது தந்தையின் அன்பன் ஆதலால், எமக்கும் அப்படியே அன்பனுவாய். உனக்கு வேண்டிய வரங்களைத் தருகின்றோம், அவைகளை விரைவாகக் கேட்டுக் கொள்வாயாக என்றார் விநாயகக் கடவுள். 50

வேறு

என்னு இதுசெப் பலும்எம் பெருமான், முன்னு கியதோர் முனிவன் பணியா
உன்னு ரருள்எய் தலின்உய்ந் தனன்யான், நன்னு யகனே எனவே நவில்வான்.

என்று இதனை எம்பெருமான் சொல்லியருளுதலும்; எமது பெருமான் முன்னாகி நின்ற ஒருவனாகிய அகத்திய முனிவன் எம் ஐயனைப் பணிந்து, ஐயனே! தேவரீரது ஆர்ந்து விளங்கும் திருவருள் எய்தப்பெறுதலின் யான் உய்ந்தேன். எனது நன்மை தரும் நாயகனே! இதனை அறிந்தருள்வீராக, எனவே, பின்வருவனவற்றைச் சொல்வான். 51

**நின்பா லினும்அந் நெடுமா லுணரான், தன்பா லினுமே தமியேன் மிகவும்**
**அன்பா வதொர்தன் மையளித் தருள்நீ, இன்பால் அதுவெஃ குவனெப் பொழுதும்.**

பெருமானே! தேவரீர் இடத்தும்; அந்த நெடிய வடிவுடைய விஷ்ணு மூர்த்தியும் உணரமுடியாமல் நின்ற சிவபிரான் இடத்துமே; தமியேனவன் மிகவும் அன்பாயிருக்கின்றதோர் தன்மை நிறைந்த வரத்தைத் தேவரீர் தந்தருள்வீராக; இந்த அன்பே பெறற்கரிய இன்பமாதலால்; ஆவலுடன் அவ் வரத்தையே எப்பொழுதும் விரும்புவேன் என்றார் அகத்திய முனிவர். 52

**இன்னே தமியேன் எனவே இனிநின், முன்னே நுதலின் முறையால் இருகை**
**கொன்னே கொடுதாக் குநர்தங் குறைதீர்த், தன்னே யெனவந் தருள்செய் யெனவே.**

இப்பொழுது தமியேன் இங்கு செய்ததைப்போன்று; இனிமேலும் நினது திருமுன்பாகத் தமது நெற்றியில் முறைப்படி இரண்டு கையாலும் விரைவுடன் குட்டி வணங்குவார் தங்கள் குறைகளைத் தீர்த்து; அவர்களின் தாய்போல் பரிந்து வந்து அருள் செய்வீராக என்று; 53

**முத்தண் டமிழ்தேர் முனிச தறைய, அத்தன் குமரன் அவைதல் கினமால்**
**இத்தன் மையவே அலதின் னமும்நீ, சித்தந் தனில்வேண் டியசெப் பெனவே.**

இயல், இசை, நாடகம் எனும் மூவகையான தண்ணளி மிக்க தமிழினைத் தேர்ந்துகொண்ட அகத்திய முனிவன் இதனைச் சொல்லியருள; சிவபிரான் திருக்குமாரர், அகத்தியனே! அவைகளைக் கொடுத்தருளினோம்; இத்தன்மையான வரமே அல்லாது; இன்னமும் நீ உனது சித்தத்திலே விரும்பியதையும் சொல்லுவாயாக என எம்பிரான் கூறியருளலும்; 54

**கொள்ளப் படுகுண் டிகையிற் குடிநை, வெள்ளப் பெருநீர் மிசையுற் றடிகள்**
**தள்ளக் கவிழ்வுற் றதுதா ரணிமேல், எள்ளிற் சிறிதும் இலதென் றிடவே.**

வெள்ளமாகப் பெருகும் காவிரியாறு கொள்ளப்பெற்று நிறைந்திருந்த எனது கமண்டலத்தினூடு; தேவரீர் காகமாக இருந்து கமண்டலத்தைத் தள்ளிக் கவிழ்ப்ப; அந்த ஆறு கவிழ்ந்து பூமிமேல் போயது; இப்போது கமண்டலத்தில் கொஞ்சமேனும் நீர் இல்லையே என்றும்; 55

**ஊனாய் உயிராய் உலகாய் உறைவோன், மேனாள் அருள்செய் வியன்மா நதிதான்**
**போனால் துபோற் புனலொன் றுளதோ, நானா டிடவே நலமா னதுவே.**

ஐயனே! ஊனாகி, உயிராகி, உலகாகி உறைகின்ற ஏகனாகிய சிவபிரான் முன்னாள் எனக்குத் தந்தருளிய மேலான காவிரியாறு; தானாக பூமிமேல் ஓடிப் போய்விட்டால் அந்த ஆற்றைப்போல் புனிதமான நீர் வேறு ஒன்று நான் நீராடும்படி நலமுடையதாக இருக்கின்றதோ இல்லை. 56

**அந்நீர் மையினால் அடியேற் கிவண்நீ, நன்னீர் நவையற் றதுநல் கெனவே**
**கைந்நீர் மையினாற் கடுகின் துணையாம், மூநநீர் அயிலும் முனிவன் மொழிய.**

அத்தன்மையால் அடியேனுக்குத் தேவரீர் இவ்விடத்துப் புனிதமான நல்ல நீர் குறைவிலாததாய் எக்காலமும் விளங்கும்படி தந்தருள்க என, தனது கையினாலே சமுத்திரங்கள் அனைத்தையும் கடுகளவாக்கி உண்ட அகத்திய முனிவர் சொல்லியருளலும், 57

**காகத் தியல்கொண் டுகவிழ்த் திடமுன், போகுற் றபுதுப் புனலாற் றிடையே**
**மாகைத் தலநீட் டினன்வா னுலவும், மேகத் திரைமால் கடல்வீழ்ந் தெனவே.**

அதுவேளை எம்பிரான் காகத்தின் வடிவாகிக்கொண்டு முன்பு கவிழ்த்திட முன்னே ஓடிப்போகின்ற புதுப்புனலான காவிரியாற்றிடையே; தமது பெரிய திருக்கரத்தை நீட்டியருளினார். அதுதான் வானத்தில் உலவுகின்ற தலையான பெரிய மேகமொன்று பெரிய கடலிடத்து நீர் பருகும்படி வந்து படிந்தது போன் றிருந்தது. 58

**அள்ளிச் சிறிதே புனலம் முனிவன், கொள்ளப் படுகுண் டிகையுய்த் திடலும்**
**உள்ளத் தைநிரப்பி யொழிந் ததெல்லாம், வெள்ளத் தொடுபார் மிசைமே வியதே.**

தமது திருக்கையால் காவிரி ஆற்றின் நீரை அள்ளிச், சிறிதே அந்நீரை அகத்திய முனிவனுடைய; நீரை ஏற்று நிறைவுடன் விளங்கும் கமண்டலத்தினூடு விடுத்தலும், அந்நீர் கமண்டலத்தின் உட்பாகமெல்லாம் நிரப்பி, மிச்சமெல்லாம் காவிரியாற்றின் வெள்ளத்தோடு வழிந்தோடிப் பாய்ந்தது.

காவிரியாறு முன்னர் நிரம்பி இருந்த கமண்டலம்; அது எவ்வளவு நீரை விடுத்தாலும் ஏற்கும் இயல்புடையது. அதனுள் முன்னிருந்த நீரில் ஒரு பகுதி யாலேயே நிரம்பச் செய்த அற்புதம் விளங்குகின்றது. 59

**முன்னுற் றதுபோல் முனிகுண் டிகைநீர், துன்னுற் றதுமேல் தொலையா வகையால்**
**என்னிற் புதுமை யெனநோக் கினனால், தன்னுற் றமனத் தவமா முனியே.**

முன்னின்ற தன்மைபோல அகத்திய முனிவனுடைய கமண்டலம் நிறையப் பெற்றது இனிமேலாக அந்நீர் எக்காலமும் தொலையாதுபோகும் வகையால். இது என்ன புதுமை என அகத்திய முனிவன் அதை ஆச்சரியத்துடன் பார்த் தான் யாெனில் தன்னை அறிந்து நாடுகின்ற மனத்தினை உடைய அகத்தியன் என்னும் பெயரினை உடைய தவமுனிவன். 60

**பேருற் றிடுமிப் பெருநீர் அதனில், வாரிச் சிறிதே வருகுண் டிகையில்**
**பாரித் தனன்இப் படிமுற் றுறுவான், ஆரிப் படிவல் லவரா யினுமே.**

பேர்ந்து ஓடுகின்ற இந்தப் பெரிய ஆற்றுநீரில் எம்பிரான் இப்படியாகச் சிறிது நீரை அள்ளி, பெரிய கமண்டலம் நிரம்பித் தாங்குமபடி நிரப்பி வைத்தார். எந்தப் பெரிய அற்புதமான காரியத்தைச் சாதிக்கக்கூடியவராக இருந்தாலும் கூட, ஆர்தான் இப்படி நிரப்பமுடியாத கமண்டலத்தை நிரம்பும்படி செய்ய வல்லவர். 61

**அந்தத் திருமால் அயனே முதலோர், வந்தித் திடவே வரமீந் தருளி**
**முந்துற் றிடுமூ லமொழிப் பொருளாம், எந்தைக் கரிதோ இதுபோல் வதுவே.**

அந்த விஷ்ணுபிரான், பிரமன் முதலோர்கள் வந்தனை செய்திட, அவர்கள் வேண்டிய வரங்களைக் கொடுத்தருளிய வண்ணம், எவற்றிற்கும் முதலெழுத்தாகி இருக்கும் மூலமொழியான ஓங்காரப் பொருளாகிய எந்தை பெருமானுக்கு அரிதோ இதுபோன்ற அற்புதச்செயல். 62

**என்றே நினையா இபமா முகவற், சென்றே பணியாச் சிறியேன் குறையா**
**தொன்றே துமிலேன் உதவுற் றனைநீ, நன்றே கவிழும் நதிநீ ரையுமே.**

என்று அகத்திய முனிவன் கமண்டலம் மீண்டும் நிரம்பிய அற்புதத்தை நினைந்து, யானைமுகமுடைய பெருமானைச் சென்று பணிந்து, ஐயனே! சிறியேன் இனிக் குறைவானது ஒன்று ஏதுமிலேன்; இப்போது முன்னே கொஞ்சமும் இலாது கவிழ்ந்தோடிய காவிரியாற்று நீரையுமே தேவரீர் தந்தருளினீர்.

இக்கருத்தை தரா அருள் ஒன்று இன்றியே தந்தாய் என்று உன் தமரெல்லாம் ஆரா நின்றார். எனும் மணிவாசகருடைய திருவாசகப் பாடலுடன் நினைவு கூரற் பாலது. 63

**முந்தே முதல்வா முழுதுன் னருளால், அந்தே யளவும் அளியில் சிறியேன்**
**உய்ந்தேன் இனியும் முனையுன் னுழிநீ, வந்தே அருள்கூர் மறவேல் எனவே.**

எல்லார்க்கும் முந்திய முதல்வனே! முழுவதும் நிறைந்த உனது அருளினால்; அற்பமாயினும் கருணையன்பிலாத சிறியேன் உய்ந்தேன். இனிமேலும் தேவரீரை நினைந்தருளுங்கால் வந்து எமக்கு அருள் சுரப்பாய்; என்னை மறவாதே எனலும். 64

**அற்றா கவென அருள்செய் தயலே, சுற்றா வருதொல் படையொ டுமெழாப்**
**பற்றா னவர்நா டுபரம் பொருள்சேய், மற்றா ரும்வியப் பமறைந் தனனே.**

அவ்வண்ணமே ஆகட்டும் என எம்பிரான் அகத்திய முனிவருக்கு அருள் புரிந்து, தமது பக்கராகச் சூழ்ந்து வருகின்ற மிக முதிய பூதகணமான படையுடன் எழுந்து, தம்மீது பற்றுடையார்க்கு அருள்புரியும் பரம்பொருளான சிவபிரான் திருக்குமாரர்; மற்று அங்குள்ளார் எல்லாரும் அற்புதத்துடன் வியந்தருள மறைந்தருளினார். 65

வேறு

மறைகின்ற எல்லைதனில் குறுமுனிவிம் மிதமாய்மன் னுயிர்கள் எங்கும், உறைகின்ற தனிமுதல்வன் புதல்வன்தன் கோலத்தை உணர்ந்து போற்றி, அறைகின்ற காவிரியைக் கண்ணுற்று நகைத்து வெகுண் டருள்கை நாடி, உறைகின்ற கொங்குதனை ஒருவித்தென் றிசைநோக்கி யொல்லை சென்றான்.

விநாயகப் பெருமான் மறைகின்ற எல்லைதனில்; அகத்திய முனிவர் விம்மிதம் அடைந்து உயிர்கள்தோறும் உறைகின்ற தனி முதல்வரான சிவபிரான் திருக்குமாரனின் அருட்கோலத்தைத் தியானித்து வணங்கி; இரைந்தோடிச் செல்கின்ற காவிரியைக் கண்ணுற்று; சிரித்து என்னை நீங்கிவிட்டேன் என இரைந்தோடுகின்றாயோ எனக் கோபித்து, ஆனால் இவையாவும் திருவருளின் செயல் என்பதை நாடி உணர்ந்து; தான் இருந்தருளிய கொங்கதேசத்தை விடுத்து நீங்கித் தென்திசைநோக்கி வழிக்கொண்டு விரைவில் வந்தார். 66

காவிரி நீங்கு படலம் முற்றிற்று.

ஆகத் திருவித்தம் – 1333

---

790

## 28. திருக்குற்ருலப் படலம்

செற்ருலம் உயிரனைத்தும் உண்டிடவே நிமிர்ந்தெழலுஞ் சிந்தை மேற்கொள், பற்ருலங் கதுநுகர்ந்து நான்முகனே முகலோர்தம் பாவை மார்கள், பொற்ருலி தனையளித்தோன் புகழ்போற்றி முகின் மேனிப் புத்தேள் வைகுங், குற்ருலம் ஆவதொரு வளநகரைக் குறுமுனி வன் குறுகி ஞனல்.

உலக உயிர்களை எல்லாம் அழித்து உண்டிடும்படி ஆலகாலம் என்னும் நஞ்சு, பாற்கடல் கடைந்த காலத்தில் நிமிர்ந்து எழலும்; எமது சிவபிரான் உயிர்கள் மீது கொண்ட பற்றினுல்; அந்தக் கொடிய ஆலகாலம் என்னும் நஞ்சை உண்டு; நான்முகமுடைய பிரமதேவர் முதற்கடவுளரின் மனைவிமார் களின் மாங்கல்யமான பொன் தாலியைக் காப்பாற்றி; உலகை உய்யவைத்த பெருமானின் புகழ் அனைத்தையும் எடுத்துப் புகழ்ந்து போற்றுதல் புரிந்து கொண்டு; அகத்திய முனிவர் முகில் போலும் திருமேனி உடைய நாராயணக் கடவுள் கோயில் கொண்டிருக்கும் திருக்குற்ருலம் என்னும்; ஒரு வளங்கொண்ட நகரை, குறுகிய வடிவுடைய அகத்திய முனிவர் அடைந்துகொண்டார். 1

அப்பதியில் அச்சுதனுக் காலயமொன் றுளதம்மா அவனி மீதில், ஒப்பிலதோர் திருமுற்றம் அஃதென்பர் இம்பரெலாம் உம்பர் தாமுஞ், செப்புவரா யிடைதன்னில் அந்தணர்கள் அளப்பில்லோர் செறிவர் அன்னூர், மெய்ப்படுநூல் முறைகண்டு மோகத்தால் தமதுமத மேற் கொண்டுள்ளார்.

அந்தக் குற்ருலத்தில் நாராயணக் கடவுளுக்கு ஓர் ஆலயம் உண்டு; அம் மாடி, அதை இப்பூமியில் வேறு ஒப்பு இல்லாத திருமுற்றம் என்னும் பெருங் கோயிலாகச் சொல்வார்கள்; இப்பூமியில் உள்ளார் மட்டுமன்றி வான உலகில் உள்ள தேவர்களும் சொல்வார்கள்; அந்த இடத்தில் பிராமணர்கள் அளவு கடந்தோர் இருப்பார்கள்; அந்தப் பிராமணர்கள் உண்மையை விளக்குகின்ற வேதங்களை நன்கு முறையாகக் கற்றுக்கொண்டும்; மோகத்தினுல் ஆசைவலை யிற் சிக்கித் தமது மதம் எனப் பெயரிட்ட வைணவம் என்பதை மேற்கொண் டுள்ளார்கள்.

சிவன் ஒருத்தனே தெய்வம் என்று வேதங்கள் உண்மையை அறுதியிட்டுக் கூறிட; அதைக் கற்ருலும் தாங்கள் பிறிதொன்றைக் கண்டு நின்ருேம் எனும் பற்ருல் தமது மத மேற்கொண்டு நின்ருர்கள் என்ருர். 2

அன்னவர்கள் எப்பெருமான் தன்னடியார் தமைக்காணின் அழன்று பொங்கி, முன்னுறுதொல் பகைஞரென மிகஇகழ்ந்து மற்ற வர்தம் முகநோக் காராய்த், துன்னெறியே மேற்கொண்டு மறைபயில் வோர் என்பதொரு சொல்லே தாங்கித், தந்நெறியும் புரியாதங் கிருந் தனரால் அஃதுணர்ந்தான் தமிழ்நர் கோமான்.

அவ்வாருகிய அப்பிராமணர்கள் எம்பெருமானுடைய அடியார்களைக் காணில்; கோபித்து பொங்கி அழன்று நெடுங்காலமாகப் பகைகொண்டவ ரெனும்படி மிக இகழ்ந்து; அடியவர்களுடைய முகத்தையும் திரும்பிப் பார்க்காத வர்களாய்; தீங்காகிய நெறியை மேற்கொண்டு; வேதம் பயில்வோர் நாங்கள் என்கின்ற சொல் ஒன்றுமே பெற்றுக்கொண்டு; அந்த வேத நெறிப்படி ஒழுகாதவராய் அங்கு அப்பிராமணர்கள் இருந்தார்கள்; அதனை அறிந்துகொண் டான் தமிழர்கள் அரசனுன அகத்திய முனிவன். 3

குறுமுனிவன் ஆங்கவர்தஞ் செயலுணர்ந்து குற்றுல மென்னும் மூதூர், மறுகினிடை யேநடந்து மாயவன்தன் ஆலயமுன் வருத லோடும், நெறிவருமவ் வாலயத்திற் செறிகின்ற வைணவர்கள் நெடிது நோக்கிச், செறுநர்தமைக் கண்டுபதை பதைப்பார்போல் வெய்துயிர்த் துச் செயிர்த்துச் சொல்வார்.

அகத்திய முனிவர் அங்கு அப்பிராமணர்களின் செயலை உணர்ந்து; குற்று லம் என்னும் பெயருடைய மூதிய ஊரின் வீதியூடாக நடந்து சென்று; நாரா யணக் கடவுள் ஆலய முன்பாக வருதலோடும்; நெறிவிளங்கும் அந்த ஆலயத் தில் வாழ்கின்ற வைணவர்களான இப்பிராமணர் நெடுகிலும் கூர்ந்து அகத்திய முனிவனைக் கவனித்து; பகைவரைக் கண்ணுற்றபோது கோப வேகத்தால் பதை பதைப்பார்போன்று; பெருமூச்செறிந்து கோபத்துடன் சொல்வார்கள். 4

ஓல்லாத கண்டிகையும் நீறும்அணிந் தனையதனல் உலகில் தேவர், எல்லாரும் அறியவைய மேற்றேனுக் கடியவன்நீ ஈண்டு செல்லச், செல்லாது கைத்தலத்தில் ஒருகோலுங் கொண்டனையாற் சிறியை போலும், நில்லாயெம் பெருமான்றன் மாநகரம் அணுகாது நீங்கு கென்றூர்.

பொருத்தமில்லாத உருத்திராக்கத்தையும், திருநீற்றையும் நீ அணிந்துள் ளாய்; ஆதலால் உலகில் உள்ள தேவர்கள் எல்லாரும் அறியப் பிச்சை ஏற்கின்ற சிவனுக்கு நீ அடியவன்; நீ இவ்விடத்துச் செல்ல செல்லுபடியாகாது; உனது கையி னிடத்தாக ஒரு தண்டும் கொண்டனை; ஆதலால் நீ அற்பத்தனமுடைய சிறிய வன்போலும்; இங்கு நில்லாதே; எம்பெருமான் நாராயணக் கடவுளின் பெரிய நகரத்தை நீ அணுகாது இங்கிருந்து நீங்கிவிடு என்றூர்கள். 5

என்றிடலும் வெகுளாது நகைசெய்து மறைநெறியை யிகந்து நின்றீர், துன்றியிவண் உறைகின்ற துணரேன்இத் திறமெவருஞ் சொன்னூர் இல்லை, நன்றுநெறி யென்றுவந்தேன் னும்பான்மை உணர் வேனேல், நான்இம் மூதூர், சென்றிடவும் நினையேனுல் முனியற்க யான்மீண்டு செல்வே னென்றுன்.

என்று அப்பிராமணர்கள் கூறுதலும்; அகத்திய முனிவர் அவர் வார்த் தைக்குக் கோபிக்காது சிரித்து; ஓகோ நீங்கள் வேத நெறிகளையும் கடந்து மேலாகி நின்றீர்; நீங்கள் நெருங்கி இங்கே இருக்கின்றீர் என்பது யான் உண ரேனுல்; இவ்வண்ணம் நீங்கள் இருக்கின்றீர் என்றும்; அங்கு எவ்போன்றோர்

போகக்கூடாது என்று எவரும் சொன்னாரில்லை; நல்ல மார்க்கம் இது என்று நான் இவ்வழியால் வந்தேன்; நுமது பான்மையினை உணரமாட்டேன்; நான் இந்த முதிய ஊரில் இனிமேலாக வருவதற்கு நினைய மாட்டேன்; என்னைக் கோபிக்க வேண்டாம்; நான் மீண்டும் திரும்பிச் செல்வேன் என்றான் அகத்திய முனிவன். 6

பொதியமலை தனிலேகும் முனிவன்இது புகன்றிடலும் பொருது நீயிப், பதியதனில் வருவதுவும் பாவமாம் ஈண்டுநீ படர்தியென்ன, இதுசரதம் மொழிந்தீர்கள் தொல்லோர்தம் நூன்முறையும் ஈதே யென்னா, விதியருளுந் தக்கனார் வழிமுறையோர் தமைநீங்கி மீண்டு செல்வான்.

பொதிய மலையில் தங்கி இருப்பதற்காக வேண்டி இவ்வழியால் வந்த அகத்திய முனிவர் இது சொல்லலும்; அதனையும் கேட்கப் பொருத அப்பிராமணர்கள்; நீ இந்த ஊரில் வருவதே பெரும் பாவமாகும்; இப்படியே வந்த வழியே போய்விடு எனலும்; ஓகோ நீங்கள் இதில் உண்மையே சொன்னீர்கள்; உங்களுடைய முன்னையோரால் எழுதப்பட்ட நூல்முறையும் இதுதானே என்று கூறிவிட்டு; பிரமதேவர் பெற்ற தக்கன் என்பானின் கொள்கையை வழிமுறை வழிமுறையாகக் கடைப்பிடித்து வாழ்கின்ற அப்பிராமணர்களை விட்டு நீங்கிச் சென்றார் அகத்திய முனிவர். 7

சிட்டர்புகழ் கயிலைமலை காத்தருளுந் திருநந்திதேவன் செங்கேழ், மட்டுறுபங் கயத்துறையும் நான்முகத்தோன் துருவாசன் மறைநூல் யாவுந், தட்டறவே உணர்பிருகு கவுதமன்கண் ணுவமுனிவன் ததீசிஇன்னோர், இட்ட பெருஞ் சாபமெலாம் பொய்த்திடுமோ எனவுன்னி ஏக லுற்றான்.

மேலான நெறி நின்ற பெரியோர்கள் புகழும் கைலைமலையைக் காவல் புரிந்தருளும் திருநந்திதேவர்; சிவந்த நிறம்கொண்டு விளங்கும் தேன் துளிக்கும் தாமரை மேலிருக்கும் பிரமதேவர்; தூருவாச முனிவர்; வேதநூல்கள் யாவையும் தடுமாற்றம் இலாது கற்றுணர்ந்த பிருகு முனிவன்; கௌதம முனிவன்; கண்ணுவ முனிவர்; ததீசி முனிவர் ஆகிய இவர்கள் இப்பிராமணர்களுக்கு இட்ட பெருஞ்சாபங்கள் எல்லாம் பொய்த்திடுமோ என நினைந்துகொண்டு மீண்டு செல்வாராயினார் அகத்திய முனிவர். 8

**நந்திதேவர் சாபமிட்டது:** தக்கன் சிவபிரானை நீக்கி செய்த யாகத்திலே கொடுக்கப்படும் தானத்தையும், பொருளையும், உணவையும் பெரிதும் விரும்பி வேதங்களை உணர்ந்த பிராமணர்கள் அங்கு இருத்தலால் நந்திதேர் அவர்களை நோக்கி, நீங்கள் சிவநிந்தனை செய்வான் பாலாக இருந்தமையால் நீங்கள் உண்மை உணராது பலகாலும் உழல்வீர்கள் எனச் சாபமிட்டார்.

**தூருவாச முனிவர் சாபமிட்டது:** பூசக்கரம் என்னும் நகரத்தில் புண்டரீகனென்னும் பெயருடைய ஒரு பிராமணன் பல சீடர்களுக்குப் போதித்துவந்தான். அவனுக்கு அழகிய உருவுடைய ஒரு மனைவி இருந்தாள். அவள் வியபிசாரஞ் செய்து, கணவனின் சீடரைப் புணர்ந்து வருங்கால், தூருவாச முனிவர் அவ்விடம் வருதலும், அவரையும் தனது கெட்ட எண்ணத்திற்கு இழுக்க, அந்நிலை கண்டு தூருவாசர் அப்பிராமணனை நோக்கி, துர்நடத்தை உடைய இவளை நீக்காது விடுத்தமையால் உனது குலமே உண்மை உணரமுடியாது தவித்து சிற்றின்பமான உலக இன்பமே பெரிதென மதிப்பவராகட்டும் எனச் சபித்தார்.

பிருகு முனிவர் சாபமிட்டது: பிருகு முனிவர் மனைவி கியாதி அசுரர்களுக்கு இடங்கொடுத்தமையால், அவளைத் திருமால் கொன்ருர். இதை உணர்ந்த பிருகு முனிவர் திருமாலின் அடியவரான பிராமணர்கள் ஒழுக்கங் குன்றி சிவநிந்தை செய்வார்கள் எனவுஞ் சாபமிட்டார்.

மற்றை பிரமன் ததிசி முனிவர் வரலாறு தக்க காண்டத்தில் கூறப்படும்.

ஏகலுறு குறுமுனிவன் உயிர்க்குயிராய் நின்ருனை இகழ்வார் தங்கண், மோகமுறும் அகந்தையினை முதலோடுங் களைவனென முன்னி முன்னுட், போகியதன் மாயையினுல் இரதத்தின் ஆவிபடு பொன்னே போலப், பாகவத மாகுவதோர் உருக்கொண்டான் கருணையினுற் பரவை போல்வான்.

செல்லுகின்ற அகத்திய முனிவன், உயிர்க்குயிராய் நின்ருனுகிய சிவ பிரானை இகழுகின்ற இப்பிராமணர் தங்களது மோகம் உற்ற அகந்தையை வேரோடும் களைவேன் என்று நினைந்து: முன்னுள் தனக்குத் தெரிந்துகொண்ட மாயையினுல்; இரசத்தின் ஆவிபட்டு சிவப்பாக மூடப்பட்ட பொன்னேபோன்று; பாகவதர் என்னும்படியான உருவத்தை எடுத்துக்கொண்டார் அகத்திய முனிவர்; அவர் கருணையினுல் சமுத்திரம் போல்பவர். 9

ஆளுடைய நாயகன்பால் அன்புடையான் மாயவன்றன் அடியனேபோல், கோளுடைய மாயத்தான் மேனிகொண்டு மீண்டுமங்கட் குறுக லோடும், நீளிடையில் வரக்கண்ட வயிணவர்கள் எதிர்சென்று நெடிது போற்றித், தாளிடையில் வீழ்ந்திடலும் நாரணனுக் காகவெனச் சாற்றி நின்ருன்.

எல்லாரையும் ஆளுடைய நாயகரான சிவபிரான்பால் அன்புடைய அகத்திய முனிவர் நாராயணக் கடவுளின் அடியனேபோல்; குறிகள்கொண்ட மாயமான மேனியைக் கொண்டு; மீண்டும் அகத்திய முனிவன் அங்கு போதலோடும்; நீண்ட வீதிகளூடாகப் பாகவத வடிவத்துடன் வரக் கண்டுகொண்ட வைணவப் பிராமணர்கள்; பாகவதராகிய அகத்திய முனிவனை எதிர் சென்று வரவேற்று நெடிது நேரம் போற்றி செய்து; பாதங்களில் அவர்கள் வீழ்ந்து வணங்குதலும்; அகத்திய முனிவர் அந்த வணக்கத்தை நாராயணுக்காகட்டும் எனக் கூறி நின்ருர். 10

அடிமுறையின் வணங்கியெழும் வேதியர்தங் களைநோக்கி அரிபால் அன்பு, முடிவிலைநும் பாலென்று மொழிந்தனர்அங் கதுகாண முன்னி வந்தாம், படியதனில் உமக்குநிகர் யாருமிலை நுமைகண்ட பரிசால் யாமுந், தொடர்வரிய பேருணர்வு பெற்றெனமென் றேபின்னுஞ் சொல்லல் உற்ருன்.

தமது பாதங்களில் வீழ்ந்து வணங்கி எழுகின்ற பிராமணர்களை நோக்கி, நாரணன்பால் உங்களுடைய அன்பினுக்கு முடிவில்லை என்று பலர் சொன்னுர்கள்; அதை நேரில் காணும்படி நினைந்து வந்தோம்; இப்பூமியிலே உமக்கு நிகராவார் யாருமில்லை; உம்மைக் கண்ட பரிசால் எமக்கும் எந்நாளும் நினையாத பேருணர்வைப் பெற்றுக்கொண்டோம் என்று கூறி; பின்னரும் சொல்லலுற்ருன் அகத்திய முனிவன். 11

முத்திதரு பேரழகர் திருமலையி னிடையுற்றேம் முன்னம் இன்னே, அத்திகிரி தனிலிருப்பச் செல்கின்றேம் நம்பெருமான் அமருங் கோயில், இத்தலமேல் உளதென்பர் அதுபரவும் விருப்புடையோம் என்ன அன்னோர், கைத் தலத்தோர் விரற்சுட்டி அது திருமால் இருக்கையெனக் காட்டலுற்ருர்.

முத்தியினைத் தருகின்ற பேரழகர் திருமலையிடத்து நாம் இருந்தோம்; இப் பொழுது அத்திமலைதனில் இருக்கும்படி நாம் செல்கின்றேம்; எம்பெருமான் நாராயணன் அமர்கின்ற கோயில் இந்த ஊரினில் உளது என்று சொல்வார்கள்; அத்தலத்தை வணங்கும் விருப்பமுடையோம்; என்று பாகவத வேடங்கொண்ட அகத்திய முனிவர் கூற; அதுகேட்ட வைணவப் பிராமணர்கள் கையிடத்தாக வுள்ள விரலால் தமது கோவிலைச் சுட்டிக்காண்பித்து அதுதான் திருமாலின் இருப்பிடம் எனக் கூறிநின்ருர். 12

காட்டுதலுங் கைதொழுது மாலுறையும் மந்திரத்தைக் கடிது நண்ணி, ஈட்டமுடன் வலஞ்செய்து கண்ணபிரான் அடியிணையை இறைஞ்சி யேத்திப், பாட்டிலுறு தொல்லடியார் தமைநோக்கி இவரை வழி படுதற் குள்ளம், வேட்டனமால் மஞ்சனமே முதலியன கொணர் மின்கள் விரைவின் என்ருன்.

வைணவப் பிராமணர்கள் அகத்திய முனிவருக்குக் கையால் சுட்டிக் காட்டு தலும்; அகத்தியமுனிவர் கைகூப்பித் தொழுது திருமால் உறையுங் கோவிலை விரைவாக அடைந்து; அங்கு நின்ற வைணவப் பிராமணர் கூட்டத்துடன் கோயிலை வலஞ்செய்து; கண்ணபிரானின் திருவடி மலர்களை வணங்கித் துதித்து; தமது பக்கராக நின்ற; முன்னர் பூசை புரிந்த திருமாலின் அடியாரைப் பார்த்து; இப் பெருமானை வழிபட்டுப் பூசை புரிதற்கு யாம் உள்ளம் விரும்பினேம்; அதற் குரிய திருமஞ்சன நீர் முதலிய திரவியங்களை விரைவுடன் கொண்டு வருவீராக எனக் கூறினுர். 13

நன்றெனவே சிலரேகித் தூயதிரு மஞ்சனமும் நறுமென் போதும், மன்றலுறு செஞ்சாந்தும் அணித்துகிலும் ஏனையவும் மரபிற் கொண்டு, சென்றுமுனி வரன்முன்னம் உய்த்திடலும் அனையவர்தந் திறத்தை நோக்கி, இன்றிவரை யருச்சனைசெய் விதிமுறையைப் பார்த்திடுங்கள் யாரு மென்றே.

நன்று என்று கூறிவிட்டுச் சிலர் சென்று: தூயதான திருமஞ்சன நீரும் வாசனை பொருந்திய மெல்லிய பூவும்; வாசம் கமழும் சிவந்த சந்தனமும்; அழகிய பட்டாடையும் ஏனைய பூசனைக்குரிய பொருளும் முறைப்படி விரைவுடன் கொண்டு சென்று; அகத்தியமுனிவர் முன்பு சேர்த்தலும்; அங்கு நின்ற வைண வப் பிராமணர்கள் கூட்டத்தை அகத்தியமுனிவர் பார்த்து; யான் இன்று இந்த மூர்த்தியை அருச்சனை செய்கின்ற விதிமுறையை எல்லீரும் நீங்கள் பார்த்திடுங் கள் எனக் கூறி; 14

அறுகுமதி நதிபுனையுஞ் செஞ்சடையெம் பெருமானை அகத்துட் கொண்டு, சிறுகுமுரு வுடையமுனி நாரணனுர் திருமுடிமேற் செங்கை யோச்சிக், குறுகுகுறு கெனஇருத்தி ஒள்ளரக்கிற் புனைபாவைக் கோல மீது மறுகுதழல் உற்றென்னக் குழைவித்தோர் சிவலிங்க வடிவஞ் செய்தான்.

அறுகு இளம்பிறை கங்கை அணிந்த செஞ்சடையுடைய எம்பிரானை; சிறிய திருவுருவமைந்த அகத்திய முனிவர் தமது திருவுள்ளத்துத் தியானித்துக்கொண்டு; நாராயணப் பெருமானின் திருவுருவத்தின் மேலாக; தமது சிவந்த கையை வைத்து; குறுகு குறுகுவெனச் சொல்லி அமர்த்தி; மென்மையான மெழுகினுற் செய்யப்பெற்ற பாவையின்மேல்; காயும் நெருப்புப்பட்ட தன்மைபோலக் குழையப்பண்ணி; அந்தத் திருமால் உருவச் சிலையால் ஒரு சிவலிங்க உருவஞ் செய்தார் அகத்திய முனிவர். 15

அல்லிமலர்ப் பங்கயனும் நாரணனும் எந்நாளும் அறியொணுதை, எல்லையிலாப் பரம்பொருளைத் தாபித்து மந்திரங்க ளெடுத்துக் கூறித், தொல்லையுருக் கொண்டுமலர் மஞ்சனமே முதலியன தூய ஆக்கி, ஒல்லைதனில் அருச்சிப்பக் காண்டலும்அவ் வந்தணர்கள் உருத்துச் சொல்வார்.

இவ்வாறு செய்துகொண்ட சிவலிங்கமீதில்; அகவிதழ் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவரும், நாராயணக் கடவுளும்; எந்தநாளும் அறியொணுதை எல்லைகாண்பரிய பரம்பொருளான சிவபிரானைப் பிரதிட்டை செய்து; மந்திரங்களை வெளிப்படையாகச் செபித்து; தமது பழைய உருவத்தை இப்பொழுது அகத்திய முனிவர் எடுத்துக்கொண்டு; பூக்கள் திருமஞ்சன நீர் முதலியவற்றைத் தூயதாகும்படி செய்து; மிகு விரைவுடன் எம்பிரானை அகத்திய முனிவர் அர்ச்சிக்கத் தொடங்க; இவற்றை வைணவப் பிராமணர் காண்டலும் உரு வந்தாற்போல் கோபங் கொண்டு சொல்வார். 16

காயத்தான் மிகச்சிறியன் முப்புரத்தை நீருக்குங் கடவுட் காற்ற, நேயத்தான் இவ்விடையே முன்வந்தான் யாமிகழ நில்லாதேகி, ஆயத்தான் பாகவத வடிவாய்வந் திச்சமயம் அழித்தான் அந்தோ, மாயத்தான் பற்றுமினே கடிதென்று குறுமுனியை வளைந்து கொண் டார்.

பார்த்தால் இவன் வடிவத்தால் மிகவுஞ் சிறியவன்; ஆனுல், முப்புரங்களையும் சிரிப்பினுல் எரித்து, நீருக்கும் கடவுள் சிவனுக்கும் மிகவும் நேயமுடையவன்; இவ்விடத்தே இவன் முன்பு ஒருமுறை வந்தான; யாம் இவனை இகழ்ந்து கூற, நில்லாது திரும்பிச் சென்று; பின்னர் நாங்கள் கண்டால், உபசரிக்கும்படி பாகவத வடிவத்தைக் கொண்டு வந்து; இச்செயலைச் செய்து; இந்த வைணவ சமயத்தை அழித்தான் இவன்; ஐயகோ! இவன் மாயமுடையவன் தப்பிப் போகாதபடி விரைவுடன் பற்றிக்கொள்ளுங்கள்; என்று கூறி எல்லா வைணவப் பிராமணர்களும் அகத்திய முனிவரை வளைந்துகொண்டார்கள். 17

பற்றிடுவான் வளைகின்றோர் தமைநோக்கி எரிவிழித்துப் பரவை தன்பால், உற்றவிடம் விடுத்ததென முனிவன்றன் வெகுளித்தீ உய்த்த லோடுஞ், சுற்றியது சுற்றியவர் தமைப்பின்னும் பொறிபடுத் தித் துரந்து செல்ல, மற்றவர்கள் இரிந்தேதம் பதியிழந்து சிதறின ரால் மண்மே லெங்கும்.

பிடிக்கும்படியாக அகத்தியமுனிவரை வளைந்து சுற்றிக்கொள்ளுகின்றோர் களை கண்ணில் அக்கினி தோன்றும்படி உரக்கப் பார்த்து; பாற்கடலானது நஞ்சை அவ்விடத்துக் கக்கியுள்ளது எனும்படி தமது கோப நெருப்பைக் கண் மூலமாகச் செலுத்துதலோடும்; அந்த நெருப்புச் சென்று அப்பிராமணர்களை வளைந்து சுற்றியது; வளைந்து சுற்றிக்கொண்ட நெருப்பு மேலும் சுட்டுச் சுட்டுக் கலைத்துச் செல்ல; அவர்கள் யாவரும் பயந்தோடி அந்த ஊரில் தமது இருப்பிடத்தை விடுத்து நீங்கிப் பூமி எங்குஞ் சிதறிச் சென்றார்கள். 18

அன்னோர்கள் போயிடலும் இன்றுமுதல் சிவன்இடமீ தாயிற் றென்று, முன்னோனை அருச்சித்துப் பணிந்துவிடை கொண்டுதென் பால் முன்னிச் சென்று, பொன்னோடு மணிவரன்றி அருவியிழி தரு பொதியப் பொருப்பில் நண்ணி, மன்னோமெய்த் தவம்புரிந்து வீற்றி ருந்தான் அப்பரமன் மலர்த்தாள் உன்னி.

அந்த வைணவப் பிராமணர்கள் சிதறி ஓடிப்போய்விடலும்; இந்த இடம் இன்று முதல் சிவபெருமான் கோயில் ஆயிற்றது என்று; முன்னைப் பழம்பொருளான சிவபிரானை அகத்தியமுனிவர் அங்கு அருச்சித்து பணிந்து விடை பெற்றுக்கொண்டு, தென்திசையை நோக்கிச் சென்று; பொன்னோடு இரத்தினக் கற்களையும் அருவியாறுகள் திரட்டிக்கொண்டு வழிந்தோடும் சிறப்பினையுடைய பொதிய மலையிற் சென்று சேர்ந்து, தன்னை அங்கு செல்ல வைத்த கருணைக் கடலான சிவபிரானின் திருவடி மலர்களைத் தியானித்துக்கொண்டு மேலான தவத்தினை அங்கு செய்திருந்தார். 19

வேறு

பூவிரி கின்ற காமர் பொதும்பர்சேர் பொதிய வெற்பில்
தாவிரி கும்பத் தண்ணல் வந்திடு தன்மை சொற்றும்
மாவிரி கின்ற சாதி வனத்திடை மலர்ப்பூங் காவில்
காவிரி போந்த வாறும் ஏனவுங் கழறு கின்றாம்.

எம்பிரானே பன்னிரு புயவா! இதுகாறும் தேவரீருக்குப் பூக்கள் மலர்ந்து விளங்குகின்ற அழகிய பூஞ்சோலைகள் நிறையப் பெற்ற பொதியமலையில் குற்றம் நீங்கிய கும்பத்திடத்துத் தோன்றிய அகத்திய முனிவர் வந்திட்ட தன்மையைச் சொல்லியருளினோம். இப்பால் திருநிறையப் பெற்ற சீகாழி என்னும் வனத்திடத்தாக இருக்கின்ற இந்திரதேவனுடைய மலர்கள் நிறையும் பூஞ்சோலையிடத்து; வாட்டம் நீங்கக் காவிரியாறு வந்த வரலாற்றையும் பிறவற்றையும் சொல்லியருள்வோம் என வியாழ பகவான் மீண்டும் சொல்லத் தொடங்குவார். 20

திருக்குற்றாலப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1353.

# 29. இந்திரன் அருச்சனைப் படலம்

கொடியுருக் கொண்டு முன்னங் குண்டிகை இருந்த பிள்ளை
படிமிசை அதனைத் தள்ளப் படர்ந்தகா விரியின் றன்மை
விடலருந் தளையின் நீக்கி வியனெறிப் படுத்த லோடும்
அடிகளின் அருளாற் செல்லும் ஆருயிர் போன்ற தன்றே.

காகத்தின் உருவம் கொண்டு முன்பு அகத்திய முனிவரது கமண்டலத்து இருந்த மூத்த திருக்குமாரரான விநாயகக் கடவுள்; நிலமிசையாக அந்தக் கமண்டலத்தைக் கவிழ்த்துவிட; அதனால் வெளிப்பட்டுப் பாய்ந்தோடிய காவிரியாற்றின் தன்மை எப்படியாயிற்றென்றால். நீக்கமுடியாத பந்தங்களில் நின்று நீக்கப் பட்டு; மேலான ஞான ஆசார நெறியின் நிறுத்திய குருபரனின் அருளின்படி வழிப் பட்டு வாழ்கின்ற மேலான ஓர் உயிரின் தன்மையை ஒத்தது.

ஞான குருவின் அருட்பார்வையான தீக்கையால் பக்குவமுள்ள ஓர் உயிர் உலக பந்தங்களை விடுத்து மேலான இன்பநெறியில் நிலைபெறுதல் போன்று அகத்திய முனிவன் கமண்டலத்தே பந்திக்கப்பட்ட காவிரி; விநாயகக் கடவுளால் கமண்டலம் கவிழ்க்கப்படலால் தனது கட்டு நீங்கிப் பூவுலகில் படர்ந்தோடியது.

உலக பந்தங்களில் விடுபட்டனர் ஞானிகள் என்பதை,

தந்தை தாய் மைந்தர் தமர் தாரம் என்று அடியேன்
பந்தத்தில் பட்டு பாழாகிப் போகாமே சிந்தை தெளிவித்து; எனவும்
நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனை ...........
......... சிவநெறியே சேரும் வண்ணம். எனவும் வரும் பெரியோர்
வாக்கியங்களால் உணர்க, 1

பண்டொரு தந்தி யானேன் படர்சிறைப் புள்ளாய்த் தள்ளக்
குண்டிகை இருந்த நீத்தங் குவலயம் படர்ந்த பான்மை
எண்டருந் தடையால் வல்லோன் இருங்கடத் திட்ட பாந்தள்
மண்டலத் தொருவன் நீப்ப வழிக்கொளல் போன்ற தன்றே.

இன்னமும்; முன்னர் ஒரு யானை வடிவான விநாயகப் பெருமான் படர்கின்ற சிறகுகளை உடைய காகமாகி கமண்டலத்தைத் தள்ள; அந்தக் கமண்டலத்துள் இருந்த காவிரியெனும் தீர்த்தமானது இப்பூமியில் சென்ற தன்மை எப்படியெனில்; யாவரும் பெருமையுடன் நினைக்கும்படி பாம்பினை; ஓடமுடியாது மந்திரத்தினால் தடுத்து ஓரிடத்தில் வைக்கவல்ல ஒரு மந்திரவாதியானவன்; அவ்வாறு பெரிய குடத்துள் இட்டு வைத்திருந்த பாம்பை; இப்பூமியில் ஒருவன் அக்குடத்தினின்றும் நீக்கிவிட; அப்பாம்பு வெளியில் வேகத்துடன் ஓடிச்செல்வது போன்றும் இருந்தது. 2

ஏதத்தின் ஒழுக்கு நீக்கும் இறைவனால் ஒழுக்குந் தொல்லை
வேதத்தின் ஒழுக்கும் நோற்று வீட்டினை அடையும் நீரார்
போதத்தின் ஒழுக்கும் எங்கோன் புரிதரு கருணை யென்னும்
ஓதத்தின் ஒழுக்கு மென்னக் காவிரி யோடிற் றன்றே.

மனிதனிடத்துக் காணப்படும் துன்மார்க்கத்திற்குரிய குறைபாடுகளை நீக்கி விடுகின்ற சிவாகம நூலில் சொல்லிய ஒழுக்கத்தையும்; முந்திய வேத நூலில் சொல்லிய ஒழுக்கத்தையும்; தவம் செய்து முத்தி இன்பத்தை அடைய இருக்கும் நிலையைப் பொருந்தியவரது ஞான ஆசார ஒழுக்கமும்; எங்கள் பெருமான் எமக்குப் புரிந்தருளுகின்ற கருணை என்னும் சமுத்திரத்தின் பெருக்கத்தையும் போல, காவிரியாறு ஓடியது. 3

தள்ளரும் பரவை ஏழுந் தரணியைச் சூழ்ந்து நின்ற
உள்ளுறு தொடர்பு நாடி யாவையும் ஒருங்கு நண்ணிப்
பொள்ளெனப் புகுந்த தென்னப் புவியெலாம் பரவி ஆர்த்துத்
தெள்ளிதிற் கலங்கி நீத்தந் தெளிகிலா தொழுகிற் ருமால்.

நீக்குதற்கரிய ஏழு சமுத்திரங்களும் பூமியைச் சூழ்ந்து வெவ்வேருக நிற்கின்றமையால் பூமியிடத்து நமக்குத் தொடர்பு உண்டு என்பதை உணர்ந்து எல்லாச் சமுத்திரங்களும் திரண்டு வந்து ஒருங்கே விரைவில் இவ்விடத்தில் புகுந்தது என்னும்படியாகப் பூமி எல்லாம் காவிரியாறு பெருகிப் பரந்து இரைந்து, விரைவில் கலங்கி அந்நீரானது தெளிகிலாது ஓடிக்கொண்டிருந்தது. 4

தெண்டிரைப் புணரி யெல்லாந் தினைத்துணை யாக வாரி
உண்டருள் முனிவன் தீர்த்தம் ஒன்றினை வேண்டு மெல்லை
அண்டர்தம் பெருமான் நல்க அன்னவன் கரத்தி லேந்துங்
குண்டிகைப் புனற்கு நேராக் கூறுதற் குவமை உண்டோ.

தெள்ளிய திரைகளையுடைய சமுத்திரங்கள் யாவும் தினையளவாகும்படி வாரி வாயில் இட்டு உண்ட அகத்திய முனிவன் தனக்கு ஒரு தீர்த்தம் வேண்டுமென்று எம்பிரானைக் கேட்டருளிய நேரத்தில் தேவாதிதேவர்க்கெல்லாம் பெருமான், சிவன் கொடுத்தருள; அந்த அகத்திய முனிவன் கையில் ஏந்துகின்ற கமண்டலத்தில் கொள்ளப்பெற்ற காவிரி நீருக்கு நேராகக் கூறுவதற்கு ஓர் உவமையும் உண்டோ இல்லை என்பதாம் ஏழு கடல்களையும் உண்ட அகத்திய முனிவன் நீர் வேண்டுமென, சிவபிரான் காவிரியைக் கொடுப்ப, தனது கமண்டலத்து ஏற்றுக்கொள்ளப்பெற்றதால் அக்காவிரி எத்துணைப் பெருமையும் வலிமையும் உடையதாக இருக்கும்; உலகில் ஏழு கடல்களையும் உண்டவன் பெற்றது இது ஆகவே, இதற்கு வேறு உவமை இல்லை; சொல்லமுடியாது என்ருர். 5

தொல்லையிற் குறியோன் வந்தான் துய்க்குமோ இன்னு மென்ன
வல்லையில் தழைகள் பற்றி வாரிதி கூவிப் பாரின்
எல்லையிற் படர்ந்த தென்ன இலைசெறி பொதும்பர் ஈட்டம்
ஒல்லையிற் பரித்து மேல்கொண் டோடிய தொலிகொள் நீத்தம்.

முன்னர் தன்னை கமண்டலத்துள் அடக்கிய அகத்திய முனிவன் திரும்பவும் வருகிருன். ஆகவே, இன்னமும் என்னை கமண்டலத்தோடு அடக்கிக்கொள்வானே என்று விரைவிடன் தழைகளைப் பற்றிக்கொண்டும் சமுத்திரதை துணைக்குக் கூவி அழைத்துக்கொண்டும் விரைவுடன் காவிரியாறு ஓடிச்செல்கிறதோ என்பதுபோல இலைகள் செறிந்த சோலைகளை எல்லாம் விரைவுடன் வேரோடு சாய்த்து நீர்மேல் தாங்கிக்கொண்டு ஓடிச்சென்றது ஒலிபெருக்குகின்ற காவிரியாறு. 6

சந்தமும் அகிலுஞ் சங்குந் தரளமுங் கவரி தானுஞ்
சிந்துரத் தெயிறும் பொன்னும் மணிகளுந் திரைமேற் கொண்டு
வந்திழி நதியின் தன்மை வருணன்இப் பொருள்க ளெல்லாம்
இந்திரன் தன்பால் ஓச்ச ஏகுதல் போன்ற மாதோ.

சந்தனமும், அகிலும், சங்கும் முத்தும், சாமரை தன்னையும், யானைக் கொம்பும், பொன்னும், இரத்தினங்களும், திரைமேல் சுமந்து கொண்டு, ஓடி வருகின்ற தன்மை எப்படிப்போலும் எனில், வருணதேவன் சொல்லப்பட்ட இப் பொருள்கள் எல்லாவற்றையும் சீகாழி வனத்தில் இருக்கும் இந்திரன்பால் செலுத்தவேண்டி அவை யாவும் ஆற்று நீரில் மேலாகச் செல்லுகின்றன எனும் படியாயது. 7

வரையெனுந் தடம்பொற் றேரும் மதகரித் தொகையும் மாந்தர்
நிரைகளுந் தரங்க மாவும் நெறிக்கொடு மகவான் தன்பால்
விரைவொடு சேறல் சூரன் விண்ணவர்க் கரசன் மீது
பொரவிடு தானை வெள்ளம் போவன போன்ற தன்றே.

மலைகள் எனும் விசாலித்த பொன்னனை தேரும்; மதம் பொழியும் யானைகளின் தொகையும்; மனிதர் என்கின்ற காலாட்படையும்; குதிரைகள் என்னும் விலங்குகளும்; ஆகிய இவைகள் ஆற்று நீரால் வாரப்பட்டு இந்திரன்பால் சீகாழிக்கு முறையே விரைவுடன் போகும் தன்மை சூரபன்மனனவன் இந்திரன்பால் போர் செய்யவிடுத்த தேர்ப்படை, யானைப்படை, காலாட்படை, குதிரைப்படை, என்னும் நான்குவகைச் சேனையின் வெள்ளங்கள் போவதுபோன்று இருந்தது. 8

ஆவதோர் இனைய வாற்றால் அலையினால் அகல்வான் முட்டிக்
காவதம் பலவாய் ஆன்று காசினி அளந்து கீழ்பாற்
போவதோர் பொன்னி நீத்தம் புரந்தரன் இருந்து நோற்குந்
தாவறு வனத்திற் போதார் தண்டலை புகுந்த தன்றே.

இவ்வாறு கூறப்பட்ட இந்த இயல்புகள் அமையக் காவிரியாறு தனது திரைகளினால்; அகன்ற வானம் முட்டும்படி ஓங்கிப் பெருகி; பலகாதவ தூரம் வரை அகன்று பெருகுதலால் இப்பூமியின் பரப்பை அளவிடுதல் போன்று; கிழக்குத் திக்கை நோக்கிச் சென்று கொள்வதாய்; தேவேந்திரன் இருந்து தவம் செய்கின்ற குறைவு நீங்கிய சீகாழி வனத்திலுள்ள பூக்கள் நிறைந்த பூஞ்சோலையைப் புகுந்ததன்றே 9

ஓடுநீர் நீத்தப் பொன்னி யொல்லையிற் காமர் காவில்
பீடுற வருத லோடும் பேதுறு மகவான் காணா
ஆடினன் நகைத்தான் எங்கோன் அருச்சனை முடிந்த தென்று
பாடினன் முதல்வன் றனைப் பரவினன் படர்ச்சி தீர்ந்தான்.

பாய்கின்ற நீர் வெள்ளத்தையுடைய காவிரியாறு; விரைவில் அழகிய பூஞ்சோலையில் பெருமையுடன் வருதலோடும்; இதுகாலவரையில் மனம் பேதுற்று நின்ற இந்திரன் அருளினால் வரும் காவிரியின் வரவைக் கண்டு; எழுந்து, துள்ளி ஆடினான்; சிரித்தான்; எமது பெருமானுடைய அருச்சனை முடிந்தது என்று பாடினான்; முதல்வராகிய விநாயகப்பெருமானைத் துதித்தான்; தனது கவலை யாவும் நீங்கினான். 10

சீரினை யகற்றி நீங்காத் திருவினை மாற்றித் தொல்பேர்
ஊரினைக் கவர்ந்து தன்னோர் உயிருக்கும் இறுதி நாடுஞ்
சூரனை வென்றால் என்னத் தொலைவிலா மதர்ப்பு மிக்கான்
ஆரவன் உளத்திற் கொண்ட உவகையை அறைதற் பாலார்.

தனது சிறப்பை நீக்கி; எக்காலத்தும் நீங்காத தனது செல்வத்தை அழித்து; தனது தொன்றுதொட்டுச் சிறப்புடன் இருந்த ஊரினைக் கைப்பற்றி; தனது உயிருக்குக் கூட முடிவினைச் செய்யும்படி நினைந்துகொண்டிருக்குஞ் சூரபன்மனை வென்றுகொண்டான் எனும்படியான; அழிவிலாத ஆனந்தம் கொண்டான்; ஆர் தான் அந்த இந்திரன் உள்ளத்தில் கொண்ட மகிழ்ச்சியைப் பற்றி எடுத்துக் கூறமுடியும். 11

பாடுறு பொன்னி நீத்தம் பாய்தலும் மகவா னேபோல்
வாடுறு கின்ற தண்கா வல்லையிற் கிளர்ச்சி யெய்தி
ஆடுறு பசிநோ யுற்றோர் அரும்பெறல் அமிர்தம் வந்து
கூடுற நுகர்ந்தால் என்னக் குளிர்ப்பொடு தளிர்த்த தன்றே.

பெருமை உற்றதான காவிரியாற்று நீர் பாய்தலும்; இந்திரனைப்போல் வாடுகின்ற குளிர் தரும் பூஞ்சோலையானது மிக விரைவுடன் செழிப்புற்று; வருத்துகின்ற பசிநோய் அடைந்தார்கள் பெறுதற்கரிய தேவாமிர்தம் உண்ணும் படி வலிய வந்து கைகூட; அதனை உண்டுகொண்டார்போல் குளிர்ச்சியோடு பூஞ்சோலை தளிர்த்தது. 12

வானிறை கின்ற கொண்மூ வார்துளி தலைஇய பின்றைக்
கானிறை மரனும் பூடும் வல்லியுங் கவின்று லென்ன
மேனிறை அடைகள் மல்கி விரிதரு சினையும் போதுந்
தானிறை கின்ற தம்மா சதமகன் வளர்த்த பூங்கா.

வானத்தில் நிறைகின்ற மழை பெய்யும் மேகங்களில் எழுகின்ற நீண்ட துளிகள் கோடைகாலத்தின் பின் முதற் பெய்தலாகி; பெய்த நேரத்து காட்டில் நிறைந்திருக்கும் மரங்களும்; பூடுகளும்; கொடிகளும் தளிர்த்து பூத்தால் ஒப்ப; இந்திரன் வளர்த்த பூஞ்சோலையும் வாடிய மரங்கள் நீர் பெறுதலாலே அழகிய குருத்துக்களை விடுத்து இலைகளுடன் தளிர்த்து; பின்னர் பரந்து விரிந்து காணப்பெறும் மொட்டுக்களும் பூவுமாக நிறைகின்றது. 13

வேறு

வானில மளவிட வளர்ந்த புன்னைகள்
ஆனவை முழுவதும் அரும்புகின்றன
தூநகை நிலத்திலத் தொடையல் மெய்யுடை
நீனிற மாயவன் நிலைஇய தொக்குமால்.

இப்பூஞ்சோலையில் இப்பொழுது வான நிலத்தை அளவிடுவதற்கு வளர்ந்துள்ளன போன்று உயரமாக வளர்ந்துகொண்ட புன்னை மரங்களானவை முழுவதும் மொட்டுகள் விட்டு அரும்பி நிற்கின்றன; எதுபோலும் எனில், தூய்மையான ஒளியுடைய முத்துமாலையை அணிந்த மேனியுடைய நீல நிறங்கொண்ட நாராயணக் கடவுள் நிலைபெற்று நிற்கும் காட்சி போன்றது. 14

தண்ணுறு பாசடை தயங்கு புன்னைகள்
கண்ணுறு வியன்சினை கவினப் பூத்தன
எண்ணுறு தாரகை ஈண்டி மொய்த்திட
விண்ணுறு முகிலினம் விளங்கிற் றென்னவே.

செழிப்பு உற்ற பசிய இலைகள் விளங்கப்பெற்ற புன்னை மரங்கள் தங்களிடத்தாக உள்ள பெரிய கொப்புக்கள் அழகு விளங்கப் பூத்து நின்றன; எப்படி எனில், மேன்மையுடைய நட்சத்திரங்கள் நெருங்கி மொய்த்திருக்கும்படியாக வானத்திலே முகில் கூட்டங்கள் நின்றால் போன்றது; 15

பண்படும் அளியினம் பயிலு றுதன
சண்பக அணிமரந் தயங்கிப் பூத்தன
எண்படு தபனியத் தியன்ற போதினை
விண்படு தருக்கொடு மேவல் போன்றவே.

பண்ணிசை பாடும் வண்டினங்கள் மொய்க்காதிருக்கும்படியான; அழகிய சண்பக மரங்கள் நிறையப பூத்தன; எப்படி எனில், எண்ணற்ற பொன்னினால் செய்துகொண்ட பூக்களை வானளவுயர்ந்த ஒரு மரம் தாங்கிக்கொண்டு நிற்பது போலும்; 16

புயற்பட லந்தொடும் புதுமென் பாடலம்
வியற்பட மலர்ந்தபூ விழுமென் வண்டினம்
மயற்பட ஊதுவான் வயந்தக் கம்மியன்
செயற்படு மணிச்சிறு சின்னம் போலுமால்

மேக மண்டலத்தைத் தொடுகின்ற புதுமை விளங்கும் மென்மையுடைய பாதிரி மரங்கள் இயல்புடன் நிறைய மலர்ந்த பூக்களில் விழுந்து மொய்க்கின்ற வணடினம்; தேனுண்டு மயங்கி ரீங்காரம் செய்வன எதுபோலும் எனில்; வசந்த காலத்திற்குரிய காவலன் மன்மதன் தனது தொழில் புரிவதற்கு எடுத்து ஊதுகின்ற மணிகள் பதித்த சிறிய ஊதுகுழல் போன்றதால்; 17

விண்டொடர் மதிகதிர் மிளிருந் தாரகை
கண்டிட வைகலுங் கணிப்பில் கண்ணடி
மண்டல நிரைத்துமண் மாது வைத்தெனக்
கொண்டலை யளவிய கோங்கு பூத்தவே.

வானத்தில் தொடர்ந்து செல்லும் சந்திரன், சூரியன், ஒளிர்கின்ற நட்சத்திரங்கள் ஆகியவற்றைத் தான் கண்டுகொள்ளவேண்டி; நிரைநிரையாகப் பூமிதேவி வைத்துள்ளாள் எனும்படி; மேகமண்டலங்களை அளாவும்படியாக உயர்ந்து வளர்ந்த கோங்க மரங்கள் பூத்து நின்றன. 18

மாமலர்க் கொன்றையும் மணிமென் பூவையுந்
தாமிரு புடையுறத் தளிர்த்த செய்யமா
ஏமுறு மாலயன் இடையில் வந்தெழு
தோமறு பரஞ்சுடர்த் தோற்றம் போன்றவே.

பெரிய பூங்கொத்துகளை உடைய கொன்றை மரமும்; நிலமணிபோலும் மிருதுவான காயாமரமும் இரண்டு பக்கராகவும் நிற்ப நடுவணாகத் தளிர்த்த செம்மையுடைய மாமரம் நிற்பது; தாமே பிரமமென்று இறுமாப்புற்ற நாராயணக்கடவுளும் பிரமதேவருமாகிய இருவர்க்கும் நடுவே வந்து தோன்றிய குறைவிலா நிறைவாகிய பரஞ்சோதியின் தோற்றம் போல்இருந்தது. 19

ஆதவன் மீதுபோய் அசையுந் தாழைகள்
மேதகு பாளைகள் மிசைதந் துற்றன
பூதல அணங்கினர் புனைய நீட்டிய
கோதறு நித்திலக் கோவை போன்றவே.

சூரியன் மேலாகச் செல்வோமெனும்படி வளர்ந்த தென்னை மரங்கள் மேன்மை உடைய பாளைகளை மேல் நீட்டி நிற்பன; எதுபோலும் எனில் இப் பூமிதேவியானவள் தேவப்பெண்கள் அணிந்துகொள்ளும்படி நீட்டிய குற்றமற்ற முத்துக் கோவையைப் போன்றது. 20

வச்சிர மேனிய வரைகொள் காட்சிய
பச்சிளம் பூகம்வெண் பாளை கான்றன
நச்சுறு சோலையா நங்கைக் கெண்ணிலார்
எச்சமில் சாமரை இரட்ட ஏந்தல்போல்

வச்சிரம்போன்ற வடிவத்தை உடையதும் இடையிடையே வெண்மையான வரைகள் கொண்ட தோற்றத்தை உடையதுமான; பசுமையுடன் கூடிய இளம் கமுக மரங்கள்; வெண்ணிறமான பாளைகளை விரித்து நின்றன எதுபோலும் எனில், யாவராலும் விரும்பப்படுகின்ற இந்தப் பூஞ்சோலையாகிய பெண்ணிற்கு எண்ணிலாத தோழிப் பெண்கள் குறைவிலாத வெண்சாமரைகளை வீசுதல் போன்றது. 21

மேற்றிகழ் செங்கர வீர மானவை
ஆற்றவுஞ் சினைதொறும் அரும்பு கின்றன
நாற்றடம் புயமுடை நாதற் கிந்திரன்
ஏற்றிய மணிச்சுட ரென்ன லாயதே.

மேல்நோக்கித் திகழ்ந்து வளர்ந்த சிவந்த அலரி மரங்களில் பூமொட்டுக்கள் மிகுதிப்பட எல்லாக் கொம்பரிடத்தும் அரும்புகின்றன; எப்படியெனில் நான்கு விசாலித்த தோளுடைய சிவபெருமானுக்கு இந்திரதேவன் ஏற்றிவைத்த முத்துப்போன்ற தீபச்சுடர்கள் எனும்படி காட்சியளித்தது; 22

அல்லிடை யன்றியே அலர்ந்த மாலதி
வல்லிகள் தருவெனும் மகிழ்நர் தங்களைப்
புல்லுவ பகலினும் பொருந்து மோவெனு
முல்லைகள் மலர்ந்தன முறுவல் செய்வபோல்.

இராக்காலத்தில் அல்லாமல்; நன்கு அலர்ந்து பூத்த இந்த மல்லிகைக் கொடிகள் தனது கணவனான மரத்தை அணைத்துத் தழுவுதல் பகலிலும் பொருந்துமோ; இது வெட்கமல்லவோ; என்று ஏளனமாகச் சிரிப்பதுபோன்று முல்லை மரங்கள் மலர்ந்தன. 23

ஆசறு வாவியில் அலர்ந்த காவிகள்
பாசடை யிடையிடை பரவு கின்றன
தேசுறு தருநிழல் திருவில் துஞ்சிய
வாசவன் விழிகளின் மல்கு கின்றவே.

குற்றமில்லாத குளங்களில் மலர்ந்த நீலோற்பல மலர்கள்; நெருங்கிய பசிய இலைகள் இடைஇடையே பரவி மலர்ந்து நிற்பன; எதுபோலும் எனில், பிரகாசமுடைய தேவ விருட்சங்களின் நிழலில் செல்வத்துடன் தங்கி வாழ்கின்ற நீலநிறங் கொண்ட இந்திரதேவனுடைய மேனி எங்கும் காணப்படும் கண்களைப் போன்றிருப்பன. 24

தொல்லையின் முறைநெறி யொருவித் தோயமேல்
வல்லையில் அங்கிகள் வந்துற் றுலென
அல்லியுஞ் சேயன அரத்த ஆம்பலும்
புல்லிய கிடங்கினிற் பொலிந்து பூத்தவே.

முன்னுள்ள தோற்றமுறையில் நெருப்பினின்றும் நீர் தோன்றியது; இப்போது பழைய அந்த முறை ஒழுக்கத்தை நீக்கி; நீர்மேலாக விரைவுடன் நெருப்புச் சுடர்கள் தோன்றி நின்றாற்போல்; செவ்வல்லி மலரும், சிவந்த ஆம்பல் பூவும் சிறுகிய நீர் நிறைத்த கிடங்குகளில் பொலிவுடன் பூத்து நின்றன. 25

பாயிரும் புனற்கயம் பரந்த பாசடை
ஆயின இடையிடை அவிழ்ந்த பங்கயச்
சேயலர் வண்டினந் திளைப்பச் சேர்வன
காயெரி புகையொடு கானம் புக்கபோல்.

அகன்ற பெரிய நீர் நிரம்பிய குளங்களில் பரந்த பசிய இலைகளின் இடை இடையே முகையவிழ்ந்து மலர்ந்த செந்தாமரைப் பூக்கள் மேலாக வண்டுகள் கூட்டமாக மொய்ப்ப காணப்படுவன; எதுபோலும் எனில், சுடுகின்ற நெருப்பு புகையோடு பசுமை பொருந்திய காட்டினில் புகுந்தது போன்றிருந்தது. 26

எண்ணுமித் தருக்களுங் கொடியும் ஏனவுங்
கண்ணுற மலர்வதும் அரும்புங் காட்சியும்
வண்ணம தெற்றெனின் மாலைச் செக்கரும்
விண்ணுறும் உடுக்களும் விரவிற் றொக்குமால்.

சொல்லப்பட்ட இந்த மரவகைகளும் கொடிகளும் மற்றைய நீர்ப் பூக்களும்; யாவரும் கண்டுகொள்ளும்படி பூப்பனவும் அரும்புவனவுமாகிய காட்சி களின் வண்ணம் எப்படியாயிற்றெனின்; மாலை நேரத்துத் தோன்றுகின்ற செக்கர் பொழுதும் வானத்தில் விளங்கும் நட்சத்திரங்களும் கலந்து இருக்கும் காட்சி போன்றிருப்பது போலும். 27

இந்திரன் மகிழ்வுற இனைய பான்மையால்
நந்தன வனமெலாம் நன்று பூத்தலும்
அந்தநன் மலர்கொடே யாதிக் கன்பினால்
முந்துறு பூசனை முயல முன்னினான்.

இந்திரன் மகிழ்வுறும்படி இனைய தன்மையால் நந்தனவனமெலாம் நன்றுடன் பூத்தலும்; அந்த நல்ல பூக்களை ஆய்ந்துகொண்டு, ஆதியான பெருமானுக்கு அன்பினால் முன்பு தான் முயன்று செய்து வந்த பூசனையை விநாயகப் பெருமானின் நல்லருளால் மீண்டும் செய்வதற்கு இந்திரன் எண்ணினான். 28

விடியல்வை கறைதனின் மேவி வண்டுதேன்
புடையுறு முன்னரே புரையி லாததோர்
கடிமலர் கொய்தனன் கொணர்ந்து கண்ணுதல்
அடிகளில் விதிமுறை அருச்சித் தானரோ.

இந்திரதேவன் இரா விடிகின்ற வைகறைப் பொழுதில் எழுந்து சென்று; வண்டுகள் தேனை உண்பதற்கு முன்னாக; குறைவொன்றும் இலாத நல்ல வாசனையுடைய பூக்களைத் தெரிந்து ஆய்ந்துகொண்டு வந்து; சிவபெருமானது திருவடிகளில் சாத்தி விதிமுறை அருச்சனை புரிந்தான். 29

அப்பெரு நாண்முதல் ஆதி அண்ணலை
இப்படி அருச்சனை இயற்றி வைகலும்
ஒப்பற நோற்றரோ உம்பர் கோமகன்
வைப்புறு சண்பக வனத்தின் வைகினான்.

அவ்வாறாகச்; சிவார்சனை மீண்டும் தொடங்கப்பெற்ற அந்த பெருநாள் முதலாக; ஆதியான பகவானை சிவபிரானை இப்படி விதிமுறையே அருச்சனை புரிந்து; நித்தலும் பிறரொருவரும் ஒப்பிலாவகையால் தவஞ் செய்துகொண்டு; இந்திர தேவன் தான் வைத்து உண்டாக்கிய பூஞ்சோலையை உடைய சண்பகவனம் எனப் பேர்பெறும் சீகாழிப் பதியில் வீற்றிருந்தான். 30

**இந்திரன் அருச்சனைப் படலம் முற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம் 1383.

805

# 30. தேவர் புலம்புறு படலம்

அந்நாள் அதனில் அவுணர்க் கிறைஏவல்
தன்னுன் மிகவுந் தளர்ந்து சிலதேவர்
எந்நாள்இப் புன்மை எமைநீங்கும் என்றிரங்கிப்
பொன்னுடு விட்டுப் புவிதன்னிற் போந்தனரே.

அவ்வாருகிய நாட்கள் அதனிலே; அசுரர்க்கரசனுன சூரபன்மனின் ஏவற் தொண்டுகளைச் செய்தமை தன்னுல் மிகவுந் தளர்வு அடைந்த சில தேவர்கள்; ஐயோ! எந்நாளில் தான் எமக்குற்ற இச்சிறிய இழிதொழில் எம்மைவிட்டு நீங்கும்: என்று இரங்கித் துயருற்று; தேவ உலகை விடுத்து நீங்கிப் பூமிதன்னில் வந்தார்கள். 1

தீந்தமிழின் வைப்பான தெக்கிண தேயநண்ணி
மாந்தர்புகழ் காழி வனம்போந்து வானவர்தம்
வேந்துதனைக் கண்டு விரைநாண் மலரடிக்கீழ்
போந்து பணிந்து புகழ்ந்து புகல்கின்றுர்.

இனிய தமிழின் வைப்பிடமெனப்படும் தென்னுடு சேர்ந்து; பெரியோரால் புகழ்ந்து கூறப்படும் சீகாழி வனத்தைச் சேர்ந்து; தேவர்க்கரசனுன இந்திரனை அங்கு கண்டு; அவனது வாசம் கமழும் தாமரை மலரை ஒத்த திவ்விய பாதங்களின் கீழாகச் சென்று பணிந்து; புகழ்ந்து துதித்து இவ்வார்த்தை சொல்கின்றுர். 2

ஒன்றே தருமம் ஒழிந்து புவனமெலாஞ்
சென்றே அடுகின்ற தீயவுணர் தந்துடக்கில்
அன்றே எமைவிட் டகன்ருய் உனக்கிதுவும்
நன்றே எமையாளும் நாயகனும் நீயன்றே.

உலகில் பெரியோரால் மேலானது தருமம் ஒன்றுதான் என்பதை நீக்கி; உலகம் எல்லாஞ் சென்று கொலை புரிகின்ற கொடிய அசுரர்களுடைய தொடர்ச்சியில்; அன்றே எம்மை விட்டுவிட்டு நீ மட்டும் அகன்ருய்; அரசே! உனக்கு இதுவும் நன்ருமோ; எமையாண்டு நல்நிலைப்படுத்தும் தலைவனும் நீயன்றோ? 3

கோட்டுக் களிற்ருேடுங் கோளரியோ டும்புவியை
வாட்டுற் றிடுஞ்சூர வல்லியத்தின் வன்சிறையில்
ஈட்டுற்ற தேவர் எனும்பசுக்கள் தம்மையெலாங்
காட்டிக் கொடுத்துக் கரந்ததென்கொல் காவலனே.

கொம்பினை உடைய யானை முகங்கொண்ட தாரகாசூரனேடும்; கொடிய சிங்கமுகாசூரனுடனும் இப்பூமியை வாட்டி நிற்கின்ற சூரன் என்னும் புலியினது கொடிய வலிமையுடைய சிறையிலே; அகப்பட்டுக் கொண்ட தேவர்கள் என்னும் பசுக்களை எல்லாம் நீங்கள் உங்கள் இஷ்டப்படி துயருறுத்துங்கள்; என்று எம்மைக் காட்டிக்கொடுத்துவிட்டு; அரசே நீர்மட்டும் ஒளித்தோடி மறைந்து வந்தது என்ன காரணமாகும் எங்கள் காவலனே சொல்வாயாக. 4

ஏனும் பசுமான் இரலை மரைபடுத்த
ஊனும் வடியும் ஒலிகடலின் உள்ளபல
மீனுஞ் சுமந்து விறலசுரர்க் கேவல்செய்து
மானங் குலைந்து மறந்தோம் மறைகளுமே.

பன்றி, பசு, மான், கலைமான், மரை இவற்றைக் கொன்ற இறைச்சியையும் கள்ளையும்; ஒலிக்கின்ற கடலிடத்துள்ள பல மீனையும் சுமந்து; இப்படியாக வலிமை உடைய அசுரர்க்கு நாம் ஏவல் செய்து எங்கள் மானம் போனதன்றி, வேதங்களையும் மறந்தோம். 5

மையார் களத்தார் வரம்பெற்ற சூரனுக்குச்
செய்யாத ஏவலெலாஞ் செய்தோம் நெறிநீதி
எய்யாத மான மிவையெல்லாந் தானிழந்தோம்
ஐயா மிகவும் அலுத்தோம் அலுத்தோமே.

நஞ்சு கொண்டமையால் கரிய கண்டமுடைய சிவபெருமான் வரம்பெற்ற சூரனுக்கு இதுகாலும் நாம் செய்யாத இழிந்த தொழில் யாவும் செய்தோம்; நெறிகள், நீதிகள், குறைவுபடாத மானம் ஆதிய இவைகள் எல்லாவற்றையும் தானே இழந்தோம்; ஐயனே! நாம் இவ்வாறுன இழிந்த ஏவற்பணி செய்து மிகவும் அலுத்தோம் அலுத்தோமே. 6

முந்நாளுந் தந்தி முகவுத்தவுணன் ஏவல்செய்து
பன்னாள் உழன்றோம் பரமர் அதுதீர்த்தார்
பின்னாளுஞ் சூரன் பெயர்த்தும் எமைவருத்த
இந்நாடி ரிந்தோம் இனித்தான் முடியாதே.

இதற்கு முன்னுன நாட்களிலும் யானை முகமுடைய கயமுகாசூரனுக்கு நாம் ஏவல் செய்து பலநாள் உழைந்து திரிந்தோம்; பரமனுன சிவபிரான் அந்தத் துயரைத் தீர்த்தார்; பின்னுளில் இன்று சூரன் எங்களை மீண்டும் வருத்த; இந்த எமது தேவ உலகத்தை விடுத்து ஓடி வந்தோம்; இனித்தான் திரும்பிப் போகவும் முடியாது, ஏவல் செய்யவும் முடியாது. 7

எந்நாளும் உன்னைப் புகலென் றிருந்தவியாந்
துன்னு அவுணராற் சோர்ந்து துயருழப்ப
உன்னு ருயிர்காத் தொளித்திங் கிருந்தனையால்
மன்னு உனக்குத் தகுமோ வசையன்றே.

எந்நாளும் உன்னைத் தஞ்சமென்று இருந்தனம்; யாங்கள் கொடிய அசுரராற் சோர்ந்து துயரம் அடைய; நீ மட்டும் உனது உயிரைக் காத்துக்கொண்டு ஒளித்து இங்கு இருந்தாய்; அரசே இச்செயல் உனக்குத் தகுமோ; வசையல்லவோ; 8

சூரன் முதலாச் சொலப்பட்ட வெவ்வசுரர்
வீரங் குலைந்து விளிவதற்கும் இவ்வுலகில்
ஆரும் பழிக்கத் திரிகின்றோம் ஆகுலங்கள்
தீரும் படிக்குஞ் செயலொன்று செய்வாயே.

சூரன் முதலாகச் சொல்லப்பட்ட கொடிய அசுரர்கள் தங்கள் வீரம் அழிந்து இறந்துபோவதற்கும்; இந்த உலகில் எல்லாரும் பழிக்கும்படி உலேந்து திரிகின்றேமான எங்கள் துயரங்கள் தீரும்படிக்கும்; ஒரு செயலினை நீ செய்வாயாக 9

என்னுப் பலவும் இயம்பி இரங்குதலும்
மன்ன கியமகவான் மாற்றம் அவைகேளா
அன்னர் மனங்கொண்ட ஆகுலத்தைக் கண்டுநெடி
துன்ன அயரா உயிரா உரைக்கின்றன்.

என்று இவ்வாறு பலவும் சொல்லி இரங்கித் தேவர்கள் துயரப்படுதலும்; அரசனுகிய இந்திரன் அவர்களது வார்த்தை கேட்டு; அத்தேவர்கள் மனதில் கொண்ட வியாகூலத்தைக் கண்டு நெடிது நேரம் வரை சிந்தித்து மனம் சோர்ந்து பெருமூச்சு விடுத்து இதனைச் சொல்கின்றன். 10

மாயை உதவ வருகின்ற வெஞ்சூரன்
தீய பெருவேள்வி செய்யத் தொடங்குமன்றே
போய நமதுரிமை பொன்னுடுந் தோற்றனமென்
றேயு முணர்வால் உமக்கங் குரைத்திலனே.

தேவர்களே கேளுங்கள். மாயவள் பெற்றெடுப்ப தோன்றிய கொடுஞ் சூரன்; தீமை தருகின்ற பெரிய யாகத்தைச் செய்கின்றதற்குத் தொடங்கும் அன்றே; நமது உரிமை போயது. பொன்னுடெனும் எமது உலகையும் நாம் தோற்றனமென்று; கவலை நிரம்பிய சோர்வடைகின்ற உணர்வுடன் நான் உமக்கு அங்கே சொல்லவில்லையோ! 11

அற்றே மகஞ்செய் தமலன் தருவரங்கள்
பெற்றே நமது பெரும்பதமுங் கைக்கொண்டு
சற்றேனும் அன்பில்லாத் தானவர்கோன் தாழ்வான
குற்றே வலைநம்பாற் கொண்டான் குவலயத்தே.

நான் சொன்னவாறே; யாகத்தைச் சூரபன்மன் செய்து; சிவபிரான் தருகின்ற வரங்கள் பெற்று; நமது பெரிய பதவிகளையும் தான் கைப்பற்றிக் கொண்டு; கொஞ்சமேனும் அன்பில்லாத அந்தச் சூரபன்மன்; மிகவுந் தாழ்வான ஏவற் தொண்டுகளை நாம் செய்யும்படி எம்மை அடிமைப்படுத்திக்கொண்டான் இப்பூமியிலே. 12

நீள்வா ரிதியின் நெடுமீன் பலசுமந்து
தாழ்வாம் பணிபிறவுஞ் செய்துந் தளர்ந்துலகில்
வாழ்வா மெனவே மதித்திருந்தோம் மற்றதன்றிச்
சூழ்வால் ஒருதீமை சூரபன்மன் உன்னினனே.

நாங்கள் நீண்ட சமுத்திரத்தில் நெடிய மீன்களைப் பிடித்துச் சுமந்தும்; இன்னமும் தாழ்வான பணிகள் பிறவற்றையும் செய்து தளர்ந்தும்; இந்த உலகில் எப்படியாவது வாழ்வோம் எனவே எண்ணி இருந்தோம்; இதுவும் அல்லாமல் சூழ்ச்சியினால் இன்னுமொரு தீமையை எமக்குச் செய்வதற்குச் சூரபன்மன் நினைந்துகொண்டான். 13

என்னே அத்தீமை யெனவே வினவுங்காற்
பொன்னே அனைய புலோமசையைப் பற்றுதற்குங்
கொன்னே எனையுங் கொடுஞ்சிறையில் வைப்பதற்கு
முன்னே நினைந்தான் முறையில்லாத் தீயோனே.

என்னதான் அத்தீமையாகும் எனக் கேட்டால்; மகாலெட்சுமியை ஒத்த இந்திராணியைப் பிடிப்பதற்கும்; விரைவுடன் என்னைக் கொடிய சிறையில் வைப்பதற்கும்; முன்னே நினைந்துகொண்டான்; உலகில் ஒரு கருமம் செய்யுங்கால் இது முறையோ என எண்ணாத சூரபன்மன். 14

ஆன செயலுன்னி அனிகந் தனைநம்பால்
வானுலகில் உய்ப்ப மதியால் அஃதுணர்ந்து
நானும் இவளும் நடுநடுங்கி அச்சுற்று
மேனி கரந்து விரைந்துவிண்ணை நீங்கினமால்.

இவ்வாறான செயலைச் சூரன் நினைந்து; சூழ்ச்சியுடன் தனது சேனையை எம்மிடத்து வான உலகிலே அனுப்ப; இச்சேனையின் வருகையின் நோக்கத்தை யான் எனது அறிவினால் அறிந்துகொண்டு; நானும் இவளும் நடுநடுங்கி அச்சங் கொண்டு; எமது வடிவை மறைத்து விரைவுடன் விண்ணுலகம் நீங்கினோம். 15

மீனும் வடியும் வியன்தசையுந் தான்சுமந்த
ஈன மதுவன்றி ஈதோர் பழிசுமக்கின்
மானம் அழிய வருமே அதுவன்றித்
தீன முறுசிறையுந் தீராது வந்திடுமே.

தேவர்களே! நாங்கள் மீனும், கள்ளும், பெரிய இறைச்சிகளையும்தான் சுமந்து கொடுத்த ஈனமான இழிவு இதுவும் அல்லாமல்; கற்பும் பங்கமாகின்ற ஒரு பழியையும் நாம் பெற்றால்; எமது மானம் அழியவருமே; அதுமட்டுமன்றி எமக்கு ஈனம் மிகுந்த சிறைவாசமும்; ஒருகாலமும் நீக்கமுடியாத தொன்றாகி வந்துவிடும். 16

வெய்யவர்தம் வன்சிறையின் வீழின் முடிவில்லா
ஐயன் அடிகள் அருச்சித் தியாமெல்லாம்
உய்ய அவுணர் உயிரிழப்ப மாதவத்தைச்
செய்யும் நெறியுண்டோ வெனச்சிந்தை செய்தனனே.

கொடிய அசுரன் சிறையில் அகப்பட்டால்; முடிவிலாத எமது பெருமானின் திருவடிகளை அருச்சித்து யாங்கள் உய்யவும்; அசுரர்கள் உயிர் நீங்கவும்; மேல்நெறி நிற்கும் தவத்தை யான் செய்வதற்கு மார்க்கம் ஏதும் வருமோ? எனச் சிந்தை செய்தேன். 17

சிந்தை அதனில் இனைய செயலுன்னி
அந்த மறுதுயரத் தாழும் நுமைவிட்டு
வந்து புவியின் மறைந்துதவஞ் செய்துமுக்கண்
எந்தை அடிகள் அருச்சித் திருந்தனனே.

எனது மனதிலே இந்தச் செயலை யான் நினைந்துகொண்டு; எல்லையற்ற துயரத்திலே அகப்பட்டுக்கொண்டிருக்கும் உங்களையும் தனியே விடுத்துவிட்டு; நான் பூமியில் வந்து ஒருவர்க்கும் தெரியாதபடி மறைந்துகொண்டு; தவஞ் செய்து மூன்று கண்ணுடை எமது பெருமானின் திருவடிகளை அருச்சித்துக் கொண்டு இந்த வனத்தில் இருந்தேன். 18

அல்லல் புரியும் அவுணர்பணி யால்வருந்தித்
தொல்லையுள மேன்மையெலாந் தோற்றனமே மற்றினிநாம்
எல்லவரும் வெள்ளி மலைக்கேகி இறைவனுக்குச்
சொல்லி நமது துயரகற்றிக் கொள்வோமே.

துன்பமே புரிகின்ற அசுரர்கள் இட்ட பணிகளைச் செய்து வருத்தப்பட்டு; முன்பு தொடக்கம் யாம் கொண்டுள்ள மேன்மைகள் எல்லாம் தோற்றுவிட்டோம்; ஆகவே இனிமேலாகுதல் நாங்கள் எல்லாரும் வெள்ளிமயமான கைலை மலைக்குச் சென்று; இறைவனை எமது சிவபெருமானுக்குச் சொல்லி எமது துயரங்கள் யாவையும் நீக்கிக்கொள்ளுவோம் என்றான் இந்திரபகவான். 19

வம்மின் எனவுரைப்ப வானோர் அதுகேளா
வெம்மி னதுகண்ட வியன்கண் டகியெனவும்
அம்மென் மயிலெனவும் ஆடி நகைசெய்து
தம்மின் மகிழ்ந்து மதர்ப்பினொடு சாற்றலுற்றார்.

வாருங்கள் கையிலை செல்வோம் என்று இந்திரன் கூறலும்; தேவர்கள் அது கேட்டு; வெளிச்சமும் வெப்பமும் கொண்ட மின்னலைக் கண்ட பெரிய தாழை மரம்போலவும்; அழகிய மிருதுவான மயில்போலவும்; ஆடினார்கள் சிரித்தார்கள் தம்பாட்டிலே மிகவும் மகிழ்ந்து ஆனந்த மிகுதியால் சொல்லுகின்றார்கள். 20

கோவுநீ எங்கள் குரவனுநீ தேசிகன்நீ
தேவுநீ மேலாந் திருவுநீ செய்தவநீ
ஆவிநீ மற்றை அறிவுநீ இன்பதுன்பம்
யாவுநீ யாகில் எமக்கோர் குறையுண்டோ.

எமது அரசன் நீ; எங்கள் தந்தை நீ; குரு நீ; கடவுள் நீ; மேலான செல்வம் நீ; நாம் செய்த தவம் நீ; எமது உயிர் நீ; மற்ற அறிவும் நீ; இன்பமும் துன்பமும் எல்லாம் நீயே யாகின்றமையால் ஐயா இந்திரனே! எமக்கு ஒரு குறையுண்டோ? 21

பார்த்துப் பணித்த பணிசெய்து நின்றன்னை
ஏத்தித் திரிதல் எமக்குக் கடனாகும்
நீத்துத் துயர நெறியுறுத்தி எம்மையென்றுங்
காத்துப் புரத்தல் உனக்குக் கடன்ஐயா.

எமது ஐயனே! உன்னையே தஞ்சமாக நாம் பார்த்து; நீ செய்யும்படி பணிக்கின்ற ஏவலினைப் புரிந்து; உன்னையே வணங்கித் துதித்துத் திரிதல் எமது கடனாகும்; ஆனால், எமக்கு உற்ற துயரங்களை நீக்கி நல்நெறியில் எமை வைத்து; எங்களை எஞ்ஞான்றும் காத்து அரசாளுதல் உனக்குக் கடனாகும். 22

தேரா அவுணர் திறந்தன்னை முன்தடிந்தாய்
சூரா தியருயிருங் கொள்ளுநெறி சூழ்கின்றாய்
பாராள் பவர்க்கும் பலமுனிவர்க் குஞ்சுரர்க்கும்
ஆராயின் நீயன்றி யாரே துணையாவார்.

நன்று உணராத அசுரர் வலியை, முன் அவரைக் கொன்று நீக்கினாய்; இப்போது சூரன் முதலாகச் சொல்லும் அசுரர்களது உயிரையும் நீக்குகின்ற மார்க்கத்தைக் கடைப்பிடிக்கின்றாய்; ஆகவே பூமியில் அரசாளும் அரசர்க்கும் பல முனிவர்க்கும் தேவர்கட்கும் துணையாவர் யார் என்று ஆராய்ந்து பார்த்தால்; நீயன்றி வேறு யார் உளர். 23

ஆதலால் எங்கள் அலக்கண் அகற்றிடுவான்
காதலாய் அத்தன் கயிலைக் கெமைக்கொண்டு
போதுநீ யென்னப் புரந்தரனும் நன்றென்று
கோதிலா உள்ளத் தொருசூழ்ச்சி கொண்டனனே.

ஆனபடியால் எமது துயரத்தை நீக்கும்படியாகக் காதல் கொண்டு; எம்பிரானுடைய கைலைமலைக்கு எம்மை அழைத்துக்கொண்டு போவாயாக நீ என்று தேவர்கள் சொல்லவும்; இந்திரனும் அது கேட்டு நல்லது என்று கூறி; குற்றம் இலாத தனது உள்ளத்தில் ஒரு சூழ்ச்சியை முன்னர் எண்ணினான். 24

ஆவதொருகாலை அமரர்கோன் தானெழுந்து
தேவர் தமைநோக்கிச் சிறிதிங் கிருத்திரென
ஏவரையும் அங்கண் இருத்தியொரு தானேகிப்
பாவை அயிராணி பாங்கர் அணுகினனே.

அவ்வாறாகிய காலத்து; தேவர்க்கரசனான இந்திரதேவன் தான் எழுந்து; தேவர்கள் யாரையும் பார்த்து; சிறிது நேரம் நீங்கள் இங்கு இருப்பீராக என்று; எல்லாத் தேவரையும் அங்கு இருத்தி; ஒருவனான தான் மட்டும் சென்று; பாவைபோலும் அழகுடைய இந்திராணியின் பக்கத்தை அணுகினான். 25

தேவர் புலம்புறு படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1408.

# 31. அயிராணி சோகப் படலம்

அன்னம் பொருவு நடையாள் அவன்வரலும்
முன்னங் கெதிரா முறையாற் பலமுறையும்
பொன்னங் கழலிணையைப் பூண்டு வணங்கியெழீஇ
என்னிங்கொ ரெண்ணமுடன் ஏகிற் றிறையென்றாள்.

அன்னப்பறவையை ஒத்த நடையுடைய இந்திராணி கணவன் இந்திரன் வருதலும் முன்னாக எழுந்து; கணவனைக் கிட்டி; முறைமையாகப் பலமுறையும் அவனது பொன்போலும் இரண்டு பாதத்தையும் பற்றிப் பணிந்து எழுந்து; எனது ஐயனே நீங்கள் யாது எண்ணத்துடன் இங்கு வந்துள்ளீர்கள் என்றாள். 1

அம்மொழியைக் கேளா அரசன் உரைசெய்வான்
வெம்மைபுரி சூரன் வியன்பணியா லேவருந்தி
எம்மை யடைந்தார் இனையசில தேவர்
தம்முன் இடர்பலவுஞ் சாற்றி இரங்கினரே.

அந்த வார்த்தையைக் கேட்டு இத்திரன் சொல்வான்; கொடுமை செய்யும் சூரன் இருக்கின்ற மேலான பணிகளைச் செய்து வருத்தமுற்று; என்னை வந்து தஞ்சமாக இங்கு சிவதேவர் அடைந்துள்ளார்கள்; அவர்கள் தாம் முன்னர்பட்ட இடர்கள் பலவற்றையும் சொல்லி இரக்கப்பட்டார்கள். 2

அன்னார் மனங்கொண்ட ஆகுலமும் நந்துயரும்
பொன்னார் சடைமுடியெம் புண்ணியற்குத் தாம்புகலின்
இந்நாள் அவுணர்க் கிறுவாய் தனைப்புரிந்து
தொன்னாள் உரிமை யளிப்பன்எனுந் துணிவால்.

அவ்வாறாக அத்தேவர்கள் மனதிற் கொண்ட கவலையும்; நமது துயரத்தையும்; பொன்னார்ந்து விளங்கும் சடைமுடியடைய எமது புண்ணியமூர்த்தி சிவபிரானுக்கு நாம் சொல்லின்; அதுவேளை இந்த நாட்களில் எமது பெருமான் அசுரர்களுக்கு முடிவினைப் புரிந்து; முன்னர் நாம் கொண்ட உரிமைகளை எமக்குத் தந்து காத்தருள் புரிவான் என்கின்ற துணிவினால்; 3

ஆகின்ற துன்பத் தழலாற் பதைபதைத்து
வேகின்ற சிந்தை வியன்அமரர் தம்முடன்யான்
பாகொன்று தீஞ்சொல் உமைபாகன் பனிவரைக்குப்
போகின்றேன் ஈது புகலுதற்கு வந்தனனே.

தமக்கு ஓயாது பெருகுகின்ற துயரம் என்னும் நெருப்பால் பதைபதைத்து; வேகின்ற சிந்தையுடைய இந்தத் தேவர்கள் தங்களுடன் யான்; கரும்பினைப் போலும் இனிய மொழியினை உடைய உமையம்மையார் பாகரான சிவபிரானின் குளிர்ச்சியுடைய கைலைமலைக்கு; போகின்றேன் என்ற இந்தச் செய்தியை உனக்குச் சொல்லுதற்கு இங்கு நான் வந்தேன் என்றான் இந்திரதேவன். 4

என்னும் பொழுதில் இடருற் றிகல்வாளி
தன்னங்கம் மூழ்கத் தளர்ந்துவீழ் மஞ்ஞையென
அன்னம் பொருவு நடையாள் அயிராணி
மன்னன் திருமுன் மயங்குற்று வீழ்ந்தனளே.

என்று இந்திரன் சொல்லும்பொழுதில்; இந்திராணி அது கேட்டு இடர்ப் பட்டாளாய்; வலியுடைய அம்பு தனது மேனியில் பட்டு உருவுதலும் தளர்ந்து வீழ்கின்ற மயில் என்னும்படியாக; அன்னப்பட்சியை ஒத்த நடையுடைய இந்தி ராணி; இந்திரதேவன் முன்பாக ஏக்கத்தினால் மயக்குற்று வீழ்ந்தாள். 5

வீழ்ந்தாள் தரிக்கரிதாம் வெய்ய துயர்க்கடலில்
ஆழ்ந்தாள் தனதறிவும் அற்றாள் பிரியாது
வாழ்ந்தாளென் செய்வாள் மகவான் அதுகண்டு
தாழ்ந்தா குலத்தோ டெடுத்தான் தடக்கையால்.

வீழ்ந்த இந்திராணி; தாங்கமுடியாத கொடிய துயரம் என்னும் கடலில் ஆழ்ந்தாள்; தனது சுய அறிவும் நீங்கினாள்; இந்திரனை எக்காலமும் பிரியாது வாழ்ந்தவள் அவன் பிரிந்து கைலை போகின்றேன் எனச் சொன்னால் என் செய் வாள்; இந்திரதேவன் அதுகண்டு தாழ்ந்து பெருங் கவலையோடு வீழ்ந்தாளை விசாலித்த கையால் எடுத்தான். 6

ஆர்வமொடு கையால் அணைத்தே அவளைத்தன்
ஊருமிசை யேற்றி உணர்ச்சிவரும் பான்மையெலாஞ்
சேரவொருங் காற்றச் சிறிதே தெளிவுற்றாள்
காரின் மலிகின்ற மின்போலுங் காட்சியினாள்.

ஆர்வத்துடன் தனது கையால் இந்திரன் தனது மனைவியை அணைத்துக் கொண்டு; அவளைத் தனது மடிமீது வைத்து; அவளுக்கு மயக்கத்தால் அற்றுப் போன உணர்ச்சிகள் வரக்கூடிய பான்மைகள் யாவற்றையும் ஒருங்கே சேரச் செய்தலும்; இந்திராணி சிறிதே தெளிவு பெற்றாள்; அவளைப் பார்த்தால் மேகத் தில் மலிந்து காணப்பெறும் மின்னலைப் போன்ற காட்சி உடையாளாயினாள். 7

சிந்தை மயக்கஞ் சிறிதகன்று தேற்றம்வர
முந்தை இடர்வந்து முற்றுந் தனைச்சூழ்ந்த
வந்த மடமான் அதுபோழ்தில் தன்னுள்ளம்
நொந்து நடுங்கி இனைய நுவல்கின்றாள்.

சிந்தையில் கொண்ட மயக்கம் சிறிது இப்போது அகன்று தேற்றம் வருத லும்; மூன் கணவன் கூறிய வார்த்தை கேட்டமையால் வந்த திடுக்காட்டமான இடர் பின்னர் வந்து முழுவதும் தன்னைப் பற்றிக்கொள்ள; அந்த மடம் எனும் குணம் நிறைந்த இந்திராணி அதுநேரத்தில் தனது உள்ளம் நொந்து நடுங்கி இந்த வார்த்தைகளைச் சொல்வாள். 8

பொன்னுடு விட்டுப் புவியின் வனத்திருந்து
முன்னர் அருள்கொண் டுவப்புற்று மேவினனுல்
என்ன ருயிரே எனை நீ பிரிவாயேல்
பின்னர் துணையான் பிழைக்கும் நெறியுண்டோ.

ஐயனே! நான் தேவ உலகாகிய பொன்னுட்டை விடுத்து இப்பூமியில் தனித்து; உனது சிறப்புற்று விளங்கும் அருளின் துணைகொண்டு மகிழ்வுற்று வாழ்ந்திருந்தேன்; எனது ஆருயிர்போல்வனனே எனை நீ பிரிந்திருப்பாயேல்; பின் ஆர்தான் எனக்குத் துணை; யான் தப்பிப் பிழைக்கும்படியான மார்க்கமும் உண்டோ? 9

வாகத்து நேமிக்கும் வான்பாடு புள்ளினுக்கும்
மேகத் திறமும் வியன்மதியு மாவதுபோல்
நாகத் துறைவோர்க்கு நாயகமே நீயலதென்
சோகத்தை நீக்கித் துணையாவார் வேறுண்டோ.

சக்கரவாகம் என்னும் பறவைக்கும்; வானத்தில் பாடுகின்ற வானம்பாடி என்னும் பறவைக்கும்; மேகக் கூட்டமும் மேலாகிய சந்திரனும் களிப்படையச் செய்யும் பொருளாதல் போல; (சக்கரவாகப் பறவை சந்திரனைக் கண்டபோதும் வானம்பாடி மேகத்தைக் கண்டபோதும் களிப்படைவன) தேவ உலகில் உள்ள தேவர்கட்கு நாயகரே; நீர் அல்லாது எனது சோகத்தை நீக்கித் துணையாவார் வேறு உண்டோ? 10

அன்றி யுனைப்பிரிந்தும் ஆவிதனைத் தாங்கவல்லேன்
என்றிடினும் யானெருத்தி யாருந் துணையில்லை
ஒன்றுநெறி நீதி உணராத தீயவுணர்
சென்றிடுவர் நாளும் அவர்கண்டால் தீங்கன்றே.

இதுவல்லாமலும் உன்னைப் பிரிந்து இந்த உயிர்தனைத் தாங்கிக்கொண்டிருக்க யான் வல்லவள் என்று சொன்னலும்; நான் தனியே இங்கு ஒருத்தியானேன்; யாரும் வேறு துணையும் எனக்கில்லை; ஆகவே நீதிநெறி இவை ஒன்றும் உணராத தீயவரான அசுரர் இவ்வழியாக நாள்தோறும் சென்றிடுவர்; அவர்கள் தற்செயலாகக் கண்டுகொண்டால் தீங்கல்லவோ. 11

நீடு புகழ்சேர் நிருதர்கோன் சூழ்ச்சியினுல்
தேடரிய பொன்னுலகச் செல்வத்தை விட்டிந்தக்
காடுதனில் வந்து கரந்து தவம்புரிந்து
பாடுபடு மாறும் பழிக்கஞ்சி யேயன்றே.

பெருகுகின்ற புகழ்சேரும் அசுரர் அரசன் சூரபன்பன்; கொண்ட வஞ்சனையான எண்ணத்திற்குப் பயந்து; தேடுதற்கரிய பொன்னுலகச் செல்வத்தைக் கைவிடுத்து; இந்தக் காட்டிலே வந்து ஒளித்திருந்து; தவம் புரிந்து பாடுபடுமாறும் எமக்கு நேரவிருந்த பழிக்குப் பயந்தல்லவோ? 12

தீய அவுணர் திரிவர் அவர்சிறியர்
மாயை பலபலவும் வல்லார் பவமல்லால்
ஆய தருமம் அறியார் பழிக்கஞ்சார்
நீயும் அஃதுணராய் அன்றே நெடுந்தகையே.

தீமையே புரியும் அசுரர் இங்குமங்குமாகத் திரிவர்; அவர்கள் அற்ப குணம் உள்ளவர்; மாயங்கள் பலபலவும் வல்லவர்கள்; பாவம் ஒன்றேயல்லாமல்; வேறு ஏதும் நன்றாய தருமம் அறியார்கள்; பழிக்குப் பயப்படார்; நீயுமா அதனை உணரமாட்டாது போவாயன்றோ; பெருந்தகை உடைய எனது நாயகனே? 13

உன்னன் புடைய வொருமகனும் இங்கில்லை
துன்னுஞ் சுரருமில்லை தொல்களிற்றின் வேந்துமில்லை
பின்னிங் கொருமா தருமில்லை பெண்ணொருத்தி
தன்னந் தனியிருக்க அஞ்சேனோ தக்கோனே.

உனது அன்புடைய ஒரே ஒரு மகன் சயந்தனும் இங்கில்லை; நெருங்கிக் காவல்கொள்ளும் தேவரும் இங்கு இல்லை; பழைமையான யானையின் அரசன் எனப்படும் ஐராவதமும் இங்கு இல்லை; பின்னரும் இங்கு ஒரு தேவப் பெண்கள் தானும் இல்லை; யானோ பெண்ணொருத்தி தன்னந்தனியே இருக்கப் பயப்படேனோ தகுதியை உடைய எனது தலைவரே. 14

பல்லார் றெழுகிப் பவஞ்செய் அவுணரெனும்
ஒல்லார் எனைக்காணின் ஓடிவந்து பற்றினர்போய்
அல்லா தனபுரிவ ரானுல் அனையபழி
எல்லாமுன் பாலன்றி யார்கண்ணே சென்றிடுமே.

நினைந்தபடி பலதரப்பட நடந்து பாவஞ்செய்கின்ற அசுரரென்னும் பகைவர்; என்னைக் காணின் ஓடிவந்து பிடித்துக்கொண்டு சென்று; அல்லாத பாதகச் செயலைச் செய்வாரேயானுல்; அதனுல் வரும் பழி எல்லாம் உனதுபாலல்லாமல் வேறு யாரிடத்துச் சென்றிடுமோ? 15

மன்னே இதுவோர் துணிவுரைப்பன் மன்னுயிர்கொண்
டின்னே தமியேன் இரேன்உலகில் யாவரையும்
முன்னே படைத்தளிக்கும் முக்கணர்தம் வெற்பினுக்குன்
பின்னே வருவேன் பெயர்வா யெனவுரையா.

எனது அரசே!; இப்போது உனக்கு நான் ஒரு துணிவைச் சொல்வேன்; அது என்னென்றுல் இவ்விடத்து நான் தனித்து இரேன்; உலகில் யாரையும் முன்னே படைத்துக் காக்கின்ற மூன்று கண்ணுடைய பெருமானது கைலைமலைக்கு; நானும் உமது பின்னுக வருவேன்; புறப்படுவீராக என்று இந்திராணி இந்திரனை நோக்கிக் கூறினுள். 16

பின்ருழ் குழலி பெருந்துயரத் தோடெழுந்து
நின்ருள் இறையுன்னி நேயத்தொடு நோக்கி
நன்ருல் உனது திறனென்று நாகரிறை
சென்ருர்வ மோடவளைப் புல்லியிது செப்புகின்ருன்.

பின்புறமாகத் தாழ்ந்திருக்கும் கூந்தலையுடைய இந்திராணி இப்படிக் கூறிப் பெருந்துயரத்துடன் எழுந்துநின்ருள்; அதுகேட்ட இந்திரன், ஓர் இறைப்பொழுது சிந்தனை செய்து; அன்புடன் இந்திராணியை நோக்கி; இந்திராணியே! நன்ருக இருக்கின்றது உனது திறமை என்று கூறிச் சென்று அவளை அணைந்து; ஆவலுடன் இறுகத் தழுவிக்கொண்டு இதனைச் சொல்லுகின்ருன். 17

வாராய் சசியே வருந்தேல் அமரருடன்
காரார் களத்தோன் கயிலைக் கியான்போனல்
ஆராய்து நின்னை அளிப்பவர்அற் ருலன்றே
பேரார்வ மோடெனது பின்நீ வருவதுவே.

இந்திராணியே! இங்குவா வருந்தாதே; நான் தேவருடன் மேகத்தை ஒத்து விளங்கும் கரிய கண்டத்தை உடைய சிவபிரான் இருக்கும் கைலைமலைக்குப் போனல்; இவ்விடத்தில் உன்னைக் கவனத்துடன் பக்குவமாகக் காப்பவர் இல்லாமல் இருந்தாலல்லவோ; நீயும் பெரிய ஆவலுடன் எனது பின் வருவது 18

செய்ய சடைமேற் சிறந்தமதிக் கோடுபுனை
துய்யவனும் வேலைத் துயின்ருேனுஞ் சேர்ந்தளித்த
ஐயன் எமக்கோர் அரணுகி யேயிருக்க
நையல் முறையாமோ நங்காய் நவிலுதியால்.

செம்மையாகச் சிவந்த சடைமீதில் சிறந்த இளம் பிறையை அணிந்த நின்மலனன சிவபிரானும்; பாற்கடலில் பள்ளிகொண்டோனுமான நாராயணக் கடவுளும்; சேர்ந்து கூடித் தந்தருளிய ஐயனர் எமக்கு ஒரு காவலாகியே இருக்க; நீ வருந்தித் துயரப்படல் முறையாகுமோ; பெண்ணே ஒருகால் சொல்வாயாக. 19

ஏவென்ற கண்மடவாய் ஈசனருள் அன்னேனை
வாவென் றளியால் வழுத்திமனத் துன்னின் இங்கே
மேவுங் கயிலையில்யான் மீண்டு வருந்துணையுங்
காவென் றுனைஅவன்பாற் கையடையா நல்குவனல்.

வேலையும் கூர்மையால் வென்ற கண்ணுடையவளே இந்திராணி; எமது சிவபெருமான் தந்தருளிய அருள் நிரம்பிய ஐயனரை; நான் இங்கு வாவென்று அன்பினல் துதித்து மனத்தில் நினைந்தால் இங்கே வருவார்; கைலைமலைக்கு யான் போய் மீண்டுவருமளவும்; இவளைக் காத்தருள்வாயாக என்று அவர்பால் உன்னை அடைக்கலமாகக் கொடுப்பேன்; 20

ஆற்றல் பெரிதுடைய ஐயனே நின்றன்னைப்
போற்றியருள் செய்யும் பொருந்துதியால் ஈண்டென்று
தேற்றுதலும் அன்னுன் சிறப்பெவன்கொல் செப்புகெனக்
கோற்றெடிகேள் என்ன அமரேசன் கூறுகின்றுன்.

வலிமை பெரிதும் உடைய ஐயனார் பகவனே உன்னைக் காத்து அருள் செய்வார்; ஆகவே, இங்கு தங்கி இருப்பாயாக என்று; இந்திராணிக்கு இந்திரன் தேறுதல் கூறுதலும்; அதுவேளை இந்திராணி அந்த ஐயனாரின் அற்புத மகிமை எப்படியாகும் சொல்லியருள்வீராக எனக் கேட்டலும்; வளையல் நிறைய அணிந்த பெண்ணே! கேட்பாயாக என இந்திரன் கூறத் தொடங்குகின்றான். 21

ஆற்றல் பெரிதுடைய ஐயனார் எனக்கூறியவற்றால் இந்திரன் தனது மனத்தில்; தீமைகள் புரியும் அசுரர் வரத்தினால் மிகவும வலி உடையவர்கள் என எண்ணி; அந்தத் தீவினையான விளைவை நீக்கவல்ல ஒரே ஒருவர் எமது பகவனான ஐயனாராகும் எனத் துணிந்து கொண்டான். அவரின் வலிமைக்கு உட்பட்டது தான் எந்தத் தீங்கும்; இது ஓர் உண்மை. இதனைப்பற்றியே ஈழத்துத் தவச் செல்வர் யோகசுவாமிகளும்,

கந்தனும் ஐயனும் வந்த பசாசுகள்
சுந்தரமாம் மடை ஏற்கவே என்னையும் காக்கவே.

எனப்பாடியருளினர்;

குமரனும், ஐயனும் உலகில் மேலான காவல் தெய்வங்களாகும். இப்புராணத்து இந்திராணியின் கற்பு பங்கப்படாமல் காத்தவர் ஐயனார் பகவான். முருகப்பெருமான் இந்திரனுடைய அடிமை வாழ்வு நீங்கும்படி காத்தருளியவர். இங்கு இருவரையும் இப்புராணத்து மிகச் சிறந்த அபயம் கூறும் துதிப்பாடல்களால் போற்றப்படுவதை நாம் இப்புராணத்துக் காண்போம்.

ஐயனார் பெருமானின் வழிபாடு இலங்கையில் சிங்கள மக்கள் அநேகரினால் கொண்டாடப்படுவது ஒன்று. இன்றும் சிவனொளிபாதமலையின் உச்சியில் ஐயனாருடைய திருவுருவம் ஒன்று இருக்கின்றது; மிக அழகிய திருஉருவம்.

மலையாள நாட்டிலும் ஐயப்பன் எனும் பேருடன் இவரை வழிபட்டு வருவர். இவர் கருணையால் நிரம்பிய ஒருவராவர். இவரை வழிபட்டு உய்ந்த அடியவர் அநேகராவர்.

ஐயனார் பெருமானின் அருள் நிரம்பிய புராணம் அடுத்துக் கூறப்படுகின்றது.

அயிராணி சோகப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1429.

817

# 32. மகா சாத்தாப் படலம்

முன்னம் பரமன் அருளின்றி முகுந்த னாதி
மன்னுஞ் சுரர்தானவர் வேலை மதித்த வேலைக்
கன்னங் கரிய விடம்வந்துழிக் காரி னங்கள்
துன்னும் பொழுதிற் குயில்போல் துணுக்குற் றிரிந்தார்,

முன்னொரு காலத்தில் சிவபிரான் அருளினைப் பெற்றுக்கொள்ளாமல்; நாராயணக் கடவுள் ஆதியாய் விளங்கிய தேவர்களும் அசுரர்களும்; பாற்கடலைக் கடைந்த நேரத்தில்; கன்னங்கரேலென்ற நஞ்சு வந்தபோதினில் அதுகண்டு எல்லாரும்; மேகக் கூட்டங்கள் நெருங்கிச் சூழ்ந்தெழும் நேரத்தில்; அதனைக் கண்ட குயில் பயத்தால் பறந்துவேகமுடன் செல்வதைப் போன்று; நடுங்கிக் கொண்டு ஓடினார்கள் 1

அண்ணற் கயிலைக் கிரிதன்னில் அடைந்து செந்தீ
வண்ணத் தமலன் அடிபோற்ற வருந்தல் என்றே
உண்ணற் கரிய பெருநஞ்சினை உண்டு காத்துக்
கண்ணற்கும் ஏனை யவர்க்கும்மிவை கட்டு ரைப்பான்.

பயந்தோடிச் சென்று; அண்ணலான சிவபிரான் இருக்கும் கையிலை மலையை அடைந்து; அங்கு சிவந்த அக்கினியின் அழகிய வண்ணம்போன்ற திருவுருக்கொண்ட: சிவபிரான் பாதங்களை வணங்கி அபயமிடலும்; எம்பிரான் அவர்களை நோக்கி வருந்தாதீர் எனக் கூறியருளி; ஒருவராலும் உண்பதற்கு அரிதாகிய பெரிய நஞ்சினை உண்டு; எல்லாரையும் காத்தருளி; பின்பு நாராயணக் கடவுளுக்கும் ஏனைய தேவர்க்கும் ஈதொரு வார்த்தையை சொல்லியருள்கின்றார். 2

இன்னுங் கடைமின் அமுதம் மெழுமென்று கூற
அந்நின் றவர்பாற் கடலின்கண் அடைந்து முன்போற்
பின்னுங் கடைந்தார் இபமாமுகப் பிள்ளை தன்னை
முன்னம் வழிபட் டிலர்வந்து முடிவ தோரார்.

நீங்கள் இன்னமும் பாற்கடலைக் கடையுங்கள் அமுதம் அங்கு எழும் என்று எம்பெருமான் கூறியருள; அங்கே நின்ற அவர்கள் எல்லாம் பாற்கடலை மீண்டும் அடைந்து; முன்போல பின்னரும் கடைந்தார்கள்; இப்பவும் இக்கருமம் செய்யும் பொழுது யானை முகமுடைய விநாயகப் பெருமானை முன்னமாக வழிபாடு செய்யாது விட்டார்கள்; இதனால் தங்கட்கு என்ன நேரும் என்பதை அறியாது போனார்கள். 3

என்னா யகற்கு வழிபா டியற்றுத நீராற்
கொன்னார் கடலின் நடுமத்தங் குலைந்து வீழ்ந்து
பன்னாகர் வைகும் இடஞ்செல்லஅப் பான்மை நோக்கி
அன்னானை அர்ச்சித் தனர்அச்சுத னாதி யானோர்.

என் நாயகனான விநாயகப் பெருமானுக்கு வழிபாடு செய்யாத அத்தன்மையால்; மேன்மையுடன் விளங்கும் பாற் கடலின் நடுவில் மத்தாக அங்கு நிறுவப்பட்டுள்ள மந்தரமலை; நிலைகுலைந்து தவறி வீழ்ந்து! பலநாகங்களும் இருக்கின்ற பாதாள உலகம் சென்றுவிட; அப்படி தவறியதின் காரணத்தை உணர்ந்து கொண்டு; எமது விநாயகப் பெருமானை; நாராயணக் கடவுளர் யாவரும் அர்ச்சித்து வணங்கினார்கள். 4

ஆரா தனைசெய்துழி மந்தர மாதி மைந்தன்
பேரா அருளால் பிலம்நின்று பெயர்ந்து முன்போல்
வாரா நிலைபெற் றிடலோடு மகிழ்ந்து போற்றிக்
காரார் திருமால் முதலோர் கடலைக் கடைந்தார்.

ஆராதனையான வழிபாடு செய்த நேரத்து; மந்தர மலையானது ஆதியான விநாயகப்பெருமான் நீங்காத கருணையால்; பாதாளம் விட்டுநீங்கி மீண்டும் மேலெழுந்து வந்து முன்போல நிலைபெற்றிடலும்; அது கண்டு மகிழ்ந்து எமது ஐயனின் கருணையைப் போற்றுதல் புரிந்து; மேக நிறமுடைய திருமால் முதலோர் பாற்கடலை இன்னமும் கடைந்தார்கள். 5

கடைகின்றுழிச் செம்மதி யாமெனக் காமர் செம்பொன்
அடைகின்ற கும்பத் தெழுந்திட்ட தமுத மங்கண்
மிடைகின்ற தொல்லைச் சுரர்தானவர் யாரும் வெஃகி
உடைகின்ற வேலையென ஆர்த்தனர் ஒல்லை சூழ்ந்தார்.

கடைகின்ற நேரத்தில் சிவந்த சந்திரன் எனும்படியாக விளங்கும் அழகிய செம்பொன்னின் குடம் ஒன்றினுள் அமுதம் எழுந்திட்டது; அது கண்டவுடன் அங்கு நெருங்கி நின்ற மிகப் பழைமையான தேவர் அசுரர் யாவரும்; ஆவலுடன் அமுதை விரும்பி; கரையை உடைத்துப் பெருகுகின்ற கடல் இரைவது போன்று; ஆரவாரித்துக் கொண்டு விரைவுடன் சூழ்ந்து கொண்டார். 6

எம்மால் இதுவந் துளதால் எமக்கேயி தென்றே
தம்மா சையினற் சுரர்தானவர் தம்மின் மாறுய்த்
தெம்மா னமுடன் பொரவுன்ன லுந் தீர்வு நோக்கி
அம்மால் விரைவின் ஒருமோகினி ஆயி னானே.

எம்மால்தான் இருந்த அமுதம் வந்தது; ஆகையால் எமக்குத்தான் இது என்று கூறி; தாங்கள் தாங்கள் கொண்ட ஆசையால்; தம்மில் மாறுபட்டு கொடிய மானமுடன் போர் செய்ய நினைத்தலும்; அப்போது அதற்கு ஓர் தீர்வினை நினைந்து கொண்டு அந்தத் திருமாலானவர் விரைவுடன் ஒரு மோகினி வடிவு கொண்டார். 7

மூலம் பிறந்த விடம்போல் அழன்மூண் டிடாமல்
நீலம் பிறந்து பிறர் அச்சுற நேர்ந்தி டாமல்
ஞாலம் பிறந்தோர் சுரர்தானவர் நச்ச ஆங்கோர்
ஆலம் பிறந்த தெனமோகினி யாகி நின்றான்.

பாற் கடல் கடைந்தபோது முதலில் தோன்றிய நஞ்சைப்போல் நெருப்பு மூளாமல்; நீல நிறங் காட்டி பிறர் நோக்கி அஞ்சும்படியாகச் செய்திடாமல்; இப் பூமியில் பிறந்தோர் யாரும் தேவரும் அசுரரும் விரும்பி ஆசையுற; அவ்விடத்து இதுவுமொரு நஞ்சுதான் பிறந்துள்ளது எனும்படி; திருமால் மோகினி வடிவு கொண்டார்.

முன்பு தோன்றிய நஞ்சு நெருப்பான வடிவால் பிறரை அஞ்சச் செய்தும் ஓடச்செய்தும் ஒருவேளை தப்பவும்செய்தது; ஆனால் இந்த மோகினி எனும் நஞ்சோ அழகால் எழிலால் ஆசையூட்டி தன்னிடையாக வீழ்த்திக் கொல்லும். இங்கு பெண், கட்குரிய வசீகரம் வனப்பு அழகு யாவும் ஆரையும் வசிகரத்து நின்றாலும் அது நஞ்சு என்பதை இப் பாட்டின் உவமையால் குறிப்பாக எடுத்துக் கூறியிருக்கிறார் ஆசிரியர். 8

சேணுர் உலகிற் புவிதன்னில் திசையி லெங்குங்
காணுத வப்பெண் ணுருக்கண்டனர் காதல் கைமிக்
கூணுர் அமுதந் தனைவிட்டு முன்னென்று கண்டோர்
மாணு கியபல் பொருள் கண்டென வந்து சூழ்ந்தார்.

வானத்தில் விளங்கும் உலகில்; இப் பூமி தன்னில் திக்கில் எங்கும் காணமுடியாத வனப்புடைய அப் பெண்ணின் உருவத்தைக் கண்டார்கள்; அவள் மேல் காதல் அளவுகடந்து; தாங்கள் இறவாமே இருக்கும் பெருமைபெற உண்ணப்படும் அமுதத்தையும் கைவிட்டுவிட்டு; முன் ஒரு பொருளை விருப்பத்துடன் கண்டோர் அதனிலும் பெருமையான பல பொருளைக் கண்ட தன்மைபோல; எல்லாரும் மோகினியை வந்து சூழ்ந்து கொண்டார்கள். 9

மெய்த்தா மரையே முதலாய விசிக நான்கும்
உய்த்தான் மதவேள் அதுகாலை உலப்பில் காமப்
பித்தாய் உணர்வு பிழையாகிப் பெரிது மாலாய்
அத்தா ருகமா முனிவோரினும் ஆர்வ மிக்கார்.

எல்லாரும் மோகினிமேல் மோகமாகிச் சூழ்தலும்; அதுவேளை காம இச்சை பெருக்குதலே தனது ஆடலாகக் கொண்ட மன்மதனும்; அவர்கள் பாலாக உண்மையாக மயக்கம் செய்யும் தாமரைப் பூ, அசோகு, முல்லை, மாம் பூ, ஆகிய நான்கு மலர்ப் பாணங்களையும் செலுத்தினன்; அது காலையில் அசுரரும் தேவருமாகிய எல்லாரும் ஒழிபாத காமப்பித்துக் கொண்டு; உணர்வுகளும் பிழையாகி பெரிதும் மோகினி மேல் மால் கொண்டு; அன்று அந்த தாருகாவனத்தில் இதே மோகினியைக் கண்டு அந்த வனத்து முனிவர் கொண்ட ஆர்வத்திலும்; பெருமடங்கு ஆர்வத்தை இவர்கள் கொண்டனர். 10

எண்ணு அவுணர் தொகையல்லதை எந்தை மாயம்
உன்னுடு வானேர் களும்பெண்மயல் உற்று நின்றுர்
மண்ணுசை தன்னிற் பொருளாசையின் மாய வாழ்க்கைப்
பெண்ணுசை நீங்கல் எளிதோ பெரியோர் தமக்கும்.

எதனையும் சிந்தனை செய்யாத மிருக உணர்வு கொண்ட அசுரக் கூட்டம் அல்லாது; எந்தை பெருமானுகிய திருமாலின் மாய வடிவம் இது என்று உள்ளத்தால் தெளிந்து கொண்ட தேவர்களும் பெண்மயல் கொண்டு நின்றுர்கள்; ஆகவே உலகில் உள்ள பொல்லாத மூவாசையான மண்ணுசை தன்னிலும்; பொருளாசை தன்னிலும்; மாயவாழ்வைப் பெருக்கித் தருகின்ற பெண்ணுசையை நீங்கல் எளிதோ? பெரியோராய் இருப்பவர்க்கென்றுலும். 11

பூண்டுற்ற கொங்கைப் பொலன்மோகினி யான புத்தேள்
ஆண்டுற் றவர்தங் களைநோக்கி அமரை நீங்கும்
ஈண்டுற் றனன்யான் அமுதும் முளதேது நீவிர்
வேண்டுற்ற தும்பால் உறக்கொண்மின் விரைவின் என்றுன்.

பூண் பொருந்திய தனங்களை உடைய அழகிய மோகினி வடிவு கொண்ட திருமாலானவர்; அவ்விடத்தே தம்மை சூழ்ந்து வளைந்து நின்ற தேவர் அசுரர்களைப் பார்த்து; நீங்கள் போர் செய்தலை நீங்குங்கள்; இவ்விடத்து நான் இருக்கின்றேன்; அமுதும் உளது; இதில் நீர் வேண்டியது யாது? அப்பொருளை உம்மிடத்துச் சேர்த்துக் கொள்ளும்படி விரைவில் கூறிப் பெற்றுக்கொள்ளுங்கள் என்றுர். 12

மாலா னவன் அவ் கதுகூற மனந்திரிந்து
நோலா மையினுல் இறக்கின்றவர் நோக்கி யெங்கள்
பாலா வதுநீ யெனமுன்வரும் பான்மை நாடி
மேலாம் அமுதே எமக்கென்றனர் விண்ணு ளோர்கள்.

திருமாலாகிய மோகினி இதனைக்கூற; முன்னர் தவம் புரியாமையால் மனக் கட்டுப் பாடின்றி மாறுபட்டு இறக்கப்போகின்ற அசுரர்; மோகினியைப்பார்த்து; நீதான் எங்கள் பாலாக வருவது எனலும்; முன்னுகச் செய்த அநுக்கிரகத்தின் பயனுல் தேவர்கள் இதனை உணர்ந்து கொண்டு; எங்களுக்கு மேலான அமுதமே வேண்டுமெனக் கூறி நின்றனர்.

முன்வரும் பான்மை—தேவர்களைத் திருமால் முன் எச்சரிக்கை செய்து கொண்டது எப்படியெனில் அசுரர் எதை முதல் கேட்பரோ அதில் நீங்கள் விரும்பாதீர்கள்; அடுத்ததையே நீங்கள் கேட்டுக்கொள்ளுங்கள் என்றதாம். இது பற்றியே வாசுகி என்னும் பாம்பாகிய கயிற்றைப் பிடிப்பதிலும் அசுரர் தலையே வேண்டுமென்ன; தேவர்கள் வால் பக்கம் நின்முர்கள் திருமால் தேவர்பக்கமே நிற்பவர் ஆதலால் இவையாவையும் தேவர்கள் உணர்ந்து முன்னுகை அசுரர் ஏது பொருள் கேட்பினும் பின்னுென்று கேட்டு நன்மை பெற்றனர். 13

வானு டவர்நல் லமுதங்கொடு மாயை நீங்கிப்
போனர் ஒருசார் அவரோடு பொருத தீயோர்
தேனர் மொழிமோ கினியாகிய செங்கண் மாலை
ஆனு விருப்பிற் கொடுபோயினர் ஆங்கோர் சாரில்.

தேவர்கள் அமுதத்தை உடன் பெற்றுக்கொண்டு; தமது மயக்க மோகமும் நீங்கப்பட்டு ஒரு பக்கராகப் போயினர். அந்தத் தேவரோடு சண்டையிட்ட தீயவரான அசுரர்கள் தேன்போலத் தித்திக்கும் வார்த்தை பேசுகின்ற மோகினியான சிவந்த கண்ணுடைய திருமாலை; உள்ளத்து நீங்காத பெரு விருப்பத்துடன் அவ்விடத்து ஓர் மறைவான பக்கரில் கொண்டு போயினர்; 14

கொண்டே கியதா னவர்தங்கள் குழுவை நோக்கித்
தண்டேன் மலர்ப்பா யலின்என்னைத் தழுவ வல்லான்
உண்டே இதனில் ஒருவீரன் உவனை இன்னங்
கண்டேன் இலையென்றனன் பெண்ணுருக் கொண்ட கள்வன்.

இவ்வாறு மோகினியைக் கொண்டு சென்ற அசுரர் கூட்டத்தை மோகினி பார்த்து; குளிர்ந்த தேன்சொரியும் பூக்கள் பரப்பிய பஞ்சணைப் பள்ளியிலே; என்னைத் தழுவிச் சேரவல்ல ஒரு வீரன் இக் கூட்டத்தில் இருக்கின்முனு?; அப்படியான வீரனை நான் இன்னமும் உங்களில் கண்டேன் இலையே; என்று கூறினுன் பெண் உருவம் கொண்ட கள்வனுகிய திருமால். 15

ஈறும் அவுணர் பலரும்மிது கேட்டெ னக்கு
மாறுய் ஒருவர் இலையாரினும் வன்மை பெற்றேன்
வீறு கியவீ ரனும் யானென வீற்று வீற்றுக்
கூறு எனையே புணரென்று குழீஇயி னுரே.

முடிவாகப் போகின்ற அசுரர் யாரும் இது கேட்டு சொல்கின்முர்; எனக்கு மாறுக வரக்கூடிய ஒருவர் இங்கு இல்லை; நானே யாரினும் வலிமை பெற்றேன்; வீறு பொருந்திய வீரனும் யான் யான் என்று; ஒவ்வொருவரும் தனித்தனிக் கூறி; என்னையே நீ கூடுவாய் என்று சொண்டு மோகினியை அணைந்தார்கள். 16

கொம்மைத் துணைமென் முலையண்ணலைக் கூட யாரும்
வெம்மைப் படலால் இகல்கொண்டனர் வேறு வேறு
தம்மிற் பொருது முடிந்தார் கிளைதம்மி லுற்ற
செம்மைக் கனலால் முடிவுற்றிடுஞ் செய்கை யேபோல்

திரண்ட மிருதுவான முலையுடைய மோகினி என்பாளைக் கூடும்படி; எல்லா அசுரரும் தங்களில் தாங்கள் வீரன் எனப்பேசி காமவெப்பம் மேற்படலாலே ஆசைப் படலால்; ஒருவரை ஒருவர் மாறுபட்டு பகை கொண்டனர்; தனித்தனி ஒவ்வொரு வராய் வேறுவேருக தங்களுக்குள் தாங்களே சண்டையிடத் தொடங்கி; முடிவில் யாவ ரும் இறந்தொழிந்தார்கள்; எப்படியெனில் மூங்கில் மரங்கள் தங்களிடத்து தோன்றிய நெருப்பினுலே அழிந்து போதல் போல; செம்மை — மூங்கில் 17

அன்னுர் தொகையில் இருவோர்அரி மாயை யுன்னி
எண்ணும் இவரோ டிறக்கின்றனம் என்று நீங்கித்
தொன்னுள் உருவந் தனைமாற்றிச் சுரர்கள் போலாய்ப்
பொன்னு டவர்தங் குழுவோடு புகுந்து நின்ருர்.

அவ்வாருகிய அசுரர் கூட்டத்திலே இரண்டு அசுரர் மட்டும்; விஷ்ணு மூர்த்தியின் மாயைத் தன்மை இது என நினைந்து; ஏனே நாங்களும் இந்த அசுரரோடு போரிட்டு வீணே இறக்கவேண்டும் எனச் சிந்தித்து; அவ்விடம் விட்டு நீங்கி; தங்களது பழமை யான உருவத்தை மாற்றி; தேவர்கள் போல வடிவங்கொண்டு; பொன்னுட்டவரான மற்றய தேவர்கள் கூட்டத்துள் புகுந்து ஒருவரும் தம்மை அறிந்து கொள்ளாதபடி நின்ருர். 18

மாண்டார் அவுணர் அதுநோக்கி வரம்பின் மாயம்
பூண்டாரும் வெஃக மடமாதெனப் போந்த கள்வன்
மீண்டான் அமரர் பலரும் விருப்புற்று மேவ
ஈண்டாழி தன்னில் அமுதந்தனை ஈத லுற்ருன்.

இவ்வாறு அசுரர்கள் யாரும் மாண்டார்கள்; அது கண்டு அளவில் மாயம் செய்ய வல்லாரும் கண்ணுற்ருல் விரும்பும்படியாக; மடம் எனும் குணம் நிறைந்த பெண் வடிவு கொண்ட கள்வரான விஷ்ணுபகவான்; அசுரருடன் மறைவிற்சென்ற இடத்தி னின்றும் மீண்டருளினர்; தேவர்கள் அவர் வருகைகண்டு விருப்பத்துடன் வந்துசேர; அத்தேவர்கட்கு பாற்கடலில் தோன்றிய அமுதத்தை பகிர்ந்து கொடுப்பாராயினர்; 19

ஈயும் பொழுதின் இமையோர்கள் இனத்தி னூடு
போயங் கிருந்த இருகள்வரும் பொற்பு மிக்க
மாயன் பகிரும் அமிர்தந்தனை மந்தி ரத்தால்
ஆயும் படிகொண் டிலர்வல்லியின் ஆர்த லுற்ருர்.

அமிர்தத்தை பகிர்ந்து மோகினி வடிவுகொண்ட விஷ்ணுமூர்த்தி கொடுக்கும் நேரத்தில்; தேவர் கூட்டத்தில் உள்ளாகச் சென்றிருந்த அந்த இரண்டு கள்வரான தேவ வடிவங்கொண்ட அசுரர்கள்; அழகு மிகுந்த மோகினி பகிர்ந்து கொடுக்கும் அமிர்தத்தை; மந்திரத்தை உச்சரித்து விதிப்படி உண்டிலர்; அவசரப்பட்டு உண் பாராயினர். 20

துண்டா மரைக்குப் பகைநண்பெனச் சாரும் நீரார்
கண்டார் புடையுற் றவரிங்கிவர் கள்வ ரேயாம்
உண்டார் அமுதங் கடிதென் றுளத்துன்னி யங்கண்
விண்டான வற்குக் குறிப்பால் விழிகாட்டி னரால்.

இதனை குளிர்ந்த தாமரைப் பூவுக்கு பகைவன் எனும் சந்திர தேவனும்; நண்பன் எனும் சூரியபகவானும் கண்டார்கள்; எமது பக்கராக நின்று இந்த அமுதத்தை அவ சரத்துடன் உண்பவர் கள்வரேயாம்; என்று தங்கள் மனத்தில் நினைந்து; அத் தன் மையை விஷ்ணுமூர்த்திக்கு கண்ணினால் சமிக்கை செய்து காண்பித்தார்கள். 21

காட்டுற் றிடலும் அரிநோக்கியிக் கள்வ ரேயோ
வீட்டுற்ற வானே ருடன்உண்குவ ரென்று தன்கை
நீட்டுற் றிடுசட் டுவங்கொண்டு நிருதர் சென்னி
வீட்டிச் சுரருக் கமுதூட்டி விருந்து செய்தான்.

கண்ணினல் சுட்டிக் காட்டிற்றிடலும் விஷ்ணுமூர்த்தி பார்த்து; ஓகோ இக் கள்வரா இங்கிருக்கும் தேவர் கூட்டத்துடன் புகுந்து இந்த அமிர்தத்தை உண்குவர்? என்று தனது கையில் குடத்திலிருக்கும் அமிர்தத்தை வார்த்துப் பகிர்ந்தளிக்கும்படி நீட்டிநின்ற சட்டுவத்தினல்; அந்த இரு அசுரரின் தலையை வெட்டி வீழ்த்தி; பின் தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுத்து விருந்து செய்தார். 22

அண்டத் தவர்முன் னருந்துற்ற அமுத மண்ணர்
கண்டத் திடையே வருமுன்னது கண்டு மாயன்
துண்டித்த சென்னி யழிவற்ற துணிந்த யாக்கை
முண்டத் துடனே துணிபட்டு முடிந்த வன்றே.

தேவர்கட்கு முன்னே அவசரத்துடன் அந்த அசுரர் புசித்த அமிர்தம் அவர்கள் கழுத்தளவிற்கு இடையாக வருவதற்கு முன்பே கழுத்தை விஷ்ணுபிரான் வெட்டித் துண்டித்துவிட; அமிர்தம் உண்ணப்பெற்றுச் செறிந்ததலை அழிவற்றதானது; வெட் டப்பட்ட சரீரங்கள் தலையிலாது முண்டமாகி வெட்டப்பட்டு வீழ்ந்திறந்தன. 23

மாளாத சென்னி புடைத்தானவர் மாண்பு நோக்கி
நீளார் அமுதுண்டவர் விண்ணிடை நிற்ப ரென்னுந்
தாளால் உலகம் அளந்தோன் அவர்தங் களுக்குக்
கோளா நிலையை இறையோன் அருள்கொண்டு நல்க.

இறவாத தன்மை எய்திய தலையுடைய அசுரரின் மாண்பினை நோக்கி; சிறந்த அருமையான அமிர்தத்தைப் புசித்தவர்கள் வானத்தில் இருக்கவேண்டும் என்னும் தன்மையை விஷ்ணுபகவான் சிந்தித்து; குறைவின்றி உலகம் வாழ தமது திருப் பாதத்தால் உலகளந்த விஷ்ணுபகவான்; அந்த இரு அசுரர்களுக்கும் கிரகங்களாகிய நிலையை சிவன் அருள்கொண்டு கொடுத்தருளினர். 24

புன்னாகம் நாக மணிவான் அடிபோற்றி நோற்றுச்
செந்நாக மோடு கருநாகத்தின் செய்கை பெற்றுப்
பின்னாக முன்னந் தமைக்காட்டிய பெற்றி யோரை
அந்நாக மீது மறைப்பார் அமுதுண்ட கள்வர்.

இந்த இரண்டு அசுரராகிய கள்வர்களும்; பாம்பினையும் புன்னைமலரும் அணிந்த சிவபிரான் திருவடி நினைந்து துதித்துத் தவஞ்செய்து; அவர் அருளால் சிவந்த பாம்பான கேது என்றும்; கரிய பாம்பான ராகு என்னும் படியான வடிவைப் பெற்றுக்கொண்டு சாயாக் கிரகங்களாகி; முன்னர் தம்மைக் காட்டிக் கொடுத்த தன்மையுடைய சூரிய சந்திரரை அவர்கள் வானத்தில் எழும்போது கிரகணமெனும்படி மறைப்பார்கள். 25

## வேறு

**கெழிய ராகுவுங் கேதுவு மேயென, மொழிய நின்ற மூதற்பெயர் தாங்கியே**
**விழுமி தாகிய வெய்யவ னாதியாம், எழுவர் தம்மொ டிருவரும் ஈண்டினர்;**

இந் நிலையால் தமக்கு ஏற்ற பெயரான ராகு என்றும் கேது என்றும் சொல்லப் பெறும் பெயருடையாராய்; மேலோங்கிய சூரிய பகவான் ஆதியான ஏழு கிரகங்களுடன் இரண்டு பேருமாகச் சேர்ந்து ஒன்பது பேராகினார்கள். 26

**ஈது நிற்கமுன் இன்னமு தந்தனை, ஆத ரத்தொ டயின்றவிண் ணோர்தொழ**
**ஓத வேலை யொருபுடை யாகவே, மாது ருக்கொண்ட மாதவன் வைகவே;**

ஈது நிற்க; இனிய அமுதத்தினை உள்ளத்தே கொண்ட விருப்பத்துடன் உண்டருளிய தேவர்கள் தொழுது வணங்கிட; பாற்கடலின் கரைதனில் ஒருபக்கராக மோகினி வடிவுகொண்ட நாராயணக் கடவுள் வீற்றிருந்தருளுதலும், 27

**நால்வ கைப்பட நண்ணிய சத்தியுள், மாலும் ஆதலின் மற்றது காட்டுவான்**
**ஆல கண்டத்தன் அச்சுதன் அச்சுறுங், கோல மெய்திக் குறுகினன் அவ்விடை.**

சிவபிரானுக்கு; உமை; விட்டுணு; காளி; துர்க்கை; என நால்வகைப் படப்பொருந்திய சத்திகளிலே; மோகினி வடிவுகொண்ட விஷ்ணுவும் ஒன்றாதலின்; மற்றதனை காட்டியருளும்படி திருவுளங் கொண்டு நஞ்சைக் கண்டத்துடைய கடவுள்; மோகினியும் கண்டு அதி மோகங் கொள்ளும்படி; அற்புதத்துடன் விளங்கும் அழகிய திருக்கோலத்துடன் அங்கு எழுந்தருளினார்; 28

**தண்டு ழாய்முடி யான்தனி நாயகற், கண்டு வெஃகக் கறைமிடற் றெம்பிரான்**
**உண்டெ மக்கு முனைப்புணர் காதல்நீ கொண்ட வேடம் இனிதென்று கூறினன்:**

குளிர்ச்சி வாய்ந்த துளசி மாலை யணிந்த முடியுடைய நாராயணக் கடவுளான மோகினி; தனியான நாயகரான சிவபெருமானைக் கண்டு; அவர்சால் விருப்பங்கொள்ள; நஞ்சினை உடைய கண்டத்தை உடைய எம்பிரான் சொல்லியருள்வார்; மோகினியே உன்னைக் கூடியருளும் காதல் எமக்கும் உண்டு; நீ கொண்ட வடிவம் இனிதானது என்றார். 29

**ஆணின் நீங்கிய அச்சுதன் ஆற்றவும், நாணி இவ்வுரு நல்கிய தன்மையாள்**
**காணி யாயுனைக் காதலித் துற்றனள், பேணி நிற்பதெ னென்னைப் பெருமநீ:**

இவ் வார்த்தை கேட்ட ஆண் தன்மை நீங்கி மோகினி உருவு கொண்ட விஷ்ணு மூர்த்தி மிகவும் நாணம் கொண்டு; பெருமானே இந்த உருவத்தை எனக்கு தந்தருளிய உமையம்மையார்; தேவரீரிடத்து மிகவும் உரிமைப் பாட்டுடன் விருப்பங் கொண்டுற்றாள்; அவ்வண்ணமாக தேவரீர் என்னைப் பேணி விரும்பி நிற்றல் எக்காரணமோ? 30

**ஆதி காலத் தயன்செயல் முற்றிட, மாதை மேவிட வந்துனை வேண்டினங்**
**காத லோவன்று காரண ளுகையின், மீது சேர்தரும் வீரியன் அல்லையோ.**

பெருமானே ஆதிகாலத்து பிரமதேவரின் படைப்புத் தொழில் கைகூடும்படி; தேவரீரை உமையம்மையாரைச் சேர்ந்துகொள்ளும் வண்ணம் உம்மை வேண்டினேன்; அது தேவரீர் உமையம்மையார்பால் கொண்ட காதலோ; இல்லை ஓர் செயலின் காரணமானது; ஆகையால் தேவரீர் எச் செயலும் கைகூடுகின்ற வீரியன் அல்லவோ; தேவரீர் சத்துப் பொருளாகும் என்றார் மோகினியான விஷ்ணு. 31

**நெற்றி யங்கண் நிமல உனக்கில், பற்ற தில்லையெப் பான்மையர் கண்ணினும்**
**அற்ற தாக என்னுகந் தழுவுவான், உற்ற காதலும் உண்மைய தன்றரோ.**

நெற்றிக் கண்ணுடைய நின்மல சொரூபரே; எத்தன்மை யுடையாரிடத்தும் உமக்கு வெறுப்பு விருப்பு எனும் இரண்டும் இல்லை; இப்படி இதுவாதலின்; எனது மேனியைத் தழுவ வேண்டுமென்று தேவரீர் கொண்ட காதலும் உண்மையானதன்றல்லவே. 32

**என்ன காரணம் எண்ணிக்கொல் ஏகினை, அன்ன பான்மை யறிகிலன் எம்பிரான்**
**நின்ன தாடலை நீயல்ல தேவரே, பின்னை நாடி யறிவுறும் பெற்றியோர்.**

பகவானே என்ன காரணத்தைத் திருவுளத்தில் கொண்டு வந்தீரோ; அன்ன தன்மையை எம்பிரானே நான் அறியேன்; தேவரீருடைய திருவிளையாடலை தேவரீர் அல்லது பின்னுடி வேறு யார்தான் அதனை உணர்ந்து அறியும் இயல்புடையார். 33

**அன்பில் ஆடவர் ஆடவ ரோடுசேர்ந், தின்ப மெய்தி யிருந்தனர் இல்லையால்**
**முன்பு கேட்டது மன்று முதல்வநீ, வன்பொ டென்னைப் புணர்வது மாட்சியோ.**

அன்பினல் ஆண்கள் ஆண்களோடு கூடிப்புணர்ந்து இன்பமெய்தினர்கள் இல்லை; யான் முன்பு இதுபற்றி கேட்டதும் இல்லை; ஆகையால் முதல்வா நீ அன்பினேடு என்னைப்புணர்ந்து கூடுவது மேன்மையானதோ. 34

**என்று மாயன் இசைத்தலும் எம்பிரான், நன்று நீயும் நமக்கொரு சத்திகாண்**
**அன்று தாருகத் தந்தணர் பாங்குறச், சென்ற போழ்தினுஞ் சேயிழை யாயினை;**

என்று விஷ்ணுமூர்த்தி கூறியருளலும்; எம்பிரான் அது கேட்டு சொல்லியருளுவார்; மோகினியே நல்லது நீயும் எனக்கு ஒரு சத்தியாகும் என்பதைக் கண்டுகொள்வாயாக; அன்று யான் தாருகாவனத்து முனிவர் முன்பு சென்றபோதும் நம்முடன் கூடவே வருதற்கு நீ ஒரு பெண்ணுயினை 35

**முன்னை வேதன் முடிந்தனன் போதலும், உன்னெ டேவந் துவப்பொடு கூடினேம்**
**பின்னர் இந்தப் பிரமனை யுந்தியால், அன்னை யாகி அளித்தனை அல்லையோ**

முன்னையுள்ள ஓர் பிரமன் இறந்துபோதலும்; உன்னேடு வந்து மனமகிழ்வோடு கூடினேம்; அதனல் பின்னர் இந்தப் பிரமதேவனை உனது உந்தியின் மூலமாக நீ தாயாகப் பெற்றெடுத்தனை யல்லவோ 36

**ஆகை யாலுன் அணிநலந் துய்த்திட, ஓகை யால்இவண் உற்றனன் செல்கென**
**மாகை யாரப் பிடிப்ப வருதலும், போகை யுன்னிப் பொருக்கென ஓடுவுன்**

ஆகையால் உனது அழகிய நலம்பாட்டை நான் அனுபவித்து பெற்றிட மிக மகிழ்வுடன் இங்கு வந்துளோம்! கூட வருவாயாக என்று சிவபிரான்; மோகினியினுடைய கையைப் பற்றிப் பிடிக்குமாறு வருதலும்; மோகினியும் நாணமுற்று அப்பால் போக நினைந்து விறுக்கென ஓடிப்போனாள். 37

நாணி ஓடிய நாரண னைப்பிறை, வேணி யண்ணல் விரைவுட னேகியே
பாணி யாலவன் பாணியைப் பற்றினன், சேணி னின்று திசைமுகன் போற்றவே.

மோகினி நாணி ஓடலும்; மோகினியாகிய திருமாலைப் பின்னால் தொடர்ந்து சடைமுடியை உடைய சிவபிரான் சென்றருளி மோகினியின் கையினை தமது திருக்கரத்தால் பிடித்தருளினர்; அதுவேளை அதனைக் கண்ணுற்ற பிரமதேவர் வானத்தில் நின்று கைகூப்பித் தொழுது போற்றுதல் செய்ய 38

பற்றி யேகிப் படிமிசை நாவலாற், பெற்ற தீவிற் பெருங்கடற் சார்பினின்
மற்று நேரில் வடதிசை வைப்பினில், உற்ற சாலத்தின் ஒண்ணிழல் நண்ணினன்.

சிவபிரான் மோகினியைப் பிடித்துக் கொண்டு சென்று; பூமிமீதில் நாவல் மரத்தினால் பெயருற்ற நாவலந் தீவில்; பெரிய கடலின் கரையினில்; ஒப்பற்ற வடதிசையில் உள்ள இடத்தில் பொருந்திய சாலமரத்தின் சிறந்த நீழலில் சென்று சேர்ந்தருளினர். 39

நண்ணி யேதனி நாயகன் அவ்விடைப், பெண்ணின் நீர்மையைப் பெற்றிடு நாரணன்
உண்ணெ கிழ்ந்து மயங்குற் றுருகியே, எண்ணில் இன்புறக் கூடினன் என்பவே.

சென்று தனிநாயகரான சிவபிரான் அவ்விடத்து பெண் உருவத்துடன் பெண்ணின் இயல்பினைப் பெற்று நின்ற விஷ்ணுமூர்த்தி; உள்ளம் நெகிழ்ந்து மயங்கி உருகி அளவற்ற இன்பத்தை அடையும்படி கூடிப் புணர்ந்தருளினர் என்பார்கள். 40

மூன்று கண்ணன் முகுந்தன் இருவரும், ஏன்று கூடிய வெல்லையில் அன்னவர்
கான்று மிழ்ந்த புனல்கண்டகி யென, ஆன்ற தோர்நதி யாகிஅ கன்றதே.

மூன்று கண்ணுடைய சிவபிரானும் நாராயணக் கடவுளான மோகினியுமாகிய இருவரும் ஒருமித்து இன்புறக்கூடிய எல்லையில் அவர்கள் காறி உமிழ்ந்த வாய் நீரானது கண்டகி எனப் பேர்கொண்ட பெரியதோர் ஆறாகப் பெருகிச் சென்றது. 41

அந்த நீரின் அகம்புறம் ஆழிகள், தந்து வச்சிர தந்தி யெனப்படும்
முந்து கீட முறைமுறை யாகவே, வந்து தோன்றின மாழையின் வண்ணமாய்.

அந்தக் கண்டகி என்னும் ஆற்றின் நீரில்; புறத்திலே சக்கர ரேகைகளைக் கொண்ட வச்சிர தந்தி எனப்படும் முற்பட்ட புழுக்கள் முறை முறையாக வந்து தோன்றின; அவைகள் பொன்னின் நிறங்கொண்டவைகளாய் விளங்கின.

ஆயமண்ணில் அகங்கெழு பஞ்சர, மேயெ னத்தந் திருந்து சிலபகல்
மாயும் அவ்வுயிர் மாய்ந்தபிற் கூடுகள், தூய நேமிக் குறிகொடு தோன்றுமால்.

அந்தப் புழுக்கள்; கண்டகி என்னும் ஆற்றங்கரையில் உள்ள மணலிலே தாங்கள் இருத்தற்கு பொருத்தமான கூடுகளைச் செய்து அதில் சிலநாள்வரை இருந்து; பின்னர் அவை இறந்துபோகும்; இறந்தபின் அந்தக் கூடுகள் சக்கரக் குறியோடு தோன்றிடும் 43

நீர்த்த ரங்க நிரல்பட வீசியே ஆர்த்தி ரங்கி அணைவுறு கண்டகித்
தீர்த்தி கைப்புனல் சென்றக் குடம்பைகள், ஈர்த்து வந்திடும் இம்பர்கொண் டெய்தவே.

பெரு நீர்களையுடைய அலைகளை நிரை நிரையாக வீசிக்கொண்டு ஆரவாரித்து முழங்கிப் பாய்கின்ற கண்டவியாற்றினது சிறந்துள்ள பெருநீர் அலைகள் சென்று; கரையில் உள்ள இந்த கூடுகளை அரித்து இழுத்து கொண்டுவந்து சேர்த்துவிடுகின்றன இப்பூமியில். 44

அன்ன கிடம் அமர்ந்த குடம்பையை, இந்நி லத்தர்கொண் டேகி அகத்துறை
பொன்னே வாங்கிப் பொறியினை நோக்கியே, இன்ன மூர்த்தம் இஃதென நாடுவார்.

அந்த புழுக்கள் இருந்த கூடுகளை; இப் பூமியில் உள்ளார் எடுத்துச் சென்று; உள்ளே இருக்கின்ற பொன்னை நீக்கி அதில் உள்ள சக்கரக் குறிமுதல் அடையாளங்களைப் பார்த்து; இது இன்ன மூர்த்தியின் வடிவம் என்று தெரிந்து கொள்வார்கள். 45

நாடி யேயவை, நாரண னாகவே, கூடும் அன்பிற் குவலயத் தேசிலர்
தேடி அர்ச்சனை செய்வர் அதன் பெயர், கேடில் சாளக் கிராமம தென்பரால்,

இவற்றை நாடிக்கொண்டு அவைகள் நாராயணக் கடவுளாகவே; கொண்டு கூடுகின்ற அன்பினால் இப்பூமியில் உள்ள சிலர் தேடி அர்ச்சனை செய்வார்கள்; அதன் பெயர் கேடில்லாத சாளக்கிராமம் என்பார்கள் 46

மாலும் எந்தையும் மாண்பொடு கூடியே, சால மேவு தனிநக ரேயிதன்
மூல காரணம் ஆகையின் முந்தையோர், மேலை நாமம் அதற்கு விதித்தனர்.

நாராயணக் கடவுளும் எந்தை பெருமானும் மாண்பொடு கூடிய சாலமர நிழலில் பொருந்திய நகரமே; இந்தக் கூடுகளின் தோற்றத்திற்கு மூலகாரமாகையால்; முன்னையோர்கள் மேலான சாளக்கிராமம் என்னும் பெயரை அக்கூட்டிற்கு இட்டனர். 47

இந்த வண்ணம் இருக்க முராரியும், அந்தி வண்ணத் தமலனு மாகியே
முந்து கூடி முயக்கிய வெல்லையில், வந்த னன்னெமை வாழ்விக்கும் ஐயனே.

இந்த வரலாறுகள் இப்படி இருப்ப நாராயணக் கடவுளும்; அந்திக் காலத்து செக்கர் வண்ணத்தை ஒத்த சிவபிரானும்; ஆகிய இருவருமாகி முன்பு புணர்ந்து கூடிச் சேர்ந்த வேளையில்; வந்து தோன்றினர் எம்மை வாழ்விக்கும் ஐயனர் பகவான் 48

மைக்க ருங்கடல் மேனியும் வானுலாஞ், செக்கர் வேணியுஞ் செண்டுறு கையுமாய்
உக்கி ரத்துடன் ஓர்மகன் சேர்தலும்' முக்கண் எந்தை முயக்கினை நீங்கினன்.

இருண்ட கருங்கடல் போன்ற மேனியும்; வானில் உலாவி விளங்கும் சிவந்த சடையும்; செண்டு கொண்ட கையையும் உடையவராய்; உக்கிர நிலை உடையரான ஓர் புத்திரன் அங்கு தோன்றியருளலும்; மூன்று கண்ணுடைய எங்கள் சிவபிரான் மோகினியுடன் கொண்டருளிய சேர்க்கையினின்றும் நீங்கினர். 49

அத்த குந்திரு மைந்தற் கரிகர, புத்தி ரன்எனும் நாமம் புனைந்துபின்
ஒத்த பான்மை உருத்திரர் தம்மொடும், வைத்து மிக்க வரம்பல நல்கியே.

அவ்வாறாகிய திருக்குமாரருக்கு அரிகர புத்திரன் என்னும் நாமத்தைச் சூட்டி; பின்னர் அவருக்கு ஒத்த பான்மையில் விளங்கும் உருத்திர கணத்தவரொடும் தலைமையாக வைத்து! மேலோங்கிய பலவரங்களை ஐயனர் பகவானுக்குக் கொடுத்தருளி. 50

புவனம் ஈந்து புவனத் திறையென, அவனை நல்கி அமரரும் மாதவர்
எவரும் ஏத்திடும் ஏற்றமும் நல்கினன், சிவன தின்னருள் செப்புதற் பாலதோ.

அவருக்கென தனியான புவனம் ஒன்றினையும் கொடுத்து; அப்புவனத்திற்கு அவரைக் கடவுளாக வைத்து; தேவர்களும் முனிவர்களும் மற்றும் எல்லாரும் வணங்கித் துதிக்கும் மேம்பாடும் கொடுத்தருளினுன் எங்கள் பெருமான்; ஆகவே சிவபிரானுடைய இனிய அருளின் திறத்தை நாம் செப்பயருள எம்மால் முடிந்ததோ. 51

**முச்ச கத்தை முழுதருள் மேனிகொண், டச்சு தன்றெழ அச்சுதன் போற்றிட**
**மெச்சி யேயவ ருக்கு விடைகொடுத், தெச்ச மில்சிவன் ஏகினன் என்பவே.**

மூன்று உலகையும் முழுதும் காத்து அருள்செய்ய வல்ல திருமேனி கொண்டு அந்த மோகினியாகிய திருமால் கைகூப்பித் தொழ; தமது திருக்குமாரரான ஐயனுர் துதித்திட; அவைகளை மெச்சிக்கொண்டு; திருமகனுர்க்கும் திருமாலுக்கும் போகுமாறு விடைகொடுத்து; குறைவிலா நிறைவாகிய சிவபிரான் மறைந்தருளினுர் என்பார்கள். 52

**நாயக கன்செல நான்முகத் தோனைமுன், தாயெ னத்தருந் தாமரைக் கண்ணினுன்**
**சேய வைகுண்டஞ் சேர்ந்தனன் ஐயனும், போயி னுன்றன் புவனத் தரனிசில்.**

சிவபிரான் மறைந்தருள; நான்முகமுடைய பிரமதேவரை முன்னர் தாயாகிப் பெற்றெடுத்த தாமரைக் கண்ணன் எனும் திருமாலானவர்; மிக தூரத்துள்ள வைகுந்த லோகம் சென்றருளினுர்; எமது ஐயனும் போயினுர் தமக்குரிய புவனத்தில் அரசுர் அங்கு வீற்றிருந்து காந்தருளும்படியாக. 53

**அங்கண் மேவி அரிகரி புத்திரன், சங்கை யில்பெருஞ் சாரதர் தம்மொடும்**
**எங்கு மாகி இருந்தெவ் வுலகையுங், கங்கு லும்பகல் எல்லையுங் காப்பனுல்.**

அவ்விடத்துச் சேர்ந்தருளிய அரிகர புத்திரன் என்னும் ஐயனுர்; அளவு காண்பரிய வலிமையிற் பெரிய பூதகணங்கள் தம்மொடும்; எங்குமாகி நிறைந்து நின்று எல்லா உலகங்களையும்; இரவு பகலாகிய எக்காலத்திலும் காத்தருள்புரிவார். 54

**மண்ண கத்தரும் வானவ ரும்மலர், அண்ண லுந்தினம் அர்ச்சிக்கும் நீர்மையான்**
**கண்ண னும்புக ழப்படு காட்சியான், எண்ணின் அங்கவ னுக்கெதிர் இல்லையே.**

இப்பூமியில் உள்ளாரும்; தேவர்களும்; பிரமதேவரும் தினமும் அர்ச்சித்து வணங்கும் தன்மையுடையவன்; நாராயணக் கடவுளும் புகழ்ந்து போற்றிடும் அற்புதக் காட்சியை உடையவன்; எண்ணிப்பார்த்தால் ஐயனுருக்கு ஒப்பாவார் யாரும்இல்லை. 55

**அன்ன நீர்மையன் காணென தன்பினுல், உன்னை வந்தினிக் காத்தருள் உத்தமன்**
**என்ன லோடும் இசைந்துநின் றுளரோ, பொன்னி ஞடு தணந்த புலோமசை.**

அவ்வாறான அருள் நீர்மை உடைய ஐயனுர் பகவானே; என்மீதுள்ள அன்பினுல் உன்னை இங்கு வந்து இனிமேலாகக் காத்தருள் புரியும் உத்தமன் எனலும் அது கேட்டு இசைவுகொண்டு நின்ருள்; தனது கற்பிற்காக பொன்னுட்டைவிட்டுநீங்கிய இந்திராணி;

## வேறு

**இந்திரன் மங்கை இசைந்தது காணு, நந்தமர் கையனும் நம்பனும் நல்கு**
**மைந்தனை உன்னி வழுத்துத லோடும், அந்தமி லாவெம தையன் அறிந்தான்**

இந்திரதேவன் தனது மனைவி இசைவுகொண்டதைக் கண்ணுற்று; பாஞ்சன்யம் என்னும் சங்கை ஏந்திய கையினை உடைய விஷ்ணுமூர்த்தியும்; சிவபிரானும் தந்தருளிய மைந்தரான ஐயனுரை மனதால் வழுத்தித் துதித்து நிற்றலோடும், முடிவிலாத அருள நீர்மையுடைய எம் ஐயனுர் அதை அறிந்தார். 57

காருறழ் வெய்ய கரிற்றிடை யாகிப், பாரிடர் எண்ணிலர் பாங்குற நண்ணப்
பூரணை புட்கலை பூம்புற மேவ வாரணம் ஊர்பவன் முன்னுற வந்தான்

மேகத்தை ஒத்த கொடிய யானையின் மேலாகி எழுந்து கொண்டு; பூதங்கள் எண்ணற்றவர்கள் பக்கராக சூழ்ந்து வரவும்; பூரணை புட்கலை என்னும் இரு தேவி மாரும் எம்பிரான் ஐயனாரின் மேலான இருபக்கரிலும் எழுந்தருளி வரும்படியாக ஐராவத யானையின்மீது எழுந்தருளி செல்கின்ற இந்திரன் முன்பாக வந்தருளினர் ஐயனார் 58

முன்னுற மேவலும் மூவுல கோர்க்கு, மன்னவ னாகிய வாசவன் ஐயன்
பொன்னடி தாழ்ந்து புகழ்ந்தனன் நிற்ப; என்னிவண் வேண்டும் இயம்புதி யென்றான்

இந்திரன் முன்பாக எம்பிரான் ஐயனார் எழுந்தருளி வருதலும்; மூன்று உலகங் களில் உள்ள எல்லார்க்கும் அரசனான இந்திரதேவன்; ஐயனாருடைய பொன்னார்ந்த திருவடிகளில் தாழ்ந்து வணங்கி தோத்திரித்து நிற்ப; அதுவேளை ஐயனார் பெருமான் இந்திரனை நோக்கி யாது வேண்டும் சொல்லுவாயாக என்றார், 59

கேட்டலும் இன்ன கிளத்தினன் மாயை, மாட்டுறு சூரன் வருத்துத லாற்பொன்
நாட்டினை விட்டனன் நானிவ ளோடும், காட்டுறு வேயென வேகர வுற்றே

ஐயனார் கேட்டலும் இந்திரதேவன் இதைச் சொல்வான்; எம்பிரானே மாயை என்பாளின் பிள்ளையாகிய சூரபன்மன் எமை வருத்திய தன்மையால்; பொன்மயமான தேவ உலகத்தை விடுத்து நான் இந்த இந்திராணியோடும்; காட்டில் உற்ற மூங்கில் மரமான வடிவு கொண்டு மறைந்திருந்து 60

நோற்றிவண் மேவினன் நோதகும் வானோர் ஆற்றரி தாவவு ணன்செயும் இன்னல்
சாற்றினர் வந்து தளர்ந்தனம் எம்மைப், போற்றுதி யென்று புலம்பின ரன்றே

இவ்விடத்து தவஞ் செய்துகொண்டு இருந்தேன்; சூரபன்மன் ஏவலினால் வருத்தம் அடைந்த தேவர்கள்வந்து சூரபன்மன்செய்கின்ற துன்பங்கள் சகிக்கமுடியாதெனக் கவலை யுடன் முறைபட்டுத் தளர்ந்து எங்களை நீ காக்கவேண்டும் என்று புலம்பி அழுதனர் 61

தள்ளரும் வானவர் தம்மொடு முக்கண், வள்ளல் தனக்கெம் வருத்த முரைக்க
வெள்ளி மலைக்கு விரைந்துசெல் கின்றேன் எள்ளரி தாகிய இல்லினை வைத்தே

தேவர்களுடன் யான்; மூன்று கண்ணுடைய சிவபிரானிடத்து எமது துயரத்தை சொல்லி முறைப்பட; வெள்ளி மயமான கைலைக்கு விரைந்து செல்கின்றேன். இகழ்ந்து நீக்கிடவிட முடியாத மனைவி இந்திராணியை இங்கு விட்டு வைத்து 62

தஞ்சமி லாது தனித்திவ் வனத்தே பஞ்சுறழ் செய்ய பதத்தியை வைத்தால்
வஞ்சகர் கண்டிடின் வௌவுவர் என்றே, அஞ்சினள் உன்றன் அடைக்கலம் ஐயா

வேறொருவரும் துணையிலாது தனித்து இந்த வனத்திலே; செம்பஞ்சு போன்ற மிருதுவான பாதங்களை உடைய இந்திராணியை வைத்தால்; வஞ்சகாரன் அசுரர் கண்டால் அவளை பிடித்துச் சென்றிடுவார்கள் என்று; யான் பெரிதும் அஞ்சினேன். ஆகவே ஐயனே! அவள் தேவரீரது அடைக்கலமாவள் 63

ஆத்தன் அமர்ந்த அகன்கிரி நண்ணி வாய்த்திடும் இவ்விடை வந்திடு காறும்
பூத்திடு காமர் புலோமசை தன்னைக், காத்தருள் என்றிது கட்டுரை செய்ய.

சிவபிரான் வீற்றிருந்தருளிய அகன்ற கைலைமலையை யான் சேர்ந்து; அருள் பெற்றுக் கொண்டு; வாய்ப்புற்ற இந்த இடத்தை மீண்டும் வந்துசேரும் துணையும்; அழகு மலர்ந்து விளங்கும் இந்திராணியை தேவரீர்; காத்தருள்வீராக என்று எடுத்துக்கூற; 64

மேதகு செண்டுள வீரன் இசைப்பான், ஏதமு றுதநின் ஏந்திழை தன்னைத்
தீதடை யாது சிறப்பொடு காப்பன், நீதனி யென்று நினைந்திடல் கண்டாய்.

மேன்மையான செண்டைக் கையில் ஏந்திய ஐயனர் சொல்லுவார்; ஏதும் குற்றம் இலாத இந்தப் பெண் இந்திராணியை தீங்கு ஒன்றும் நேர்ந்துவிடாதபடி சிறப்போடு யான் காப்பேன்; இவள் தனியளுனள் என்று இந்திரனே நீ நினைக்க வேண்டாம்: 65

இல்லுறு நங்கையை இங்ஙனம் வைத்தே, அல்லுறழ் கண்டன் அருங்கயி லைக்குச்
செல்லுதி யென்றருள் செய்து திரும்பித், தொல்லையெம் மையனெர் சூழலின் உற்றான்

உனது மனைவியாகிய இந்திராணியை இவ்வீடத்து வைத்து; நஞ்சு விளங்கும் கண்டத்தை உடைய சிவபிரானின் அரிய கைலைக்கு செல்வாயாக என்று அருள்புரிந்தருளி; அப்பால் திரும்பி முன்னமே தோன்றிய எமது ஐயனர் ஓர் சோலையிடத்து சென்றிருந்தார்.

வாளமர் நீந்தி வயந்தனின் மிக்க, காளென னப்படு கட்டுரை யோனை
ஆளுடை அண்ணல் அருட்கொடு நோக்கிக் கேளிவை யென்று கிளத்திடு கின்றான்

அங்கு; வாட்போர் பலதில் வெற்றிகொள்ளும் வினையில் மிகுந்த வீரமாகாளன் எனப் பேர்கொண்ட தமது சேனாதிபதியை; எம்மை ஆளுடைய ஐயனர் அருள் நிறைவுடன் பார்த்து; நான் சொல்வதைக் கேட்பாயாக என்று சொல்லியருள்கின்றார். 67

மூவரின் முந்திய மூர்த்தி வரைக்குப், போவது முன்னினன் பொன்னகர் மன்னன்
தேவியி ருந்தனள் தீங்கு வராமே, காவல் கொள்நீ யெனக் கற்பனை செய்தான்.

மூவரின் முந்திய மூர்த்தியாகிய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கைலாசமலைக்கு; போகவேண்டும் என நினைந்துகொண்டான் சொர்க்கலோக அரசன் இந்திரன்; அவன் தேவிஇந்திராணி இங்கு இருந்தாள்; அவளுக்கு ஒரு தீங்கும் வராமே காத்தருள்புரிவாயாக என ஐயனர் ஆஞ்ஞை செய்தார்.

மகாசாத்தாப் படலம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் — 1,497

# 33. இந்திரன் கயிலைசெல் படலம்

அத்துணை தன்னில் அருந்துணை இல்லான், மெய்த்துணை யாகிய மின்னினை நோக்கி
எய்த்திடல் ஐயன் அளிக்குவன் ஈண்டே, சித்தம் வருந்தல் எனத்தெளி வித்தான்

அந்த நேரத்து; சிறந்த துணை வேறு ஒன்றுமிலாத இந்திரன் தனது துணைவியான இந்திராணியை நோக்கி அம்மா சோர்வடையாதே ஐயனர் தீங்கு வராது உன்னைக் காப்பாற்றுவார்; இவ்விடத்து உனது மனம் வருந்தாதே என்று தெளிவித்தான். 1

மாதினை அவ்விடை மன்னுற வைத்தே, பேதுறு வானவர் பேரவை நண்ணிப்
போதுமெ னக்கொடு போந்து விரைந்தே, நாதன் அகன்கிரி நண்ணினன் அன்றே.

பெண்ணான இந்திராணியை அவ்விடத்து இருக்கும்படி செய்து துயரத்தால் பேதுறுகின்ற தேவர்கள் இருந்த பெரிய சபையை அடைந்து; போவோம் வாருங்கள் என்று

விரைவாக அழைத்து கொண்டுசென்று; எம்பெருமானுடைய விசாலமுடைய கைலாய மலையைச் சேர்ந்துகொண்டான். 2

அந்தர வைப்பில் அமர்ந்தவர் தம்மொடு, இந்திரன் அக்கயி லைக்கிரி யெய்தி
நந்தி பிரானுறை நன்கடை சேரா, வந்தனை செய்து வழுத்தினன் நின்றான்

வான உலகத்தில் வாழும் தேவர்கள் தங்களுடன்; இந்திரதேவன் அந்த திருக் கைலாய மலையை அடைந்து; நந்தியெம் பெருமான் வீற்றிருந்த நன்குடைய முதல் வாயிலை அடைந்து; அவரை துதித்து வணங்கியவாறு இந்திரன் நின்றான். 3

நிற்றலும் வந்ததென் நீபுகல் என்னச், சொற்றனன் அங்கது தொன்மையின் நாடி
இற்றில கொல்லுன் இருந்துய ரென்னு, நற்றவர் காணுறு நந்தி யுரைப்பான்.

நிற்றலும்; அவனை நந்தியெம்பெருமான் பார்த்து; நீ இங்கு வந்த காரணம் எது வாகும் சொல்வாயாக என; இந்திரன் தனது துயரைச் சொல்லுதலும்; அது கேட்டு இந்திரனது நெடுங்காலத் துயரப்பாட்டினை உணர்ந்து; இன்னமுமா உனது துயரம் நீங்கவில்லை என்று; நல்ல தபோதனர் தரிசனம் பெறுகின்ற நந்தியெம்பெருமான் இதைச் சொல்லியருள்வார். 4

நால்வர் உணர்ந்திட நாயகன் ஞான, மூல வியோக முதற்பொருள் காட்டி
ஏல இருந்தனன் யாவரும் ஏகக், கால மிதன்றென வேகழ றுற்றான்

சனகர், சனக்குமாரர், சனதனர், சதானந்தர் என்னும் நால்வரும் உணர்ந்து கொள்ளும்படி; எம்பிரான் ஞானத்தின் மூலமான யோகமார்க்கத்தின் உண்மைப் பொருளைக் காண்பித்தவாறு யோகத்தமர்ந்துள்ளார்; ஆகையால் திருச்சன்னிதி முன்பு ஆரேனும் செல்வதற்கு இது காலமல்ல எனக் கூறியருளினர் நந்தியங் கடவுள். 5

தேறுத வஞ்செய்சி லாதனன் மைந்தன் கூறிய வாய்மை குறிக்கொள ஓர்ந்து
மாறியி ழிந்திடு வல்விட மற்றும் ஏறிய தென்ன இடர்க்கட லுற்றான்.

சிவமே தெளிகின்ற தவத்தைச் செய்கின்ற சிலாதன முனிவருடைய திருமகனு ராகிய நந்தியெம்பெருமான்; கூறியருளிய திருவார்த்தையை இந்திரன் மனதில் குறிப் புடன் உணர்ந்து முன்னர் மாறி இறங்கிப் போன கொடிய நஞ்சு; ஒருவர்க்கு மீண் டும் தலைக்கேறியது என்னும்படி துயரமான கடலுள் அமிழ்ந்தினான். 6

இம்பரின் வாசவன் இன்னல் உழப்ப, உம்பர்கள் தாமும் உடல்தளர் வுற்றார்
தம்பம தான தடம்புணை தாழ, அம்புதி தன்னில் அழுந்திடு வார்போல்.

இவ்வாறு இந்திரன் துயரப்பட! அதுகண்ட தேவர்களும் தாங்களும் உடனே தளர்வுகொண்டார்; எதுபோலெனில் சமுத்திரத்தில் ஆழமைக்குப் பற்றிக் கொள் கின்ற தோணியானது கவிழ்ந்துபோக; எல்லாரும் கடலிலே ஆழ்வார் போன்றனராயினர்

செல்லல் உழந்து தியங்கிய தேவர், எல்லவர் தம்மொடும் இந்திர னென்போன்
நல்லருள் செய்திடு நந்திபி ரான்றன், மெல்லடி போற்றி விளம்புதல் செய்வான்.

துயரத்தினால் துன்புற்று வருந்திய தேவர்கள் எல்லோரோடும் இந்திரன் என்பவன் நல்ல அருளினைத் தந்தருளுகின்ற நந்தியெம்பெருமானின்; மிருதுவான மலர் போன்ற பாதங்களை வணங்கி; இதைச் சொல்வானாயினன். 8

தூய்நெறி நீங்கிய சூரபன் மாவுக், காயுவொ டாற்றல் அளப்பில செல்வம்
ஏயவை யாவும் இருந்தவ நீரால், நாயகன் முந்துற நல்கினன் அன்றே.

தூய்மையான தரும நெறியை விட்டு நீங்கிய; சூரபன்மனுக்கு நீண்ட ஆயுளுடன் அளவற்ற செல்வம்; ஆகியவை யாவையும் அவன் செய்துகொண்ட பெருந் தவத்தின் பேற்றினல் எல்லார்க்கும் நாயகரான சிவபிரான் முன்பு கொடுத்தருளினர். 9

நாங்கள் புரிந்திடு நல்வினை நீங்கித், தீங்கு குறித்தெழு தீவினை சேர
ஆங்கவன் ஏவலின் அல்லலு ழந்தேம், ஈங்கிது வும்மிறை வன்செயல் ஐயா.

நாங்கள் செய்திட்ட நல்வினையானது நீங்கித்; தீங்கினைக் குறித்துச் செய்தலால் வந்த தீவினையானது எங்கட்கு தலைப்பட்டதலால்; நாங்கள் அந்த சூரபன்மன் ஏவலினல் அல்லற்பட்டு உவந்து நின்றேம்; நந்தியெம்பிரானே இந்த எமது இப்போதுள்ள துயரமும் ஈசன் செயல்தான். 10

சூனர் இயற்கை சுரர்க்கருள் செய்யும், மாநிரு தர்க்கிறை வன்புரி துன்பம்
ஆன துணர்த்தி அடைந்தனம் என்னில், தானது போழ்து தவிர்த்திடல் வேண்டும்.

இழிந்த தொழில் புரியும் ஊன் விற்பவர்களின் செயலைச் செய்யும்படி; தேவர்களை கட்டளை செய்யும் பெரிய அசுரர் தலைவன் சூரபன்மன் செய்கின்ற துன்பங்களை நாம் நேரிற் சென்று சொல்லி தஞ்சமாக அடைந்தனமென்னில்; கருணைக் கடலான பெருமான்; எமது துயரையும் தவிர்த்திடல் வேண்டும்; 11

நீர்த்திரை போல நெறிப்பட யாங்கொள், ஆர்த்திய கற்றி அறந்தவிர் சூரன்
மூர்த்திகொள் ஆவியும் மொய்ம்பொடு சீருந், தீர்த்திடு கின்ற திறஞ்செயல் வேண்டும்.

அப்படியாகில்; கடலில் தோன்றுகின்ற அலைகள் போல ஓயாது நாம் பெற்றுக் கொள்கின்ற துயரங்களை நீக்கி; தருமத்தை விலக்கிய சூரபன்மனது உடலிற் பொருந்திய உயிரையும் வலிமையுடன் சிறப்புகளையும் தீர்த்திடுகின்ற ஓர் செயலை எம்பிரான் செய்திடல் வேண்டும்; 12

அன்னது செய்திடின் அன்பறு சூரன், முன்னர் அருந்தவ முற்றிய காலைச்
சொன்ன வரந்தொலை யுந்தொலை வானற், பின்னர் அவன்சொல் பிழைத்தனன் [என்பார்

இந்தச் செயலை எம்பிரான் செய்தருளினல் பின்னர்; அன்பு அற்ற சூரபன்மன் முன்னர் அரிய தவத்தைச் செய்து; அது முற்றிய காலத்து; எம்பிரான் அவனுக்கு சொல்லியருளிய வரம் தொலைவாகும்; தொலைவாகிப்போனல் இவ்வுலகிலுள்ளார் எம்பிரான் தனது சொல்லைத் தவறிவிட்டார் என்பார்கள்; 13

அல்லதெம் மல்லல் அகற்றிலன் என்னில், நல்லரு ளுக்கொரு நாயகன் என்றே
எல்லவ ரும்புகழ் ஏற்றமும் இன்றும், தொல்லை மறைப்படி யுந்தொலை வாமால்.

அல்லது எமது துன்பத்தை நீக்காது விடுவரேயாயின்; நல்ல அருளுக்கு ஒரு நாயகன் சிவன் என்று எல்லாரும் புகழ்ந்து துதிக்கும் மேன்மையும் இல்லாது போய்விடும்; பழைமையான வேதங்களில் சொல்லிய சிறப்பு நியதிகளும் அழிந்துபோம்; 14

ஆகையின் இவ்வகை ஆய்ந்தெமை யாளும், பாக நினைந்து பரம்பொரு ளானேன்
மோகமி லார்பெற மோனக ஞான, யோகியல் காட்டி யுறைந்துள னேகொல்.

ஆதலினால் எம்பிரான் எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டு; எம்மையும் ஆட்கொண்டு நன்னிலைப்படுத்தும் காலத்தை உணர்ந்து போலும்; பற்றுக்களை விடுத்துள்ள பெரியோரான நால்வரும் பெற்றுக்கொள்ளும்படி ஞானயோகத்தைக் காண்பித்தருளிய வாறு இருக்கின்றாரோ? 15

ஈங்கிவன் அல்லதை இத்திற மாகுந், தீங்கினை நீக்கவொர் தேவரும் இல்லை
ஓங்கிய மாலவ ரோடமர் செய்தே, ஆங்கவன் நேமியும் அற்றனன் ஐயா.

இங்கு எம்பிரான் அல்லாது வேறு எமக்கு உற்ற தீங்கினை நீக்கவல்ல எத்தேவரும் இல்லை; நந்தியங் கடவுளே! மேலோங்கிய வலியுடைய நாராயணப் பெருமானும் அந்தசூரனோடு போர் புரிந்து தனது சக்கரப்படையும் இழந்துபோய் இருக்கின்றார். 16

மூவரின் முந்திய மூர்த்தி செயற்கை யாவதும் ஈதென அண்டரும் யானும்
பூவுல கத்திடை போந்திடின் இன்னே, தீவினை யார்சிறை செய்வது திண்ணம்.

மூவர்க்கும் முந்திய மூவாத முதல்வனின் செயல் யாவும் இப்படியாயிற்றென்று நானும் தேவர்களும் பூவுலகத்திடையே போவோமாகில்; இப்பொழுதே அங்கிருக்கும் தீய செயலுடைய அசுரர்கள் எங்களைச் சிறைசெய்வர். 17

ஆதலின் ஆயிடை அண்டரும் யானும், போத லிலைப்புனி தன்கழல் காணத்
தீதறு வேலை தனைத்தெரி வுற்றுன், வாய்தலின் ஓர்புடை வைகுவன் என்றான்.

ஆதலினாலே தேவரும் யானும் அங்கு போக முடியாது; நின்மல சோதியான தூய சிவபெருமானின் திருவடிகளை என்கண்ணாரக் காண்பதற்கு நேரக்கூடிய தீங்கற்ற காலத்தை நான் தெரிந்துகொண்டு தேவரீரது வாய்தலில் ஓர்பக்கமாக வீற்றுருப்பேன் என்றான் இந்திரன். 18

பேர்பெறு நந்திபி ரானது கேளா, ஆர்வுறும் இன்னல் அகன்றிவண் நீவிர்
சேர்வுறு மென்றருள் செய்திட ஆங்கே, ஓர்புடை வாசவன் அண்டரோ டுற்றான்.

அடைந்தாரை காப்பவர் என்னும் பேருடைய நந்தியங் கடவுள் இதனைக் கேட்டு இந்திராதி தேவர்களே இப்போது உங்களைப் பந்தித்துள்ள துயரங்கள் நீங்கி; இவ்விடத்து சேர்ந்திருப்பீராக என்று அருள் செய்ய தேவர்களுடன் இந்திரன் அங்கு ஓர் பக்கராக அமர்ந்திருந்தான். 19

வானவர் கோனரன் மால்வரை தன்னிற், போனதும் உற்றதும் ஈண்டு புகன்றாம்
மானபு லோமசை செய்கையும் அல்லா, ஏனையர் செய்கையும் யாவும் இசைப்பாம்.

எம்பிரானே பன்னிருகையானே! தேவர்க்கரசனான இந்திரன் சிவபிரானின் கைலைமலைக்கு போன வரலாறும் அங்கு தங்கியிருந்தமையும் எடுத்துக் கூறினோம்; இப்பால் அழகிய இந்திராணியினது செய்கைகளும்; இன்னும் ஏனையோருடைய செய்கைகளையும் சொல்லியருள்வோம். என வியாழ பகவான் சொல்கின்றார்; 20

இந்திரன் கையிலை செல்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 1,517

833

# 34. அசமுகிப் படலம்

நீங்காதுறை தனிநாயகன் நெடுமாலயன் உணரா
ஓங்காரமு தற்பண்ணவன் உறையுங்கிரி செல்லப்
பாங்காயணங் கினர்போற்றிடப் பயில்காழிவ னத்திற்
பூங்காவனந் தனிலேசசி இருந்தேதவம் புரிந்தாள்.

எங்கும் விட்டு நீங்காது நித்தியப் பொருளாய் நிறைகின்ற தனிநாயகரும்; நெடிய நாராயணக் கடவுளும் பிரமதேவரும் உணராது விளங்கும் ஓங்காரத் தின் மூலப்பொருளான கடவுளும் ஆன சிவபிரான்; வீற்றிருந்தருளும் திருக் கைலாய மலைக்கு இந்திரன் சென்றுவிட; தனது பக்கராகத் தேவப் பெண்கள் போற்றி செய்திட; தான் வாழ்கின்ற சீகாழி வனத்தில் உள்ள பூங்காவனம் தன்னிலே இந்திராணி இருந்தே தவம் புரிந்தாள். 1

சேணுடுபு ரக்கின்றவன் சிந்தித்திடு கின்ற
மாணுகிய வினைமுற்றுற வருவான்றவம் புரிவாள்
காணுளவன் வருகின்றது காலம்பல தொலைய
நாணுடொறுந் தன்மேனியின் நலமாழ்குற மெலிவாள்.

தேவ உலகை ஆளுகின்ற இந்திரபகவான், தான் கைலைமலை சென்று சிவ னருள் பெற்று மீளுகின்ற; மாட்சிமையுடைய கருமம் கைகூடும்படியாகி; பின் னர் திரும்பி அவன் வரல்வேண்டும் என; தவம் புரிவாளாகிய இந்திராணி; இந்திரன் திரும்பி வருவதைக் காணப்பெறுளாகி; பலகாலமும் கடந்து போகின் றமையால்; கணவன் இந்திரன் வராமை குறித்துக் கவலை மேற்கொண்டு; நாள் தோறும் தனது மேனியின் நலப்பாடு குன்ற மெலிவாளாயினள். 2

கொளையாரிசை அளிபாடிய குழலிந்திரன் பிரிவால்
உளையாமனம் பதையாத்தவத் துறைகின்றதொ ரளவில்
வளையார்கலி உலகந்தனில் வாழ்சூரபன் மாவுக்
கிளையாள்பலர் இளையார்புணர்ந் தாலுஞ்சிறி திளையாள்.

வண்டுகள் கூட்டமாகக் கீதத்தைப் பாடியவண்ணம் சுழன்று திரிகின்ற; பூச்சூடிய கூந்தலையுடைய இந்திராணி; இந்திரனுடைய பிரிவினால் உள்ளம் வருந்தி; மனம் பதைத்தபடி தவத்தில் இருக்கின்ற காலத்தில்; சமுத்திரம் வளைந்து சூழப்படுகின்ற இப்பூமியில்; வாழுகின்ற சூரபன்மனுக்கு இளையதங்கை எனப்படும் அசமுகி என்பவள்; அவளின் சிறப்பு என்னெனில்; பல இளந்தாரி கள் அவளைக் கூடிப் புணர்ந்தாலும் கொஞ்சமேனும் களைத்து இளைக்காள். 3

கழிகின்றதோர் கடலேபுரை காமந்தெறு நோயால்
அழிகின்றவள் எவர்தம்மையும் வலிதேபிடித் தணையும்
இழிகின்றதொ ரியல்பாள்முகில் இனம்வாய்திறந் தெனவே
மொழிகின்றதோர் கடியாள்அச முகியென்பதோர் கொடியாள்.

இந்த அசமுகி; பெருகுகின்ற கடல்போன்ற காமமாகிய நோயினால் அழிந்து திரிகின்றவள்; ஆதலால், ஆடவர் என எவர் சந்தித்தாலும் வலிதே பிடித்து இழுத்து அணைந்து கூடுகின்ற இழிதான செயலினை உடையவள்; முகிற்கூட்டங்கள் வாய்திறந்து இடித்து முழங்குகின்றதெனும்படி; மொழிகின்ற கடின வார்த்தையை உடையவள் அசமுகி என்னும் கொடியவள். 4

பொறையில்லவள் அருளில்லவள் புகழில்லவள் சிறிதும்
நிறையில்லவள் நாணில்லவள் நிற்கின்றதொ ரறத்தின்
முறையில்லவள் வடிவில்லவள் முடிவில்லதொர் கற்பின்
சிறையில்லவள் உலகோர்க்கொரு சிறையாமெனத் திரிவாள்.

இந்த அசமுகி பொறுமை இல்லாதவள்; இரக்கம் இல்லாதவள்; புகழ் இல்லாதவள்; சிறிதும் நிறைவு இல்லாதவள்; நாணம் இல்லாதவள்; நிற்கின்றதோர் தருமத்தின் முறையில்லாதவள்; வடிவு இல்லாதவள்; முடிவில்லா இன்ப நிலை தருகின்ற கற்பு எனும் காவல் இல்லாதவள்; இந்த உலக மக்களுக்கே, தான் ஒரு சிறைச்சாலை போன்று அனைவரும் துயருறத் திரிவாள். 5

கீழுற்றிடும் உலகெத்தனை அவையாவையுங் கிளர்ந்தோர்
வாழுற்றிடும் உலகெத்தனை அவையாவையு மாடே
சூழுற்றிடும் உலகெத்தனை அவையாவையுஞ் சுற்று
ஊழுற்றிடு தன்னூர்தனில் ஒருநாழியில் வருவாள்.

இப்பூமியின் கீழாக எத்தனை உலகம் இருக்கின்றனவோ அவை யாவையும்; தேவர்களாய் வாழுகின்றவர்கள் உலகங்கள் எத்தனையோ அவை யாவற்றையும்; இப்பூமியின் பக்கராகிச் சூழ்ந்துள்ள உலகம் எத்தனையோ அவை யாவற்றையும்; சுற்றிக்கொண்டு; தனது துயரம் புரியும் செயலுக்கு முதலான இடமாகி விளங்குகின்ற; தனது ஊர் வீரமகேந்திர புரத்திற்கு ஒரு நாழிகைப்பொழுதில் வந்து சேருவாள். 6

பொய்யுற்றவள் களவுற்றவள் புரையுற்றிடு கரையூன்
துய்யுற்றவள் களியுற்றவள் சோர்வுற்றவள் கொலைசெய்
கையுற்றவள் விழியாலழல் காலுற்றவள் பவத்தின்
மெய்யுற்றவள் படிறுற்றவள் முனிவுற்றவள் மனத்தின்.

பொய் பேசுபவள்; களவு செய்பவள்; குற்றம் நிறைந்த கள்ளையும் இறைச்சியையும் உண்பவள்; வெறியர் போலும் களிப்பு உடையவள்; சோம்பல் உடையவள்; கொலை செய்கின்ற கைப்பழக்கம் உடையவள்; கண்களால் நெருப்புக்கக்க கூடியவள்; பாவத்தின் வடிவம் கொண்டவள்; வஞ்சனை உடையவள்; மனதில் எப்பொழுதும் கோபமுடையவள். 7

பொங்குஞ்சிகை அழல்மைத்தலை புகுந்தாலென ஒளிருஞ்
செங்குஞ்சிய துடையாளெவர் செருச்செய்யினும் இடையாள்
துங்கங்கெழு தூணத்திடை தோன்றிக்கன கனைமுன்
பங்கம்படுத் துயிருண்டெழு பகுவாயரி நிகர்வாள்.

பொங்கி எழும் சுடர்கொண்ட நெருப்பு, ஆட்டின் தலையில் புகுந்தால் ஒப்ப விளங்கும் சிவந்த கூந்தலை உடையவள்; எந்த வீரர் போர் செய்தாலும் பின்னிடாதவள்; மேன்மை விளங்கும் தூணிலே, அன்று தோன்றிய இரணியனை முற்காலத்தில் கிழித்து அவன் உயிரைக் கொன்ற; திறந்த வாயினை உடைய நர சிங்கத்தை ஒப்பவள். 8

சீயப்பெரு முகன்தாரகன் நிகராகிய திறலாள்
மாயத்தொழில் பயில்கின்றவள் மணிமால்வரை புரையுங்
காயத்தவள் அடற்கூற்றையுங் கடக்கின்றதொர் வலியாள்
தோயப்புண ரிகளேழுமொர் துணையிற்கடந் திடுவாள்.

சிங்கமுகாசூரன், தாரகாசூரன் முதலியோரின் திறலாகிய தன்மை உடையவள்; மாயத்தொழில் பல செய்கின்றவள்; நீல மலையை ஒத்த பருத்த உடலத்தை உடையவள்; கொடிய இயமனையும் வெற்றிகொள்கின்ற வலிமை உடையவள்; நீர் நிரம்பிய ஏழு சமுத்திரங்களையும் ஒரே தாவலில் பாய்ந்து கடக்க வல்லவள். 9

மாலுற்றிட வாழ்சூரபன் மாவின்கிளை முழுதும்
மூலத்தொடு முடிவித்திடு முறையூழ்வினை யென்னச்
சூலத்தினை யேந்தித்தனி தொடர்துன்முகி யுடனே
ஆலத்தின துருவாமென ஆங்குற்றனள் அன்றே.

மயக்கத்தினால் ஆசை வலைப்பட்டு வாழும் சூரபன்மனின் அசுரர் கூட்டம் முழுவதும் வேரோடு அழிந்து போகச் செய்வதற்கு ஏதுவாகின்ற ஊழ்வினை என்னும்படி; சூலப்படையைக் கையில் ஏந்திக்கொண்டு தனித்துத் தொடர்ந்து வருகின்ற துன்முகி என்பாளுடன் ஆலகாலத்தின் வடிவம்தான் இவள் என்னும்படியாக! அங்கு சீகாழி வனத்தில் வந்து சேர்ந்தாள் அசமுகி. 10

கானின்றுள பொழிலோர்தனைக் காணுநனி சேணுள்
ஆநன்றென வியவாப்புவி அமர்சோலையி தன்றால்
வானின்றுள வனத்தைக்கொடு வந்தேயிவண் மகவான்
தானின்றுவைத் தானிங்கிது தப்பாதென நிற்பாள்.

மிகத் தூரத்து வரும்போதே சீகாழி வனத்து நின்றுள்ள இந்திரனுடைய பூஞ்சோலையை அசமுகி கண்ணுற்று; ஆகா! இது மிக நன்றானது என்று சோலையின் அழகை வியந்து; இது உண்மையில் பூமி இடத்துள்ள சோலையல்ல; வான உலகத்து நின்றுள்ள அந்தப் பூஞ்சோலையைக் கொண்டுவந்து இவ்விடத்து இந்திரதேவன் இன்று வைத்துள்ளான் போலும்; இது தப்பாத வார்த்தை என்று கூறியவண்ணம் அசமுகி சிறிது நிற்பாளாயினள். 11

ஏலாவிது காணுயென ஈர்ந்தண்பொழில் எழிலை
ஆலாலம தெனவேவரும் அசமாமுகி யென்பாள்
பாலானதுன் முகிதன்னொடு பகராவது காட்டிக்
கோலாலம துடனேயது குறுகும்படி வந்தாள்.

அடியே துன்முகி, இச்சோலையின் அழகைப்பார் என்று குளிர்ந்த வனப்புடைய அச்சோலையின் எழிலை; ஆலகாலம் என்னும் நஞ்சுபோல் வரும் அசமுகி என்பவள்; தனது பக்கராக வரும் தோழி துன்முகி தன்னுடன் சொல்லி; அவளுக்கும் சோலையைக் காண்பித்து; கோலாகலத்துடன் சத்தமிட்டவாறு சோலையைக் கிட்டும்படி வந்தாள். 12

மட்டுற்றிடு தண்காவினை வருடைத்தனி முகத்தாள்
கிட்டிச்சினை நனைமாமலர் கிளையாவையும் நோக்கித்
தட்டற்றிவண் உறைகின்றவர் தமைநோக்குவ லென்னு
எட்டுத்திசை யினும்நாடுதற் கிடையுற்றனள் கடிதின்.

தேன் சொரியும் மலர்தருகின்ற குளிர்ச்சி பொருந்திய சோலையை; ஆட்டு முகத்தினை உடைய அசமுகி அடைந்து; கொம்பும் அரும்பும் பூக்களுமாகிய எல்லாவற்றையும் பார்த்து; சரிசரி யார் இங்கு இருப்பார் என்பதைத் தாமதமின்றி பார்த்தறிவேன் என்று; எட்டுத் திக்கிலும் நாடியறிதற்கு அச்சோலையில் விரைவிற் பிரவேசித்தாள் அசமுகி. 13

அதுகண்டனன் அவண்நின்றதொ ரையன்படைத் தலைவன்
முதுகண்டகி இவளாம்அச முகியென்பதொர் கொடியாள்
எதுகண்டிவண் வருகின்றனள் என்னோகருத் திவள்தன்
கதிகண்டனன் நிற்பேனெனைக் காணுநெறி யதனில்.

அசமுகி சோலையினுள் பிரவேசித்தலை அவ்விடத்து நின்ற ஐயனாரின் படைத் தலைவன் வீரமாகாளன் கண்டான்; ஓகோ! இவள்தான் மிகவும் கீழ்மையான கெட்ட ஒழுக்கமுடைய பாதகி; அசமுகி என்னும் பெயருடைய கொடியாள்; எதைக் கண்டுகொண்டு இங்கு வருவாள்; இவளின் நோக்கம் யாதாகுமோ அறியேன்; இவள் போகின்ற பாதையை நான் அவதானித்துக் கொண்டு; ஆனால் இவள் என்னைக் காணாதபடி நிற்பேன் என்றார் ஐயனாரின் சேனைத் தளபதி வீரமாகாளதேவர். 14

மற்றிங்கிவள் செயல்யாவையும் வரலாற்றொடு காணுத்
தெற்றென்றவண் மீள்கின்றுழிச் செவ்வேயெதிர் போந்து
குற்றந்தனக் கிசையுந்திறம் முடிப்பேனெனக் கொலைசெய்
விற்றங்கிய புயவேடரில் வேரூரிடை நின்றான்.

இவ்வாறு உள்ளே செல்லும் இக்கொடியவளின் செயல் யாவையும் நான் ஆதியோடு அந்தமளவும் பார்ப்பேன்; பின்னர், இவள் திடீரென்று மீள்கின்ற நேரத்து; செப்பமுடன் இவள் முன் நேராகச் சென்று; இவள் இங்கு செய்து விட்டுப் போகின்ற குற்றத்திற்கு ஏற்றதோர் தண்டனை கொடுப்பேன்; என எண்ணிக்கொண்டு வீரமாகாளதேவன்; கொலை செய்கின்ற வில்லை ஏந்திய வேடன் போன்று; வேரூரிடை அசமுகி காணாவண்ணம் மறைவாக நின்றான்.

மகாபாதகி இவள்; போனால் சும்மா திரும்பாள்; ஏதோ வம்பு செய்து தான் வருவாள்; ஆகவே, நான் அதுவரையும் முன்னுக்கு என்னைக் காட்டிக் கொள்ளாது பொறுத்திருந்து; இவள் திரும்பி வரும்போது இவள் செய்த குற்றத்திற்கு இசைவான தண்டனை கொடுப்பேன் என மறைவில் அவளின் செயலைக் கவனித்தவாறு வீரமாகாளதேவர் நின்றார். 15

நின்றானவன் அதுகண்டிலள் நெஞ்சிற்களி தூங்கக்
குன்றாமுலை அசமாமுகக் கொடியாள்அவ ளுடனே
சென்றாள்மலர்க் காவெங்கணுந் திரிந்தாள்திரிந் தளவில்
பொன்றாழ்முலைச் சசிமாதவம் புரிகின்றது கண்டாள்.

இவ்வாறு கூறிய வீரமாகாளர் அசமுகியின் போக்கைக் கவனித்தவாறு நின்றார்; அவரை அசமுகி காணாதவளாய் மலைபோன்ற முலைகளை உடைய துன்முகி என்னும் கொடியவளான தோழியுடனே மனதில் பெரும் களிப்புடன் உள்ளே சென்றாள்; பூக்கள் நிறைந்த சோலை எங்கணும் திரிந்தாள்; திரிந்த நேரத்து பொன்போலத் தாழ்ந்த முலைகளை உடைய இந்திராணி தவம் புரிகின்றமை கண்டாள். 16

அந்தாவிவள் அயிராணிநம் மரசன்றனக் கஞ்சி
நந்தாவளந் தனைப்பெற்றபொன் னகரத்தைவிட் டிங்கே
வந்தாளிவள் தன்னைக்கொடு வருவீரென எங்கோன்
முந்தாதர முடனுய்த்தனன் முடிவற்றதன் படையே.

அந்தா! இவ்விடத்தில் இந்திராணி எங்கள் அரசன் சூரபன்மனுக்குப் பயந்து; குறைவிலாத வளங்களைப் பொருந்தி உள்ள பொன்னுன தேவ உலகை விடுத்து; இங்கே வந்திருக்கின்றாள்; இவள் தன்னைத் தேடிப் பிடித்துவருவீராக என்று; எங்கள் அரசன் சூரபன்மன் இந்திராணி மேற்கொண்ட விருப்பத்தினாலே; முடிவற்று விளங்கும் தனது சேனையை விடுத்தான். 17

இங்குற்றதை உணராமையின் இமையோர்புரம் நாடி
அங்குற்றிலள் அயிராணியென் றரசன்தனக் குரைப்ப
வெங்கட்டழ லெனச்சீறினன் மீண்டுஞ்சிலர் தமையித்
திங்கட்புரை முகத்தாள்தனைத் தேடும்படி விடுத்தான்.

அச்சேனைகள், இந்திராணி இங்குற்றதை உணராமையின்; தேவ உலகில் இந்திராணியைத் தேடிவிட்டு; அங்கு இந்திராணி இல்லையென வந்து; எங்கள் அரசன் சூரனுக்குச் சொல்ல; அது கேட்ட சூரபன்மன் சொன்ன சேனுதிபதிகளுடன் கொடிய நெருப்பைப் போன்று சீறினன்; பின்னரும் வேறுசில சேனை வீரரை இந்தப் பூரணசந்திரனை ஒத்த முகமுடைய இந்திராணியைத் தேடும்படி விடுத்தான். 18

வானெங்கணும் பிலமெங்கணும் வரையெங்கணும் பரவை
தானெங்கணுந் திசையெங்கணுந் தரையெங்கணுந் தரையிற்
கானெங்கணும் நமர்தேடினர் காணாரிவள் தன்னை
ஊனெங்கணும் வருந்தத்திரிந் துழன்றாரிது வுணரார்.

எம்முடைய அந்த அசுர வீரர்கள்; வானுலகெங்கணும்; பாதாள உலகம் எங்கணும்; மலைநாடு எங்கணும்; சமுத்திரம் எங்கணும்; திக்குகள் எங்கணும்; பூமி எங்கணும்; பூமியில் உள்ள காடு எங்கணும் தேடினார்கள். இவளைக் காணாதவர்களாய்; தங்கள் உடலம் எல்லாம் வருந்தும்படி திரிந்து உழன்றார்கள் இதனை உணரார்கள். 19

தண்டேனமர் குளிர்பூங்குழற் சசியென்பவள் தனைநான்
கண்டேனினி இவள்மையலிற் கவலாதொழி கென்றே
வண்டோலிடு தொடைமன்னவன் மகிழ்வெய்தமுன் னுய்ப்பக்
கொண்டேகுவன் யானேயிவள் தனையென்றுகு றித்தாள்.

குளிரும் தேனைச் சொரியும் பூக்கள் சூடிய கூந்தலை உடைய இந்திராணியைக் கண்டேன் இவ்விடத்து; இனி இவளைத் தூக்கிக்கொண்டு சென்று: எனது அண்ணனே இவள்மேல் காதலாகி இன்னமும் கவலைப்படாதே என; வண்டுகள் மொய்த்து ஓசையிடுகின் பூமாலையணிந்த; எங்கள் அரசன் மகிழ்வெய்த அவனிடம் கொடுக்கும்படி கொண்டுசெல்வேன் என எண்ணினாள். **20**

இத்தேமொழி தனைஇந்திரன் ஈண்டேதனி யாக
வைத்தேகினன் இவள்தன்னை வருந்தாதளித் திடவோர்
புத்தேளிரும் இலரிங்கிது பொழுதாமவன் புகுமுன்
கொத்தேமலர்க் குழலாள்தனைக் கொடுபோவனென் றடைவாள்.

இந்தத் தேன்சொரியும் மொழியாளை இந்திரதேவன்; இவ்விடத்துத் தனியாக வைத்துவிட்டு எங்கோ சென்றிருக்கின்றான்; இவள் வருத்தமுறாது காவல் கொள்வதற்கு ஒரு கடவுளரும் இல்லை; இது இங்கு நன்றுடைய காலமாகும்; அந்த இந்திரன் திரும்பி வருவதன்முன்பாக; கொத்தான பூக்களையணிந்த கூந்தலையுடைய இவளைக் கொண்டுசெல்வேன் என்று இந்திராணியைச் சென்று அடைந்தாள். **21**

தீனக்குரற் கடுஞ்சொல்லெனும் உருமேறு தெழிப்பக்
கூனற்பிறை எயிறுகிய மின்னுப்புடை குலவக்
கானக்கரும் படிவத்தொடு கால்கொண்டெழு விசையால்
வானப்புயல் வழுவிப்புவி வந்தாலென வந்தாள்.

கடுமையான முரட்டுத் தன்மைகொண்ட வார்த்தை அசமுகி வாயிலே இடியேற்றின் சத்தம் போன்று தொனிப்ப; அவளுடைய கடைவாயில் கூனிய பிறையென்னும்படியாக வளைந்த இருபற்கள் மின்னலைக் கக்கியதுபோன்று ஒளியுடன் விளங்க; அடர்ந்த கருமையே எங்கும் பரந்த வடிவத்துடன்; காலால் நடந்துசெல்லும் வேகத்தால்; காற்றினால் அள்ளுண்டு வானிலிருந்த கருமேகம் மின்னி இடித்துக்கொண்டு பூமியில் வந்தால் ஒப்ப; இந்திராணிமுன் அசமுகி கொடிய குரலுடன்; வளைந்த பல்லுடன், கறுத்த வடிவுடன், வேகத்துடன் சென்றாள். **22**

ஊற்றங்கொடு வருதுன்முகி யுடனேயச முகிதான்
தோற்றங்கிளர் மணிவெற்பெனத் துண்ணென்றவண் வரலும்
ஏற்றம்பெற நோற்றேதனி இருந்தாளது காணுக்
கூற்றந்தனைக் கண்டாலெனக் குலைந்தாள்வலி குறைந்தாள்.

அசமுகியின் வடிவின் பிரதியே பக்கத்து வருவதுபோன்று; வருகின்ற துன்முகியுடன் அசமுகி தானும்; மிகப் பருமையாக விளங்கும் மலைபோல் திடுக்கிடும்படி அவ்விடத்து வரலும்; தமது இழிந்த அடிமைநிலை நீங்கி உயர்வுபெறும்படி அங்கே இருந்து தவம் செய்த இந்திராணி; அதனைக் கண்ணுற்று; இயமனைக் கண்டாலொத்து ஏக்கத்தால் உள்ளம் குலைந்தாள்; தனது வலிமை எல்லாம் கெட்டு நின்றாள். 23

நீரோதமி சைத்தங்கிய நிருதக்குல மகளோ
பாரோர்மயக் குறுபேய்மக ளோபாரிடத் தணங்கோ
சூரோடுறு தனிக்கொற்றவை தொழில்செய்பவள் தானோ
ஆரோவிவள் அறியேனென அஞ்சிக்கடி தெழுந்தாள்.

ஐயோ! இங்கே வரும் இவள் நீர் நிறைந்த கடலின் நடுவே வாழுகின்ற அசுர குலப் பெண்ணோ; பூமியில் உள்ளார் கண்டு அஞ்சி மயக்கமடையும் பேய் மகளோ; பூதகணத்துப்பெண்ணோ; அச்சத்தை விளைத்துக் கொண்டிருக்கும் ஒப்பற்ற துர்க்காதேவியின் ஏவல் செய்யும் பெண்ணோ; வேறு யாரோ? நான் அறியேனே எனப் பயங்கொண்டு விரைவுடன் எழுந்துகொண்டாள். 24

எழுகின்றவள் தனைநில்லென இசைத்தேயெதிர் எய்தி
மொழிகின்றனள் அயிராணிநின் முதிராவிள நலனும்
பழியில்லதொர் பெருங்காமரும் பயனற்றிவண் வறிதே
கழிவெய்திடத் தவம்பூண்டிடல் கடனோஇது விடுநீ.

எழுகின்ற இந்திராணியை நோக்கி, நில் போகாதே எனக் கூறிக்கொண்டு முன்சென்று; அசமுகி சொல்வாள்; இந்திராணியே கேள், உனது மூப்பு அடையாத இளநலனும்; பழி இல்லாத பெரிய அழகும் வீணே இங்கு பயனற்று அழிந்துபோகும்படி நீ தவம்செய்திருத்தல் உனது கடனோ இல்லையே; இதை விடுவாயாக; இவ்வளவு அழகும், எழிலும், இளமையும் உடைய நீ உனது நலன் கெட்டிட தவமும் செய்ய வேண்டுமா; வேண்டியதில்லையே என்றாள். 25

ஆரொப்புனக் குலகந்தனில் அருளாழியம் பகவன்
மார்பத்துறை திருமங்கையும் மற்றிங்குனக் கொவ்வாள்
பாரிற்கரந் திருந்தேதவம் பயில்வாயிதென் உன்னைச்
சேரத்தவம் புரிகின்றனன் திறற்சூரபன் மாவே.

இந்த உலகில் உனக்கு ஆர் ஒப்பாவார்; அருள் நிறைந்த சக்கரப்படையுடைய திருமாலின் மார்பில் இருக்கும் மகாலட்சுமியும் இங்கு உனக்கு ஒப்பாகாள்; பூமியில் ஒளித்திருந்தல்லவோ தவம்புரிவாய்; இது ஏன் இப்படி; உன்னைச் சேரும்படியல்லவோ தவம்புரிகின்றான் வலிமையிற் சிறந்த சூரபன்மன். 26

இந்நாள்வரை உனைநண்ணிய இமையோர்க்கிறை உனது
நன்னுயக ளுகப்பெரு நலனுற்றவன் அன்றே
தன்னுலுணர் வரிதென்பர்கள் தன்பேரழ கதனைப்
பன்னாள்அவ னுடன்மேவினை பாகிற்படு கரிபோல்.

இந்த நாள்வரை உன்னைக் கணவனாக அடைந்த இந்திரன்; உனது நாயகனாகப் பொருந்தும்படி பெருநலன்களை உடைய ஒருவன் அல்ல; உலகில் தனது பேரழகு தன்னால் உரைமுடியாதெனச் சொல்வர்; ஆகையால் பல நாளும் நீ அவனுடன் கூடி வாழ்ந்தாய்; எப்படியெனில், பாகனிடம் அகப்பட்டுக்கொண்ட யானைபோல். 27

தவறுஞ்சுரர் உலகொன்றுளன் சதவேள்வியன் எம்முன்
புவனம்பல அண்டம்பல புரக்குந்திரு வுளனால்
இவனங்கவன் பணியேபுரிந் திளைத்தேகரந் தூழல்வான்
அவனிங்கிவன் றனையேவல்கொண் டகிலந்தனி யாள்வான்.

தான் இழந்துபோன தேவ உலகம் ஒன்றைமட்டும் உளன் நூறு யாகங்களைச் செய்த பேற்றால் உன்னை அடைந்த இந்திரன்; ஆனால், எனது தமையனான சூரபன்மனோ; பல புவனங்களையும், பல அண்டங்களையும், பல உலகங்களையும் அரசாளுகின்ற செல்வப் பேறுடையவன்; இந்த இந்திரன் அந்தச் சூரபன்மனின் பணியே புரிந்து களைத்து அலுத்து ஒளித்துத் திரிகின்றான்; ஆனால், சூரபன்மனோ இந்திரனை ஏவல்கொண்டு உலகினையெல்லாம் தனி அரசாட்சி புரிந்து இருப்பான்; 28

அழிவில்லவன் அவனிங்கிவன் அழியும்பரி சுடையான்
பழியில்லவன் அவனிங்கிவன் பழிவேலையில் திளைப்பான்
கழியும்படர் உழந்தானிவன் களிப்புற்றுளன் அவனே
தொழுவன்பல ரையுமிங்கிவன் தொழுமோவவன் சிலரை.

எனது அண்ணன் அழிவில்லாத ஆயுள் உடையவன்; உனது இந்திரன் அழிந்துபோகும் தன்மை உடையவன்; ஒருவர்க்கு அடிமையானேன் என்னும் பழி ஒருகாலமும் எனது அண்ணனுக்கு இல்லை; ஆனால், உனது இந்திரனோ ஓயாது பழியான கடலில் மூழ்கியவனாய் பழிபூண்டு திரிவான்; உனது கணவன் இந்திரன் பெருந்துன்பத்தை அநுபவித்துக்கொண்டிருக்கின்றான்; ஆனால், எனது அண்ணன் எந்நேரமும் மனக்களிப்புடன் வாழ்பவன். இந்திரன் பலரையும் கைகூப்பித்தொழுவான்; ஆனால், எனது அண்ணன் சூரன் சிலரையாவது வணங்குவானா? மாட்டானே. 29

அந்நேரில னோடுமேவுவ தறிகின்றிலை அனையான்
தன்னேவலின் ஒழுகித்திரி தமியேன்றனைத் துணையென்
றின்னேமெலிந் தனையீதுனக் கியல்போநின தெழிலுங்
கொன்னேகழிந் தனபற்பகல் குறியாயிது குணமோ.

இத்துணையால் தனக்கு நேர் பிறரொருவர் இல்லாத சூரபன்மனோடு கூடி வாழுவதற்கு இந்திராணியே நீ தெரிந்துகொள்கின்றாய் இல்லை; அந்த சூரபன் மனது ஏவலின்படி ஒழுகிக்கொண்டு திரிகின்ற இந்திரன்தனை துணையென்று; இப்படி மெலிவுற்றுத் துன்புறுகின்றாயே; இந்தச் செயல் உனக்குத் தகுதியானதா? உனது அழகும் பலநாளாகக் கழிந்து கெட்டுப்போயது; இதைப்பற்றி நீ சிந்திக்கின்றாயில்லை இது குணமாகுமா? 30

எத்தேவரும் முகிலூர்தியும் இகல்மேவரும் அவுணக்
கொத்தேவரும் அணங்கோருமுன் குற்றேவல்செய் திடவே
முத்தேவரும் புகழப்படும் மொய்ம்புற்றிடு சூர்முன்
உய்த்தேயவ னேடுகூட்டுவன் உலகாண்டுடன் இருக்க.

ஆகையால் எந்தத் தேவரும்; முகிலை வாகனமாக உடைய இந்திரனும்; வலிமையால், வீரத்தினுல் மேம்பட்ட அசுரராயுள்ள தொகுதியினர் அனைவரும்; தேவப் பெண்களும்; உன்னுடைய குற்றேவல்களைச் செய்துகொண்டு உனக்கு அடிமைகளாக இருப்ப; பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மூன்று கடவுளருமே புகழ்ந்து கொள்ளப்படுகின்ற; வலியுடன் கூடிய சூரபன்மன் முன்பு யான் உன்னைக் கொண்டு சென்று சேர்த்து வைப்பேன்; அவனுடனுக நீயும் உலகையாண்டுகொண்டு உடனிருக்கும்படியாக. 31

பொன்னேடிகல் பங்கேருகப் பூங்கோமளை தனையும்
அன்னேன்வெறுத் திடுவன்பிறர் அனைவோரையும் அஃதே
உன்னேடுள வறுகாதலின் உறுமிங்கிது சரதம்
என்னேடினி வருவாய்கடி தென்ருள்அறங் கொன்ருள்.

மகாலட்சுமியோடு அழகால் மாறுபடும் பதுமகோமளை என்னும் தனது தேவியையும், உன்னைக் கண்டமாத்திரத்து அந்தச் சூரபன்மன் வெறுத்திடுவான்; இஃதன்றி அன்பினுல் பின்னர் திருமணஞ் செய்துகொண்ட ஏனைய மனைவிமார்களையும் அப்படியே வெறுத்திடுவான்; உன்னேடுதான் சூரபன்மன் நீங்காது கொள்கின்ற காதலால் வாழ்வான்; இது உண்மை. ஆகவே, என்னேடு இனி நீ வருவாயாக என்ருள் அசமுகி. 32

அசமுகிப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1549.

---

842

# 35. இந்திராணி மறுதலைப் படலம்

தக்க வேழகத் தலையள் கூறிய
அக்கொ டுஞ்சொலை அணங்கு கேட்டலும்
தொக்க தன்செவித் துளையில் அங்கிவேல்
புக்க தேயெனப் பொருமி விம்மினள்.

இவளுக்கு இந்த முகம்தான் சரி எனும்படி ஆட்டுமுகமுடைய அசமுகி சொல்லிய இந்தக் கொடிய வார்த்தைகளை; அழகில் சிறந்த இந்திராணி கேட்டலும்; தொகுதியான தனது இரண்டு காதின் துளையூடு; நெருப்பில் காய்ச்சிய வேலைச் செலுத்தினால் போன்று; துயரங்கொண்டு அழுதாள். 1

கைம்ம லர்க்கொடே கடிதில் தன்செவி
செம்மி வல்வினைத் தீர்வு நாடியே
விம்மி யங்குறும் வெய்யள் கேட்டிட
இம்மெ னச்சில இசைத்தல் மேயினள்.

மிக நொந்து அழுது; தனது மலர்போன்ற கையினாலே தனது காதினைப் பொத்தி; கொடிய பாவவினை, அசமுகியின் வார்த்தை கேட்டமையால் தன்னை வந்து சேர்ந்துகொள்வதற்கு பிராயச்சித்தத்தை உணர்ந்து; அதற்காக தானே வருத்தமுற்று மீண்டும் அழுது அங்கே இருக்கின்ற கொடிய அசமுகி கேட்டிடும் படியாக; சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினாள் இந்திராணி. தனக்கு முன்புள்ள அவள் கேட்கும்படி தருமநெறியைச் சொல்வதும்; அதுவே தீய வார்த்தை கேட்டதற்குப் பிராயச்சித்தம்போலும். 2

ஏடி நீயிவண் இசைத்த தீமொழி
நேடி ஓர்ந்துளார் நிரய மாநெறி
யூடு சேர்வரால் உரைத்த நிற்குமேற்
கூடு தீமையார் குறிக்கற் பாலரே.

அடியே அசமுகி! நீ இப்பொழுது சொன்ன வார்த்தையை விரும்பிக் கேட்பவர்கள் தாமும்; கொடிய நரகத்தினூடு சென்று சேரப்பெறுவார்கள்; ஆகையால், இந்தக் கொடிய வார்த்தையைச் சொன்ன நினக்கு வந்து சேரப் போகின்ற தீமையின் விளைவுபற்றி யார்தான் குறித்துப் பேசமுடியும். 3

வேதம் யாவையும் விதித்த நான்முகன்
காத லன்தருங் கடவுள் மங்கைநீ
நீதி யில்லதோர் நெறியின் வாய்மையைப்
பேதை யாரெனப் பேச லாகுமோ.

வேதங்கள் எல்லாவற்றையும் இவ்வுலகில் தந்துள்ள நான்கு முகமுடைய பிரமதேவரின் காதல் மைந்தன்; காசிப முனிவனுக்குத் தோன்றிய தெய்வத் தன்மையுடைய மங்கையாக நீயிருந்தும்; இப்படியாகச் சற்றேனும் நீதியில்லாத வார்த்தையை அறிவில்லாதவரைப்போல் பேசலாகுமோ? 4

தீங்கி யாவர்க்குஞ் செய்தி டாதவர்
தாங்கள் துன்புறர் தமக்கு வேண்டினோர்
ஆங்கெ வர்க்குமுன் அல்லல் செய்வரால்
ஈங்கு நீயிவை எண்ண லாய்கொலோ.

அசமுகியே! இந்த உண்மையை அறி; யாவர்க்கெனினும் தீங்கு செய்யா தவர்கள்; தாங்கள் ஒருபோதும் துன்புற மாட்டார்கள்; ஆனால், தீங்கு தமக்கு வரவேண்டுமென்று விரும்புவார்கள்தான்; எல்லார்க்கும் ஆங்காங்கு தீவினையைப் புரிவார்கள். இது எக்காலமும் நிகழ்வுறும் உண்மை; இதனை நீ உணரமாட் டாயோ. 5

தருமம் பார்த்திலை தக்க மாதவக்
கருமம் பார்த்திலை கற்பும் பார்த்திலை
பெருமை பார்த்திலை பிறப்பும் பார்த்திலை
உரிமை பார்த்திலை உறவும் பார்த்திலை.

தருமம் என்ற ஒரு பொருள் உண்டு; அதுதான் எப்பொழுதும் எல்லாக் கருமத்திற்கும் மேலானது; ஆகவே, ஒரு பொருளைப் பற்றிப் பேசப் புகுந்தால் முதல் அதைப் பார்க்க வேண்டும்; அதன்பின் தகுதிவாய்ந்த பெரிய தவச்செய லுக்கும் பொருத்தமாமோ எனப் பார்த்தல்வேண்டும்; அதை நீ பார்க்கவில்லை. கற்பு என்பது எப்படி? அதைப்பற்றியும் நீ யோசிக்கவில்லை. பெருமை பெண் ணுக்கு எது? வாழ்வில் கல் என்றாலும் கணவன் ஒன்றுதான்; அதையும் நீ பார்க்கவில்லை; பிறப்பினால் ஒருவரின் நிலை அவர் உயர்ந்த குலத்தவராயின் அதற்குரிய ஒழுக்கம் வேண்டும். ஆகவே, அதைக்கூட நீ பார்க்கவில்லையே; பெண்களின் உரிமை எது? அதுதான் நாயகனைத் தெய்வமாகக் கொள்ளல் அதை யும் நீ பார்க்கவில்லை; உறவு எப்படி? அதையும் நீ இதைப் பேசும்போது பார்த் தாயோ அன்று. 6

பழியும் பார்த்திலை படியி கழ்ந்திடு
மொழியும் பார்த்திலை முறையும் பார்த்திலை
வழியும் பார்த்திலை வருவ பார்த்திலை
இழியுந் தீயசொல் லியம்பற் பாலையோ.

நீ சொல்வதால் உலகில் வரக்கூடிய பழி, அதைப் பார்க்கவில்லை; பூமியில் உள்ள பெருமக்கள் இகழ்ந்து இப்படியான செயலைச் சொல்வார்கள்; அதாவது ஒரு பெண் தனது நாயகனை அன்றி பின் ஒருவர்பால் மனங்கொண்டாள் என்ற வார்த்தையால் இகழப்படும் பேச்சிற்கு இடமாகும்; இதையும் நீ பார்க்க வில்லை; முறையான கருமம் யாது எனப் பார்த்தாயில்லை; நல்வழி அல்லது அல் லற்படுத்தும் இதையும் எண்ணவில்லை; அன்றி நான் தனித்துள்ளேன். வலி அற் றவள் என எண்ணி உனது வலிமையால் முறை கேடாகப் பேசி ஏதோ செய் வேனென நீ நினைத்தால் உனக்கு பின் என்னவரும் என்பதை நீ யோசிக்கவில்லை; மிகமிக இழிவான சொல் ஒன்றையும் யோசிக்காமல் நீ பேச முடியுமோ? 7

ஆன்ற தொல்வளன் ஆற்றல் ஆயுள்பின்
ஊன்று சீர்த்திகள் ஒருவுற் றோர்க்கிது
தோன்று நீயிவை துணியல் வாழிகேள்
சான்று நின்குலத் தகுவர் யாவரும்.

தன்னிடத்துக் கொண்ட பெருஞ் செல்வம், வலிமை, ஆயுள், வாழ்வின் பிற்காலத்துக்கு வேண்டிய சிறப்புக்கள் ஆகிய இவற்றை நீங்கிக் கொள்வோர்க்குத்தான் நீ சொல்லிய இந்த எண்ணங்கள தோன்றும்; ஆகவே, நீ நன்று வாழ வேண்டுமானல் இதனைத் துணியாதே; இப்படியாக அடாதன பேசி; அடாதன செய்து, அரை வாழ்வில் அழிந்துபோன உனது குலத்து அசுரர்கள் எல்லாம் இதற்கு அத்தாட்சியாகும் என்பதை நீயுணர். 8

இந்தி ரற்கலால் ஏவர்பாலினுஞ்
சிந்தை வைத்திடேன் தீதில் கற்பினேன்
வந்தெ னக்கிது வகுத்தி நின்கிளை
உய்ந்தி டத்தகும் உரைய தன்றிதே.

நானோ தீங்கு இல்லாத கற்பினை உடையவள்; ஆகவே, இந்திரதேவன் இடத்து அல்லாமல் வேறு எவரிடத்தும் எனது சிந்தை வைத்திடேன்; அப்படியான தூய்மையான என்னிடம் வந்து நீ இதை இப்படி வகுத்துச் சொன்னாய்; இது உனது சுற்றமான கிளைகள் யாவும் உய்யக் கூடிய வார்த்தை அல்ல. 9

நூன்மை யாவையும் நுனித்து நாடிச்செங்
கோன்மை யன்றியே கொடுமை செய்துள
மேன்மை மன்னரும் வேறு ளார்களும்
பான்மை யாற்பிலம் படுவர் திண்ணமே.

ஓர் அரசனுடைய கடமையாவது; நூல்கள் யாவையும் கசடு அறக்கற்று உணர்ந்து; அதனால் 'செங்கோலைக் கடைப்பிடித்து அரசாளாமல்; கொடுமை செய்கின்ற எத்துணை மேன்மையான அரசரும்; அவர் அன்றி உலகில் நன்நெறி இல்லாது வாழ்வார்களுப்; தாங்கள் செய்யும் வினையினால் பாதாள நரகம் சேர்வார்கள்; அழிந்து மாண்டு போவார்கள் இது திண்ணம். உண்மை அழியாது. 10

மீளில் வெந்துயர் வேலை சார்ந்துளான்
நாளும் நாதனென் றறைதி யார்கணுங்
கோளும் நல்லவுங் குறுகும் அல்லலும்
நாளை உங்கள்பால் நணுகு றுதவோ.

மீட்க முடியாத கொடிய துயரம் என்னும் கடலில் நாளும் ஆழ்ந்துள்ளான் எனது நாதன் இந்திரன் என்று கூறினாய்; யாருக்கென்றாலும் துன்பமும், இன்பமும் சேரும்; ஆகவே, இன்று நாம் படும் அல்லல் நாளை உங்கட்கும் வர மாட்டாதா? 11

நல்லனவும் தீயனவும் எல்லாம் முன்னே
ஆனாய் அடியேனை அஞ்சல் என்னாய். — அப்பர் தேவாரம்.

நீதி யாகிய நெறியி லாதவள்
ஆத லான்மிக அறிவு மாழ்கியே
தீது கூறினய் செவ்வி தன்றரோ
மாது நீயிது மறத்தி யுய்யவே.

நீயோ வாழ்க்கையில் நீதியாகிய ஒழுக்கம் இல்லாமல் கண்டபடி வாழ்ந்தவள்; ஆதலினல் அரசகுடும்பத்தைச் சார்ந்து இருந்தும் மிகவும் அறிவு மங்கி; எது பேசுவது என அறியாது தீமையான வார்த்தையைக் கூறினய்; இது உனக்குச் செப்பமானதொன்றல்ல; பெண்ணே! நீ உய்யும்பொருட்டாக இந்த இந்த எண்ணத்தை மறந்துவிடு. 12

ஏவ ரென்றனை எய்தற் பாலினேர்
தேவர் சூழதரக் காப்பர் சிந்தையென்
ஆவி ஐமபுலம் அளிக்கும் எங்கணுங்
காவ லுண்டுநீ கடிதிற் போகென்ருள்.

நான் தனித்து நிற்கிறேன் என்று நீ நினைந்தாய். அப்படி அன்று; எவர் தான் என்னை அடைய முடியும்; தேவர்கள் என்னைச் சூழ்ந்து நின்று காப்பர்; எனது மனம் எனது உயிரையும், ஐந்து புலன்களையும் காக்கும்; உள்ளும் புறம்பும் காவல் உண்டு; விரைவில் இவ்விடம் விட்டுப்போவாயாக என்ருள் இந்திராணி. 13

என்ற காலையில் எயிறு தீயுகக்
கன்று சேயிதழ் கறித்து வெய்துயிர்த்
தொன்ரு டொன்றுகை உருமிற் ருக்கியே
நன்று நன்றென நகைத்துச் சீறினள்.

என்ற நேரத்து அதுகேட்ட அசமுகி; தனது பற்களை நெருப்புக் கக்கும்படி நெருமி, தனது சிவந்த சொண்டினைக் கடித்து; கொடிய பெருமூச்சு விட்டு மூசி; ஒரு கையைத் தூக்கி மற்றக் கையில் இடிவிழுந்ததுபோன்று அடித்து; நல்லது நல்லது என்று சிரித்து கோபத்தாற் சீறினள். 14

மறுவில் வாசவன் மனைவி கூறிய
உறுதி வெய்யவட் கூற்றஞ் செய்தில
அறிவில் பேதையாய் அலகை தேறலால்
வெறிகொள் பித்தனுக் குரைத்த மெய்மைபோல்.

மறுவிலாத வாழ்க்கையுடைய இந்திரன் மனைவி இந்திராணி கூறிய உறுதியான வார்த்தைகள், கொடிய அசமுகியின் காதில் விழுந்து ஏதேனும் ஒரு நல்நினைவை உண்டாக்கவில்லை; அது எதுபோல் ஆயிற்று என்ருல்; இயல்பிலே அறிவில்லாத பேயனுயும்; அன்றியும் அதோடு பேய்போலும் குணத்தை உண்டாக்கி விடுகின்ற கள்ளையும் உண்டு வெறிகொண்டு நின்ற அந்தப் பைத்தியகாரனுக்கு உரைத்த உண்மைநெறிதரும் வார்த்தைபோல் ஆயிற்று. 15

ஆன காலேயில் அசமு கத்தினள்
ஊன வெந்துயர் உழக்கும் பெற்றியால்
வான வர்க்கிறை மாதை நோக்கியே
தானு ரைத்தனள் இனைய தன்மையே.

அவ்வாருகிய காலத்தில் ஆட்டுமுகத்தை உடைய அசமுகி; தான் மானம் மேற்கொள்ளும்படியான கொடிய துன்பத்தை அநுபவிக்கவேண்டிய விதிப்பிர காரத்தினுல்; தேவர்கட்கு அரசனுன இந்திரன் மனேவி இந்திராணியை நோக்கி; இந்தத் தன்மையான வார்த்தைகளேச் சொன்னுள். 16

கிட்டி நல்லன கிளத்தி னேனெனே
ஒட்டி வந்திலே உரைத்தி மாறுனே
அட்டு நுங்குவன் அண்ணற் காகவே
விட்ட னன்இது மெய்மை யாகுமால்.

இந்திராணியே! உன்னேக் கிட்டி நான் உனக்கு நல்வார்த்தையே சொன் னேன்; அதைக்கேட்டு நீ சம்மதித்து வந்தாய் இல்லே; அதற்குப் பதிலாக மாருகச் சொல்கின்ருய்; உன்னே நான் கொன்று தின்னுவேன்; ஆனுல், எனது அண்ணன் உன்மேல் விருப்புற்றிருக்கின்றமையால் அதைச் செய்யாது விடுத்தேன். 17

ஆர்த்தி யாவுநீ அகல வென்னுடைச்
சீர்த்தி அண்ணற்பாற் சேறல் சிந்தியாய்
பேர்த்தி டாதுனேப் பிடித்து வன்மையால்
ஈர்த்துப் போகின்றேன் சரத மீதரோ.

இப்போது நீ அநுபவிக்கின்ற துன்பம் யாவும் நீங்க எனது அண்ணன்பால் சேர்வதற்கு நீ நினேக்கின்ருய் இல்லே; சரி இப்போது நீ இருக்கும் இடத்தை விடுத்து உன்னே எனது வலிமையால் பிடித்து இழுத்துக்கொண்டு போகின்றேன்; இது உண்மையாகும். 18

முடிவில் ஆற்றலார் மூவர் யாவருந்
தடைசெய் கிற்பினுஞ் சமரின் ஏற்பினும்
விடுவன் அல்லன்யான் விரைவி னிற்கொடே
படர்வன் அன்னது பார்த்தி மேலெனு.

உன்னே முடிவில்லாத வலியுடைய பிரமா, விட்டுணு, உருத்திரன் எனும் மூவர்களான யாவரும் வந்து என்னே இதைச் செய்யவேண்டாமென்று தடை செய்தாலும்; அல்லது என்னேடு உனக்காகப் போர்செய்ய எதிர்த்தாலும்கூட உன்னே நான் விடப்போகிறவள் அன்று; நான் உன்னே விரைவில் கொண்டு செல் வேன்; இனிமேல் நீ இதனேப் பார்ப்பாயாக; 19

வெய்யள் அவ்வயி ராணி மென்கரங்
கையிற் பற்றியே கடிதின் ஈர்த்துராய்
மொய்யிற் போயினுள் முரணி லாதவள்
ஐய கோவெனு அரற்றல் மேயினுள்.

இவ்வாறு கூறிய கொடியவளான அசமுகி; அந்த இந்திராணியின் மிருதுவான கைகளைப் பற்றிக்கொண்டு, நிலத்தில் இந்திராணி விழுந்து உராஞ்சுப்பட்டுவர; வலிமையால் விரைவாக இழுத்துக்கொண்டு போயினுள்; அதுவேளை இந்திராணி ஐயோ ஐயோ எனக் கதறி அழுவாள் ஆயினுள். 20

பாவி தீண்டலும் புலம்பிப் பைந்தொடி
ஆவி போந்தென அவச மாகியே
ஓவி லாததொல் லுணர்வு மாய்ந்தனள்
காவி யொண்கணீர் கலுழத் தேம்பினுள்.

பாவியான அசமுகி பிடித்து இழுத்தலும், பசிய வளையல் அணிந்த கைகளை உடைய இந்திராணி; தனது உயிர் நீங்கியதுபோல மயங்கி; ஓயாது தொழிற்படும் பழைய உணர்ச்சிகள் கூட மாய்ந்துபோதலால்; துடிதுடித்து நீலோற்பல மலர்போன்ற தனது கண்ணில் நின்றும் கண்ணீர் பெருகச்சோர்வுற்ருள். 21

ஐயர் ஙகையில்வந் தவுண ரைச்செறுந்
துய்ய தீம்படை தோகை கண்ணுரு
வெய்ய சூர்கிளை வீட்ட வந்தென
மையு லாயகண் வாரி மிக்கதே.

எமது ஐயரே! பன்னிரு புயவா! தேவரீரது திருக்கரத்து வந்து; அசுரர் கூட்டமெல்லாவற்றையும் ஒருங்கே அழிக்கும்படி அமர்ந்தருளிய தூயவேற்படை; அன்று அந்த இந்திராணியின் கண்ணிடத்திருந்து தோன்றியே கொடிய அசுரர் கிளையை அழிக்க வந்ததெனும்படி; மைதீட்டிய அவளது கண்களிலிருந்து கண்ணீராக மிகுந்து பெருகி ஓடியது.

அவள் கண்களிலிருந்து வழிந்தோடிய கண்ணீரே தேவரீரது திருக்கரத்து அமர்ந்தருளிய வேற்படையாகும் என்ருர் வியாழ பகவான். 22

காசி பன்தருங் கலதி கூற்றுவன்
பாச மன்னகைப் பட்டு விம்மினுள்
வாச வன்றனி மனைவி வெங்கொலைப்
பூசை வாய்ப்படும் புள்ளின் பேடைபோல்.

காசிப முனிவன் தந்த இந்தப் பேய்போன்ற அசமுகியின்; இயமனின் பாசக்கயிறு போன்ற கைகளிலே இந்திரன் மனைவி இந்திராணி சிக்கிக்கொண்டு துடிதுடித்துப் பதைத்து விம்மியழுதாள்; எப்படிப்போலும் எனில்; கொடிய கொலைபுரியும் பூனையின் வாயில் அகப்பட்டுத் துடித்துத் தவிக்கும் ஒரு பெண் பறவை போன்ருள். 23

நாரி லாதவள் நலிந்து கொண்டனள்
பேரும் எல்லையில் பேதுற் றேயுளஞ்
சோரு கின்றவள் சுற்று நோக்கியே
யாருங் காண்கிலன் அரற்றல் மேயினள்.

வலியில்லாத இந்திராணி, அசமுகி வலிமையுடன் பற்றிக்கொண்டுபோகும் நேரத்தில்; உள்ளம் பேதமைப்பட்டு; உள்ளம் சோர்ந்து என்செய்வேன் இனி யென வாடுகின்றவளாய் சுற்றிப்பார்த்தபோது யாரும் துணையாக நிற்பாரைக் காணுதவளாய், உடன் தன்னைத் தனது கணவன் யாரிடம் அடைக்கலம் கொடுத் துள்ளானே; அந்தப்பகவானை நினைந்து ஓலமிட்டு அபயம் கூறி அழுவாளாயினள்: 24

இந்திராணி மறுதலைப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1,573.

---

## 36. மகாகாளர்வரு படலம்

பையரா அமளி யானும் பரம்பொருள் முதலும் நல்கும்
ஐயனே யோலம் விண்ணோர்க் காதியே யோலம் செண்டார்
கையனே யோலம் எங்கள் கடவுளே யோலம் மெய்யர்
மெய்யனே யோலம் தொல்சீர் வீரனே யோலம் ஓலம்.

நஞ்சாகிய பையினைக் கொண்ட அனந்தன் என்னும் பாம்பின்மீது பள்ளி கொள்ளும் நாராயணக் கடவுளும்; பரம்பொருளான சிவபிரானும் தந்தருளிய எங்கள் ஐயனே அபயம்; தேவர்கட்கெல்லாம் ஆதிப்பிரமமே ஓலம்; செண்டு விளங்கும் கையினையுடைய அப்பனே அபயம்; எங்களின் கடவுளே அபயம்; உண்மை நெறி நின்றூர்க்கு உண்மைப் பொருளானவனே அபயம்; மிகவும் முன் னமே கொண்ட சீரினை உடைய பகவானே அபயம். 1

ஆரணச் சுருதி யோர்சார் அடலுருத் திரனென் றேத்துங்
காரணக் கடவுள் ஓலம் கடல்நிறத் தெந்தாய் ஓலம்
பூரணைக் கிறைவா வோலம் புட்கலை கணவா வோலம்
வாரணத் திறைமேற் கொண்டு வரும்பிரான் ஓலம் என்றாள்.

வேதங்கள் ஒரு சாராக வலிமை உள்ள உருத்திர பகவானே! ஐயனே! என ஓலமிட்டுத் துதிக்கின்ற எப்பொருட்கும் மூலகாரணனே உமக்கு அபயம்; கடலின் நிறமான நீல ஒளிபரந்த திருமேனி உடைய எனது அப்பனே அபயம்; பூரணை எனும் தேவிக்கு இறைவா அபயம்; புட்கலை எனும் தேவிக்கு இறைவா அபயம்; வெள்ளை யானை மேற்கொண்டு அன்று எங்கள் கண்குளிரும்படி வந்த கடவுளே அபயம் என்றாள் இந்திராணி. 2

ஓய்யெனச் சசியிவ் வாற்ருல் ஓலிட அதுகேட் டெங்கள்
ஐயனைக் குறித்துக் கூவி அரற்றுவாள் போலு மென்ன
மையினைத் தடுத்துச் சிந்து மருத்தென வந்தா னென்ப
வெய்யரிற் பெரிதும் வெய்யோன் வீரமா காளன் என்போன்.

விரைவுடன் இவ்வாறு இந்திராணிதேவி அபயமிட்டு அழுதிட, அது கேட்டு; எங்கள் ஐயனைத்தான் குறித்து ஓலமிட்டு அழுகின்ருள் போலும் என்று; இருண்ட கருமேகங்களை மழைபெய்யாதபடி தடுத்து அடித்து வீசித் துரத்தி விடுகின்ற காற்றுப்போலும் வேகமுடன் வந்தார்; எத்தகைய கொடுமை உடையார்க்கும் பெரிதும் கொடியவன் வீரமாகாளன் என்னும் பேருடைய, இந்திராணிதேவியைக் காவல் கொள்ளும்படி முன் கற்பிக்கப்பட்ட கடவுள். 3

சாத்தன தருளின் நிற்குந் தானையந் தலைவன் வானோர்
வேத்தவை யான வெல்லாம் வியத்தகு வீரன் உந்தி
பூத்தவன் முதலோர் யாரும் புகழவெவ் விடத்தை யுண்டு
காத்தவன் நாமம பெற்றேன் காலற்குங் காலன் போல்வான்.

இவன் ஐயனருடைய அருளின் வண்ணம் நிலைபெற்றுத் தொழில் புரிபவனை சேனைத்தலைவன்; தேவர்களுடைய மேலான சபைகள் யாவும் வியந்து பாராட்டும்படியான வீரன்; திருமாலின் உந்தியில் பூத்த மலரில் இருக்கும் பிரமதேவர் முதலியோர் யாரும் புகழும்படி கொடிய நஞ்சை உண்டு உலகைக் காத்தருள் புரிந்த சிவபிரான் நாமமாகிய வீரமாகாளன் என்னும் நஞ்சுண்டமை கொண்ட கருத்துக்கொண்ட பேரினை உடையவன்; இயமனுக்கும் எமன் போல்பவன். 4

இருபிறை ஞெலிந்திட் டன்ன இலங்கெழில் எயிற்றன் ஞாலம்
வருமுகில் தடிந்தா லென்ன வாள்கொடு விதிர்க்குங் கையன்
உருமிடிக் குரல்போல் ஆர்க்கும் ஓதையன் உரப்புஞ் சொல்லன்
கரவிழைத் தெங்ஙன் போதி நில்லெனக் கழறி வந்தான்.

இரண்டு பிறைகள் கடைவாயில் வளைந்து நிற்பது போன்ற ஒளி இலங்கும் பற்களை உடையவன்; பூமியில் மழைபொழிய வருகின்ற முகில்கள் மின்னினூற் போன்று வாளைச் சுழற்றுகின்ற கையினை உடையவன்; இடியேற்றின் ஓசைபோல் ஆரவாரிக்கும் ஓசையன்; உரப்புகின்ற வார்த்தைகளால் அடியே அசமுகி! களவாண்டு எங்கே போகின்ருய் நில் எனக் கூறி வேகமாக வந்தருளினன். 5

கொம்மென வந்த வீரன் கூவிய சசியை நோக்கி
அம்மனை அழுங்கல் வாழி அசமுகி யெனும் வெய்யாட்
கிம்மியின் துணையும் அஞ்சேல் ஈண்டுனைத் தீண்டு கின்ற
கைம்முறை தடிந்து வல்லே விடுவிப்பன் காண்டி யென்ருன்.

விரைவுடன் வந்த வீரமாகாளதேவன்; அழுது ஓலமிட்ட இந்திராணியை நோக்கி; அம்மா நீ அழாதே வாழ்வு பெறுகின்ருய்; அசமுகி என்னும் கொடியவட்கு இம்மியளவும் பயப்படாதே; இவ்விடத்து உன்னைத் தீண்டிய அவளது கையினை முறைப்படி யான் வெட்டி; விரைவுடன் உன்னை விடுவிப்பேன்; இதனைக் காண்பாயாக எனக் கூறியருளினர். 6

வீரன துரையைக் கேளா மெல்லியல் அணங்கின் நல்லாள்
பேரிடர் சிறிது நீத்துப் பெயலுறு துவலே தூங்கு
மாரியின் செலவு கண்ட வளவயற் பைங்கூழ் போல
ஆருயிர் பெற்ருள் மற்றை அசமுகி அவனைக் கண்டாள்.

வீரமாகாளனுடைய இந்த வார்த்தையைக்கேட்ட, மென்மையான இயல்புடையவளும், பெண்களில் நல்லவளுமான இந்திராணிதேவி; தான் அடைந்து கொண்ட பெரிய இடரினின்று சிறிதே நீங்கிக்கொண்டு; மழை பெய்வதற்குரிய சிறிய துமியான தூற்றலை முன்னுகக் கண்டுகொண்ட வளம் பொருந்திய வயல் களிலுள்ள நெற்பயிரைப்போல; சிறிது தனது உயிர் தெளிவு பெற்ருள்; ஆனல், அசமுகி உரப்பிக்கொண்டுவந்த வீரமாகாளனைக் கண்டாள். 7

ஓவரும் புவனம் யாவும் ஒருங்குமுத் தொழிலும் ஆற்றும்
மூவருந் துறக்கம் வைகும் முதல்வனுந் திசைகாப் பாளர்
யாவரும் என்முன் நில்லார் ஈண்டெனை இகழ்ந்து சீறித்
தேவர்தங் குழுவி னுள்ளான் ஒருவனே செல்வ னென்ருள்.

அசமுகி வீரமாகாளனைக் கண்டு; ஓகோ! ஓயாத புவனங்கள் யாவற்றையும்; ஒருங்காகக் படைத்துக் காத்து அழித்து வரும் செயல் புரிகின்ற மூவர் களும்; தேவ உலக முதல்வனை இந்திரனும்; திக்குகளைக் காக்கின்ற ஏனைய கடவுளரும்; எனக்கு முன்பு நேரிட்டு நிற்கார்கள். அப்படி இருப்ப; இவ் விடத்து என்னை அடியே கள்ளி என இகழ்ந்து பேசிக் கோபித்து; தேவர் கூட் டத்தில் உள்ள ஒருவனே எனக்கு முன்னுக வந்துநிற்கும் வலிமை உடையான் என்ருள். 8

வெறித்திடு கண்ணில் நோக்கி வெவ்விதழ் அதுக்கி வல்லே
கறித்தனள் எயிற்றின் மாலே கறகற கலிப்ப ஆர்த்தது
முறித்திவன் தன்னை யுண்டு முரண்வலி தொலேப்ப னென்னுக்
குறித்தச முகத்தி நிற்பக் குறுகினன் திறல்சேர் வீரன்.

கோபத்தால் வெறிக்கின்ற கண்கொண்டு வீரமாகாளனைப் பார்த்து; மிருது வான தனது சொண்டுகளைக் கடித்து; பற்களின் நிரைகள் யாவையும் கறகற வென நெருமி; சத்தமிட்டு; வரட்டும் இவனை நான் முறித்து உண்டு எனது கோபம் தீர்ப்பேன் என்று அசமுகி குறிப்புடன் நிற்றலும். 9

தட்டறு நோன்மை பூண்ட சசிதனைத் தமிய ளென்றே
பட்டிமை நெறியாற் பற்றிப் படருதி இவளை யின்னே
விட்டனை போதி செய்த வியன்பிழை பொறுப்பன் நின்னை
அட்டிடு கின்ற தில்லை அஞ்சலை அரிவை யென்ருன்.

தடுத்தற்கரிய தவம் செய்துகொண்டிருக்கும் இந்திராணியை; தனியாயி ருக்கின்ருள் என எண்ணி, களவான தொழிலாகப் பிடித்துக்கொண்டு செல்கின் ருய்; அடியே அசமுகி! நான் சொல்வதைக்கேள்; இந்திராணியை இப்பொழுதே விடுத்திட்டுச் செல்வாயாக; அப்படி என்ருல் உனது பிழையினைப் பொறுப்பன்; உன்னைக் கொல்வதும் இல்லை; பெண்ணே அசமுகி! பயப்படாதே என்ருர் வீர மாகாளர். 10

கேட்டலும் உருத்திவ் வார்த்தை கிளத்தினை நின்னை யாரே
ஈட்டுடன் இவளைப் போற்றென் றிப்பணி தலைதந் துள்ளார்
வேட்டனன் அவரைக் கேட்ப விளம்புதி யென்றாள் முத்தூழ்
மாட்டுறு கனலி யென்னத் தன்குலம் முடிப்பான் வந்தாள்.

இந்த வார்த்தையை அசமுகி கேட்டலும், கோபம் கொண்டாள்; வீர மாகாளனை நோக்கி, நீயா இந்த வார்த்தை சொன்னாய்; யார் உன்னை மிக்க கவனத்துடன் இந்த இந்திராணியைக் காவல் கொள்வாய் எனும் இந்தக் கடமையை உன்னிடம் தந்தவர்; அவரின் பெயரை ஒருகால் நான் அறிய ஆவலுடையேன் சொல்வாயாக என்றாள்; அவள் எப்படியானவள் எனின், மூங்கிலிற் பற்றிய நெருப்பைப் போன்று தனது நடத்தையால் தன் குலம் முழுவதையுமே நாசமாக்கும்படி வந்தவள். 11

தாரணி முதல மூன்றுந் தலையளி புரிந்து காப்பான்
காரணி செறிந்துற் றன்ன கரியவன் கடவுள் வெள்ளை
வாரண முடைய ஐயன் மற்றிது பணித்தான் என்பேர்
வீரரில் வீரனான வீரமா காளன் என்றான்.

அசமுகியின் இந்த வார்த்தையை வீரமாகாளார் கேட்டு; அசமுகியே! சொர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்று உலகங்களையும் யாதொரு தீங்கும் உறாது மேலான இன்பநிலை அடையும்படி காப்பவனும்; கரிய மேகங்கள் அழகுடன் ஒளி விளங்கினாற்போன்ற கரிய நிறமுடைய மேனிஉடையவரும், தெய்வத்தன்மை பொருந்திய வெள்ளையானையை உடையவனுமாகிய ஐயனார்; இந்திராணியைக் காவல் கொள்ளும்படியான இச்செயலை என்னைச் செய்ய வைத்தவர் எனது பெயரும் வீரருள் வீரரான வீரமாகாளன் என்றான். 12

என்றலும் அனைய வாய்மை இந்திரன் தனக்கும் ஈசன்
பொன்றிரண் மார்பன் நல்கும் புதல்வற்கும் பொதுமைத் தாகி
நின்றது வாகத் தேவர் நிருதரால் வருந்தும் ஊழாற்
சென்றவன் மகவான் ஏவ லாளெனச் சிந்தை செய்தாள்.

என்று இந்த வார்த்தையை வீரமாகாளர் கூறியவுடன்; அந்த உண்மையான வார்த்தை இந்திரனுக்கும்; சிவபிரானும், மகாலட்சுமியை மார்பில் திகழ வைத்திருக்கும் விஷ்ணுபெருமானும், தந்தருளிய ஐயனுருக்கும் பொதுவான ஒரு வார்த்தையாகி நின்றது; ஐயனும் இந்திரனும் நிறத்தால், உலகை ஆட்சி புரிதலால், வாகனத்தால் ஒரே தன்மையாகக் காணப்படுவர்; ஆகையால் வீரமாகாளர் ஐயன் என்று குறிப்பிட்டபோது அது இந்திரனைச் சுட்டி நின்றதுபோல அசமுகி விளங்கிக்கொண்டாள்; இன்னும் தேவர்கள் அசுரரால் மெலிவுற்று வருந்தல்வேண்டும் என்னும் ஊழின் முறையால்; தனக்கு முன்பாக வீரம் பேசி வந்தவர் இந்திரனுடைய ஆள் என அசமுகி நினைந்தாள். 13

புந்தியில் இதனை யுன்னிப் பொள்ளெனச் சினமீக் கொள்ள
இந்திரன் தொழுவன் கொல்லாம் எனையிடை தடுக்கு நீரான்
சிந்துவன் இவனை யென்னாச் செங்கையிற் சூலந் தன்னை
உந்தினள் அதுபோய் வீரன் உரனெதிர் குறுகிற் றன்றே.

மனதில் அசமுகி இப்படி எண்ணி விரைவுடன் கோபம் மிகுந்து தோன்ற சொல்வாள்; ஓகோ! இந்திரனுடைய ஏவலாளனே என்னை இங்கு நில் என்று இடையில் தடுக்க வல்லான்; இவன் உயிரை நான் சிதைப்பேன் என்று சிவந்த தனது கையில் உள்ள சூலத்தைச் சுழற்றி எறிந்தாள்; அச்சூலம் எழுந்து வீர மாகாளரின் நெஞ்சிற்கு நேராக வந்தது 14

குறுகிமுன் வருத லோடுங் குரூஉச்சுடர் அங்கி மூன்றும்
முறையினே ரிடையுற் றன்ன முத்தலைப் படையைக் காணாஉ
அறைகழல் வீரன் தொன்னாள் அங்கியை அட்ட தேபோல்
எறிகதிர் வாளால் மைந்தன் இருதுணி படுத்தி னானே.

ஒளி விளங்கும் சுவாலைகளை உடைய மூவகை நெருப்புக்களும் முறையாக மூன்று சுடருடன் ஒன்றாகி வருகின்றது என்னும்படி மூன்று தலைகளையுடைய அந்தச் சூலப்படை தனது நெஞ்சிற்கு அருகாக வருவதை வீரமாகாளர் கண்ணுற்று, வீரக்கழல் அணிந்த வீரபத்திரக் கடவுள் முற்காலத்தில் அக்கினியை வாளால் வெட்டிய அதே தன்மை போன்று; பிரகாசமுடைய கூரிய தனது வாளால் வீரமாகாளர் அச்சூலப்படைய இரண்டு துண்டாகும்படி வெட்டியருளினார்; 15

படுத்தலும் மணிகள் நீலப் பையரா உமிழ்ந்த தென்னக்
கடித்திடும் எயிற்றுப் பேழ்வாய்க் கருங்கணம் அழல்கான் றென்ன
இடித்திடு கொண்மூ வின்பால் எழுந்தமின் னென்ன அன்னாள்
விடுத்திடு சூல வைவேல் வெவ்வழல் பொழிந்த தன்றே.

அசமுகி விடுத்திட்ட சூலப்படையை வெட்டித் துணியாக்கலும் அந்தச் சூலப்படையானது; நீலநிறமுடைய நஞ்சுப் பையையுடைய பாம்பு இரத்தினத் தினத்தைக் கக்கியது என்னலும்; கடிக்கின்ற பற்களையும் பெரிய அகன்ற வாயையும் உடைய பேய்கள், வாயால் நெருப்பைக் கக்கினாற் போலவும்; இடிக்கின்ற மேகங்கள்பால் எழுந்த மின்னல் போலவும்; கொடிய வெப்புடைய நெருப்பை, துணிபட்டபோது கக்கியது. 16

காலத்தின் உலகம் உண்ணக் கடலுறு வடவை தானே
ஆலத்தை மீது பூசி அசமுகி கரத்திற் கொள்ளச்
சூலத்தின் அமைந்த தம்மா சோதனை கொடுப்ப னென்னாச்
சீலத்தின் மிக்கோன் கூர்வாள் செந்தழல் பொழிவித் தன்றே.

காலம் பார்த்து உலகை உண்டழிக்கும்படி இருக்கின்ற வடவாமுகாக்கினியானது; தனது மேனிமேல் நீலநிறமான நஞ்சைப் பூசிக்கொண்டு; அசமுகியின் கையில் ஏந்திக்கொள்ளும்படி சூலவடிவாய் அமர்ந்திருந்தது; ஆகவே, அதை நான் சோதிப்பேன் என்று; ஞான ஆசாரத்தின் மிக்கவரான வீரமாகாள தேவரின் கூரியவாள்; சூலத்தை வெட்டிக் கொடிய நெருப்பை, அந்தச் சூலத்தினின்றும் பொழிவித்தது போலும். 17

சூளினூர்த் தெறியும் வீரன் சுடர்கொள்முத் தலைவேல் தன்னை
வாளினால் தடித லோடும் மறிமுகத் தணங்கு சீறிக்
கேளினால் தனது பாங்கிற் கிடைத்ததுன் முகிகைச் சூலங்
கோளினாற் கடிது வாங்கிக் கூற்றனும் உட்க ஆர்த்தாள்.

இதோ சூலத்தை முறிக்கின்றேன் என்று உரப்பி வீரமாகாளர்; பிரகாச முடைய முச்சுடரினை உடைய சூலப்படையை வாளினால் வெட்டி வீழ்த்தி விட லோடும்; ஆட்டுமுகமுடைய அசமுகி கண்டு சீறி; தோழி எனத் தனக்குக் கிடைக் கப்பெற்ற துன்முகி என்பாளின் கையில் ஏந்திய சூலத்தை; ஆத்திரம் மிக்கு விறுவிறுப்போடும் எட்டி வேண்டி, இயமனும் உளம் நடுங்க அதனைச் சுழற்றி ஆரவாரம் செய்தாள். 18

வசிகெழு சூலம்பற்றி மருத்துவன் துணைவி யான
சசிதனை இகுளை யாகுந் தையல்தன் கரத்திற் சேர்த்தி
நிசியின்மால் பாந்த ளோடு நெடுங்கதிர் நேர்புக் கென்ன
விசையொடு கொடியள் சென்றாள் வீரமா காளன் தன்மேல்.

கொடியவளான அசமுகி, வலிமை கொண்ட சூலத்தைக் கையில் பிடித்து; இந்திரதேவனின் மனைவியான இந்திராணியைத் தோழி துன்முகியின் கையிலே விடாது பிடித்துக்கொள்ளும்படி கொடுத்துவிட்டு; இராக்காலத்திலே மேகமா னது இராகுவினுடன் கூடி பிரகாசங் கொண்ட கிரணங்களை உடைய சூரியனுக்கு எதிரே நேரிட்டுச் சென்றதென்ன; விசையுடனாகச் சூலத்தை நீட்டியபடி வீர மாகாள தேவன் மேல் சென்றாள். 19

ஒற்றைமுத் தலைவேல் தன்னை ஒப்பிலான் மரும மீது
குற்றிய முன்னி நீட்டிக் குறுகினள் அமர்செய் போழ்திற்
கற்றையஞ் சுடர்க்கூர் வாளாற் காவலன் எறித லோடும்
இற்றது சூலங் கண்ட அசமுகி இடைந்து போனாள்.

ஒரு தண்டுடன் முச்சுடர் பொருந்திய சூலவேலினால்; தனக்கு ஒப்புவேறு இல்லாத வலிமையுடைய வீரமாகாள தேவர் நெஞ்சில் குற்றும்படி நீட்டிக் கொண்டு அசமுகி நெருங்கிப் போரிடும்பொழுதில், அந்தச் சூலத்தையும் வீர மாகாள தேவர்; மிக்க சுடர்கொண்ட வாளினால் வெட்டி விடுதலோடும்; அந்தச் சூலப்படையும் முறிந்தது; இதுகண்ட அசமுகி பின்னிட்டுச் சென்றாள். 20

இடைந்தனள் ஏகி ஆண்டோர் இருங்கிரி பறித்திட் டின்னே
முடிந்தனை போலு மென்னா மொய்ம்புடன் அவன்மேல் ஓச்சத்
தடிந்தனன் தடித லோடுந் தாரைவாட் படையும் வல்லே
ஒடிந்தது கொடியள் காணா ஒல்லொலிக் கடல்போல் ஆர்த்தாள்.

அசமுகி பின்னாக மெலிவுற்றுச் சென்று அவ்விடத்துள்ள பெரிய மலை ஒன்றைப் பிடுங்கி கையில் ஏந்தி; இதோபார் நீ முடிந்துபோவாய் என்று; வலி யுடன் வீரமாகாள தேவன்மேல் அந்த மலையை எறிதலும்; அந்த மலையையும் வீரமாகாளர் தனது கை வாளினால் வெட்டினார்; வெட்டலோடும், கூரிய அவரது வாளும் ஒடிந்தது அந்த மலையும் பொடிந்தது; ஆனால், வாள் முறிந்ததை அச முகி கண்ணுற்று ஒலி செயும் கடல்போல இரைந்து கூக்குரலிட்டாள். 21

வீரமா காள கேண்மோ வேதனே ஆதி விண்ணோர்
ஆரும்வந் தாசி கூற அகிலமும் ஆளு கின்ற
சூரனும் எமது முன்னோன் தோளிடை உய்ப்பக் கொண்டு
பேருவன் இவளை யோராய் விலக்கினை பேதை நீராய்.

அசமுகி சொல்வாள்; வீரமாகாளனே! கொஞ்சம் கேள் இதை, நான் பிரமதேவர் முதல் அனைவரும் ஆசீவாதம் செய்ய அனைத்துலகமும் ஆளுகின்ற சூரபன்மனாகிய எனது அண்ணனுடைய தோளில் சேர்த்து அணைத்துக்கொள்ளும்படி கொண்டுசெல்வேன் இவளை; இதனை நீ அறியாது என்னைத் தடுத்தாயே; நீ ஒரு புத்தி இல்லாத பேயன் போலும், இப்போது உனது நிலையைப் பார்த்தாயா. 22

தடுத்திடல் முறைய தன்றால் தாரகன் தானை வீரர்
அடுத்திடிற் படுப்பர் கண்டாய் அன்றியும் யானே நின்னை
எடுத்தனன் மிசைவன் துய்க்கின் இரும்பசி யுலவா தென்னா
விடுத்தனன் உய்ந்து போதி விளிவுறேல் எளியை யென்றாள்.

என்னைத் தடுப்பது உனக்கு முறையல்ல; தாரகாசூரனுடைய சேனைவீரர் இங்கு தற்செயலாக வருவரேல் உன்னைக் கொன்றிடுவர்; அல்லாமலும் யானே உன்னை எடுத்து உண்டிடுவேன்; உண்டாலும் எனக்கு இப்போதுள்ள பசிக்குப் பற்றாது என்று உன்னைத் தப்பவிட்டிருக்கின்றேன்; தப்பி ஓடிச்செல். இங்கு நின்று இனியும் தடுத்து முடிவாகிப் போகாதே எளிய வலியிலாதவனே என்றாள். 23

பாதகி இனைய மாற்றம் பகர்தலும் வீரன் கேளா
வேதியின் நினது சூலப் படையிற எறிந்தேன் நின்னை
மாதென அடாது நின்றேன் மற்றிதை உணர்ந்து வல்லே
போதியால் இவளை விட்டுப் போக்கலை கரத்தை யென்றான்.

பாதகியான அசமுகி இந்த வார்த்தை சொல்லலும்; வீரமாகாள தேவர் கேட்டு; அடியே அசமுகி! விரைவுடன் நீ வீசிய சூலப்படையை வாளினால் வெட்டி வீழ்த்திய யான், உன்னையும் வெட்டிக் கொன்றிருப்பேன்; நீ ஒரு பெண்; ஒரு பெண்ணினைக் கொல்லல் பழியாகும் என விட்டிருந்தேன்; இதை எல்லாவற்றையும் நீ உணர்ந்துகொண்டு; இவளை விட்டு நீ போவாயாக; அல்லாதுவிட்டால் உனது கையை இழக்கப் போகின்றாய் அதைச் செய்யாதே என்றார். 24

என்றலுங் கொடியள் கேளா ஈங்கிவன் வாளு மின்றி
நின்றனன் இவனொ டேபோர் நேருதல் நெறிய தன்றால்
அன்றியும் இவனை வெல்லல் அரிதினிச் சசியைக் கொண்டு
சென்றிடல் துணிபா மென்னாத் திரும்பினள் சேடி தன்பால்.

என்ற வார்த்தையைக் கொடியவளான அசமுகி கேட்டு; இங்கே இவன் வாளும் இல்லாமல் நிற்கின்றான்; ஆதலால், இவனோடு நான் போர் செய்தல் முறையுமாகாது; அல்லாமலும் இவனை வெல்வது அரிதாகும்; ஆகவே, இந்திராணியைப் பிடித்துக்கொண்டு செல்வதுதான் துணிபானது என்று எண்ணி, தோழி துன்முகி பக்கம் திரும்பினாள். 25

துன்முகி யாகி நின்ற துணைவிதன் சிறைப்பட் டுள்ள
பொன்மிகும் யாணர் மேனிப் புலோமசை தனைத்தான் பற்றிக்
கொன்மலி அம்பொன் மேருக் குவட்டினைக் கொடுபோங் காலின்
வன்மையி னோடு கொண்டு மறிமுகத் தணங்கு போனாள்.

செயலுக்கேற்ற பெயருடன் துன்முகி என நின்ற தனது தோழியின் கையின் பிடியில் சிக்கப்பட்டுள்ள; பொன்வண்ணம் மிகுந்த வனப்புடைய மேனி கொண்ட இந்திராணியை இப்போது தான் பற்றிப் பிடித்துக்கொண்டு; உயர்ச்சி பொருந்திய அழகிய பொன்னாகும் மேருமலையின் முடி ஒன்றைத் தூக்கிக் கொண்டு போகும் காற்றின் வலிமையைப் போன்று; இந்திராணியைத் தூக்கிக் கொண்டு விசையுடன் அசமுகி போனாள். 26

போகலும் அதனை ஐயன் பொருநரில் தலைவன் பாரா
ஏகுதி போலும் நில்லென் றெய்தியே உடைவாள் வாங்கிச்
சேகுறு மனத்தாள் கூந்தல் செங்கையாற் பற்றி யீர்த்துத்
தோகையைத் தொட்ட கையைத் துணித்தனன் விண்ணோர் துள்ள.

போதலும், அதனை ஐயனார் பகவானின் சேனைத் தலைவர் வீரமாகாளர் பார்த்து; அசமுகி! ஓடுகிறாய்போலும், நில் என்று உரப்பி, பின்தொடர்ந்து வந்து; தமது திருவரையில் இருக்கும் வாளினை உருவி எடுத்து; வஞ்சனை மனமுடைய அசமுகியின் தலையின் மயிரினைத் தனது சிவந்த கையால் பற்றிப் பிடித்து இழுத்து; இந்திராணிதேவியைத் தீண்டிய அசமுகியின் கையினை வெட்டினார்; தேவர்கள் இது கண்டு மகிழ்ச்சிபால துள்ளும்படி. 27

இருட்டுறு பிலத்துற் றோரை எடுத்துவெள் ளிடையிட் டென்ன
மருட்டுறு மதிய ளாகி வருந்திய சசியென் பாளை
அருட்டிறத் தோடு வீடு செய்துபின் அவுண மாதை
உருட்டினன் றனது தாளால் உருமென உதைத்துத் தள்ளி.

இருளாய பாதாள நரகத்துக் குழியில் அகப்பட்டு நீங்காத துயருடன் இருந்தோரைத் தூக்கி எடுத்து; வெளியான ஒளியுடைய இடத்திலே விட்டாற் போல; தெளிவு பெறாத மனமுடையவளாய் அசமுகி கையில் அகப்பட்டு வருந்திய இந்திராணியை; அருளான உள்ளப்பாங்குடன் வீரமாகாள தேவர் விடுதலை செய்து, பின்னர் அசுரப் பெண்ணான அசமுகியைத் தமது திருப்பாதத்தால் இடிவீழ்ந்தாற்போல உருட்டி உதைத்துத் தள்ளினார். 28

அயமுகி வீழ்த லோடும் அழுங்கியே அயலின் நின்ற
வயமிகு துன்மு கத்து மங்கைதன் கரத்தி லொன்றைச்
செயிரறு சசியை நீயுந் தீண்டினை போலு மென்னாத்
துயல்வரு தொடையல் வீரன் துணித்தனன் சோரி பொங்க.

அசமுகி வீழ்தலோடும்; ஆ! என்று வீரிட்டுக் கத்தி அழுது அயலே நின்றிட்ட வலிமை கொண்ட துன்முகி என்னும் பெண்ணின் கையில் ஒன்றை; அடியே! நீயும் குற்றம் அற்ற இந்திராணியின் கையைத் தீண்டினாய் போலும் என்று; விளங்கி நிற்கும் வாசனை கொண்ட மலர்மாலை அணிந்த வீரமாகாள தேவர்; இரத்தம் கொப்பளிக்க துன்முகியின் கையையும் வெட்டினார். 29

வேறு

மதர்த்திடு துன்முகி வன்கை வாளினுற்
சிதைத்திடு மொய்ம்புடைச் சேனை காவலன்
உதைத்தனன் அனையளும் ஓவென் றேயுளம்
பதைத்தனள் புலம்பியே படியில் வீழவே.

மதங்கொண்ட துன்முகியின், வலிமை கொண்ட கையினை வாளினுற் சிதைத்து வெட்டிய; வலிமையுடைய ஐயப்பனின் சேனைக்கு நாயகர் வீரமாகாள தேவர் தமது பாதத்தால் துன்முகியையும் உருட்டி உதைத்தார்; அவளும் ஐயோ! என்று கத்திக் குளறி உள்ளம் பதைபதைத்துப் புலம்பியே பூமியில் வீழ்ந்தாள். 30

மகாகாளர்வரு படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1603.

---

# 37. அசமுகி சோகப் படலம்

அறைபடு கழலினுன் அவுண மாதர்கை
எறிதலுங் குருதிநீர் எழுந்த தன்மையால்
திறல்கெழு வெய்யசூர் திருவைச் சுட்டிடுங்
குறைபடு ஞெகிழியின் கோலம் போலுமே.

ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த வீரமாகாள தேவர்; அசுரப் பெண்களது கைகளை வாளால் வெட்டுதலும்; அவர்கள் கைகளில் இருந்து இரத்த நீரானது எழுந்து சீறிப் பாய்ந்த தன்மையால்; அது கொடிய சூரபன்பன் என்பவனது செல்வங்களை எல்லாம சுட்டெரித்தற்குத் தோன்றிய நெருப்பின் குறங்கொள்ளி போன்றிருந்தது; கை வெட்டுண்ண, அதால் இரத்தம் வடிய நின்ற காட்சி சூரனுடைய திருவைச் சுட்டிடும் குறங்கொள்ளி போலாயது. 1

திரைந்தெழு குடிஞைபோல் குருதி சென்றிடக்
கரந்துமி படுதலுங் கவன்று வீழ்ந்தனள்
வருந்தினள் அரற்றினள் மறிமு கத்தினுள்
விரிந்திடு கனலுடை வேலை போன்றுளாள்.

திரைகளுடன் எழுந்து செல்லும் ஆற்றினைப்போல் இரத்தம் சென்றிட; கைகள் வெட்டுப்படுதலும், அசமுகி கலங்கி வீழ்ந்தாள்; வருத்தப்பட்டாள் அழுதாள்; எப்படியெனில், விரிந்து விளங்கும் வடவாமுகாக்கினியுடன் தோன்றுகின்ற கரிய சமுத்திரம் போன்றுள்.

ஆட்டு முகமுடைய அசமுகி, கறுத்த மேனியுடன் கை வெட்டுண்டு இரத்தம் பாய அழுது கத்தி துன்பப்பட்டமை கரிய கடல்மேல் விரிந்து எழுகின்ற வடவாமுகாக்கினி எனும் நெருப்பைப் போன்றிருந்தது. 2

மருண்டனள் பதைத்தனள் மறித்த கையினள்
வெருண்டனள் நிலனுற வியன்கை எற்றினள்
உருண்டனள் வெரிநுடன் உரமுந் தேய்வுறப்
புரண்டனள் செக்கரிற் புயலிற் ருேன்றுவாள்.

அசமுகி மருண்டாள்; பதைத்தாள்; கைகளை உதறிஞள்; வெருண்டாள்; நிலத்தின்மீது தனது பெரிய கையால் அடித்தாள்; விழுந்து உருண்டாள்; முதுகோடு தனது நெஞ்சம் தேய்வுற்றுப் போம்படி புரண்டாள்; இரத்தம் செறிந்த மேனியுடன் அவளைப் பார்த்தால் செக்கற் பொழுதில் தோன்றும் முகிலைப் போல விளங்கிஞள். 3

புரந்தரன் தேவியைப் பொம்மெ னப்பிடித்
துரந்தரு வாயிலிட் டுண்பன் ஈண்டெனு
விரைந்தெழும் சென்றிடும் மீளும் வீழ்ந்திடும்
இருந்திடும் சாய்ந்திடும் இரங்குஞ் சோருமே.

பின்னர் இந்திரனுடைய மனைவி இந்திராணியைத் திடீரெனப் பிடித்து வலிமையுடைய தனது வாயில்போட்டு உண்பன் இவ்விடத்து இன்று என்று கூறிக்கொண்டு விரைவுடன் எழுவாள்; கிட்டச் செல்வாள்; திரும்பி வருவாள்; விழுந்து கிடப்பாள்; எழும்பி இருப்பாள்; சாய்வாள்; இரங்கி அழுவாள்; சோருவாள். 4

கடித்திடும் இதழினைக் கறைகண் மீச்செலக்
குடித்திடும் உமிழ்ந்திடும் குவல யத்திரீஇத்
துடித்திடும் பெயர்ந்திடும் துளக்குஞ் சென்னியை
இடித்தெனக் கறித்திடும் எயிற்றின் மாலையே.

சொண்டினைக் கடிப்பாள்; இரத்தம் பீறிட்டு மேற் செல்ல, அதைக் குடிப்பாள்; இரத்தத்தை உமிழ்வாள்; பூமி எங்கும் அந்தரப்பட்டுத் துடிதுடித்துத் திரிவாள்; எழுவாள்; தலையை ஆட்டுவாள்; இடிமுழங்கினுற்போலப் பற்களைக் கறிப்பாள். 5

திகைத்திடும் நன்றுநஞ் செய்கை ஈதெனு
நகைத்திடும் அங்குலி நாசி யில்தொடும்
புகைத்தென உயிர்த்திடும் புவியைத் தாள்களால்
உகைத்திடும் புகையழல் உமிழும் வாயினுல்.

ஐயோ! இப்படியோ என் கைபோவது எனத் திகைப்பாள்; நல்லது நல்லது எனது செய்கை என்று சிரித்திடுவாள்; விரலை மூக்கிலே வைத்துச் சிந்திப்பாள்; புகைதோன்றினுற்போல மூச்செறிவாள்; பூமியைக் காலினுல் உதைப்பாள்; புகையையும் நெருப்பையும் வாயால் உமிழ்வாள் போன்று கோபங்கொள்வாள். 6

உம்மென உரப்பிடும் உருமுக் கான்றென
இம்மெனச் சினத்திடும் எரிவி ழித்திடுந்
தெம்முனைப் படையடுஞ் சேனை வீரனை
விம்மிதப் படுமுடல் வியர்க்கும் வெள்குமே.

உம்மென்று கத்துவாள்; இடியேறு விழுந்தால் ஒப்ப விம்மி வீரிட்டு அழுவாள்; சினப்பாள்; கண்ணினால் நெருப்புத் தோன்றப் பார்ப்பாள்; பகையாகப் போர்முனையில் வந்த எவ் வீரனையும் சங்கரிக்கும் வீரமாகாள தேவரின் செயல் குறித்து ஆச்சரியப்படுவாள்; உடல் வேர்வை கொள்வாள்; வெட்கப்படுவாள். 7

அற்றிடு கரத்தினை அறாத கையினால்
தெற்றென எடுத்திடும் தெரிந்து நோக்கிடும்
ஒற்றிடும் விழிகளில் உகுக்குஞ் சோரிநீர்
இற்றெவர் பட்டனர் என்னின் என்னுமே.

வெட்டி வீழ்ந்த கையினை, வெட்டுண்ணாத மற்றக் கையில் திடீரென எடுப்பாள்; கவனித்து அதைப் பார்ப்பாள்; கண்களில் கையை ஒற்றுவாள்; கண்ணால் இரத்தமும் வர கண்ணீர் விடுவாள்; ஐயோ! என்னைப்போல வேறு யார் இப்படித் துன்பப் பட்டார்கள் என்பாள். 8

வீவதே இனியெனும் வினையி னேன்றனக்
காவதோ இஃதெனும் ஐய கோவெனும்
ஏவரும் புகழ்தரும் எங்கள் அண்ணர்பாற்
போவதெவ் வாறெனப் புலம்பு கொள்ளுமே.

இனி நான் இறப்பதுதான் என்பாள்; அம்மவோ! கொடிய பாவியேனுக்கும் இப்படியும் ஆவதோ என்பாள்; ஐயோ! என்று சோர்ந்து குமுறுவாள்; எல்லாராலும் புகழப்படுகின்ற எங்கள் அண்ணன் முன் இனி என்னென்றுதான் நான் போவேன் என்று புலம்பி அழுவாள். 9

காசினி தனில்வருங் கணவர் கைதொடக்
கூசுவ ரேயெனுங் குறிய பங்கெனப்
பேசுவ ரேயெனும் பிறரும் வானுளோர்
ஏசுவ ரேயெனும் என்செய் கேனெனும்.

ஐயோ! இப்பூமியிலே எனக்காக வருகின்ற கணவன்மார்கள் என் நிலை கண்டு; என்னைக் கையால் தொடக் கூசப் போறாரே என்பாள்; கைபோன கட்டைச்சி எனக் கண்டவுடன் பிறரெல்லாரும் இகழ்ந்து பேசுவரே என்பாள்; தேவர்கள் எல்லாம் இவள் செய்த கொடுமைக்கு இது காணாது என்று ஏசுவார்கள் என்பாள்; இனி என்னதான் செய்வேன் என்பாள். 10

தேவர்கள் அனைவருஞ் சிந்தித் தென்கரம்
போவது புணர்த்தனர் பொன்று வேன்இனி
ஆவதன் முன்னரே அவரை யட்டுல
கேவையும் முடிப்பனென் றெண்ணிச் சீறுமே.

தேவர்கள் எல்லாருமாகத்தான் சிந்தனை செய்து எனது கை போவதற்கு வழி வகுத்தார் என்பாள்; இனி நான் இறப்பேன்; அதற்கு முன்பாக இத் தேவரை எல்லாம் கொன்று, உலகம் எல்லாவற்றையும் முடிப்பேன் என எண்ணிச் சீறுவாள். 11

பாருயிர் முழுவதும் படுத்தி டோவெனும்
ஆரழல் வடவையை அவித்தி டோவெனும்
பேருறு மருத்தினைப் பிடித்தி டோவெனும்
மேருவை அலைத்தனன் வீட்டு கோவெனும்.

இப்பூமியில் உள்ள உயிர் முழுவதையும் கொல்லட்டோ என்பாள்; கொடிய சுவாலைகளுடன் பொருந்திய வடவாமுகாக்கினியை அணைத்திடட்டோ என்பாள்; சுழன்று வரும் காற்றைப் பிடிக்கட்டோ என்பாள்; மகாமேருமலையைப் பிடித்து உலுப்பிப் பிடுங்கி எறிவேனோ என்பாள். 12

பிளுறும் எழிலிகள் பிறவும் பற்றியே
மீளரி தெனும்வகை மிசைந்தி டோவெனும்
நாளினை முழுவதும் நாளு டன்வருங்
கோளினை முழுவதுங் கொறித்தி டோவெனும்.

மழை பொழியும் மேகங்களையும் பிற எல்லாவற்றையும் பிடித்துத் தப்பி ஓட முடியாதபடி வாயில் இட்டு அதுக்கித் தின்னட்டோ என்பாள்; நட்சத்திரங்கள் முழுவதையும், நட்சத்திரங்களுடன் தோன்றுகின்ற கிரகங்களையும் வாயிற் போட்டுக் கொறித்துத் தின்னட்டோ என்பாள். 13

சீர்த்தகை இழந்தியான் தெருமந் துற்றது
பார்த்திக ழுங்கொல்இப் பரிதி வானவன்
ஆர்த்திடுந் தேரொடும் அவனைப் பற்றியே
ஈர்த்தனன் வருவதற் கெழுந்தி டோவெனும்.

சிறப்புடைய எனது கையை இழந்து விட்டதைப் பார்த்து இகழுவான் போலும் வானத்துள்ள சூரியதேவன்; ஆதலால், இரைந்து செல்லும் அவனுடைய தேரோடும் அவனைப் பிடித்து இழுத்துக்கொண்டு வர யான் எழுந்து போகட்டோ என்பாள். 14

கண்டதோர் பரிதியைக் கறித்துச் சூழ்ச்சிசெய்
அண்டர்கள் யாரையும் அடிசி லாகவே
உண்டெழு கடலையும் உறிஞ்சிக் கைபுறத்
தெண்டிரை தனிற்கழீஇத் திரும்பு கோவெனும்.

இச் செயலைக் கண்ட இந்தச் சூரியனைப் பிடித்து (மிளகாய் போன்று) கடித்துக் கொண்டு; எனது கை போகும்படி சூழ்ச்சி செய்த தேவரையெல்லாம் பிடித்துச் சோறுபோலாக்கி உண்டு; ஏழு கடல்களையும் உறிஞ்சி நீர் வேட்கையால் குடித்து, அப்பால் உணவு உண்ட எனது எச்சிற் கையினைப் புறவாழி சமுத்திரத்தில் சென்று கழுவி விட்டு வரட்டோ என்பாள். 15

செந்நலம் நீடிய தென்னங் காயிடைத்
துன்னிய தீம்பயன் சுவைத்திட் டாலெனப்
பின்னுறு மதியினைப் பிடித்துக் கவ்விமெய்
இன்னமிர் தினை நுகர்ந் தெறிகெ னேவெனும்.

சிவந்து அழகு விளங்கப்படும் தென்னை மரத்தின் செவ்விள நீரிடத்து உள்ளிருக்கும் இனிய தித்திப்பான அமிர்தம்போலும் இளநீரைச் சுவையுடன் பருகுவது போன்று; பின்னுகைத் தோன்றப் போகும் சந்திரனைப் பிடித்து வாயால் கவ்வி சந்திரனில் உள்ள இனிய அமிர்தத்தினை உண்டு; பிற்பாடு, இளநீர் உண்ட பின் தென்னங் கோளையை எறிவது போன்று; அமிர்தம்போன பின் சந்திரனையும் எறியட்டோ என்பாள். 16

இந்திரன் களிற்றினை ஏனைத் தந்தியை
செந்துவர்க் காயெனச் சேர வாய்க்கொளா
ஐந்தரு இலைகளா அவற்றுள் வெண்மலர்
வெந்துக ளாக்கொடு மிசைகெ னேவெனும்.

இந்திரனுடைய ஐராவத யானையையும், மற்றைய யானைகளையும் ஒருங்கு சேர நல்ல சிவந்த பாக்கினைப் போல வாயில் போட்டு; ஐந்து தேவ விருட்சங்களை வெற்றிலைபோல உண்டு; அந்த மரங்களில் உள்ள வெள்ளைப் பூக்களை; வெள்ளை நிறமுடைய சுண்ணும்புபோல பிசைந்து உண்ணட்டோ என்பாள். 17

தாக்குகோ பணிகளைத் தலைகி ழக்குற
நீக்குகோ பிலம்படு நிலயத் தோரையுந்
தூக்குகோ புவனியைச் சுழற்றி மேலகீழ்
ஆக்குகோ மாலென அருந்து கோவெனும்.

உலகினைத் தாங்கும் பாம்புகளைத் தாக்கித் தலைகீழாக ஆக்கட்டோ; பாதாளத்து இருக்கும் எல்லாரையும் மேலே தூக்கட்டோ; பூமியைத் தூக்கிச் சுழற்றி மேலாக உள்ள உலகத்தைக் கீழாக வைக்கட்டோ என்பாள்; நாராயணக் கடவுள் போலப் பூமியை உண்ணட்டோ என்பாள். 18

வேறு

ஆரும் அச்சுற இனையன அசமுகி வெய்யாள்
சூரன் தங்கைமா லுளத்தினள் இறப்பது துணிவாள்
பேரிடும் பையள் தொலைவுரு மானமே பிடித்தாள்
வீர வன்மையள் ஆதலின் உரைத்தனள் வெகுண்டாள்.

இப்படியாக இவள் சொன்னதைக் கேட்டார் எல்லாரும் அச்சம் கொள்ளுமாறு அசமுகி எனும் கொடியவள் சூரனுடைய தங்கை; மயங்கிய உள்ளத்தளாய் பெரும் இடும்பை உற்றவளாய்; இனி இறப்பேன் எனத் துணிந்து கொள்பவளாய்; தொலையாத மானம் மேற்கொண்டவளாய்; தான் சொன்னபடி செய்யக்கூடிய வீரவலிமை உடையவளாதலின், இப்படியாக நான் இறப்பது நிச்சயம் அதன்முன் எல்லாவற்றையும் முடிவு செய்து இறப்பேன் எனக் கோபங்கொண்டாள். 19

வெகுளு மெல்லையில் கண்டனள் துன்முகி வெய்ய
தகுவர் தங்குலத் துதித்தனள் ஆயினுந் தகவின்
புகுதி சால்புணர் புந்தியள் ஆதலிற் பொருக்கென்று
இகுளை முந்துற வந்தனள் இனையன இசைத்தாள்.

இவ்வாறு அசமுகி கோபப்படும் நேரத்தில்; அதனைத் துன்முகி என்பாள் கண்டுகொண்டு; இவளும் கொடிய அசுரர் குலத்துத் தோன்றினள் எனினும்; தகவால் அவ்வக் காலங்களுக்கேற்ற புத்தியை மேற்கொள்பவள் ஆதலினால்; விரைவுடன் தனது தோழியான அசமுகி முன்னால் வந்து; இந்த வார்த்தைகளை வகுத்து எடுத்துச்சொல்வாள். 20

வைய மென்செயும் வானக மென்செயும் மற்றைச்
செய்ய வானவர் என்செய்வர் வரைகளென் செய்யும்
ஐய மால்கடல் பிறவுமென் செய்திடும் அவனால்
கையி ழந்திடின் உலகெலாம் முடிப்பது கடனே.

தோழியே! அசமுகி கேள்; அந்த வீரனால் உனது கை வெட்டுண்டு இழந் தமைக்கு இந்தப் பூமி என்ன செய்யும்; தேவ உலகம் என்ன செய்யும்; மற்றய செப்பமுடைய தேவர்கள் என் செய்வார்கள்; மலைகள் என்செய்யும்; பரந்த சமுத்திரம் என்செய்யும் பிறபொருள்தான் என்செய்ய முடியும்; கை வெட்டப் பட்டு இழந்து போனமைக்காக நீ உலகம் யாவற்றையும் அழிப்பது கடனே. 21

பாரும் வானமுந் திசைகளும் பல்லுயிர்த் தொகையுஞ்
சேர வேமுடித் திடுவதை நினைந்தனை செய்யின்
ஆரும் நின்றனை என்செய்வர் அவையெலா முடைய
சூர னேயுனை முனிந்திடும் அவன்வளந் தொலையும்.

இப்பூமியும் வானமும் திசைகளும் பல உயிர்த்தொகையும் ஒருங்குசேர முடிவாக்கும்படி நீ நினைந்தாய்; அப்படிச் செய்யின்; ஆர்தானும் உன்னை என்ன செய்வார்; அந்த உலகை எல்லாம் உடையவன், சூரபன்பன்; அவனே உன்னைக் கோபிப்பான்; அவனது செல்வம்தான் உலகம் அவை யாவும் தொலைந்தே போகும். 22

ஆத லான்மனத் தொன்றுநீ எண்ணலை அவுணர்
நாத னாகிய வெய்யசூர் முன்னுற நாம்போய்
ஈதெ லாஞ்சொலின் இமையவர் கிளையெலா முடிக்கும்
போத லேதுணி வென்றனள் பின்னரும் புகல்வாள்.

ஆனதன்மையின் உனது மனத்தில் இப்படி ஒன்றும் நீ எண்ணாதே; அசுரர் களுக்கெல்லாம் நாதனாகிய சூரபன்மனிடத்து முன்பாக நாம் சென்று; இங்கு நடந்ததைச் சொன்னால் இந்த தேவர் கூட்டமானவையை முற்றிலுமே முடிவு செய்திடும்; ஆகையால், அங்கு போவதுதான் துணிவு என்று கூறிவிட்டுப் பின் னரும் துன்முகி சொல்வாள். 23

வேறு

ஞானமில் சிறுவிதி நடாத்தும் வேள்வியில்
வானவர் தங்களின் மடந்தை மார்களில்
தானவர் தங்களின் தத்தம் மெய்களில்
ஊனமில் லோரையும் உரைக்க வல்லமோ.

நல்ல ஞான அறிவில்லாத தக்கன் நடத்திய யாகத்தில்; தேவர்களுடைய பெண்களாயினேரில் அல்லது அசுரர்களாகியவர்களது பெண்கள் கூட்டத்தாரில் எவர்கள்தான் தங்கள் தங்கள் மேனியில் ஊனம் அடையாது போனூர்கள் என்பதை; நாங்கள் சொல்ல முடியுமோ? 24

நினைவருங் கண்ணுதல் நிமலற் கேயலால்
அனையனை அடைதரும் அறிஞர்க் கேயலால்
எனைவகை யோர்க்குமெவ் வுயிர்க்கும் ஏற்பதோர்
வினைபடும் இழிதுயர் விட்டு நீங்குமோ.

எமது நினைப்பிற்கும் எட்டொணுத நெற்றிக் கண்ணுடைய கடவுளுக்கே யல்லாமல்; அவரை முற்றிலும் தஞ்சமாக அடைகின்ற அறிவாளிகளான அடியார்களுக்கே அல்லாமல்; மற்றும் எந்த வகையான நிலை உடையோர்க்கும் எல்லா உயிர்கட்கும் பொருந்திய வினைக்கு ஏற்படுகின்ற இழிந்ததான துயரம் விட்டு நீங்குமோ? நீங்காது. 25

ஆகையின் மங்கைநீ அரற்றல் வெள்கியே
சோகமுங் கொள்ளலை துயரும் இன்பமும்
மோகமும் உயிர்க்கெலாம முறையிற் கூடுமால்
ஏகுதும் எழுகென இயம்பித் தேற்றினள்.

ஆனதன்மையால் பெண்ணே! நீ மிகவும் வெட்கப்பட்டுச் சோகம் அடையாதே!; துயரமும், இன்பமும், ஆசையும் எல்லா உயிர்க்கும் முறையாக தாம் ஒன்றின்பின் ஒன்ருகக் கூடும்; ஆகையால், இதைப்பற்றி இனியும் சிந்தியாதே; போவோம் எழுவாயாக எனச் சொல்லித் தேற்றினள். 26

வேறு

மொழிந்து துன்முகி தெளித்தலும் நன்றென முன்னு
எழுந்து துண்ணென அசமுகி என்பவள் இலதாய்க்
கழிந்த துன்பொடு நின்றதோர் சசியினைக் காணுஉ
அழிந்த மானவெந் தீச்சுட இனையன அறைவாள்.

இந்தவாறு துன்முகி மொழிந்து அசமுகியைத் தேற்றுதலும்; அது கேட்ட அசமுகியும் அதுதான் நல்லது என தனது மனதில் எண்ணி; துடுக்குடன் எழுந்து அசமுகி என்பவள்; தற்காலிகமாக நீங்கிப் போன துயரத்துடன் நின்ற இந்திராணியைப் பார்த்து; கை வெட்டுண்டமையால் அழிந்துபோன மானம் என்னும் நெருப்புச் சுட இந்த வார்த்தைகளைச் சொல்லுவாள். 27

துப்பு றுத்திய அண்டங்கள் யாவினுஞ் சூரன்
வைப்பு றுத்திய திகிரியும் ஆணையும் வழங்கும்
இப்பு றத்தனில் ஒளிப்பினும் இதுவன்றி அண்டத்
தப்பு றத்தினில் ஒளிப்பினும் பிழைப்புமக் கரிதே.

வலிமையுடைன் விளங்கும் இந்த அண்டங்கள் எங்கெண்ணுலும் சூரபன்மனுடைய உறுதியுடைய ஆணையும் கட்டளையும் மிகக் கண்டிப்பாக வழங்கப் படும்; இந்தப் புறத்தில் நீ ஒளித்தாலும்; இது அல்லாமல் அண்டங்களின் அப்புறத்தில் நீ ஒளித்தாலும் இனிமேல் நீ தப்பிப் பிழைப்பது அரிது. 28

மறைத லுற்றிடும் இந்திரன் தன்னைஇவ் வனத்தின்
உறைத லுற்றிடும் உன்றனை ஒழிந்தவா னவரை
இறைத னிற்பற்றி ஈர்த்துப்போய் என்னகர் தன்னில்
சிறைப டுத்துவன் திண்ணமெங் கோமகன் செயலால்.

மறைந்து ஒளித்துத் திரிகின்ற இந்திரனை; இந்த வனத்தில் இருக்கின்ற உன்னை; உங்களை நீங்கிய மற்றைத் தேவரை ஓர் இறைப் பொழுதில் பிடித்து இழுத்துச்சென்று எனது நகரிலே சிறைப்படுத்தி வைப்பேன்; இது திண்ணமென் றறி; எங்களது அரசன் சூரபன்மனது செயலால் இதை முடிப்பேன் என்பதை உணர்வாயாக. 29

உங்கள் தம்மையான் சிறைபடுத் தேன்எனின் உலகம்
எங்கு மாள்கின்ற சூரபன் மாவெனும் இறைவன்
தன்கை யன்றியா னெனதுரந் தனிலெழுந் தனவுங்
கொங்கை யன்றியான் பேடியே குறிக்கொளென் றகன்றாள்.

உங்கள் யாவரையும் நான் சிறைப்படுத்தாது விடுவேனெனில்; யான் உலகம் எங்கும் ஆளுகின்ற சூரபன்மன் எனும் அரசனின் தங்கையல்ல; எனது நெஞ்சிலே எழுந்து பருத்திருப்பதுவும் கொங்கையல்ல; நான் பேடியென்று நீ எண்ணிக்கொள்வாயாக என்றாள். 30

மாகாளர் வருபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1633.

---

# 38. இந்திரன் மீட்சிப் படலம்

அகல நின்றதோர் வீரமா காளனும் அடலோன்
உகவை யோடுறு சசியினை நோக்கி நின் னுளத்தில்
தகுவர் தங்களுக் கஞ்சலை அன்னையுன் தலைவன்
புகுதும் எல்லையும் அளிப்பன்ஈண் டுறைகென்று போனுன்.

அவ்வாறு சபதம் கூறி அசமுகி போதலும்; அங்கு நின்றதோர் வீரமா காள தேவன் என்னும் வலியோன்; மகிழ்வோடு நிற்கின்ற இந்திராணியை நோக்கி; நினது உள்ளத்தில் அசுரர்களுக்கு அஞ்சாதே!; தாயே உன்னை உனது நாயகன் வரும்துணையும் காத்துநிற்பேன்; இவ்விடம் நீ இருப்பாயாக என்று கூறி அப்பால் போயினர். 1

போன காலையிற் புலோமசை அடவியம் புறனோர்
மானி னம்பிரிந் துற்றென அவ்வனம் வைகிக்
கோன வுன்வினை முற்றிய நோற்றனள் குறிப்பால்
ஆன பான்மையை நாரத முனிவரன் அறிந்தான்.

வீரமாகாள தேவர் போன காலத்து; இந்திராணி காட்டினில் வாழ்ந்துற்ற மான்கூட்டத்துள்ள ஒரு மான்; தனது இனத்தைப் பிரிந்துகொண்ட நிலைமை போன்று; அந்தச் சீகாழி வனத்தில் தங்கி; தனது கணவன் போன செயல் கைகூடி வரவேண்டும் என்பதே நோக்கமாகத் தவம் செய்திருந்தாள்; இந்த வரலாறுகள் யாவற்றையும் நாரத முனிவர் தமது திருவுளத்து ஞான உணர்வால் கண்டு கொண்டார் 2

மேலை வெள்ளியம் பருப்பதந் தனில்விரைந் தேகிச்
சீல விண்ணவர் தம்முடன் சிவனடி பரவக்
கால மின்றியே இருந்திடும் இந்திரன் கடைபோய்
ஞாலம் வைகிய புலோமசைக் குற்றவா நவின்ருன்.

முன்தோன்றிய மேலான திருக்கைலாய மலையில் நாரத முனிவர் விரைவாகச் சென்று; அங்கு சீலம் நிறைந்த தேவர்களுடன் சிவபிரான் திருவடி கண்டு தரிசித்து வணங்குவதற்குக் காலம் கிட்டாமல் இருந்த இந்திரதேவன் பக்கராகச் சென்று; இப்பூமியிடத்து வீற்றிருக்கும் இந்திராணிக்கு நேர்ந்துள்ள காரியங்களைப் பற்றி இந்திரனிடம் சொன்னுர். 3

நவின்ற வாசகங் கேட்டலும் மகபதி நனியுட்
கவன்று தேறியே முனிந்துபின் இறையருள் கருதி
அவன்றன் மாமுறை தூக்கியே தன்னைநொந் தழுங்கித்
துவன்ற தேவரோ டெழுந்தனன் அரன்புகழ துதித்தே.

நாரத முனிவர் சொல்லிய வாசகம் கேட்டலும்; இந்திரதேவன் மிகவும் உள்ளம் கவலைகொண்டு; பின்பு தெளிந்து; அசுரர்கள் மீது கோபங்கொண்டும்; பின்னர் இறைவனுடைய அருள்தான் எதற்கும் வேண்டும் என்பதைக் கருதி; ஓகோ! ஈதெல்லாம் அவனது பெருஞ்செயலாலல்லவோ நடக்கின்றது என; இப்படி தான் துயரப்படுதற்கும் தானே காரணம் எனத் தன்னை நொந்து அழுது வருந்தி; அவ்விடம் இச்செய்தி கேட்டு வாட்டமுற்ற மற்றத் தேவரோடும் சிவபிரான் புகழைத் துதித்துக் கொண்டு எழுந்தான் இந்திரன்; 4

வந்து நந்தியெம் மடிகளின் அடிமுறை வணங்கி
அந்த மில்பகல் வேலைநோக் குற்றனம் அமலன்
சிந்தை செய்தெமை யருள் புரிந் திடுகிலன் தீயேம்
முந்தி யற்றிய தீவினைப் பகுதியை முன்னி.

இந்திரன் எழுந்து வந்து; நந்தியெம்பெருமானின் மலரடிகளை முறையாக வணங்கி; சொல்வான் ஐயனே முடிவில்லாத பல நாட்களாக ஈசன் அருளைப் பெறும்படி நாம் நினைத்திருந்தோம்; ஆனால், எமது பகவான் எமக்கு இன்னமும் அருள்புரிந்திடவில்லை; இதற்குக் காரணம்; தீயவரான நாங்கள் முன்பு செய்துகொண்டுள்ள தீவினைச் செயலை எண்ணியருளி. 5

கைம்மை யாம்பெயர் அணங்கினோர் பெருவகை கறுத்த
செம்மை யார்களத் தெம்பிரான் எமக்கருள் செய்வான்
பொய்ம்மை தீர்தவம் இயற்றிட நிலமிசைப் போதும்
எம்மை யாங்கருள் புரிந்தனை விடுத்தியென் றியம்ப.

கணவனிலாமை என்கின்ற கைம்மையினை தேவப் பெண்கள் பெற்றுக் கொள்ளாதபடி; நஞ்சையுண்டு அதனாலே கறுத்த உண்மைவிளங்கும் கண்டத்தையுடைய எமது பெருமான் எமக்கருள் புரியவேண்டி; பொய்யிலாத நல்லதவத்தை இயற்றும்படி நாம் பூமியினிடத்தாக இனிப் போவோம்; எம்மை அங்கு போகும்படியாக அருள் செய்துவிடுவீராக என இந்திரன் கூறியருளலும். 6

நன்று போமென நந்தியெம் பெருந்தகை நவிலத்
துன்று வானவர் தம்மொடுங் கழுமலந் துன்னி
நின்ற வீரமா காளனைக் கண்டனன் நேர்போய்ச்
சென்று புல்லியே முகமன்ஓர் அளப்பில செப்பி.

நல்லது நீங்கள் அங்கு போவீராக என்று நந்தியெம்பெருமானான பெருந்தகை கூறியருள; இந்திரதேவன் தன்னுடன் கூடிய தேவர் கூட்டத்துடன் சீகாழியைச் சேர்ந்து; அங்கு நின்ற வீரமாகாளனைக் கண்டவுடன்; நேராக அவரிடம் சென்று தழுவி அணைத்து இனிய வார்த்தைகளால் முகமன் கூறி அவரின் செயலைப் புகழ்ந்து. 7

போதி ஐயவென் றனையனை ஐயன்பாற் புகுத்தி
மாது நோற்றுழிக் குறுகியே அவள்துயர் மாற்றிக்
கேதம் எய்திய அசமுகி சூளுரை கேளா
ஏது செய்வதென் றுன்னினன் இமையவர்க் கிறைவன்.

*

எனது ஐயனே! நீ ஐயனர் பகவான்பால் இனிச் செல்வாயாக என்று வீர மாகாள தேவரை ஐயனர்பாலாகச் செலுத்தி; இந்திராணி இருந்து தவம் புரி யும் இடத்தைச் சார்ந்து; அவள்கொண்ட துயரம் அகற்றி; அப்பொழுது கை வெட்டுண்ட அசமுகி சொல்லிய கொடிய சபத வார்த்தையை இந்திராணி கூறக்கேட்டு; என்னதான் செய்வது என்று இந்திரன் தனது மனதில் எண்ணி னன். 8

சுடர்ப்பெருங்குலி சத்திறை சூழ்ந்தனன் துணியா
அடுத்த மங்கையை யுடன்கொடே விரைந்தவண் அகன்று
புடைக்கண் வந்திடுங் கடவுளர் தம்மொடும் புராரி
எடுத்த வார்சிலைப் பொற்றையிற் கரந்தனன் இருந்தான்.

பிரகாசமான பெரிய குலிசாயிதத்தை உடைய இந்திர தேவன் மனதில் இவைகள் யாவற்றையும் உணர்ந்து ஒரு முடிவினை எண்ணித் துணிந்து; தன் னுடன் நின்ற இந்திராணியையும் உடன் அழைத்துக்கொண்டு விரைவாக அவ் விடம் விடுத்து அகன்று; தனது பக்கராக விரைவுடன் வந்திடுகின்ற தேவர்கள் தங்களுடன் சென்று; சிவபிரான் முப்புர சங்காரத்தின் பொருட்டு எடுத்த வில்லாகிய மேருமலையில் போய் மறைவாக ஒளித்திருந்தான். 9

இந்திரன் மீட்சிப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - 1,642.

# சூரன் அரசிருக்கைப் படலம்

இன்ன பான்மையின் மகபதி இருந்தனன் இப்பால்
முன்ன மேகிய அசமுகி வெய்யதுன் முகத்தாள்
தன்னெ டேகியே மகேந்திரத் தனிநகர் அடைந்தாள்
அன்ன காலையிற் சூரன்வீற் றிருந்தவா றறைவாம்.

இன்ன தன்மையாக இந்திரன் இருந்தனன்; இப்பால் கைவெட்டுண்டு முன்னர் சென்றுள்ளவளான அசமுகி என்பாள், கொடிய துன்முகி என்பாளுடனே சென்று, வீரமகேந்திரபுரம் என்னும் தனியான நகரை அடைந்தாள்; அவள் அங்கு அடைந்த காலையில் சூரபன்மன் அரசு வீற்றிருந்த சிறப்பினைப்பற்றி எமது பகவானே சொல்கின்றோம் என வியாழபகவான் கூறுவார். 1

மீயுயர் கின்ற விண்ணினின் றிழிந்த விழுமிய மேதினி வரைப்பின்
ஆயிர கோடி கொண்டவண் டத்தில் ஆடகப் பித்திகை அவற்றுள்
தீயன விலக்கி நல்லன எடுத்துத் திசைமுகத் தவர்கள் செய்தென்ன
ஓய்வற விளங்கு தபனியப் பொதுவொன் றோராயிரம் யோசனையுறுமே.

மிக உயர்ச்சி வாய்ந்திருக்கின்ற வானத்தினின்றும் தோன்றிய மேலாகிய பூமியின் தொடர்பாக உள்ள ஆயிர கோடியின் மேற்பட்டன என்னும் அண்டங்களில் காணப்படுகின்ற பொன்னின் சுரங்கங்களாயவற்றில் தீயதானவைகளை விலக்கி நல்லவற்றை எடுத்து திக்குக்கொன்றாகிய நான்கு முகமுடைய பிரமதேவர்கள் செய்தது எனும்படி, எங்கும் பொன்மயமாக ஓய்வின்றிப் பிரகாசிக்கின்ற அழகிய அரச சபை மண்டபம் ஒன்று; ஓர் ஆயிரம் யோசனை அகல நீளத்துடன் விளங்கும். 2

இத்தரை யுளதாந் தொல்லைஅண் டத்தில் இடையிடை எய்தியே இலங்கும்
அத்தமால் வரைகள் கைபுனந் தியற்றி அம்புயா சனர் பலர் கூடி
வைத்தெனச் சூரன் அரசியல் நடாத்தும் மன்றினில் ஆயிரகோடி
பத்தியின் நிறுவும் ஆடகத் தூணம் பரந்ததப் பெருமையார் பகர்வார்.

இந்தப் பூமி முதலாகச் சொல்லிய மிகப் பழமையான பல அண்டங்கள் இடத்துப் பொருந்தி விளங்கும் பொன் மலைகளை எடுத்து; தாமரை மலர் ஆசனத்திலிருக்கும் பிரமதேவர்கள் பலர் கூடி; அழகிய சித்திரங்களுடன் விளங்கும் தூண்களாகச் செய்து இந்தப் பொன்னான அரச மண்டபத்தில் வைத்துளர் எனும்படியாக அந்தச் சூரபன்மன் அரசியல் நடாத்தும் மண்டபத்தில் வரிசைக் கிரமமாக நிறுத்தப்பட்ட ஆயிரகோடி பொற் தூண்கள் காணப்படும்; அதன் பெருமையை யார் சொல்ல முடியும். 3

தொல்லையண் டத்தின் கண்டொறுங் கெழீஇய சுவணமா தரையெலாந் தொகைசெய்
தல்லன விலக்கி நல்லன தெரிந்தே அமைத்தபோல் அணிபெறு நிலத்தில்
ஒல்லுறு புடையில் உம்பரில் அங்கண் உலப்பிலாக் குலகிரிக் குழுவிற்
பல்லிருந் துணிசெய் தணிபடுத் தென்னப் பன்னிற ஓவியம் பயிலும்.

மிக முந்திய அண்டங்கள்தோறும் பொருந்தி இருக்கின்ற சிறந்த பொன் நிலங்கள் எல்லாவற்றையும் தொகையாக எடுத்துக் கூட்டி, கூடாதவற்றை விலக்கி நல்லவற்றைத் தெரிந்தெடுத்து அமைத்ததுபோல பொன் விளங்கும் அழகுவாய்ந்துள்ள

நிலத்திலும், இசைவான பக்கங்களிலும், மேலுக்கும் அளவு கடந்தநல்ல மலைகளின் பல துண்டுகளை வெட்டிக் கொண்டு வந்து அவைகளில் அழகிய சித்திரப் பாவைகளைச் செதுக்கி அவ்விடத்தில் வைத்தாற்போன்று பல நிறங்களுடைய சித்திரப் பாவைகள் விளங்குவன. 4

பொன்னிலா அண்டத் தும்பர்க டோறும் பொருந்திய செக்கர்வான் புராரி
தன்னதாணையினுல் ஒருங்குசூழ்ந் தென்னத் தண்மலர் விதானமீத் தயங்கப்
பன்னிருகோடி யாகியெங் கணுஞ்சூழ் பகலவர் சிலவரே யன்றி
அன்னவர் பலரும் பணியிலுற் றென்ன அணிமணிக் கண்ணடி ஒளிரும்.

பொன்மயமாக விளங்கி இருக்கின்ற அண்டங்கள் தோறும் நிலவுகின்ற செவ்வானங்கள் சிவபிரானது கட்டளையினுல் இங்கு வந்து சபை மண்டபத்தின் மேலாக வளைந்து நிற்பதுபோல குளிர்ச்சி வாய்ந்த பூக்களினுல் ஆக்கப்பெற்ற மேற்கட்டிகள் விளங்கவும்; அந்த மேற்கட்டிகளுக்கிடையில் பன்னிரண்டு கோடி என்னும் கணக்கில் எல்லா இடமும் சூழ்கின்ற சூரியர்கள் சிலவரல்லாது, அவர் பலரும் சிவபிரான் கட்டளையினுல் வந்துள்ளனர் எனும்படியாக அழகாகிய கண்ணுடிகள் விளங்கும் 5

மண்ணுலா அண்டத் திரவிகள் என்றாழ் வரம்பிலா மதிகளின் உளவாந்
தெண்ணிலாக் கற்றை ஐம்பெரு நிறத்த செல்லினம் யாவையுஞ் செறிந்தே
அண்ணலார் மேலைக் கம்பலஞ் சூழ்போய் அமர்ந்தென ஆயிடைக் கவரி
எண்ணிலா தனவும் பஃறுகிற் குழுவும் இடைவிராய் மிடைவன எங்கும்.

மண்ணிலான இப்பூமியில் உள்ள சூரியர்களின் வெயில்; அளவு கடந்த சந்திரர்களின் பிரகாசமுடைய நிலாக் கதிர்கள்; ஐந்து பெரிய நிறங்களைக் கொண்ட முகிற் கூட்டங்கள்; ஆகிய எல்லாம் ஒருங்கு சேரச் செறிந்து; அழகுடன் மேலே விளங்கும் சிவந்த பூ மாலைகளால் ஆக்கப் பெற்ற மேற்கட்டியைச் சூழ்ந்து வளைந்து அமைந்துள்ளன என்று சொல்லும்படியாக; அவ்விடத்து வெண் சாமரை தூக்கங்களும் பலவிதமான முசாலாப்புச் சுருக்குகள் எனும் ஆடைத் தூக்கங்களும் சிறப்புடன் மேற்கட்டியைச் சூழ விளங்குவன. 6

பரக்குறும் அண்டந் தொறுந்தொறும் உளவாம் பகலினைப்பரிமுகத்தெரியின்
உருக்கியொன் ருக்கித் தவிசென இயற்றி ஒளிறுதா ரகையவட் குயிற்றித்
தருக்குறு கின்ற மதிகளை மடங்கல் தகவுசெய் திருத்திய தென்னத்
திருக்கிளர் அவையத்தவுணர்கோன் இருப்பச்சிறந்ததோர்அரியணை திகழும்

இன்னும் பக்கராக உள்ள அண்டங்கள் தோறும் உள்ளவரான சூரியர்களை; குதிரைமுகம் போலும் வடவாமுகாக்கினி என்னும் நெருப்பில் வைத்து உருக்கி ஒன்றுக்கி சிம்மாசனம் எனச் செய்து; அதிலே நட்சத்திரங்களை இரத்தினங்களாசப் பதித்து தருக்கமுற்ற சந்திரன்களை சிங்கங்களின் வடிவாக்கி; அதன்மேல் சிம்மாசனத்தை அமைத்துள்ளனர் என்னும்படியாக, மிகவும் அழகிய இலச்சுமீகரம் பொருந்திய ஒரு சிம்மாசனம் அந்தப் பொன்னுன சபாமண்டபத்தில் திகழ்ந்து விளங்கும். 7

ஆனதோர் மன்றத் தரியணை மிசையே ஆயிர கோடியண் டத்தின்
மேனிமிர் வடவை அங்கியும் விடமுமிசைந்தழி யாநெறி மேவித்
தானவர் பரவக் கூற்றெலா மொன்ருய்த் தணப்பில்பேர் அணிகலந் தயங்க
வானிமிர்ந் துற்ரு லென்னவெஞ் சூர மன்னவர் மன்னன்வீற் றிருந்தான்.

அவ்வாருகிய சபையில் உள்ள சிம்மாசனத்தின் மேலே ஆயிர கோடி அண்டங்களில் மேல்நிமிர்ந்து விளங்கும் வடவாமுகாக்கினியும், நஞ்சும் இரண்டும் ஒன்ருகி அழியாத நிலைகொண்டு, இயமனுடன் எல்லாம் ஒன்ருகி இடைவெளிகாணுத வகை எங்கும் பெரிய ஆபரணங்கள் அணியப்பெற்று, வானம் வரையில் நிமிர்ந்து நின்ருலொப்ப ; அசுரர்கள் மகிழ்வால் வணங்க, அந்தச் சிம்மாசனத்து அசுர மன்னர் மன்னரான சூரபன்மன் வீற்றிருந்தான். உலகில் நெருப்பு, நஞ்சு, கூற்று ஆகிய கொடுமை எல்லாம் ஒன்ருகி நிமிர்ந்து ஆபரணகள் பூண்டு கெம்பீரமாய் இருந்தாலென்ன சூரபன்மன் சிம்மாசனத்து இருந்தான். 8

மேலைநாள் அமலன் உதவுபல் லண்டம் மேவர நடாத்துதொல்லாணைக்
கோலொடு வெளிய சீர்த்திகள் முழுதுங் குறுகியே ஈருருக் கொண்டு
பாலுற வந்து நின்றதே யென்னப் பாங்கரில் அவுணர்கள் தாங்கும்
வாலிய துணைசேர் தவளவெண் கவிகை மாமதிக் கடவுளை மலைய.

முன்னளிலே சிவபிரான் தந்தருளிம் பல அண்டங்களையும் ஒருங்கே நடாத்தி வரும்படியான பழைமையான ஆணைசெலுத்தும் கோலோடும், மிக்க சிறப்புகள் எல்லாம் முழுதும் கூடியே இரண்டு வடிவங்கொண்டு ஒன்ருகி குடை வடிவில் மேல் நின்றுள்ளது எனும்படியாக, பக்கராகி நின்ற அசுரர்கள் ஏந்திப் பிடித்திருக்கின்ற இபல்பான அழகின் துணைகொண்ட முத்துக் குடையானது. பூரண சந்திரனை ஒத்து விளங்க. முத்துக் குடையின்பிடி ஈசன் கொடுத்த ஆணையான கோலாகவும் சீர்த்தி மேல் வட்டமாகவும் பொருந்தியது. 9

காருறழ் படிவத் துவரிகள் அனைத்துங் கண்ணகன் பாற்கடல் முழுதும்
ஈருரு வெய்தி யெழுந்துமே லோங்கி இருந்தென வைகலுஞ் செலுமத்
தாரக விறலோன் பஃறலைச் சீயத் தலைமையான் சார்ந்தயல் இருப்ப
ஆரழல் உருவப் பண்ணவ ரேபோல் அமைச்சருங் குமரரும் மருவ.

கருமை ஒத்து விளங்கும் வடிவினையுடைய சமுத்திரங்கள் அனைத்தும்; விசாலித்து விளங்கும் பாற்கடல் முழுவதும், இரண்டும் இரண்டு வடிவாகி எழுந்து மேலோங்கி இருந்தன என்னும்படியாக, நிற்றலும் அங்கு வருகின்ற தாரகாசூரன் என்னும் வலியவனும், பல தலைகளை உடைய சிங்கமுகா சூரன் என்னும் தலைமைப் பாடுடையவனும் சூரபன்மனைச் சார்ந்து பக்கராக இருக்கவும், நெருப்பின் உருவம் போன்ற கடவுளர் போன்ற மந்திரிமாரும் மைந்தர்களும் பக்கராக மருவியிருப்பவும் சிங்கமுகன் பாற்கடலுக்கும், தராகன் உவர்க் கடலுக்கும் உவமையாயினர். 10

எவ்வெலா அண்டத் துறைதரு மருத்தும் இரும்புனற் கிறைவருமாகிச்
செவ்விதின் ஒருங்கித் தத்தமில் உலவாச் சீர்கம் படுபனி சிதறி
அவ்வயின்வேண்டும்அளவையிற் பலவாய்அவனடிபணிந்தெழுந் திறம்போல்
மைவரை யனைய அவுணர்கள் இரட்டும் வாலிய கவரிகள் வயங்க.

எந்த எந்த அண்டங்களில் உறைகின்ற காற்றுக்களும், பெரிய நீருக்கு அரசனை வருணனும், தங்களுடைய வடிவைச் செப்பமுடன் சுருக்கி தாங்கள் தாங்களாக வந்து உலாவி குளிர்ந்த பன்னீர் திவலைகளைச் சொரிந்து வேண்டப்படும் அளவுடன் பலவடிவாகிச் சூரபன்மன் திருவடிகளைப் பணிந்தெழும் தன்மை போன்று கரிய மலையை ஒத்த அசுரர் வீசுகின்ற சிறப்புமிக்க வெண்சாமரைகள் தாழ்ந்து எழுந்து விளங்க. 11

உரைத்திடும் அண்டந்தொறுந் தொறுஉள்ள உம்பரில்இயக்கர்கோன்உலகில்
தரைப்பெரு வரைப்பில் பிறவிலுள் ளதனில் தவறிலா அற்புதத் தனவாத்
தெரித்தனர்எடுத்துப்பொதிந்தென நறியதிரையன்மெல்லிலைதுவர் பழுக்காய்
விரைத்திடு சுண்ணங் கொள்கலம் பரியா வினைமுறை யோர்பலர் விரவ.

சிறப்புடன் சொல்லப்பெறும் அண்டங்கள் தோறும் உள்ள குபேர பட்டினங் களில்; பூமியின் பெரு எல்லையில்; இன்னும் ஏனைய பிறவற்றில் உள்ள இடங்களில், தவறுதல் ஏதும் இல்லாத அற்புதமுடையவையாய் விளங்கும் பொருளினைத் தெரிந்து எடுத்து பொதிந்துள்ளனர் என்னும் படியாக. நன்மை பொருந்திய கீறுகளை உடை வெற்றிலை, பழுத்த பாக்கு, வாசனையுடைய சுண்ணும்பு ஆகிய இவற்றைக் கொண்ட தட்டுகளைத் தாங்கிக்கொண்டு அந்த அந்தச் செயலினைச் செய்வோர் பலர் நிற்பவும், 12

நின்றதோ ரேனை அருக்கருட் சிலரை நீரமுய்த் துள்ளகோ டிகமேற்
பொன்றரை யுழியின் மணிசொரிந் தென்னப் புகட்டுறு தம்பலக் களாசி
மன்றதொல் லறிவர் திருத்தினர் பொருவ மற்றவை அவுணர்க ளேந்தித்
துன்றிருந் துவர்க்காயடைபிறபரிக்குந் தொழுவர் தங்குழுவொடு துவன்ற.

வானத்தில் நிற்கின்ற ஏனைய சூரியரில் சிலரை இரசத்தில் தோய்த்ததுபோன்ற தட்டுக்கள்மேல்; பொன் பூமியின் உச்சியில் முத்துக்களைச் சொரிந்தாற் போன்று விளங்குகின்ற எச்சில் தம்பலங்களை மிக நுண்ணிய சிற்ப நூல் அறிவுடையார் பொருத்தினர்கள்; எனும்படி விளங்கும் அந்தத் தம்பங்களையெல்லாம் தாங்கியவாறு வெற்றிலை பாக்கு வைத்திருக்கும் ஏவலாளர் கூட்டத்துடன் சிலர் நிற்பவும், 13

ஆழியங் கிரியிற் கதிர்மணி வெயிலும் அன்னது சூழ்ந்தபேர் இருளும்
வாழிய அமுதும் உவரியும் அல்லா வாரிதி யும்பல மணியும்
ஊழியி னிறுதி அமையமே லெல்லாம் ஒன்றிய தென்னமுன் னிருபால்
கேழுறு பின்னர் அவுணர்மாத் தலைவர் கிளையொடு துவன்றினர் கெழும.

சக்கரவாள மலையிலுள்ள பிரகாசமுடைய மணி ஒளியும் அதனைச் சூழ்ந்த பெரிய இருளும், வாழ்வு தரும் அமுதும், இதுவல்லாது விளங்கும் பல சமுத்திரமும், பல மணிகளும், ஊழிக்காலத்தின் முடிவின் எல்லாம் ஒன்றுய்ச் சுருங்கியது என்னும்படியாக; சூரபன்மன் முன்னும் பின்னும் பக்கரும் அசுரர்களின் பெருந் தலைவர்கள் தங்கள் பரிவாரங்களுடன் பொருந்தி நிற்பவும், 14

மின்னவிர் விசும்பின்அகட்டினைஅளவி வெண்மதிக் கடவுண் மெய் யணுகிப்
பின்னுறும் அமுத நீர்க்கடல் திளைத்துப் பெரும்புறப் புணரியிற் படியா
இந்நில மருங்கில் வானகத் துள்ள எழின்மலர்க் காவுதோ றுலாவித்
தன்னெலி யின்றி மென்மெல அசைந்து தண் ணென வசந்தன்முற் சார.

மின்னல் ஒளி தோன்றும் வானத்தின் நடுவான இடத்தை அளாவி உலாவி, வெண்மையான சந்திரக் கடவுளின் மேனியைத் தீண்டிப் பின்னராக அமுதம் இருக்கும் பாற்கடலுள் திளைத்து உலாவி, பெரிய புறவாழிச் சமுத்திரத்து படிந்து எழுந்து, பின்னர் இப்பூமியிலுள்ள எழில் நிறைந்த பூஞ்சோலைகளிலும் வான உலகில் உள்ள அழகிய பூஞ்சோலைகளிலும் உலாவி, தனது இரைச்சலான ஓசையில்லாமல் மெல்ல மெல்ல அசைந்து கொண்டு குளிர் நிறையும்படி தென்றல் காற்று சூரபன்மன் முன்னுகச் சேரவும். 15

விண்படு நிறைநீர்ப் புதுமதிக் கடவுள் வியன்பனித் துவலையைத் துற்றுக்
கண்படு துறக்கத் தண்டலைப் பொதும்பிற் காமரம் போதிடைக் கவிழ்த்தி
எண்படு பன்னுள் கழித்தபின் கவர்ந்தே எழிலிகள் கரந்துநின் றீண்டைத்
தண்பனி உறைப்பிற் கண்ணுறுத் துவலை தணப்பறச் சிதறிடத் தம்மில்.

மேகங்கள்; வானத்தில் பொருந்திய நீர் நிறைந்த பூரண சந்திரபகவானிடத்து உண்டாகிய அருமையான பனித் துளிகளைப் பருகி, அந்தத் துளிகளைப் பின்னர்

இடமகன்ற சொர்க்கலோகத்துப் பூஞ்சோலையிலுள்ள அழகிய பூக்கள் மேல் மேகங்கள் சிந்தி; எண்ணப்பட்ட பல நாள் கழிந்த பிற்பாடு அவைகளை மீண்டும் முகில்கள் பருகி, பின்னர் அம்மேகங்கள் வடிவு காட்டாது மறைந்து நின்று அவ் விடத்தே தாம் உறிஞ்சி எடுத்துக்கொண்ட பூவாசனையுடன் குளிர்ந்து காணுதை பன்னீர்த் திவலைகளை ஓயாது சிதறித் தெளித்து நிற்பவும்; 16

தேனமர் ஐம்பால் உருப்பசி அரம்பை திலோத்தமை மேனகை முதலாம்
வானவர் மகளிர் இயக்கர்தம் மகளிர் வலிகெழும் அரக்கர் தம் மகளிர்
தானவர் மகளிர் விஞ்சையர் மகளிர் சாரணர் சித்தர்தம் மகளிர்
ஏனையர் மகளி ரியாவரும் வெவ்வே றியற்படு களிநடம் இயற்ற.

வண்டுகள் மொய்க்கின்ற ஐந்து வகையான கூந்தல் முடிப்பினையுடைய உருப் பசி அரம்பை, திலோத்தமை, மேனகை முதலான தேவப் பெண்களும், இயக்க ருடைய பெண்களும், வலிகொண்ட இராட்சதருடைய பெண்களும், அசுரருடைய பெண்களும், விஞ்சையருடைய பெண்களும், சாரணருடைய பெண்களும் சித்த ருடைய பெண்களும், இன்னும் ஏனையோருடைய பெண்களும் ஆகிய யாவரும் வெவ் வேறான இயல்புடனமைந்த இன்பம் நிறையும் நடனத்தைப் புரியவும். 17

ஐந்திறத் துருவங் காலையில் உரைப்பான் அமையமின் ருகியேவேதா,
வந்தொரு புடையில் ஒதுங்கினன் இருப்ப மற்றவன் உதவுறுங் குமரர்
நந்துறு பெருநீர்க் குடங்கரிற் கன்னல் நாடினர் நாழிகைப் பறையை
முந்துற விரட்டிப் பதந்தொறுஞ் சென்று முறைமுறை உரைத்தனர் திரிய.

சூரபன்மன் கட்டளைப்படி பஞ்சாங்கத்தை நாள், திதி, நட்சத்திரம், யோகம், கரணம் என்னும் ஐந்தின் கிரமத்தை சொல்லும்படியாக அதிகாலையில் வந்த பிரமதேவர், அங்குள்ள சுறுசுறுப்பான நிலையில் உட்செல்ல முடியாதவராய் என் செய்வேன்; இதை இன்று சொல்லிவிட்டு என்பாட்டில்போக சமயமில்லாதிருக்கின் றதே என வந்து ஒரு புடையாக ஒதுங்கி உட்செல்லும் காலம் பார்த்து இருப்பவும் பிரமதேவர் பெற்ற புத்திரர்கள், மிகுகின்ற நீரையுடைய நாழிகைக் குடங்களில் நீர் வடிந்து போகும் அளவையால் நாழிகையினைக் கணித்து அதன்படி முறையே நாழிகைப் பறையை அடித்து இரவு பகலாக நேரத்தின் கால விபரங்களை முறை முறையாக வந்து சொல்லித் திரியவும். 18

தேர்த்திடும் உழுவைச் சூழலிற் சிலமான் சென்றென அவுணர்தஞ் செறிவில்
வேர்த்துடல் பதைப்ப வரும்பல முனிவர் வேறுவேருசிகள் இசையா
ஆர்த்திடும் ஒலியாற் கேட்டில வாமென் றஞ்சினர் அவருறு புலத்தைப்
பார்த்திடுந் தோறும் வாழ்கெனப் பரவிப் பாணியை விரித்தனர் நிற்ப.

கொலையுடைய பயிற்சிமிக்க புலிகள் நிரம்பிய கூட்டத்திடையே சில மான்கள் சென்றதை ஒப்ப, அந்த அசுரக் கூட்டத்தினுள் சரீரம் பயத்தால் வேர்த்து நடுங்க வரு கின்ற பல முனிவர்கள் வேறு வேருன ஆசிமொழிகளை சொல்லி நிற்கவும், அங்கு உள்ள மற்றை ஆரவாரிப்புகளின் ஓசையால் ஒருகால் எமது ஆசீர்வாத மொழி கேட்கப்படவில்லையோ என்ற பயத்தால், அந்த முனிவர் நிற்கும் திசையை சூரன் பார்த்திடுந்தோறும் சூரபன்மனே வாழ்வாயாக என்றுகூறித் துதித்துக் கைகளை விரித்துக்கொண்டு நிற்பவும். 19

திருக்கிளர் பொன்னுட் டிந்திரன் அல்லாத் தேவர்கள் யாவரும் அவுணர்
நெருக்கினர் உந்த ஏகிநேர் புகுவோர் நெடுங்கடை காறுமுன் தள்ள
வெருக்கொடு சென்று மீண்டுமற் ருகி வியன்கடை காவலர் புடைப்பத்
தருக்குறும் அவையங் காணிய பெருது தம்முளங் குலைந்தனர் திரிய.

திருவோங்கிய தேவ உலகத்து உள்ள இந்திரன் நீங்கிய மற்றைய தேவர்கள் எல்லாரும் சூரபன்மன் சபையில் ஏவல் பணிபுரியுமாறு வருபவரை அசுரர் நெருங்கிப் பின்னுல் தள்ளலால் முன்செல்லும் தேவரை திரும்பி நெடிய வாயிலின் கடை தோறும் காவல் கொள்ளும் அசுரரும் முன்னுக்குத் தள்ள பெரும் அச்சத்துடன் சென்று திரும்பி வருவாரை பின்வாயிலில் நின்ற காவலர் ஏன் இங்கே வந்தீர் என்று அடிப்ப, அதனல் தருக்கு மிகுந்த சபையைக் காண முடியாமல் தேவர் உள்ளம் குலைந்து என் செய்வோம் என்று திரியவும் 20

வெற்றவெங் கதத்தர் அவுணர்கஞ் சுகிசேர் மெய்யினர் வெறுக்கையஞ் சூரல்
பற்றிடு கரத்தர் செல்லெனுந் தெழிப்பர் பனிப்பிறை எயிற்றர் பல்லிமையோர்
பொற்றட மகுடஞ் சிதறிடப் புடைப்போர் புயலுறு சூறையிற் துரந்துஞ்
சுற்றுற நிறுத்தும் இருத்தியும் புகுந்தோர் தொல்பெயர் செப்பிமுன் துதிப்ப.

சிறிதும் பயனில்லாத கொடிய கோபத்தை உடைய அசுரர்கள் சட்டையை அணிந்த மேனி உடையுவர்களாய், பொற் பூணணிந்த மூங்கிற் தண்டைக் கையில் பிடித்தோராய்; மேகத்தைப்போன்று கர்ச்சிப்பவர்களாய், குளிர்ந்த இளம் சந்திரனைப் போன்று கடையில் நீண்டு வளைந்த பற்களை உடையவராய், பல தேவர்களுடைய பொன் முடிகள் சிதறும்படி அடிப்போர்களாய் விளங்கிய அவர்கள், மேகத்தை அலைக்கின்ற காற்றினைபபோல் ஆங்காங்கு நிற்பார்களைக் கலைத்துத் தூரப் போகச் செய்தும், வளைந்து நிற்கும்படி நிற்பாற்டியும், இருத்தியும் ஒழுங்காக அங்கு உட்பிர வேசித்தாருடைய இயல்பான பெயர்களைச் சொல்லிச் சொல்லி சூரனை வணங்கவும், 21

பொன்றிகழ் கமலத் திதழெலாம் விரிந்த போதினிற் பொகுட்டிடை தோறும்
மின்றிகழ் நுசுப்பில் திருமகள் பலராய் வீற்றுவீற்றிருத்தலே போலக்
குன்றுறழ் கொங்கை மங்கையர் பல்லோர் கொண்டுதன் உறையுளிற் சென்று
துன்றிய பலவாம் தீபிகைத் தட்டஞ் சொன்முறை யாசியிற் சுற்ற.

பொன் திகழும் தன்மைபோன்ற தாமரைக் பூவின் இதழ் எல்லாம் விரிந்த போதினில், அதன் உள்ளே உள்ள காயின் மொட்டுகள் தோறும், மின்னலை ஒத்து விளங்கும் சிறிய இடையுடைய இலக்குமிகள் பலராய் வீற்று வீற்று இருத்தலே போல, மலையை ஒத்து விளங்கும் பருத்த முலைகளை உடைய பெண்கள் பலர் சூர பன்மன் சபாமண்டபத்திற்கு நன்றுடைய தீபச்சுடர் கொண்ட பல தட்டங்களை ஆசி மொழிகளைச் சொல்லிய வண்ணம் வலமுறையாகச் சுற்றிக் காண்பிக்கவும். தாமரைப் பூ இதழ் விரிந்தமை தட்டத்திற்கும் அதனுள்ள காய்மேல் இலக்குமிகள் இருப்பது தீபச் சுடருக்கும் உவமை. 22

தென்னுறு பாலை குறிஞ்சியே மருதஞ் செவ்வழி யென்னு நானிலத்திற்
பின்னகம் புறம்மே அருகியல் மற்றைப் பெருகியல் உறழவெண் ணிரண்டாய்
மன்னிய நாதத் திசைகளிற் பிறவில் வரம்பில வாயபாட் டதனுட்
கின்னரர் சித்தர் இயக்கர்கந் தருவர் கிளத்துமங் கலத்தன இசைப்ப.

திடம் உற்ற பாலை, குறிஞ்சி, மருதம் செவ்வழி என்று சொல்லப்படுகின்ற நான்கு நிலத்திற் குரிய பண்களில்; பின்பு அகமும் புறமும் அருகியலும் மற்ற பெருகியலு மெனச் சொல்லப்பட்ட பதினறு வகையான நாத இசைகளிலும்; பிற வற்றாலும் அளவுகடந்த திறமையுடைய வாய்ப்பட்டாலும்; கின்னரர், சித்தர், இயக்கர், கந்தருவர் ஆகியோர் மேற்சொல்லப்பெற்ற மங்கல இசைகளை பெருக்கி நிற்பவும். 23

மாகநல் வேள்வி ஆற்றிய திறனும் மதிமுடிப் பரனருள் அடைந்தே
ஏகிய திறனுந் தனதனை முதலா யாரையும் நிலையழித் தனவுஞ்
சேகுறும் அண்டம் யாவையுங் கண்டு திருவுடன் அரசியற்றியதும்
பூகத நிலையத் தவுணர்கள் பல்லோர் புடைதனில் முறைமுறை புகழ.

மேலோங்கிய நல்ல யாகத்தைச் செய்துள்ள திறமையும், அதனுல் இளம்பிறை யணிந்த சடைமுடியுடைய சிவபிரான் அருளினை அடைந்து மேம்பாட்டுடன் திரும்பிய தன்மையும், குபேரன் முதலாக உள்ள திக்குப் பாலகரையும் வேறு எல்லாத் தேவரையும் வெற்றிகொண்டு அவர்களது மேம்பாட்டை நீக்கிய திறமையும், சென்று அடைய முடியாத தூரத்திலுள்ள அண்டங்கள் யாவற்றையும் சென்று கண்டு சிறப்புடன் அரசாளுகின்றதுமாகிய சூரபன்மனது பெருஞ் சீர்திகளையெல் லாம், பூகதர் என்னும் நின்றேத்துகின்ற அசுரர்கள் சூரபன்மனைப் புடைசூழ்ந்து நின்று துதிப்பவும், 34

கார்த்திடும் அவுணர் திசையுளா ரேனோர் கைதொழூஉத் தனது நோன் கழற்கால்
தூர்த்திடு மலருந் தொல்பெருங் கவியுந் தூநெறி முனிவரர் தொகையுஞ்
சார்த்தினர் வரையா மந்திர நெறியால் தலைத்தலை யாசிகள் சாற்றிச்
சேர்த்தனர் சிந்துந் துணருமக் கதமுஞ் சீர்த்தகால் வீசினன் திரிய.

கறுத்த மேனியுடைய அசுரர்கள், திக்கிலுள்ளார்கள். ஏனையோக்கள் கை தொழுது சூரனது வலிமையான வீரகெண்டை அணிந்த பாதத்தில் சொரிந்து வணங் கிய பூக்களையும், முந்திய பெரும் புகழுடைய சுக்கிராச்சாரியும், தூய நெறிநின்ற முனிவர் கூட்டமும் பக்கராக நின்று ஓயாத தேவ மந்திர செபத்துடன் முறை முறை ஆசி மொழிகளைச் சொல்லி சூரன்பால் சேரும்படி சொரிகின்ற மலர்களையும் அட்சதைகளையும் சிறந்த வாயு பகவான் ஒருபுறமாகக் கூட்டி ஒதுக்கிக் கொண்டு திரியவும், 25

ஆடியல் முறையை இயற்றினர் தமக்கும் அடைந்துதற் புகழுநர் தமக்கும்
பாடியன் முறையில் வல்லுநர் தமக்கும் பரிவுசெய் தலைவர்கள் தமக்கும்
பீடுறு மகுடங் கடகநூல் முதலாம் பேரணி மணித்துகில் பிறவும்
மாடுறு நிதியும் ஏனவும் நின்று மலர்க்கைநீட் டினதொறும் வழங்க.

தனது திருமுன்பு நடனத்தை முறையாகச் செய்தவர்கட்கும், தன்னை அடைந்து புகழ்ந்துள்ளார் தமக்கும், வாய்ப்பாட்டில் வல்லமை உடையார்க்கும் தனக்குப் பரி வாக நடந்துகொள்கின்ற தலைவர்கள் தமக்கும் பெருமைகொண்ட பொன்முடிகளை யும், காப்புக்களையும் பொன்னுலான பூ நூலையும், முதலாகச் சிறந்த பெருமை கொண்ட ஆபரணங்கள் இரத்தின வகைகள் பட்டாடைகள் இன்னும் பிற பொருளை யும், பக்கராக இருந்த சங்கநிதி, பதுமநிதியையும், கற்பக விருட்சம் முதலிய ஏனைய நீட்டப்பட்ட மலர்போன்ற கைகள்தோறும் கொடுப்ப. 26

தேவரும் ஏனை முனிவரும் பிறருஞ் செய்துறுத் தங்கள்பா லன்றி
ஏவர்பா லானும் இறைவனும் ஒருதான் ஏதம்நோக் குற்றனன் வெகுளின்
ஆவிய திழப்பார் போல்வெரீஇப் புகழ்ந்தும் அவனுவப் புற்றிடின் உய்ந்தும்
ஓவற நிற்பர் அசனிவீழ் தோறும் உரைக்குமந் திரத்தினோர் என்ன.

தேவர்களும் ஏனைய முனிவர்களும் பிறருமென்றாலும் தாங்கள் ஒரு குற்றமும் செய்யாதிருந்தாலும் தங்கள் பாலாக இல்லாமல் வேறு எவரிடத்தாதல் அரசனை சூரன் ஒரு குறையைக் காணப்பெற்றுக் கோபம் கொண்டால், உயிரை இழப்பார் போன்று அச்சம்கொண்டு சூரபன்மனைப் பலவாறு புகழ்ந்தும் அவன் மகிழ் கின்ற நேரங்கண்டு தாங்கள் உய்வு பெற்றாராகி மகிழ்ந்தும் அமைதியாய் நிற்பார் கள்; இது எப்படி எனில் இடி விழுகின்ற நேரந்தோறும் பயத்தால் மந்திரம் சொல்வார்போன்று,

இவ்வாறான பெரும் சிறப்புக்கள் தோன்ற சூரபன்மன் அங்கு சபையில் அர சிருக்கின்றான்; இது வேளைதான் இச்சபைக்கு கைவெட்டப்பட்டு அசமுகி புலம்பிய படி துன்முகியுடன் வருகின்றாள். 27

சூரன் அரசிருக்கைப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 1,669

874

# அசமுகி நகர்காண் படலம்

**இன்னன பலபல எய்தச் சூரனும், மன்னவன் இருத்தலும் மற்றவ் வெல்லையில்**
**தொன்னகர் அணித்துறத் துன்முகத்தினுள், தன்னெடும் அசமுகி தான்வந் தெய்தினுள்.**

இவ்வாறான பல பல சிறப்புக்கள் பொருந்த; சூரனை அரசன் சபையில் சிறப்புடன் இருக்கும் அந்த நேரத்து; மிகப் பழமையான அந்த நகரத்தினை கிட்டவாக துன்முகி என்பாளுடன்; அசமுகி வந்து சேர்ந்துகொண்டாள். 1

**மோட்டுறு மகேந்திர முதிய மாநகர், கூட்டுறு திருவெலாங் குலைய முன்னவள்**
**மாட்டுறு துணையொடு வந்துற் றுலெனக், கீட்டிசை வாய்தலைக் கிட்டி னளரோ.**

வலியுடன் உற்ற மரமகேந்திரபுரம் என்னும் முதிய பெரிய நகரத்தில் கூடியிருக்கின்ற செல்வ வளமுடைய இலட்சுமீகரம் எல்லாம் நீங்கிட இலக்குமிக்கு மூத்தவளான மூதேவி துணையுடன் அவ்விடம் வந்தால் ஒப்பு; அசமுகி துன்முகியுடன் கிழக்குக் கோபுர வாயிலை வந்து அடைந்துகொண்டாள். 2

**மானமில் அசமுகி மகேந்தி ரப்புரந், தானுறு துயர்க்கொரு தாரி காட்டல்போல்**
**ஊனுறு குருதிகை யுகுப்பச் சென்றுழி, ஆனது கண்டனர் அவுணர் யாவரும்.**

மானமில்லாத அசமுகி என்பாள் வீரமகேந்திரபுரத்திற்கு வரப்போகின்ற அழிவான துயரிற்கு ஒரு குறியினைக் காண்பிப்பது போன்று; வெட்டுண்ணப்பட்ட கையிலிருந்து ஊனுடன் இரத்தம் பாயும்படி சென்றபோது: அதனை எல்லா அசுரர்கள் கண்டார்கள். 3

**கெழுதரும் அசமுகக் கெடல ணங்குதன், பழிதரு கையினைப் பார்த்து நேர்ந்துளார்**
**அழிதரு துன்புகொண் டழலில் சீறினுர், இழிதரும் இச்செயல் யார்செய் தாரெனு.**

ஆட்டுமுகம் பொருத்திய கெடுதி விளைக்கின்ற அந்த அசமுகியின் வெட்டுண்ட கையின் பரிதாபத்தைப் பார்த்துக் கொண்ட அசுரர் யாரும்; மனமழிகின்ற துயரம் கொண்டு நெருப்பைப் போலச் சீறினுர்கள்; இதோ இழிவான இந்தச் செயலை யார் செய்தார்கள் என உரக்கச் சொல்லிக்கொண்டே. 4

**வட்டுறு பலகையின் வல்ல நாய்நிரைத், திட்டனர் கவற்றினை இசைத்த சூளொடுங்**
**கிட்டினர் இடந்தொறுங் கெழுமியாடினர், விட்டனர் அத்தொழில் விரைந்துற் றுசிலர்.**

அசமுகி வந்துகொண்டிருக்கும்வேளையில் இங்குள்ள அசுரரில் சிலர், வட்டமாகி உள்ள பலகையிலே சூதாடு கருவிகளாயுள்ள நாய்களை நிரையாக வைத்து எண்கள் பொறித்த கட்டைகளை உருட்டி; வெற்றிக்கேற்ற சபதமான வார்த்தைகளைப் பேசி; நெருங்கி இருந்து பல இடங்களிலும் கூடிச் சூதாடிய அசுரர்; ஆவலுடன் சூதாடுவதை விடுத்து விரைந்து அசமுகிபால் ஓடி வருகின்றனர். 5

**தெருதரு கரியபொன் திரித்திட் டாலெனப், புரிதரு மருப்புடைப் புயலின் செச்சையை**
**முரிவரு பேரமர் மூட்டிக் கண்டுளார், பரிவொடு பிரிந்தயல் படர்கின் றுசிலர்.**

தெரிந்தெடுக்கப்பட்ட இரும்பை முறுக்கி வைத்தாற் போல விளங்குகின்ற கொம்பினையுடைய மேகத்தைப்போன்ற கருநிறமுடைய பெரிய ஆட்டுக்கடாக்களை; ஒன்றையொன்றி மூட்டிப் போர்யுரிய வைத்து, அதைப் பார்த்து நின்ற சில அசுரர் அதை விடுத்துப்போக மனமிலாது துயருடன் அசமுகியால் வந்துகொண்டிருக்கிறார்கள்.

96

கார்ப்பெயல் அன்னதோர் கடாங்கொள் மால்கரீ, கூர்ப்புறு மருப்புமெய் குளிப்பச் சோரிநீர்
ஆர்ப்பொடு தத்தமில் ஆடல் செய்வது, பார்ப்பது விட்டனர் படர்கின் றார்சிலர்.

மேகம் மழை பொழிவது போல மதநீர் பாய்கின்ற பெரிய யானைகள் கூரிய தமது கொம்புகள் குற்றி இரத்தம் தோயும்படி இரைச்சலுடன் தம்மில் போர் செய்வதை பார்ப்பதை விடுத்துவிட்டு சிலஅசுரர் அசமுகிபால் வந்துகொண்டிருக்கிறார்கள். 7

துய்யதோர் கிஞ்சுகச் சூட்டு வாரணம், மொய்யொடு தன்னுயிர் முடியும் எல்லையுஞ்
செய்யுறு வெஞ்சினச் செருவை நோக்கினர், ஒய்யென நீங்கியே யுறுகின் றார்சிலர்.

தூயதான பூவுடன் கூடிய சிவந்த கொண்டையுடைய கோழிச் சேவல்கள் ஒன்றுடன் ஒன்று; மிக்க வலிமையுடன் தங்கள் உயிர் போகும் வரையும விடாது செய்கின்ற கொடிய கோபமுடைய போரைப் மார்த்து நின்ற சில அசுரர்கள்; திடீரென அதைப் பார்ப்பதையும் விடுத்துவிட்டு ஓடிவருகின்றார்கள். 8

ஊனமில் பலபணி யுடன்று சீறியே, பானுவை நுகரவிண் படரு மாறென
வானிகள் ஓச்சினர் வானிற் கைவிடா, மேனிகள் வியர்ப்புற வெகுண்டுற் றார்சிலர்.

குறைவுகள் இலாத பல பாம்புகள் ஒருங்குசேர்ந்து சீறிக்கொண்டு சூரியபகவானைப் பிடித்து விழுங்கும்படி மேலெழுந்து செல்வதுபோல் பல காற்றாடிகளை எல்லாம் வானத்தில் செலுத்தி மகிழ்ந்திருந்த பல அசுரர்கள்; அதனையும் கைவிடுத்து மேனிகள் வேர்வை கொள்ள கோபத்துடன் ஓடிவருகின்றனர்; 9

வாம்பரி தேர்கரி மானம் பாண்டில்கள், ஏம்பலோ டூர்ந்திட இயற்றுங் கற்பொரீஇ
யாம்பொருள் அல்லதொன் றடைவதென்னெனச், சோம்புதல்இன்றியேதொடர்கின் றார்சிலர்.

தாவிப் பாயும் குதிரை, தேர், யானை, விமானம், வண்டில்கள் ஆகிய இவற்றினை மிகு விருப்பத்துடன் வேகமாகச் செலுத்திச் செல்கின்ற அந்தப் பயிற்சிகளையும் கைவிடுத்து; இதேது நிகழத்தகாத கருமம் ஒன்று நடந்துள்ளதே; ஏன் இப்படியாயிற்றென்று ஏம்பலிப்புடன்; சோர்விலாது ஓடிவந்துகொண்டிருக்கின்றார்கள் சில அசுரர். 10

குறிகெழு வெளிலொடு குற்றி நாட்டியும், அறிகுறி தீட்டியும் அவையி லக்கமா
எறிகுறு படையினை எய்யுங் கோலினை, நெறிதொறும் விட்டவண் நேர்கின் றார்சிலர்.

அம்பு எய்தற்குரிய குறிகளை அழகுடன் விளங்கும்படியாக உள்ள தூண்களை நாட்டியும்; அதிலே தெரியத்தக்க குறிகளை எழுதியும்; அந்த இலக்கின்மீதாகவே எறிகின்ற படைக்கலங்களையும், எய்கின்ற அம்புகளையும் முறைப்படி நேராக எய்து பயின்றுகொண்டு நின்ற வீரர்கள் அதனை எல்லாம் விடுத்து விரைவாக வந்துகொண்டிருக்கின்றனர். 11

நாந்தகம் ஆதியா நவிலுந் தொல்படை, ஆய்ந்திடும் விஞ்சைகள் அடிகள் முன்னமாய்
ஆய்ந்திடுங் கழகமுற் றீயற்று மாறொரீஇப் போந்தனர் ஒருசிலர் பொருமல்மிக்குளார்.

வாள், ஈட்டி, குந்தம், வேல் ஆதியாகச் சொல்லப்பெறும் பலதிறப்பட்ட பழமையான படைக்கலங்களைச் செலுத்துதற்கேற்ற பயிற்சி முறைகளையும், நுட்ப வித்தைகளையும், தமது ஆசிரியர் முன்பாகப் பயிற்றுநிற்கும் கல்விச்சாலையில் சென்று பயிலவேண்டும் என்கின்ற கட்டுப்பாடான தங்களது செயலையும் நீக்கி விடுத்து சில அசுரர்கள் வருத்தம் மிகுந்தவராய் அசமுகிபால் வந்தனர். 12

வாட்படு கனலிகால்வானின் கண்ணவாங், காட்புறு நரம்பியாழ்காமர் வீணைகள்
வேட்புறும் ஈர்ங்குழல் மிடறுகாலிகை, கேட்பது விட்டிவண் கிட்டினார்சிலர்.

ஒளி உடைய சூரியபகவானின் வெயில் விளங்கும் வானின் மூலமாகப் பெறப்படுகின்ற, தூரத்தே நிகழ்கின்ற இறுகிய நரம்புடைய யாழின் ஓசையையும், அழ

கிய வீணைகளின் ஓசையையும், விருப்பப்படுகின்ற சக்தி மிகுந்த குழல் ஓசையையும், வாய்ப்பாட்டோசையையும் தாங்கள் இருந்த இடத்துக் கேட்கின்ற இன்பநிலையைக் கைவிடுத்து அவ்விடத்து அணுகுகிறார்கள் சில அசுரர்கள். 13

வாட்படுகனிலி கால் வானின்கண். என்பதால், இந்த ஓசைகளெல்லாம் வானம் காற்று, நெருப்பு என்னும் பூதத்தின் திறமாக அதற்குரிய இயந்திரங்கள் மூலமாகப் பெறப்படுவது. இதை இப்போது நாம் வானொலி என்போம்.

நாடக நூல்முறை நுனித்துநன்றுணர், கோடியர் கழாயினர்கூத்தர் ஏனையோர்
ஆடுறு கோட்டிகள் அகலுற் றங்ஙனங், கூடினர் ஒருசிலர் குலையும் மெய்யினர்.

நாடகங்களை நூன்முறை படி ஆராய்ந்து கற்று நன்றாக உணர்ந்துகொண்டு நாடகம் நடிப்போரும், கழைக்கூத்தாடிகளும், மற்றைய ஏனை நடனம் செய்வார்களும் நடிக்கின்ற கூட்டங்கள், சபைகளை விடுத்து அகன்று அங்கு வந்து; என்னது, என்னது என அந்தரத்துடன் பதட்டலுடைய மேனியை உடையவர்களாய் சேர்கின்றார் சில அசுரர். 14

புலப்படு மங்கலப் பொருள்முற் றுங்கொடு,
நலப்படு வேள்விகள் நடத்திக் கேளொடு
பலப்பல வதுவைசெய் பான்மை நீத்தொராய்க்
குலைப்புறு கையொடுங் குறுகுற் றார்சிலர்.

தெரிந்துகொள்ளப்பெற்ற மங்கலகரமான திரவியங்கள் முழுவதையும் தேடிக் கொண்டு நன்மை தருகின்ற யாகங்கள் பலவற்றையும் நடத்தி தமது சுற்றத்தாருடன் பல பல கலியாணங் களைச் செய்திருக்கும் தன்மையை விடுத்து நீங்கி; குலைகுலைந்து உதறுகின்ற கைகளுடன் வந்தார் சில அசுரர்கள். 15

மாலொரு மடந்தைபால் வைத்து முன்னுறு
சேல்விழி யொருந்திபாற் செல்ல வூடியே
மேலுறு சினத்திகல் விளைக்க நன்றிது
காலமென் றுன்னியே கழன்றுற் றார்சிலர்.

ஒரு பெண் இடத்து மனம் கொண்டு அவளுடன் கூடி, பின்னர் முன்னாக தம்முடன் கூடியிருந்த இன்னொரு அழகிய கண்ணினையுடைய பெண்பால் விருப்பத்துடன் செல்ல, அவள் வேறொருத்திபால் சென்றமைக்காக வந்த அவருடன் ஊடி, மேன் மேலும் தோன்றுகின்ற கோபத்துடன் சண்டையிட வழியறியாது திகைத்து நின்றவர்; அசமுகியின் ஆரவார நிலைமையால் இதுதான் விலகிப்போக நல்ல தருணம் என்று நழுவிச் சென்றார் சில அசுரர். 16

தோடுறு வரிவிழித் தோகை மாருடன்
மாடம திடைதொறும் வதிந்த பங்கயக்
காடுறு பூந்தடங் காமர் தண்டலை
ஆடலை வெறுத்தெழீஇ யடைகின் றார்சிலர்.

காதளவும் நீண்ட அழகிய வரிவிழிகளை உடைய பெண்களுடன் மாடங்களின் இடையிலே பொருந்தியிருக்கின்ற தாமரை மலர் நிரப்பிய பூந்தடாகக் கரையிலும் அழகிய சோலைகளிலும் விளையாடுதலை வெறுத்து விடுத்து எழுந்து வருகின்றார் சில அசுரர்கள். 17

சுள்ளினைக் கறித்தனர் துற்று வாகையங்,
கள்ளினைக் கொட்பொடு களிக்கும் நெஞ்சினர்
உள்ளுறுத் தியபுலன் ஊசல் போன்றுளார்
தள்ளுறத் தள்ளுறத் தளர்ந்துற் றார்சிலர்.

சுட்டுக் காய்ந்த மீனை, நண்டினைக் கடித்து சுவை மிக்கதும் ஊறு தருவதுமான கள்ளைப் பருகி, அதனாலே கமபீரத்துடன் களிப்படைகின்றி நெஞ்சை உடையார்களாய், அவர்களது உள்மனமானது நிலைபெறாது தடுமாறி ஊஞ்சல்போல் அசையும் படியாயவர்களாய், வெறி மிகுதியாலே கால்கள் தள்ளாடத் தள்ளாட தளர்ந்து வருகின்றனர் சிலர். 18

அனையபல் வகையினர் அவளைக் கண்டுளார்
பனிவரு கண்ணினர் பதைக்கும் நெஞ்சினர்
கனலொடு தீப்புகை காலு யிர்ப்பினர்
முனிவுறு கின்றனர் மொழிகின் றார்இவை.

அவ்வாறு பலதிறப்பட்டவர்கள் அசமுகியின் நிலையைக் கண்டுகொண்டு கண்ணீர் துளும்புகின்ற கண்களை உடையராய், பதைக்கின்ற நெஞ்சினை உடையராய் கோபம் கொள்கின்றனர்; இதனைச் சொல்கின்றனர். 19

வேறு

அந்தகன் ஒருத்தற் பேரோன் ஆடல்வல் லியத்தோ ளாதி
வந்திடும் அவுணர் தம்மை மதிக்கிலா வலியோர் தம்மை
முந்துறு புரத்தை அட்டு முழுவதும் முடிப்பான் நின்ற
செந்தழல் உருவத் தண்ணல் செய்கையோ இனைய தென்பார்

அந்தகாசூரன் என்பானும், கயாசூரன் என்பானும் போரில் மிகுந்த புலிமுகாசுரன் என்பானும் முதலாக முன்னர் வந்திட்ட அசுரர்களை, இன்னமும் தம்மை மதியாத வலியுடையார்களான பிறரையும், முற்காலத்தில் தோன்றிய முப்புரங்களையும் அழித்து; இன்னமும் எல்லா உலகங்களையும் முடிவுகாலத்து அழிக்கும்படி நிற்கின்ற; செந்தழல் போலும் உருவுடைய கடவுளான உருத்திரமூர்த்தியின் செய்கையோ இவள் கையை வெட்டினது என்பார் சில அசுரர். 20

மேதியஞ் சென்னி வீரன் வெவ்வலி நிசும்பன் சும்பன்
கோதறு குருதிக் கண்ணன் குருதியங் குரத்தன் முந்தே
பூதலம் புரந்த சீர்த்திப் பொருவில்தா ரகனை பண்டன்
ஆதியர் ஆயுள் கொண் ஐயைதன் செயலோ என்பார்.

எருமைத் தலையுடைய வீரனான மகிடாசுரன், கொடிய வலியுடைய நிசும்பாசுரன், சும்பன் என்னும் அசுரன், குற்றமில்லாத இரத்தக் கண்ணுடைய இரத்தாட்சன் என்னும் அசுரன், இரத்தபீசன் என்னும் அசுரன், முற்காலத்தில் பூமியை அரசாண்ட பெரும்புகழுடன் சிறந்துள்ள தாரகாசுரன் முதலிய அசுரர்களது வாழ்நாளை அழித்து வெற்றிகொண்ட துர்க்காதேவியின் செய்கையோ இது என்பார் சில அசுரர். 21

சிரபத்தி அளவை யில்லாத் திறலரி ஒருநாற் றந்தக்
கரபத்தின் அண்ணல் வானோர் யாரையுங் கலக்கஞ் செய்ய
வரபத்தி புரியா அன்னோர் வணங்கினர் அடைய அந்நாட்
சரபத்தின் வடிவங் கொண்டான் தன்செய லாங்கொல் என்பார்.

அளவு கடந்த வலிகொண்ட பல தலைகளை உடைய நரசிங்கம் முன்னர் நான்கு தந்தங்களை உடைய ஐராவத யானையை வாகனமாகக் கொண்ட இந்திர தேவனையும் தேவர்கள் எல்லாரையும் கலங்கும்படி துயரம் புரிய, அவர்கள் எல்லாரும் சிறந்துள்ள அன்புடன் சென்று வீரபத்திரக கடவுளைத் தஞ்சமாக அடைந்து வணங்கி வேண்ட; அந்நேரம் நரசிங்கத்தை அடக்கவேண்டி அன்று சரபப்பட்சி வடிவங்கொண்ட வீரபத்திரக் கடவுளின் செய்கையோ? இதுவென்பார் சில அசுரர். 22

வண்டுளர் கமலச் செங்கண் மாயனுந் தூய நீலங்
கண்டம தடைத்த தேவுங் கலந்தனர் தழுவிச் சேரப்
பண்டவர் புணர்ப்புத் தன்னில் உருத்திரர் பரிசா லுற்ற
செண்டுறு கரத்து வள்ளல் செய்கையே போலும் என்பர்

வண்டுகள் மொய்க்கின்ற தாமரைப்பூவின் வண்ணம் ஒத்த சிவந்த அழகிய கண்ணுடைய திருமாலும், தூய்மையான நீல கண்டமுடைய மகாதேவனும் கலந்து தழுவிச் சேர, அவர்களுடைய மிக முந்தியபுணர்ச்சியில் உருத்திரகணமாகித் தோன்றிய; செண்டு ஒன்று கையிலே தாங்கிய அருள் வள்ளலான ஐயனாரின் செய்கையோ இது? என்பார்கள். 33

பிளிற்றுறு குரலின் நால்வாய்ப் பெருந்துணை எயிற்றுப் புன்கண்
வெளிற்றுறு தடக்கை கொண்ட வேழமா முகத்தெம் மேலோன்
ஒளிற்றுறு கலன்மார் பெய்தி உயிர்குடித் துமிழ்ந்த தந்தக்
களிற்றுடை முகத்துப் பிள்ளை செய்கையோ காணும் என்பார்.

பிளிறுகின்ற ஓசையினையுடைய அகன்ற வாயும்; பெரிய இரண்டு கொம்புகளையும், சிறிய கண்ணினையும், வெண்ணிறமான நீண்ட துதிக்கையையுமுடைய யானை முகம் கொண்ட கயமுகா சூரன் என்னும் எங்கள் முன்னோனின் பிரகாசமுடைய ஆபரணம் அணிந்த நெஞ்சிற் பட்டு, உயிரைக் குடித்து உமிழ்ந்த கொம்பினை விடுத்த, யானை முகமுடைய மைந்தரான விநாயகக் கடவுளின் செய்கையோ எனச் சிலர் சொல்வார். 24

ஈசனை மதிக்கி லாதே யாமுதற் கடவு ளென்று
பேசிடு தலைவர்க் கேற்ற பெற்றியால் தண்டம் ஆற்றும்
ஆசறு சங்கு கன்னன் அகட்டழற் குண்டம் போல்வான்
தேசுறு பானு கம்பன் முதலினோர் செயலோ என்பார்.

சிவபெருமானை மதிக்காது, யாமே பரம்பொருளான கடவுள் என்று பேசிக் கொள்கின்ற தேவர்களின் தலைவர்க்கு ஏற்ற முறையால் தண்டத்தினைக் கொடுக்கின்ற குற்றம் அற்ற சங்குகன்னன். நெருப்பினைப்போன்று அகன்று பருத்த வயிற்றினை உடைய குண்டோதரன், பிரகாசம் கொண்ட பானுகம்பன் முதலிய பூத கணத் தலைவர்கள் செயலோ என்பார் சில அசுரர். 25

நஞ்சுபில் கெயிற்றுப் புத்தேள் நாகணைப் பள்ளி மீது
தஞ்ச மொடிருந்த அண்ணல் தன்செய லாமோ என்பார்
அஞ்சுவன் இனைய செய்கைக் கனையது நினைவன் றென்பார்
நெஞ்சினும் இதனைச் செய்ய நினைக்குமோ மலரோன் என்பார்.

நஞ்சினைக்கொண்ட பற்களையுடைய கடவுட் தன்மை பொருந்திய அனந்தன் என்னும் நாகத்தின்மீது எந்நாளும் யோக நித்திரையில் அமர்ந்தருளிய அண்ணல் விஷ்ணு மூர்த்தியின் செய்கையோ இது என்பார் சிலர். அப்போது சிலர் அந்த விஷ்ணு இப்படிச் செய்வதற்குப் பயப்படுவார். ஆகவே அப்படி நினைக்க முடியாது என்பர்; சிலர் நெஞ்சிலே இப்படிச் செய்வதற்குப் பிரம தேவரும் நினைப்பாரோ என்பர். 26

புரந்தர னென்னும் விண்ணோன் புணர்த்திடு செயலோ என்பார்
கரந்தனன் திரிவான் செய்ய வல்லனோ கருத்தன் றென்பார்
இருந்திடு கடவு ளோர்கள் இழைத்திடு விதியோ என்பார்
நிரந்துநம் பணியின் நிற்போர் நினைப்பரோ இதனை என்பார்.

இந்திரன் என்னும் வானுலக அரசன் சூழ்ச்சியால் செய்திட்ட செயலோ இது என்பார் சிலர்; அந்த இந்திரன் மறைந்து ஒளித்துத் திரிபவனே. ஆகையின் அவன் செய்தான் எனச் சொல்வது புத்தியல்ல என்பார்; இந்திரனல்லாது வானுலகில் இருக்கின்ற ஏனைய தேவர்கள் செய்துள்ள செயலோ இது என்பார் சிலர்; முடியாது அத்தேவர்கள் யாரும் முறைப்பட எமது ஏவலைச் செய்து நிற்பார்கள் ஆதலின் இதனைச் செய்ய நினைப்பரோ என்பார்கள். 27

கழைத்துணி நறவ மாந்திக் களிப்புறு உணர்ச்சி முற்றும்
பிழைத்தவ ராகும் அன்றேல் பித்தர்செய் தனராம் என்பார்
இழைத்தநா ளெல்லை சென்றோர் இயற்றியார் யாரோ என்பார்
விழுப்பெரு முனிவர் சொல்லால் வீழ்ந்ததோ இவர்கை என்பார்.

நல்ல கரும்புத் துண்டுகளில் இருந்து எடுத்துக்கொண்ட மயக்கம் மிகுந்த கள்ளை உண்டு களித்து; அதனாலே தனது நல்லுணர்ச்சிகள் முழுவதும் அற்றுப்போனவர் தான் இச்செயலைப் புரிந்தாராகவேண்டும்; அல்லாதிருந்தால் யாரோ ஒரு பைத்தியக்காரன் செய்தாகவேண்டும்; ஆரென்றாலும் தனது வாழ்நாளின் எல்லை முடிவாகின்றவர்தான் இதைச் செய்தார்; அவர் யாரோ அறியோம் என்பார் உயர்வான தவம் முடைய பெருமுனிவரின் சாபத்தால் இவள் கைவிழுந்ததோ என்பார். 28

அங்கியின் கிளர்ச்சி யேபோல் அவிர்சுடர்க் கூர்வாள் தன்னைத்
தங்களி லேந்தி இன்னோர் சான்றசூளறவு சாற்றித்
துங்கமொ டமரின் ஏற்று முறைமுறை துணித்தார் கொல்லோ
இங்கிவர் இருவர் கையும் இற்றன காண்மின் என்பார்.

நெருப்பின் சுடர் எழுந்த தன்மைபோன்ற கூரிய வாளை இந்த அசமுகியும் துன்முகியும் தங்கள் கையில் எடுத்து, ஏந்திக்கொண்டு பின்னர் இரண்டுபேரும் பெரும் சபதங்களைப் பேசி மிக்க பெருமிதத்துடன் போரினை ஏற்றுக்கொண்டு, முறைமுறையாகத் தங்கள் கைகளை வெட்டினார்போலும்; இங்கு இருவருடைய கையும் வெட்டுண்டு இருப்பதைப் பாருங்கள் என்பார் சிலர். 29

ஆரிவள் கரத்தி லொன்றை அடவல்லார் எவர்கண் ணேயோ
பேருறு காதல் கொண்டு பெண்மதி மயக்கந் தன்னாற்
சீரிய வுறுப்பி லொன்று சின்னமாத் தருவ னென்று
கூருடை வாளால் ஈர்ந்து கொடுத்தனள் போலும் என்பார்.

இன்னும் சிலர் சொல்வார்; ஆர்தான் இவளின் கையில் ஒன்றை வெட்ட முடியும் எவரிடத்திலோ இவள் நீக்கமுடியாத காதல் கொண்டாள் போலும்; அதனாலே பெண்புத்தி பின்புத்தி எனும்படியான மயக்கத்தினால் சிறப்புடைய தனது உறுப்பிலொன்றை காதல் பரிசாகத் தருவேன் என்று கூறி: கூரிய வாளால் கையை வெட்டிக் கொடுத்துள்ளாள் போலும் என்பார்கள். 30

கேடுறும் இனையள் தன்னைக் கேட்பதென் இனிநாம் என்பார்
நாடிநாம் வினவி னேமேல் நம்மெலாம் முனியும் என்பார்
மாடுறப் போவ தென்னை மாநில வரைப்பின் காறும்
ஓடியே அறிதும் என்பார் இனையன உரைத்த லோடும்.

கேடுற்ற தீங்கை உடைய இந்த அசமுகியை இனி நாம் என்ன கேட்பது என்பார் சிலர், அப்படி நாம் இவளின் தீங்கிற்கு காரணம் கேட்டாலே எம்மையெல்லாம் முனிவாள் என்பார் சிலர்; இவள் பக்கராக நாம் ஏன் இப்படிச் செல்லவேண்டும்? இந்த பெரிய பூமியின் இடமெல்லாம் ஓடிச்சென்று இவளின் விபரங்களை நாடியே நாங்கள் அறிவோம் என்பார்கள். இவைகளை இவர்கள் சொல்லலோடும். 31

சொல்லியற் சூரன் தங்கை துன்முகி யோடு கைபோய்
வல்லையிற் போதல் கேளா மம்மருற் றவுண மாதர்
சில்லியற் கூந்தல் தாழத் தெருத்தொறுஞ் செறிந்து கஞ்சம்
ஒல்லைமுத் துதிர்ப்ப தென்ன ஒண்கணீர் உகுத்துச் சூழ்ந்தார்.

பலராலும் புகழப்படும் சூரபன்மன் தங்கை அசமுகி, துன்முகியோடு கை வெட்டப்பட்டு விரைவுடன் அரண்மனையை நோக்கிப் போதலை அசுரப் பெண்கள் கேள்விப்பட்டு, வருத்தங்கொண்டு தங்களது சில் வைத்து முடிக்கப்பட்ட கூந்தல் அவிழ்ந்து சோர ஓடிவந்து தெருக்கள்தோறும் நெருங்கி, தாமரைப்பூ முத்தினை உதிர்த்தல் போல, ஒளி பொருந்திய கண்களில் நின்றும் கண்ணீரைச் சொரிந்து கொண்டு அசமுகியைச் சூழ்ந்துகொண்டனர். 32

அந்நகர் மகளிர் யாரும் ஆடவர் யாருஞ் சூழ்ந்து
துன்னினர் இனைய வாற்றல் துயருழந் திரங்கிச் சோரப்
பின்னவர் தொகுதி நீங்கிப் பிறங்குகோ நகரம் போந்து
மன்னவர் மன்னன் வைகும் மன்றினுக் கணிய ளானள்.

அந்த நகரத்துள்ள பெண்கள் எல்லாரும், ஆண்கள் எல்லாரும் அசமுகியை நெருங்கிச் சூழ்ந்துகொண்டாராய்; இத்தன்மையாகச் சொல்லித் துயரப்பட்டு இரங்கிச் சோர்வடைய இவர்களுடைய கூட்டத்தை அசமுகி விட்டு நீங்கி. மேலோங்கிய தலைநகரினுட் பிரவேசித்து அரசர்க்கரசனை சூரபன்மனுடைய சபாமண்டபத்து அருகாமையில் வந்தாள். 33

அசமுகி நகர்காண் படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் - 1,702.

## அசுமுகி புலம்புறு படலம்.

மறிமுக முடைய தீயாள் மன்றினுக் கணிய ளாகிக்
கிறிசெயும் அன்னை தன்னைக் கேளிரை மருகா னேரைத்
திறலுடை முன்னை யோரைச் சிந்தையில் உன்னி யாண்டைப்
பொறிமகள் இரியல் போகக் கதறியே புலம்ப லுற்றாள்

ஆட்டு முகமுடைய தீயவளான அசமுகி அரசியல் நடாத்தும் சபைக்கு அருகாமையில் சேர்ந்து, மயக்கம் செய்யும் தாயான மாயவளை, சுற்றத்தவரானவர்களை, மருமக்களை. வலிமையுடைய தமையன்மாரை தனது மனதில் நினைந்து அவ்விடத்துள்ள மகாலக்குமி பயந்தோட கதறிக்கொண்டு புலம்பி அழுவாள்.

கை வெட்டுண்ட துயரத்துடன் வந்தவள் தனது தமையனின் அரண்மனைக்கு அருகாக வந்தவுடன் சுற்றத்தாரை நினைந்து சோகத்தால் புலம்புவாள். ஈது அநேகமாகத் துன்பப்பட்டார் தமது சுற்றத்தாரை அணுகியபோது அத்துன்பம் மேலிடும் தன்மைபோல ஆயது. 1

வெறியாரும் இதழிமுடிப் பண்ணவர்கோன் அருள்புரிந்த மேனாள் வந்தாய்
பிறியாது நுமைப்போற்றித் திரிவனென்றாய் அம்மொழியும் பிழைத்தாய்
ரோலும்
அறியாயோ கரம்போன தஞ்சலென்றாய் இலைதகுமோ அன்னே யன்னே,
சிறியேனன் பெண்பிறந்து பட்டபரி பவமென்று தீரும் ஐயோ.

எனது தாயே மாயவளே! தேனாரும் கொன்றை மலர் மாலையணிந்த சடையுடைய சிவபெருமான் எமக்கு அருள்புரிந்த அன்று வந்தாய்; உம்மைப் பிரியாது

உமைக் காவல் கொண்டு எக்காலமும் திரிவேன் என அன்று சொன்னுய். அந்த வார்த்தையையும் பிழைத்தாய் போலும்; எனது கை போனது நீ அறியாயோ? ஒரு கால் வந்து மகளே! அஞ்சாதே என்றுயிலே; அம்மா! அம்மா! சிறியவளான யான் இன்று அடைந்த இழிவு ஐயோ, இனி என்றுதான் தீருமோ? 2

தாதையா னவர்அளித்த மைந்தர்கணே விருப்புறுவர் தாயர்பெற்ற
மாதரார் பால்உவகை செய்திடுவர் ஈதுலக வழக்கம் என்பார்
ஆதலால் என்துயரம் அகற்றவந்தாய் இலையந்தோ ஆரு மின்றி
ஏதிலார் போல்தமியேன் கரமிழந்தும் இவ்வுயிர்கொண் டிருப்ப தேயோ.

தந்தையானவர் தன்பால் தோன்றிய மைந்தர்கள் மேல் விருப்பங் கொள்வார். ஆனால் தயாரோ தான் பெற்றுக்கொண்ட பெண்பிள்ளைகள் பால் மிக விருப்பங் கொள்வார். இது ஒரு உலக வழக்கம் எனச் சொல்வார்கள். ஆகவே உனது மகளான என்மேல் நீ விரும்பி என் துயர் அகற்ற வந்தாய் இல்லை ஐயோ! நான் பெண் ஒருத்தி ஆரும் துணையில்லாமல் அனுதை போன்று எனது கை இழக்கப்பட்டும், எனது உயிரை வைத்துக்கொண்டு இருக்கவேண்டுமோ? 3

வருவீரெங் கணுமென்றே அஞ்சாது புலோமசையை வலிதே வௌவிப்
பெருவீர முடன்வந்தேன் எனதுகர தலந்துணித்துப் பின்னே சென்று
பொருவீர மாகாளன் அவனையுமீட் டேகினன் அப்பொதும்பர்க் கானில்
ஒருவீரஞ் செல்லீரோ நமரங்காள் நீருமவர்க் கொளித்திட் டீரோ

நீங்கள் எங்கென்ருலும் வருவீர்கள் என்றே எண்ணி நான் இந்திராணியை வலிதே பற்றிப் பிடித்துக் கொண்டு பெருவீரமுடன் வந்தேன், அப்போது எனது பின்னுக வந்து எனது கையையும் வெட்டி, நிகரற்ற வீரமுடன் வீரமாகாளதேவன் இந்திராணியையும் மீட்டுக்கொண்டு சென்றுனே; அந்தச் சோலைக் காட்டில் நீங்கள் ஒரு வரும் வரமாட்டீரோ; எனது சுற்றத்தவர்களே! நீங்களும் வீரமாகாளனுக்குப் பயந்து ஒளித்துவிட்டீரோ? 4

புரங்குறைந்தும் வலிகுறைத்தும் பொங்கியதொன் னிலேகுறைத்தும் புரையுறுத
வரங்குறைத்தும் புகழ்குறைத்தும் மறையொழுக்கந் தனைக்குறைத்தும் மலிசீர் தொல்லை
உரங்குறைந்தும் வானவரை ஏவல்கொண்டோம் என்றிருப்பீர் ஒருவன் போந்தென்
கரங்குறைந்த தறியீர்நுந் நாசிகுறைத் தனன்போலுங் காண்மின் காண்மின்.

தேவர்களின் ஊரின் செழிப்பைக் குறைத்தும், வலியைக் குறைத்தும், மேம்பட்ட பழைய நிலையைக் குறைத்தும, குற்றம் பொருந்தாத வரங்களைக் குறைத்தும், புகழினைக் குறைத்தும், வேத ஒழுக்கத்தினைக் குறைத்தும். தொன்றுதொட்டு பெருகி நிலவி வந்த சிறந்த வீரத்தைக் குறைத்தும்; தேவர்களை எல்லாம் ஏவல் கொண்டோம் என்றிருப்பீர். அந்தத் தேவரில் ஒருவன் வந்தென் கையை வெட்டியதை அறியீர்; உமது மூக்கை வெட்டிக் குறைத்தது போன்றது இச்செயல். இதைக் காணுங்கள், காணுங்கள். 5

மேயினுன் பொன்னுலகின் மீன்சுமந்து பழிக்கஞ்சி வேருவிக் காணுன்
போயினுன் போயினுன் வலியிலனென் றுரைத்திடுவீர் போலும் அன்னுன்
ஏயினுன் ஒருவனையே அவன்போந்தென் கரந்துணித்தான் இல்லக் கூரைத்
தீயினுர் கரந்ததிறன் ஆயிற்றே இந்திரன்றன் செயலு மாதோ.

தேவ உலகில் அரசனுகப் பொருந்திய இந்திரன் இங்கு வந்து மீன் சுமந்து அதனுலே தனக்கு வரும் பழிக்குப் பயந்து வெருக்கொண்டு எங்கோ காணுமல் போயி

ஞன் போயினுன் வலியிலாதவன் என்றென்று எல்லாரும் நீங்கள் பேசிக் கொள்வீர்களே போலும். அந்த இந்திரன் இங்கு ஓர் வீரனைச் செலுத்தினுனே; அவன் வந்து என் கை வெட்டினுன்; ஐயோ இந்த இந்திரனுடைய செய்கையும் வீட்டின் கூரையில் நெருப்பு மறைந்திருந்ததற் கொப்பாயிற்றே. 6

எள்ளூற்ற நுண்டுகளில் துணையாகுஞ் சிறுமைத்தே எனினும் யார்க்கும்
உள்ளூற்ற பகையுண்டேல் கேடுளதென் றுரைப்பர் அஃதுண்மை யாமால்
தாளூற்றுந் தள்ளூற்றும் ஏவல்புரிந் துழல்குலிசத் தடக்கை அண்ணல்
கள்ளூற்று மறைந்திருந்தே எனதுகரந் துணிப்பித்தான் காண்மின் காண்மின்

எள்ளில் உள்ள சிறிதளவானதுகளின் துணையளவாகச் சிறிதாக இருப்பினும்; யாவர்க்கென்றாலும் உள்ளப்பகை உண்டானாற் கேடு உளதாகும் என்று சொல்வார்கள், அது உண்மையாகும். தள்ளாடித் தள்ளாடி எமக்கு ஏவல் புரிந்து உழன்று திரிந்த வச்சிராயுதத்தைக் கொண்ட பெருங் கையுடைய இந்திரதேவன் கள்ளத்தனமாய் மறைந்திருந்து எனது கையை வெட்டுவித்தான் காண்மின், காண்மின். 7

சங்கிருந்த புணரிதனில் நடுவிருந்த வடவையெனுந் தழலின் புத்தேள்
உங்கிருந்த குவலயமோ டவைமுழுதுங் காலம்பார்த் தொழிப்ப தேபோல்
அங்கிருந்தென் கரந்துணித்த ஒருவோனும் உங்களைமேல் அடுவன் போலும்
இங்கிருந்தென் செய்கின்றீர் வானவரைச் சிறியரென இகழ்ந்திட் டீரே.

சங்கு இருந்த சமுத்திரத்தின் நடுவில் இருந்த வடவாமுகாக்கினி என்னும் அக்கினிக் கடவுள் அங்கு இருந்துகொண்டு காலத்தினைப் பார்த்து உலகோடு சமுத்திரத்தையும் அழிக்கும் அதேதன்மை போல, அங்கு ஒழித்திருந்து பின்னல் வந்து எனது கை வெட்டிய அந்த ஒருவனும் உங்களை பின்னுளில் கொல்வான் போலும். இங்கிருந்து நீங்கள் என் செய்கின்றீர்கள். என் குலத்தோரே தேவர்களைச் சிறியர் என்று இகழ்ந்துள்ளீரே. 8

முச்சிரமுண் டிரணியனுக் கிருசிரமுண் டந்தவன்னி முகற்கு மற்றை
வச்சிரவா குவுக்கொருபான் சிரமுண்டே அவைவாளா வளர்த்திட் டாரோ
இச்சிரங்கள் என்செய்யும் ஒருசிரத்தோன் என்கரத்தை இறுத்துப் போனுன்
அச்சுரருக் கஞ்சுவரே பாதலத்தில் அரக்கரிவர்க் களியர் அம்மா,

மூன்று தலைகள் உண்டு இரணியனுக்கு; இரண்டு தலைகள் உண்டு அந்த அக்கினிமுகாசுரனுக்கு; மற்றை வச்சிரவாகுவிற்கு பத்துத் தலைஉண்டே. இவற்றையெல்லாம் எனது மருகரானவர் வீணே வளர்த்திட்டாரே? இந்தத் தலைகள் இருந்து என் செய்யும்? ஒரு தலையுடைய வீரன் எனது கையை வெட்டிவிட்டுப் போயினுனே; எனது ஆட்களெல்லாம் தேவர்கட்கு இனி பயப்படுவர் போலும். பாதாளத்துள்ள இராக்கதர்கள் தான் எனது அசுரர்க்கு இனி எளிதானவர் போலும். 9

பிறைசெய்த சிருருவக் குழவியுருக் கொண்டுநாட் பெயர்ந்து வானின்
முறைசெய்த செங்கதிரோன் ஆதபமெய் தீண்டுதலும் முனிந்து பற்றிச்
சிறைசெய்த மருகாவோ மருகாவோ ஒருவனெனைச் செங்கை தீண்டிக்
குறைசெய்து போவதுவோ வினவுகிலாய் ஈதென்ன கொடுமை தானே.

இளம்பிறை கொண்ட வனப்புடைய சிறந்த குழந்தை உருவத்தைக் கொண்டு இருக்கும் காலத்தில்; வானத்தில் திரிந்து உலகில் ஒளியினைத் தந்து தனது கடமையை முறையாகச் செய்த, சிவந்த கிரணங்களை உடைய சூரியபகவானின் வெயில் மேனியில் படவும், அதனுலே கோபம் கொண்டு அந்தச் சூரியனைப் பற்றி சிறை வைத்த எனது மருகனே! ஒரு வீரன் எனது சிவந்த கையினைத் தீண்டி வெட்டிப் போவதுவோ இதைக் கேட்கின்றுயில்லை, இது என்ன கொடுமைதானே, 10

நீண்டாழி சூழுலகை ஓரடியால் அளவைசெய்தோன் நேமி தன்னைப்
பூண்டாய்பொன் னூரமென இந்நாளும் ஓர்பழியே பூண நின்றாய்
ஈண்டாருங் குறும்பகைஞர் என்கரம்போந் திறமியற்ற இனிதுவையம்
ஆண்டாய்நந் தாரகனே குறைமதிநீ ரோநின்பேர் ஆற்றல் அம்மா.

நீண்ட சமுத்திரம் சூழ்ந்த உலகை ஓரடியால் அளந்து கொண்ட விஷ்ணுமூர்த்தியின் சக்கரப்படையை உனது கழுத்தில் பொன் மாலையாகப் பூண்டாய் என் அண்ணா தாரகனே! ஆனால் இன்று உனது தங்கை கை வெட்டுண்டாள் என்னும் பழியைப் பூண்டாய். இவ்வுலகத்திருக்கின்ற எளிய பகைவர்கள் எனது கையை வெட்டும்படி செய்ய நீ இனிதே உலகத்தை ஆண்டாய், எங்கள் தாரகாசுரனே உன்னுடைய பெரிய ஆற்றலும் தேய்பிறை போன்று குறைந்துள்ளதோ? 11

வையொன்று வச்சிரக்கைப் புரந்தரனைத் தந்தியொடும் வான்மீச் செல்ல
ஒய்யென்று கரத்தொன்றால் எறிந்தனை வீழ்ந் தனன்கிடப்ப உதைத்தாய் என்பர்
மெய்யென்றுவியந்திருந்தேன் பட்டிமையோஅவன்தூதன் வெகுண்டுவந்தென்
கையொன்று தடிந்தானே சிங்கமுக வீரவிது காண்கி லாயோ-

கூரிய வச்சிராயுதத்தைப் பிடித்தேந்திய கையுடைய இந்திரனை அவன் ஏறிய யானையுடன் ஒய்யென கையால் தூக்கி எறிந்தனை என்றும் அவன் வீழ்ந்து கிடப்ப காலால் உதைத்தாய் என்றும் சொல்வார்கள்; அது கேட்டு நான் மெய்யென்று ஆச்சரியங் கொண்டிருந்தேன். அது பொய்யோ? ஏனென்றால் அவனுடைய தூதன் கோபத்துடன் வந்து எனது கையொன்றை வெட்டினனே! சிங்கமுகன் என்னும் வீரா இதனை நீ காண்கிலாயோ? 13

சூரனும் பெயர்படைத்த அவுணர்கள் தம் பெருவாழ்வே தொல்லை யண்டஞ்
சேரவே புரந்தனைநின் பரிதிசெங்கோல் குடையெங்குஞ் செல்லா நிற்கும்
ஆருமவா னவர்அவற்றிற் கச்சுறுவர் பொன்னகரோன் ஆணை போற்றும்
வீரமா காளனிடைக் கண்டிலனால் வலியர்முனம் மேவு றுவோ.

சூரபன்மன் என்னும் பெயர் கொண்ட அசுரர்களுடைய பெருவாழ்வே! மிக முந்திய பழைய அண்டமெல்லாம் ஒருங்காக அரசாட்சி புரிவாய். நினது ஆஞ்ஞா சக்கரமும் செங்கோலும் குடையும் எங்கும் செறிந்து காவல் கொள்ளும். அவைகளுக்கு எல்லாத் தேவரும் பயப்படுவர் ஆனால், அந்த அச்சத்தை, தேவ உலகை அரசாளும் இந்திரனுடைய கட்டளை செய்யும் வீரமாகாளனிடத்துக் கண்டேன் இல்லை. ஆகவே உனது ஆணை வலியுடையார் பால் செல்லாதோ? 13

ஒன்னார்தஞ் சூழ்ச்சியினால் ஒருமுனிவன் என்சிறுவர் உயிர்கொண் டுற்றான்
இந்நாளில் அஃதன்றி ஒருவனைக்கொண் டெனது கையும் இழப்பித்தாரே
பின்னாள்இவ் வருத்தமுற நன்றரசு புரிந்தனையால் பிழையீ தன்றே
மன்னவோ மன்னவோ யான்பட்ட இழிவரவை மதிக்கி லாயோ.

பகைவருடைய சூழ்ச்சியால் ஒரு அகத்தியமுனிவன் எனது இரண்டு பிள்ளைகளைக் கொன்றான். அதுவல்லாமல் இன்று ஒருவனைக் கொண்டு எனது கைகளையும் இழந்துபோகும்படி செய்வித்தார். உனது தங்கை இப்படி வருத்தப்பட, அண்ணா சூரபன்மனே! நீ நன்றாக அரசாண்டிருக்கின்றாய் இது பிழையல்லவோ. என் மன்னனே! மன்னனே! யான் பட்ட அவமானத்தை நீ சிந்திக்கமாட்டாயா? 14

**காவல்புரிந் துலகாளும் அண்ணுவோ அண்ணுவோ கரமற் றேன்காண்**
**ஏவரெனக் குறவாவர் ஊனமுற்றோர் இருப்பதுவும் இழுக்கே அன்றே**
**ஆவிதனை விடுவேன்நான அதற்குமுனம் என்மானம் அடுவதையோ**
**பாவியொரு பெண்பிறந்த பயனிதுவோ விதிக்கென்பாற் பகைமற் றுண்டோ**

உலகம் எங்கும் காவல் புரிந்து ஆளுகின்ற அண்ணுவோ! கை அற்றுப்போனேன் கண்டாய். எவர்தான் எனக்கு இப்போது உறவு ஆவார்கள்? ஊனம் அடைந்து பங்கப்பட்டோர்கள் இனியும வாழ்ந்திருப்பதுவும் இழுக்காகும் அல்லவோ? எனது உயிரை விடுவேன். அதற்கு முன்னம் ஐயோ! எனது மானம் என்னைக் கொல்லுகின்றதே பாவியான யான் ஒருத்தி பெண்ணாகப் பிறந்த பயன் இதுவோ? விதிக்கு என்னிடத்தில் தனியான பகை ஏதும் வேறு உண்டோ? 15

அசமுகி புலம்புறு படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் — 1,717.

# சூரன் தண்டஞ்செய் படலம்

என்று பற்பல உரைத்தனள் ஆவலித் திரங்கிப்
பின்ற‌ெடர்ந்திடு துன்முகி தன்னொடும் பெயரா
மன்றின் மேவரு சூரபன் மாவெனும் வலியோன்
பொன்ற டங்கழன் முன்னரே வீழ்ந்துபோய்ப் புரண்டாள்

என்று இந்தவாறு பல பல வார்த்தைகளைச் சொல்லி அழுது புலம்பி அசமுகியானவள்; தனது பின்பாக வெட்டுண்ட கையுடயளாகத் தொடர்ந்துவருகின்ற துன்முகியுடன் வேகத்துடன் ஓடிச் சென்று சபையின் வீற்றிருக்கின்ற சூரபன்மன் என்னும் வலிமையுடையோனுடைய; பொன் போல் விளங்கும் வீரகெண்டை அணிந்த கால்கள் முன்பாக வீழ்ந்து கொண்டு புரள்வாளாயினள். 1

புரண்டு மற்றவள் சகடையிற் பெயர்ந்திடும் போழ்தின்
மருண்டு பேரவை யகத்தினோர் அஞ்சினர் மறுக
அரண்ட ருங்கழற் சூரபன் மாவெனும் அவுணன்
இரண்டு நோக்கினுந் தீயெழ விழித்திவை இசைப்பான்.

அசமுகி சூரபன்மன் காலில் வீழ்ந்து வண்டிச் சில்லைப் போற் சுழன்று புரள்கின்ற நேரத்தில், அதனைக் கண்ணுற்கு பெரிய சபையின் உள் இருந்த அனைவரும் பயத்தால் ஏக்கமுற்று வருந்த; அசுரர்கட்கு அபயம் தரும் காலினை உடைய சூரபன்மன் என்னும் அசுரன் இரண்டு கண்களிலும் நெருப்புத் தோன்ற பார்த்து இவைகளைச் சொல்வான். 2

என்னை யோவிவட் புலம்புதி அசமுகத் திளையோய்
உன்னை யோர்கிலா தென்னையும் நினைகிலா துன்கை
தன்னை யும்மிவள் கரத்தையும் வாளினுல் தடிந்து
முன்னை யோரென இருந்துளார் யாரென மொழிந்தான்.

ஏனோ நீ இப்படிப் புலம்பி அழுகின்றாய் எனது அசமுகியே, இளைய தங்கையே! உன்னையும் ஆரென எண்ணாது, என்னையும் ஆரென எண்ணாது உனது கையையும், இவள் துன்முகியினது கையையும் வாளினுல் வெட்டி வீழ்த்திவிட்டு, தான் இதைச் செய்துவிட்டேன் என்று சொல்லக்கூடிய அளவில் முன்போலிருந்த அந்த வீரன் யார் எனக் கேட்டான் சூரபன்மன். (கைகளை வெட்டி இன்னமும், தப்பி இருக்கும் வீரன் யார் என்றான் என்க.) 3

புரந்த ரன்புணர் புலோமசை புவியிலோர் புறத்தில்
இருந்து நோற்றலும் உன்றனக் கென்றுசென் றெடுத்தோம்
விரைந்து வந்தொரு விண்ணவன் எங்களை வெகுண்டு
கரந்து ணித்துமற் றவளைமீட் டேகினன் கண்டாய்.

அப்போது அசமுகி சொல்வாள்; அண்ணா இந்திரன் தேவி இந்திராணி இப்பூமியில் ஓர்புறத்திலே இருந்து தவம் செய்தாள். அதுகண்டு நாங்கள் அவளை உனக்காக எடுத்துச் சென்று கொடுப்போம் என நினைந்து அவளைச் சென்று தூக்கினேம். அப்போது விரைவுடனாக ஒரு தேவன் வந்து எங்களைக் கோபித்து எங்கள் கையை வெட்டி அந்த இந்திராணியை மீட்டுச் சென்றனன் கண்டாய்: இதுவே எங்கள் நிலை என்றாள். 4

என்னு முன்னரே சொரிந்தன விழிகனல் எரிவாய்
துன்னு தீம்புகைப் படலிகை உமிழ்ந்தது துண்டம்
வன்னி காலுறு காலென உயிர்த்தது மதிபோன்
மின்னல் வாளெயி றிதழினை மறைத்தது விரைவில்.

என்று அசமுகி சொல்லி முடிப்பதற்கு முன்பாகவே கோபத்தால் சூரபன்மனது கண்கள் நெருப்பைச் சொரிந்தன. எரிகின்ற வாய் பெருகுகின்ற கொடிய புகைப் படலங்களைக் கக்கியது. மூக்கு நெருப்பைத் தோற்றுவிக்கும் காற்றைப் போன்று மூச்சினை விட்டது. சந்திரனை ஒத்த ஒளியுடைய கூரிய பற்கள் சொண்டைக் கடித்தலால் மறைத்துக்கொண்டது. 5

வெடிக்க லுற்றதெவ் வண்டமென் றையுற விரைவில்
இடிக்க லுற்றது தீயவாய் நகைவந்த திதழுந்
துடிக்க லுற்றது புருவமேல் நிமிர்ந்தது துள்ளிக்
கடிக் லுற்றன எயிற்றணி கறகற கலிப்ப.

எல்லா அண்டங்களும் வெடிக்கலுற்றனவோ என்று எல்லாரும் ஐயம் கொள்ளும்படி இடி இடித்தாற் போன்று தீமையான வாய் விரைவில் சத்தம் போட்டு சிரிக்கலுற்றது சொண்டுகள் படபடவென துடிக்கலுற்றன புருவங்கள் துள்ளி மேலாக நிமிர்ந்துகொண்டது, பற்களின் நிரைகள் கற கறவெனும் ஓசையுடன் கடிக்கலுற்றன. 6

புயற்பு றந்தொறு நித்தில முதிர்ந்தவா போல
வியர்ப்பு மிக்கன முறைமுறை அன்னது விளிய
மயிர்ப்பு றந்தொறும் புலிங்கம்வந் தடைந்தன வல்லே
செயிர்ப்பெ னுங்கனல் கிளர்ந்தது சிந்தையின் நின்றும்.

தோளின் புறம் தோறும் முத்துக்கள் உதிர்ந்துள்ளது போல் வேர்வை மிகுந்து அரும்பியது. முறை முறை அந்த வேர்வைகள் மாறிட அவனது உரோமங்களில் நின்றும் நெருப்பு வந்துதோன்றி அவற்றைக் காய்ந்தது விரைவுடனாக கோபம் என்னும் நெருப்பு சூரபன்மனுடைய சிந்தையில் நின்றும் தோற்றியது. 7

நீடு வெஞ்சினம் இத்திறம் அவனிடை நிகழ
ஓடு கின்றனர் திசையுளார் உலைந்தனர் முனிவர்
ஆடு கின்றதோர் தெய்வதக் கணிகையர் அவன்சீர்
பாடுகின்றவர் யாவரும் பதைபதைத் திரிந்தார்.

நீடிப் பெருகுகின்ற கோபம் இத்திறமாக சூரபன்மனிடத்து நிகழ்ந்திடுதலும், அதனைக் கண்டு திக்கில் உள்ளார் பயத்தால் ஓடுகின்றனர். முனிவர் எல்லாரும் உள்ளம் குலைகுலைந்தனர், சபையில் நடமாடிக்கொண்டிருந்த தேவதாசிப் பெண்களும் அவனுடைய சீர்களை எடுத்துப் பாடிக்கொண்டிருந்த ஏனைய பெண்களும் எல்லாரும் பதைபதைத்து ஓடிப்போனார்கள். 8

தாங்க லுற்றிடு திசைக்கரி ஓடிய தரிக்கும்
ஓங்கல் மேருவுங் குலைந்தன பணியெலாம் உலைந்த
ஏங்கு கின்றனர் வானவர் நடுங்கினன் இரவி
தீங்கு நாடியே போயினன் மீண்டனன் திரிந்தான்.

இப்பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கும் திக்கு யானைகள் பயத்தால் ஓடியது; இப்பூமியைத் தாங்கும் மேருமலையும் நிலைகுலைந்தது, பூமியைத் தாங்கும் பாம்புகள் எல்லாம் நிலைகுலைந்து உலைந்தன, தேவர்கள் ஏங்குகின்றனர், சூரியதேவனும் இங்கு இனி வரும் தீங்கை உணர்ந்து கொண்டானாய் அப்பால் போவதும் மீள்வதுமாக அலைந்து திரிந்தான். 9

பார்ந டுங்கின விண்ணெலாம் நடுங்கின பரவை
நீர்ந டுங்கின அயன்பதம் நடுங்கின நெடியோன்
ஊர்ந டுங்கின அவுணரும் நடுங்கினர் உலகத்து
ஆர்ந டுங்கிலர் அவன்சினஞ் சிறியதோ அன்றே.

இப்பூமி நடுங்கியது, விண் உலகமெல்லாம் நடுங்கியது, சமுத்திர நீர் நடுங்கியது, பிரமதேவருடைய உலகம் நடுங்கியது. நெடிய வடிவுடைய விஷ்ணு பெருமானின் வைகுந்த உலகம் நடுங்கியது, அசுரரும் நடுங்கினார்கள். இந்த உலகத்துள்ளாரில் யார்தான் நடுங்கவில்லை. ஏனெனில் அம்மம்மா அவனுடைய கோபம் சிறியதொன்றல்ல, உலகில் ஏனையோரிடம் தோன்றும் கோபம் போன்றதல்ல. 10

அண்ண லம்புகழ்ச் சூரபன் மாவென அறையுங்
கண்ணில் புன்மனத் தவுணர்கோண் இத்திறங் கனன்று
துண்ணென னச்சினத் தமரர்கள் யாரையுந் தொலைப்பான்
எண்ணி யுற்றிடும் இளையரைப் பார்த்திவை இசைப்பான்.

வரத்தின் சிறப்பினால் மிக மேம்பாடான புகழினை அடைந்துகொண்ட சூரபன்மன் என்னும் நல் நோக்கம் இல்லாத கண்ணுடைய அற்ப மனமுடையவன். இத்திறம் தனது மனதில் அழல் மூண்டு எவரும் நடுக்கம் கொள்ளச் சினத்து; தேவர்கள் யாவரையும் தொலைக்கும்படி எண்ணி தனது தம்பிமாரைப் பார்த்து இத்திறம் சொல்வான். 11

மீனெ டுத்துநம் மேவலில் திரிந்தவிண் ணவர்கோன்
கானி டத்திருந் தொருவனைக் கொண்டிவர் கரங்கள்
ஊனெ டுத்திடத் தறித்தனன் என்றிடின் ஒழிந்த
மானு டத்தரும் அடுவரே இங்கினி மாதோ.

கடலிலே உள்ள மீனை எனக்காக எடுத்துச் சுமந்து திரிந்த தேவர்க்கரசனை இந்திரன் காட்டில் ஒளித்திருந்து ஒருவனை விடுத்து இவர்களுடைய கைகள் ஊன் வடியும்படி வெட்டிவிடுவானாகில்; இனிமேல் மற்றைய பூவுலகில் உள்ள மனிதர்களும் அசுரரை கொலைபுரிவார் அல்லவோ. 12

பரம னேயலன் பங்கயத் தவிசினேன் அல்லன்
திருவு லாவரு மார்புடைத் தேவனும் அல்லன்
இரியும் வாசவன் தானலன் அவன்பணி இயற்றும்
ஒருவ னுமிவர் கைதடிந் தாவிகொண் டுறைவான்.

இவர்களின் கையை வெட்டியது சிவபிரான் அல்ல; தாமரைத் தவிசில் இருக்கும் பிரமதேவர் அல்ல; இலக்குமி உலாவி விளங்க இருக்கும் மார்புடைய விஷ்ணு மூர்த்தியல்ல; அல்லது அந்த எளியவனாகி ஓடிப்போன இந்திரன் கூட அல்ல; அந்த இந்திரனுடைய ஏவல் பணி செய்யும் ஒருவனா இவர்களுடைய கையை வெட்டிவிட்டு உயிரோடு இன்னும் இருக்கிறான்? 13

விண்ம யங்குறு செருவிடைத் தானையால் வீக்கி
எண்மை கொண்டுறும் அமரரைக் கொணர்தலும் எனது
கண்முன் நின்றிடும் அவுணர்தங் கழிபசி யொழிய
உண்மின் நீரெனக் கொடுத்திலேன் அறநினைந் துற்றேன்.

முன்பு எல்லாரையும் யான் வெற்றி கொண்ட காலத்தில் வான் உலகம் சோகத்தால் துயருறும் போரிடை; அநேகம் எண்ணிக்கை உடைய தேவர்களை எனது அசுரர்கள் கயிற்றால் கட்டி என் முன்னாகக் கொண்டுவந்து கொடுத்தபோது; என் கண் முன்னாக நின்றிடுகின்ற அசுரர்கள் பசி தீர உண்ணும்படி அந்த தேவர்களை அன்று கொடுக்காது விட்டேன்; அன்று தருமத்தை நினைந்து அச்செயல் செய்யாது விடுத்தேன். 14

மறைவைத் தேயமர் கின்றதோர் வாசவன் தனையும்
நறைவைத் தேயமர் பூங்குழற் சசியையும் நான்முன்
சிறைவைத் தேனிலன் சிறியரென் றுன்னினன் தீயின்
குறைவைத் தோர்கள்போல் ஆயினேன் இத்திறங் குறியேன்.

மறைவாக ஒளித்துக்கொண்டு வாழ்கின்ற இந்திரனையும், தேன் சொரியும் பூக்கள் சூடிய கூந்தலை உடைய இந்திராணியையும், முன்னமே பிடித்துச் சிறை வைத்தேனில்லை. அவர்கள் வலியிலாத சிறியரென நினைத்தேன். அம்மவோ நெருப்பின் குறையான குறங் கொள்ளியை நூராது விடுத்து,பின் அதனால் துன்புறுவார்போலானேன். இப்படியெல்லாம் வரவும் கூடுமென நான் முன்பு எண்ணவில்லை. 15

கைப்ப டுத்திய உயிர்ப்பலி கடிதின்உண் ணுது
தப்ப விட்டதோர் மால்கரி யொத்தனன் தமியேன்
இப்பு விக்கணே இவர்கரங் குறைத்திட்ட தெனது
மெய்ப்ப டுத்திய ஊனமே அலதுவே றுண்டோ.

ஓர் பெரிய யானை தன்னிடத்து அகப்படித்துக்கொண்ட ஓர் கொடிய மிருகத்தை தான் புசிப்பது இல்லாமையால் தப்பவிட அதே மிருகம் யானைக்கு மாறாக வரும் தன்மை போன்ற நிலை ஆனேன். இப்பூமியினிடத்தாக இவர்களுடைய கையை வெட்டியது; எனது மேனியிலே உண்டாக்கிய ஊனமான செயல் அன்றி வேறில்லை. 16

பூத ரந்தனைச் சிறைதடிந் திடுபுரந் தரனை
மாத ரார்புகழ் சசிதனை நாடுவான் வழிக்கொள்
தூதர் இன்னமுங் கண்டிலர் கொல்அவர் துணிவால்
ஏத மின்றிஇப் புடவியிற் குறும்புசெய் திருத்தல்.

மகாமேரு மலையின் சிறகுகளை வெட்டிவிட்ட இந்திரனை, பெண்கள் புகழும் அழகு நிறைந்த இந்திராணியை எங்குற்றனர் எனத் தேடிக் கொண்டு வழிபட்டுத் திரியும் எனது தூதுவர்கள் இன்னமும் இவர்களைக் காணவில்லையே? அந்த இந்திரனுடைய துணிவுதானே ஒரு தீங்கும் இலாது இந்தப் பூமியிடத்தாக இப்படிக் குறும்புகள் செய்துகொண்டு ஒருவர் கண்ணுக்கும் காணப்படாது இருக்கின்றது என்றான் சூரபன்மன். 17

நீரி ருந்தனிர் புதல்வரும் இருந்தனர் நிகரில்
தேரிருந்தது நேமியும் இருந்தது சிறிதென்
பேரி ருந்தது யானுமிங் கிருந்தனன் பின்னை
யாரி ருந்துமென் இருந்துமா கின்றதென் அந்தோ.

நீங்கள் இருந்தீர்கள் எனது பிள்ளைகள் இருந்தார்கள்; நிகர் இல்லாத வலியுடைய தேர் இருந்தது; ஆஞ்ஞா சக்கரமும் இருந்தது; சிறிது எனது பேரும் இருந்தது; யானும் உயிரோடு இங்கு இருக்கின்றேன்; பின்னர் ஆர் இருந்தும் என்ன? அல்லது ஆகப்போகின்றது என்ன? அந்தோ, இந்தப் பொல்லாங்கு நேர்ந்ததே! 18

வான ளாவுவெண் பஞ்சியின் மால்வரை வறிதே
தீநி லாயதோர் அளவையின் முடிந்திடுஞ் செயல்போல்
தூநி லாவெயிற் றினையர்கைச் சோரியின் துளியால்
போன தேபல அண்டமுங் கொண்டநம் புகழே.

வானம் அளவில் வளர்ந்து உயர விளங்கும் பஞ்சினால் ஆக்கப்பட்ட பெரிய மலையில் சிறிது ஓர் நெருப்புப் பட்ட அளவில் அப்பஞ்சு மலை முடிவாகும் செயல் போன்று: தூயதான இளம்பிறை போன்ற அழகிய பற்களை உடைய இப்பெண்களது கையினின்றும் வெளிவந்த இரத்தத்தின் துளியால், போய்விட்டதே பல அண்டங்களிலும் கொண்ட நமது புகழ். 19

இழிவும் இங்கிவர்க் குறுவதே இமையவர் தங்கள்
வழியின் நின்றதோர் அரந்தையும் இவ்விடை வருமே
பழியும் என்னிடத் தெய்துமே என்றும்இப் பழிதான்
ஒழிவ தில்லையே பொறுப்பதே அதனையென் னுயிரே.

அம்மவோ இப்பெண்களுக்கும் இழிவு வரத்தக்கதா? தேவர்கள் சார்பாக நின்ற அந்தத் துயர நிலைகளும் இவ்விடத்து வருவதோ? இப்படியான வசையுடைய பழியும் என் இடத்தாக அடைவதா? அம்மம்மா, சூரன் தங்கை கை வெட்டுண்டாள் என்னும் அவமான வார்த்தை நீங்கிப் போவதில்லையே? இந்த அவமானத்தை எனது உயிர் தாங்குவதா? 20

மல்ல லந்தடந் தேர்கடக் கைம்மலை வயமா
எல்லை யில்லவும் அவுணரும் எங்கணும் இருப்பச்
சில்லை மென்குழல் அசமுகி படுவதித் திறமோ
நல்ல நல்லஎன் அரசியல் முறையென நக்கான்.

உறுதியான வலியுடைய பருத்த தேர்களும் துதிக்கையையுடைய யானைகளும், வெற்றியீட்டும் குதிரைகளும், அளவு கடந்த அசுர சேனைகளானவை காவலாக எல்லா இடங்களிலும் நிரம்ப இருப்பவும், சில்லைத்து முடிந்த கூந்தலை உடைய அசமுகி இந்தத் தன்மையை அடைவதா? நல்லது நல்லது எனது அரசாட்சிமுறை எனச் சிரித்தான் சூரபன்மன். 21

நக்க காலையிற் காலுறும் வார்கழல் நரல
மக்கள் தங்களிற் பானுகோ பப்பெயர் வலியோன்
செக்கர் அங்கியிற் கிளர்ந்துதன் தந்தைமுன் செவ்வே
புக்கு வந்தனை செய்துநின் றினையன புகல்வான்.

சிரித்த நேரத்து, காலில் சிலம்புகள் ஓசை செய்ய விளங்கும் மைந்தர்களிலே பானுகோபன் என்னும் பெயருடைய வலியோன், உடனுகச் சிவந்த நெருப்புச் சுவாலித்தல் போன்று இருப்பிடம் விட்டெழுந்து, தந்தை முன்னுகச் செவ்வனே சென்று வணக்கஞ் செய்து முன்நின்று இதனைச் சொல்வான். 22

ஐய கேண்மதி நமதுகுற் றேவலால் அழுங்கித்
தொய்யு முள்ளமோ டிந்திரன் கரந்தனன் சுரரும்
நொய்யர் இத்தொழில் நினைப்பதுஞ் செய்யலர் நுங்கை
கையி ழந்ததென் மாயமோ உணர்கிலேன் கவல்வேன்.

ஐயனே கேட்பீராக; நமது குற்றேவல்களைப் புரிந்து துயரப்பட்டு ஆற்ருது நொந்து வாடிய உள்ளத்துடன் இந்திரன் ஒளித்து ஓடினுன்; தேவர்களும் வலியில்லாத நெஞ்சுடையர் எமக்குற்ற பயத்தால் இத்தொழிலை நினைப்பதும் செய்ய மாட்டார்கள்; ஆகவே, உனது தங்கை கையிழந்தது என்ன மாயமாகுமோ என்பதை எண்ணி என்மனம் பெரிதும் கவல்கின்றேன். 23

வந்தி பெற்றிடு கான்முளை எட்டிவான் தவழும்
இந்து வைக்கரங் கொண்டனன் என்பதோர் இயல்பே
அந்த ரத்தரில் ஒருவனே இனையவர் அங்கை
சிந்தி யுற்றனன் என்றுநீ உரைத்திடுந் திறனே.

ஒரு மலடி பெற்ற ஒரு சிறு பிள்ளை வானிற் செல்கின்ற சந்திரனை எட்டிக் கையால் பிடித்துக் கொண்டான் எனச் சொல்லும் சொல்லை நம்ப முடியாத தன்மையைப் போன்றிருக்கும் தேவர்களில் ஒருவனே இந்த அசமுகியின் கையினை வெட்டினுன் என்று நீ சொல்லும் இந்தச் செய்கையும், 24

வலியர் ஆகியே புரிந்தனர் எனினுமற் றவர்கள்
மெலியர் ஆற்றநீ வெகுளுறுந் தகைமைமே வினரோ
ஒலிதரு ருங்கடல் மீன்சுமந் துன்பணி யுழந்தார்
அலியர் அல்லதை ஆண்டகை யார்கொலோ அனையோர்.

அப்படித்தான் அத்தேவர் வலியராகியே இந்தச் செயலைச் செய்துளாரென்று நாம் கொண்டாலும், அத்தேவர்கள் அற்பர்; அவர்களை நீ மிகவும் கோபிப்பதற்கு தகுதி அடைந்தார்களோ? அத்தேவர்கள் ஒலிக்கின்ற கருங்கடலில் உள்ள மீனினைச் சுமந்து உனது ஏவல் பணி புரிந்து உலைந்து திரிந்தவராயிற்றே. ஆனமையின் அவர்கள் அலியர் அல்லாது ஆண்டகமை உடைய வீரரென்றும் சொல்லலாமோ? 25

நறைம லர்க்கம லத்தனை வெகுளினும் நாரத்
துறையுள் வைகிய முகுந்தனை வெகுளினும் உம்பர்
எறிபு னற்சடை இறைவனை வெகுளினும் இயல்பே
சிறியர் தம்மையும் முனிதியோ பெருமையிற் சிறந்தோய்.

தேன் சொரியும் தாமரைப் பூவிலுற்ற பிரம தேவனை நீ கோபிப்பினும், பாற் கடலில் பள்ளிகொண்ட விஷ்ணு மூர்த்தியை நீ கோபிப்பினும்; மேலோங்கி விளங்கும் கங்கை அணிந்த சடையுடைய சிவபிரானைக் கோபிப்பினும் அது பொருத்தமானது; அதல்லாமல் அற்பராகிய தேவர்களையும் கோபிப்பாயோ இவ்வளவு பெருமையிற் சிறந்துள்ள நீ. 26

முத்தி றப்படுந் தேவரே அல்லதுன் முனிவிற்
கெத்தி றத்தினர் இயைந்துளோர் இளையர்க்கும் இனைத்தே
சித்த முற்றிடும் வெகுளியைத் திருதி இன்னோர்
கைத்த லந்தனை இழந்துழிப் பெயருவன் கடிதின்.

பிரமா, விஷ்ணு உருத்திரன் எனப்படும் மும்மூர்த்திகளை யல்லாது உன் கோபத்திற்கு பொருந்தியவர்வேறு எத்திறத்தினர் இங்கு உளர்? அதுவன்றி உனது தம்பிமார்க்கும் இப்படித்தான் நிலை; ஆகவே உனது நெஞ்சில் கொண்ட கோபத்தைத் தீர்வாய்; இவர்கள் கையினை இழந்துள்ள இடத்திற்கு இப்போதே செல்வேன். 27

விசைய வாளினால் இங்கிவர் கரந்தனை வீட்டும்
அசைவில் ஆடவன் றன்னைநின் னுளத்தின்மால் அளித்த
சசியை இந்திரக் கள்வனைத் தம்முயிர் தமக்குப்
பசையி லாததோர் அமரைப் பற்றினன் படர்வேன்.

வெற்றியையுடை வாளினால் இவர்களது கையினை வெட்டிய அசைவிலா வலியுடைய அந்தத் தேவனை உனது உள்ளத்து ஆசை ஊட்டிய இந்திராணியை, இந்திரனான கள்வனை தமது உயிரில் தமக்குப் பற்றேதும் இலாததோர் தேவரைப் பிடித்துக்கொண்டு இங்கு வருவேன். 28

அங்கண் உற்றிலர் மறைகுவ ரேயெனில் அகிலம்
எங்கும் நாடுவன் அனையர்வாழ் துறக்கநா டேகிச்
செங்க னற்கொள அளிக்குவன் அமரர்தந் திறத்தை
மங்கை மாரொடும் பற்றியோர் கன்னலின் வருவேன்.

அங்கு அவர்கள் இலாமல் மறைந்து போனாரே என்றால் இப்பூவுலகெங்கணும் அவரைத் தேடுவேன், அவர்கள் வாழுகின்ற சொர்க்க நாட்டில் நான் சென்று அந்த நாட்டை சிவந்த நெருப்பு உண்டு அழிக்கும்படி நெருப்பூட்டி எரிப்பேன்; அங்குள்ள தேவர்கள் கூட்டத்தை அங்குள்ள தேவப் பெண்களுடன் சிறைப்பிடித்துக்கொண்டு இங்கு வருவேன். 29

ஈதி யால்விடை தமியனுக் கென் றுநின் றிரப்பத்
தாதை யாகிய அவுணர்கோன் முனிவினைத் தணிந்து
போதி மைந்தநீன் படையொடும் ஆங்கெனப் புகல
ஆத வன்பகை அழகிதென் றுவகையை அடைந்தான்.

இப்பொழுதே இவ்வண்ணம் நான் செய்யப் போவதற்கு விடை கொடுப்பாய் என்று நின்று பானுகோபன் இரந்து வேண்டிட; தந்தையாகிய சூரபன்மன் கோபத்தை ஆறி, எனது மகனே! உனது படையொடும் அங்கு போவாயாக எனச் சொல்ல; அதுகேட்ட சூரியன் பகைவனான பானுகோபன் இது அழகு என்று மகிழ்ச்சியை அடைந்தான். 30

ஓகை சேர்தரு விண்ணவர் மணிமுடி உரிஞ்சிச்
சேகை சேர்தரு தாதைதாள் உச்சியிற் சேர்த்தி
வாகை சேர்சிறு தந்தையர் தம்மையும் வணங்கிப்
போகை சேர்விடை கொண்டுதன் னிருக்கையிற் போனான்.

இன்பம் சேரும் தேவர்கள் முடியால் வணங்குதலால் அவர்கள் முடிகள் உராஞ்சப்பட்டு சிவந்துள்ள காலினை உடைய தந்தை சூரபன்மனின் காலினை, பானுகோபன் உச்சியில் சேரும்படி வணங்கி வெற்றியுடன் விளங்கும் சிறிய தகப்பன்மாரான; சிங்கனையும், தாரகனையும் பின்னர் வணங்கிக் கொண்டு போய்வர விடைபெற்றுக் கொண்டு பானுகோபன் தனது இருப்பிடஞ் சென்றான். 31

மைந்தன் ஏகலுஞ் சூரபன் மாவெனும் வலியோன்
உந்து தீவிழி உழையரிற் சிலவரை நோக்கி
அந்த நான்முகன் இங்ஙனம் வருகுவன் அவனை
நந்தம் முன்னுறக் கொடுவரு வீரென நவின்றான்.

தனது மகன் பானுகோபன் சென்றிடலும் சூரபன்மன் என்னும் வலிமை உடையவன் நெருப்பைச் சொரிகின்ற கண்கள் உடைய தூதுவரிற் சிலரைப் பார்த்து அந்த நான்கு முகமுடைய பிரமதேவன் இங்கு இந்தப் பக்கம் வருவான்; வந்ததும் என்பணி செய்வதற்கு உட்புகுவதற்கு காலம் பார்த்து நிற்பன், நீவிர் அவனை என் முன்பாக கொண்டு வருவீராக; என்று உரைத்தான். 32

எங்கண் உற்றுளான் அயனெனக் கூவினர் ஏகிப்
பங்க யத்தனைக் கண்டுநிற் கொணர்கெனப் பணித்தான்
நங்கள் கொற்றவன் என்றலும் ஒல்லென நடவா
அங்கம் ஐந்துடன் அவுணர்கள் மன்னன்முன் அணைந்தான்.

தூதுவர்கள் அவ்வார்த்தை மேற்கொண்டு பிரமதேவன் எங்குற்றான் என்று; எங்கு நின்றாலும் பிரமதேவர் அதைக் கேட்டுக்கொள்ளும்படி உரக்கக் கூவி அழைத்து பிரமதேவர் நிற்கும் இடத்தை அடைந்து; பிரமதேவரைக் கண்டு உம்மை அழைத்து வரும்படி கட்டளையிட்டான் எங்கள் அரசன் எனத் தூதுவர் கூறலும்; பிரமதேவர் அதனைக் கேட்டுக்கொண்டு நன்று என்று நடந்து சென்று பஞ்சாங்கத்துடன் சூரபன்மன் முன் போயினர். 33

அணைந்த பூமகன் வைகலை பக்கநாள் அவற்றுற்
புணர்ந்த யோகொடு கரணமே லுள்ளன புகல
நுணங்கு சிந்தையால் அகிலமும் படைத்துளாய் நொய்தில்
தணந்த கையிவர்க் குதவுதி என்றனன் தலைவன்.

போயின பிரமதேவர் சூரனிடம் நாள், நட்சத்திரம் திதி இவற்றுடன் கூடிய யோகம் கரணம் முதலாக உள்ள சுபாசுப முகூர்த்தங்களைச் சொல்லி நிற்றலும்; அதுபோது பிரமதேவரைச் சூரபன்மன் பார்த்து நுட்பமான சிந்தையால் எல்லா உலகையும் படைத்துள்ளாய்; விரைவுடனாக வெட்டுண்ட இவர்களுடைய கையினையும் முன்போலாகுமாறு இவர்கட்கு செய்வாயாக! என்றான். 34

என்று தானிவை மொழிதலுந் திசைமுகன் இசைந்து
வன்றி றற்கரங் கூடுக மற்றிவர்க் கெனலும்
ஒன்றோர் மாத்திரைப் பொழுதின்முன் அவைவளர்ந் துறலும்
நன்று நன்றுநின் வல்லபம் என்றுசூர் நவின்றான்.

என்று சூரபன்மன் இவைகளை மொழிதலும்; பிரமதேவர் அதற்கு இசைந்து வெட்டுப்பட்ட வலிமையான திண்ணுடைய கைகள் இவர்கட்கு முன்போல கூடிக் கொள்க என்னலும்; ஒரு மாத்திரைப் பொழுது ஒடுங்கு முன்பாக அந்தக் கைகள் வளர்ந்து பழமைபோல் ஆதலும்; அது நோக்கிய சூரபன்மன் நல்லது, நல்லது உமது வல்லபம் என பிரமதேவரைப் பார்த்துச் சொன்னான். 35

அன்ன தற்பின்னர் அசமுகத் தணங்கினை அரசன்
தொன்ன கர்க்குளே இருந்திடச் செய்துதுன் முகத்தி
தன்னை மைந்தனோ டுய்த்தனன் புலோமசைத் தையல்
முன்னி ருந்துழி காட்டியே வருகென மொழிந்து.

அதன் பின்னராக ஆட்டு முகமுடைய அசமுகி என்னும் நங்கையை சூரபன் மன் தன்னுடைய நகரத்துள்ளே இருந்திடும்படி செய்து, துன்முகி என்பாளை மகன் பானுகோபனுடன் செல்லும்படியாக்கி, பானுகோபனுக்கு இந்திராணி என்னும் பெண் முன்பு இருந்த இடத்தைக் காட்டிய பின்பு இங்கு வருவாயாக என சொன்னான். 36

உழைத்தி ருந்தபல் சிலதரை நோக்கியே உலகில்
தழைத்த செங்கதிர்க் கடவுளைத் தாரகா கணத்தை
எழுச்சி கொண்டுறு கோளினை யாரையும் இன்னே
அழைத்தி ராமெனச் சொற்றனன் அவுணர்கட் கரசன்.

சூரபன்மன் தனது பக்கராக உலாவி நின்று காவல் கொண்ட சில தூதுவரை நோக்கியே, நீங்கள் சென்று உலகில் பிரகாசத்துடன் விளங்கும் கிரணங்களைப் பரப்பு கின்ற சூரியக் கடவுளை, நட்சத்திரங்களான கணங்களை, மேல்நிலையில் பொருந்திநின்ற கிரகங்களை எல்லாரையும் இப்பொழுதே இங்கு அழைத்து வருவீராக; எனக் கூறினான். 37

சேடர் பற்பலர் விடைகொடு சேட்புலஞ் சென்று
நேடி அன்னவர் தமையெலாங் கொணர்ந்துமுன் நிறுவ
மூடு கொண்டலிற் கரந்தமின் பின்னெழு முறைபோல்
கேடு கொண்டதொல் சினவெரி சூரனுட் கிளர்ந்த.

அக்கட்டளையை மேற்கொண்ட தூதுவர்களில் பலர் சூரனிடம் அனுமதி பெற்றுக் கொண்டு வானங்களில் அதிதூரம்சென்று ஆராய்ந்து சூரியபகவான் முதல் சொல்லப் பட்ட அவர்கள் யாவரையும் கொண்டுவந்து சூரன் முன் நிற்பாட்டுதலும்; அவர்களைக் கண்ணுற்ற சூரபன்மனிடத்து; வானத்தை மூடிநின்ற மேகங்களில் மறைந்த மின்னல் பின்னொரு முறை தோன்றினற் போன்று கேடு கொண்ட முந்திய கோபம் என்னும் நெருப்பு சூரபன்மனிடம் மூண்டு எழுந்தது. 38

வியர்க்கும் நெஞ்சினன் கதிர் முதலோர்தமை விளியா
அயர்க்கை இன்றியே வானிடைத் திரியுநீர் அறியா
இயற்கை ஒன்றிலை எங்கைதன் செங்கையை எறிந்தோன்
செயற்கை காணுதிர் வறிதுநீர் இருந்ததென் சேணில்.

கோபத்தினல் வேர்வை கொள்ளும் நெஞ்சை உடையனாய்; சூரியபகவான் முதலியோர் தமை கடுமையுடன் பார்த்து, நீங்கள் அயர்வு இல்லாது வானத்தில் திரியும் தன்மை கொண்டீர்கள். ஆகவே நீங்கள் அறியாத மிக நுண்ணிய கருமம் ஒன்றில்லை. ஆகவே எனது தங்கையின் சிவந்த கையினை வெட்டிய வீரனின் செய்கையை நீங்கள் காண்பீர்கள். அப்படி இருந்தும் நீங்கள் என்னிடம் வந்து இதுபற்றி இவ்வளவு நேரமும் பேசாதபடி வானத்தில் இருந்த காரணம் யாது? எனக் கேட்டான். 39

இளையள் தன்கரங் குறைந்திடும் இமையவன் உயிரைக்
களைதல் செய்திலீர் அல்லதேல் அனையனைக் கட்டித்
தளைசெய் திவ்விடைக் கொணர்ந்திலீர் அல்லதத் தலையில்
விளைவை வந்தெமக் குரைத்திலீர் நன்றுநும் மிகுதி.

நீங்கள் எனது தங்கையின் கையினை வெட்டிய அந்த தேவனுடைய உயிரை கொன்றிடவில்லை? அல்லாதிருந்தால் அக்கொடியவனைப் பிடித்து விலங்கிட்டு இவ்விடத்துக் கொண்டுவந்து என்முன் விடுத்தீரில்லை? அல்லது அந்தஇடத்தில் நிகழ்ந்த இந்த விளைவுகளை எல்லாம் வந்து என்னிடம் சொல்லவும் இல்லை; நன்று உம் பெருமை. 40

மறத்தி றத்திஞல் எங்கைதன் கையையோர் வலியோன்
குறைத்த தற்குநீர் அகத்தரே அல்லது குறிக்கில்
புறத்தர் அன்றுநம் மாணையால் இத்தொழில் புரிவீர்
முறைத்தி றங்கொலோ நுங்களுக் கிதுவென மொழிந்தான்.

ஆதலின் கொடுமையால் எனது தங்கையின் கையை ஓர் வலியுடைய தேவன் வெட்டியதற்கு நீங்களும் உடைந்தை உள்ளவராக இருந்தீரேயல்லாது நான் இதை ஆலோசிக்கும்போது வேறுக உடைந்தையில்லாதவர் அன்று; எனது ஆணையால் உங்களது இந்தக் கடமைகளை நீங்கள் புரிவீர்கள். ஆகவே இது முறையான செயலா இதுபற்றி அறியாதவர்போல் நீங்கள் இருந்தமை? எனக் கூறினன். 41

நீதி இல்லவன் ஈங்கிவை உரைத்தலும் நிருப
ஏதும் எங்களை வெகுளலை இங்கிவள் கரத்தைக்
காது வான்றனைக் கண்டிலம் இன்றுசெல் கதியின்
மீது சென்றவெம் விழியென உரைத்தனர் விண்ணோர்.

நீதியில்லாத சூரபன்மன் இங்கு இவற்றை உரைத்தலும்; அது கேட்டு அரசே! நீர் ஏதும் எங்களைக் கோபிக்காதீர்; இங்கு அசமுகியின் கையை வெட்டினன் தனை யாங்கள் கண்டிலம்; நாங்கள் இன்று செல்லவேண்டிய மார்க்கத்திலேதான் எமது பார்வை இருந்தது என்று வானில் சஞ்சரிக்கும் சூரியன் முதல் விண்ணவர் யாவரும் கூறினர்கள். 42

துண்ட மாகியே இவள்கரந் துணிபட்ட செய்கை
கண்டி லார்களாங் கதியிடைச் சென்றவாங் கண்கள்
அண்டர் தஞ்செயல் அழகிதென் றனையரை யெல்லாந்
தண்டல் இல்லதோர் சிறைபுரி வித்தனன் தலைவன்.

ஓகோ! துண்டாகி வெட்டுண்ணும் படி இவள் கை வெட்டுப்பட்ட செய்கையை எல்லாம் கண்டறிகின்ற இவர்கள் காணவில்லையாம். தங்கள் கண்கள் தாம் செல்லும் மார்க்கத்தை நோக்கியபடி இருந்தனவாம். வானிலுள்ள தேவரின் செய்கை அழகாக இருக்கின்றது என்று ஏளனத்துடன் சொல்லி, அவர்கள் யாவரையும் சிறை புரிவித்தான் தலைவனுன சூரபன்மன். 43

தினகரன் முதலினோர் சிறையிற் புக்கபின்
வினைஞரிற் சிலர்தமை விளித்து நீவிர்போய்த்
துனைவரு மருத்துவர் தொகையைத் தம்மென
முனிவொடு தூண்டினன் முடிவி லாற்றலான்.

சூரியபகவான் முதலியோர் சிறையில் சென்ற பிற்பாடு தனது ஏவலாளரிற் சிலரைப் பார்த்து நீங்கள் சென்று வேகம் மிகுந்த வாயுக்கள் கூட்டத்தைஅழைத்து வாருங்கள் என்று மிகக் கோபத்துடன் அந்த ஏவலாளர்களை அனுப்பிவைத்தான் முடிவில்லாத வலியுடைய சூரபன்மன். 44

ஒற்றரில் ஒருசிலர் ஒல்லை ஏகியே
குற்றமின் மருத்துவர் குழாத்தைக் கூவியே
பற்றிமுன் உய்த்தலும் பதைக்கும் நெஞ்சினன்
தெற்றென ஆங்கவர்க் கிதனைச் செப்புவான்.

அதுகேட்ட தூதுவரில் ஒரு சிலர் அதிவிரைவுடன் சென்று குற்றமில்லாத வாயுக்கள் கூட்டத்தைக் கூப்பிட்டுப் பிடித்துக்கொண்டு வந்து சூரபன்மன் முன்பு விடுத

லும், அவர்களைக் கண்ணுற்றுக் கோபத்தால் படபடக்கின்ற நெஞ்சை உடையனாய் சுறுக்குடன் அவர்கட்கு இதைச் சொல்வானாயினன். 45

வானிடை மண்ணிடை மாதி ரத்திடை
மேனிகழ் கடலிடை வியன்பி லத்திடை
ஊனிடை உயிரிடை ஒழிந்து நின்றிடும்
ஏனைய பொருளிடை எங்கும் நிற்றிரால்.

நீங்கள் வானத்தில், மண்ணில் திக்கில், மேலோங்கிய திரையுடைய கடலினிடத்து பெரிய பாதாள உலகத்தில், ஊனிடத்து, உயிரிடத்து இல்லாது விளங்கி நிற்கின்ற ஏனைய எல்லாப் பொருளிடத்தும் எங்கும் நிற்பீர்கள் 46

ஏனுறு கின்றஎன் இளையள் கையையோர்
சேணினன் வாள்கொடு சேதித் திட்டதை
காணுதிர் உமக்கெவர் கரக்கற் பாலினோர்
நீணகர் குறுகியிந் நிலைமை சொற்றிலீர்.

பெருமை உற்று விளங்கும் எனது தங்கை அசமுகியின் கையினைத் தேவ உலக வாசியாகிய ஒருவன் வெட்டியதை எங்கும் நிலவும் இயல்புடைய நீவிர் காண்பீர்கள்; உமக்கு எவர்தான் எதையும் மறைக்க முடியும்? ஆகவே நீங்கள் இந்த நீண்ட நகரத்திடை வந்து இந்த நிலைமை பற்றிச் சொல்லவில்லை. 47

தரியலர் சூழ்ச்சியால் தகுவர்க் கிப்பழி
வருவது நன்றென மகிழ்ந்து வைகினீர்
பெருமிதம் நன்றெனப் பேச மாறுசொல்
உரையற நின்றனர் உலவைப் பண்ணவர்.

பகைவரின் சூழ்ச்சியால் அசுரர்க்கு இந்தத் துயரநிலை வருவது நல்லது என்று மகிழ்ந்து கொண்டு அவண் இருந்தீர்கள்: உங்களது பெருமையான இறுமாப்பு நன்று என்று சூரபன்மன் பேசுதலும், வாயுக்கள் எனும் கடவுளர் அதற்குப் பதிலாக ஒரு வார்த்தையும் பேச முடியாது நின்றனர். 48

வன்றிறல் இன்றியே மனத்தில் அச்சமாய்
நின்றிடு கால்களை நீடு கால்களிற்
துன்றிய கனைகழற் சூர னென்பவன்
ஒன்றொரு சிறைதனில் உய்த்திட் டானரோ.

வலிமையாவும் இல்லாமல் மனதில் அச்சமோடு அவ்விடத்து நின்றிட்ட வாயுக்களை; நீண்ட பெரிய கால்களிற் பொருந்த அணியப்பெற்ற ஒலிக்கும் சிலம்புகளை உடைய சூரபன்மன் என்பவன், நீக்கமுடியாத தனியான ஒரு சிறையில் சிறையிடுவித்தான். 49

ஈற்றினை இழைத்திட இருக்குங் கால்களைச்
சீற்றமோ டவுணர்கோன் சிறையில் வீட்டினான்
சாற்றிடின் உலகமேல் தவத்தி னுல்வரும்
பேற்றினும் உளதுகொல் பெருமைத் தானதே.

உலகில் எல்லா உயிர்க்கும் மரணத்தை விளைவிக்கின்ற இந்த வாயுக்களைக் கோபத்துடன் சூரபன்மன் சிறையில் அடைத்து வைத்தான். ஆதலால் இதுபற்றிச் சொல்லிடின் உலகத்தில் தவத்தினால் வரக்கூடிய பேற்றிலும் பார்க்க வேறு ஒரு பொருள் பெருமை தரத்தக்கதாக இருக்கின்றதோ? இல்லை 50

திரிதரு மருத்தரைச் சிறையில் வைத்தபின்
குரைகழல் வினைஞரைக் கூவி இற்றையாண்
டிருதுநன் மதிமுதல் எல்லை யாளரைத்
தருதிரென் றுரைத்தலுந் தாழ்ந்து போயினர்.

எங்கும் உலாவித் திரிகின்ற வாயுக்களைச் சிறையினில் வைத்த பிற்பாடு ஒலிக்கின்ற சிலப்பணிந்த ஏவலாளர்கள் சிலரைச் சூரபன்மன் அழைத்து இன்று நடைபெற்றிருக்கின்ற வருடம் இருது நல்ல மாதம் முதலாய காலங்களின் அதிதெய்வங்களை ஆங்கு கொண்டு வருவீராக என்னலும்; அவர்கள் எல்லாம் நன்று என்று வணங்கிப் போயினர். 51

ஏவல ராயினோர் ஏகி யெல்லையின், காவல ராகிய கடவு ளோர்தமைக்
கூவினர் பற்றியேகொடுவந்துய்த்தலுந், தேவர்கள் மாற்றலன் சீறிக்கூறுவான்

ஏவலராயினோர் சென்று எல்லையற்ற காலங்களின் காவலராய் இருக்கின்ற அதி தெய்வங்களை கூவி அழைத்துக் கொண்டுவந்து சூரபன்மன் முன் சேர்த்தலும் அவர்களைக் கண்டவுடன் தேவர்கட்கு பகைவரான சூரபன்மன் அவர்கள்மேல் சீறிச் சினமுடன் கூறுவான். 52

புல்லிய மகபதி புணர்த்த அச்செயல், ஒல்லுவ தென்றதற் குள்ள மாகிநீர்
எல்லிரு மனமகிழ்ந் திருத்திர் என்னொடுஞ், சொல்லிய வந்திலிரியாண்டுந் துன்னினீர்.

அற்பனான அந்த இந்திரன் உண்டுபண்ணிய சூழ்ச்சியான இந்தச் செயல் தகுதியுடையது என நீங்கள் நினைந்து அதற்குச் சம்மதம் கொண்டீர் போலும்; எல்லாரும் நீங்கள் மனமகிழ்ந்து இருப்பீர்கள்; என்னோடு இதைப்பற்றி ஒரு வார்த்தை யாகிலும சொல்ல வரவில்லை; ஆனல் எங்கும் நீங்கள் இருந்தீர்கள். 53

நிரந்தரம் நம்பணி நெறியின் நின்றுநீர், இருந்ததிற் பயனெவன் இருக்கலா மையால்
வருந்தவ றென்சுரர் மருங்குற் றீரெனு, அருந்தளை இட்டனன் அவர்கள் தம்மையும்.

நிற்றலும் எமது பணியான நெறியில் நீங்கள் இருத்தலாலே என்ன பயன்; அல்லது நீங்கள் எனது ஏவலில் நிற்காமல் போனதால் ஆகிய தவறு என்ன; நீங்கள் தேவர் பக்கமாகியே இருக்கின்றீர்கள் என்று கொடிய சிறையில் வைத்தான் சூரபன்மன் வருடம் பருவம் மாதம் முதலியவற்றின் அதிதெய்வங்களை. 54

தூவலி கெழுவிய சூரன் பின்சிலு, ஏவலர் தங்களை விளித்திட் டிப்புவி
காவலர் தமையெலாங் கடிது வம்மெனக், கூவுதிர் தம்மெனக் கூறித் தூண்டினன்.

பெருமை பொருந்திய வலியுடைய சூரன் பின்னர் சில ஏவலாளரை அழைத்திட்டு; இப்பூமியைக் காத்திருப்பாரை எல்லாம் விரைவில் வருவீராக என அழையுங்கள் என தூதுவரிடம கூறி அதைச் செய்யுமாறு தூதுவரைச் செலுத்தினன். 55

தூண்டலும் அளவைதீர் தூத ரோடியே, ஈண்டிய காவலர் இனத்தை மாநிலந்
தேண்டினர் பற்றியே சென்று வென்றிகொள், ஆண்டகை இறைவன தவையின் உய்ப்பவே.

அவ்வாறு தூண்டுதலும் அளவு கடந்த தூதுவர் ஓடிச் சென்று எங்கும் பரந்திருக்கின்ற காவலளர் இனத்தை இப்பூமி முழுவதும் தேடிக்கண்டு பிடித்துக் கொண்டு சென்று ஆண்டகைமையுடைய தங்கட்கு அரசனை சூரபன்மன் சபையின் முன்பாக அவர்களை விடுத்தலும், 56

ஆக்கையில் வியர்புற அச்சம் நாணுயிர், தாக்குற நனியுளந் தளரக் கைகொழுங்
காக்குநர் தொகுதியைக் காவல் மன்னவன். நோக்கினன் வெகுண்டிது நுவறல் மேயினன்.

அந்த சூரனின் காவலர்கள் யாவரும் தமது மேனி வியர்வை கொள்ள, பயமும், வெட்கமும் ஒருங்கே உயிரை வதைக்க; மிகவும் உள்ளம் தளர்ச்சியுற, கை தொழுது நிற்கின்ற காவலாளர் கூட்டத்தை அந்த அசுரர் குலக் காவல் அரசனை சூரபன்மன் பார்த்தான்; கோபங்கொண்டு இந்த வார்த்தையை சொல்லத் தொடங்கினன். 57

எளித்துற லின்றிநம் ஏவல் நீங்கியே, களித்திடு சசியொடுங் கடவுள் வாசவன்
ஒளித்தனன் இம்பரின் உம்பர் இல்லைநீர், அளித்தது சாலவும் அழகி தாமரோ.

எனது கட்டளைகட்கு கிழ்ப்படிந்து நடக்க முடியாமையால் ; களிப்பும் இன்பும் நிறைந்த இந்திராணியோடும் தெய்வத் தன்மை பொருந்திய இந்திரன் இந்தப் பூமியில் ஒளித்து நின்றான். அவன் தேவ உலகில் ஒளித்திருக்கவில்லை இங்குதான்: அப்படி அவன் பூமியில் ஒளித்து இருப்ப நீர் பூமியைக் காத்தது மிகவும் அழகாயிருக்கின்றது. 58

குறித்திடு புரைமனக் கொண்ட லூர்பவன், நெறித்திகழ் ஆணையின் நின்ற தூதுவன்
மறித்திரு முகனுடை மங்கை தன்கரம், அறுத்தவண் இருந்தனன் அதுவுந் தேர்ந்திலீர்.

குறித்து ஒருவர்க்கு வஞ்சஞ் செய்யும் அற்ப மனமுடைய மேகங்களை வாகனமாக உடைய இந்திரனது கட்டளைகளை முறைப்படி கேட்டு நடக்கின்ற ஓர் ஏவலாளன்; சிறந்து விளங்கும் ஆட்டு முகமுடைய அசமுகியான இம்மங்கையின் கையொன்றினை வெட்டிவிட்டு இந்தப் பூமியில் அங்கே இருந்தனன். அதுவும் உங்கட்குத் தெரியவில்லை. 59

மறங்கிளர் தேறல்வாய் மடுத்து வைகலுங், கறங்குறு நிலையராய்க் கலங்கி னீர்கொலோ
உறங்கினி ரேகொலோ ஓம்பலீர் கொலோ, பிறங்குதொல் வளமையால் பித்துற்றீர்கொலோ.

கொடுமை கொண்ட கள்ளை நாள்தோறும் குடித்து வெறிமிகுந்து நீவிர் சுழன்று திரியும் நிலைமை உடையராய்க் கலங்கிப் போனீர்களோ; அல்லது காவல் செய்வோம் என்று படுத்து உறங்கி நீரோ, கடமையை செய்வதில்லை என விட்டுவிட்டீர்களோ, மேலோங்க நீர் பெற்றுக்கொண்ட செல்வங்களால் பெருமைப்பட்டு அதே பைத்தியமாய் விட்டீர்களோ? 60

ஒயுமென் பகைஞரோ டுறவுற் றீர்கொலோ, வாயவர் தங்களுக் கஞ்சி னீர்கொலோ
சேயிழை யாரிடைச் செருக்குற் றீர்கொலோ, நீயிர்கள் இருந்தென் நிலைமை யென்னவே.

அல்லது ஒய்ந்து அடங்கிப்போன எனது பகைவர்களுடன் உறவு கொண்டீர்களோ, அல்லது அவர்கட்குப் பயம் கொண்டீரோ. அல்லது பெண்கள் மயக்கிலே செருக்கி அவர்களைக் கூடுவதே எண்ணமாக இருந்தீர்களோ, நீஙகள் இது ஒன்றும் அறியாது இருந்த நிலைமை என்னுகும் என்றான். 61

எண்டரும் எந்தைநீ இசைத்த தன்மையிற்
கொண்டிலம் ஒன்றுமக் குவல யந்தனைப்
பண்டுதொட் டளிக்குதும் பகைஞர் யாரையுங்
கண்டிலங் கரந்துறை கதையுங் கேட்டிலம்.

இவை கேட்ட அசுரர் காவலர் சொல்வார்கள்; மாட்சிமை மிகுந்த எங்கள் அரசனே! நீர் சொல்லிய தன்மைகள் எது ஒன்றையும் நாங்கள் கொண்டிலம். முன்பு தொட்டே செப்பமாக இந்த உலகை நாம் காக்கின்றோம். எங்கள் பகைவரான தேவர்கள் யாரையும் கண்டிலம். அவர்கள் மறைந்திருக்கின்றார்கள் என்ற கதையும் கேட்டிலம். 62

தாயெனும் ஏழகத் தலையன் துன்முக
ஆயிழை யொடும்வரல் அதுவும் அன்னர்கை
போயதுந் தெரிந்திலம் புந்தி கொள்ளுதி
மாயமி தாகுமால் மன்ன என்னவே.

எங்கள்' தாயெனும்படியான ஆட்டுத் தலையளான அசமுகி; துன்முகி என்னும பெண்ணுடன் வந்துள்ளதுவும் அவர்களுடைய கை போன தன்மையும் தெரிந்திலம். இதை நன்ருக அரசே எண்ணிக் கொள்வீராக; இது எல்லாம் எமக்கு ஒரு மாய மாக இருக்கின்றது அரசே! என்று அசுர காவலர் சொல்லலும்; 63

மிடைதரு வெறுக்கையை மிசைந்து மால்கொளீ இப்
புடவியை யிடைதொறும் போற்றல் செய்திலீர்
இடையுற என்வயின் இனைய தோர்பழி
அடைவது மாயையாம் அழகிதே என்முன்.

சூரன் சொல்வான்; ஓகோ அப்படியா. பெருகி நிற்கின்ற எனது செல்வத் தை அனுபவித்து, அதனல் கண் விண் தெரியாது மயக்கம் கொண்டு இந்தப் பூமியை உரிய காலம் தோறும் நீங்கள் சரிவரக் காவல் செய்யவில்லை; இதனல் இடையில் என் தங்கையை ஓர் தேவதூதன் வெட்டினன் என்னும் அவமானம் என்னை அடை வது உமக்கு மாயம்போலிருக்கின்றதா? இது அழகாக இருக்கின்றது என்முன். 64

வேறு

ஒலிகெழும் உவரிப் புத்தேள் உள்ளுறை வடவைச் செந்தீத்
தொலைவுழி எழுவதேபோல் சூரனுட் சினமீக் கொள்ள
மலிகதிர் இருள்புக் கென்ன வாளுரீஇ மருங்கே தானைத்
தலைவர் நின்முரை ஏவித் தனித்தனி தண்டஞ் செய்வான்.

ஒலி எழுகின்ற சமுத்திரதேவனது உள்ளாக இருக்கும் வடவாமுசாக்கினி என் னும் நெருப்பு எல்லா உலகமும் அழிவுறும் காலத்து எழுகின்ற தன்மை போன்று சூரபன்மன் உள்ளத்தே தீமை தரும் சோபம் பெருகிட: உடனே பிரகாசம் மலிந்த சூரியக் கடவுள் இருள் கூட்டத்து சென்றதை ஒப்ப தனது வாளை உறையில் நின்றும் உருவி வெளி எடுத்து தன்பக்கராக நின்ற சேனுதிபதிகளை தூண்டி அவர்களைக் கொண்டு அங்கு கும்பிட்டு நின்ற ஒவ்வொரு அசுர காவலரையும் தனித்தனியாகத் தண்டனை செய்வித்தான். 65

சிற்சிலர் தமது நாவைச் செங்கையைச் சேதித் திட்டான்
சிற்சிலர் துண்டந் தன்னைச் செவிகளைக் களைதல் செய்தான்
சிற்சிலர் மருமந் தன்னைச் சிறுபுறத் தொடுகொய் வித்தான்
சிற்சிலர் தாளைத் தோளைச் சென்னியைச் சேதிப்பித்தான்.

எப்படியெனில் சிற்சில அசுர காவலருடைய நாக்கினை சிவந்த கையை வெட் டுவித்தான், சில சிலருடைய மூக்கை, காதுகளை வெட்டுவித்தான்; சிற்சிலருடைய நெஞ்சை புறமுதுகோடு வெட்டுவித்தான்; சிற்சில அசுரகாவலருடைய தோள்களை கால்களை, தலைகளையும் வெட்டுவித்தான் சூரபன்மன். 66

எறிதரு கழற்காற் சூரன் இத்திறம் பல்தண்டங்கள்
முறையினிற் செய்து சீய முழுமணித் தவிசில் தீர்ந்து
விறல்கெழும் இளையர் செல்ல விடைகொடுத் தயனை நோக்கி
மறைமுனி போதி யென்ன மற்றவன் இனைய சொற்முன்.

ஒலிக்கின்ற வீரக்கழலை காலில் அணிந்த சூரபன்மன் இத்தன்மையாக உருவிய தனது வாளால் காண்பித்து அசுர சேனுதிபதிகள் மூலமாக அசுர காவலர் யாரை யும் வெட்டி பல தண்டனைகளை முறையாகச் செய்த பிற்பாடு முழுவதும் முத்துக்க ளால் ஆக்கப்பெற்ற தனது சிம்மாசனத்தில் நின்றும் இறங்கி வலிமை கொண்ட தம்பிமார் போகுமாறு விடை கொடுத்து பின்னர் பிரமதேவரையும் நோக்கி வேத முனிவனே! நீரும் செல்லும்; எனலும் அதுவேளை பிரமதேவர் சொல்வார் 67

மன்னவர் மன்ன கேண்மோ வான்கதிர் உடுக்கள் ஏனோர்
இந்நில மடந்தை வேலைக் கிறையவர் யாரு மென்றும்
உன்னுடைப் பணியில் நிற்பர் உலகிவர் இன்றி யாகா
அன்னவர் பிழையுட் கொள்ளேல் அருஞ்சிறை விடுத்தி என்றான்.

அரசர்க்கரசனே கேட்பீராக; வானமார்க்கமாக செல்கின்ற சூரியன், நட்சத்தி ரங்கள்; இந்தப் பூமிதேவியின் கால வருடங்களுக்கு அதி தெய்வங்கள் ஆகிய எல்லா ரும் எஞ்ஞான்றும் உனது ஏவலின்படி ஒழுகுபவர், இவர்கள் இல்லாது உலகம் நடை பெறமாட்டாது. அவர்களுடைய பிழையினை நீ மனதில் கொள்ளாது அவர்களின் சிறையை நீக்கி விடுதலை செய்வாயாக; என்றார். 68

குறையிரந் தினைய கூறிக் கோகன தத்தோன் வேண்ட
நறையிருந் துலவு தாரோன் நன்றென இசைவு கொள்ளா
உறையிருந் திலங்கும் வாட்கை ஒற்றரை நோக்கி நந்தஞ்
சிறையிருந் தோரைத் தம்மின் என்றலுஞ் சென்றங் குய்த்தார்

வணக்கத்துடன் இரந்துகொண்டு இந்த வார்த்தைகளைச் சொல்லி பிரமதேவர் வேண்டுதல் புரிய; தேன் தங்கி வழிகின்ற மாலையணிந்த சூரபன்மன் அதற்கு நன்று என்று இசைவு கொண்டு, உறையில் இருந்தே ஒளிர்கின்ற வாளை உடைய தூதுவரை நோக்கி: எனது சிறையில் இருந்தோரை எல்லாம் அழையுங்கள் என்னலும், அதன் படி தூதுவர் அவர்களைக் கொண்டுவந்து சேர்த்தார் 69

வன்றளை உற்றோர் தம்மை மன்னவர் மன்னன் பாரா
என்றுநம் பணியில் நிற்பீர் இந்திர னொடுசேர் கல்லிர்
சென்றிடு நுங்கள் தொன்மை செய்திடவென்ன அன்னோர்
நன்றிது புரிதும் என்னா நயமொழி புகன்று போனார்.

கொடிய சிறையில் இருந்த சூரிய பகவான் முதல் யாவரையும் சூரபன்மன் பார்த்து, நீங்கள் என்றைக்கும் எனது ஏவல் பணியில் நிற்கவேண்டும் இந்திரனோடு சேரக் கூடாது, இதைத் தெரிந்துகொண்டு உங்கள் வழமையான கடமைகளைச் செய் யச் சென்றிடுவீர் என்றலும்; அவர்கள் யாவரும் அரசே; நன்று நாங்கள் அதன்படி செய்வோம் என்று நயமான பல வார்த்தைகளையும் சொல்லி வணங்கிப் போயினர் 70

போதலுங் கமலத் தோற்கும் புதல்வர்க்கும் அமைச்சர் யார்க்கும்
மேதகு முனிவர் யார்க்கும் வியன்படைத் தலைமை யோர்க்கும்
போதலை உதவிச் சூரன் உறையுளிற் புகுந்தான் முன்செல்
ஆதவன் பகைஞன் செய்த செயலினை அறைத லுற்றேன்.

அவர்கள் போய்விடுதலும் தாமரை மலரில் இருக்கும் பிரமதேவற்கும் தனது மைந்தர்கட்கும் மந்திரிமார் யாவர்க்கும் மேலான சேனுதிபதிகளுக்கும் செல்வதற்கு விடை கொடுத்து சூரபன்மன் தனது இருக்கையில் சென்றான். இப்பால் எமது புண் ணிய சொரூபனே, பன்னிருகையா தேவரீருக்கு சூரியன் பகைவனை பானுகோபன் செய்த செயல்களை மொழிந்திடுகின்றேன். 71

சூரன் தண்டஞ்செய் படலம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் — 1,788.

899

# 43. அமரர் சிறைபுகு படலம்

எழிலிகள் மொய்த்ததன் இருக்கை போகிய
மழவுறு சூர்மகன் மாறி லாதபேர்
அழகினை மெய்கொள அணிந்து தொல்படை
விழுமிய கொண்டனன் மிலைச்சித் தும்பையே.

முன்பு மேகங்கள் மொய்த்திருக்கும் உயர்வுடைய தனது மாளிகையில் சென்று இளமை பொருந்திய அழகுடைய பானுகோபன் மாறுபாடு ஏதும் இல்லாத பெரிய அழகினைத் தரும் ஆபரண வகைகளை எடுத்து அணிந்துகொண்டு பயிற்சி மிகுந்த மிகவும் மேலான படைக்கலங்களைக் கையில் எடுத்துக்கொண்டு தும்பை மாலையையும் முடிமீது சூடிக்கொண்டு போர்க்கோலமுடன் புறப்பட்டு. 1

இருவகைப் பத்துநூ றிவுளி பூண்டிடும்
ஒருதனித் தேர்தனை ஒல்லை ஊர்ந்துராய்த்
திருமுதற் கடைதனிற் செல்லும் எல்லையில்
விரைவினில் சுற்றின அனிக வெள்ளமே.

இரண்டாயிரம் குதிரைகள் பூட்டப்பெற்ற தனியான சிறப்புடைய ஒரு தேரின்மீது ஏறி, அதனிற் சென்று விரைவுடன் செல்வமோங்கிய தனது புறங்கடைவாய்தலில் உள்ள கோபுரங்களில் வரும்பொழுது அதுகண்டு விரைவுடனாக வந்த அசுரச் சேனையானவை வெள்ளக் கணக்கில் அவனைச் சூழ்ந்து கொண்டன. 2

நிரைத்தெழு தானவர் நீத்தம் ஆயிரம்
பரித்தொகை அன்னதே பாதி தேர்கரி
உரைத்தஅத் தானையோ டொல்லை ஏகினன்
திருத்தகும் இரவியைச் சிறையில் வீட்டினன்.

நிரைநிரையாக வந்து கூடிய அசுரர்களின் தொகை ஆயிரவெள்ளமும்; குதிரைக் கூட்டமும் ஆயிரவெள்ளம்; தோர்த்தொகை ஐந்நூறு வெள்ளம் யானைப்படையின் தொகை ஐந்நூறு வெள்ளம் என, மூவாயிரம் வெள்ளம் என்று சொல்லப்பெற்ற அத்தொகையோடும் போயினன்; யாரெனில் சிறப்பு உடைய சூரிய பகவானை முன்னர் சிறையில் வைத்த பானுகோபன் என்பவன்; 3

கிளர்ந்தன தூளிகள் கெழீஇய வீரர்தோள்
வளர்ந்தன அவரணி மாலை யிற்படீஇ
உளர்ந்தன வண்டினம் உம்பர் தம்மனந்
தளர்ந்தன நெளிந்தனன் தரிக்குஞ் சேடனே.

இவ்வண்ணம் அவன் செல்லுங்கால் புழுதிகள் எழுந்தன; போருக்குச் செல்லும் வீரர்களது தோள்கள் போர் மகிழ்வால் வளர்ந்தன; அவர்கள் அணிந்த மாலையில் வண்டினங்கள் படிந்தும் எழுந்தும் இரைந்தன; இது கண்ட தேவர்கள் தங்கள் மனம் தளர்ந்தனர்; இப்பூமியைத் தாங்கும் ஆதிசேடனும் சகிக்கொணுது நெளிந்தனன். 4

பொள்ளென ஆண்டெழு பூழி பாரினுந்
தள்ளரும் விசும்பினும் நிரந்த தானவர்
எள்ளுறும் அமரர்தம் மிருக்கை நாடிய
உள்ளொடு பவத்துகள் ஒருங்கு சென்றபோல்.

விரைவுடன் அங்கு எழுந்த புழுதி பூமியிலும் நீக்கரிய வானினும் பரந்து நிரந்தன; எப்படியெனில், அசுரரால் இகழப்படுகின்ற தேவர்கள் இருகின்ற இருப்பிடத்தை அடைய விரும்பிய உள்ளத்துடன்; அத்தேவர் முன் செய்து கொண்ட பாவமானதுகள் அநுபவிக்கும் பொருட்டாக இப்பொழுது அவர்களைச் சேர்கின்றது என்பதுபோன்று புழுதி தேவ உலகை மறைத்தது. 5

வேறு

ஏறிய பூழி நாப்பண் ஈண்டிய இவுளி வாயில்
வீறுகொள் களிற்றுக் கையின் விலாழியுங் கரிக்க போலத்
தூறிய கடமும் ஒன்ருய் ஒழுகுதன் மழைசூழ் குன்றின்
ஆறுகள் இழிந்து வையத் தடைவது போலு மன்றே.

மேல் எழுந்த புழுதி நடுவில் வருகின்ற குதிரையின் வாயிலும் வீறு பொருந்திய யானையின் துதிக்கையிலும் நின்று ஊறி எழுகின்ற குதிரை வாய் நீரும், யானையின் கன்னத்தில் நின்றும் வரும் மத நீரும் வடிந்து செல்கின்ற காட்சி மேகங்கள் சூழ்ந்திருக்கும் மலையில் நின்றும் வழிந்தோடும் அருவியாறுகள் பூமியை வந்து அடைவது போன்றிருந்தது. 6

பானிற முதல வாய பல்வகை வண்ணத் துள்ள
கானிமிர் துவசக் காடுங் கவிகையின் கானு மொய்த்த
சேனமுங் கழுகும் ஏனைச் சிறைகெழு புள்ளும் வெம்போர்
ஊனுகர் பொருட்டுத் தாமும் உம்பருற் றிடுவ தேபோல்.

பால்நிறம் போன்று விளங்கும் பலவகை நிறமுடைய நெருங்கிய காடு போன்ற கொடிகளின் செறிவும்; குடைகளின் பெருக்கமும் ஒன்றினை ஒன்றுசேர நெருங்கிச் செல்வன எது போலெனில், பருந்தும் கழுகும் காகமும் இன்னமும் ஏனைய சிறகுடைய பட்சிகளுமாயன கொடிய போர்க்களத்து ஊன் விரும்பி உண்ணும் பொருட்டாகத் தாமும் வானுலகில் செல்வதுபோன்றிருந்தது. 7

மண்ணுறு துகளின் மாலை மகேந்திர மூதூர் முற்றுந்
துண்ணென மறைத்த லோடுந் துளங்கியே சூரற் கஞ்சி
விண்ணிடை மதிபல் கோடி மேவல்போல் வெளியே செய்ய
தண்ணிழற் கவிகை ஈட்டந் தலைத்தலை ஈண்டிற் றன்றே.

சேனை வேகமுறச் செல்லலால் மண்ணில் நின்றும் எழுந்த புழுதி வரிசைகள் வீரமகேந்திரபுரத்தை முற்றிலும் விரைவுடன் மறைத்து இருளாக்கலோடும், அதைக்கண்டு நடுக்கம்கொண்டு சூரபன்மன் ஆணைக்குப் பயந்து வானில் உள்ள சந்திரர்கள் பல கோடியர் இங்கு புழுதியில் வந்து தமது ஒளியால் இருள்நீக்க முற்பட்டு நிற்பது போன்று வெள்ளை நிறமுடையதும் சிவந்த நிறமுடையதுமான குளிர்ந்த நிழல்தரும் குடைகள் எங்கும் பரந்து காணப்படுவன; 8

முறையிது நிகழ மைந்தன் முதியமா நகரம் நீங்கி
அறைகடல் அகழி தாவி அவனியின் எல்லை யேகிச்
சிறைவரு துன்மு கத்துத் தெரிவையை நோக்கி நுங்கை
எறிசுடர் வாளால் இற்ற தெவ்விடை இயம்பு கென்ருன்.

இப்படியான முறைகள் நிகழ; பானுகோபன் முதியதான வீரமகேந்திரபுரத்தைக் கடந்து; சத்தமிகும் அலைகளையுடைய கடலைத்தாண்டி பூமியின் எல்லையில் சென்று பக்கராக வந்த துன்முகி என்னும் பெண்ணைப் பார்த்து; உங்களுடைய கை ஒளிகொண்ட வாளினல் வெட்டுண்டது எவ்விடத்தில் சொல்லுவாயாக என்ருன். 9

என்ன லுங் குமர கேண்மோ எங்கரந் துணித்தோர் வீரன்
மன்னினன் சசியும் உற்ருள் மதுமலர்ப் பொதும்ப ரொன்றில்
அன்னதும் இஃதே என்ருேர் அணிவிரல் சுட்டிக் காட்டப்
பன்னிரு பெயர்ச்சீ காழிப் பழுமரக் காவிற் சேர்ந்தான்.

என்று பனுகோபன் சொல்லலும்; அரசகுமாரனே! கேட்பீராக எங்களது கையை வெட்டி ஒரு வீரன் இருந்தனன், இந்திராணியும் இருந்தனள் அழகிய பூக்கள் நிரம்பிய ஒரு சோலையிடத்தாக; அந்தச் சோலையும் இதுதான் என்று துன்முகி தனது அணிவிரலால் சுட்டிக் காண்பித்தலும்; பானுகோபன் பன்னிருபெயர்கொண்ட சீகாழியின் பூஞ்சோலை வனத்துச் சேர்ந்தான். 10

தேசுறும் இரவி தன்னைச் செயிர்த்திடு சிறுவன் தானைத்
தூசிமுன் சென்று காவைத் தொலைத்துவெள் ளிடைய தாக்க
வாசவன் மனையைக் கூர்வாள் வயவனை நாடிக் காணுன்
காசினி யாண்டுந் தேர்ந்து காமர்பொன் னுலகிற் போனுன்.

தேசுடன் விளங்கிய சூரியபகவானைக் கோபித்துச் சிறை வைத்த பானுகோபனுடைய தூசிப்படை முன்னுகச் சென்று, அந்தப் பூஞ்சோலையைத் தொலைத்து வெள்ளிடையாகச் செய்து விடுதலும் அதுவேளை பானுகோபன் இந்திரன் மனைவி இந்திராணியையோ அன்றி கூரிய வாளுடையவீரனையோ எங்கும் பார்த்துத் தேடியும் காணுமல் பின்னும் பூமி எங்கும் தேடியும் காணுது அப்பால் அழகிய பொன் உலகில் போயிருந்தான். 11

## வேறு

அந்நிலை அவுணர்கள் அனிகம் யாவையும்
முன்னுற ஏகியே மொய்ப்ப ஆங்கவர்
மெய்ந்நிறை மணிவெயில் விரிந்து சூழ்தலாற்
பொன்னகர் வேறெரர்பொன் னகரம் போன்றதே.

அந்நிலையில் அசுரர்களது சேனைகள் எல்லாம் முன்னாகச் சென்று தேவ உலகை மொய்த்துச் சூழ்தலும்; அவ்வாறு சூழ்ந்துள்ள அசுரர்களது மேனிமேல் அணிந்துள்ள இரத்தின ஆபரணங்களின் ஒளி விரிந்து பரந்து பொன்னுலகிற் பட்டு விளங்குதலால் பொன்நகரான தேவஉலகம், வேறொரு இரத்தின உலகம் போன்று காட்சி கொண்டது. 12

எழுந்திடு முனிவினர் இமைக்கும் வெவ்வழல்
வழிந்திடு கண்ணினர் மடித்த வாயினர்
கழிந்திடு திறலினர் ககன வாணர்கள்
அழிந்திடும் ஆர்ப்பினர் அவுணர் எய்தினர்.

தேவஉலகை அடைந்த அசுரர்கள் கோபம் எழுபவராய் கொடிய நெருப்புப் பொறிகளைக் கண்ணிலிருந்து சிந்துகின்றவர்களாய் வாயினை மடித்தவராய்; தங்கட்கு முன் பணிசெய்து வலி கெட்டு நின்ற தேவர்கள் நடுக்கம் கொண்டு மயங்கும்படியான கர்ச்சனை உடையவராய்; வந்து சேர்ந்து கொண்டார்கள். 13

மண்டல மேமுதல் வகுத்த வான்கதி
கொண்டிடு கந்துகக் குழுவின் மாலைகள்
விண்டொடர் செலவினில் விரவு பூழியால்
அண்டமும் புவியென ஐயம் ஆக்கிய.

மண்டலம் வட்டணை எனச் சொல்லப்பெற்ற கூடிய வேகம் கொண்ட குதிரைக் கூட்டங்களின் அணியான வரிசைகள் வானத்தில் பாய்ந்து செல்லும் போது உண்டாக்கிக்கொண்டு சென்ற புழுதியால் பொன்உலகை மூடி, பொன் உலகும் மண்ணுலகோ எனச் சந்தேகம் கொள்ளும்படி செய்தது. 14

இலகிய பொன்னகர் எல்லை எங்கணும்
அலைதரு மதநதி யாக்கி யாயிடை
நிலவிய கங்கைமா நீத்தம் யாவுமுண்
டுலவுத லுற்றன ஒருத்தல் யானையே.

அங்கு சென்ற ஆண்யானைகள் பிரகாசமுடைய பொன் உலகின் எல்லை எங்கணும் தாங்கள் சொரிந்த மதநீரினால், அலைகள் தோன்றும்படியான மதநீர் ஆறாக்கி பெருக்செய்து, அந்தத் தேவஉலகில் நிலவுகின்ற பெரிய கங்கை நதியான தீர்த்தம் முழுவதையும் தாங்கள் உண்டு உலாவிக்கொண்டு நின்றன. 15

வெங்கரி சொரிமதம் விரும்பும் வண்டினங்
கொங்கிவர் தருமலர்க் கூந்தல் வாசத்தால்
அங்குள மாதர்மேல் அணுகி வையக
மங்கையர் கொல்லென மால்செய் கின்றவே.

கொடிய யானைகள் சொரிகின்ற மதநீரை உண்ண விரும்பும் வண்டினங்கள் நல்ல வாசனை உடைய பூக்களை அணிந்த தேவப்பெண்களது கூந்தலின் வாசத்தினால் அங்குள்ள தேவப்பெண்கள் மேலாக வண்டினங்கள் சென்று இவர்கள் பூமியிலுள்ள பெண்களோ என்று ஐயப்பாட்டால் மயக்கம் கொண்டு நிற்றன. 16

அற்றமில் வலியரைச் சிறிய ராயினோர்
பற்றிடின் மேல்நெறிப் பால ராவரால்
வெற்றிகொள் அவுணர் கோன்வேழத் தின்குழாஞ்
சுற்றிய பறவையுந் துறக்கம் புக்கவே.

குற்றமில்லாத வலியுடையவரை சிறியராயுள்ளளோர் பற்றிக்கொண்டால் மேலான நெறியின்கண் சேர்க்கப்படுவார்கள்; இது இங்கே உண்மையாகின்றது ஏனெனில் வெற்றியினைக் கொள்கின்ற பானுகோபனின் யானைக்கூட்டத்தைச் சூழ்ந்துகொண்ட பறவைக் கூட்டங்களும் வானுலகில் சென்றுள்ளன. பறவைகள் தாமாகப் பறந்து செல்லமுடியாத இடத்தை யானைகளைச் சூழ்ந்து பற்றியதால் சென்றடைந்தன. 17

மன்னவன் ஓடினன் மைந்த னேயுளன்
முன்னுறு பகையினை முடித்தும் யாமென
இந்நில வரையெலாம் ஏகிச் சூழ்ந்தபோற்
பொன்னகர் வளைந்தன பொலம்பொற் றேர்களே.

எங்களுக்குப் பகையான இந்திரதேவன் ஓடிவிட்டான்; மகன் சயந்தனே அங்கிருக்கின்றான். ஆகவே, முன்னுள்ள எங்களது பகையை இன்றோடு முடித்திடுவம் யாங்கள் என்று இப்பூமியில் உள்ள மலைகள் எல்லாம் சென்று சூழ்ந்தது போன்று பொன் உலகை நான்கு புறமும் சென்று வளைந்து கொண்டன மணிகள் தூக்கிய பொன்னன தேர்கள். 18

விடர்நெறி ஒழுகிய வெய்யர் மேலையோர்
இடமுறு மகளிரை எய்திப் பற்றல்போற்
கடிகமழ் தருவினைக் கலந்து சுற்றிய
கொடியினை ஈர்த்தன கொடியின் கானமே.

கெட்டநெறியில் ஒழுகிய கொடியவர்; பெரியோருடைய பெண்களை வலிதில் பற்றிப் பிடித்தல்போன்று வாசங் கமழுகின்ற மலர்தரும் கற்பகமரங்களைக் கலந்து சுற்றி நின்ற பூங்கொடிகளைக் கொழுவி இழுத்தன அசுரசோனைகள் கையில் பிடித்துவந்த அளவு கடந்த கொடிகள். 19

வேறு

செந்தோ டவிழுந் தாரான்இச்
 செய்கை நிகழச் சேண்புகலும்
அந்தோ என்று பதைபதையா
 அலமந் தேங்கி அறிவழிந்து
வந்தோன் பானுப் பகைவனென
 மகவான் செம்ம லொடுவானோர்
நொந்தோ டினர்போய் உரைத்திடலும்
 அனையோன் இனைய நுவல்கின்றான்.

செந்நிறம் கொண்ட இதழ் விரியும் மாலையணிந்த பானுகோபன் இத் தகைய நிலைதோன்றும்படி வான உலகில் போதலும், அதுகண்டு ஐயோ ஐயோ எனப் பதைபதைத்து அலமந்து ஏக்கமுற்று அறிவு இழந்து வந்துவிட்டான் பானுகோபன் என்று சொல்லிக்கொண்டு; இந்திரன் மைந்தனை சயந்தனிடத்துத் தேவர்கள் மனவேதனையுடன் ஓடிச்சென்று சொல்லுதலும்; சயந்தன் அதுகேட்டு இதனைச் சொல்வான். 20

எந்தை யாகுங் குரவன்இலை
 இமையோர் குழுவிற் பலரில்லை
தந்தை எம்மோ யிங்கில்லை
 தமியேன் நும்மோ டிருந்தேனால்
அந்த அசுரன் சென்றமையும்
 அல்லல் புரியுந் திறம்போலும்
முந்தை விதியை அறிவேனோ
 என்னோ இன்று முடிந்திடுமே.

எனது தந்தைபோன்ற குரு வியாழபகவானும் இங்கில்லை; தேவர் கூட் டத்தில் பலர் இல்லை; தந்தை இந்திரனும் எனது தாயும் இங்கில்லை; தனியனேன உம்மோடு இங்கிருந்தேன்; அந்த அசுரன் இங்கு வந்தமையும் ஏதோ துயரம் செய்யும் நிலைபோலும்; இப்படி ஆகவேண்டும் என்னும் முந்திய ஏற்பாடான விதியை நான் அறிவேனோ; என்னதான் இன்று நிகழ்ந்து முடிவாகுமோ? 21

பாடின் றோங்கு திருநீங்கப்
 பயந்தோர் கரக்கப் பழிவேலை
வீடின் றாகத் தமர்பரிய
 வெஞ்சூர் முதல்வன் பணிபோற்றி
ஈடின் றாயும் இப்பகல்கா
 றிந்த நகரத் திருந்தேனாற்
கேடின் றாகும் என்செய்கேன்
 கிளத்தீர் புரைதீர் உளத்தீரே.

கெடுதல் இன்றிப் பெருகும் எமது செல்வம் நீங்க; பெற்றெடுத்த தாய் தந்தையர் மறைந்தோடிவிட; துயரமான பழியெனும் கடலில் நின்றும் கரை சேர முடியாதுபோக; எனது சுற்றத்தவர் பதைப்புற்று வருந்த; இந்த அசுரர் தலைவனான இந்தக் கொடிய சூரபன்மனது ஏவற் பணிகளைச் செய்துகொண்டு பெருமையற்றவர்களாய் இந்தநாள் வரையும் இந்த நகரத்து இருந்தோம்; அதற்கும் இன்றோடு கேடு ஆகிவிட்டது; நான் என் செய்கேன் சொல்லுங்கள் குற்றம் நீங்கிய உள்ளமுடைய தேவர்களே! 22

தாயும் பயந்த தொல்லோனுந்
தமரா குற்ற அமரர்களும்
பாயுங் கடல்சூழ் நிலவரைப்பிற்
கரந்தார் அதனைப் பல்லவுணர்
ஆயும் படியே திரிந்தனரால்
அற்றும் எல்லை அளியேமும்
யோயெங் குறைவோம் நமையெல்லாம்
போற்றும் படிக்கோர் புகலுண்டோ.

எனது தாயும் பெற்ற பழைய தந்தை இந்திரனும் சுற்றத்தவரான தேவர்களும்; பெருகுகின்ற கடலாற் சூழப்பெற்ற பூமியின் இடத்து மறைந்து சென்றனர்; அதனைப் பல அசுரர்கள் கண்டு கொள்ளுமாறு இன்னமும் தேடித் திரிந்தனர்; அப்படியான சமயத்தில் நாமும்போய் எங்கு அவர்களைப்போல் மறைந்திருக்கமுடியும்; நம்மையெல்லாம் காத்துக்கொள்ளும்படியான புகல் இடம் எங்காதல் உண்டோ. 23

போவ தில்லை யாண்டும்இனிப்
புலம்பு மாறும் இல்லையதின்
ஆவ தில்லை வருவதெல்லாம்
அடையும் அன்றி அகலுவதோ
ஈவ தில்லை யவர்க்குவெரிந்
இறைஞ்சிப் புகழ்வ திலையெதிர்ந்து
சாவ தல்லால் உய்ந்திடுதல்
இரண்டே உறுதி தமியேற்கே.

ஆகவே, எங்காகுதல் மறைந்தோடிப் போவதில்லை; இனிப் புலம்பி அழுதலும் இல்லை; அழுவதால் ஆவது ஒன்றும் இல்லை; வருவதெல்லாம் வந்து அடையும் அல்லாது அகன்று போகப்போகின்றதோ; அவர்க்கு விட்டுக்கொடுப்பது இல்லை; பயந்து சென்று அவர்களை வணங்கிப் புகழ்வதில்லை; ஒன்றில் சாவது அல்லது வெற்றியுடன் வாழ்வது இரண்டும்தான் எனக்கு உறுதியாவது. 24

அஞ்சேன் மன்னே அவர்க்கினியான்
ஆவி பொருளாக் கொள்ளாதார்
நஞ்சே பொருவுந் தீங்குறினும்
நடுக்கஞ் செய்யார் இடர்ப்படியார்

தஞ்சே வகத்தின் நெறிபிழையார்
அஃதே போலத் தானவர்கோன்
வெஞ்சே னைகளேற் றெதிர்செல்வேன்
வெல்வேன் பலரைக் கொல்வேனே.

ஆகையால் நான் இனி அவர்க்கு அஞ்சமாட்டேன்; தனது உயிரை ஒரு பொருளாகக் கருதாதவர்; தனக்கு நஞ்சை ஒத்த தீங்கு நேரிட்டாலும் நடுங்க மாட்டார்கள்; தாங்கள் மேற்கொண்ட கடமையின் நெறியில் தவறார்கள்; அதே போல அசுரர் தலைவனது கொடிய சேனையின் முன்பு எதிர் ஏற்றுச் செல்வேன்; வெற்றி கொள்வேன் பலரைக் கொல்வேன். 25

செருவீ ரமுடன் அவர்ப்பொருவான்
செல்வன் நீரும் எற்போற்றி
வருவீர் வம்மின் வல்லாதீர்
வல்லை இன்னே வழிக்கொண்மின்
ஒருவீ ரன்றி எல்லீரும்
உள்ளத் தஞ்சி ஒருவிஅழி
தருவீரேனும் நன்றிறையுந்
தளரேன் துணிந்த தமியேனே.

போருக்கேற்ற வீரமுடன் அவருடன் போர் புரியுமாறு நான் செல்வேன் என்னைப் பேணிக்கொண்டு வரக்கூடியவரெல்லாம் வாருங்கள் வரமுடியாதவர்கள் எல்லாம் இப்பொழுதே உங்கள்பாட்டில் சென்றுவிடுங்கள்; நீங்கள் ஒருவரன்றி எல்லீரும் உள்ளத்தால் பயந்து இவ்விடம்விட்டு ஓடி விட்டாலும் நன்று; இறையும் அதனால் தளர்வடையேன் துணிவுகொண்ட தனியனான நான் ஒருவன்; 26

என்று சயந்தன் மொழிந்திடலும்
இமையோர் கேளா இடருழவா
உன்றன் உள்ளம் ஈதாயின்
எமக்கு வேறோர் உணர்வுண்டோ
வென்றி அவுணர் பணிபுரிந்து
வீடா விழுமந் துய்ப்பதினும்
பொன்றி விடுதல் இனிதம்மா
எழுதி கடிதே போர்க்கென்றார்.

என்று இவ்வாறு சயந்தன் சொல்லிவிடலும் தேவர்கள் அதுகேட்டு இடர் கொண்டு உழன்று; அரசகுமாரனே! உன்னுடைய சித்தம் இப்படியாயின் எமக்கு வேறு நினைவு உண்டா; வெற்றி அடைகின்ற அசுரர்கள் பணியினைச் செய்து நீக்கமுடியாத துயரத்தை அநுபவிப்பதிலும் இறந்துபோய் விடுதல் இனிது; அம்மவோ! விரைவுடன் போருக்கு எழுவாயாக என்றார்கள். 27

வேறு

சயந்தனது கேட்டமரர் தங்குழுவை நோக்கித்
துயர்ந்தநும சிந்தனை துணிந்ததுகொல் என்று
வியந்துகன கத்தவிசின் மேவுதல்வி டாத்தன்
கயந்தனை நினைப்பஅது துணர்ந்தது கருத்தில்.

சயந்தன் அந்த வார்த்தை கேட்டுத் தேவர் கூட்டத்தை நோக்கித் துயர் கொண்டு நடுங்கிய உமது மனம் துணிபு கொண்டதுபோலும் என்று வியந்து; பொன் மயமான சிம்மாசனத்தில் தான் இருப்பதை நீங்கி தனது யானையை நினைந்தான்; அந்த யானையும் சயந்தன் தன்னை எண்ணியதை தனது கருத்தில் தெரிந்து கொண்டது. 28

கல்கெழு நுதற்சிறிய கண்சுளகு கன்னம்
மல்கிய கறைப்பத மருப்பிணை இரட்டை
மெல்கிய புழைக்கரம் வெளிற்றுடலின் வேழம்
பில்கிய மதத்தொடு பெயர்ந்துளதை அன்றே.

மலைபோன்று விளங்கும் நெற்றியும்; சிறிய கண்ணும், சுளகு போன்ற காதும், பெருத்த உரல் போன்ற காலும், நான்கு தந்தங்களும், மிருதுவான அழகிய துதிக்கையும், வெண்மை நிறமான மேனியும் கொண்ட ஐராவத யானை பெருகுகின்ற மதத்துடன் அங்கு சயந்தன் முன்பு வந்தது. 29

இந்திர குமாரனை இறைஞ்சி எதிராகி
வந்திட அதன்பிடரில் வல்லைதனில் ஏறி
உந்தினன் நடாத்திஅயல் உம்பர்புறம் மொய்ப்பப்
புந்திகெழு வேர்விளைடு பொள்ளென அகன்றான்.

இந்திர குமாரன் சயந்தனை; யானை வணங்கியே முன் வந்து நின்றிட அது வேளை அதன் பிடரியில் விரைவுடன் சயந்தன் ஏறி; யானையை வேகமுடன் செலுத்திக் கொண்டு தேவர்கள் புறத்திலே மொய்த்துவர மனதிற் தோன்றிய கோபத்துடன் திடீரென அசுரசேனை முன் சென்றான். 30

போகிதரு காளைபசும் பொற்புயல் நிறத்தான்
ஆகம்வெளி றுரும்அயி ராவதமி சைக்கண்
வாகுபெற மேவுவது மன்னுநெடு மால்பாற்
சீகரஅளக் கரிடை செவ்விதிருந் தன்ன.

போகங்களாகிய திருவுடைய இந்திரன் மைந்தன் சயந்தன் பசுமையான மேகநிறமுடைய அழகிய மேனியுடன் வெண்மையான உடலமுடைய பெரிய ஐராவத யானைமீது வெற்றி பெறும் நோக்கமுடன் மேவுகின்ற தன்மையைப் பார்த்தால் நீல நிறமுடைய விஷ்ணுமூர்த்தி பாற்கடலில் வீற்றிருத்தல் போலும். 31

பாங்கருறு வானவர்கள் பல்படையும் ஏந்தி
வீங்குதுயர் கொண்டகல வேறொரிடை காணா
நீங்கல்வசை என்பது நினைந்துதுணி வாகி
ஆங்கவ னொடேகினர்கள் அச்சமில ரேபோல்.

பக்கராக வருகின்ற தேவர்கள் பலவிதமான படைகளையும் கைகளில் ஏந்திக்கொண்டு; பெருகுகின்ற தமது துன்பத்தை நினைந்துகொண்டு போர்க்குப் போகாமல் அகன்று போவதற்கு வேறோர் இடமும் காணாதவாரகி; அப்படித் தப்பி வேறோர் இடையாகப் போவது வசையென எண்ணிப் போர்க்களம் போகத்துணிந்து அவ்விடத்துச் சயந்தனோடும் சென்றார்கள்; துயரத்துடன் சென்றாலும் தாங்கள் ஏதும் பயமில்லாதவர் போலக் காட்டிக்கொண்டு. 32

பெருந்தவள மெய்க்கரி பிளிற்றொலியும் உள்ளத்
தரந்தையுறு வானவர்தம் ஆர்ப்பொலியும் ஆற்றப்
பரந்தபகு வாய்முரசு பண்ணொலியும் ஒன்றாய்
வருந்தவறெ னக்ககனம் வாய்விடுதல் போலும்.

சயந்தன் ஏறிவரும் பெரிய ஐராவத யானையின் பிளிற்று ஓசையும்; உள்ளத்தே கவலை உற்ற தேவர்களது ஆரவாரத்தின் ஓசையும் மிகவும் பரந்த வாயுடைய முரசப் பறையின் பண் நிறைந்த ஓசையும் எல்லாம் ஒன்றாகி இரைகின்ற தன்மை; தேவர்களே வருகின்றது உங்கட்குப் பெரியதோர் தவறு என்று வானம் வாய்விட்டுச் சொல்வதுபோலும் இருந்தது. 33

ஊழிவரு கால்அனைய உம்பர்படை செல்லப்
பூழிநிமிர்ந் தேகின பொலத்துயர் நிலத்த
வாழிகொள் சுவர்க்கமெரி வௌவுநமை என்னாக்
கேழிலுயர் மேனிலை கிளர்ந்தெழுதல் போலும்.

ஊழியான முடிவுகாலத்துத் தோன்றுகின்ற சூறாவளிக்காற்றைப் போல தேவர்கள் சேனை செல்லும்பொழுது; புழுதிகள் பொன்மயமான நிலத்தில் நின்றும் கிளம்பிப்போம் தன்மை வாழ்வதற்கு ஏற்ற இடமான சுவர்க்க லோகமானது நெருப்புப் பற்றிச் சாம்பராகும் என எண்ணி முன்னமே ஒப்பிலாத உயர்ந்த நிலைக்கு எழுந்து போதல்போன்றது. 34

முறையிது நிகழ்ந்திட முரட்களிறு மேலான்
வறியமக வான்மதலை மாநகரம் நீங்கி
எறிகதிர் அருக்கனை இருஞ்சிறையில் விட்டுஞ்
சிறுவன்அனி கத்தினெதிர் சென்றுபுக லோடும்.

இத் தன்மைகள் நிகழ்ந்திட வலிமை உடைய ஐராவத யானையின் மேலாக எழுந்துவரும் வறியவனான இந்திரன் மகன் சயந்தன் தனது நகரத்தைக் கடந்து பிரகாசம் பொருந்திய கிரணங்களைக் கொண்ட சூரியனைக் கொடிய சிறையினிடத்து அடைத்து வைத்த சிறுவனான பானுகோபனது சேனையின் எதிராகச் சென்று சேர்தலோடும்; 35

வற்புறு தயித்தியர் வருஞ்சுரரை நோக்கி
முற்பகலின் எல்லையும் முறைப்பணி புரிந்தார்
தற்பமுடன் இன்றுசமர் உன்னிவரு வாரோ
அற்புதம் இதற்புதம் இதென்றறையல் உற்றூர்.

வலிமை கொண்ட அசுரர்கள்; போர்க்கோலமுடன் வரும் தேவர்களைப் பார்த்து நேற்றுப் பகல் முடியும் எல்லையும் முறையாக எங்கள் சொற்படி ஏவல் செய்துளர்; அங்ஙனமிருப்ப இறுமாப்புடன் இன்று போர் செய்ய நினைந்து வருவாரோ இது அற்புதம் அற்புதம் என்று சொல்லுற்றூர்கள். 36

கிட்டினர்கள் வானவர் கிடைத்ததமர் என்ன
முட்டினர் தெழித்தவுணர் முன்பினிரு பாலார்
ஒட்டினர் முனிந்தயில்கள் உய்த்தனர்கை வாளால்
வெட்டினர் குனித்துவில் வடிக்கணை விடுத்தார்.

தேவர்கள் நெருங்கினூர்கள் அசுரர்களும் ஓகோ போர் எமக்கு இன்று கிடைத்ததே என ஆரவாரித்து நெருக்கினூர்கள் ; உரக்கச் சத்தமிட்டு முன்னும் பின்னுமாக இருபக்கத்தாரும் வீரப்பேச்சுடன் அணிகொண்டு போர் செய்த னர் ; கோபத்துடன் வேல்களைச் செலுத்தினூர்கள் கையில் உள்ள வாளால் வெட்டினூர்கள் ; வில்லை வளைத்து வடிக்கணைகள் செலுத்தினூர்கள். 37

எழுப்படை விடுத்தனர் எடுத்தகதை விட்டார்
மழுப்படை எறிந்தனர் வயிர்க்குலிசம் உய்த்தார்
நிழற்பரவு முத்தலை நெடும்படைகள் தொட்டார்
சுழற்றினர் உருட்டினர் சுடர்ப்பரிதி நேமி.

எழுப்படையை விடுத்தார்கள் ; கையில் எடுத்த கதாயுதத்தை விட்டெறிந் தார்கள் மழுவாயுதத்தை விடுத்தார்கள் ; வலிமையுடைய குலிசப்படையைச் செலுத்தினர்; ஒளியுடன் மின்னுகின்ற மூன்று முனைகளையுடைய சூலப்படையை எறிந்தனர் ; ஒளிபொருந்திய வட்டவடிவான சக்கராயுதத்தைச் சுழற்றி எறிந் தார்கள். 38

மாரியென இப்படை வழங்கியிமை யோருஞ்
சீரவுண ராயினருஞ் சேர்ந்துபொரும் எல்லைச்
சோரியது தோன்றியது தூயவிரும் பெற்றும்
பாரிய உலத்திடை பரந்தெழு கனற்போல்.

இவர்கள் மழை பெய்வதுபோன்று இப்படைகளை ஒருவர்மீது ஒருவர் விடுத்து தேவர்களும், சிறப்புற்ற அசுரராயுள்ளோரும் சேர்ந்து போர்செய்கின்ற அந்த நேரத்தில் வீசப்பட்ட படைகள் வந்து தாக்குதலினூலே ஒவ்வொருவர் உடலில் நின்றும் இரத்தம் தெறித்துச் சீறிக்கொண்டு வந்தது எப்படி எனில், தூயதான காய்ச்சிய இரும்பைப் பட்டடையில் வைத்து அடிக்கின்றபோது அந்த இரும்பில் நின்றும் தெறித்தோடும் நெருப்புப் பொறிகள் போன்றிருந்தது. 39

அங்கமெழு செங்குருதி ஆற்றின் நிமிர்ந்தோடி
எங்கணும் நிரந்தன இமைப்பிலவர் வைகுந்
துங்கமிகும் உம்பரிடை சூர்மதலை சீற்ற
வெங்கனல் எழுந்துமுன் மிசைந்திடுவ தேபோல்.

படைகளால் தாக்குண்ட சரீரங்களிலிருந்து வெளிவந்த சிவந்த இரத்தமானது பெரிய ஆறுபோல் நிமிர்ந்து ஓடி, தேவ உலகம் எங்கும் பரந்து கொண்டது; இது எது போல் எனில் பின்னால் தேவ உலகை நெருப்பு எரிப்பதன் முன் மேன்மையுடைய தேவர்கள் வாழும் உலகை சூரபன்மனது மகன் பானுகோபனுடைய கோபமான கொடிய நெருப்பு எழுந்து உண்ணும் காட்சி போலும். 40

நீடிரு திறத்தரும் நெரும்படைகள் ஏந்தி
ஆடல்புரி காலையழிந் தாற்றலில ராகி
ஓடினர்கள் வானவர்கள் ஒல்லைதொடர்ந் தேபின்
கூடினர்கள் வெவ்வவுணர் குற்றினர்கள் பற்றி.

மிகுதியான இருபக்கத்தாரும் கையில் நெடிய படைகளை ஏந்திப் போர் புரிகின்ற காலையில், அசுரர்களுக்கு தேவர்கள் தோற்று வலிமையிலராகி பயத்தால் புறமுதுகிட்டு ஓடினார்கள்; ஓடும் தேவர்களை விரைவுடன் பின்னால் கொடிய அசுரர் தொடர்ந்து ஓடிச் சென்று அவர்களைப் பிடித்துக் குற்றினார்கள். 41

சேண்கொடு முரிந்துபடர் தேவர்குழு வோரை
ஏண்கொடு வருந்தகுவர் யாத்தனர் புயங்கள்
நாண்கொடு திரும்பினர் நலங்கொள்கலை மானை
மாண்கொடு வரித்தொகுதி வவ்விஅகன் றென்ன.

மிகத் தூரத்திற்கு தோற்று ஓடுகின்ற தேவகூட்டத்தினரை இறுமாப்புடன் தொடர்ந்து ஓடிவந்து பிடித்த அசுரர்கள், தேவர்களது தோள்களைக் கயிற்றால் இறுகக்கட்டி அவர்களை எடுத்துக் கொண்டு திரும்பினார்கள்; எது போல் எனில் நலம் சிறந்த கலைமானை வலிமையுடன் புலிக்கூட்டம் கவ்விப் பிடித்துக்கொண்டு செல்வது போன்றது. 42

இடுக்கணுறு தேவர்தமை ஈர்த்தனர்கொ டேகி
மிடற்கதிர் அருக்கனை வெகுண்டவன்முன் உய்ப்பக்
கடக்கரிய வன்மையொடு காவல்கொளு மென்றான்
தடக்களிறு மேல்வரு சயந்தன்இவை கண்டான்.

சிறையாகிக் கட்டப்பட்டு இடுக்கட்படுகின்ற தேவர்தமை இழுத்துக் கொண்டு சென்று வலிமை கொண்ட கிரணங்களை உடைய சூரியனைக் கோபித்த பானுகோபன் முன்னர் விடுதலும்; தப்பிப்போக முடியாதபடி வலுவுடன் இத் தேவர்களைக் காவல் கொண்டிருப்பீராக என்று பானுகோபன் அசுரரிடம் சொன்னான்; இவைகளான செயல் யாவற்றையும் மதம் பொழியும் யானை மேல் வரும் சயந்தன் கண்டான். 43

வேறு

கண்டான் வெகுண்டான் புகையாரழல் கல்லென் மேகம்
உண்டான் எனவே உமிழ்ந்தான் ஒருதன் சிலேக்கைக்
கொண்டான் குணத்தின் இசைகாட்டினன் கோட்டி நேர்போய்
அண்டார் வெருவக் கணேமாரிகள் ஆர்ப்பொ டுய்த்தான்.

கண்டான் வெகுண்டான் புகையும் நெருப்பும் முழங்குகின்ற மேகங்களிடத்து உண்டாயின போன்று கோபத்துடன் வாயால் புகையையும் நெருப்பையும் கக்கினான்; தனது ஒரு வில்லேக் கையில் பிடித்தான்; நாணேசைகாட்டி வில்லே வளைத்தான் நேராகச் சென்று பகைவரான அசுரர் அஞ்ச அம்புகளே மழை சொரிவது போன்று சொரிந்தான். 44

பொழியும் பொழுதத் தவுணப்படை போந்த வீரர்
மொழியும் மனமும் நனிதாழ்த்திட முன்ன ரேகி
ஒழியுங் கடைநாள் அரன்வெற்பை உருது சூழ்போஞ்
சுழியுங் கடல்போல் அவனூர்கரி சுற்றி ஆர்த்தார்.

அம்புகளேப் பொழியும்பொழுது அசுரர்சேனேயாக வந்த வீரர் யாவரும் பேச்சும் மனமும் மிகவும் உடைபடச் சயந்தன் முன்பாகச் சென்று உலகம் அழிவுறுங் காலத்து, சிவபிரானுடைய திருக்கைலாயமலேயை ஆழ்த்தாது சூழ்ந்து நிற்கின்ற சுழிக்கின்ற நீரையுடைய கடல்போல; அசுரர்கள் சயந்தன் ஏறிய யானேயைச் சூழ்ந்து வளேந்து ஆரவாரித்தனர். 45

சயந்தன் மிசையும் பொலங்கிம்புரித் தந்த வெள்ளேக்
கயந்தன் மிசையுஞ் சிலேவாங்கிக் கணேகள் கோடி
பயந்தந் திடத்தூர்த் தனர்சோமனேப் பன்ன கங்கள்
வயந்தன் னெடுபோய் முயலோடு மறைக்கு மாபோல்.

வளேந்து கொண்ட அசுரர் தங்கள் வில்லே வளேத்து சயந்தன் மேலும்; பொன்மயமான கிம்புரியணிந்த கொம்புடைய வெள்ளே யானேயான ஐராவதம் மீதும் கோடிக்கணக்கான அம்புகளேக் காண்பார் அஞ்சும்படி செலுத்திஞர்கள்; இக்காட்சி எப்படி இருந்ததெனில் நாகபாம்புகள் வெற்றியுடன் சென்று சந்திரனிலுள்ள முயற்கறையுடன் சேர்த்து சந்திரதேவனே மறைத்தல் போன்று. 46

கல்லென் றரற்றுங் கழல்வீரர் கனேந்து சுற்றிச்
செல்லென் றுவிட்டகணே யாவையுஞ் சிந்தி வல்லே
மல்லொன் றுமொய்ம்பிற் சயந்தன்சர மாரி தூண்டி
வில்லும் மனேயோர் தனுவும்புவி வீட்டி னுனல்.

கல்லென்று கணீரிட்டு ஒலிக்கின்ற வீரகெண்டை அணிந்த காலுடைய அசுரவீரர் கனேத்துக் கொண்டு சயந்தனேச் சுற்றி நாற்புறமும் வளேத்துச் செல்லும்படி விட்ட அம்புகள் யாவையும் சயந்தன் சிதறச் செய்து விரைவுடனுக மலேபோன்ற தோளுடைய சயந்தன் மழைபோன்று பல அம்பினேச் செலுத்தி அசுரர் கையிற் பிடித்த வில்களேயும் சரீரங்களேயும் பூமியில் வீழ்த்திஞன். 47

வீட்டிக் கணைகள் அவுணப்படை மீது தூர்த்து
மோட்டுக் களிற்றின் தொகைதன்னை முகங்கொள் பாய்மா
வீட்டத் தினைத்தேர் களைவீரர் இனத்தை யெல்லாம்
வாட்டிப் பின்வெள்ளம் ஒருநூற்றினை மாய்வு செய்தான்.

அம்பினால் அசுரரை கொன்று வீழ்த்தி, மீண்டும் அசுரப்படைகள்மீது அம்புகளைச் சொரிந்து பெரிய யானைக் கூட்டங்களையும் முன்னாக வந்து எதிர்ப்படும் குதிரைக் கூட்டங்களையும் தேர்களையும், அசுரவீரர் இனங்களை எல்லாம் வருத்தி, இப்படி ஒரு நூறு வெள்ளம் அசுரப் படையை மாய்வு செய்தான் சயந்தன். 48

வாலிற் புடைக்கும் புழைக்கொடு வாரி எற்றுங்
காலிற் படுக்கும் மருப்பாலடுங் கந்த ரம்போல்
ஓலிட் டுயிருண் டிடுமாங்கவன் ஊர்ந்த வேழஞ்
சீலக் கதிரைச் சிறையிட்டவன் சேனை தன்னை.

அதுவேளை சயந்தனேறிய ஐராவத யானையும் தம்மைச் சூழ்ந்த அசுரரை வாலினால் சுழற்றி அடிக்கும்; துதிக்கையால் வாரி நிலத்தில் அடிக்கும்; காலால் உழக்கிக் கொல்லும்; கொம்பினால் குற்றிக் கொல்லும்; மேகத்தின் முழங்கோசை போல் கத்தித் திடுக்கிடச் செய்து கொல்லும். 49

நூறாய்ப் புகுதா னவர்வெள்ளம் நொடிப்பின் மாய
வீறாய்ப் படையும் பலபூண்களும் மீன மாக
ஆறாய்க் குருதி பெயர்ந்தேயகல் வான நீத்தம்
மாறாய்ப் பொருது மிசையோடி வளைந்து கொண்ட.

நூறு வெள்ளம் என்னும் கணக்குடைய அசுரச் சேனை ஒரு நொடிப் பொழுதினில் இவ்வாறு மாண்டுபோக, அவர்கள் உடலில் இருந்து இரத்தம் ஆறாகப் பெருகி, அவர்கள் பிடித்த படைகளும், அணிந்த பல ஆபரணங்களும் மீன்கள் போல இரத்தாற்றில் தோன்ற, இரத்தாறு பெருகி எழுந்து அகன்ற ஆகாய கங்கையுடன் மாறுபட்டு எதிர்த்து மோதி, அதன் மேலோடிச் சூழ்ந்து கொண்டது. 50

காய்கொல் இபமேற் சயந்தன்அடு காலை தன்னில்
பேய்கொல் உனைத்தீண் டினமேல்வரும் பெற்றி யோராய்
தீகொல் பறவை புரைவாய்எமர் சேனை தன்னை
நீகொல் லடுதி யெனவந்தனன் நீல கேசன்.

பகைவரைக் கொல்லுகின்ற ஐராவத யானைமேல் போந்த சயந்தன் அசுரரை இப்படிக் கொல்லுகின்றகாலையில், என்னடா? சயந்தனே! பேயோ உன்னைப் பிடித்துக்கொண்டது; மேலாக உனக்கு வரப்போகும் தன்மையை உணரமாட்டாய்; நெருப்புடன் நேரும் பறவை போல்வாய்! எங்கள் அசுர சேனைகளை நீயா கொல்கின்றாய்? என நீலகேசன் என்னும் சேனாதிபதி முன் வந்தான். 51

எண்ணாத் தவரை அலைக்கின்ற இருண்ட கேசன்
தண்ணத் தவரை நிகர்கின்ற சயந்தன் முன்போய்
விண்ணத் தவரை முகில்தாங்குறும் வேட மென்ன
வண்ணத் தவரைக் குனித்தம்பெனும் மாரி தூர்த்தான்.

பகைவரை அலைக்கின்ற இருண்ட மயிரினை உடைய நீலகேசன்; குளிர்ந்த சங்கைக் கையில் ஏந்திய நாராயணப் பெருமானை நிகர்கின்ற நீலநிறமுடைய சயந்தன் முன்னாகச் சென்று; வானவில்லை முகில்கள் தாங்குகின்ற வடிவம் போன்று அழகிய தனது வில்லை வளைத்து அம்பாகிய மழையைச் சொரிந்தான்; 52

தூர்த்தான் அதுகால் சயந்தன்எதிர் தூண்டி வாளி
தீர்த்தான் சரமாரி யையன்றியுஞ் சின்ன மாக்கி
ஆர்த்தான் கவசம் அவனிட்டதை அம்பு நூறுல்
வேர்த்தான் உயிர்த்தான் இருட்குஞ்சியன் மேக மொப்பான்.

அம்புகளை மழைபோல நீலகேசன் சொரிந்தான்; அதுகாலை சயந்தனும் தானும் எதிராக அம்புகளைச் செலுத்தி நீலகேசன் விடுத்த அம்புகளைச் சிதைத்தான்; அது அல்லாமல் நூறு அம்புகளைப் பின்னரும் செலுத்தி நீலகேசன் அணிந்த கவசத்தைப் பொடியாக்கி ஆரவாரம் செய்தான்; அப்பொழுது மேகம்போன்ற கருநிறத்தை உடைய நீலகேசன் சரீரம் வேர்த்தான்; பெருமூச்சு விட்டான். 53

பாசம் பிணித்த அரணம் பரிவெய் தநீல
கேசன் விடுத்தோர் பிறையம்பினைக் கேடில் விண்ணோர்
ஈசன் சிறுவன் சிலைநாணை இறுத்தி சைத்தான்
காசொன் றரவந் துணியப்பகை கௌவு மாபோல்.

நாண் சயிற்றினால் சேர்த்துக் கட்டப்பட்ட கவசம் பொடியாக அழிவெய்தலும்; நீலகேசன் ஒரு பிறை போலும் முகமுடைய அம்பினை விடுத்துக் கேடில்லாத தேவர்கட்கு அரசன் இந்திரன் மைந்தன் சயந்தனுடைய வில் நாணினை அறுத்து ஆராவாரித்தான்; அப்பு நாணினை அறுத்தது எதுபோலும் எனில், இரத்தினத்தை உடைய நாகபாம்பினைத் துணிக்கும்படி அதன் பகையான சந்திரன் கௌவியது போன்றது. 54

சின்னம் படலும் பெருநாண்சிலை வீழ விட்டுத்
தன்னந் தனியாஞ் சயந்தன்சமர் செய்வ தற்கு
முன்னம் பயிற்றும் ஒருமாயை முன்னி யாற்றித்
துன்னந் தருபல் லுருவங்கொடு தோன்றி யுற்றான்.

பெரிய வில் நாண் அறுந்து போதலும்; வில்லைக் கீழே விழவிட்டு தன்னந் தனியான சயந்தன் போர் செய்வதற்கு முன்னர்க் காலத்தில் பழகியிருந்த பெரிய மாயையை நினைந்து மாயவடிவை செய்து நெருக்கமாய் நிற்கின்ற பல வடிவங்கொண்டு தோன்றி நின்றான். 55

வேறு

ஒன்றேயெனுங் கரிமேல்வரும் ஒருவன்பல வுருவாய்ச்
சென்றேதிறம் பலவால்அடச் செறிபேரிருட் குடுமிக்
குன்றேபுரை அவுணர்க்கிறை குறிப்பால்இது மாயம்
என்றேநினைந் தவைமாற்றிட யாதுஞ்செயல் இல்லான்.

ஒன்று தான் யானை எனும்படியாக வந்த ஐராவத யானை மேல் வருகின்ற ஒருவனான சயந்தன் பலவடிவாய்ச் சென்றே பல திறப்பட்ட உபாயங்களாற் அசுரரைக் கொல்ல, அது போது மலைபோன்ற அசுரர்க்குத் தலைவனான நீலகேசன் தன் குறிப்பினால் இது சயந்தன் கொண்ட மாயம் என்று நினைந்து அவைகளை தவிர்ப்பதற்கு யாதும் ஒரு செயலிலாது போனான். 56

மலைவுற்றெதிர் நின்றார்த்திட வாயற்றனன் மயங்கித்
தொலைவுற்றனன் இருட்குஞ்சியன் சூரன்மகன் அனிகம்
அலைவுற்றன விரிகின்றன அலமந்தன வெருவி
உலைவுற்றன இறுதிப்பகல் ஒழிவுற்றிடும் உயிர்போல்.

நீலகேசனென்பவன் எதிர்நின்று போர் செய்வதற்கு வாயற்றனன்; மயங்கித் தோற்றுப் போயினான்; இது கண்டு சூரபன்மனது மகன் பானுகோபனது சேனைகள் போர் செய்யும் நிலையற்றனவாய் அலைந்து; ஓடுகின்றன; அலைந்து தடுமாறுகின்றன; பயந்து உலைகின்றன; எப்படியெனில், முடிவான காலத்தில் ஒழிந்து போகின்ற உயிர்கள் போன்று; 57

சோமாசுரன் மாயாபலி சுரகேசரி பதுமன்
மாமாருத பலிதண்டகன் வாமன்மதி வருணன்
தீமாகதன் முதலாகிய சேனைப்பெருந் தலைவர்
ஆமாயமி தெனவந்தனர் அவ்விஞ்சையை உணரார்.

சோமாசூரன், மாயாபலி, சுரகேசரி, பதுமன், பெரிய மாருதபலி, தண்டகன், வாமன், புத்தியுடைய வருணன், கொடிய மாகதன் முதலாகிய பெரும் அசுர சேனாதிபதிகள் ஆ! இது மாயம் என்று சொல்லி அவண் வந்தனராயினும் அந்த மாயத்தின் வித்தை இன்னதென்று உணரார்கள். 58

தாங்கற்றிடு மாயப்பெருந் தனிவிஞ்சைகண் முன்னி
ஆங்குற்றிடு மரபாற்பொரு தன்னான்புரி மாயம்
நீங்கற்கரு நிலையாதலும் நெஞ்சந் தடுமாறி
ஏங்குற்றனர் என்செய்குதும் யாமென்று நினைந்தார்.

தாங்கள் கற்றுக்கொண்ட பெரிய தனியான மாயவித்தைகளை நினைந்து அவ்விடத்துப் பொருந்திய முறையால் போர்செய்தும், சயந்தன் செய்துள்ள மாயங்களை நீக்குதற்கு அரியதான நிலையாகி இருக்கக்கண்டு தமது நெஞ்சு தடுமாறி ஏங்குற்றார்கள் என் செய்தும் யாங்கள் என்று நினைந்தார்கள். 59

அந்நேருறு காலந்தனில் ஆகின்றதுந் தலைவர்
தன்னேவலின் மெலிவுற்றதும் சயந்தன்பெரும் திறலும்
கொன்னேதன தனிகக்கடல் குறைகின்றதும் கண்டான்
முன்னேயிர வியைஓர்பகற் சிறைவீட்டிய முதல்வன்.

அவ்வாறாக அசுரர் யாரும் துன்பத்துடன் வேதனை உறும் காலத்தில் அங்கு நடைபெறும் மாய இயல்புகளையும், சேனைத் தலைவர்கள் தனது கட்டளைப்படி செய்கின்ற போரில் மெலிந்து போனதையும், சயந்தனுடைய பெருவலியையும் சயந்தனால் விரவுடனாக தனது சேனைகள் அழிக்கப்பட்டு குறைவாகிப் போகின்றதையும் கண்டான். அவன் யாரெனில் முன்னொரு காலத்திலே ஓர்நாள் சூரியபகவானைச் சிறையில் வைத்துள்ள முதல்வனான பானுகோபன். 60

அந்த ரந்தனில் இரவியைச் செயிர்த்திடும் அவுணன்
இந்தி ரன்மகன் மாயைகொல் இதுவென எண்ணா
முந்தை நாட்புகர் உதவிய மூலமா ஞான
மந்தி ரந்தனை உளந்தனில் விதிமுறை மதித்தான்.

வானத்திலே தோன்றி பிரகாசிக்கின்ற சூரியனைக் கோபித்திட்ட பானுகோபன் ஓகோ இந்த மாயையானது இந்திரன் மகன்சயந்தனுடைய செயலோ எனஎண்ணி; முன்னாளில் தங்கள் குருவாகிய சுக்கிரபகவான் கற்பித்துள்ள எவற்றிற்கும் மூலமாய் விளங்கும் ஞான மந்திரத்தை தனது மனதில் எண்ணி உள்ளத்திலே அதனை விதிமுறையாகத் தியானம் செய்தான். 61

மதித்து வெஞ்சுடர்ப் பகையினன் சேறலும் மாயை
விதித்த பல்லுருப் போயின தமியனாய் விடலை
கதக்க ளிற்றின்மேல் தோன்றினன் ஆயிரங் கதிரோன்
உதித்த காலையில் கலையிலாக் குறைமதி யொப்ப.

இவ்வாறு ஞானமயமான மூலமந்திரத்தைத் தியானித்தவாறு கொடிய வெப்பம் கொண்ட சூரியன் பகைஞன் பானுகோபன் போர்க்களத்து வந்து சேரலும் அப்போது சயந்தனால் உண்டாக்கப்பெற்ற மாய வடிவங்கள் அனைத்தும் போய் நீங்கின. சயந்தன் இப்போது தனித்துள்ளவனாய் மதம் பொழியும் யானை மேலாகத் தோன்றினான் சயந்தனின் இந்த செயல்கள் யாவும் எப்படி முடிந்துள்ளனவோ என்றால் ஆயிரங் கிரணங்களை உடைய சூரியபகவன் உதித்த காலத்தில் ஒளி மங்கிப்போன அபரபக்க சந்திரன் போலானான். 62

ஆன காலையில் இதுபுகர் விஞ்சையென் றறிந்து
மான முஞ்சின முஞ்சுடச் சயந்தன்உள் மறுகித்
தான வேழமேல் இருந்துழித் தேரொடுஞ் சார்ந்து
பானு கோபனும் பெயரினான் இனையன பகர்வான்.

சயந்தன் பழமைபோல ஆன காலையில்; தனது மாயையை அழிக்கமுடிந்தது சுக்கிரன் உபதேசித்த வித்தையின் சாதுரியத்தால் தானாகும் என அறிந்துகொண்டு; மானமும் கோபமும் தனது உள்ளத்திலே சுடும்படி சயந்தன் மனம் கவலைகொண்டு, மதம் பொழியும் யானை மேலாக இருந்த நேரத்து; சயந்தன் முன்பாகப் பானுகோபன் என்னும் பெயருடையவன் வந்து சேர்ந்து முன்னின்று இதனைச் சொல்வான். 63

வருதி இந்திரன் மதலைநின் மாயையும் வலியும்
கருதி யான்வரு முன்னரே போயின கண்டாய்
பரிதி போலவே நின்னையும் இருஞ்சிறைப் படுப்பன்
பொருதி வல்லையேல் என்றனன் சூர்தரு புதல்வன்.

வருவாயாக இந்திரன் மைந்தனே, இதனைக்கேள் நினது மாயையும் வலியும் நான் வர நினைந்துகொண்டு இங்கு வருமுன்னரே ஒழிந்து போயின, சூரியனைப்போலவே உன்னையும் கொடிய சிறையில் வைப்பேன். என்னுடன் போர் புரிய முடியுமாகில் போர் செய்வாயாக என்றனன் பானுகோபன். 64

வல்ல ராயினோர் வெல்வதும் மற்றஃ தில்லோர்
அல்ல ராகியே தோற்பதும் இல்லையால் அரனே
தொல்லை யூழ்முறை புணர்த்திடும் நின்னைநீ துதிக்கச்
செல்லு மோவென உரைத்தனன் சயந்தனுந் திறலோன்.

அதுகேட்டலும்; வலிமை உடையார் வெல்வதும், வலிமை இல்லாதவர் வெல்லுதற்கியலாதவர்களாய் தோற்றுப்போதலும் இரண்டும் உண்மையில் இல்லை. சிவபிரானே, முன்னுள்ள ஊழ்முறைப்படி இதுகளைக் கூட்டுவிப்பார், அப்படி இருப்ப உன்னை நீயே புகழத் தகுமோ எனக்கூறினன் சயந்தன் என்னும் திறல் உடையவன். 65

தேற்ற மோடிவை புகறலும் இரவியைச் செயிர்த்தோன்
ஆற்றல் இல்லவர் மொழிதிறம் புகன்றனை அன்றே
ஏற்ற வீரரும் இத்திறம் உரைப்பரோ என்னாக்
கூற்ற மேயென இருந்ததோர் தன்சிலை குனித்தான்,

எல்லாவற்றையும் தெளிந்த உள்ளத்தால் சயந்தன் இவற்றைச் சொல்லலும்; சூரியனைப் பகைத்த பானுகோபன்; சயந்தனே! வலியிலார் பேசும் தன்மைபோன்ற வார்த்தையை நீ சொன்னாயல்லவோ, தகுதியுடைய வீரரும் போரில் இப்படிச் சொல்வாரோ? என்று இயமன் போல இருந்த தனது வில்லை எடுத்து வளைத்தான். 66

சிலைவ ணக்கிய காலையில் சயந்தனுஞ் சினத்து
மலைவ ணக்குதன் புயங்கொடே ஒருசிலை வளைத்தான்
அலைவ ணக்கரும் ஏமலியெம் மடிகளை அடைந்தோர்
தலைவ ணக்கியே தத்தமில் இருவர்தாழ் வதுபோல்.

வில்லை வளைத்த காலையில் சயந்தனும் சினத்து வலிமையையுங் கடந்த தனது தோளினால் ஒரு வில்லை வளைத்தான். இருவரும் இப்படி வில்லை வளைத்த தன்மை எப்படி இருந்தது எனில்; கடல்போன்ற கருநிறமுடைய திருமேனி கொண்ட வைரவக் கடவுளின் அடியார்கள் தாங்கள் ஒருவரை ஒருவர் காணும்போதில் தங்கள் தலைகளை தாழ்த்தி ஒருவரை ஒருவர் வணங்குவது போன்றது. வைரவ சமயத்தார்கள் தாங்கள் அடியார்களைக் கண்டால் கையால்கூப்பாது தலையால் சாய்ந்து வணங்குவர். 67

பாற்றி ருஞ்சிறைக் கணைபல பரிதியம் பகைஞன்
ஊற்ற மோடுவான் புயலெனச் சொரிதலும் ஒருத்தன்
மேற்றி கழ்ந்திடு சயந்தனும் அனையன விசிகங்
காற்றெ னும்படி தூண்டியே விலக்கினன் கடிதின்.

பருந்தின் சிறகுகளைப் போன்ற சிறகுகள் கொண்ட அம்புகள் பலவற்றை சூரியன் பகைவனான பானுகோபன் மிக வேகத்துடன், வானத்துள்ள மேகம் மழை சொரிவது போன்று சொரிதலும்; ஐராவத யானையின் மீது சிறப்புடன் இருக்கின்ற சயந்தனும் அதைப்போன்ற அம்புகளை காற்று வேகம் போல செலுத்தி, பானுகோபன் விடுத்துள்ள அம்புகளை அறுத்துத் தள்ளினான். 68

அன்ன வன்விடுஞ் சரமெலாஞ் சூர்மகன் அறுத்துத்
துன்னு பல்கணை தூண்டினன் அவனவை தொலைந்தான்
இன்ன தன்மையின் இருவரும் பொருதனர் இருளும்
மின்னு மாகவே முறைமுறை மலைந்திடும் விதிபோல்.

பின்னரும் அந்த சயந்தன் ஏவிய அம்புகள் யாவற்றையும் பானுகோபன் அறுத்து மீண்டும் நெருங்கிய பல அம்புகளைச் செலுத்தலும் சயந்தனும் அவற்றைத் தனதம்பால் தொலைத்தான். இன்னதன்மையாக இருவரும் போர்செய்தனர் எதுபோ லெனில் இருளும் மின்னலும் மாறி மாறித் தோன்றிக் கொண்டு முறை முறை போர் செயும் திறம்போல். 69

இனைய வாறமர் புரிவுழி இரவியம் பகைஞன்
வினைய நீரினல் சொரிந்திடு பகழியை விலக்கித்
துனைய இந்திரன் மதலைஆ யிரங்கணை தூண்டி
அனையன் ஏந்திய சிலைப்பெரு நாணினை அறுத்தான்.

இவ்வாருக போர் செய்த நேரத்து பானுகோபன் தந்திர முறையாற் செலுத்திய அம்புகளை தடுத்து அழித்துவிட்டு மிக விரைவுடன் இநதிரன் மைந்தன் சயந்தன் மீண்டும் ஆயிரம் அம்புகளை விடுத்து பானுகோபன் கையிற் பிடித்த வில்லின் பெரிய நாணினை அறுத்தான். 70

அறுத்த காலையில் ஞாயிறு வெகுண்டுளோன் அழலிற்
செறுத்து வேறொரு சிலைவளை இக்கணைமழை சிதறி
மறுத்தும் ஆங்கவன் விடுஞ்சரம் சிந்திமற் றவன்மெய்
உறுத்தி னுன்என்ப ஓராயிரஞ் சிலீமுகம் உய்த்து.

நாணினை அறுத்த காலத்து சூரியனைக் கோபித்த பானுகோபன் நெருப்பைப் போன்று சீறி வேறொரு வில்லை எடுத்து வளைத்து அதினின்றும் அம்புகளை மழை போலச் சொரிந்து மீண்டும் சயந்தன் விடும் அம்பெல்லாம் அறுத்து பின்னரும் சயந்தனுடைய மேனியில் படுமாறு ஆயிரம் அம்புகளைச் செலுத்தினுன் என்பார்கள் 71

உய்த்த காலையில் சயந்தனும் ஓராயிரங் கணைதூய்ப்
பத்தி யோடவன் தேர்கெழு பாய்பரி படுத்து
மெத்து பல்சரந் தானைமேல் வீசினன் விளிவோர்
வைத்த மாநிதி யாவர்க்கும் வழங்குமா றென்ன.

ஆயிரம் அம்புகளைச் செலுத்திய காலையில் சயந்தனும் ஓராயிரம் அம்புகளைச் செலுத்தி நிரையாக பானுகோபனது தேரிற் கட்டப்பட்ட குதிரைகளை அழித்து அதன்மேல் பானுகோபன் சேனை மேலாக மிகுதியான பல அம்புகளை சயந்தன் செலுத்தினுன்; எதுபோலெனில் இறக்கப்போகின்ற நிலையை அடைந்துளார்கள் தாம் வைத்திருக்கும் செல்வம் யாவற்றையும் கடைசி நேரத்தில் எல்லார்க்கும் பகிர்ந்து கொடுக்கும் தன்மைபோல. அம்புகளை வேகமாக வீசுகிருன் சயந்தன். எனினும் இனிமேலாக தோற்பான். ஆகவே அவன் செயல் இறப்போர் தன்னிடத்துள்ள செல்வத்தை மேலும் தனக்கு பிரயோகனப்படாது எனத் தெளிந்து பலருக்கும் அதனைக் கொடுப்பது போன்றது என்க, 72

வாய்ந்த தோர்தன திரதமீ ருகமற் றொருதேர்
பாய்ந்து வெய்துயிர்த் தழலென வெகுண்டுபற் கறித்துச்
சேந்த மெல்லிதழ் அதுக்கிவா னுருமெனத் தெழியா
ஏந்து வார்சிலை குனித்தனன் எறிகதிர்ப் பகைஞன்.

தனக்கு வாய்ப்பானதோர் தேர் அழிவாதலும் பானுகோபன் மற்றொரு தேர் மேலாகப் பாய்ந்து பெருமூச்சு விட்டு நெருப்பைப் போலச் சீறிக் கோபித்து பல்லைக் கடித்து சிவந்த மெல்லிய சொண்டுகளை மடித்துக் கவ்வி, வானின் இடியேறு போல முழங்கி தனது கையில் பிடித்த வில்லை வளைத்தான். 73

**கூனல் வெஞ்சிலை குனித்துநூ றுயிர கோடி**
**சோனை வெங்கணை தூண்டிவிற் றூணியைத் துணித்துத்**
**தான வெங்கரி தன்னுடன் முழுவதுஞ் சயந்தன்**
**மேனி முற்றவும் அழுத்தினன் பகலினை வெகுண்டோன்.**

கூனிய கொடிய வில்லை வளைத்து நூறுயிர கோடி கணக்கில் விடாமழை போல அம்புகளைச் செலுத்தி சயந்தனது வில்லை, அம்புக்கூட்டை அறுத்து வீழ்த்தி, மேலும் பல அம்புகளை; மதம் பொழியுங் கொடிய ஐராவத யானையின் உடல் முழுதும், சயந்தனது மேனி முழுவதும் பட்டுருவும் படியாய்ச் செலுத்தினான் பானுகோபன். 74

**வெய்ய வற்சிறை இட்டவன் விட்டகோல், சைய மொத்த சயந்தன்மெய் மூழ்கலும்**
**மைய லுற்றனன் மற்றொரு வெஞ்சமர், செய்வ தற்குத் தெளிதலின் றுயினான்.**

கொடிய சூரியனைச் சிறை செய்த பானுகோபன் விட்ட அம்புகள் மலையை ஒத்த வலிமை கொண்ட சயந்தன் மேனியில் பட்டு ஊடுருவிப் போதலும் உடன் சயந்தன் மயக்கம் கொண்டான். இனி ஒரு கொடிய போர் செய்வதற்கு தெளிவு இல்லாதவனாய் வலியற்றுப் போயினான். 75

**நீண்ட வாளிக ளான நிறத்திடை, யாண்ட காலை அரிமகன் தந்திமேல்**
**வீண்டு விம்மி உணர்ச்சியும் விட்டனன், மாண்டி லான்அமு தங்கொண்ட வன்மையால்.**

நெடிய அம்புகளானவை மார்பில் பட்டு ஊடுருவியபொழுது இந்திரன் மைந்தன் சயந்தன் யானை மேலாகச் சாய்ந்து மயங்கி வீழ்ந்தான், விம்மினான். தனது நல் உணர்ச்சியும் விட்டனன். இந்நிலையில் இறந்திருப்பான். ஆனால் இறக்கவில்லை. ஏனெனில் சயந்தன் அமுதம் உண்ணப் பெற்ற தன்மையால். 76

**நண்ணு பாசடை நாப்பணி டந்தொறுந், தண்ணென் மாமலர்த் தாமரை பூத்தென**
**விண்ண வர்க்கிறை மாமகன் மெய்யிடைத், துண்ணெ னப்படு சோரி பொலிந்ததே.**

விளங்குகின்ற பச்சை நிறமுடைய தாமரை இலைகளின் நடுவான இடங்கள் தோறும் குளிர்ந்த நல்ல தாமரைப் பூக்கள் பூத்ததெனும்படி தேவர்கட்கெல்லாம் அரசனான இந்திரனுடைய பெருமகன் சயந்தன் மேனி தோறும் ஒய்வின்றிப் பீறிட்டு ஒழுகும் இரத்தம் பாய்ந்தது, சயந்தனது மேனி தாமரை இலைக்கும் அம்புபட்டு இரத்தம் வடியும் இடங்கள் பூவிற்கும் உவமையாகச் சொல்லப்பட்டது. 77

**கற்ற வாசவன் காளைதன் சீற்றம்நாம், முற்ற ஒத முடியுங்கொல் தன்னுணர்**
**வற்ற போதும் அவன்சினக் கண்ணழல், வற்று வித்தமெய் வார்குரு திப்புனல்.**

கல்வியால் அறிவு மிக்க இந்திரன் மகனான சயந்தன் வீழ்ந்தபோதும் அவன் கொண்ட கோபத்தை இப்படியானது என நாம் முற்றவும் சொல்லவும் முடியுமோ? ஏனெனில் சயந்தன் சோர்வடைந்து வீழ்ந்தபோதும் அவனுடைய கண்களிலிருந்து தோன்றிய கோபமான நெருப்பு சரீரத்தினின்றும் பாய்கின்ற இரத்த நீரை வற்றச் செய்தது. 78

**சயந்தன் அவ்வழி தன்னுணர் வின்றியே, அயர்ந்த போதத் தனையவன் ஊர்தியாம்**
**கயந்த னக்கிறை கண்டு கலங்கியே, துயர்ந்து நின்று சுளித்தெதிர் புக்கதே.**

சயந்தன் அவ்வழி தனது உணர்வின்றியே மயங்கி வீழ்ந்து அயர்வுற்ற நேரத்தில்; சயந்தனுடைய வாகனமாகிய ஐராவத யானை கண்டு மனம் கலங்கித் துன்புற்று சிறிது நேரம் நின்றுவிட்டபின் கோபத்துடன் பானுகோபனை நோக்கி எதிராக ஓடிச் சென்றது. 79

காய்ந்த தொன்மைக் கதிரை முனிந்திடும், ஏந்தல் ஊர்தரும் எந்திரத் தேர்மிசைப்
பாய்ந்த காலைப் பரித்தொகை பாகுடன், வீய்ந்து போன தெழித்தது வேழமே.

ஓடிச் சென்ற ஐராவத யானை உலகினைக் காய்கின்ற மிக முதியவரான சூரி யனைக் கோபித்த பானுகோபனது இயந்திர மயமான தேரின் மீதாக; தாக்கும் வேக முடன் பாய்ந்தகாலை பானுகோபனுடைய தேர், குதிரைத் தொகை யாவும் தேர்ச் சாரதியுடன் ஒருங்கே மடிந்து அழிந்துபோயது. அதுகண்டு ஐராவத யானை விறுக் கென உரத்துக் கர்ச்சித்தது. 80

பாண்டில் சேர்தரு பண்ணமை செய்யதேர், மாண்ட காலையில் வல்லையிற் கீழுறத்
தாண்டி வெள்ளையந் தந்தியைச் சீறினன், மூண்டு பானுவை முன்சிறை செய்துளான்.

பெரிய சில்லுகள் பொருந்திய அழகு நிறைவுடன் அமையப்பெற்ற சிறந்த தேர் அழிந்த நேரத்து விரைவுடன் பானுகோபன் கீழாகக் குதித்து முன்னின்ற வெள்ளை நிறமான ஐராவத யானையைச் சீறிக் கோபித்தான் முன்னரே சூரியபகவா னைச் சிறைசெய்த பானுகோபன். 81

மற்ற வன்றன் மணியணி மார்பிடைச், செற்ற மால்கரி சென்றுமுன் தாக்கலும்,
பொற்றை யின்கட் புழைத்திடுஞ் சூசியின், இற்ற வால்அதன் ஈரிரு தந்தமும்

சீறிக்கொண்ட நிலையுடைய பானுகோபனது முத்து ஆரம் அணிந்துள்ள நெஞ்சின் மீதாக கோப மிகுதியுடைய ஐராவதம் சென்று கொம்பினால் குற்றித் தாக் கலும் மலையினைத் துளைக்கும் ஊசியைப் போன்று யானையின் நான்கு தந்தங்களும் முரிந்து பொடியாகிப்போயின. 82

தந்தம் நான்குஞ் சடசட ஆர்ப்பொடு, சிந்தல் உற்றன சீர்கெழு சூர்மகன்
உந்து தொண்டலம் பற்றிமற் றோர்கையால், தந்தி வேந்தன் கவுளிடைத் தாக்கினான்.

நான்கு தந்தங்களும் சட சட என்னும் ஓசையுடன் சிந்திப் பொடியாதலும், சீர்நிறைந்த சூரபன்மன் மகன் பானுகோபன் ஐராவத யானையின் நீண்ட துதிக்கை யை ஒரு கையால் பிடித்து மற்றொரு கையினால் யானைகளுக்குள் தலைமை நிறைந்த அதன் கன்னத்தில் ஓங்கி அடித்தான். 83

காழந்த நெஞ்சினன் கரங்கொடு தாக்கலுங் கயமா
ஆழ்ந்த தெண்டிரைப் பாற்கடல் உடைத்தென அரற்றி
வீழ்ந்த யர்ந்தது சயந்தனும் மறிந்தனன் விரைவில்
சூழ்ந்த தொல்லுணர் வெய்தலும் அவனிவை சொல்லும்.

கோபமுடைய நெஞ்சினைக் கொண்ட பானுகோபன் கையால் ஓங்கி அடித்த லும் அழகிய ஆழமான தெள்ளியதிரையுடைய பாற்கடல் கரைகட்டு உடைந்துபோயது போன்று ஐராவதம் அலறிக்கொண்டு வீழ்ந்து சோர்ந்தது. சயந்தனும் மயங்கி வீழ்ந் தான். விரைவாக தனது பழைய உணர்வுகள் இப்பொழுது வரலும் சயந்தன் பின் வருமுறை இவற்றைச் சொல்கின்றான். 84

மாயை போயது தனித்தனங் குறைந்தது வன்மை
தீயர் பற்றுவர் அழியுமிந் நகரெனச் சிறிது
நீயி ரங்கலை இனிமன னேவிதி நெறிகாண்
ஆயின் இங்கிவை என்றனன் சயந்தனும் அறிஞன்.

எனது மாயை போய்விட்டது, எல்லாரும் சிறைப்பட துணை யாரும் இன்றி தனித்துக் கொண்டேன். எனது மாயையும் மறைந்துபோயது. கொடியவர் என்னை இனி பிடிப்பார்கள். இந்த நகரமும் அழியும். ஆதலால் இனி எல்லாம் இப்படி நடக்கும் என என் மனமே; நீ சிறிதும் இரக்கங் கொண்டு துயருறாதே. ஆராயுமிடத்து இவை யாவும் விதியின் விளையாடலாகும். அதை மாற்றும் வலி ஆருக்கும் இல்லையே, என்று சொன்னான் சயந்தன் என்னும் அறிஞன். 85

நுனித்து நாடியே இத்திறம் நுவன்று நூற் றுணிபு
மனத்தில் வைத்திடும் இந்திரன் கான்முளை மயங்கித்
தனித்த நீர்மையுங் களிற்றெடு வீழ்ந்ததுந் தளர்வும்
அனைத்தும் நோக்கியே தானவத் தலைவர்கள் ஆர்த்தார்.

எல்லாவற்றையும் அலசி அதிநுட்பமாக உணர்ந்து இவற்றை மனதுடன் சொல்லி; இப்படியே நூல்கள் அறுதியிட்டுச் சொல்லிய முடிவான துணிபுகளையும் மனதில் பதித்துக்கொண்டு இந்திரனுடைய வழிக்கொரு மைந்தனான சயந்தன் மயங்கித் தனித்துக் கொண்ட தனமையும், யானையோடு சேர வீழ்நததும், தளர்ந்ததும் எல்லாவற்றையும் நோக்கியே அசுரச் சேனைகளின் தலைவர்கள் மகிழ்வால் ஆரவாரம் செய்தனர். 86

ஆர்த்த தானவத் தலைவர்கள் சயந்தனை அயலே
போர்த்த தாமெனச் சுற்றினர் பற்றினர் புவிமேல்
கூர்த்த வாளெயிற் றரவினம் யாவையுங் குழீஇ இப்போய்ச்
சேர்த்த வெல்லையில் இரவியைக் கரந்திடுந் திறம்போல்.

அசுரர் ஆர்த்த நேரத்தில் அந்தச் சேனைத் தலைவர்கள் சயந்தனை விரைவுடன் பிடவையால் போர்த்தினர்கள் எனும்படி அயலில் சூழ்ந்து பிடித்தார்கள்; எப்படியெனில் இப்பூமியில் உள்ள பாம்புகள் எல்லாம் ஒருங்கு கூடிச் சென்று; சிறந்த காலையில் உதயமாகின்ற சூரியக் கடவுளைத் தமது படத்தால் மறைத்தல் போன்றது 87

தடித்த மொய்ம்புடைச் சயந்தனைத் தானவத் தலைவர்
பிடித்த காலையிற் கைதவன் கைதவன் பெரிதும்
அடித்தி டுங்கள்குற் றிடுங்கள்இங் கிவனுயிர் அதனைக்
குடித்திடு டுங்களென் றுரர்எலா அவுணரும் குழுமி.

தடித்த தோள் உடைய சயந்தனை சேனைத் தலைவர்கள் பிடித்த காலத்தில் சொல்வார்கள்: இவன் பெரிய வஞ்சன், வஞ்சன்நன்றாக இவனை அடியுங்கள், குற்றுங்கள், இவன் உயிரைக் குடித்திடுங்கள். என்று சொல்லிச் சொல்லியவாறு எல்லா அசுரரும் வளைந்து கூடினர்கள். 88

மன்னர் மன்னவன் திருமகன் அவ்வழி மற்றோர்
பொன்னே டும்பெருந் தேர்மிசைப் பொள்ளென ஏகிப்
பன்ன ரும்புகழ் படைத்திடு சயந்தனைப் பற்றித்
துன்னி நின்றிடும் அவுணருக் கொருமொழி சொல்வான்.

அரசர்க்கரசனான சூரபன்மனுடைய திரு உடைய மகன் பானுகோபன்; அந்நேரம் வேறோர் நெடிய தேர் மேல் விரைவுடன் ஏறிக்கொண்டு சொல்லுதற்கரிய புகழினை உடைய சயந்தனைப் பிடித்து நெருங்கி சூழ்ந்து நின்றிடுகின்ற அசுரரை நோக்கி ஒரு வார்த்தை சொல்வான். 89

வரிவில் வாங்கியே யான்விடுஞ் சரம்பட மயங்கிப்
பெரிது மெய்தளர் வுற்றனன் பேசவுங் கில்லான்
கருத லாலெனை இவன்றனை வருத்தலிர் கடிதே
சுரர்கு ழாத்தொடு புரிமினோ சிறையெனச் சொற்றான்.

வரி கொண்ட எனது வில்லை வளைத்து யான் எய்த அம்புகள் படுதலான் மயங்கி பெரிதும் களைத்துள்ளான் சயந்தன். அவனால் இப்பொழுது பேசவும் ஆற்றலிலாது போயது. பகைவன் என அவனை நினைந்து நீங்கள் வருத்தாதீர்கள். தேவர் கூட்டத்துடன் சிறை பிடித்து வையுங்கள் என்றான் பானுகோபன். 90

கொற்ற வன்மொழி வினவியே மந்தரக் குன்றைச்
சுற்று பாந்தள் போல் இந்திரன் திருமகன் துணைத்தோள்
இற்ற கொல்லென நாணினுல் யாத்தனர் இமையோர்
உற்று நின்றதோர் குழுவினுள் ஒருங்குற உய்த்தார்.

சொல்லிய பானுகோபனுடைய வார்த்தையை அசுர சேனுதிபதிகள் கேட்டு; மந்தர மலையைச் சுற்றிக் கொள்ளும் பாம்பு போல இந்திரனுடைய சீர்நிறைந்த அரிய புதல்வனது இரண்டு தோள்களையும் ஒடிந்துபோனவோ எனும்படி கயிற்றால் இறுகக் கட்டினர்கள். சயந்தனை தேவர்கள் வைக்கப்பட்டிருந்த கூட்டத்தினுள் ஒருங்கே கொண்டுசென்று சேர்த்தார். 91

தொழிலிது புரிந்த காலைச் சூர்மகன் தனது மாடே
தழியகா வலரை நோக்கிச் சயந்தனும் இவரும் அல்லால்
ஒழியநின் றோரை எல்லாம் ஒல்லையில் தருதிர் பின்னர்
அழியஇம் மூதூர் செந்தீ அரசனுக் களித்திர் என்றான்.

சயந்தனை சிறை செய்யும் செயலைச் செய்த நேரத்து தனது பக்கமாக தழுவிய வாறு நெருங்கிநின்ற காவலாளரை பானுகோபன் பார்த்து; இங்கு சிறை செய்யப் பட்ட சயந்தனும் இத்தேவர்களும் அல்லாது போர்க்கு வராது அங்கு தேவ உலகில் வாழ்வார் எல்லாரையும் இங்கு விரைவுடன் கொண்டு வருவீராக. பின்னராக இந்த முதுமையான தேவ உலகை சிவந்த நிறத்தை உடைய அக்கினி தேவனுக்கு இரை யாகும்படி நெருப்பிட்டு எரித்து விடுவீராக எனச் கூறினுன். 92

என்றலும் இறைஞ்சி யன்னோர் எழிலுடைத் துறக்கம் யாண்டுஞ்
சென்றனர் நாடி யனைத் தேவரை மகளிர் தம்மை
ஒன்றொரு வரையும் வீடா துடனுறப் பற்றி நாணல்
பொன்றிரள் தடந்தோள் யாத்துப் புரவலன் முன்னர் உய்த்தார்.

இவ்வாறு பானுகோபன் சொல்லலும் அவனை அக்காவலர் யாரும் வணங்கி அவர்கள் யாரும் அழகு நிறைந்த தேவ உலகில் சென்று எங்கும் நாடி அங்குள்ள தேவர் யாரையும் தேவப் பெண்களையும் ஒருவரைக் கூடத் தப்பவிடாது உடனுடப் பற்றி பிடித்துக்கொண்டு கயிற்றால் அவர்களது பொன்போன்ற தோள்களைக் கட்டிக் கொண்டு வந்து அவர்களை பானுகோபன் முன்பு சேர்த்தார்கள். 93

உய்த்தபின் பதுமச் செல்வி உறைதரும் உறையுள் போலச்
சித்திரங் கெழுவு பொன்னந் திருநகர் எல்லை யெங்கும்
புத்தழல் கொளுவ லோடும் பொள்ளெனப் பொடிபட் டன்றே
முத்திற வரைப்பும் எங்கோன் முறுவலான் முடிந்த வாபோல்.

அவர்களைச் சிறைப்படுத்திக் கொண்டு வந்து சேர்த்த பிற்பாடு மகாலட்சுமி வாசம் செய்யும் இடம்போலச் சித்திரப்பாட்டுடன் விளங்கும் தேவ உலகின் எல்லை யெங்கும் கொடிய நெருப்பை பற்ற வைத்து கொழுத்தலோடும் விரைவுடன் தேவ உலகம் எரிந்து சாம்பராகிப் பொடிந்து போயது; எப்படியெனில் முப்புரங்களும் எமது சிவபிரான் புன்சிரிப்பினுல் எரிபட்டு சாம்பராய தன்மை போன்றது, 94

ஊழியின் அன்றி என்றும் ஒழிவுறத் துறக்க மூதூர்
பூழிய தான தன்றே புரந்தரன் வறியன் போனான்
வீழுறு சிறையின் உற்றார் மிக்கவ ரென்றால் யாரும்
வாழிய செல்வந் தன்னை நிலையென மதிக்க லாமோ.

உலக அழிவான ஊழிக் காலத்திலல்லாமல் மற்றும்படி என்றும் அழிவுறாத சொர்க்க உலகம் என்னும் முதிய நகரம் சாம்பராகி புழுதியாயது; சொர்க்க நாட்டில் பெருஞ் செல்வத்துடன் வாழ்ந்த இந்திரதேவன் எல்லாம இழந்து வறுமை கொண்டானாய் ஒளித்து ஓடினான், மேலானவர் எனச் சொல்லப்பெறும் தேவர்கள் நீக்கமுடியாத சிறையில் அகப்பட்டனர் என்றால் வாழ்வு தருகின்றதானது என நாம் எண்ணும் இந்த செல்வத்தை நிலையானது என நாம் மதிக்கலாகுமா? இல்லையே. 95

அளிபட லின்றி யென்றும் அலர்தரு நிழற்றும் மூதூர்
வெளிபடு சுடலை போலாய் வேற்றுருக் கோட லோடுங்
களிபடு பானு கோபன் கண்டனன் அவுணர் தம்மில்
ஒளிபடு காவ லோரை நோக்கியீ துரைக்கல் உற்றான்.

வண்டுகள் மொய்யாதே எக்காலமும் மலர்கள் மலருகின்ற வேண்டியதை உதவும் கற்பக விருட்சங்கள் நிழலைச் செய்கின்ற தேவ உலகம் எரிந்து சாம்பராகி வெட்ட வெளியான சுடலைபோலாகி வேறு வடிவாதலோடும் அதனை வெற்றியால் மகிழ்வாகிய பானுகோபன் கண்டனன், அசுரர்களிலே பிரசித்தி வாய்ந்த காவலாளிகளை நோக்கி இதனைச் சொல்லலுற்றான். 96

தாதுலாந் தெரிய லாகச் சயந்தனை அவனோ டுற்ற
ஏதிலார் தம்மைப் பின்னோர் யாரையுங் கொடுமுன் நீவிர்
போதிரால் என்ன அற்றே போயினர் உவணை நீங்கி
ஆதவன் பகைஞன் மீளா அனிகமோ டவனி வந்தான்-

மரகதப் பொடி நிரம்பும் மலர்களாலான மாலையணிந்த மேனி கொண்ட சயந்தனை அவனோடு பொருந்திய பகைவரான தேவர்களை பின்னாக நீங்கள் சிறைப் படுத்திய ஏனையோரை யாரையுங் கொண்டு முன்னாக நீங்கள் போங்கள் எனலும் அவ்வாறே அசுரகாவலர் தேவ உலகை நீங்கி சிறைப்படுத்தியோருடன் சென்றார்கள், சூரியன் பகைவன் பானுகோபன் மீண்டு திரும்பி பூமி மேலாக வந்தான். 97

மாநில மதிக்கும் வீர மகேந்திர புரத்துப் புக்குக்
கோனகர் முன்னம் ஏகிக் கொடிஞ்சிமான் தேரின் நீங்கிச்
சேனையை நிறுவி வானச் சிறையினைக் கொண்டு சென்று
தா்னவர் மன்னன் முன்போய்த் தாள்முறை வணக்கஞ் செய்தான்.

இப்பெரிய பூமியில் உள்ளார் மதிக்கின்ற வீர மகேந்திர நகரில் பானுகோபன் புகுந்து சூரனது அரண்மனை கொண்ட தலைநகரின் முன்னாகச் சென்று கூம்பு பொருந்திய குதிரைகள் பூட்டப்பட்ட தேரினின்றும் இறங்கி, சேனைகளை அவ்விடத்து நிறுத்திவிட்டு தேவ உலகில் சிறைப்படுத்தியோரையுங் கொண்டுசென்று அசுரர் அரசனான சூரபன்மன் முன்னாகச் சென்று காலிலே முறைப்படி வணக்கம் செலுத்தினான் பானுகோபன். 98

தண்டுளி நறவ மாலைத் தாதைதாள் வணங்கி எந்தாய்
கண்டிலன் சசியை வானோர் காவலன் தனையுங் காணேன்
அண்டரைச் சயந்தன் தன்னை யாரையுங் கொண்டு சென்றேன்
விண்டொடர் துறக்க முற்றும் வெங்கனல் கொளுவி என்றான்.

குளிர்ச்சி வாய்ந்த தேன் துளிகளைக் கொண்ட மாலையணிந்த தந்தையின் காலை வணங்கி; எனது தந்தையே கேட்பீராக. இந்திராணியை நான் தேடிக் காணவில்லை. தேவர்கட்கு அரசன் இந்திரனையும் யான் கண்டிலேன், தேவர்களை, சயந்தனை மற்று தேவ உலகில் உள்ள எல்லாரையும் பிடித்துக்கொண்டு வந்துள்ளேன், வானத்தில் உள்ள சொர்க்க உலகம் முழுவதையும் கொடிய நெருப்பை இட்டு, கொளுத்திச் சாம்பராக்கிய பின்னர் தான் இங்கு வந்தேன் என்றான். 99

என்றலும் மகிழ்ந்து சூரன் இளஞ்சிறு குமரற் புல்லித்
தன்றிரு முன்னர் இட்ட சயந்தனை முதலி யோரைக்
கன்றினன் உருத்து வாட்கைக் காவலர் சிலரை நோக்கித்
துன்றிய இனையர் அங்கம் யாவையுந் துணித்திர் என்றான்.

என்று பானுகோபன் கூறலும் சூரபன்மன் மகிழ்ந்து இளமையான கோலம் நிரம்பிய அழகுடைய தனது மைந்தனைத் தழுவி, தனது திருமுன்பாக கொண்டு வந்து நிறுத்தப்பட்ட சயந்தன் முதலாக உள்ள தேவரைக் கண்டவுடன் மனம் கறு வியமாகி கோபித்து, வாளைக் கையில் ஏந்தியபடி நின்ற காவலாளரில் சிலரைப் பார்த்து; நெருங்கி இருக்கின்ற இத்தேவர்களுடைய அங்கங்கள் யாவையும் நீங்கள் இப்பொழுது வெட்டி வீழ்த்துங்கள் என்றான். 100

இரலைமான் தொகுதி தன்மேல் இருஞ்சிறை வீடு பெற்ற
உருகெழு புலிபாய்ந் தொப்ப ஒப்பிலா அரசன் சொல்லால்
விரைவுடன் அவுணர் பல்லோர் விண்ணவர் தம்பால் மேவித்
துருவையின் முகத்தி காணத் துண்ணெனத் துணிக்கல் உற்றார்.

இக்கட்டளையை மேற்கொண்டு; கலைமான் கூட்டத்தின் மேலாக சிறை வைக் கப்பட்ட கூண்டில் நின்று தப்பிய பெருங் கோபமுடைய புலி பாய்வதைப் போன்று தனக்கு ஒப்பு வேறொருவர் இல்லாத சூரபன்மனின் சொற்படி விரைவுடன் அசுரர் பலர் தேவர்கள் தம்பால் பாய்ந்தோடிச் சென்று ஆட்டுமுகமுடைய அசமுகி காணும் படி திடீர் திடீரென தேவர்களது உடலின் அங்கங்களை வெட்டி வீழ்த்தினார்கள், 101

கரத்தினைத் தாளைத் தோளைக் கன்னமூ லத்தைக் கல்லென்
றரற்றுறு கண்டந் தன்னை அணிகெழு துண்டந் தன்னைச்
சிரத்தினைத் துணிப்ப அன்னோர் சிறியரோ செய்த நோன்பின்
உரத்தினில் அவைக ளெல்லாம் உடனுடன் பொருந்த லுற்ற.

தேவர்களது கைகளை, கால்களை, தோள்களை, காதினடிகளை கலீரென ஓசை தரும் கழுத்தை, அழகு விளங்கும் மூக்கினை, தலையை வெட்டி வீழத்தலும்; அத்தே வர் தானும் என்ன சிறியவர்களோ? இல்லை, அவர்கள் செய்த தவத்தின் வலிமையால் அவர்களது உறுப்பெல்லாம் வெட்ட வெட்ட மீண்டும் முன்போலவே வந்து பொருந் திக் கொண்டன. 102

செல்லரு நெறிக்கண் நின்ற சேணுளார் தம்மை யாருங்
கொல்லரி திறையும் அங்கங் குறைத்தலும் அரிதா மென்றாற்
சொல்லரி தினையர் வன்மை தொலைந்ததெம் வரத்தா லென்னா
வல்லரி புரைவெஞ் சூரன் மதித்துமற் றதனைக் கண்டான்.

இந்த அற்புத நிலையைக் கண்டுகொண்ட சூரபன்மன் யாவராலும் அடைதற் கரிய தேவ உலக வாழ்க்கை பெற்றுக்கொண்டு விண் உலகத்திருக்கின்ற இத்தேவர் களை யாருங் கொல்ல முடியாது, அல்லது அங்கங்களையும் வெட்டி வீழ்த்தி விடலும் அரிது என்றால் இத்தேவர்களுடைய வலிமை சொல்லமுடியாதல்லவோ? இப்படியான இவர் வலி யெல்லாம் தொலைந்து போயது; என்னுடைய வரத்தின் மேம்பாட்டினாலல்லவோ என்று வலியையுடைய சிங்கத்தை ஒத்த சூரபன்மன் தனது மனதில் மதித்து; தேவர்களை வெட்டியபோதாக ஏற்படும் நிலை யாவையும் கண்டான். 103

கண்டனன் முனிந்தின் னோரைக் காலமொன் றுனும் வீடா
எண்டரு நிரயம் போலும் இருஞ்சிறை இடுதி ரென்றே
திண்டிறல் அசுரர் கேட்பச் செப்பலுஞ் சயந்தன் றன்னை
அண்டரைப் பிடர்தொட் டுந்தி ஆங்கனங் கொண்டு போனர்.

இத்தன்மையை சூரன் கண்டவும் கோபம் கொண்டு இத்தேவரை ஒரு காலத்திலும் நீங்கமுடியாதிருக்கின்ற பெரும் எண்ணிக்கை கொண்ட நரகம் போலும் பெரிய சிறையில் இடுவீராக; என்று திண்மையான வலிமை பொருந்திய அசுரர் கேட்கும்படி கட்டளை செய்தலும் அக்கட்டளைப்படி தேவர்களை அசுரர் பிடரியில் தொட்டு தள்ளிக்கொண்டபடியே கொண்டு சென்றனர். 104

போயினர் சிறையின் எல்லை போற்றினர் தம்மை நோக்கி
ஏயினன் நங்கோன் இன்னோர் யாரையுங் காவல் கொண்மின்
நீயிர்க ளென்னு ஒற்றர் நீங்கினர் நின்றோர் தம்மை
ஆயவர் வல்லி பூட்டி அருஞ்சிறைக் களத்தில் உய்த்தார்.

சிறைச்சாலையின் இடத்தில் அத்தேவர்களைக் கொண்டு சென்று சிறைச்சாலையைக் காவல் கொண்டோரைப் பார்த்து இவர்களை இங்கு சிறை வைக்கும்படி எங்கள் அரசன் கட்டளையிட்டான். ஆகவே இவர்களை நீங்கள் சிறையில் இட்டு காவல் கொள்ளுங்கள் என்று கூறிவிட்டு தூதுவர் போய்விடுதலும்: அங்கு நின்ற சிறைக் காவலர்கள் தேவர்களுக்கு கைகளில் விலங்கினைப் பூட்டி நீக்கரிய சிறைக்களத்தில் உடன் சேர்த்தார்கள். 105

மன்னவன் அதற்குப் பின்னர் மைந்தனை அன்பால் நோக்கி
நின்னக ரத்திற் போதி நீயென அனையன் போனன்
அன்னதோர் சூர பன்மன் அவையொரீஇ உறையுள் புக்கான்
இன்னலங் கடலில் உற்றார் இருஞ்சிறைப் பட்ட வானோர்.

சூரபன்மன் அதற்குப் பின்னர் மகன் பானுகோபனை அன்பால் பார்த்து உனது நகரத்திற்கு நீ செல்வாயாக என்னலும் பானுகோபன் சென்றான். அப்படியாக கொடுமை புரிந்த அந்த சூரபன்மன் அரச சபையை விடுத்து தனது அரண்மனை இருப்பிடத்தில் புகுந்தான். இன்னலான துன்பக் கடலை அடைந்துகொண்டு கொடிய சிறையில் அடைக்கப்பெற்றனர் சயந்தன் முதல் தேவர்கள் யாவரும். 106

வேறு

காடு போந்தனன் இந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது சயந்தனுஞ் சிறையிடைப் பட்டான்
நாடில் விண்பதச் செய்கையீ தெம்பிரான் நல்கும்
வீட தேயலால் துன்பறும் ஆக்கம்வே றுண்டோ.

பன்னிரு கையுடைய எம் ஐயனே! இந்திரதேவன் சீகாழியின் வனத்தில் ஒளித்து ஓடினன், பொன்னுன தேவ உலகம் எரிந்து கரிந்து சாம்பராகியது. சயந்தனும் நீங்கிடாத சிறைச்சாலையிடத்து அகப்பட்டான். பலரும் விரும்பும் வானுலக வாழ்வின் நிலையை நாடி நாம் பார்த்தால் இந்த நிலையாயது. இன்பம் என நினைந்தது துன்பமாகியதால் எக்காலமும் துன்பம் இலாத பொருள் உண்டெனில் எம்பிரான் தந்தருளுகின்ற முத்தியான பேரானந்தம் அல்லாது வேறொரு செல்வம் உண்டோ; இல்லை. 107

படவர வனையதோர் பருமஅல்குலார்
இடுகிய நுண்ணிடை எழில ணங்கினோர்
கொடுமைசெய் அவுணரூர் குறுகி வேடர்பால்
பிடியுறு மஞ்ஞையிற் பெரிதும் அஞ்சினர்.

பாம்பின் படத்தை ஒத்து விளங்கும் பருத்த அல்குலை உடையவரும், சிறுகிய நுண்மையான இடையை உடையவருமாகிய அழகிய எழிலுடைய தேவப் பெண்கள் கொடுமை செய்கின்ற அசுரரது ஊரிற் கொண்டு செல்லப்பெற்று அங்கு வேடரிடத்தில் பிடிபட்டு அவர்களுக்கு மிகவும் பயப்படும் மயிலைப்போன்று கலக்கமுற்று, பெரிதும் பயத்தால் பதைபதைத்தனர். 108

சூரன்வாழ் பெருநகர் துன்னிக் காப்பொடு
சீரிலா ஏவல்கள் செய்து மேவினர்
கூரும்வாய் வெங்குரீ இக் குடம்பை உய்த்திடப்
பேருரு திலகுமின் மினியின் பெற்றிபோல்

சூரபன்மன் வாழ்கின்ற நகரில் இப்பெண்கள் அடைந்து ஒரு காலமும் தப்பிக் கொள்ள முடியாதபடி அசுரர் இடங்களில் ஏவல் பெண்களாக வைக்கப்பட்டு சீரில்லாத பல ஏவல் பணி செய்து கொண்டிருந்தனர்; எப்படியெனில் கூரிய வாயுடைய கொடிய குருவியொன்று தனது கூட்டில் கொண்டுசென்று சேர்த்துவிடலால் தப்பி ஓட முடியாது இலங்கிக் கொண்டிருக்கும் மின்மினி பூச்சியின் தன்மைபோல். 109

வாடிய மகபதி மதலை வானுளோர்
ஆடுறு துயர்க்கடல் அழுந்திச் சூரர்கோன்
வீடருஞ் சிறையிடை மேவி னரவர்
பாடுறு திறத்தையார் பகரற் பாலினோர்.

வாட்டங்கொண்ட இந்திரன் மைந்தன் சயந்தனும் தேவர்கள் யாரும் தாங்கள் ஓயாது மூழ்குகின்ற துன்பக் கடலில் அழுந்திக் கொண்டு கவலையும் இன்னலும் என்ஞான்றும் பெருக சூரபன்மனது நீக்கமுடியாத சிறை இடத்து அடைபட்டுக் கொண்டார்கள், அவர்கள் அங்கு அநுபவிக்கும் வேதனையின் திறத்தை யார்தான் எமது ஐயனே, எடுத்துச் சொல்ல முடிந்தவர்? 110

இன்னலங் கடலினும் எடுத்து வீடுதந்
தன்னவர் பெருஞ்சிறை அகற்றும் வன்மையார்
பின்னெவர் உண்டுயிர் பெற்றுக் காத்திடு
முன்னவர் தமக்கெலா முதல்வ நீயலால்.

இன்னலாகிய துயரக் கடலில் நின்றும் அவர்களை எடுத்து நீக்கி நன்னிலை தந்து அவர்களது நீங்கிடாத பெருஞ் சிறையை நீக்கும் வலியுடையார் பின்னால் வேறு யார் இருக்கின்றார்கள்? உயிர்கள் எல்லாவற்றையும் பெற்றுக் காத்திடுகின்ற முற்பட்ட தேவர்க்கெல்லாம் முதல்வனான தேவரீர் ஒருவனே அல்லாது வேறொருவரில்லை. 111

வியந்தரு கதிரைமுன் வெகுண்டு ளானெடு
சயந்தன்விண் ணுலகிடைச் சமர்செய் தெய்த்துழி
வயந்தரு கோடுகண் மாய்ந்து தந்திவீழ்ந்
தயர்ந்தது புவியிடை அனுகிற் றத்துணை.

பெருமை பொருந்திய சூரியனை முற்காவத்தில் கோபித்த பானுகோபனுடன் சயந்தன் வானுலகில் போர் செய்து களைப்புற்ற பொழுதில் வெற்றி பொருந்திய தனது நான்கு கொம்புகளும் ஒடிந்துபோக ஐராவத யானை வீழ்ந்து மயங்கியது. பின்னராக தெளிவு பெற்றுக்கொண்டு பூமி இடத்தாகச் அந்நேரமே சென்றது. 112

வாலிய ஒளிகெழு வனத்தில் ஏகியே
மூலம தாகிய முக்கண் மூர்த்தியை
மேலுள தாணுவின் மேவச் செய்துபின்
சீலமொ டருச்சனை செய்து வைகிற்றே.

அந்த ஐராவதம் அருள் நிறைந்த ஒளி விளங்கும் திருவெண்காட்டில் சென்று எப்பொருட்கும் மூலமாகிய மூன்று கண்ணுடைய சிவமூர்த்தியை மேன்மையாகும் சிவ லிங்கத்தில் பொருந்தச் செய்து, பின்னுக சீலமாகிய விரத நெறியுடன் விதிப்படி அருச்சனை புரிந்து அங்கு தங்கி இருந்தது. 113

அறிவுள மால்கரி அமலன் தந்திர
முறையது நாடியே முதிரும் அன்பினுல்
மறையுற வழிபடீஇ வைகும் எல்லையில்
குறைபடு நாற்பெருங் கோடும் வந்தவே.

அறிவு உள்ள பெரிய ஐராவத யானை சிவபிரான் அருளிச் செய்த ஆகம விதியினை நாடி, முதிர்ந்த அன்பினுல் அசுரர் காணுவகை மறைவாக பூசை செய்து இருந்த காலத்து முறிவாகிப்போன அதனுடைய நான்கு கொம்புகளும் முன்போல வளர்ந்து கொண்டன. 114

பார்ப்பதி மருங்குறு பகவன் ஆணையால்
மாற்பெருங் களிற்றிடை வல்லை முன்புபோல்
நாற்பெருந் தந்தமும் நண்ண நோக்கியே
ஏற்பரு மகிழ்ச்சியோ டிருந்த தவ்விடை.

பார்ப்பதி அம்மையாரின் பாகராகிய சிவபிரான் அருளாய ஆணையால் மதம் பொழியும் பெரிய ஐராவத யானையிடத்து விரைவுடன் முன்புபோல நான்கு பெரிய தந்தங்களும் வரலும் அதனை யானை பார்த்து அடைதற்கரிய மகிழ்வுடன் அங்கு இருந்தது. 115

வேறு

ஆயதோர் அமைதி யின்கண் அணங்கொடு மேரு வெற்பிற்
போயின அமரர் கோமான் பொன்னகர் சூரன் மைந்தன்
காயெரி கொளுவி அங்கட் கடவுளர் குழுவி னேனைச்
சேயொடு பற்றி ஏகிச் சிறைசெய்த தன்மை தேர்ந்தான்.

அவ்வாறுகிய கால அமைதியில் இந்திராணியுடன் மகாமேரு மலையில் போயின தேவ அரசன் இந்திரன்; தேவ உலகை சூரபன்மன் மைந்தன் பானுகோபன் கொடிய நெருப்பைமூட்டி எரித்து அங்குள்ள தேவர் கூட்டத்தினரை மகன் சயந்த னுடன் சிறைப்படுத்திக்கொண்டு சென்ற தன்மையை அறிந்து கொண்டான். 116

தேர்ந்தனன் தளர்ந்து மேருச் சிலம்பினின் மகவான் பன்னுள்
வார்ந்திடு கங்கை வேணி வள்ளலை உன்னி நோற்பச்
சார்ந்துநிற் கென்னை வேண்டுஞ் சாற்றென முதல்வன் நீதி
பேர்ந்தசூர் கிளையைச் செற்றெம் பேதுற வகற்று கென்றான்.

இந்திரன் இதனைத் தெரிந்து கவலையால் தளர்ந்து மகாமேரு மலையில் பலநாளாக பெருகுகின்ற கங்கையைச் சடையில் உடைய கடவுளை நினைந்து தவம் புரிய, சிவபிரான் வெளிப்பட்டுத் தோன்றி இந்திரனே, உனக்கு யாது வேண்டும் சொல்வாயாக; என்னலும் அதுவேளை இந்திரன்; முதல்வரே! நீதியை விடுத்துள்ள அசுரர் கிளையை மாய்த்து அவரால் நாம் அடைகின்ற அல்லலைத் தீர்ப்பீராக; எனவேண்டினுன். 117

என்றலும் எந்தை சொல்வான் யாமுமை தன்னை மேவி
ஒன்றொரு குமரன் றன்னை உதவுவம் அவனே போந்து
வென்றிகொள் சூர ளுதி அவுணரை விரைவிற் செற்று
மன்றநும் முரிமை ஈவன் வருந்தலென் றுரைத்துப் போனன்.

என்று இந்திரன் வேண்டலும் எம்பிரான் சொல்லியருள்வார்; நாம் உமையம்மையாரைத் திருமணஞ் செய்து அருளால் கூடி தான் ஒருவனேயாகி குறைவுநிறைவு அற ஒன்றாய் விளங்கி உலகிற்கு அருள் புரியும் குமரனை தந்தருளுவோம். அக்குமரனே வந்து வெற்றியுடன் விளங்கும் சூரன் ஆதியாகச் சொல்கின்ற அசுரரை விரைவில் அழித்து சிறப்பாக உமது உரிமைகளைத் தருவான்வருந்தாதீர் எனக் கூறி மறைந்தருளினர் 118

சாதலுந் தொலைவும் இல்லாத் தானவர்க் கிறைவன் ஏனோர்
ஏதிலர் தம்மால் வீடான் என்றுதன் உளத்தி லெண்ணிச்
சோதிகொள் பரம மாகித் தோன்றிடு முதல்வன் நீயே
ஆதலின் விமல மூர்த்தி அவரைமே லடுதி யென்றான்.

சாதல் தொலைவு என்பன இல்லாத அசுரர்க்கரசனை சூரபன்மனும் ஏனோரான அசுரரும் மற்று எவராலும் அழியமாட்டான் என்பதை தமது திருவுளத்து எம்பிரான் எண்ணியருளி சோதியாய் எங்கும் நிறைகின்ற பரம்பொருளாகித் தோன்றிடுகின்ற முதல்வர் தேவரீரே ஆதலின் நிர்மல சொரூபரான சிவமூர்த்தி அந்த அசுரரைதேவரீர் பின்னுள் சங்கரிப்பீர் என இந்திரனுக்கு எடுத்து உரைத்தருளினர்; 119

அவ்வுரை மகவான் தேறி அரியய னோடு சூழ்ந்து
மைவரு களத்தோன் தன்பால் மதனனை உய்ப்ப அன்னோன்
மெய்விழி எரியின் மாய்ந்து வெறுந்துகள் படலுந் தேவர்
எவ்வெவ ரும்போய் வேண்ட இரங்கியே கருணை செய்தான்.

அந்த வார்த்தையை இந்திரன் தெளிந்துகொண்டு பின்னர் சிவபிரான் யோகத்தமர்த்தமை உணர்ந்து அதனை நீக்க திருமால் பிரமன் முதலியரோடு ஆலோசித்து யோகநிலையை நீக்கும் பொருட்டாக அவன் கருமைதரு கண்டமுடைய சிவபிரான் பாலாக மன்மதனை அனுப்ப; சென்ற மன்மதனுடைய மேனி எம்பிரானது நெற்றிக் கண்ணின் நெருப்பால் எரிந்து வெறும் சாம்பராகலும்; அதன்பின் தேவர்கள் எல்லாரும் சென்று எம்பிரானை வேண்டிப் பிரார்த்திப்ப அவர்கள் மீது இரக்கம் கொண்டு கருணை செய்தருளினர். 120

அரியயன் மகவான் தேவர் அருங்கணத் தலைவர் யாரும்
பரவுற இமய வெற்பிற் படர்ந்துபின் உமையை வேட்டுப்
பிரிவருங் கயிலை நண்ணிப் பின்னெம திரக்கம் நாடிக்
கருணையால் எந்தை நின்னை நெற்றியங் கண்ணால் தந்தான்.

திருமால் பிரமன் இந்திரன் தேவர்கள் அரிய கணநாதர்கள் யாரும் வணங்கும் படி சிவபிரான் இமயமலையில் சென்றருளி, பின்னர் உமையபமையாரைத் திருமணம் செய்தருளி பின்பு தாம் பிரியாத திருக்கைலாய மலையைச் சேர்ந்து அதன பின்பு எம்மீது உற்ற துயரம் நீக்கிட இரக்கம் கொண்டு கருணையினல் எம்பிரான் தேவரீரை தனது நெற்றிக் கண்ணினின்றும் தந்தருளினர். 121

எந்தைநீ வந்த பின்றை இந்திரன் அயன்மால் தேவர்
அந்தமில் முனிவர் ஏனோர் அனைவர்க்கும் அகன்ற ஆவி
வந்தது போன்ற தம்மா வலியவெஞ் சூரற் செற்றுத்
தந்தம தரசு பெற்ற தன்மையர் போல வுற்றர்.

எந்தை பிரானே திருச்செந்தூர் அமர்ந்தருளும் தேவே, நீர் வந்தருளிய பிற்பாடு இந்திரன் பிரமன் திருமால் தேவர்கள் முடிவு இல்லாத முனிவர்கள் இன்னும் ஏனையோர் அனைவர்க்கும்; நீங்கிய உயிர் திரும்பி வந்தது போன்றது. அம்மாவோ வலிமையும், கொடுமையும் உடைய சூரனை அழித்து தங்கள், தங்கள் அரசியல் முறையை திரும்பப் பெற்றவர்போல மகிழ்வாகி இருக்கின்றர். 122

ஆழ்தரு முந்நீர் நேமி அகன்கடல் அழுவம் புக்கு
வீழ்தரு வோர்கள் தம்பால் வியன்கல மொன்று சேர
ஊழ்தரு தொடர்பாற் பற்றி உய்ந்தெனத் துன்ப வேலைக்
கீழ்தரு வோர்கள் நின்னற் கிளர்ந்துமேல் எழுதல் உற்றர்.

ஆழ்ந்துள்ளதும் ஆற்றுநீர், மழை நீர், ஊற்றுநீர் எனும் மூவகை நீராலும் நிறைவுற்றும் அகன்று பரந்த பெரிய சமுத்திரத்தில் புகுந்து வீழ்ந்து அமிழ்ந்து போய் அவதியுறுவார்க்கு தெய்வாதீனமாக ஓர் பெரிய தோணி அங்கு வருதலும் ஊழ்வினையின் தொடர்ச்சியால் அந்த தோணியைப் பிடித்து ஏறிக்கொண்டு உய்ந்துள்ளார் போன்று; துன்பமாகிய கடலிலே மூழ்கி கீழாகச் சென்று துயரடைந்த இவர்கள் எல்லாரும் உம்மால் உய்ந்து மேலான இன்பக் கரைசேரப்பெற்றர்கள். 123

புரந்தரன் முதலா உள்ள புங்கவர் எம்மனோர்கள்
அரந்தையை அகற்ற உன்னி ஐயநீ போந்த பின்னுந்
தெரிந்திடு துணிபிற் சேர்ந்துந் தெம்முனைச் சூரற் கஞ்சிக்
கரந்தனர் இருந்தார் காணிற் கடுஞ்சிறைப் பிணிப்ப னென்ன.

இந்திரன் முதலாக உள்ள தேவர்களான எங்களுடைய எல்லாரின் கவலைகளை நீக்க நினைந்தருளி ஐயனே தேவரீர் இங்கு போந்தருளிய பின்பும் தேவரீர் எமது துன்பத்தை ஒழிப்பது நிச்சயமென்பதை துணிவில் கொண்ட பின்பும்கூட கொடிய போரினை செய்து வெற்றிகொள்ளும் சூரபன்மனுக்கு பயந்து இன்னமும் இத்தேவர்கள் ஒளித்து இருப்பார்கள்' ஏனெனில் சூரபன்மன் தங்களைக் கண்டால் கடுமையான சிறையில் வைப்பான் என்பதனல். 125

எம்பிரான் நின்னை முக்கண் எந்தையை வணங்க நேரில்
தம்பெரு வடிவங் காணச் சாருவர் ஒழிந்த காலை
உம்பர்கோன் முதலோர் தத்தம் உருக்கரந் துழல்வர் வான்மேல்
வெம்பணி சிலைகண் மாறும் வெய்யவர் நிலைமை யேபோல்.

எம்பெருமானே! தேவரீரை மூன்று கண்ணுடைய எமது அப்பன் சிவபிரானே வணங்கும்படியான காலம் நேர்கின்றபோதுதான் இத்தேவர்கள் தங்களது பெருமையான வடிவைக் காணும்படி வருவார்கள் இதுவன்றி மற்றைய நேரத்தில் எல்லாம் தேவ அரசன் இந்திரன் முதலோர்கள் தங்கள் உருவினை மறைத்துக்கொண்டு உழன்று திரிவார்கள். எதுபோலும் எனில், வானில் சூரிய சந்திரரை மறைக்கும் காலத்தில் மட்டும் தோற்றமாகும் கொடிய ராகு கேதுக்கள் போன்றும்; மேகம் தோன்ற மட்டும் தோன்றும் வானவில்லைப்போன்றும்; பிரதி சூரியன் பிரதி சந்திரன் என உலகில் தீமை சம்பவிக்கும் கால் தோற்றமாவார் போன்றும். 126

மறைந்திடு பாங்கர் இன்ன வாசவன் முதலோர் யாரும்
அறந்தவிர் சூர பன்மன் அடுபடைத் தலைவர்க் காணிற்
பறைந்திட மார்பம் உள்ளம் பனித்திட வியர்ப்ப யாக்கை
இறந்தன ராகிப் பின்னர் இன்னுயிர் பெறுவர் அன்றே.

இந்த இந்திரன் முதலியோர் மறைந்திருக்கின்ற இடத்து தருமத்தை நீங்கிய சூரபன்மனது கொலை செய்யும் சேனைத் தலைவர் வருதலை இவர்கள்கண்டால் நெஞ்சு படபடக்க உள்ளம் நடுங்க மேனி வியர்க்க இறந்தார்போல பயத்தால் சோர்வடைவார்கள்; அவர்கள் போனபிற்பாடுதான் தங்கள் உயிரைப் பெற்றுள்ளவர் போல் சோகம் தெளிவார்கள். 126

வினைப்பவம் உழந்த விண்ணோர் வெந்தொழில் அவுணர் கோனை
நினைப்பினும் அவச மாவர் நெடுந்துயில் பெறுத நீரால்
மனப்படு கனவு நீத்தார் மற்றது வருமேல் அங்கண்
உனப்படு சூரற் காணின் உயிரையும் இழப்பர் அம்மா.

தாம் செய்துள்ள பாவத்தால் விளைந்த கொடிய தீவினைப் பயனை அனுபவிக்கின்ற தேவர்கள் கொடும் தொழிலை உடைய அசுரர் தலைவன் சூரபன்மனை நினைத்தாலும் சோர்வுகொள்வார்கள்; இத்தேவர்கள்மிகுதியான நித்திரையைப் பெற்றுக்கொள்ளாதஇயல்பான தன்மையால் மனத்தில் தோன்றும் கனவினை நீங்கினார்கள். அந்தகனவு தென்படுமாகில் கனவில் நினைக்கப்படுபொழுதே, தாங்கள் ஏக்கமுறும் சூரனைக் கண்டால் தம் உயிரையே பயத்தால் இழந்துவிடுவார்கள். 127

பொன்னகர் இறுதி செய்து புதல்வனை அமர ரோடு
துன்னருஞ் சிறையுட் சேர்த்தித் துயர்ப்பெருங் கடலுள் வீட்டி
மன்னிய வெறுக்கை வவ்வி மனையொடு கரப்பச் செய்தும்
இன்னமும் அவுணர் கோமான் இந்திரற் கலக்கண் சூழும்.

பொன்னுன தேவ உலகை முடிவுசெய்து பொடியாக்கி இந்திரன் புதல்வன் சயந்தனைத் தேவரோடும் போக முடியாத துன்பம் தரும் சிறையுள் வைத்துத் துயரமான கடலுள் அவர்களை வீழ்த்தி கவலையுறவைத்தும் மேலாங்கிப் பெருகிய இந்திரன் செல்வத்தைச்சூறையாடி; மனைவி இந்திராணியுடன் ஒளித்திருக்கும்படி செய்தாலும் கூட இன்னமும் இது போதாதென்று அசுரர் தலைவன் சூரபன்மன் இந்திரனுக்கு துயரம் செய்யஎண்ணுவான். 128

ஒப்பரும் வெறுக்கை தன்னால் ஓங்கிய விறலாற் சீரான்
மெய்ப்படு மிடலால் யார்க்கும் மேன்மையால் அழியா வாற்றல்
இப்பகல் வானோர்க் கெல்லாம் இடர்புரி கொடுமை நீரால்
அப்பெருஞ் சூரற் கென்றும் ஆரும்நேர் அன்று மாதோ.

நீகரற்ற செல்வத்தால் மேலோங்கிய வலியால் சீரினுல் அழிவிலாத பலத்தினுல் எல்லார்க்கும் மேன்மைபூண்ட நிலையால், இறவாத நிலையால் இன்றுவரையும் தேவர்க்கெல்லாம் இடர்புரிகின்ற கொடுந்தன்மையால் அந்த பெரிய சூரபன்மனுக்கு எம் பகவானே ஆரும் இந்நிலையில் நேரில்லை. 129

ஏயதோ ரண்ட மொன்றின் இழைத்தன இவ்வா றேனை
ஆயிரத் தோரேழ் அண்டத் தவன்செயல் அறிதல் தேற்ருந்
தூயதோர் பரத்தின் மேலாஞ் சோதியாய் எம்மைக் காப்பான்
மேயின ஒருநீ அன்றி வேறியார் தெரிதற் பாலார்.

எம்பிரானே, யாம் சொல்லியவாறு இந்த ஒரு அண்டத்தில் செய்த செயலின்படி ஏனைய ஆயிரத்துஏழு அண்டத்திலும் அவன் செய்கின்ற செயலை நாம் அறிய மாட்டோம். தூயதான பரம்பொருளின் மேலாகிய சோதியாய் உயிர்க்குயிராய் எங்கும் நிறைவாகி எல்லாம் அறிந்து எம்மை யெல்லாம் காத்தருளும்படியாக எழுந்தருளிவந்த தேவரீர் அன்றி வேறு யார் இதனைத் தெரிந்து கொள்வார். 130

தொடர்ந்திடு சீர்பெற் றுள்ள சூரன தாணை என்னில்
கடந்திடல் புரியார் மாலுங் கமலமேல் அயனும் வானோர்
அடங்கலும் முனிவர் யாரும் ஆயிர விருநா லண்டத்
தொடுங்கிய உயிரும் அன்னேன் பெருமையார் உரைக்கற் பாலார்.

தொடர்ந்து ஒன்றின் மேலாகி ஒன்ருய் நிகழ்வுறுகின்ற கீர்த்திகளையுடைய சூரபன்மனது கட்டளை என்ருல் அதைக் கடந்து ஏதும் செய்யார்கள், திருமாலும் தாமரைமேல் பிரமனும் தேவர்கள் அடங்கலும் முனிவர்கள் எல்லாரும் இந்தப் பெரிய ஆயிரத்தெட்டு அண்டத்துள்ளே ஒருங்கி வாழ்கின்ற அத்தனைஉயிரும் என்ருல் அந்த சூரபன்மனுடைய பெருமையை யார் எடுத்துப் பேசமுடியும். 131

முடிவிலிவ் வளம்பெற் றுள்ள முரண்கெழு சூர பன்மன்
கெடுகிலன் அன்று மேலோன் கிளத்திய வரத்தின் சீராற்
படியறும் அமல மேனிப் பரஞ்சுடர் குமர நீயே
அடுவதை அன்றிப் பின்னர் அவனையார் முடிக்கற் பாலார்.

முடிவில்லாத வளங்கள் பெற்றுள்ள வலிமைகொண்ட சூரபன்மன் இன்னமும் அழியான் அன்று முதல்வரான சிவபிரான் கொடுத்தருளிய வரத்தின் சிறப்பினுல்; ஆகவே எழுதிக் காண்பிக்கொணுத சிறப்புடைய நின்மலமாய திருமேனிகொண்ட பரஞ்சுடராய குமரனே! நீயே அவனைச் சங்காரம் செய்வதையன்றி பின்னர் அவனை யார் முடிவு செய்யும் தகைமை உடையார். 132

ஐந்தியல் அங்கஞ் சூரற் கயன்புகன் றுழல்வான் நாளும்
இந்திரை கேள்வன் போர்செய் தெஞ்சினன் எவர்க்கும் மேலாய்
முந்திய சிவன் அன் னேற்கு முதல்வரம் அளித்தான் பின்னர்
வந்தடல் புரியான் நீயே மற்றவற் கோறல் வேண்டும்.

பிரமதேவர் சூரபன்மனுக்கு பஞ்சாங்கம் தினம் தோறும் சென்று சொல்லிக் கொண்டு அலைந்து திரிவார் மகாலெட்சுமி நாயகர் நாராயணக் கடவுள் அவனுடன் போர்செய்து தோற்றுவிட்டார்; எல்லார்க்கும் மேலவரான முன்னைப் பொருளான சிவபிரான் அவர்களுக்கு முதன்மையான வரங்கள் கொடுத்தார்; ஆகையால் பின்னுக வந்து அவர்களைச் சங்காரம் செய்யார்; ஆதலின் எம் ஐயனே, நீரே அந்த அசுரரைக் கொல்லல் வேண்டும். 133

ஆவதோர் சூரன் றன்னை அவன்றுணை வோரை மைந்தர்
ஏவர்கள் தமையும் அட்டே எழில்பெறு சயந்த னேடும்
தேவர்தஞ் சிறையை நீக்கித் திசைமுகன் மகவா னுதிக்
காவலர் பதங்கள் நல்கிக் காத்தருள் எம்மை யென்றான்.

இவ்வாறு கொடுமை செய்கின்ற சூரபன்மனை அவனது தம்பிமாரை, பிள்ளைகளை எல்லாரையும் சங்கரித்து அழித்து, அழகிய சயந்தனேடு தேவர்களது சிறையை நீக்கி பிரமதேவர் இந்திரன் முதலாகவுள்ள காவற்கடவுளரின் பதவிகளை அவர்கட்கு நிலைபெறக் கொடுத்தருளி எம்மையெல்லாம காத்தருள் புரிவாயாக என வணக்கத்துடன் கூறியருளினர் வியாழபகவான். 134

இவ்வகை முகமா றுள்ள எம்பிரான் உளத்திற் கேற்ப
உய்வுறும் அன்பாற் பொன்னேன் உரைப்பமுன் அறிந்த தொன்றை
மெய்வரு தொடர்பால் ஈன்றோர் விழைவினுன் மழலை ஓவாச்
செவ்வியல் மகார்வாய்க் கேட்குந் திறனென வினவிச் சொல்வான்.

இவ்வகையாக ஆறுமுகமுடைய எமது பகவானின் திருவுள்ளத்திற்கு ஏற்கும் நிலையாக உய்வினைத் தருகின்ற அன்பால் வியாழபகவான் உரைத்தருள அது வேளை தாம் முன்னர் அறிந்த ஒன்றை உண்மையான அன்பின் தொடர்பால் பெற்றெடுத்த தாய்தந்தையர் மழலைச் சொல் மாறுது சொல்கின்ற தமது குழந்தையிடமிருந்து மிகுவிருப்பத்துடன் கேட்கும் தன்மைபோன்று சண்முகப் பெருமானும், வியாழபகவான் கூறியருளியதைக் கேட்டு சொல்லியருள்வார். 135

புன்றொழில் அவுணர் தன்மை புறத்தவர் செய்கை யாவும்
ஒன்றிடை விடாது முற்றும் உள்ளவா றுரைத்தாய் நம்மு
னன்றிது பனுவற் கெல்லாம் நாதனை ஒருநீ அன்றோ
வென்றவன் புறத்தை நீவி இனிதருள் புரிந்தான் எங்கோன்.

புன்மையான தொழில்கொண்ட அசுரர்களது தன்மையையும், அவர்களது துணைவரின் செயலையும், ஏனையோரின் செயலையும் ஒன்றினையேனும் இடைவிடாது முழுவதையும் நம்முன் உள்ளவாறு உரைத்தாய்; இது நன்றாயிருக்கின்றது; சொல்லுகின்ற வாக்கிற்கெல்லாம் நீ ஒரு நாயகனுக விளங்குகின்றாய் அல்லவோ என்று வியாழபகவானுடைய முதுகினைத் திருக்கரத்தால் தடவி மேலான இனிய அருளினைப் புரிந்தார் எங்கள் கடவுளான ஆறுமுகப்பிரான். 136

அறிவினுள் அறிவாய் வைகும் அறுமுக அமல வெஞ்சூர்
இறுசெயல் நினைக்கி லாகும் ஈண்டையோர் ஆடல் உன்னிக்
குறுகினை யதுபோல் அன்னேன் கொள்கையுந் தேர்ந்தாய் நிற்கோர்
சிறியனேன் உரைத்தேன் என்னுந் தீப்பிழை பொறுத்தி யென்றான்.

அறிவின் உள்ளும் அறிவாய் வீற்றிருந்தருளும் ஆறுமுகமுடைய நின்மலச் சொருபனே! தேவரீர் சூரபன்மன் அழியவேண்டும் என்று நினைத்தருளின் அது அப்படியே உடன்கைகூடும்; ஆனல் இவ்விடத்து தேவரீர் ஓர் திருவிளையாடலை நினைந்தருளிக்கொண்டு யாம் காணும்படி எழுந்தருளினீர்; அதுபோன்று சூரபன்மன் செய்கையும் கொள்கையும் தெரிந்து கொண்டாய்; யாவும் அறிந்த தேவரீருக்கு ஓர் சிறிய வஞகியேன் இதனைச் சொன்னேன் என்கின்ற பொல்லாத பிழையையும் பொறுத்தருளவேண்டும் என்றார் வியாழபகவான் 137

பொறுத்தியென் குற்றம்என்று பொன்னடித் துணையைப் பொன்னேன்
மறத்தலில் அன்பிற் பூண்டு வணங்கினன் தொழுது போற்ற
வெறித்தரு கதிர்வேல் அண்ணல் எம்முரை கொண்டு சொற்றாய்
உறத்தகு பிழையில் யாதும் உன்னலை இருத்தி என்றான்.

எம்பிரானே என் குற்றத்தினைப் பொறுத்தருள்வீராக என்று எம்பிரானுடைய பொன்னார்ந்த திருவடிகளை பொன்னிறமாய வியாழபகவான தவறுதலிலாத அன்பினைக் கொண்டு வணங்கியவனாய்த் தொழுதுபோற்றுதலும் அந்நேரம் பிரகாசமுடைய கிரணங்களைக்கொண்ட வேலேந்திய திருக்கரமுடைய எம்பிரான் வியாழ தேவனை நோக்கி, நீ எனது கட்டளையை ஏற்றுக்கொண்டே சொல்லினாய். ஆதலால் அதனால் நிகழக்கூடிய குற்றம் ஏதும் இல்லை. யாதும் உனது மனதில் எண்ணாது இங்கு இருப்பாயாக என்று அருள் புரிந்தார். 138

வேறு

பொன்னெனும் பெயரினன் பொருவில் கந்தவேள்
இன்னருள் நிலைமை பெற்றிருந்த பின்னரே
தன்னயல் நிற்புறு சதம கத்தனை
அந்நிலை நோக்கியே அன்பிற் கூறுவான்.

பொன்னவன் என்னும் பெயருடைய வியாழபகவான் தன்னொப்பாரில்லாத் தலைவன் முருகப்பெருமானின் இனிய அருளினைப் பெற்றுக்கொண்டு எம்பிரான் திருமுன்பு இருந்த பிற்பாடு தனது பக்கராக நின்றுகொண்டிருக்கும் நூறு யாகங்களைச் செய்ததால் விளைந்த தேவ உலக அரச பதவிப் பேற்றினையுடைய இந்திரனை அந்நிலையில் நோக்கியருளி அன்பினால் இவற்றை கூறியருள்வார். 139

ஈண்டிது கேண்மனத் தேதும் எண்ணலை
மூண்டிடு சூர்குல முடிய வானுளோர்
மீண்டிட இருஞ்சிறை விண்ப தத்தைநீ
ஆண்டிட நல்குதும் ஐயுறேல் என்றான்.

இந்திரனே இவ்விடத்து இதனைக் கேட்பாயாக; உனது மனதில் ஏதும் எண்ணாதே, பெருகிக்கொண்டிருக்கும் போர் வல்ல அசுரர் குலம் அழிந்துபோகவும்; சிறையில் வைக்கப்பட்ட தேவர் யாரும் சிறை மீளும்படியாகவும்; வான உலக பதத்தில் இருந்து நீ மீண்டும் அரசாண்டிருக்க நான் தந்து வைப்பேன்; உனது மனதில் சந்தேகமடையாதே, என்றருளினார். 140

இகபரம் உதவுவான் இதனைச் சாற்றலும்
மகபதி பரிவொடு வணங்கி வானவத்
தொகையொடு போற்றியே துன்பெலாம்ஒரீஇப்
புகலரும் மகிழ்ச்சியுட் பொருந்தல் மேயினான்

இவ்வுலகிலும் அப்பாலுள்ள உலகிலும் எங்கும் அருளினைத் தந்து உதவி நிற்கும் ஆறுமுகமுடைய எமது செல்வர் இதனைச் சொல்லியருளலும் அதுகேட்டருளிய இந்திரன் மிக்க பரிவுடன் வணங்கி தேவர் கூட்டத்துடன் எம்பிரானைப் போற்றி செய்து தனது கவலை எல்லாம் நீங்கி சொல்லற்கரிய மகிழ்ச்சியைப் பொருந்தப் பெற்றுக் கொண்டான். 141

அமரர் சிறைபுகு படலம் முற்றுப்பெற்றது.

அசுரகாண்டம் முற்றுப்பெற்றது.

—○—

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் திருவடி வாழ்க.

குருநாதன் திருவடிகள் வாழ்க.

ஆக திருவிருத்தம்: 1929

22 - 1 - 74